


(புதிய தமிழில் புதிய கதைகளுடன்)

பதிப்பாசிரியர் :

அரு. ராமநாதன்

வடமொழி மூலங்களைப் பரிசோதித்து எழுதியவர்
ராசு

தமிழ்ப் பாடங்களைப் பரிசோதித்து எழுதியவர்
அரு. ராமநாதன்

பிரேமா



பிரசுரம்

35, ஆற்காடு சாலை,
கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.
தொலைபேசி : 4800325, 4833180, 3721072
Fax : 044-4811755
E-mail : aruram@md2.vsnl.net.in

பிரேமா பிரசுரம் - 244

| | | | |
|---|---|---|---|
| முதற்பதிப்பு | : | ஜனவரி | 1958 |
| இரண்டாம் பதிப்பு | : | ஜூலை | 1958 |
| மூன்றாம் பதிப்பு | : | ஜூன் | 1966 |
| நான்காம் பதிப்பு | : | நவம்பர் | 1969 |
| ஐந்தாம் பதிப்பு | : | பிப்ரவரி | 1976 |
| ஆறாம் பதிப்பு | : | ஜூன் | 1982 |
| ஏழாம் பதிப்பு | : | டிசம்பர் | 1983 |
| எட்டாம் பதிப்பு | : | மே | 1985 |
| ஒன்பதாம் பதிப்பு | : | ஆகஸ்ட் | 1986 |
| பத்தாம் பதிப்பு | : | ஜனவரி | 1988 |
| பதினோராம் பதிப்பு | : | நவம்பர் | 1989 |
| பன்னிரண்டாம் பதிப்பு | : | மே | 1991 |
| பதின்மூன்றாம் பதிப்பு | : | ஏப்ரல் | 1993 |
| பதினான்காம் பதிப்பு | : | டிசம்பர் | 1995 |
| பதினைந்தாம் பதிப்பு | : | பிப்ரவரி | 1998 |
| பதினாறாம் பதிப்பு | : | டிசம்பர் | 1999 |
| பதினேழாம் பதிப்பு | : | ஜனவரி | 2001 |
| பதினெட்டாம் பதிப்பு | : | ஜூலை | 2002 |

1952 தொடங்கப்பட்டது





விலை ரூ. 78/-

கணிப்பொறி வடிவமைப்பு : ஏ.ஆர். எண்டர்பிரைசஸ், சென்னை - 24.

அச்சிட்டோர் காரிஸ் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 29



# பொருளடக்கம்

## முதற்பகுதி : பூர்வ கதை



## இரண்டாம் பகுதி : 32 பதுமைகள் சொல்லிய கதைகள்



# 1. காட்டில் கண்டெடுத்த கனகமணி சிம்மாசனத்தின் கதை

உலகத்தின் கிரீடம் போல் உஜ்ஜயினிப் பட்டணம் முன்னொரு காலத்தில் திகழ்ந்தது.

நீலவானத்தை முத்தமிடும் பட்டுக் கொடிகளும், நிலா உப்பரிகைகளும் மாட மாளிகைகளும், மணிக்கோபுரங்களும, தந்த ஸ்தூபிகளும், நந்தவனங்களும், விசாலமான நவமோகன வீதிகளும், சிருங்கார மண்டபங்களும், சிந்தையைக் கவரும் விசித்திர விநோதங்களும் நிறைந்து எந்நேரமும் ஜேஜே என்று விளங்கும் அந்நகரம் மாயா புரியாகவே காட்சியளித்தது. அந்தப் பட்டணத்தை அறநெறி வழுவாத போஜமகாராஜன் ஆண்டு வந்ததால் அதற்குத் தர்மாபுரி என்கிற பெயரும் நிலவி வந்தது.

போஜராஜன் சதா தன் குடிஜனங்களின் நலத்திலே கண்ணும் கருத்தும் கொண்டவனாய் ஆட்சிபுரிந்து வரவே, அந்தச் சக்கர வர்த்தியின் பெயர் உலகெங்கும் பிரசித்தியாயிற்று. போஜனுக்குப் பிரதம மந்திரியாக விளங்கிய நீதிவாக்கிய மந்திரி என்பவரும் உஜ்ஜயினிப் பட்டணத்தில் தருமம் தழைத்தோங்கும்படி செய்து வந்தார்.

அந்நாளையில், பக்கத்திலுள்ள காட்டுப் பிரதேசத்திலிருந்து துஷ்ட மிருகங்கள் அடிக்கடி நாட்டினுள் புகுந்து மக்களைத் துன்புறுத்துவதோடு அவர்களின் உடமைகளான ஆடு, மாடு, கோழி முதலான பிராணிகளைக் கொன்று தூக்கிச் சென்றன.

குடிமக்களின் கஷ்டத்தை அறிந்த போஜமகாராஜன், ஒரு நாள் தன் சதுரங்க சேனைகளை அணிவகுத்து நடத்தி மந்திரிப் பிரதானிகளுடன் வேட்டையாடச் சென்றான்.

அவர்கள் வனாந்திரத்தை அடைந்து புலி, சிங்கம், கரடி முதலான கொடிய விலங்குகளை வேட்டையாடினார்கள்.

சூரியன் உச்சியை நெருங்கும் சமயம் வந்தது. வெய்யில் தகித்தது. படைகளும் களைத்து விட்டன. போஜராஜன் வேட்டையை நிறுத்தி விட்டுக் களைப்பாற விரும்பினான்.

மணிமுடி மன்னனும் அவனுடைய பரிவாரங்களும் அருகிலே தாக சாந்திக்குத் தண்ணீரும், சோர்வு நீங்க நிழலும் கிடைக்குமா வென்று நாலாதிசைகளிலும் சுற்றிப் பார்த்து வரும்போது நன்கு விளைந்திருந்த கம்பங் கொல்லை ஒன்றை அடைந்தார்கள். சுற்றிலும் படர்ந்து அடர்ந்த கிளைகளோடு மரங்களும், நடுவே முற்றிய கதிர்களை உடைய கம்புப் பயிரும் கொண்ட அக்கொல்லையானது மன்னனின் மனதை மிகவும் கவர்ந்தது.

அந்தக் கொல்லை சரவணப்பட்டன் என்னும் ஓர் அந்தணனுக்குச் சொந்தமானது. முற்றிய கதிர்களைப் பறவைகள் கொத்தித் தின்னாமலிருக்கக் காவலுக்கு அவன் கொல்லையின் நடுவே பரண் ஒன்றைக் கட்டி அதன்மீது ஏறி அமர்ந்திருப்பான்; பறவைகள் கூட்டமாக வந்து கதிர்களில் உட்காரும்போது கற்களை விட்டெறிந்து அவற்றைத் துரத்துவான்.

அன்றையத் தினம் சரவணப்பட்டன் பரண்மீது அமர்ந்திருந்தான். வேட்டையில் களைத்துப்போய் முகம் கறுத்து வரும் மன்னர்பிரானையும் பரிவாரங்களையும் பார்க்கும்போது அவனுக்கு பரிதாபமாக இருந்தது.

சரவணப்பட்டன் பரண்மீது இருந்தபடியே, "வரவேண்டும் வரவேண்டும்! வேட்டையினால் மிகவும் களைத்துப் போயிருக்கிறீர்கள். இதோ இந்தக் கம்பங் கொல்லை முழுவதும் என்னைச் சேர்ந்ததே. முற்றிய கதிர்கள் இருக்கின்றன. இதோ இனிமையான பழங்கள் கொத்துக் கொத்தாகத் தொங்குகின்றன. வெள்ளரிப் பிஞ்சுகளும் இருக்கின்றன. தாங்கள் தாராளமாக தங்கள் பரிவாரங்களுடன் கொல்லையில் நுழைந்து பசி தீரச் சாப்பிடுங்கள். காய்ந்து போயிருக்கும் கம்பு தட்டைகளைக் குதிரைகளுக்குக் கொடுக்கலாம். எனக்குக் கிடைத்தற்கரிய பாக்கியமே இது! இராஜாதி ராஜர் இன்று என் விருந்தாளியாக இருப்பது என் பூர்வ ஜன்மப் பலனே!" என்று உள்ளக் கனிவோடு அழைத்தான்.

அவன் வார்த்தைகளைக் கேட்ட போஜ மகாராஜன் தன் பரிவாரங்களை அழைத்துக் கொண்டு கம்பங் கொல்லையில் நுழைந்தான். பசியால் வருந்திய போர் வீரர்கள் கதிர்களை ஒடித்துத் தின்னத் தொடங்கினார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பரண் மீதிருந்த சரவணப்பட்டன்

பறவைகளை விரட்டக் கீழிறங்கி வந்தான். அரசனுடன் வந்த போர் வீரர்கள் "மளுக் மளுக்" கென்று கம்பங்கதிர்களை ஒடித்துத் தின்பதையும் குதிரைகள் தட்டைகளை மேய்வதையும் கண்டதும் அந்தணனுக்குத் திடீரென ஏதோ ஆத்திரம் குமுறி எழுந்தது. அவன் பூபதியிடம் ஓடி வந்தான்.

"போஜ மகாராஜனே! இதென்ன காரியம்? கேள்வி முறையே கிடையாதா? நீதி நெறி வழுவாத தாங்களா இந்த அநீதமான காரியத்தில் இறங்கினீர்கள்? நீங்களும் உங்கள் பரிவாரங்களும் ஏழை அந்தணன் ஒருவனுடைய கம்பங் கொல்லையை அழித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைத் தாங்கள் அறியவில்லையா? என் ஒரு வருஷ வருமானத்தையே பாழாக்கி விட்டீர்களே! மற்றவர்கள் கெடுதல் செய்யும் போது மக்களின் தலைவரான தங்களிடம் வந்து முறையிடலாம்! வேலி போன்ற மன்னரே கெடுதல் செய்யும் போது அதைப் பற்றி நான் எவரிடம் சென்று முறையிடுவேன்? மதம் பிடித்த யானையையும் முறை தவறி நடக்கும் ஆட்சியாளனையும் தவறு செய்யும் அறிவாளியையும் யாரால் நிறுத்த முடியும் என ஒரு பொன்மொழி உண்டு.

"மேலும் தாங்கள் எல்லா நீதி சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவர். அப்படியிருக்கத் தாங்களே அந்தணன் ஒருவனுடைய சொத்தைப் பாழாக்குகிறீர்கள். அந்தணன் சொத்துதான் உண்மையான விஷம் என்று சொல்லப்படுகிறது. விஷம் என்பது அறிஞன் ஒருவனுடைய சொத்துடன் ஒப்பிடும் போது விஷமாகாது; அந்தச் சொத்தே உண்மையான விஷமாகும்; ஏனென்றால் விஷம் அருந்திய ஒருவனை மட்டுமே கொல்லக் கூடியது; ஆனால் அறிஞன் சொத்தோ அபகரித்தவனின் சந்ததியையும், அவர்களின் சந்ததிகளையும் கூட அழித்துவிடும் அன்றோ? இதைத் தாங்கள் அறிவீர்களே!" என்று முறையிட்டான் சரவணப்பட்டன்.

அவனுடைய வார்த்தைகள் அரசனின் நீதி உள்ளத்தில் வேதனையை உண்டாக்கின. அடுத்தகணமே போஜராஜன் பரிவாரங்களை அழைத்துக் கொண்டு வெளியேறினான். இந்தச் சமயத்தில் சரவணப்பட்டன் மீண்டும் பரண்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டான். மன்னர்பிரானும் பரிவாரங்களும் கொல்லையை விட்டு வெளியேறுவதைக் கண்டதும் சரவணப்பட்டன் மறுபடியும் திடீரென்று கூவினான்.

"பூபதியே! ஏன் போகிறீர்கள்? அதற்குள்ளாகவா தங்கள் பசி தீர்ந்துவிட்டது? வேட்டையினால் ஏற்பட்ட களைப்பு இன்னும் நன்கு தீரவில்லை என்பதைத் தங்கள் திருமுகமே காட்டுகிறதே! பசிதீர உணவருந்தி, நிழலில் படுத்து இளைப்பாறுங்கள். வீட்டுக்கு வந்த விருந்தாளி உணவருந்தாமல் செல்வது சரியல்ல என்றான். மன்னனை வற்புறுத்தியும் கூப்பிட்டான் சரவணப்பட்டன்.



போஜராஜனுக்குப் பெரும் வியப்பாகிவிட்டது. "பரண்மேலிருந்த போது அந்த மறையவன் நம்முடைய நிலைமை உணர்ந்து, பசித்திர கம்பங் கதிர்களை ஒடித்துச் சாப்பிடுமாறு அழைத்தான். பரணை விட்டுக் கீழிறங்கி வந்ததும், அவன் உள்ளத்திலே தோன்றிய அந்த உயர்ந்த எண்ணம் மாறிவிட்டது. 'ஐயோ! கொல்லை பாழாகப் போகிறதே' என்ற கீழ்த்தர எண்ணமும் சுயநலமுமே மேலோங்கி நின்றன. மீண்டும் பரண் மீது ஏறியதும், விருந்து சாப்பிட அழைக்கப்பட்ட நாம் திரும்பிச் செல்வதைக் கண்டு வருந்துகிறான். இது மிகவும் விசித்திரமாக இருக்கிறது. இது இந்த இடத்தின் விசேஷம் போலும். நாமும் அந்தப் பரண்மீது ஏறிப் பார்க்க வேண்டும். இவ்விதம் அரசன் தன் மனதில் நினைத்தவனாய் சரவணப்பட்டன் அருகில் வந்து பரண் மீது ஏறினான்.

படிகளில் காலை வைத்து ஏறியவுடனே, உலகாளப் பிறந்தவனின் உள்ளத்திலே சலனமற்ற அமைதி குடி கொண்டது.

அனைவரையும் கஷ்டத்திலிருந்து விடுவிக்க வேண்டும்; உலகம் வறுமையின் பிடியில் சிக்குண்டு நாசமாவதைத் தடுக்க வேண்டும்; தீங்கு செய்பவர்களைத் தண்டிக்க வேண்டும். நல்லவர்களைப் பாதுகாக்க வேண்டும். குடி ஜனங்களை அறநெறி பிசகாமல் பரிபாலனம் செய்ய வேண்டும்; இம்மாதிரியான உயர்ந்த எண்ணங்களே போஜ மன்னன் உள்ளத்தில் தோன்றின. சுருங்கச் சொன்னால், அந்தச் சமயத்தில் எவராவது அவன் உயிரைக் கேட்டாலும் கொடுக்கத் தயாராக அரசன் இருந்திருப்பான்.

எவ்வளவு அழகான கொல்லை இது உள்ளத்திலே உயர்ந்த எண்ணங்களைத் தோன்றச் செய்வதின் மர்மமென்ன?

தண்ணீரில் எண்ணெயும் ஒற்றனிடம் இரகசியமும் தகுதிபடைத்த மனிதனுக்கு சிறு பரிசும் புத்தி கூர்மையுள்ள மனிதனிடம் அறிவும் தானாகவே பரவும் அன்றோ? இந்தக் கொல்லையின் அதிசயத்தைக் கண்டுபிடிப்பதற்கான வழி என்ன?

இவ்வாறு சிந்தித்த போஜராஜன் கனிவான குரலில் சரவணப்பட்டனை நோக்கி "அறிஞனே உன் புகார் நேர்மையானதே. இந்தக் கொல்லையின் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு நீ அடுத்த வருஷம் பூராவும் காலம் தள்ள வேண்டும். அதை உணராது பசியின் மயக்கத்தில் நான் பரிவாரங்களுடன் இதனுள் நுழைந்துவிட்டேன். அதற்குப் பிரதியாக இந்தக் கொல்லையை உன்னிடமிருந்து கிரயம் கொடுத்துப் பெற்றுக் கொள்கிறேன். நீ விரும்புவதைத் தாராளமாகத் தெரிவி" என்று கேட்டான்.

"அரசே தாங்கள் அனைத்தும் அறிந்தவர்: எது செய்யலாம், எது செய்யக் கூடாதென்பதைத் தெரிந்தவர். இந்தக் கொல்லையின் மதிப்பைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ளலாம். பார்க்கப் போனால் தங்களை மகாவிஷ்ணுவுக்கு ஒப்பிட்டுச் சொல்லலாம். பகவானின் கடைக்கண் பார்வை விழுந்ததால் எவன் தரித்திரமும் துன்பங்களும் இருந்த இடம் தெரியாது ஒழிந்து போய்விடுமே அவ்விதமே அரசனும் கற்பக விருக்ஷம் எனச் சொல்லப்படுகிறான், பகவானை நேரில் காண முடியாது. தாங்களோ பிரத்யக்ஷ தெய்வம்! என்னுடைய கஷ்டங்களும் வருத்தங்களும் தங்களைக் கண்ட மாத்திரத்திலேயே ஒழிந்து விட்டன. அப்படியிருக்க இந்தக் கொல்லை ஒரு பிரமாதமா என்று பணிவுடன் தெரிவித்தான் சரவணப்பட்டன்.

அவன் வார்த்தைகளால் மகிழ்ச்சி கொண்ட போஜராஜன் அக்கொல்லைக்குப் பதிலாக அநேக பரிசுகளும் திரவியங்களும் இனும் நிலங்களும் அவனுக்குக் கொடுத்து, அக்கொல்லையை தன்னுடையதாக்கிக் கொண்டான். மறுநாளே அவன் தன் அரசாங்க ஆட்களை விட்டுப் பரண் இருந்த இடத்தில் தோண்டிப் பார்க்கச் செய்தான்.

அவ்வாறே ஆட்கள் பூமியை வெட்டிப் பரிசோதித்தார்கள்.

மண்ணை ஆழமாக வெட்டும்போது டங்கென்ற ஒலியுடன் அழகிய நவரத்தினச் சிம்மாசனம் ஒன்று தென்பட்டது. போஜன் அளவில்லா ஆனந்தங் கொண்டவனாய், மேலும் பூமியை நாற்புறமும் குடைந்து வெட்டச் செய்தான். அங்கே நவரத்தினங்களால் இழைக்கப்பட்டதும் முப்பத்திரண்டு படிகளிலும் அழகிய பதுமைகளைக் கொண்டதுமான பொற் சிங்காதனம் ஒன்று இருந்தது.

போஜராஜனின் மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. அந்த சிங்காதனம் புதைக்கப்பட்டிருக்கும் இடத்தில் நிற்கும் போதே உள்ளத்தில் உயர்ந்த மனோபாவங்கள் ஏற்பட்டன. அந்த அதிசயமான நவரத்தின சிம்மாசனத்தில் அமர்ந்து ராஜ்ய பரிபாலனம் செய்தால் எவ்வளவு நற்குணங்களுக்கு இருப்பிடமாகி

புவனமெங்கும் பிரகாசிக்கலாம். அரசன் அந்த ஆவலோடு பள்ளத்தில் இறங்கி சிங்காதனத்தை மேலே தூக்கச் செய்தான். ஆட்கள் ஒன்று சேர்ந்து சிங்காதனத்தை தூக்க முயன்றார்கள்.

சிங்காதனம் இருந்த இடத்தைவிட்டு அசையவில்லை. புஜபல பராக்கிரம மன்னனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அருகிலே நின்ற நீதிவாக்கிய மந்திரியைப் பார்த்தான். "மாமந்திரி நவரத்தின சிங்காதனம் இடத்தை விட்டுப் பெயர மறுப்பதின் காரணமென்ன?" என்று கேட்டான் போஜராஜன்.

"பூபதி! பூமியில் புதையுண்டு கிடந்த இச்சிங்காதனம் புராதன காலத்தைச் சேர்ந்தது. தெய்வத்தன்மை வாய்ந்தது. இதற்கு உரிய பூஜை புனஸ்காரங்கள் செய்யாமல் நாம் எடுக்கும் எந்த முயற்சியும் பலனை அளிக்காது" என்றார் நீதிவாக்கிய மந்திரி.

உடனே புவி மன்னன் புரோகிதர்களை வரவழைத்துச் சிங்காதனத்துக்குச் செய்ய வேண்டிய பூஜைகளையும் உபசாரங் களையும் செய்யுமாறு வேண்டினான். அதற்குப் பிறகே சிங்காதனம் அதன் இருப்பிடத்தைவிட்டு நகர்ந்தது. இதைக் கண்ட அரசன் நீதி வாக்கிய மந்திரி ஆரம்பத்தில் சிங்காதனம் எனக்குச் சுலபத்தில் கிட்டாது போல் தோன்றியது. ஆனால் இப்பொழுதோ உன்னுடைய ஆலோசனையின் பிரகாரம் நடந்து கொண்டதால் சிங்காதனத்தை வெளியே எடுக்க முடிந்தது. ஆகவே அறிவாளிகளுடன் நட்பு கொள்வது இலாபகரமானதோடு சிறந்ததாகும், என்றான்.



அப்போது, நீதிவாக்கிய மந்திரி மன்னனைப் பார்த்து "மணிமுடி வேந்தே! கேளுங்கள்! எவனொருவன் எவ்வளவு பெரிய அறிவாளியாக இருந்தாலும் மற்றவர்களின் ஆலோசனையையும் கேட்காவிடில் அவன் அழிவையே அடைவான். தாங்கள் அப்படியல்ல. நீங்கள் அறிவாளியாக இருந்தாலும் இவ்விஷயத்தில் என் ஆலோசனைக்குச் செவி கொடுத்தீர்கள். ஆகவேதான் தாங்கள் எடுக்கும் எந்த முயற்சியும் பலனின்றி வீண் போவதில்லை" என்றார்.

அப்பொழுது போஜமன்னன் மீண்டும் சொன்னான். "மதிமந்திரி எவனொருவன் வரப்போகும் கெடுதல்களை முன்னதாகவே உணர்ந்து ஆட்சியாளனை நல்லதற்ற வழியிலே செல்லாது தடுத்து நேர்மையான பாதையில் அழைத்துச் செல்கிறானோ அவனே உண்மையான மந்திரியாவான்.

"ஆம் அரசே! நடுமந்திரி எப்போதும் தன் அரச பீடத்தின் தலைவனுடைய நலத்திலே கருத்து உடையவனும் இருக்க வேண்டும்" என்று நீதி வாக்கிய மந்திரி பல உண்மைகளைக் கூறலானார்.

"மந்திரிகள் இல்லாத ராஜ்யம் உறை பண்டங்களைச் சேர்த்து வைக்கும் உக்கிராணம் இல்லாத கோட்டை, அனுபவிக்க யௌவனம் இல்லாத அதிர்ஷ்டம், அறிவு இல்லாத துறவறம், வஞ்சகர்களிடையே தர்ம சிந்தனை, வேசிகளிடையே காதல், நீசர்களிடையே நட்பு, அழுகிகளிடையே சுதந்திரம், ஏழையிடம் கோபம், வேலைக்காரனிடத்தில் ஆத்திரம், பிரபுவிடம் அன்னியோன்யம், பிச்சைக்காரன் வீடு, சலன புத்தியுள்ள பெண்ணிடம் புனிதத் தன்மை, திருடர்களிடையே கௌரவம், முட்டாள்களிடையே முன்னேற்றம் இவையனைத்தும் வியர்த்தமானதே.

மேலும் ஆட்சியாளன் பெரியார்களை கௌரவிக்க வேண்டும். அறிஞர்களின் ஆலோசனையையும் கேட்கவேண்டும். ஆண்டவனையும் அறநெறியாளர்களையும் பூஜிக்கவேண்டும். நல்ல பாதையிலே வாழ்க்கையைச் செலுத்த வேண்டும். இன்னும் அரசனுக்குக் கூறப்படும் நற்குணங்கள் அனைத்தும் தங்களிடம் காணப்படுகின்றன. அதனால் நீங்கள் ராஜாக்களுக்கெல்லாம் ராஜாதி ராஜராக விளங்குகிறீர்கள்.

இன்னும் மந்திரியாக வருபவன் நல்ல குடும்பத்தை சேர்ந்தவனாகவும் திறமைசாலியாகவும் காமாந்தகியின் நீதிசாரத்தையும் சாணக்கியனின் அர்த்தசாஸ்திரத்தையும், பஞ்ச தந்திரத்தையும் நன்கு அறிந்தவனாக இருக்க வேண்டும். மேலும் அவன் குடிமக்களின் க்ஷேமத்தில் விருப்பம் உடையவனாகவும். தன் சகபிரதானிகளை நன்கு நடத்திச் செல்லும் திறமை வாய்ந்தவனாகவும் அரசனுடைய போக்கிற்கு ஏற்ப நடந்துகொள்ள வேண்டுமென்பதை உணர்ந்தவனாகவும் ஆட்சிபீடத்தை கஷ்டத்திலிருந்து காப்பாற்றுபவனாகவும் இருத்தல் வேண்டும். மேலும் இல்லற நற்குணமும் வாய்ந்தவனே மந்திரியாகத் தகுந்தவன்.

நந்தமன்னன் தன்னுடைய மந்திரி பஹுசுருதன் மூலம் பிரும்மஹத்தி தோஷத்திலிருந்து காப்பாற்றப்பட்டான் அல்லவா என்று நீதி வாக்கிய மந்திரி ஒரு கேள்வியுடன் கூறி முடித்தார்.

"அது எப்படி? அந்தக் கதையை எனக்கு விரிவாகத் தெரிவி" என்று போஜராஜன் கேட்கவே நீதி வாக்கிய மந்திரியும், "புவனபதியே அந்தக் கதையைச் சொல்லுகிறேன். கேளுங்கள்" என்று சொல்லிவிட்டுக் கதையை ஆரம்பித்தார்.

## 2. நீதி வாக்கிய மந்திரி சொல்லிய பஹுசுருதன் கதை



விசாலை என்ற நகரில் பிரசித்தி வாய்ந்த நந்தன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். தன்னுடைய பலம் பொருந்திய கை வலிமையினுல் அவன் எல்லா விரோதி அரசர்களையும் வென்று தன் காலடியில் விழச் செய்து நிகரற்றவனுய் ஆட்சி புரிந்து வந்தான். அதற்கெல்லாம் துணை புரிந்தவன் பஹுசுருதன் என்னும் பெயருடைய மந்திரியாவான். நந்தமன்னனுக்கு ஜெயபாலன் என்ற ஒரு குமாரனும் இருந்தான். அவன் முப்பத்தாறு வகை ஆயுதங்களை நன்கு கையாளும் திறமை வாய்ந்தவன். அரசனுக்கு பானுமதி என்று ஒரு பட்டமகிஷி இருந்தாள். அவளுடைய அழகிற்கு நிகரானவள் திரிபுவனத்தில் எவளும் இல்லையென்னும்படி விளங்கினுள். அவளுடைய உடல் வனப்பில் கட்டுக்கடங்காத ஒரு வசிகரம் குடிகொண்டு கண்டவர் எவர் சித்தத்திலும் சிறிதாவது சலனம் உண்டாகாமலிராது. அப்படிப்பட்ட வசிகரமானவளை வையகத்து வேந்தன் விண்ணமுதெனப் பெரிதும் காதலித்தான். மனையாளின் மையலி லே மூழ்கிக் கிடந்த மன்னன் சதா அவளருகிலே இருந்து வந்தான். ராஜசபையில் சிங்காதனத்தில் அமரும்போதுகூட பானுமதி அவன் பக்கத்திலே உட்கார்வாள். ஒரு கணங்கூட அவளை விட்டுப் பிரிந்திருக்க மன்னனுல் முடியவில்லை.

ஒரு சமயம் பஹுசுருதன் என்னும் மந்திரி பின்வருமாறு எண்ணினுர். மன்னன் மானம் கெட்டவனுகி விட்டான். அவன் உட்கார வேண்டிய இடத்தில் பேரழகியான ஒரு பெண்ணைத் தன்னுடன் பொதுச் சபையில் உட்கார வைத்துக் கொள்கிறுன் மக்கள் அவளைப் பார்க்கிறுர்கள். மக்கள் கூட்டத்தில் வாலி பர்களும் இருப்பார்கள். காணுத கனியைக் காண்பவர்கள் போலவே பலர் பட்டமகிஷியைப் பெருமூச்சுடன் பார்க்கிறுர்கள். ஆடவனின் ஆசை வழியும் விழிகளை ஆரணங்கு பார்ப்பாளேயாகில் அவளால் நிஷ்டூரமாகப் புறக்கணிக்கமுடியாது. அவளுடைய சித்தமும் குழம்பக் கூடும்; இதை நினைக்கவே சகிக்கவில்லையே? மோகத்தில் உள்ளவன் காணக் கூடியது எது காணக் கூடாதது எது என்பதை



''இல்லையென்றால், நீலோத்பலம் போன்ற கண்களுடைய தேவ கன்னிகைகள் இருக்க தேவர்களின் அரசனான இந்திரன் ரிஷிபத்தினி அகல்யையிடம் ஆசை கொள்வானேன் ஓலைக் குடிசை நெருப்பில் பற்றி எரிவது போன்ற காதல் தீயிலே உள்ளம் தவிக்கும் போது ஒருவன் எவ்வளவுதான் அறிவாளியாயிருந்தாலும் எது சரியானது எது சரியில்லை என்பதை எப்படி உணர்வான்?"

"இன்னும் பெண்களுடைய கருவிழிகளின் பாணத்தால் துளைக்கப்படாமலிருக்கும் வரையில் தான் ஒருவன் தன்னுடைய உறுதியைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்."

"பால் போன்ற வெண்மை நுரைகளுடன் கூடிய கடற் கரையில் வந்து மோதும் அலைகளைப்போன்று, சலன புத்தியுள்ள பெண்களுடைய கண்களின் அசைவுகளினால் ஒருவனின் உள்ளம் தாக்கப்படாத வரையிலும், தன்னுடைய மனதைக் கட்டுப்படுத்தி

அவன் நடக்கும் வரையிலும் நீதி சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட வழிகளின்படி அவன் நடந்து வரும் வரையிலும், பூவுலகத்தின் உயர்ந்த பிரகாசம் அவனுடைய உள்ளத்திலே பிரகாசித்துக் கொண்டிருக்கும் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். கலைகளில் சிறந்து விளங்குபவனையும் மோகம் வருத்துகிறது."

"கரும்பை வில்லாகவும் நறுமணம் கமழும் பூக்களை அம்பாகவும் உபயோகிக்கும் காதல் தெய்வமான மன்மதன் கலைகளில் சிறந்த ரசிகனை அதிகமாக வேதனையடையச் செய்கிறான். பரிசுத்தமானவனைக் கண்டு சிரிக்கிறான். அறிவாளியைக் கண்டு கேலி செய்கிறான். மன உறுதி படைத்தவனைக் கீழான நிலைக்குக் கொண்டு வந்து விடுகிறான். எல்லாவற்றையும் ஒரே நொடியில் செய்துவிடுகிறான்."

"இது மட்டுமல்ல"

"அறநெறி நூல்கள் நேர்மை, துறவு, தர்மம், அறிவு ஆகியவற்றை விறகுகளாக்கிக் கொண்டு எரியும் மோக வெறித் தீயிலே முட்டாள் ஒருவனே நுழைவான்"

"அவனுடைய செல்வமும் செல்வாக்கும் கரைந்துவிடுகிறது. குடும்பத்துக்கு கெட்ட பெயர் உண்டாகிறது. மரணமும் கிட்டிவிடலாம். மோகத்தில் சிக்கியுள்ள ஒருவன் இவைகளைக் கொஞ்சமும் நினைப்பதில்லை"

இவ்விதம் நினைத்த மந்திரி பஹுசுருதன் நல்ல சமயம் நேர்ந்தபோது நந்த மன்னனிடம் அதுபற்றிப் பேசலானார்: "அரசே உங்களிடம் ஒரு விஷயம் தெரிவிக்க வேண்டும்" என்றார் மந்திரி.

"என்ன சொல்லவேண்டும் சொல் என்றான் நந்த மன்னன்"

"அரச சபை நடுவில் தங்கள் அருகில் சிம்மாசனத்தில் சரிசமமாகப் பட்டமகிஷி அமர்வது அவ்வளவாக நல்லதல்ல! நீதிசாஸ்திரங்களை எழுதுவோர், ராஜபத்தினி எப்போதும் அந்தப்புரத்திற்குள்ளேயே இருக்கவேண்டும் என்று சொல்வார்கள். சபைக்குப் பலதரப்பட்ட மனிதர்கள் வருகிறார்கள். அவர்களுக்குச் சௌந்தர்யவதியைப் பார்க்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. அப்போது தேவியின் மனது என்ன பாடுபடும்" என்றார் மந்திரி பஹுசுருதன்.

"அது எனக்குத் தெரியும். ஆனால் நான் என்ன செய்வது பானுமதியிடம் அதிகப் பிரியம் கொண்டிருக்கிறேன். அவளை விட்டு ஒருகணங்கூட என்னால் தனியாக இருக்கமுடியாது" என்று

பதிலளித்தான் மோகாந்தகாரஞன நந்தமன்னன்.

"அப்படியாஞல் இவ்விதம் செய்யுங்கள்..."

"எப்படி? சொல்!" என்று கேட்டான் நந்தமன்னன்.

"கை தேர்ந்த சித்திரக்காரன் ஒருவனே வரவழையுங்கள். துணியில் பானுமதியின் உருவத்தைத் தத்ரூபமாக வரையச் செய்து தங்கள் கண் பார்வைக்குப் படும்படி சுவரிலே மாட்டி வைக்கச் செய்யலாம். அவளுடைய உருவம் உங்களுக்கு எப்போதும் தெரிந்து கொண்டேயிருக்கும்" என்ருர் மந்திரி பஹுசுருதன்.

மதியமைச்சரின் யோசனே மன்னனுக்குச் சரியாகவே பட்டது. ஆகவே கைதேர்ந்த ஒரு சித்திரக்காரனே வரவழைத்து மஹாராணியின் உருவத்தைத் துணியில் எழுத வேண்டும் என்று தெரிவித்தான்.



"நந்த மன்னரே! என் கண்களிஞல் மஹாராணியாரின் உருவத்தை ஒருமுறை பார்த்து விட்டேஞல், பிறகு சிறு வித்தியாசமும் இன்றி தத்ரூபமாக மஹாராணியாரின் உருவத்தைச் சித்திரத்தில் தீட்ட முடியும்"! என்ருன் சித்திரக்காரன்.

உடனே மன்னவன் தன் பட்டமகிஷி பானுமதியை அந்தப்புர மாளிகையில் நிலா உப்பரிகையில் பூரண அலங்காரத்துடன் நிற்க வைத்துச் சித்திரம் எழுதுவோனைப் பார்க்கச் செய்தான். "பத்மினி" என்ற வகையில் சேர்க்கப்பட வேண்டியவள் அவள் என்பதைக் கண்ட சித்திரக்காரன் அந்த வகைக்கான லக்ஷணங்களே உடையவளாகச் சித்திரம் எழுதிஞன்.

பத்மினி என்ற வகையில் சேர்க்கப்பட வேண்டியவள், தாமரை இதழ்களேப் போன்று மிருதுவாக இருப்பாள், நன்ருக இதழ்கள் விரிந்து பூரண மலர்ச்சி பெற்ற தாமரையைப் போன்ற பிரகாசம் பொருந்தியவள். அவள் உடலில் கமகமவென ஒருவித நறுமணம் கமழும். மருண்ட மான்களின் கண்களேப் போன்று மருட்சி நிறைந்த கண்களே உடையவள்; ஓரங்களில் செவ்வரி உடையனவாக அவளுடைய கருவிழிகள் இருக்கும். அவளுடைய நெஞ்சகம் வில்வப் பழங்களே போன்று அழகாக இருக்கும்.

அவளுடைய மூக்கு விரிந்த எள்ளுப் பூ போன்று இருக்கும். அறநெறியாளர்கள், பெரியோர்கள், தெய்வங்கள் ஆகியோர்களேக்

போன்ற அழகும், சம்பகப் பூவின் சோபையும், நன்ருக மலர்ந்த தாமரைப் பூவின் கொடி போன்ற உடலும் உடையவளாக அவள் சோபிப்பாள். மோகவெறித் தீயின் உஷ்ணம் தாக்காமல் தடுத்து மறைக்கும் குடை என்று அவளைச் சொல்லலாம்.

அவள் அன்னம் போன்று மெதுவாக மனதிற்கு மகிழ்ச்சி அளிக்கும்படியாக நடப்பாள். அவள் இடை மூன்று மடிப்புகளைக் கொண்டதாக இருக்கும்; அன்னம் போன்ற குரலுடையவள் அவள். அவள் அழகாக அலங்கரித்துக் கொண்டிருப்பாள். அதி ருசியாகவும் சுத்தமாகவும் மகிழ்ச்சி அளிக்கும் வகையிலும் சாப்பிடுவாள். சந்தேகச் சுபாவம் உடையவள். அதிக நாணமுள்ளவள். சோபையோடு கூடிய புஷ்பங்கள் போன்று கவர்ச்சிகரமான ஆடைகளுடனிருப்பாள்.



இவ்விதக் குணங்களோடு கூடிய பத்மினி வகைப் பெண்ணுன பானுமதி தேவியின் சித்திரத்தை வரைந்து பார்த்திபனிடம் கொண்டு வந்து கொடுத்தான் ஓவியன். ஆசைக் கிழத்தியின் படத்தைக் கண்டு மனம் மகிழ்ந்த நந்த மன்னன் ஓவியனுக்கு அநேக விதமான பரிசுகளெல்லாம் வழங்கினுன்.

அப்போது மஹாராஜாவின் குருவான சாரதாநந்தனர் அங்கு வரவே, அவரும் படுதாவில் வரையப்பட்டிருந்த பானுமதியின் சித்திரத்தைப் பார்த்தார். "தன்னைப்போல் உயிரோவியங்களைத் தத்ரூபமாக வரையக் கூடியவர்கள் உலகில் காண்பது அபூர்வம், என்பதுபோல் சித்திரக்காரன் பெருமையடித்துக் கொண்டான். அதைக் கேட்ட ராஜகுரு சாரதாநந்தனர் சிரித்தார். பிறகு அவர் சித்திரக்காரன் பக்கம் திரும்பி, "ஓவியனே! நீ பானுமதியின் உருவத்தை அப்படியே வரைந்திருப்பது உண்மையே. ஆனுல் தத்ரூபமாகத் தோன்றும் ஒன்றைக் குறிப்பிட நீ மறந்துவிட்டாய்!" என்ருர் குரு.

"குருஸ்வாமி! நான் எதை மறந்துவிட்டேன் என்பதைத் தயவு செய்து தெரிவிக்கும்படி வேண்டுகின்றேன்!'' என்ருன் சித்திரக்காரன்.

"மஹாராணியின் இடது துடையில் எள்ளு போன்ற மச்சம் ஒன்று உண்டு. அதை நீ தத்ரூபமான உயிரோவியத்தில் குறிப்பிட மறந்துவிட்டாய்!" என்ருர் ராஜகுரு.

சாரதாநந்தனர் சொன்ன வார்த்தைகளை நந்த மன்னனும் கேட்டான், ராஜகுருவின் வார்த்தைகள் எவ்வளவு தூரம் உண்மையானது என்பதை அறிய விரும்பினான். அதற்காக அவன் தன் பானுமதியுடன் தனித்திருக்கையில் அவளைப் பரிசோதித்தான். குரு சாரதாநந்தனர் குறிப்பிட்டபடி இடது துடையில் அந்த மச்சம் இருந்தது. அவருக்கு இந்த மச்சம் எப்படித் தெரிந்தது? அவருக்கும் பானுமதிக்கும் தொடர்பு இருந்திருக்க வேண்டும்! இல்லையேல் அவருக்கு இவ்விடமுள்ள இம்மச்சம் தெரிய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது. பெண்கள் விஷயத்தில் இம்மாதிரிச் சம்பவங்களைச் சந்தேகப்படாமலிருக்க முடியாது.

"பெண்கள் ஒருவனுடன் வாயால் பேசுகிறார்கள். அதே சமயம் கருவிழிகளால் மற்றவனின் மனதைக் கிளறும் விதமாகப் பார்க்கிறார்கள்; மூன்றும் மனிதனைப் பற்றி மனதிலே நினைக்கிறார்கள். ஒருவனோடு பெண்கள் திருப்தி அடைந்து விடுவார்கள் என்பது இல்லை.

எரிப்பதற்கு விறகுக்கட்டை எவ்வளவு கிடைத்தாலும் நெருப்புக்குப் போதாது; ஆற்று நீர் எவ்வளவு விழுந்தாலும் கடல் நீரின் மட்டம் உயர்ந்துவிடாது; எல்லா ஜீவ வர்க்கங்களின் உயிர்களைத் தின்றாலும், கூற்றுவன் திருப்தி அடைந்துவிட மாட்டான்; அவ்விதமே அழகிய கண்களை உடைய பெண்களும் ஆடவர்கள் விஷயத்தில் திருப்தியடைந்து விட மாட்டார்கள்.

ஒளிவிடம், ஏற்ற சந்தர்ப்பம், விழையும் காதலன் - இம்மூன்றும் இல்லாது போக வேண்டும்; நாரதரே! பெண்களின் தூய்மை அப்போதுதான் பங்கப்படாமல் இருக்க முடியும்.

"என் காதலியான இவள் என்னிடமேதான் உயிராக இருக்கிறாள்" என்று கனவு காணும் முட்டாள், அவளுடைய கைப்பொம்மையாக அவள் இஷ்டப்படியெல்லாம் ஆடுவான்.

"விளையாட்டாகவோ அல்லது வினையாகவோ எப்படியிருந்தாலும் மங்கையரின் வார்த்தையை அப்படியே எடுத்துக்கொண்டு அதன்படி நடக்க முயலும் மனிதன் உலகத்தாரின் ஏச்சுக்கு இரையாவான்!

"மோகத்தில் உள்ள மனிதனைப் பெண்ணானவள் அரக்கைப் பிழிந்துவிட்டுக் கடைசியில் வேகமாகத் தூக்கி எறிந்துவிடுவாள்!"

இவ்விதம் சிந்தித்த நந்தமன்னன் தன் மதி மந்திரியை வரவழைத்து எல்லா விபரங்களையும் அவரிடம் தெரிவித்தான். அரசனின் அப்போதைய புத்திக்குத் தகுந்தவாறு அந்தச் சமயத்தில்

அரசனின் அப்போதைய புத்திக்குத் தகுந்தவாறு அந்தச் சமயத்தில் மட்டும் பேச விரும்பிய பஹுசுருதன் அரசே மற்றவர்களின் நெஞ்சில் இருப்பவற்றை யார்தான் அறியமுடியும் நீங்கள் நினைப்பது போல் நடந்தாலும் நடந்திருக்கலாம் என்றார்.

"மந்திரி நீ என்னுடைய நண்பனாக இருக்கும் பட்சத்தில் உடனே குரு சாரதாநந்தனருக்கு மரண தண்டனை விதிக்கப்பட வேண்டும்!" என்றான் நந்த மன்னன்.

"அவ்விதமே ஆகட்டும்!" என்றார் மந்திரி பஹுசுருதன். உடனே அவர் எல்லோருடைய முன்னிலையிலும் ராஜகுரு சாரதாநந்தனரைப் பிடித்துக் கட்டினார். இதனால் குரு கலக்கம் அடைந்தார்.

"அரசன் எந்த மனிதனுக்கும் நண்பன் அல்ல என்பது எவ்வளவு உண்மையாகிவிட்டது!" என்று அவர் எண்ணமிடலானார்.

"செல்வம் வந்து அடைந்தவன் எவன்தான் கர்வம் கொள்வதில்லை? காமாதுரர்களுக்கு நேரும் கெடுதிகளுக்கு முடிவுதான் உண்டா? பூமியில் உள்ள மனிதர்களில் யாருடைய உள்ளம் பெண்களால் கவரப்படாதது? அரசர்களுக்கு யார் நண்பர்கள்? கால கதிக்கு அதாவது சாவுக்கு இலக்காகாதவர் யார்? எந்தப் பிச்சைக்காரன் மேன்மையடைந்தான்? துஷ்டர்களிடம் சிக்கிக் கொண்டவன் எவன்தான் துன்பம் அடையாமல் தப்பினான்?

ஆகவே,



காக்கையினிடம் சுத்தம், சூதாடியினிடம் நியாயம், பேடியிடம் வீரம், குடிகாரனிடம் வாக்குறுதி, பாம்பினிடம் தயை, பெண்களிடையே நிரந்தரமான மோகவிகாரம் இல்லாமை, அரசர்களிடையே நிரந்தரமான நட்பு - ஆகியவற்றை யார்தான் கண்டும் கேட்டும் இருக்கிறார்கள்?

"இன்னும் ஒருவன் எவ்வளவுதான் நிரபராதியாயிருந்தாலும், ஆட்சியாளனின் ஆத்திர வெறிக்கு ஆளாகிவிட்டால், அவன் குற்றம் செய்தவனாகவே கருதப்படுவான் அல்லவா.

ஆள்பவனின் கோபத்தினால் நிரபராதி குற்றவாளியாகிறான். உதவி பெற்றுள்ளவன் உதவி கிடைக்காமல் திண்டாடுகிறான். வீரன் கோழையாகிறான். அதிக நாட்கள் வாழக்கூடியவன்

குறுகிய காலத்திலே உயிரை இழக்கிறான். உயர்ந்த குலத்தில் பிறந்தவன் கீழ்மகனாகிறான்!"

இவ்விதம் சிந்தித்த ராஜகுரு சாரதாநந்தனர் கொலைக் களத்துக்கு இட்டுச் செல்லப்படும்போது மந்திரி பஹுசுருதனை நோக்கிச் சில வார்த்தைகளைச் சொன்னார்:

"காட்டின் நடுவிலோ, சண்டையின் மத்தியிலோ, எதிரிகளின் நடுவிலோ, தண்ணீரிலோ நெருப்பிலோ, ஆழமான பள்ளத்திலோ, உயரமான மலையுச்சியிலோ, விழித்திருக்கும் போதோ மயக்கத்திலோ, அல்லது பெரிய அபாயத்தில் சிக்கி இருக்கையிலோ மனிதர்கள் அவரவர் செய்துள்ள நல்ல காரியங்களாலே காப்பாற்றப்படுகிறார்கள்."

இதைக் கேட்ட மந்திரி 'இது உண்மையோ, பொய்யோ? எதற்காக ஒரு குருவைக் கொல்லவேண்டும் இது பெரிய தவறு!' என்று எண்ணமிட்டார். ஆகவே ஒருவருக்கும் தெரியாமல் சாரதாநந்தனரை மந்திரி தம்முடைய வீட்டிற்கு அழைத்துச் சென்று அவரை ரகசிய அறையொன்றில் அடைத்து வைத்து அது விஷயம் யாருக்கும் தெரியாவண்ணம் மறைத்துவிட்டார்.

பிறகு மந்திரி திரும்பி மகாராஜாவின் சமூகத்திற்கு வந்து "நந்தமன்னரே தங்கள் உத்தரவு நிறைவேற்றப்பட்டுவிட்டது!" என்றார்.

மாமன்னனும் "மிகவும் நல்லது" என்றான்.

சில நாட்களுக்குப் பிறகு, அரசகுமாரன் ஜெயபாலன் வேட்டைக்குப் புறப்படுவதற்காகக் கிளம்பிக் கொண்டிருந்தான். கிளம்பும் போது சகுனத் தடை ஏற்பட்டது.

.காலமில்லாக் காலத்தில் மழை: பூமியதிர்ச்சி: புயற்காற்று: பாய்ந்து மறையும் எரிநக்ஷத்திரம்: இவை போன்ற கெடுதலை அறிவிக்கும் சம்பவங்களில் ஒன்று அப்போது நிகழ்ந்தது. அத்துடன் நண்பன் ஒருவனின் குரலும் அவனைத் தடுத்தது.

ஆகவே, மந்திரி பஹுசுருதனின் புத்திரனான புத்திசாகரன் சிந்தனையுடன் அரசகுமாரனை நோக்கிச் சொல்ல ஆரம்பித்தான்.

"ஜெயபாலா! இன்று வேட்டைக்குப் போக வேண்டாம், மிகவும் கடுமையான சகுனத்தடை ஏற்பட்டுள்ளது."

அதற்கு ஜெயபாலன், "நண்ப கெட்ட சகுனத்தின் காரியத்தை அறிய வேண்டும்!" என்றான்.

"ராஜகுமாரா. கெட்ட சகுனமோ துர்க்குறியோ நேர்ந்து விட்டால், புத்திசாலி அதை ஒரு போதும் பரீட்சித்துப் பார்க்க

முற்பட மாட்டான். புத்திசாலி, விஷத்தை அருந்த மாட்டான், பாம்புகளுடன் விளையாட மாட்டான். துறவிகளை நிந்திக்க மாட்டான்; அறிஞர்களை விரோதித்துக் கொள்ளமாட்டான்.

இவ்விதம் மந்திரிகுமாரன் சொல்லி அரசகுமாரனைத் தடுத்தான். ஆனால், அரசகுமாரனோ புத்திசாகரன் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. வேட்டைக்குப் புறப்படுவதற்கு அவன் ஆயத்தமானான். மந்திரிகுமாரன் அவனை மறுபடியும் தடுத்து நிறுத்திச் சொல்லலானான்.

"ஜெயபாலா! உன்னுடைய அழிவுகாலம் வந்துவிட்டது. இல்லையேல் நீ இவ்விதம் என் வார்த்தைகளை மீறிக்கொண்டு கிளம்ப மாட்டாய்! பொன் மான் ஒரு போதும் உண்டாக்கப் பட்டதல்ல; அதைப் பற்றி யாரும் கேள்விப்பட்டதோ கண்டதோ கிடையாது. இருந்தும் சீதாதேவிக்காக அதைப்பிடிக்க ரகு புத்திரனான ராமபிரான் ஆசை கொண்டார். அழிவு காலம் நெருங்கும்போது புத்தி எதிர்மாறாகக் கிளம்பி விடுகிறது. இருந்தாலும் ஏற்கனவே இச்சம்பவங்களை நன்கு உணரும் போது அழிவு காலம் எப்படி வரும்? வேசிகளிடம் நிலைத்து நிற்கும் செல்வம், முட்டாள்களிடம் அறிவு, வினைப்பயன்களில் அழிவு ஆகியவை ஒருபோதும் கிடையாது என்பார்கள். இவற்றையெல்லாம் ஆலோசித்துப் பார்!" என்றான் புத்திசாகரன்.

அப்புறமும் அரசகுமாரன் அவன் வார்த்தைகளைக் கேட்காமல் வேட்டைக்குப் புறப்பட்டுச் சென்றான். வேட்டையில் பல மிருகங்களைக் கொன்ற பிறகு புள்ளி மான் ஒன்றை இளவரசன் காண நேர்ந்தது. அதைப் பின்பற்றித் துரத்திச் சென்ற ஜெயபாலன் பெருங்காடு ஒன்றில் நுழைந்தான். சிறிது தூரம் சென்ற பிறகு அவன் திரும்பிப் பார்க்கையில் அவனுடன் வந்த பரிவாரங்கள் நகரை நோக்கிச் சாலையில் சென்று கொண்டிருப்பதைக் கண்டான். அதே சமயம் அவனைக் கவர்ந்து இழுத்து வந்த புள்ளிமானும் மறைந்து விட்டது.

தன்னந்தனியாகக் குதிரை மீது அமர்ந்து கொண்டிருந்த அரசகுமாரன் எதிரில் அழகிய ஏரி ஒன்று இருப்பதைக் கண்டான். குதிரை மேலிருந்து அவன் கீழிறங்கி மரத்தின் கிளையிலே குதிரையைக் கட்டிவிட்டுத் தண்ணீரில் இறங்கிக் கை கால்களைக் கழுவிக் கொண்டு, இரண்டு வாய் தெளிந்த நீரை அள்ளிப் பருகினான். அதன் பின்னர் இளவரசன் ஓய்வு பெற விரும்பி கரையின் மீது இருந்த பெரிய மரத்தின் நடுவே உட்கார்ந்தான்.

அப்போது பயங்கரமாக உறுமிக் கொண்டு புலி ஒன்று

அவ்விடத்திற்கு வந்தது. புலியைக் கண்ட குதிரை மிரண்டு கயிற்றை அறுத்துக் கொண்டு ஓட்டமெடுத்தது. ஆனால் ராஜ குமாரனோ தப்பித்து ஓட முடியாமல் பயத்தால் நடுங்கியவனாய் மளமளவென மரத்தின் மீது ஏறினான். மரத்தின் மேலே கரடி ஒன்று உட்கார்ந்திருந்தது. கரடியைக் கண்டதும் இளவரசனின் பயம் அதிகரித்துவிட்டது. அவனால் மேலே போக முடியவில்லை. கீழேயும் இறங்க முடியவில்லை. இரண்டுங்கெட்டான் நிலையில் தவிக்கும் அவனைப் பார்த்து கரடி பின்வருமாறு சொல்லியது.

"அரசகுமாரா, பயப்படாதே! இன்று என்னிடம் அடைக்கல மென்று ஓடி வந்தாய். ஆகவே உனக்கு ஒரு கெடுதியும் செய்ய மாட்டேன். புலியைப் பற்றி பயப்படாதே என்னை நம்பு!"

"கரடி ராஜனே! நான் ஆபத்தின் பயத்தினால் உன்னிடம் அடைக்கலம் தேடி வந்துள்ளேன். கெஞ்சிக் கதறும் என்னைப் புலியிடமிருந்து காப்பாற்று. உனக்குப் பெரும் புண்ணியம் கிடைக்கும். மரணத்தின் பயத்தால் துடித்துக் கொண்டிருக்கும் ஓர் உயிரைக் காப்பாற்றுவதானது. தக்ஷிணைகளை வழங்கிச் செய்யப்பெறும் தர்மங்களனைத்தையும் விட மேலானது என்று சொல்லப்படுகிறதே!" என்றான் ராஜகுமாரன்.

"அரசகுமாரா, உனக்கு அபயம் அளித்தேன், பயத்தை விட்டுத் தைரியமாக இரு" என்றது கரடி.

புலி மரத்தடியை விட்டுப் போகவில்லை. அங்கேயே அது ராஜகுமாரனுக்காக காத்துக் கொண்டிருந்தது. சூரியன் மறைந்து இரவும் வந்தது. பசியாலும் தளர்ச்சியாலும் ஜெயபாலன் தூங்கி வழியத் தொடங்கினான், அதைப் பார்த்த கரடி, "அரசகுமாரா! தூக்கம் உன் கண்களைச் சுற்றுகிறது. பயத்தினால் நடுங்கிக் கொண்டிருக்கும் நீ தூக்கத்தில் தவறி விழுந்து புலிக்கு இரையாக நேரிடும். பயத்தை விட்டு என்னிடம் மேலே ஏறி வா. என் மடியில் படுத்துத் தூங்கலாம்!" என்று அழைத்தது.

ஜெயபாலனும் கரடி சொன்னபடியே மரத்தின் மேலே ஏறி அதன் மடியிலே தலையை வைத்துத் தூங்கத் தொடங்கினான். அப்போது புலியானது கரடியைப் பார்த்துக் கூறலாயிற்று: "நண்பா, நகரில் வசிக்கும் இவன் மீண்டும் நம்மை வேட்டையாடிக் கொன்றுவிட வந்து விடுவான். இவன் நம் எதிரி என்று தெரிந்தும் உன் மடியில் ஏன் படுக்க வைத்து அபயமளிக்கிறாய்? இவனோ நம் இனத்தைச் சேர்ந்தவனல்ல! மனிதன்! நான், புலி, குரங்கு, பாம்பு ஆகியவைகளுக்காக மட்டும் பேசவில்லை. மிருகங்களுடைய நன்மைக்காக ஏற்பட்டது மனிதர்களுடைய

நன்மைக்கு உகந்தது ஆகாது" என்றது.

மேலும், "ஓ கரடியே! உன்னால் அந்த ராஜகுமாரன் காப்பாற்றப்பட்டாலும், அவன் உனக்கு கெடுதலைத் தவிர வேறு எதுவும் செய்யமாட்டான். ஆகவே, அவனைக் கீழே தள்ளி விடு அவனை சாப்பிட்டு விட்டுத் திருப்தியுடன் போகிறேன், நீயும் உன் இருப்பிடத்திற்குப் போகலாம்!" என்று கூறியது.

"அவன் எப்பேர்பட்டவனாக இருந்தாலும் என்னிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறான். அவனைக் கீழே தள்ளமாட்டேன். அடைக்கலம் புகுந்தோரைக் கொல்வது பெரும் பாபம். எவனொருவன் நம்பிக்கைத் துரோகம் செய்கிறானோ அடைக்கலம் புகுந்தோரை அழிக்கிறானோ, அவன் உலகம் அழியும் வரை நரகத்தில் கிடந்து உழல வேண்டும் என்பார்கள். இந்த பாதகத்தை நான் செய்யமாட்டேன்!" என்று சொல்லியது கரடி.

சிறிது நேரத்திற்கெல்லாம் அரசகுமாரன் விழித்து கொண்டான். கரடி அவனை நோக்கி, "அரசகுமாரா, நான் சிறிது நேரம் தூங்குகிறேன்" ஜாக்கிரதையாக கவனிக்கிறாயா?" என்று கேட்டது.

"அப்படியே பார்த்துக் கொள்கிறேன்" என்று அவன் சொல்லவே கரடியும் அவன் பக்கத்தில் படுத்துத் தூங்கியது. இந்தச் சமயத்தில் புலி அவனைக் கூப்பிட்டு, "ஓ ராஜகுமாரா, இந்தக் கரடியை நம்பாதே, இதன் கைகால்களில் கூரிய நகங்கள் இருக்கின்றன!" என்று சொல்ல ஆரம்பித்தது.

"ஆறுகள், நகங்கள், கொம்புகள் உடைய மிருகங்கள், ஆயுதங்களுடன் கூடிய மனிதர்கள், பெண்கள், அரசர்கள் ஆகியோர்களிடம் நம்பிக்கை வைக்கக் கூடாது!" என்பார்கள் பெரியோர்கள்.

"மேலும் கரடியோ, நிலையான புத்தி உடையது அல்ல. ஆகவே இதன் அன்பைக் கண்டும் பயப்பட வேண்டியதே!

"ஒரு கணம் மகிழ்ச்சி; அடுத்த கணம் கோபம்; வினாடிக்கு வினாடி வெறுப்பு; அடிக்கொருதரம் மறைக்கக் கூடிய புத்தியுள்ளவர்களின் அன்பு; இவை அபாயகரமானவை!

"இந்தக் கரடி உன்னை ஏன் காப்பாற்றியதென்றால் நான் போனதும் உன்னைச் சாப்பிட விரும்புகிறது. இதை நீ உணராமல் இதன் பசப்பு வார்த்தைகளில் மயங்கி விட்டாய். கரடியைக் கீழே தள்ளிவிடு. அதைச் சாப்பிட்டு என் பசியை போக்கிக்

கொள்கிறேன். நீயும் நிம்மதியாக நகரத்திற்குத் திரும்பலாம்!" என்று புலி சொல்லிற்று.

அந்தப் புலியின் வார்த்தைகள் ஜெயபாலனுக்கு உண்மையாகவே பட்டன. கரடியைக் கீழே தள்ளிவிட்டான் ராஜகுமாரன். ஆனால் கரடி கீழே விழவில்லை. நடு வழியிலே குறுக்கிட்ட கிளை ஒன்றைப் பிடித்து மேலே ஏறிவிட்டது. அதைக் கண்ட ராஜகுமாரன் நடுங்கிப் போய்விட்டான்.

"ஏ நன்றி கெட்ட கீழ்மகனே! ஏன் பயப்படுகிறாய்? உன் உயிருக்கு ஆபத்து வராது. நீ செய்த காரியத்தின் பலனை நன்றாக அறியவேண்டும். ஆகவே உன் புத்தி சுவாதீனத்தை இழந்து பைத்தியம் பிடித்தவனாய் திரும்பத் திரும்ப "ஸஸேமிரா" என்ற வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு இந்தக் காட்டிலே அலைந்து கொண்டிருக்கப் போகிறாய்! என்று அவனைப் பார்த்துச் சொல்லியது கரடி.

மெல்லப் பொழுது விடிந்தது. யாராவது வந்துவிடப் போகிறார்களோ என்ற எண்ணத்தில் புலி ஓடிப் போய்விட்டது. கரடியும் அரசகுமாரனைச் சபித்துவிட்டுத் தன் இருப்பிடத்திற்குப் போய்விட்டது. அரசகுமாரனும் புத்தி தடுமாறியவனாக "ஸஸேமிரா" என்ற வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டே காட்டில் திரியத் தொடங்கினான்.



அரசகுமாரனுடைய குதிரை மட்டும் தனியாக நகரத்திற்கு வந்து சேர்ந்தது. ராஜகுமாரனைச் சுமந்து வராமல் அது தனியே வருவதைக் கண்டு குடிஜனங்கள் ராஜாதி ராஜனிடம் ஓடிச்சென்று முறையிட்டார்கள். நந்தமன்னன் உடனே மந்திரி பஹுசுருதனை வரவழைத்து "மந்திரி, என் குமாரன் வேட்டைக்குக் கிளம்பும்போது கெட்ட சகுனங்கள் தோன்றின. இருந்தும் அவைகளை லட்சியம் செய்யாமல் அவன் புறப்பட்டுப் போனான். இப்போது அவன் ஏறிச் சென்ற குதிரை மட்டும் தனியாக வந்திருக்கிறது. அவனைக் காணவில்லை. அவனுக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. அதனால் நாம் உடனே காட்டிற்குச் சென்று அவனைத் தேட வேண்டும்" என்றான்.

அவ்விதமே மன்னனும் மந்திரியும் காட்டிற்குச் சென்று தேடினார்கள். அங்கு புத்தி மாறியவனாய் ஜெயபாலன் "ஸஸேமிரா" என்ற வார்த்தைகளைக் கூறிக்கொண்டு திரிவதைக் கண்டு அவனை அழைத்து வந்தனர். மைந்தனின் நிலையைக் கண்ட நந்தமன்னன் சொல்ல முடியாத துயரத்தில் மூழ்கினான். மணிமந்திர ஔஷதங்களில் வல்லவர்கள் வரவழைக்கப்பட்டனர். எவ்வளவுதான் முயன்றும் அவர்களுக்கு அரசகுமாரனின் நோய் மூலத்தைக் கூட கண்டு பிடிக்கவே முடியவில்லை.

இந்தச் சமயம், தன் மந்திரியை நோக்கிச் சொல்லலானான்.

"ராஜகுரு சாரதாநந்தனர் இங்கிருந்தாரானால் என் மைந்தனை ஒரு நொடிப் பொழுதில் அவர் தெளிய வைப்பாரே. ஆனால் அவரைத்தான் நான் சரியாக விசாரியாமல் ஒரு காரணமும் இல்லாமல் மரண தண்டனைக்கு ஆளாக்கி விட்டேனே; ஒருவன் எந்தக் காரியத்தையும் செய்யும் முன்பாகத் திர ஆலோசிக்க வேண்டும். அவ்விதம் செய்யவில்லையென்றால் அதுவே கெட்ட காலத்திற்கு ஒரு காரணம்.

அவசரப்பட்டு எந்தக் காரியத்தையும் செய்யக்கூடாது; கெடுதலை உடையதாயிருக்கும் தீர்ப்புகளே கெட்ட காலத்துக்கு முக்கிய காரணம். நல்ல குணங்களை விரும்பும் அதிர்ஷ்டதேவதை (திரு அல்லது லக்ஷ்மி) திர ஆலோசிப்பவனையே தேர்ந்தெடுக்கிறாள். ஒருவன் திர ஆலோசிக்காமல் எதையும் செய்யக்கூடாது நன்றாக ஆலோசித்து முடிவு செய்யப்பட்டவைகளையே செய்யவேண்டும். இல்லையேல் வியாகூலம் ஏற்படும். பிராமணப் பெண்ணும் கீரிப்பிள்ளையும் கதை எல்லோரும் அறிந்ததே!

இருந்தாலும் என்னைத் தடுக்கக்கூடியவன் எவனும் அப்போது இல்லை என்று வருத்தத்தோடு சொன்னான் நந்தமன்னன். அவனை மைந்தனின் நிலை பெரிதும் வாட்டியது.

இதற்கு மந்திரி பஹுசுருதன் பின்வருமாறு பதில் சொன்னார். "அப்போது நடக்க வேண்டியதே நடந்திருக்கிறது. அவரவர் விதிப்படியே அவரவர் புத்தியும் மாறுகிறது. ஒருவனுடைய புத்தி, காரியம், எண்ணம், நண்பர்கள் ஆகிய இந்நான்கும் விதிப்படியே மாறுகிறது. எது நடக்கக் கூடாததோ அது நடக்காது. எது நடக்க வேண்டுமென்றிருக்கிறதோ அது நடந்தே தீரும். எவ்வித முயற்சியும் செய்யாவிட்டாலும்கூட, அவை நடந்துவிடும். அவனுக்கு இல்லை என்று விதிக்கப் பட்டிருக்கும்போது, அவனுடைய உள்ளங்கையில் வைத்து மூடிக் கொண்டிருக்கும் போது கூட அவனுக்குக் கிடைக்காமல் போய்விடும்!"

இதைக் கேட்ட அரசன், "இது முன் வினைகளின் பலனே! எனினும், இப்போது என் குமாரனின் பைத்தியம் தீர்க்க நான் பெரும்முயற்சி எடுத்துக் கொண்டுதான் ஆகவேண்டும்!" என்றான்.

"எவ்விதத்தில்?" என்று கேட்டான் மந்திரி பஹுசுருதன்.

"என் மைந்தனைச் சொஸ்தப்படுத்துபவர்களுக்கு என் ராஜ்ஜியத்தில் பாதி கொடுப்பதாக அறிவிக்கப் போகிறேன்!" என்றான் மகாராஜன்.

மந்திரி வீடு திரும்பியதும் குரு சாரதாநந்தனிடம் சென்று நடந்ததை தெரிவித்தார். அதைக் கேட்ட ராஜகுரு, "மந்திரி! தாங்கள் அரசரிடம் சென்று, "என் வீட்டில் யௌவனத்தோடு கூடிய இளம்பெண் ஒருத்தி இருக்கிறாள். அரசகுமாரனை அவள் நேரில் பார்க்க ஏற்பாடு செய்தால் அவள் ஏதாவது ஒரு வழி சொல்லக்கூடும்" என்று தெரிவியுங்கள்!" என்றார்.

மந்திரியும் அதே போல நந்த மன்னனிடம் சென்று சொன்னார். அரசனும் தன் குமாரனை அழைத்துக் கொண்டு பிரதானிகளுடன் மந்திரியின் வீட்டுக்கு வந்தான். அரசகுமாரன் "ஸஸேமிரா!" என்று சொல்லிக் கொண்டே உட்கார்ந்திருந்தான். திரை ஒன்றன் பின்னால் மறைந்திருந்த சாரதாநந்தனர், "ஸ, ஸே, மி, ரா" என்று ஒவ்வொரு எழுத்தும் தொடங்கும் நான்கு சுலோகங்களைச் சொன்னார். "ஸ" என்று ஆரம்பிக்கும் முதல் சுலோகம் பின் வருமாறு பொருளைக் கொண்டது.

"ஸத் குணங்களை நம்பிக் கொண்டிருக்கும் மனிதனை ஏமாற்றுவதில் என்ன புத்திசாலித்தனம் இருக்கிறது? மார்பில் படுத்துத் தூங்கும் ஒருவனைக் குத்திக் கொல்வதில் என்ன வீரம் இருக்கிறது?

இந்த முதல் சுலோகத்தைக் கேட்ட அரசகுமாரன் "ஸ" என்று சொல்லுவதை விட்டுவிட்டான்.

அடுத்தபடியாக சாரதாநந்தனர் "ஸே" என்ற எழுத்துடன் தொடங்கும் சுலோகத்தைச் சொன்னார். அதன் உட்பொருள் பின் வருமாறு உள்ளதாகும்:

"கங்கை சமுத்திரத்தில் கலக்குமிடத்தில் சங்கமத்தை அடைந்தால் பிரம்மஹத்தி தோஷம் போய்விடுகிறது. ஆனால் நண்பனுக்குத் துரோகம் செய்பவனுடைய பாவம் ஒரு போதும் விலகுவதில்லை.

"எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை

செய் நன்றி கொன்ற மகற்கு"

இரண்டாவது சுலோகத்தைக் கேட்ட அரசகுமாரன் "ஸே" என்ற வார்த்தையை விட்டுவிட்டான்.

மூன்றாவதான "மி" என்ற எழுத்துடன் தொடங்கும் ஒரு சுலோகத்தைக் குரு சொன்னார்:

"மித்திரத் துரோகி, நன்றியில்லாத மனிதன் நம்பிக்கைத் துரோகம் செய்பவன் இந்த மூவரும் சூரிய சந்திரர் உள்ளவரைக்கும் நரகத்திலே கிடந்து உழலுவார்கள்.

இதைக் கேட்ட பிறகு அரசகுமாரன் மூன்றாம் எழுத்தான 'மி' என்பதையும் விட்டு, 'ரா' என்ற எழுத்தை மட்டும் சொல்லிக் கொண்டிருந்தான். கடைசியாக, "ரா" என்ற எழுத்துடன் தொடங்கும் சுலோகத்தை ஆரம்பித்தார் குரு சாரதாநந்தனர்.

"ராஜனே! உன் மகன் க்ஷேமத்தை நீ விரும்புகிறாயானால் அறிஞர்களுக்கு நிறையப் பரிசைக் கொடு. அவர்களே உயர்ந்தவர்கள்!"

இதைச் சொல்லி முடித்ததும் அரசகுமாரன் தன் பழைய நிலையை அடைந்து விட்டான். தந்தையிடம் காட்டில் நடந்தவற்றை விவரமாகத் தெரிவித்தான். அதைக் கேட்ட நந்தமன்னன் நன்றியுணர்வுடன் திரையை நோக்கி அதன் மறைவிலிருந்த சாரதாநந்தனரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான். அப்போதும் திரைக்குப் பின்னாலிருப்பது ஒரு பெண் என்றுதான் மன்னவன் நினைத்துக் கொண்டிருந்தான்.

"ஏ, அழகிய பெண்ணே! நீயோ நகரத்தில் வசிப்பவள். காட்டிற்குப் போனதில்லை. காட்டிலே கரடி, புலி, மனிதன் இம்மூவருக்குமிடையே நிகழ்ந்த சம்பவத்தை எவ்விதம் உன்னால் அறிய முடிந்தது?" என்று நந்த மன்னன் கேட்டான்.

திரைக்குப் பின்னாலிருந்த சாரதாநந்தனர் சிரித்துக் கொண்டே "தேவர்களின் ஆசிரியர் பிரகஸ்பதியின் அருளால் சாரதா தேவி என் நாவில் தங்கியிருக்கிறாள். அவள் அருளினால் பானுமதியின் மச்சத்தை நான் ஞான திருஷ்டியின் மூலம் அறிந்தது போலவே இதையும் நான் அறிந்தேன்!" என்று சொன்னார்.

அவர் வார்த்தைகளைக் கேட்ட நந்த மன்னன், திகைத்துப் போய்விட்டான்; சட்டென்று திரைச் சீலையைப் பிடித்து இழுத்தான். அங்கு உட்கார்ந்திருந்த சாரதாநந்தனரை நேருக்கு நேர் அவன் கண்டான். உடனே மன்னவனும் மற்றவர்களும் குருவின் காலில் விழுந்து வணங்கினார்கள். மந்திரி பஹுசுருதன் அவர்களுக்கு முன்பு நடந்த கதையைத் தெரிவித்தார். நந்த மன்னன் அவரைப் பார்த்து பின்வருமாறு சொன்னான்:

"மந்திரி உன்னுடைய தொடர்பினால் நான் பெரும் கேட்டிலிருந்து தப்பினேன். இதனால் ஒருவர் நல்லவர்களிடமே நட்புக் கொள்ள வேண்டும் என்று தெரிகிறது. அதன் மூலம் அவன் நல்ல பலன்களை அடைவான்.

கங்கை ஜலத்தை அருந்துவதன் மூலம் ஒருவன் தாகத்தையும், தான் செய்த பாவங்களையும் அவற்றின் மூலம் நேரக்கூடிய கேடுகளையும் தீர்த்துக் கொள்ளுகிறான். அதுபோல நல்லவர்களுடன் நட்புக் கொண்டுள்ளவன் தன்னுடைய கஷ்டங்களையும் வருங்காலத்தில் ஏற்படக்கூடிய ஆபத்துகளையும் நிவர்த்தித்துக் கொள்ளுகிறான்.

"மேலும் உன் மூலமே என்னுடைய குமாரனும் பெரும் ஆபத்திலிருந்து மீள முடிந்தது. உன்னைப் போன்ற உயர் குடும்பத்தில் பிறந்தவனாகவும் புத்திசாலியாகவுமுள்ளவனையே அரசன் மந்திரியாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

ஓர் அரசன் கீழ்த்தரமான குடும்பத்தில் பிறந்தவனை அடையாதிருந்தால் அவன் எறும்புப் புற்றிலிருக்கும் பாம்பைப் பிடிக்கும் சாமர்த்தியமான பாம்பாட்டிக்குச் சமானமானவனே என்று சொல்லப்படுவதுண்டு" இவ்விதம் நந்த மன்னன் தன் மந்திரி பஹுசுருதனைப் பலவாறு புகழ்ந்து அநேக பரிசுகளைக் கொடுத்து கௌரவித்தான்.



## 3. சிம்மாசனப் பதுமைகள் சிரித்த கதை

பஹுசுருதன் கதையைச் சொல்லி முடித்த நீதி வாக்கிய மந்திரிக்கு போஜ மஹாராஜன் அனேக வெகுமானங்களும், ஆபரணங்களும் கொடுத்து உபசரித்தான். பிறகு நவரத்தின சிங்காதனத்தை நகரத்துக்குக் கொண்டு சென்று ஆயிரக்கால் மண்டபம் ஒன்றைக் கட்டுவித்து அதன் நடுவில் சிங்காரமாகச் சிங்காதனத்தை வைத்தான். புனித க்ஷேத்திரங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட தீர்த்தங்களை தெய்வீக சக்திவாய்ந்த மூலிகைகளால், வேத பாராயணத்துடன் அந்த அதிசய சிங்காதனத்திற்கு அபிஷேகம் செய்வித்து, பூஜை புனஸ்காரங்களைச் செய்தான். அவன் அந்தப்புர மாதர்கள் தீப ஆராதனை செய்தார்கள். அனேக அறநெறியாளர்கள் அரசனுக்கு ஆசிர்வாதம் செய்தார்கள். கவிஞர்கள் அரசனுடைய குணாதிசயங்களைப் புகழ்ந்து பாடினார்கள். அதன் பிறகு போஜ மன்னன் நான்கு வருணத்தாருக்கும், ஏழை, குருடு, செவிடு, நொண்டி, அவலக்ஷணம் ஆகியோர்களுக்கும் தகுந்த வெகுமானங்களும் பரிசுகளும் அளித்தான். சாமரம் குடை முதலானவற்றுடன் நல்ல முகூர்த்தத்தில் போஜமன்னன் சிங்காதனத்தில் ஏறப்போகும்போது அதன் படிகளிலுள்ள முப்பத்திரண்டு பதுமைகளும் கலகலவென்று கைகொட்டிப் பரிகாசமாகச் சிரித்தன.

"ஓ பதுமைகளே! நான் சிங்காதனம் ஏறப்போகையில் சிரித்ததேன்?" என்று போஜராஜன் கேட்டான்.

அப்போது முப்பத்திரண்டு படிகளில் முதற்படிக்குக் காவலாக இருந்த சுகேசி என்ற விநோதரஞ்சிதப் பதுமையானது, மனிதக் குரலில் பின்வருமாறு சொல்லியது.

"போஜ மஹாராஜனே! வீரம், மாட்சிமை, தைரியம், உயர் குலப்பிறப்பு மற்றும் எங்கள் மஹாராஜாவுக்குள்ள குணங்கள் உனக்கிருக்கும் பட்சத்தில் இந்தச் சிங்காதனத்தில் ஏறலாம்."

திடுக்கிட்டுப் பின் வாங்கிய போஜராஜன், "பதுமையே! நீ குறிப்பிடும் குணங்கள் அனைத்தும் என்னிடம் இருக்கின்றன. வேறு எது குறைந்து விட்டது? காலத்திற்கேற்றவாறு நானும் இருந்து கேட்பவர்களுக்கு இல்லையென்று சொல்லாது கொடுத்து வருகிறேன்!" என்றான்.

அவன் வார்த்தைகளைக் கேட்டு விநோதரஞ்சிதப் பதுமை "கலகல"வென்று சிரித்தது.

"ஏ ராஜன்! கேளும். இந்த ஒரு வார்த்தையே உனக்குத் தகாதென்பதை எடுத்துக் காட்டுகிறது. என்னவெல்லாம் கொடுத்திருக்கிறாயோ, அவற்றை நீ உன் வாயாலேயே கூறுகிறாய்! எவனொருவன் தான் செய்தவற்றையும் மற்றவர்களுடைய தவறுகளையும் பேசுகிறானோ அவன் இழிவான மனிதனே. நல்ல குணம் படைத்தவன் இவ்விதம் பேசமாட்டான். மற்றவர்களின் தவறுகளை அவை தன்னிடம் உள்ள நற்குணங்களே போல் நினைத்து எடுத்துச் சொல்லுபவன் இவ்வுலகில் இழிவானவனே! தன்னுடைய குணங்களையும் மற்றவர்கள் செய்யும் தவறுகளையும் நல்ல குணம் வாய்ந்த ஒருவன் ஒருபோதும் சொல்லமாட்டான். வயது, செல்வம், வீட்டுச் சுவரிலுள்ள பிளவு, சக்தி, மருந்து, பெண்களுடன் சகவாசம், கொடை, கௌரவம், இழிவு ஆகிய இந்த ஒன்பதையும் ஒருபோதும் வெளியிடக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, ஒருவன் தன்னுடைய குணங்களைப் பற்றிப் பேசக்கூடாது அவ்விதமே மற்றவர்களிடமுள்ள குறைகளைப் பற்றியும் பேசக் கூடாது."

பதுமையின் வார்த்தைகளைக் கேட்ட போஜராஜன், வியப்புடன், "நீ உண்மையை எடுத்துச் சொன்னாய்! தன்னுடைய குணங்களைப் பற்றிப் பேசுபவன் முட்டாளே அன்றி வேறல்ல. நான் செய்தவற்றைப் பற்றிப் பெரிதாக எடுத்துச் சொன்னது அவிவேகமான செய்கையே!" என்றான்.

"சகல கலா விற்பன்னராக ஐம்பத்தாறு தேசத்திலுள்ள அரசர்களெல்லாம் பணிந்து கப்பம் கட்டும்படி பாராண்ட மன்னராக பட்டி என்கிற மதி மந்திரியுடன் பூலோகத் தேவேந்திரனைப் போல இராஜ்ஜிய பரிபாலனம் செய்தார் எங்கள் விக்கிரமாதித்த மஹாராஜர். அவரைப் போல வல்லவரன்றோ இந்த விநோதச் சிங்காதனம் ஏறவேண்டும்? என்றது தங்கப் பதுமை.

"இந்தச் சிங்காதனத்துக்கு உரியவனான அந்த மஹாராஜனின் வரலாற்றைச் சொல்!" என்றான் போஜராஜன்.

## 1-வது விஞேரஞ்சிதப் பதுமை சொல்லிய விக்கிரமாதித்தன் பூர்விகக் கதைகள்



நவரத்தினச் சிங்காதனத்தின் முதற்படிக்குக் காவலாகிய விஞேதரஞ்சிதப் பதுமையானது போஜ மஹாராஜனையும், நீதிவாக்கிய மந்திரியையும் நோக்கி, கேளுமையா பூமான்களே! என்று விக்கிரமாதித்தனின் பூர்வீகக் கதைகளைப் பின்வருமாறு சொல்லத் தொடங்கியது.

### 1. சந்திரவர்ணன் கதை

நந்தியாபுரம் என்ற நகரத்தில் சந்திரவர்ணன் என்னும் ஓர் அந்தணன் இருந்து வந்தான். அவன் நான்கு வேதம். ஆறு சாஸ்திரம், பதினெண் புராணம், இருபத்தெட்டு ஆகமம். அறுபத்து நான்கு கலைகள் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தான். இருந்தும் தான் கற்று அறிந்தவைகளுக்கும் மேலானவற்றை அவன் அறிய விருப்பம் கொண்டவனாக நல்ல குருவைத் தேடிக் கிளம்பினன்.

அவ்விதம் தேசாந்திரியாகச் சஞ்சரித்து வரும் நாளில் அவன் ஒருநாள் தாகவிடாய் பொறுக்கமாட்டாமல் ஒரு மலையடிவாரத்திலிருந்து தடாகத்தில் இறங்கித் தண்ணீர்ப் பருகித் தாகம் தீர்த்துக் கொண்டான். சிறிது நேரம் அவன் ஆயாசம் தீர அதன் கரையிலிருந்த அரசமரத்தடியில் படுத்தான்.

அம்மரத்திலே நெடுநாளாய் பிரம்ம ராக்ஷஸன் என்னும் ரிஷி தவம் செய்து கொண்டிருந்தான். அன்றையத் தினம் பிரம்ம ராக்ஷஸன் தன் அனுஷ்டானத்தை முடித்துக் கொண்டு கண்விழித்துப் பார்த்தபோது, மரத்தடியில் அந்தணன் ஒருவன் படுத்திருப்பதைக் கண்டான். உடனே குளத்திலிறங்கி, ஸ்நானம் செய்து ஒரு பிராமணனைப் போன்று உருக்கொண்டு அவன் எதிரில் வந்தான்.

"ஸ்வாமி, தாங்கள் யார்? எக்காரணம் கொண்டு திருடர்களும் கொடிய மிருகங்களும் நிறைந்த இவ்வனத்தில் தனியாக வந்துள்ளீர்கள்?" என்று கேட்டான் பிரம்ம ராக்ஷஸன்.

அதைக்கேட்ட சந்திரவர்ணன் "ஐயா! நான் நந்தியாபுரத்தைச் சேர்ந்தவன்! நான் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்த போதிலும், நான் கற்றுக் கொள்ளாத விஷயங்கள் கணக்கின்றி இருக்கின்றன. ஆகவே தகுந்த குருவை நாடி என் அறிவை மேலும் விருத்தி செய்து கொள்ளப் புறப்பட்டு வந்துள்ளேன். தாங்கள் அறிஞர் போல் தோன்றுகிறது. என்னைத் தங்கள் சிடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்று வேண்டினான்.

"எனக்கு மெத்த சந்தோஷமே; ஆனால் நான் சொல்லுகிற படி நீ இருந்தாயானால் உனக்கு நான் அறிந்துள்ள வித்தை சித்தியாகும்" என்றான் பிரம்ம ராக்ஷஸன்.

அதற்கு சந்திரவர்ணன் இணங்கவே, "அந்தண சிரேஷ்டா! ஆறுமாதத்துக்கு நீ அன்ன ஆகாரமின்றி, நித்திரையும் ஒழித்து விரதம் இருக்க வேண்டும். நான் இம்மரத்தின் மேல் இருந்து கொண்டு நான் கற்ற வித்தை அனைத்தையும் அரச இலைகளில் எழுதிக் கீழே போடுகிறேன். நீ அவற்றைச் சேகரித்து தினம் அவற்றிலுள்ளபடி அப்பியாசம் செய்து வா" என்றான் பிரம்ம ராக்ஷஸரிஷி. அப்பால், பசியும், நித்திரையும் அவனை வாட்டாமலி ருக்கும்படி அவனுக்கு ஒரு மந்திரத்தை உபதேசித்தான் பிரம்ம ராக்ஷஸரிஷி.

இரவும் பகலும் ஓயாமல் குரு சொன்ன வார்த்தை தப்பாமல் சந்திரவர்ணன் சகல வித்தைகளையும் அறிந்து கொண்டான். ஆறு மாதம் தவம் முடிந்ததும் தேவலோகத்திலிருந்து புட்பக விமானம் வர, பிரம்ம ராக்ஷஸன் சாபம் நீங்கிப் புறப்பட்டான். அப்போது சந்திரவர்ணனை அருகில் அழைத்து "என் வார்த்தை தப்பாமல் நடந்து நீ வித்தையைக் கற்றுக் கொண்டாய். இனி நீ உன் நகரம் திரும்பி நல்ல பெண்ணைப் பார்த்து மணம் செய்து கொண்டு குடும்ப வாழ்வில் ஈடுபடு!" என்று உபதேசித்தான்.

சந்திரவர்ணன் அங்கிருந்து புறப்பட்டுத் தன் நகரம் நோக்கி வந்து கொண்டிருக்கும்போது கன்னியாபுரி என்ற பட்டணம் வந்தான். அங்கே அலங்காரவல்லி என்னும் தாசி வீட்டின் திண்ணையில் சிறிது இளைப்பாறுவதற்காக அமர்ந்தான். ஆறுமாதமாக அன்ன ஆகாரமில்லாதிருந்தபடியால் அவன் தன்னைமறந்து அங்கே நித்திரையிலாழ்ந்து விட்டான்.

இரவு பத்து நாழிகை ஆன சமயம், கோவிலேலே தன் கடமைகளை முடித்துக் கொண்டு திரும்பிய தாசி, தன் வீட்டுத்

திண்ணையிலே பிரேதம் போன்று - மூச்சு மட்டும் ஓடிக்கொண்டிருக்க அந்தணன் படுத்துக் கிடப்பதைக் கண்டு பதறிப் போய் அக்கம் பக்கத்திலிருந்த வைத்தியர்களைக் கூப்பிட்டாள். அவர்கள் வந்து பார்த்துவிட்டு, "அம்மா, அப்பிராமணன் ஆறுமாதம் ஆகாரமும் நித்திரையுமின்றி இருந்ததால் இப்படிக் கட்டையாகக் கிடக்கிறான். தினமும் மூன்று வேளை ஒருபடி அரிசி வடித்து, அதனுடன் ஒரு படி நெய் கலந்து இவனுடைய உச்சி முதல் உள்ளங்கால் வரை தடவி வந்தீர்களானால் மயிர்க் கால்களின் வழியே அன்னம் உட்சென்று பிழைத்தெழுவான்" என்றனர்.

தாசியும் அவ்விதம் மூன்று நாட்கள் செய்துவர, சந்திரவர்மன் நித்திரை கலைந்து எழுந்தான். கண் விழித்ததும், தான் தாசி வீட்டிலிருப்பதை உணர்ந்த அவன், வேகமாக எழுந்து வெளியே சென்றான். அப்போது தாசி குறுக்கே வந்து "ஸ்வாமி உம்மை மணந்து கொள்ள வேண்டுமென்ற விருப்பத்தினால் மூன்று நாட்கள் கண்ணை மூடாமல் உம்மைப் பாதுகாத்து வந்தேன். நீங்கள் இப்படி என்னைத் திரஸ்கரித்து என்னை விட்டுப் போவது நியாயமா?" என்று கேட்டாள்.

ஆனால் சந்திரவர்ணன் அதற்கிணங்க மறுக்கவே, அவள் அந்நகரத்து மன்னனிடம் அழைத்துச் சென்று வழக்காடினாள். சபையிலிருந்த புரோகிதர், "அரசே பிராமண குலத்தில் பிறந்த புருஷர்கள் தங்கள் குலத்திலல்லாமல் வேறு குலத்தின் பெண்ணை மணக்க வேண்டுமென்றால், நான்கு வருணத்திலுள்ள பெண்களை ஒரே முகூர்த்தத்தில் மணக்க வேண்டுமென சாஸ்திரம் சொல்லியிருக்கிறது" என்றார்.

அதைக் கேட்டு அவனும், பிராமணனின் மேதாவிலாசத்தைக் கண்டு மனம் மகிழ்ந்தவனாய், "புரோகிதரே அப்படியானால், என் குமாரத்தி சித்திரரேகையையும் உம்முடைய குமாரத்தி கல்யாணியையும் இதோ நமது சபையில் இருக்கும் வைசியக் குலச் சோமசேகரன் செட்டியாரின் குமாரத்தியான கோமளாங்கியையும் தாசி அலங்காரவல்லியுடன் ஒரே முகூர்த்தத்தில் இப்பிராமணனுக்கு மணம் செய்து வைக்கப்பிரியப்படுகிறேன்" என்று சொன்னான். அதைக் கேட்டு அவர்களும் சம்மதிக்க, நல்ல சுப முகூர்த்தத்தில் சந்திரவர்ணன் நால்வரையும் மணந்தான்.

தன் பத்தினிமார் நால்வருடன் கோலாகலமாக நாட்களைக் கடத்தி வருகையில், சந்திரவர்ணனுக்கு, பிராமண ஸ்திரீயிடம் வல்லவ ரிஷி என்றும், அரசகுமாரி சித்திரரேகையிடம் விக்கிரமாதித்தன் என்றும், வைசியப் பெண் வயிற்றில் பட்டி என்றும் நான்காவதான தாசி அலங்காரவல்லியிடம் பர்த்ருஹரி என்றும் நான்கு குமாரர்கள் பிறந்தார்கள்.

குமாரர்கள் நால்வரும் ஒருங்கே கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கி வரும் நாளையில், புத்திரனின்றி அந்நகரத்து மகாராஜா இறந்துவிடவே மருமகனான சந்திரவர்ணன் அரசனாக முடிசூட்டப் பெற்றான்.

சந்திரவர்ணன் அந்திய காலத்தையடைந்த போது அவனை சுற்றிலும் நான்கு குமாரர்களும் வருத்தத்துடன் நின்றிருந்தனர். அப்போது அவன், தன்னுடைய இளையகுமாரனும் தாசி வயிற்றுப் புத்திரனுமான பர்த்ருஹரியைப் பார்த்து, "இவனுக்குக் கலியாணம் நடந்தால் பிள்ளைகள் பிறப்பர்; அப்படிப் பிறந்தால் நமக்கு மோக்ஷமில்லை" என்று நினைத்து அழுதான்.

பர்த்ருஹரி தன் அறிவினால் அதையுணர்ந்து, "தந்தையே நீங்கள் கவலையுறாதீர்கள். நான் கல்யாணம் செய்து கொண்டால் பிள்ளைகள் பெற்று உங்கள் நற்கதிக்குத் தடையாக இருக்க மாட்டேன். என் மனைவிகளுடன் நான் ஒருபோதும் தொடர்பு கொள்வதில்லையெனச் சத்தியம் செய்து கொடுக்கிறேன்" என்றான்.

அதைக் கேட்டு சந்தோஷமடைந்த சந்திரவர்ணன் தன் குமாரர்களை அருகில் அழைத்து "மைந்தர்களே! அலங்காரவல்லி தாசியினால்தான் நான் மற்ற மூவரையும் என் மனைவியராகப் பெற்றேன். ஆகவே அவளுக்குப் பிறந்தவனே எனக்குப் பிறகு பட்டம் ஏறவேண்டும்" என்று தெரிவிக்க, அவ்வாறே சகோதரர்களும் தங்களில் இளையவனான பர்த்ருஹரியை அரசனாக முடிசூட்டினர். சந்திரவர்ணனும் கவலையின்றி வாழ்க்கையை நீத்தான்.

அதன் பின்னர் மூத்த குமாரனான வல்லப ரிஷி, தன் இளைய சகோதரனான பர்த்ருஹரியை ஆசீர்வதித்து, அவனுக்குத் துணையாக விக்கிரமன், பட்டி இருவரையும் இருக்கச் செய்து, தான் தவமியற்ற காட்டுக்குச் சென்றான்.

உலக பந்தத்தை ஒருவன் வெறுத்துத் தள்ளினாலும், அனுபவித்தாலன்றி அது தீராது என்பதையும், ஒவ்வாத குலத்துப் பெண்ணிடம் அபரிமிதமான ஆசை வைத்தாலும், அவளுடைய சந்ததியினரால் மோக்ஷம் கிடைப்பதற்கு மத சம்பிரதாயம் இடம் கொடாது என்பதையும் சந்திரவர்ணன் வாழ்வு எடுத்துக் காட்டியது. அவனுடைய பிள்ளையான பர்த்ருஹரி அரசபீடம் ஏறிய கதையோ, அதிகாரப்பதவி வகிப்பவன் தன் சந்ததியின் மீது கருத்து செலுத்தக் கூடாது என்பதை நினைவுறுத்தியது. வல்லப ரிஷியின் துறவறமோ, அந்தணப் பெண்ணின் குமாரனுக்கு அரசாள உரிமையிருந்தாலும், தவம் செய்ய வேண்டுமே தவிர நாட்டை அரசாள்வது அதர்மமாகும் என்று குறிப்பிட்டது.

## 2. மணிமகுடம் துறந்த மன்னன் கதை



தேவலோகத்திலிருக்கும் அமராவதிப் பட்டணத்துக்கு ஒப்பான சகல ஐசுவரியங்களோடு கூடிய நகரம் ஒன்று பூவுலகில் இருந்தது. கன்னியாபுரி என்னும் பெயருடைய அந்நகரில் பர்த்ருஹரிராஜன் அரசாட்சி புரிந்து வந்தான்.

அவனுடைய பராக்கிரமத்தை எதிர்க்கும் சக்தியின்றி மன்னாதி மன்னர்களெல்லாம் அவனிடம் சிறைப்பட்டார்கள். அவ்விதம் சிறைப்பட்ட தங்கள் கணவர்களின் உயிரை மீட்க அரசிகள் கன்னியாபுரப் பட்டணத்திற்கு ஓடோடியும் வந்தார்கள். அரச சபையிலே மன்னர் மன்னனின் கால்களைப் பிடித்துக் கொண்டு உயிர்ப்பிச்சை தருமாறு வேண்டினார்கள். ராஜா பர்த்ருஹரியின் பாதங்களில் அவர்கள் தலை வைத்து வணங்கியதால் அவர்களின் நெற்றியில் இடப்பட்டிருந்த திலகங்கள் பதியவே, பார்ப்பதற்கு செக்கச் செவேலென்று காட்சியளித்தன. இவ்விதம் பர்த்ருஹரிராஜன் தனக்கு நிகரற்றவனாய் சகல கலைகளிலும் தேர்ச்சி பெற்று ஆட்சி நடத்தி வந்தான். அவனுக்கு ஒரு தம்பி இருந்தான். அவனும் விக்கிரமன் என்ற பெயருக்கேற்ப எதிரிகளின் வீரத்தைத் தன் பராக்கிரமத்தால் கவர்ந்து வந்தான்.

ராஜா பர்த்ருஹரி கலையுள்ளம் படைத்தவன். இயற்கை அழகின் கவர்ச்சியில் மனதைப் பறிகொடுத்துவிடக் கூடியவன். பெண்ணாசைகளில் அதிக ஈடுபாடு உள்ளவன். அவன் முன்னூற்று அறுபது அழகிகளை மணம் புரிந்து தன் அரண்மனை அந்தப்புரங்களைக் கலைக்கூடமாக்கியிருந்தான். ஆயினும் அவன் தன் பிதாவிற்கு மரண காலத்தில் செய்து கொடுத்த வாக்குறுதியின் பிரகாரம், தனக்குப் பிள்ளைகள் ஏதும் ஜெனிக்காதபடி தன் பிரதிக்ஞையைக் காப்பாற்றி வந்தான். அதற்காகவே மாதவிலக்காகிப் பதினான்கு நாள் சென்ற பிறகுதான் பத்தினிமார்களிடம் அவன் கொஞ்சி மகிழ்ந்திருப்பதை வழக்கமாக மேற்கொண்டிருந்தான். அவனுடைய அந்தப்புரப் பத்தினிகளில்

அவனுக்கு மிகவும் பிரியமானவள் ஒருத்தி இருந்தாள். அவள் தேவலோகத்து அப்ஸரஸுகளையெல்லாம் தோற்கடிக்கும்படியான உடல் லாவண்யமும் மென்மையும் பெற்றிருந்தாள். அவளுக்கு அனங்கசேனை என்று பெயர். மன்மதன் கலைகள் அனைத்திலும் கைதேர்ந்தவளாய், இளமைக் கவர்ச்சிகளைச் சேனைகளாகக் கொண்டு அவள் பர்த்ருஹரியின் இதயத்திலே மோகப் போரை எழுப்பி, வெல்லும் சாதுர்யமும் படைத்தவளாய் இருந்தாள். அவளே பட்டமகிஷியாகவும் விளங்கினாள். சரச சல்லாபங்களில் சிறந்த அந்த மோகனாங்கியின் இளமைக் கவர்ச்சியிலே பர்த்ருஹரி மூழ்கியவனாய் உலக நினைவையும் மறந்து கிடக்கலானான்.

ராஜா பர்த்ருஹரி அவ்வாறு அனங்கசேனையிடம் அலாதியான ஆசை வைத்து வரும் நாளில் அந்நகரத்தில் எல்லா சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த அந்தணன் ஒருவன் வசித்து வந்தான். வயது ஆக ஆகக் கிழட்டுத்தனம் தட்டவே அவன் நாடி தளர்ந்து அதிகமாக வாடலானான். உடம்பில் வலிவும் வாலிபமும் இருந்தால் ஓரளவு வறுமையைச் சமாளிக்க முடியுமென அவனுக்குத் தோன்றியது.

ஒருநாள் அந்த அந்தணன் பூமிதேவியைக் குறித்துக் கடுந்தவம் செய்தான். அவன் தவத்தினால் திருப்தியடைந்த பூமிதேவி, அவன் முன் தோன்றினாள்.

"அந்தண சிரேஷ்டனே! உன் தவத்தினால் மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். உனக்கு வேண்டியதைக் கேள்; தயங்காமல் தருகிறேன்" என்றாள் பூமிதேவி.

"தேவி! என்மீது உனக்குக் கருணை பிறந்திருப்பது பாக்கியமே! வறுமையினால் பெரிதும் நான் வருந்துகிறேன். எனக்குக் கிழத்தன்மையிலிருந்து விடுதலை கொடு!" என்று வேண்டினான் அந்தணன்.

பூமாதேவி கனிந்த மாதுளம் பழம் ஒன்றை அவனிடம் கொடுத்து "இந்தப் பழத்தைச் சாப்பிடு, நீ விரும்பியபடியே என்றும் இளமையுடன் இருப்பாய்!" என்று சொல்லி மறைந்தாள்.

என்றும் மாறாத இளமை அளிக்கக்கூடிய அதிசய மாதுளம்பழம். அது யாருக்கும் கிடைக்காத சித்தி, என்றெல்லாம் ஆனந்தக் கூத்தாடினான் அந்தணன்.

பழத்தைப் பெற்றுக்கொண்ட அந்தணன் மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினான். ஸ்நானம் செய்து பூஜைகளை முடித்துக் கொண்டு நியமமாகப் பழத்தைப் புசிக்கத் தயாரானான். அப்போது அவன் உள்ளத்தில் ஓர் எண்ணம் தோன்றியது.

"நானோ பரம ஏழை. அடுத்த வேளைச் சாப்பாடு எங்கு கிடைக்கும் என்று காத்துக் கொண்டிருக்கிறேன். சாகாமலும் யௌவனமாகவும் இருப்பதினால் எனக்கு என்ன பலன் கிடைக்கப் போகிறது? சுகத்தை அனுபவிக்கத் திரவியம் இருக்கிறதா? அது கிடையாது! இல்லை, யாருக்காவது நான் உதவத்தான் முடியுமா? நீண்ட காலம் வாழ்வது மூலம் பிச்சையெடுப்பதுதான் நீங்கிவிடுமா? இந்தத் தொழில் என்னை விட்டுப் போகாது. பிறரிடம் யாசகம் கேட்டே என் வாழ்வு முடிய வேண்டும். சிறிது காலமே உயிர் தரித்திருந்தாலும் மற்றவர்களுக்கு ஏதோ கொஞ்சமாவது உதவியாயிருப்பவன் எவ்வளவோ மேலானவனாயிற்றே? அறிவு, உயர்ந்த பதவி போன்ற மேலான குணங்களை உடையவன் சிறிது காலம் ஜீவித்திருந்தாலும் அவன் வாழ்வு பூரணமானதாகிறது. பரந்த அறிவு, ஆண்மை, உயர்பதவி, நேர்மை போன்ற குணங்களுடையவன், கொஞ்ச காலம் வாழ்ந்திருந்தாலும், அவன் வாழ்வு மற்றவர்களுக்கு நல்ல பலனை அளிக்கிறது. நம்மால் எறியப்படும் சாதத்தைக் கொத்தித் தின்று காகம் நீண்ட காலம் ஜீவித்திருக்கிறது. அதனால் என்ன பயன்? மேலும் சொல்லுவார்கள்:

"அழுகிப்போன பதார்த்தங்களைக் காகம் தின்று அதிக காலம் பிழைத்திருக்கிறது. ஆகவே, கீர்த்தியும் நேர்மையும் உடைய மனிதர்களால் நடத்தப்படும் வாழ்க்கையே உண்மை வாழ்வு எனப் படுவது. பிறருடைய வாழ்க்கைக்கு உதவியாக இருக்கும்படி தன் வாழ்க்கையை நடத்துபவனே உண்மையாக ஜீவிப்பவன். கொக்கு கூடத்தான் தன் அலகினால் வயிற்றை நிரப்பிக் கொள்ளுகிறது!

"இன்னும்,

"தனக்காகவே முயன்று சம்பாதித்து வயிற்றை நிரப்புபவன் ஆயிரம் தடவை கீழானவனே. மற்றவர்களின் சந்தோஷமே தன் சந்தோஷமாகக் கொண்டவன் ஒருவனே நேர்மையாளரின் தலைவன். பூமிக்குக் கீழிருக்கும் உஷ்ணமான வடவாக்கினி தன்னுடைய பசியைப் போக்கக் கடல் நீரைக் குடித்து விடுகிறது. ஆனால் மேகமோ கடுங்கோடையினால் பூமி அடைந்த உஷ்ணத்தைக் குறைக்க மழையாகப் பெய்கிறது.

"ஒருவன் தன்னுடைய குலம், நடத்தை, குணம் ஆகியவற்றால் பலனைக் கொடுக்காவிட்டால், அவன் பிறப்பானது ஓர் உபயோகமு மின்றி வாக்கியத்தின் நடுவே வந்து சேரும் வார்த்தையைப் போன்றதாகும். (இந்தச் சுலோகம் சிலேடையாக அமைந்துள்ளது.)

இவ்விதம் மனதில் நினைத்த மறையவன், பழத்தைச் சாப்பிட விரும்பவில்லை. குடிகளின் தலைவனை அரசனே, என்றென்றும்

இளமையாயிருக்க வேண்டியவன். அத்தகைய அரசனே அதிசய மாதுளம் பழத்தை உண்டு அழியாத இளமையுடன் வ தக்கவன் என்று அந்தணன் தீர்மானித்தான். மரண கிழத்தன்மையும் நீங்கப் பெற்ற அரசன் நீண்ட காலம் குடிமக் நீதியுடன் அரசாளலாம் அல்லவா?

இதை எண்ணிய அவன் நேரே ராஜா பர்த்ருஹரியை வ அடைந்தான்.

"அரசே! பாம்புகளை ஆபரணமாக அணிந்து பரமசிவனும், பீதாம்பரத்தைத் தரிக்கும் மகாவிஷ்ணு தங்களுக்குச் சர்வ மங்களங்களையும் அளிப்பார்களாக!" என வாழ்த்தி பழத்தை அவனிடம் கொடுத்தான்.

மாதுளம் பழத்தை வாங்கிக்கொண்ட மகாராஜன், அ சோபையைக் கண்டு வியந்தவனாய் அதனை திருப்பித் திருப் பார்த்தான்.

"இந்தப் பழம் உனக்கு எப்படிக் கிடைத்தது? பூவுலகில் இது போன்ற பிரகாசம் பொருந்திய பழத்தைக் காண்பது அரிதே!" என்று கேட்டான் பர்த்ருஹரி.



"மன்னர் மன்னவரே! பூமிதேவியின் வரப் பிரசாதத்தால் இப்பழம் எனக்குக் கிடைத்தது. இதைப் புசித்தால் மரணமும் கிழத்தன்மையும் நீங்கிப் புத்துயிர் பெறலாம் என்றும் யாசகம் வாங்கி

வயிற்றை நிரப்பும் எனக்கு இப் பழத்தினுல் என்ன பிரயோஜனம்? நீண்ட ஆயுளோடு, நெறி தவருமல் ஆட்சி புரியும் அரசனே நாட்டுக்குத் தேவை. ஆகவே தங்களிடம் கொண்டு வந்தேன். தாங்கள் இதைப் புசித்து அழியாத இளமையையும் நீண்ட ஆயுளையும் பெறுவீர்களாக!" என்ருன் அந்தணன்.

மாதுளம் பழத்தைப் பெற்றுக்கொண்ட பர்த்ருஹரி மன்னன், அந்தணனுக்கு ஏராளமான பரிசுகளும், நிலபுலன்களும் அளித்துக் கௌரவித்தான். மாதுளம் பழத்தைச் சாப்பிடத் தயாரானபோது மன்னனுக்கு ஒரு யோசனை தோன்றியது. "இந்தப் பழத்தைச் சாப்பிடுவதால் நான் அமரத்தன்மை அடைகிறேன். ஆனுல் என் பத்தினி அனங்கசேனை இருக்கிருளே! நான் வெகு காலம் வாழ்ந்திருக்க, என் உயிருக்குயிரான மோகனுங்கி இறந்து போய்விடுவதா? அவள் பிரிவை எப்படித் தாங்குவேன்? அவளை விட்டு நான் பிரிந்திருப்பது என்பது எவ்விதம் முடியும்? சரசாங்கிதான் என்றென்றும் அழகு வாடாமல் இளமையோடு வாழத் தகுந்தவள். அனங்கசேனை இப்பழத்தைச் சாப்பிடட்டுமே!" என்று எண்ணமிட்டான் பர்த்ருஹரி மன்னன்.

அதற்குமேல் பழத்தை வைத்துக் கொண்டு அவன் யோசிக்க விரும்பவில்லை; உடனே தன் தேவியை அழைத்து அவளிடம் பழத்தைக் கொடுத்தான் மகாராஜன்.

"அன்பே அனங்கசேனை! இந்த அபூர்வ சக்திவாய்ந்த மாதுளம் பழம் ஓர் அந்தணனுல் எனக்குக் கொடுக்கப்பட்டது. இதைச் சாப்பிட்டால் மரணபயமும், கிழத்தன்மையும் அகன்று விடுமாம். என்றென்றும் இளமையாக வாழலாமாம்! நீ இதைச் சாப்பிடு!" என்று ராஜபர்த்ருஹரி அன்புடன் கொடுத்தான்.

அரசன் கொடுத்த பழத்தை அனங்கசேனை வாங்கிக் கொண்டாளே தவிர சாப்பிடவில்லை!

அவளுக்குச் சோரநாயகன் ஒருவன் இருந்தான். அரண்மனை குதிரை லாயத்திலிருந்த குதிரைப் பாகனிடம் அவளுக்கு மோகம்! குதிரையை அடக்கி ஆளக்கூடியவனே அந்த மோகனுங்கியின் ஆசையைத் தணித்து மகிழ்விக்க முடியுமென்று நம்பியிருந்தாள் அனங்கசேனை. தன் ஆசை நாயகன் கிழத்தனம் அடையும்போது தான் என்றென்றும் இளமையால் இருப்பதால் பலனில்லை. அதனுல் நிராசையே மிஞ்சுமென்று எண்ணமிட்டாள். ஆகவே,

குதிரைப் பாகனை ரகசியமாக சந்தித்து அந்தப் பழத்தைக் கொடுத்துச் சாப்பிடும்படி சொன்னாள்.

ராஜபத்தினியிடம் பிரியம் கொண்டவனாக நடித்தானே தவிர, குதிரைப் பாகனுக்கு அரண்மனை வேலைக்காரி ஒருத்தியிடமே உள்ளூர ஆசை உண்டு. மோகத்தின் பாதையே விசித்திரமானது. சாட்டையில்லாப் பம்பரம்போல் அலாதியாக ஆடக்கூடியது ஆசைப் பொம்மலாட்டம்! கலா ரசிகையான ராஜபத்தினியின் உயர்தரமான பண்பாடுகளும், மென்மையான அன்பு மொழிகளும் முரடனான குதிரைப் பாகனின் ஆசைக்குப் போதவில்லை! அவனைப்போல் கீழ்த்தரமான கொச்சை வார்த்தைகள் பேசக்கூடிய வேலைக்காரியிடமே அவனுக்கு அதிகமான மோகக்கிறக்கம் இருந்தது!

அந்த வேலைக்காரியைக் குதிரைப்பாகன் இரகசியமாகச் சந்தித்து, "என் அன்பே! இந்தப் பழத்தைச் சாப்பிட்டால் நீண்ட நாட்கள் உடல் கட்டுத் தளராமல் வாலிபத்துடன் இருக்கலாமென்று ஒருவர் தெரிவித்தார். உன்னை விட்டு விட்டு, நான் மட்டும் இதைச் சாப்பிடமாட்டேன். நீயே சாப்பிட்டுவிடு!" என்று மாதுளம் பழத்தை அவளிடம் கொடுத்து விட்டான்.

அந்த மாதுளம் பழத்தை அவள் வாங்கிக் கொண்டாளே தவிர, அவளும் சாப்பிடவில்லை. அவள் தன் ஆசை நாயகனான இடையனிடம் கொடுத்தாள். இடையனோ, மாட்டுக் கொட்டிலில் சாணம் முதலிய கழிவுப் பொருள்களைக் கூட்டி எறியும் தன் ஆசை நாயகியான வேலைக்காரப் பெண்ணிற்கு அந்தப் பழத்தைக் கொடுத்து விட்டான். அவள் பழத்தை வாங்கி சாணிக் கூடையின் மீது வைத்துத் தூக்கிக் கொண்டு வீட்டிற்குக் கிளம்பினாள்.

ராஜவீதியில் அவள் சென்று கொண்டிருக்கையில் ராஜாபர்த்ருஹரி எதிர்பட்டான். அப்போதுதான் வேட்டைக்குத் தன் பரிவாரங்களுடன் புறப்பட்டு வந்து கொண்டிருந்தான். சாணிக்கூடையின் மீது அதிசய மாதுளம் பழத்தைக் கண்ட அரசன் திடுக்கிட்டு நின்றான். பழத்தின் சோபை அரசனைத் தடுத்து நிறுத்திவிட்டது. அந்தணன் ஒருவன் தனக்களித்த பழத்தைப்போன்று பிரகாசத்துடனிருக்கும் அதைக் கண்டதும் அதை அடைய விரும்பினான். ஒரு மாதுளம் பழத்தைத் தன் ஆசை நாயகியான அனங்கசேனை சாப்பிட்டு அழியாத இளமையுடன் விளங்குவாள்! இன்னொரு பழத்தைத் தானும் அருந்தினால் தானும் சாகாத இளமையுடன் அவளுடன் ஆனந்தமாக வாழலாம் என்று எண்ணமிட்டான் ராஜா

பர்த்ருஹரி. உடனே சாணக்கூடைப் பெண்ணை அழைத்தான் மன்னர்பிரான்.

"இந்தப் பழத்தை நான் விரும்புகிறேன். எனக்குக் கொடுத்துவிடு. உனக்கு வேண்டிய பரிசுகள் தருகிறேன்!" என்றான் பர்த்ருஹரி.

மன்னாதி மன்னன் கேட்கும்போது அவளால் மறுக்க முடியுமா? மேலும் அந்தப் பழத்தின் அபூர்வ சக்தியை அவள் அறியவில்லை; அவளால் நம்பவும் முடியாது! இடையன் அன்பாகச் சாப்பிடக் கொடுத்த பழம் அது என்றே அவள் எண்ணினாள். ஆகவே, அரசன் கேட்டதும் தட்டாமல் அந்த மாதுளம் பழத்தைக் கொடுத்து விட்டாள்.

பழத்துடன் அரசன் உடனே அரண்மனைக்குத் திரும்பி விட்டான். வேட்டைக்குச் செல்ல அவன் மனம் விரும்பவில்லை. பூமிதேவி வரப்பிரசாதத்தால் கிடைத்த ஒரே அதிசயப்பழம் என்று அந்தணன் தெரிவித்தான். அப்படியிருக்க, அதே போன்ற மற்றொரு பழம் எப்படிக் கிடைத்தது?

இதை அறிய விரும்பிய அரசன் அந்த அந்தணனை அழைத்துவரக் காவலாளிகளை அனுப்பினான்.

அவன் வந்ததும், "அந்தணனே! சில நாட்களுக்கு முன்பு என்னிடம் வந்து, பூமிதேவியின் அனுக்கிரகத்தால் கிடைத்ததென்று நீ ஒரு பழம் கொடுத்துச் சென்றாய். இப்போது அதைப் போலவே மற்றொரு பழத்தைக் கண்டெடுத்தேன். உன்னால் எனக்குக் கொடுக்கப்பட்ட பழத்தைப் போன்ற மற்றொரு பழம் உண்டோ?!" என்று கேட்டான் பர்த்ருஹரி மன்னன்.

"அரசே! அதைப்போன்ற பழம் இப்பூவுலகில் எங்கு தேடினும் தாங்கள் அடையமுடியாது! பூமிதேவியின் கடாக்ஷத்தால் நான் அடைந்தது உண்மையே. என் வார்த்தையைத் தாங்கள் நம்பலாம். அரசன் தெய்வத்தைப் போன்றவன். அவன் எதிரில் பொய் பேசக்கூடாது. எல்லாத் தெய்வங்களின் குணங்களையும் அரசன் கொண்டிருக்கிறான். ஆகவே, புத்திசாலியானவன் அரசன் சமூகத்தில் சத்யத்திற்கு புறம்பாக பேசவோ, நடக்கவோ மாட்டான். அரசனைத் தெய்வம் போன்று மதித்து நடத்தவேண்டும் என்று தீர்க்கதரிசிகள் சொல்லியிருக்கிறார்கள்!" என்றான் அந்தணன்.

"அப்படியானால் எனக்கு எப்படி அதே போன்ற பிரகாசத்துடன் மற்றொரு அதிசய மாதுளம்பழம் கிடைத்தது?"

"அரசே! தங்களுக்குக் கொடுத்த பழத்தைப் புசித்தீர்களா?" என்று கேட்டான் அந்தணன்.

"இல்லை....."

"அதை என்ன செய்தீர்கள்?"

"என் உயிருக்குயிரான அனங்கசேனையிடம் கொடுத்துச் சாப்பிடச் சொன்னேன்."

"ராஜபத்தினியார் அந்தப் பழத்தைச் சாப்பிட்டார்களா என்று விசாரியுங்கள்."

உடனே அனங்கசேனையை வரவழைத்து, அரசன் பின்வருமாறு கேட்டான்:

"தேவி! சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு நான் கேட்பதற்குப் பதில் சொல். சில நாட்களுக்கு முன்பு உன்னிடம் சாப்பிடக் கொடுத்த பழத்தை என்ன செய்தாய்? சாப்பிட்டாயா?"

அரசனின் கேள்விக்கு உடனே அனங்கசேனையால் பதில் கொடுக்க முடியவில்லை; தடுமாறினாள்.

''சொல், தேவி, சொல்.....'' என்று அவளைத் துரிதப்படுத்தினான் மன்னர் பிரான்.

"நான் சாப்பிடவில்லை, பிரபோ!" என்றாள் கலவரத்துடன் அனங்கசேனை.

"அதை என்ன செய்தாய்? அது இப்போது எங்கே இருக்கிறது?" என்று வற்புறுத்தினான் பர்த்ருஹரி. விசாரணையில் உண்மை வெளிப்பட்டுவிடும்போல் இருந்தது. அதைவிடத் தானே உண்மையைச் சொல்லி விட்டால் என்னவென்று தோன்றியது அனங்கசேனைக்கு! "உண்மையைச் சொன்னால் மன்னிப்புக் கிடைக்கும்!" என்று வாக்குறுதி வாங்கிக் கொண்டு, அனங்கசேனை தன்னுடைய அந்தரங்க நாடகத்தை வெளியிடத் தயாரானாள்.

"குதிரைப் பாகனிடம் அந்தப் பழத்தை கொடுத்து விட்டேன்" என்று சொல்லிவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள் ராஜபத்தினி.

மன்னாதி மன்னனுக்கு உண்மை விளங்கிவிட்டது. மோகத்தின் சுழலில் சிக்கித் தவிக்கும் மோகனாங்கியின் நிலையை உணர அவனுக்கு அதிகநேரம் தேவைப்படவில்லை. குதிரைக்காரனை அழைத்து விசாரிக்கவே, அவன் பழத்தை வேலைக்காரியிடம் கொடுத்ததும், அவள் இடையனிடம் கொடுத்ததும், அந்த இடையன் சாணக்காரியிடம் கொடுத்ததுமான இரகசியங்கள் வெளிப்பட்டன.

விவரங்களை அறிந்த பர்த்ருஹரி மன்னன் பெரிதும் மனோவியாகூலம் அடைந்தான். உயிருக்குயிரான அனங்கசேனையிடம் அவன் எவ்வளவோ நம்பிக்கை வைத்திருந்தான். அவளோ கேவலம் குதிரைப் பாகன் ஒருவனிடம் தீரா மோகம் கொண்டிருந்தது அவனை மிகவும் வாட்டியது. அளவில்லா சோகத்தில் ஆழ்ந்து விட்டான்.

"மனதைக் கவரும் உருவம், யௌவனம் ஆகிய இரண்டிலும் ஆடவன் கொள்ளும் அபிமானம் வீண்தான். வில்போன்ற புருவங்களுடைய பெண்கள் உள்ளத்தில் மன்மதன் தான் விரும்பியதையே செய்வான். பெண்களின் எண்ணங்களையும் செயல்களையும் ஒருவராலும் அறியமுடியாது.

குதிரையின் பாய்ச்சல், தேவேந்திரனின் இடிமுழக்கம், பெண்களின் சித்தம், மனிதனுடைய பாக்கியம், அதிக மழை, மழையின்மை - ஆகிய இவைகளை தெய்வத்தாலேயே தடுக்க முடியாது என்பார்கள். அவ்விதமிருக்க கேவலம் சாதாரண மனிதனால் என்ன செய்யமுடியும்? மேலும், பெண்களின் சஞ்சலம் நிறைந்த உள்ளத்தைக் கவருவதைவிட, ஒருவன் காட்டிலே புலியைப் பிடித்து விடலாம்; ஆகாயத்தில் பறக்கும் பறவையைப் பிடித்து விடலாம்; தண்ணீரின் நடுவே நீந்தும் மீனைக் கூட அவன் சுலபத்தில் பிடித்து விடலாம் என்பார்கள். அதுமட்டுமல்ல;

மலட்டுப் பெண்ணின் குழந்தை அரசுக்கட்டில் ஏறலாம் என்றும், வானத்தில் பூக்கள் மலர்வதைக் காணமுடியும் என்றும் நினைக்கலாம். ஆனால் பெண்களின் உள்ளத்தில் புனிதத்தன்மையைப் பற்றி சிறிது கூட நினைக்க முடியாது என்று சொல்லுவார்கள். இன்னும்,

தத்துவத்தை அறிந்தவனும், சுகம், துக்கம், வெற்றி, தோல்வி வாழ்வு, மரணம் ஆகியவற்றை நன்கு பிரித்துக் காட்டக் கூடியவனுமான அறிவாளியையே பெண்களின் நடத்தைகள் கெடுத்து விடுகின்றனவே. மன்மதனைப் போன்ற ஒருவனை அடைந்து சுகித்திருந்தாலும், பெண் உடனே மற்றொருவனை விரும்பத்தான் செய்கிறாள்; சுயநலக்காரிகளான மங்கையர் சுபாவம் அத்தன்மையது என்று புனித உள்ளம் படைத்தோர் சொல்லுவார்கள்.

ஜபம், மந்திரம், தந்திரம், விநயம், அறிவு. ஆகியவை இல்லாமலேயே பேரறிவு படைத்த ஒருவனையும் பெண்கள் ஒரு க்ஷணத்தில் ஏமாற்றும் சக்தி வாய்ந்தவர்கள்.

குடும்பத்திலிருந்தும் ஜாதியிலிருந்தும் தள்ளப்பட்டவன், நிகிருஷ்டமானவன், அலட்சியம் செய்யக்கூடியவன், துஷ்டன், தீண்டக்கூடாதவன் முதலானவர்களே மோகனாங்கிகள் விரும்பும் ஆடவர்களாவர் என்று கருதுகிறேன்.

கௌரவம், உயர்பதவி, போற்றக்கூடிய தன்மை வாய்ந்த குணங்களை உடையவர்களாயிருந்தும், பெண்கள் ஒரு காரணமுமின்றி தாங்களாகவே ஆசைப்போதையின் காரணமாகத் துரோகத்தின் சேற்றிலே இறங்குகிறார்கள்.

பெண்கள் சுய லாபத்திற்காகச் சிரிக்கவும் அழவும் செய்வார்கள்; தங்களிடம் நம்பிக்கை வைக்கும்படி அவர்கள் கெஞ்சுவார்கள்; ஆனால், அதே சமயம் அவர்கள் யாரிடமும் நம்பிக்கை வைப்பதில்லை; நல்ல குடும்பத்தில் பிறந்தவனும், புத்தியுள்ளவனும், அவர்களை மயானத்தில் கிடக்கும் பணியாரங்களைப் போலத் தவிர்க்கவேண்டும்.

துறவறத்தைவிட அதிகப் பாக்கியம் அளிப்பது வேறு எதுவுமில்லை; அறிவைவிடப் பேரின்பம் எதுவும் கிடையாது; திருமாலைத் தவிர காப்பாற்றுவோரும் இல்லை. சம்சாரத்தைக் காட்டிலும் பெரும் எதிரி வேறு கிடையாது."

இவ்விதம் சிந்தித்த ராஜாபர்த்ருஹரி உலகபந்தங்களின் மீது வெறுப்பு அடைந்தான். மோகனாங்கியைத் தண்டனைக்கு உள்ளாக்குவதால் தனக்கு ஒன்றும் பிரயோஜனமில்லை என்பதை அறிந்த பாத்ருஹரி ராஜன், அரசைத் தம்பி விக்கிரமாதித்தனிடம் ஒப்புவித்துவிட்டான். கடைசியாக அவன் துறவியாகித் தவம் செய்யக் காட்டிற்குச் சென்றான்.

அளவு மீறிய ஆசையின் விளைவு நிராசையிலே முடிந்துவிட்டது. அபரிமிதமான மோகத்துறைகள் கடைசியில் விரக்தியையும் துறவு மனப்பான்மையையும் உண்டாக்கும் என்பதை ராஜாபர்த்ருஹரியின் வாழ்வு உலகிற்கு எடுத்துக் காட்டியது.

## 3. விக்கிரமாதித்தன் தலைநகர் அமைத்த கதை

பர்த்ருஹரி ராஜன் துறவியாகிக் காட்டிற்குச் சென்ற பிறகு அவனுடைய சகோதரனை விக்கிரமாதித்தன் கன்னியாபுரி மன்னனாக முடிசூட்டப்பட்டான். பட்டத்திற்கு வந்த விக்கிரமாதித்தன், தெய்வம், அறநெறியாளர், கூன், குருடு, நொண்டி ஆகிய அனாதைகள் ஆகியோருக்குத் தான தருமங்களைச் செய்தான். நல்ல வார்த்தைகளைச் சொல்லி வேலைக்காரர்களை திருப்தி செய்தான். மந்திரி பிரதானிகளிடம் சுமுகமாக நடந்து அவர்கள் நம்பிக்கையைப் பெற்றான்.



இவ்விதம் இருந்து வரும் நாளையில் விக்கிரமாதித்தன் தன் பிரதம மந்திரியான பட்டியை அழைத்து: "பட்டி! நாம் ஆட்சி செய்யும் பூமி மிகவும் சிறியதாய் இருக்கிறது. இன்னும் பல நாடுகளைச் சம்பாதித்து, நம் பெயர் உலகம் முழுவதும் பரவும் வகையில் நாம் பரிபாலனம் செய்யவேண்டும். காதவழிக்குக் காதவழி நீளம் அகலம் கொண்ட விசாலமான தலைநகர் ஒன்றை நிறுவி, அதிலிருந்து ஆட்சி புரிய வேண்டும். அத்தகைய நம் தலைநகரின் அருகில் ஒரு நதியும், தேவ

சன்னிதானங்களும் அமைய வேண்டும். நீ புறப்பட்டுச் சென்று அதற்குத் தகுதியான இடத்தை அறிந்து வா" என்று சொல்ல, பட்டி அரசனிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.



விக்கிரமாதித்தன்

வசனகிரி என்ற மலைச்சாரிலே குணவதி ஆற்றின் கரையோரமாக பட்டி வரும்போது, காட்டிலே ஓர் அதிசய ஸ்தலம் தென்பட்டது. அருகிலே சென்று பார்க்க, விசாலமான அந்தப் பிரதேசம் காதவழி நீளமும் காதவழி அகலமும் கொண்டு மனித சஞ்சாரம் அற்றதாயிருந்தது. அங்கு அநேக ஆல விருக்ஷங்களும், தடாகக் கரையும், பத்திர காளியம்மனின் பொய்கை ஸ்தலங்களும் நிறைந்திருந்தன. அங்கு இருந்த பொய்கையின் கரையில் பத்திர காளியம்மனுக்கு ஒரு கோயில் இருந்தது. நீர்ப் பொய்கையின் அருகேயுள்ள ஒரு ஆலவிருட்சத்தின் கிளையில், சக்கர வளையம்போல் ஏழு உரிகள் கட்டப்பட்டிருப்பதும், பொய்கை நீரின் நடுவே கூர்மையான முனையையுடைய வேலொன்று நடப்பட்டிருப்பதும் அதிசயமாகத் தோன்றின.

பட்டி அப்பொய்கையில் இறங்கி பயபக்தியுடன் ஸ்நானம் செய்து கோயிலில் நுழைந்து பத்திர காளியம்மனை வணங்கினான். ஆங்கார ரூபத்துடன் விளங்கும் பத்திரகாளி அம்மனின் துவஜஸ்தம்பத்திற்கருகே ஒரு குத்துக்கல்லில் பின்வருமாறு சாஸன வாசகங்கள் எழுதப் பட்டிருந்தன:



பட்டி

"எவனொருவன் - எந்தக் குலத்தில் பிறந்தவனாயிருந்தாலும் - இப்பொய்கையில் ஸ்நானம் செய்து நேம நிஷ்டைகளுடன் இதோ நிற்கும் ஆலவிருட்சத்திலிருந்து தொங்கும் ஏழு உரிகளையும் ஒரே வெட்டில் வீழ்த்தி, அவைகள் கீழே விழுவதற்குள், ஆகாய மார்க்கமாகப் பொய்கையின் நடுவிலிருக்கும் வேல் முனையில் பாய்கிறானோ, அத்தகைய வல்லமைசாலிக்குத் தேவி பிரத்தியக்ஷமாகி சகல சௌபாக்கியங்களையும் அருளி ஆசிர்வதிப்பாள். அவனே ஐம்பத்தாறு தேச அரசர்களையும் வெற்றிகொண்டு அனைவருக்கும் அதிபதியாகி அரசாளுவான்......"

மேற்படி கல்வெட்டைப் படித்த பட்டி, உடனே தன் நகரம் திரும்பி விக்கிரமாதித்த மன்னனிடம் தான் கண்ட அதிசய ஸ்தம்பத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிவித்தான். அதன் மீது விக்கிரமாதித்தன் உடனே புறப்பட்டு அந்தப் பொய்கைக்கு வந்து சேர்ந்தான். பொய்கையிலே மன்னன் இறங்கி ஸ்நானம் செய்து பக்தியுடன் கோவிலிலே நுழைந்து அம்மனைத் தரிசித்தான். பிறகு வெளியே வந்து மரத்தின் மீது ஏறினான்.

அப்போது பட்டி, "அரசே! கடைசி உரியிலே காலை வைத்து ஒரு முறை சுழன்றால், கயிறு முறுக்கி ஏழு உரிகளும் ஒன்றாக வரும். அப்போது ஒரே வெட்டாக வெட்டி வீழ்த்தலாம்!" என்றான்.

அவ்வாறே விக்கிரமாதித்தன் ஏழு உரிகளையும் ஒன்றாகச் சேர்த்து, வாளை உருவி ஒரே வெட்டாக வெட்டி விட்டு, திட சித்தத்துடன் பொய்கையின் நடுவிலிருந்த கூர்மையான வேல் முனையை நோக்கித் தலை கீழாகப் பாய்ந்தான். உடனே, பத்திரகாளியம்மனும் பிரசன்னமாகி, விக்கிரமாதித்தனை தன் இரு கைகளாலும் தாங்கிக் கொண்டு காப்பாற்றினாள்.



பட்டி தேவியை நோக்கிப் பலவாருகவும் தோத்தரித்துப் புகழவே. பத்திரகாளியம்மன் உச்சி குளிர்ந்து போனுள். விக்கிரமாதித்தனும் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்.

"விக்கிரமாதித்தா! உன் தீரம் என்னை மகிழச்செய்து விட்டது. உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று அருள, "தேவி, இதோ உன் சன்னிதானத்திலிருந்தே நான் ஆட்சி புரிய விரும்புகிறேன். இந்த நகரத்தில் மாட மாளிகையும், கூட கோபுரமும் உண்டாக்கி, உஜ்ஜயினி மாகாளிப்பட்டணம் என்கிற நாமதேயத்துடன் சிறப்பாக ஆட்சிபுரிய அருளவேண்டும்! உன் சந்நிதானத்தில் புதைக்கப்பட்டிருக்கும் புராதனமான வெகு கோடி திரவியங்களையும் அடியேனுக்குத் தரவேண்டும்" என்று விக்கிரமாதித்தன் பிரார்த்தித்தான்.

பத்திரகாளியம்மனும் அதற்கிணங்கி அவ்வாறே அருளிவிட்டு மறைந்தாள். விக்கிரமாதித்தனும் அந்த ஸ்தலத்தில் புதிய தலைநகர் அமைத்து தன் நகரத்து மக்களை அப்புதிய பட்டினத்திற்குக் குடியேற்றினுன். பத்திரகாளியம்மன் கோயிலுக்குத் தங்கக் கோபுரமும் மகா விநோத மண்டபமும் கட்டினுன். அதன் பின்னர் ஐம்பத்தாறு தேசங்களையும் வென்று ராஜராஜாக்களும் வணங்கும்படி செய்து பூலோக அதிபதியாகி, தன் அரண்மனை வாசலில் அசையா ஆராய்ச்சி மணி கட்டி ஒரு குறையுமின்றி அரசாட்சி நடத்தி வந்தான்.

## 4. அதிசய சிம்மாசனத்தை அடைந்த கதை

விக்கிரமாதித்த மகாராஜன் சகல கலைகளிலும் விற்பன்னனுகி தன் பட்டணத்தைக் கலை நகரமாக்கினுன்.



அவனுடைய பேரும் புகழும் நாற்புறமும் பரவின. அவனைக் கொண்டாடாதார் பூலோகத்தில் யாருமில்லை; வான்முகட்டையும் கடந்து கலை சேகரனென அவனுடைய கீர்த்தி தேவலோகத்திலும் பரவியது.

அந்த நாளில் விசுவாமித்திரர் கடுந்தவம் செய்து வந்தார். முனிவரின் கடும் தபசினுல் தேவ லோகத்தில் இந்திரன் பதவிக்கே ஆபத்து வந்து விடும் போலாகி

விட்டது. விசுவாமித்திரரின் தவத்தைக் கலைத்துத் தன் பதவியை நிலை நிறுத்திக் கொள்ள விரும்பிய இந்திரன், தேவலோக நடன மாதர்களான ஊர்வசி, ரம்பை இருவரையும் அழைத்தான். பூவுலகத்திற்கு அவர்களில் ஒருத்தியை அனுப்பி முனிவரின் தவத்தைக் கலைக்க விரும்பினான்.

"விசுவாமித்திரர் கடுந்தவத்திலீடுபட்டிருக்கிறார். அவர் தவம் வெற்றி பெறக் கூடாது. அவருடைய ஏகாக்கிரகச் சிந்தையைக் கலைத்துவிட வேண்டும். நடனக்கலை யாருடைய சிந்தையையும் கவர்ந்து விடும். உங்கள் இருவரில் நடனக்கலையில் எவள் சிறந்தவளோ, புறப்பட்டுச் செல்லவேண்டும்! விசுவாமித்திரரின் தவத்தைக் கலைப்பதில் வெற்றி பெறுபவளுக்கு விலை மதிக்கவொண்ணாத பரிசு நான் கொடுப்பேன்!" என்று தெரிவித்தான் தேவேந்திரன்.

இந்திரன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட ஊர்வசி, "பிரபோ! என்னைவிட நடனக் கலையில் சிறந்தவர் யார் இருக்கிறார்கள்? என்னைப் புறப்பட்டுப் போக அனுமதியுங்கள்!" என்று வேண்டினாள்.

ரம்பை அதற்குச் சளைத்து விடவில்லை. "ஸ்வாமி! எல்லாக் கலைகளையும் முறையாகப் பயின்று இணையற்றவள் என்று தேர்ச்சி பெற்றிருக்கும் என்னை விட்டு விட்டு வேறு ஒருத்தி போவதற்கு அனுமதிப்பீர்களா?" என்று கேட்டாள் ரம்பை.

நடனக் கலையில் எவள் சிறந்தவள் என்பது பற்றி அவ்விரு நடன அப்சரஸ்களிடையே தோன்றிய தகராறைத் தேவேந்திரனால் தீர்த்து வைக்க முடியவில்லை. இருவரும் தானே சிறந்தவள் என்று பிடிவாதம் செய்தார்கள். ஒருத்தியைப் புறக்கணித்து மற்றவளை அனுப்பி மனக்கசப்பை உண்டாக்கிக் கொள்ள இந்திரன் பிரியப்படவில்லை. ஆகவே, மறுநாள் இந்திர சபையில் இருவருடைய நடனத்திற்கும் போட்டி வைக்க ஏற்பாடு செய்தான். நடனத்தில் வெல்பவளுக்குப் பாரிஜாத மாலை வெற்றிச் சின்னமாக அணிவிக்கப்படும் எனவும் அறிவிக்கப் பட்டது.

சபையிலே சகல விற்பன்னர்களான தேவர்களும், கந்தர்வர்களும் நிறைந்தார்கள். முதலில் ரம்பை நடனமாடினாள்; அடுத்தபடியாக ஊர்வசி ஆடினாள். பிறகு இருவரும் சேர்ந்து ஆடினார்கள். இருவருடைய நடனத்திலும் அப்பழுக்கு சொல்ல முடியவில்லை. அவர்கள் இருவரில் சிறந்தவள் யார் என்று தேர்ந்தெடுக்க முடியாமல் தேவர்கள் அவஸ்தைப்பட்டார்கள்.

இவ்விதம் அவர்கள் திண்டாடிக் கொண்டிருக்கையில், நாரதர் எழுந்திருந்து, "தேவேந்திரா! இங்கு கூடியிருக்கும்

தேவர்களாலும், கந்தர்வர்களாலும், இவர்களில் சிறந்தவரைப் பொறுக்க முடியாது! பூலோகத்திலே உஜ்ஜயினி மாகாளி என்றொரு பட்டணம் உண்டு. அந்நகரத்தில் விக்கிரமாதித்த ராஜன் நீதிநெறி வழுவாது ஆண்டு வருகிறான். அவன் சகல கலைகளிலும் தேர்ச்சி பெற்றவன். பரதநாட்டியங்களின் நுட்பங்களை அறிந்தவன். அவன் ஒருவனே, ஊர்வசி, ரம்பை இவர்களில் சிறந்த நடனக்காரியைப் பொறுக்கி எடுக்கும் திறமை வாய்ந்தவன். உடனே மாதலியை அனுப்பி விக்கிரமாதித்தனை அழைத்துவர ஏற்பாடு செய்!" என்றார்.

இந்திரனும் தன் தேர்ப்பாகனான மாதலியை வரவழைத்து, "மாதலி! பூவுலகத்திற்கு நம் விமானத்தில் சென்று, உஜ்ஜயினி பட்டணத்தை ஆண்டு வரும் விக்கிரமாதித்த பூபதியை நான் அழைத்துவரச் சொன்னதாகத் தெரிவித்துக் கூட்டிவா" என்றான்.

நர ஜன்மத்தையா தேவலோகத்திற்கு அழைத்து வருவது என்று மாதலி தயங்கினான். ஆனால் அவனுடைய நினைப்பை முறிக்கும் விதமாய் நாரத மகரிஷி, "மாதலி! நர ஜன்மம் என்று எண்ணத் தேவையில்லை! நேர்மையாகப் பாரபக்ஷமின்றித் தீர்ப்பளிப்பதில் தேவர்களை விட நர ஜன்மங்கள்தான் மேலானவர்களாய் விளங்குகிறார்கள். விக்கிரமாதித்தனோ தேவர்களையும் மிஞ்சக்கூடிய அதி சாமர்த்தியசாலி!" என்றான்.

அந்த க்ஷணமே தேவராஜனின் தேர்ப்பாகனாகிய மாதலி விமானத்தில் ஏறிக்கொண்டு பூவுலகிற்குப் புறப்பட்டான். உஜ்ஜயினி பட்டணத்தை மாதலி அடைந்து அரண்மனைக்குச் சென்றான். அரசனை முறைப்படி வணங்கி தான் வந்துள்ள காரியத்தைத் தெரிவித்தான் தேவசாரதி.

"அரசே! தேவலோகத்து இந்திரன் சபையில் நடன மாதர்களான ஊர்வசி, ரம்பை இருவரில் சிறந்தவள் எவள் என்கிற தகராறு கிளம்பியுள்ளது. அவர்களுடைய நடனப் போட்டியைக் கண்டு தேவாதி தேவர்களாலும் சிறந்தவள் யாரென்பதைச் சொல்லமுடியவில்லை. நாரத பகவான் தங்களது மேதா விலாசத்தைப் பற்றி சபைக்குப் பிரசங்கித்துத் தங்கள் ஒருவராலேயே அது தீர்மானிக்க முடியும் என்று தெரிவித்தார். அதன்மீது தேவராஜனும் தங்களை அழைத்து வரும்படி தேவ விமானத்துடன் என்னை அனுப்பி வைத்தார். தங்கள் வரவுக்காக தேவர்கள் காத்திருக்கின்றனர்! நீர் வருகிறீரா இல்லையா?" என்றான் மாதலி. மதிமந்திரி பட்டியும் தன் மகாராஜனைத் தேவலோகத்திற்குப் போய் தன் வீரப் பிரதாபங்களை நிலைநாட்டி வரும்படி தெரிவித்தான்.

விக்கிரமாதித்தனும் மறுமொழி பேசாது பத்திரகாளியம்மனை வணங்கித் திருநீறும் எலுமிச்சம்பழமும் பெற்றுக் கொண்டு அமராவதி பட்டணத்திற்குப் புறப்பட்டான். தேவேந்திரனின் அழைப்பை உதாசீனப்படுத்த முடியுமா?

விமானத்தின் தேர் தட்டிலே விக்கிரமாதித்தன் தனது வலது காலின் பெருவிரலை வைத்து அழுத்திக் கொண்டு, இடது காலையும் எடுத்து வைப்பதற்குள்ளாகச் சட்டென விமானத்தைப் படுவேகமாகக் கிளப்பி விட்டான் மாதலி. நரன் தேவ விமானத்தில் ஏறுவதா என்கிற நினைப்பு தேவசாரதிக்கு இன்னும் இருந்தது. ஆனால் விக்கிரமாதித்தன் கீழே விழுந்துவிடவில்லை. தேவசாரதியின் கருத்தை யூகித்துக் கொண்ட விக்கிரமாதித்தனே, தன் ஒரு காலின் பெருவிரலைத் தேர் தட்டில் அழுத்தியபடி ஆணி அடித்ததுபோல் நின்று கொண்டிருந்தான். அவனுடைய சாமர்த்தியத்தை கண்ட தேவ சாரதியும் மனம்மாறி தன்னுடைய பிழையை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டான். அதன் பின்னர் தேவ விமானம் தேவேந்திரனின் கொலுக்கூடத்தை அடைந்தது.

இந்திரன் சபையிலே அரசனுக்குத் தகுந்த ஆசனம் கொடுத்துக் கௌரவிக்கப்பட்டது. அரசனும் மற்றவர்களுக்குத் தன் வணக்கத்தைத் தெரிவித்து உட்கார்ந்தான். நடனப் போட்டி ஆரம்பிப்பதற்கு முன் பாரிஜாதமாலை விக்கிரமாதித்தன் கையிலே கொடுக்கப்பட்டது. உடனே ரம்பையின் நடனம் ஆரம்பமாயிற்று. அவள் ஆடலழகிலே சொக்கிப் போனார்கள் தேவர்கள். இரண்டாம் நாள் ஊர்வசியின் நடனம் தொடங்கியது. இருவர் நடனத்தையும் கண்டு களித்த விக்கிரமாதித்தன் மறுநாள் அவ்விருவரும் சேர்ந்தாற்போல் நடனமாட வேண்டுமெனவும், மறுநாள் அதைப் பார்த்து விட்டுத் தன் தீர்ப்பை வழங்குவதாகவும் கூறினான். அதன் பிரகாரமே மறுநாள் போட்டி நடனத்திற்கு ஏற்பாடாயிற்று. அன்றைய்தினம் அதிகாலையில் விக்கிரமாதித்தன் ஒருவரும் அறியாதபடி நந்தவனம் சென்று, தேவலோகத்துப் புஷ்பங்களைப் பறித்து இரண்டு பூச்செண்டுகள் கட்டி, இரண்டிலும் வண்டுகளைத் திணித்துக் கட்டினான்.

அப் பூச்செண்டுகளை எடுத்துக் கொண்டு விக்கிரமாதித்தன் அன்றிரவு தேவ சபைக்குச் சென்றான். இரவின் கவர்ச்சி கருதியோடு நடனப் போட்டி ஆரம்பமாகும் வேளை வந்தது. ரம்பையும், ஊர்வசியும் இசைப் பின்னணிகளுடன் இடது சாரி வலது சாரியாக நடனமாடச் சித்தமானார்கள். அவ்விருவருக்கும் விக்கிரமாதித்தன் ஒவ்வொரு பூச்செண்டு கொடுத்து, "நீங்கள் வெறுங்கையோடு நடனமாடுவதைவிட கையிலே பூச்செண்டு பிடித்துக்கொண்டு ஆடினால் அலங்காரமாயிருக்கும்!" என்றான்.

ரம்பையும் ஊர்வசியும் குதூகலத்துடன் ஆளுக்கொரு பூச்செண்டு வாங்கிக் கையில் பிடித்துக்கொண்டு பரத நாட்டியமாடலானார்கள்.

ஒரு முகூர்த்த காலம் அவ்வாறு இருவரும் நடனமாடி வரும்போது, ரம்பை துரித காலத்தில் ஆடிய வேகத்தில் தன் கையிலிருந்த பூச்செண்டை சற்று கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டாள். அப்போது பூச்செண்டிற்குள் மறைத்து வைக்கப்பட்டிருந்த வண்டு ரம்பையின் கைப்பிடிக்குள் சுரீரென்று துளைக்கவே, அவளுக்கு விஷ வேகம் ஏறி, பூச்செண்டை விட்டெறிந்து விட்டு அவள் சுருதி முதலானவை தவறி நடனமாடலானாள். ஊர்வசியோ பூச்செண்டை மிருதுவாகத் தன் கையில் பிடித்திருந்ததால், வண்டு துளைப்பிற்கு ஆளாகாமல் சுருதிலயத்துடன் ஆடிக்கொண்டிருந்தாள்.

அவ்விருவரின் சூக்ஷமங்களையும் அறிந்துகொண்ட விக்கிரமாதித்தன் சீக்கிரமாக எழுந்து நின்று சபையை நோக்கி, "ஊர்வசியின் நடனமே நுட்பமானது! ஊர்வசியே ஜெயித்தவள்! ரம்பை தோற்றவள்!" என்றான்.

"அது எப்படி?" என்று தேவேந்திரன் கேட்கவே நடனமாதர் இருவரையும் விக்கிரமாதித்தன் நோக்கி, "உங்கள் கையில் கொடுத்த பூச்செண்டுகள் எங்கே?" என்று கேட்டான்.



ஊர்வசி பூச்செண்டைத் திருப்பிக் கொடுத்தாள். ரம்பையோ முகம் சுளித்து நின்றாள்.

அப்போது பூச்செண்டிற்குள் இருந்த வண்டை விக்கிரமாதித்தன் எடுத்துக் காண்பித்து, "இந்தப் பூச்செண்டை ஊர்வசி மிருதுவாகக் கையில் பிடித்துக் கொண்டு ஆடினபடியால் வண்டு கொட்டாமல் செவ்வையாக நடனம் செய்தாள். ரம்பையோ ஆட்டத்தின் நடுவே முரட்டுத் தனமாக பூச்செண்டைப் பிடித்ததால், வண்டு கொட்டியது. அதன் வேதனையால் அவளுடைய நடனத்தின லயிப்பு மாறிவிட்டது! அதனால் ஊர்வசியே ஜெயித்தவள்!" என்றான்.

ஊர்வசி சிறந்த நடனமாது என்ற தீர்ப்பைக் கேட்டதும் தேவேந்திர சபை ஆனந்தத்தால் ஆரவாரம் செய்தது. ஏனெனில் எவள் சிறந்தவள் என்பதைத் தேவர்களால் நிதானிக்க முடியாமல் இருந்து வந்தது இத்தனை காலமும்! அதை நுணுக்கமாகப் பரீக்ஷித்து விக்கிரமாதித்தன் தெரிவித்துவிட்டான்.

தேவேந்திரன் அவனை நோக்கி, "நராதிபதியே! இருவருடைய நடன அப்பியாசத்திலும், வித்தைச் சிறப்புகளிலும் வித்தியாசம் ஒன்றும் காணமுடியாதே! ஊர்வசிதான் பூச்செண்டை மென்மையாகப் பிடித்திருந்தாள் என்பது ஒன்றே அவளுடைய வெற்றிக்குப் போதுமான காரணமாகுமா? விளக்க வேண்டும்!" என்று கேட்டான்.

"தேவேந்திரா! நடனத்தில் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது அங்க அசைவுகளே. வஸந்த ராஜன் எழுதியுள்ள நாட்டிய சாஸ்திரத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது: "நாட்டியத்தில் பயிற்சியைக் காட்டிலும் இயற்கையான பாவமே முக்கியமானது என்று அக்கலையில் பெரியோர் கூறுவார். பாதங்களை எடுத்து வைப்பதில் மென்மை முக்கியம். பாதத்தை மிகவும் உயரமாகவோ, தாழ்மையாகவோ இல்லாமல் ஒரே சீராக அசைப்பது அவசியம். முகபாவம், கைகால்களின் அசைவு, இடுப்பின் நெளிவு, காதுகள் ஆகியவை இயற்கையாகவே அமையவேண்டும். முகத்தின் தோற்றமுடன் நெஞ்சம் விம்மிப் புடைத்து வடிதலும் பார்வைக்கு ரம்மியமாக இருக்க வேண்டும்.

"மேலும் ஆட்டத்தைத் தொடங்கும் முன்பாகவே, ஆடுபவர் எந்த அவஸ்தை (கருத்து) என்பதை, அதற்கென்று வகுக்கப்பட்ட தோற்றத்தின் மூலம் உணர்த்த வேண்டும். சதுரம் என்னும் அவஸ்தையை உணர்த்த அவயவங்கள் ஒழுங்காக (சதுரமாக) இருக்கவேண்டும். சமபாதம் என்பதை உணர்த்த, பாதம், கைகள் அல்லிக் கொடி போன்று துவண்டு இருத்தல் வேண்டும்.

இவைகளே நாட்டியத்தின் ஆரம்பத்தில் இருக்க வேண்டிய பொதுவான தோற்றம்.

"இதற்கேற்ப அவளுடைய உடல் தோற்றமோ, சரத்கால சந்திரனைப் போன்ற அழகிய முகம், நீண்ட கண்கள், தோளிலிருந்து சரிந்து தொங்கும் கைகள், உயர்ந்து உறுதியான இளம் நெஞ்சகம், வழவழவென்று மிருதுவான விலாப்பாகம், கைப்பிடியில் அடங்கும் இடை, வளைந்த விரல்களுடைய பாதம்; இவ்வாறு நிருத்தியாசாரியார்கள் வகுத்தபடி அமைந்திருக்க வேண்டும். ஆட்டத்தின் முடிவில் அவளுடைய உடல் இருக்க வேண்டிய தோற்றமோ பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது: இடது கை இடுப்பிலே வைத்திருக்கப்படவேண்டும். இடையிலே அணிந்திருக்கும் மேகலை சிறிது கீழிறங்கித் தளர்ந்திருக்க வேண்டும். மற்றொரு கையோ கீழே துவண்டு தொங்க வேண்டும். கண்கள் தரையை நோக்கியவாறு இருக்க, கால் கட்டை விரல்கள் கீழே சிதறிக் கிடக்கும் பூவிதழ்களிடையே விளையாடிக் கொண்டிருக்க வேண்டும். இடுப்புக்கு மேலே உள்ள பாகம் நேராக நிமிர்ந்திருக்க வேண்டும். நாட்டியம் ஆடும் பொழுது உண்டாகும் கவர்ச்சியைவிட இந்தத் தோற்றமே மிக்கக் கவர்ச்சி பொருந்தியதாக இருக்கும்.

"இன்னும் வார்த்தைகளிலே பொதிந்திருக்கும் முழு அர்த்தத்தையும் அங்க அசைவுகளின் மூலம் வெளிப்படுத்த வேண்டும். பாதங்கள் லயம் தவறாது எடுத்து வைக்கப்பட வேண்டும். ரசபாவம் முறைப்படி எடுத்துக் காட்டப்பட வேண்டும். நடிப்பு, கைகளின் உதவியால் மென்மையாக இருக்க வேண்டும்.

"நாட்டிய சாஸ்திரத்தில் கூறப்பட்ட இவ்விதிகளின் மூலம் ஊர்வசியே சிறந்த நடனமாது என்பதை அறிந்து கூறினேன்."

இவ்விதம் விக்கிரமாதித்தன் கூறியதைக் கேட்ட இந்திரனும், மற்ற தேவர்களும் களிப்புற்று அவனைப் புகழ்ந்தார்கள். அவனுக்கு அநேக பரிசுகளும் ஆபரணங்களும் கொடுத்து இந்திரன் கௌரவித்தான். அவைகளுடன் ஈடு இணையற்ற நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட இரத்தின சிங்காதனம் ஒன்றையும் பரிசாக அளிப்பதாகச் சொல்லி பொக்கிஷத்திலிருந்த அதைக் கொண்டுவரும்படி கணநாதர்களுக்குக் கட்டளையிட்டான் தேவேந்திரன்.

அந்த நவரத்தின சிங்காதனத்தில் முப்பத்திரண்டு படிகளும் ஒவ்வொரு படிக்கும் ஒரு பதுமையும் இருந்தன. சிங்காதனத்தில் ஏறுவதானால், பதுமைகளின் தலையில் காலை வைத்துத்தான்

ஏறவேண்டும். அந்த அதிசயச் சிம்மாசனம் முன்பு கைலாயத்திலிருந்து தேவேந்திரனுக்கு இந்திரப்பட்டம் கட்டியபோது கொடுக்கப்பட்டதாகும்.

முப்பத்திரண்டு பதுமைகள் உள்ள விசித்திரமான அந்தச் சிம்மாசனத்தை விக்கிரமாதித்த மகாராஜனுக்குத் தேவேந்திரன் பரிசளித்து, "பூபதியே! இந்த சிம்மாசனத்தில் நீ ஏறி அமர்ந்து ஆயிரம் வருஷங்கள் வரை, ஏறின சிம்மாசனம் இறங்காமல் இராஜ்ய பரிபாலனம் செய்து வருவாய்!" என்று வரப் பிரசாதமும் கொடுத்தான்.

தேவராஜன் அளித்த இதர பரிசுகளையும் விக்கிரமாதித்தன் மன மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு அனேக ஆசிர்வாதங்களையும் அடைந்து, தேவலோகத்தாரிடம் விடைபெற்றுக் கொண்டு சிம்மாசனத்துடன் தேவவிமானம் ஏறி உஜ்ஜயினி மாகாளிப் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான்.

## 5. நாடு ஆறு மாதம் காடு ஆறு மாதம் ஆளத் தொடங்கிய கதை



அப்பால் விக்கிரமாதித்தன், நவரத்தின சிம்மாசனத்தைத் தன் கொலுக் கூடத்திலே ஸ்தாபித்துவிட்டு இந்திரலோகம் போய்வந்த கதையை ஆதியோடந்தமாகத் தெரிவித்தான். அப்போது மதிமந்திரியான பட்டி, "அரசே! ஏறின சிம்மாசனம் இறங்காமல் ஆயிரம் வருடம் அரசாள வரம் பெற்று வந்தீர்கள். ஆயிரம் வருஷம் ஆயுள் பெற்று வந்தீர்கள். எனக்கும் அம்மாதிரி வரம் பெற்று வந்தீர்களா?" என்று கேட்டான்.

அதைக் கேட்ட அரசன், "பட்டி! உன்னை நான் மறந்து விட்டேனே!" என்று சொல்லி மிகவும் வருந்தினான்.

"கவலைப்படாதீர்கள்!" என்று சொல்லிவிட்டுப் புத்திசாலியான பட்டி, "இரண்டாயிரம் வருஷங்கள் வாழும்படியான வரம்பெற வேண்டு"மென நினைத்து முப்பத்திரண்டு ஆயுதங்களையும் தரித்து, இரவு பத்து நாழிகைக்கு மேல் குலதெய்வமான பத்திரகாளி

அம்மன் கோவிலுக்குச் சென்றான். அவன் சென்ற சமயம் தேவி நகர் ஊர்வலம் சென்றிருந்தாள். ஆகவே அவள் சன்னிதானத்தில் தோத்திரம் செய்து கொண்டு நின்றான். அப்போது பத்திரகாளியம்மனும் திரும்பி வந்து அவனைப் பார்த்து, "பட்டி, இந்த அர்த்த ராத்திரியில் இங்கு வந்ததன் நோக்கமென்ன? சொல்!" என்று கேட்டாள்.

பட்டி அவள் பாதங்களில் விழுந்து வணங்கி, "தேவி! என் சகோதரன் விக்கிரமாதித்தன் தேவலோகம் சென்று வரும்போது இந்திரனிடம் ஆயிரம் வருடம் அரசாட்சி செய்ய வரம் பெற்று வந்துள்ளான். அடியேன் தங்களைத் தவிர வேறு யாரையும் சரணடைந்ததில்லை. ஆகவே, என்மீது கருணை கொண்டு எனக்கு இரண்டாயிரம் வருடம் ஜீவித்திருக்க அருள்புரிய வேண்டும்!" என்று பிரார்த்தித்தான்.

"பட்டி! நீ கேட்கும் வரம் கைகூட வேண்டுமென்றால், உன்னுடைய ராஜன் விக்கிரமாதித்தனின் தலையை அறுத்து இப்பீடத்தின் முன்னே கொண்டுவந்து வைக்க வேண்டும்! என்றாள் பத்திரகாளியம்மன்.

உடனே பட்டி அரண்மனைக்குத் திரும்பி அரசனின் சயன அறைக்குச் சென்றான். சப்ரமஞ்சத்திலே அன்றைய முறைக் காரியான பத்தினி மந்தாக்கினியுடன் சல்லாபித்திருந்துவிட்டு மற்ற மனைவியர்களெல்லாம் சூழ்ந்து சயனித்திருக்க, தூங்கா விளக்குகளெல்லாம் எரிந்து கொண்டிருக்க, விக்கிரமாதித்தன் நித்திரையிலாழ்ந்திருந்தான். பட்டி அரசனை எழுப்பி சைகை செய்து வெளியே வரும்படி அழைத்தான்.

"பட்டி! இந்நேரத்தில் இங்கு என்ன காரணம் பற்றி வந்தாய்?" என்று விக்கிரமாதித்தன் கேட்கவே, பட்டி, "அரசே! ஒரு காரியத்துக்காக உமது சிரம் தேவைப்படுகிறது" என்று சொன்னான்.

"ரொம்ப சந்தோஷம், பட்டி! எடுத்துச் செல்" என்று தரையிலே அரசன் படுத்துக் கொண்டான். பட்டியும் அரசன் தலையை அறுத்து எடுத்து தேவியின் பலிபீடத்தில் கொண்டுவந்து வைத்தான்.

அப்போது பத்திரகாளியம்மனும் மனம் மகிழ்ந்து அவன் விரும்பிக் கேட்ட இரண்டாயிரம் ஆண்டு ஆயுளையும் மற்றும் அனேக மகிமைகளையும் அவனுக்கு அளித்தாள். அந்தச் சமயத்தில் பட்டி கலீரென்று சிரித்தான். அவன் நகைத்ததற்கு காரணத்தை பத்திரகாளியம்மன் கேட்டபோது, பட்டி பின்வருமாறு தெரிவித்தான் :

"தேவி எங்கள் அரசன் விக்கிரமாதித்தனுக்கு இந்திராதி தேவர்கள் ஆயிரம் வருடம் மேன்மையாக ஆட்சிபுரியும்படி வரம் அளித்து ஒருமாதங்கூட ஆகவில்லை. அதற்குள்ளாக அந்த மன்னனின் சிரசு என் கையால் அறுபட்டு இதோ உன் பலி பீடத்திலே போடப்பட்டிருக்கிறது. தேவாதி தேவர்களின் வரமே இந்தக் கதியானால், நீ கொடுத்த வரம் எப்படி நிலைக்கும் என்பதை எண்ணித்தான் சிரித்தேன்!" என்றான் பட்டி.

"பட்டி! பயப்படாதே! என் வார்த்தைக்கு பங்கம் ஏதும் வராது. இன்னும் உனக்குத் தேவையான வரம் இருந்தால் கேள். கூட்டாமல் தருகிறேன்" என்று பத்திரகாளி சொல்லவே, "தாயே! இதோ சிரம் துணிக்கப்பட்டுக் கிடக்கும் விக்கிரமாதித்தனை எழுப்பிக் கொடுத்தீர்களானால், தாங்கள் அளித்த வரம் உண்மைதானென்பதை அடியேனால் நம்பமுடியும்!" என்று வினயத்தோடு பட்டி தெரிவித்தான்.

உடனே தேவியும் திருப்தியுற்றவளாய் எலுமிச்சை பழமும் கும்பதீர்த்தமும், திருநீற்றுடன் கொடுத்து, தலையை எடுத்துச் சென்று உடலிலே பொருத்தி, கும்பதீர்த்தத்தைத் தெளித்துத் திருநீற்றைத் தடவினால் அரசன் உயிர் பெற்றெழுவான் என்று தெரிவித்தாள்.

அவ்விதமே பட்டி உயிர்பெற்றெழச் செய்தபோது, தன் சாமர்த்தியத்தினால் அம்மனிடமிருந்து இரண்டாயிரம் வருடம் ஆயுளைப் பெற்று வந்த பட்டியைக் கண்டு அரசன் சொன்னான்: "பட்டி! தேவர்கள் எனக்குக் கொடுத்த ஆயுளோ ஆயிர வருஷங்கள் தான்! ஆனால் நீயோ நம் பத்திரகாளியம்மனைத் திருப்தி செய்து இரண்டாயிரம் வருஷங்கள் ஆயுள் பெற்று வந்துள்ளாய். நாமிருவரும் சம ஆயுளுடன் வாழ இப்போதும் வழியில்லாமல் போய் விட்டதே! இதற்கு என்ன யோசனை செய்வது, பட்டி?" என்று விக்கிரமாதித்தன் குழம்பினான்.

"அரசே! வருந்தாதீர்கள். உமக்கு மேலும் ஆயிரம் வருஷங்களை நீட்டி விடுகிறேன். ஏறிய சிம்மாசனத்திலிருந்து இறங்காமல் ஆயிரம் வருடம் ஆட்சி புரியும்படிதானே தேவர்கள் வரம் அருளினார்கள்! தாங்கள் நாட்டிலே சிங்காதனத்தில் ஏறி ஆறுமாதங்கள் ஆட்சி புரியலாம். பிற்பாடு ஆறுமாதங்களைக் காடுகளில் சஞ்சரித்து பொழுதைக் கழிக்கலாம். அவ்விதம் பார்த்தால் தேவர்கள் குறிப்பிட்ட கெடு முடிவடையும் சமயம், உங்களுக்கு ஆயுள் இரண்டாயிரம் ஆகிவிடும்!" என்று யுக்தி கூறினான் பட்டி.

பட்டியின் புத்தி சாமர்த்தியத்தைக் கண்ட விக்கிரமாதித்தன் அவனைப் பலவாருகக் கொண்டாடினன். அவனும் பட்டியும் இணை பிரியாதவர்களாக, ஒருவர் மீது ஒருவர் அதிக மதிப்புள்ளவர்களாகக் காடாறு மாதமும் நாடாறு மாதமுமாக வாழ்ந்துவர நிச்சயித்து, பராக்கிரமத்துடன் விளங்கினர்கள்.

பிறகு ஒரு நல்ல நாளில் புரோகிதர்களால் குறிக்கப்பட்ட சுப முகூர்த்தத்தில் விக்கிரமாதித்த மகாராஜன், அதிசய சிம்மாசனத்தில் ஏறி அமர்ந்து நெறி தவருது ராஜ்ஜிய பாரம் செய்யத் தொடங்கினன்.

ஃ ஃ ஃ

"விக்கிரமாதித்தனின் பூர்வீகக் கதையைச் சொல்லி விட்டேன்! போஜ மகாராஜனே! விக்கிரமாதித்த ராஜனைப் போன்று ஞானமும் வல்லமையும் உமக்கு இருந்தாலன்ருே, இந்த அதிசய சிம்மாசனத்தில் நீர் ஏறலாம்?" என்று முதற்படிக்குக் காவலாக இருந்த விஞேதரஞ்சிதப் பதுமை கதையை முடித்து மௌனமாகி விட்டது. சூரியனும் அஸ்தமித்தது.

போஜமகாராஜனும் நீதிவாக்கிய மந்திரியும் திகைப்பு நீங்கி உணர்வு பெற்று நேரத்தைப் பார்த்தார்கள். சிம்மாசனத்தில் ஏறி அமர்ந்து கொள்ள நிச்சயித்த முகூர்த்தம் கடந்து வெகு நேரமாகி விட்டதைப் போஜராஜன் உணர்ந்தான். சுபவேளை தவறிவிடவே சிம்மாசனத்தின் மேலே ஏற விரும்பாமல் கீழே இறங்கி, அந்தப் புரத்திற்குள் சென்று சப்ரமஞ்சத்தில் சயனித்துக் கொண்டான்.



## 2-வது மதனாபிஷேகவல்லிப் பதுமை சொல்லிய வேதாளக் கதைகள்

இரண்டாம் நாள். சூரியோதயமானவுடன் போஜராஜன் சுபவேளை பார்த்து. தன் பரிவாரங்களோடு கொலுக் கூடத்திற்கு வந்து. அதிசய நவரத்தின சிம்மாசனத்திற்குத் தூபதீபம் காட்டி அதில் ஏறி அமர்வதற்காக முதற்படியைக் கடந்து இரண்டாம் படியில் வலது காலை எடுத்து வைத்தான்.

அப்போது அந்தப் பொற்படிக்குக் காவலாக இருந்த மதனாபிஷேகவல்லி என்னும் சிம்மாசனப் பதுமை கை கொட்டிச் சிரித்து. "ஹே. போஜராஜரே! நில்லும். நானறிந்த விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற வீரப்பிரதாபமும். வல்லமையும். உமக்கிருந்தாலன்றோ இந்த விநோதமான சிங்காசனத்தில் நீர் ஏறி அமர முடியும்?" என்றது.

அதைக் கேட்ட போஜராஜன் "பதுமையே! விக்கிரமாதித்த பூபதியிடம் நீ கண்ட அப்படிப்பட்ட அதிசயமான வல்லமை என்ன? அந்தக் கதையைச் சொல்!" என்றான்.

"கேளும் பூமானே!" என்று மதனாபிஷேகவல்லிப் பதுமை பின்வரும் விநோதக் கதைகளைச் சொல்லத் தொடங்கியது.

### வேதாளம் பிடிக்கப் போன கதை

வீரப்பிரதாப விக்கிரமாதித்த மகாராஜன் மந்திரி பட்டியுடன் விரதப்படி நாடாறு மாத தவணையிலிருந்து அரசாட்சி நடத்திவரும் காலத்தில். உஜ்ஜயினிமாகாளி பட்டினத்திற்கு இரு காத வழி தூரத்தில் ஆரண்ய வனத்தில் துர்க்கையம்மன் கோவில் ஒன்று இருந்தது.

அந்த அம்மன் சந்நிதானத்திற்கு நேர் தெற்கே இரண்டு யோஜனை தூரத்தில் ஒரு மயானம் இருந்தது. அந்த மயானத்தில் ஒரு முருங்க மரம் இருந்தது. அந்த முருங்க மரத்தில் ஒரு வேதாளம் தலை கீழாகத் தொங்கிக் கொண்டிருந்தது. அந்த வேதாளத்தை வசப்படுத்திக் கொள்பவருக்கு சகலவிதமான வாழ்வியமும் வேதாளத்திடமிருந்து பெறமுடியும்! அந்த வனத்தில் நெடுங்காலமாக தபஸ் செய்து கொண்டிருந்த ஞானசீலன் என்கிற முனிவன் வேதாளத்தையும், துர்க்கையம்மனையும் வசப்படுத்திக் கொண்டு பலவித்தியான சித்திகளும் பெற

விரும்பினான். அவன் துர்க்கையம்மனின் சந்நிதானத்தின் முன் யாக குண்டம் வளர்த்தினான்.

அதனால் திருப்தியுற்ற துர்க்காதேவி அவன் முன் பிரசன்னமாகியபோது, "தாயே! நீண்ட ஆயுளும் அரசபதவியும் எனக்கு வேண்டும்! நீ எப்போதும் என்னிடத்தில் இருக்க வேண்டும்! வேதாளம் என் கைவசமாக இருக்கவேண்டும்! பூலோகத்து மன்னாதி மன்னர்களெல்லாம் எனக்கு அடங்க வேண்டும்! அந்த விக்கிரமாதித்தன் கொலுவேறியிருக்கும் நவரத்ன சிம்மாசனத்தில் நானே ஏறி அழியா ஆயுளுடன் இராஜரீகம் செய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

"ஆயிரம் அரசர்களைக் கொன்று யாகம் செய்தால், உன் எண்ணம் ஈடேறும்! மணிமகுடம் புனைந்த மன்னர்களின் சிரசுகளை வெட்டிஎன் பலிபீடத்தில் போட்டால் நீ கேட்ட வரம் தருவேன்!" என்று காளிமாதேவி கூறிவிட்டு, மறைந்து விட்டாள். முனிவனும் அதற்குச் சம்மதித்து வஞ்சகத்தினால் அரசர்களைக் கொன்று யாகத்திற்குத் தயாராகி வந்தான். தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது மன்னர்களின் தலைகளை வெட்டிக் கொணர்ந்து யாகத்தில் போட்டான். கடைசியாகப் பாக்கியிருந்த ஒரு தலைக்கு யாரைப் பிடிக்கலாம் என்ற யோசனையிலாழ்ந்த போது உஜ்ஜயினியில் கோலாகலமாக ஆண்டுவரும் விக்கிரமாதித்த மகாராஜனின் தலையை பலி கொடுப்பதென்று முடிவுக்கு வந்தான் முனிவன்.

அதன் பின்னர் முனிவன் கபடமாக விக்கிரமாதித்தன் சபா மண்டபத்தை அடைந்து ஒரு மாதுளங்கனியைக் கொடுத்தான். விக்கிரமாதித்தனோ முனிவன் கொடுத்த பழத்தை வாங்கிப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பொக்கிஷ அதிகாரியிடம் கொடுத்தான். இவ்விதம் பல நாட்கள் சென்றன. தினமும் முனிவன் வருவதும், பழம் கொடுப்பதுமாகவே இருந்தது.

ஒருநாள் முனிவன் பழம் கொடுத்து விட்டுசென்ற பிறகு, விக்கிரமாதித்தன் அதை வழக்கம்போல் பொக்கிஷ அதிகாரியிடம் கொடுக்கவில்லை. பொக்கிஷ அதிகாரி ஏதோ காரியமாக வெளியே சென்றிருந்தான். ஆகவே பக்கத்திலிருந்த பீடத்தில் அந்தப் பழத்தை மன்னன் வைத்தான். அந்தச் சமயம் அரண்மனையில் அருமையாக வளர்த்து வரும் கருங்குரங்கு அங்கு ஓடி வந்தது. மாதுளம் பழத்தைக் கண்டதும் ஆசையோடு எடுத்துக் கடித்தது. அதனுள்ளிருந்து இரத்தினக் கற்கள் கலகலவென்று கீழே கொட்டின. ஜாஜ்வல்யமாக ஜொலிக்கும் அவைகளைக் கண்ட விக்கிரமாதித்தன் பிரமித்து விட்டான். உடனே தன் பொக்கிஷ அதிகாரியை வரவழைத்து, "நான் தினமும் உன்னிடம்

கொடுத்துவரும் மாதுளம் பழங்களை என்ன செய்கிறாய்?" என்று கேட்டான். "அவைகள் அனைத்தையும் பொக்கிஷத்திலேயே வைத்திருக்கிறேன்!" என்று அதிகாரி சொல்லி விட்டு. அவற்றை அங்கு கொணர்ந்தான். மாதுளம் பழங்களை உடைத்துப் பார்க்கையில் ஒவ்வொன்றிலும் இரத்தினக் கற்கள் இருப்பது வெளியாயிற்று.

இரத்தினக் கற்களைப் பார்த்த விக்கிரமாதித்தன் அளவிலாத மகிழ்ச்சி கொண்டான். அவைகளை பரீக்ஷித்துப் பார்க்க இரத்தின வியாபாரியை அழைத்து வரச் செய்தான்.

"வியாபாரி! நாம் இந்த உலகத்தை விட்டுச் செல்லும் போது எதையும் எடுத்துச் செல்வதில்லை. தருமம் ஒன்றுதான் தொடர்ந்து வரும். ஆகவே, இந்த உலகத்தில் தருமத்திலிருந்து பிறழ்வதால் பலன் இல்லை. இந்த இரத்தினக் கற்களில் ஒவ்வொன்றின் மதிப்பையும் நன்றாக ஆராய்ந்து எடுத்து உண்மையாகச் சொல்" என்று விக்கிரமாதித்தன் கேட்டான்.

அதைக் கேட்ட இரத்தின வியாபாரி மன்னனை நோக்கி "அரசே! தாங்கள் கூறியது முற்றிலும் உண்மையே. தருமத்தை உடையவர்கள் எல்லாவற்றையும் உடையவர் ஆகிறார்கள். வாஸ்தவத்தில் தருமம் ஒன்றுதான் நம்மை எப்போதும் தொடர்ந்து வருகிறது. அது இரண்டு உலகங்களிலும் உதவுவது. கேளுங்கள் மகாராஜா! நிறத்திலும், தன்மையிலும், அழகிலும் ஒவ்வொரு இரத்தினக் கல்லும் பழுதில்லாமல் சுத்தமாக இருக்கிறது. ஒவ்வொன்றும் பத்து கோடி. பொன் பெருமானம் உள்ளது என்று சொல்வதுகூட அதன் உண்மை மதிப்பைக் குறிப்பிடுவதாகாது. உண்மையிலேயே ஒவ்வொரு கல்லும், ஓர் உலகத்துக்கே சமமானது!" என்று தெரிவித்தான்.

விக்கிரமாதித்த பூபதி பெரு மகிழ்ச்சி கொண்டான்; இரத்தின வியாபாரிக்கு அநேக ஆடையாபரணங்களைப் பரிசாக வழங்கி மரியாதை செய்தான். பிறகு அத்தகைய மாதுளங்கனிகளைக் கொடுத்த முனிவனை விசாரியாமல் போனோமே என்று அவன் வருந்தினான். மற்றொரு சமயம், முனிவன் வழக்கம் போல மாதுளங்கனியோடு வந்த போது, முனிவனுக்கு பொற்பீடமளித்து அதில் அமரச் செய்து உபசாரங்கள் செய்தான் விக்கிரமாதித்தன். "முனிவரே! தாங்கள் மாதுளங்கனிகள் மூலம் எனக்கு அளித்திருக்கும் இரத்தினக் கற்கள் ஒன்றின் மதிப்புக்குக் கூட என் ராஜ்யம் ஈடாகாது. அப்படியிருக்க, கோவணாண்டியாக உள்ள தாங்கள், எதற்காக எனக்கு இத்தனை இரத்தினக் கற்களைப் பரிசளிக்க வேண்டும்? இந்தக் காரணத்தை எனக்குத் தெரிவிக்க வேண்டும்!" என்று விக்கிரமாதித்தன் வேண்டிக் கொண்டான்.

"புவி மன்னு! இம்மாதிரியான விஷயங்களைப் பற்றி பகிரங்கமாகப் பேசுவது முறையல்ல. முக்கியமாக மந்திரம், தந்திரம், மருந்து, மனிதர்களுடைய நற்குணங்கள், குடும்ப விவகாரம், விலக்கப்பட்ட ஆகாரத்தைச் சாப்பிடுவது, அண்டை அயலார் பேசும் அவதூறு, வதந்தி ஆகிய விஷயங்களைப் பற்றி பகிரங்கமாகப் பேசலாகாது. எந்த விஷயமும் மூன்று பேர் காதுகளுக்கு விழுந்து விட்டால், அது இரகசியம் அல்ல; இரண்டு பேர்களுக்கு மட்டும் தெரிந்திருந்தால் அதைப் பிறர் அறியமாட்டார்கள். ஒருவருக்கு மட்டும் தெரிந்திருந்தால், அதைப் பிரம்மாவாலும் தெரிந்து கொள்ள முடியாது. ஆகவே. இது விஷயமாக உன்னிடம் நான் தனியாகப் பேச வேண்டும். அதுதான் முறை!" என்றான் கபட ஞானி.

அவ்வாறே விக்கிரமாதித்தனும் முனிவரைத் தனியே அழைத்துச் சென்று, "முனிவரே, நீங்கள் எனக்கு ஏராளமான இரத்தினக் கற்களைக் கொடுத்திருக்கிறீர்கள். ஆயினும், நான் ஒரு நாளைக்காவது உங்களுக்கு ஆகாரங்கூட அளித்ததில்லை. உங்களுக்கு என்ன வேண்டுமென்பதைத் தெரிவியுங்கள்!" என்று கேட்டான்.

"எனக்கு ஓர் இலட்சியம் உண்டு! அதை நீ கொடுப்பதாக வாக்குக் கொடுப்பாயாகில் அதை நான் சொல்லுகிறேன்!" என்றான் ஞானசீலன். விக்கிரமாதித்தனும் அவ்வாறே அளித்தான்.

"புவி சிரேஷ்டா! வனந்திரத்திலுள்ள துர்க்கையம்மனை சேவித்து தந்திரங்களாலும் ஜபதபங்களாலும் ஒரு ஹோமத்தை நான் நடத்தவேண்டும். அஷ்டமா சித்திகளும் அதன் பயனைக் கிட்டும். அதற்காக நீ ஒருநாள் முழுவதும் என்னுடன் இருக்க வேண்டும். இதைத் தான் நான் யாசிக்கிறேன். அவ்விதம் நீ என்னிடமிருப்பதால் என்னுடைய உச்சாடனம் பலிதமாகும்!" என்று தெரிவித்தான் யோகி.

"சரி நான் வருகிறேன். என்றைக்கு நான் வரவேண்டும்?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"வருகிற கிருஷ்ண பக்ஷத்து சதுர்த்தசியும் செவ்வாய் கிழமையும் கூடின அன்றைய தினம் இராத்திரியில் நீ மட்டும் தனியாக ஆயுதம் தாங்கி நான் இருக்குமிடம் தேடி வரவேண்டும்!" என்றான் யோகி.

"சரி தாங்கள் செல்லலாம். நான் நிச்சயமாக வருகிறேன்" என்றான் விக்கிரமாதித்தன்.

அவனுடைய வாக்குறுதியை பெற்றுக் கொண்டு முனிவன் காட்டிற்குச் சென்றான்.

யோகி குறிப்பிட்டுச் சென்ற தினமும் வந்தது. விக்கிரமாதித்தனும் ஆயுதந் தரித்தவனாய் தன்னந்தனியாக காட்டை அடைந்து, யோகியின் இருப்பிடத்தை நாடிச் சென்றான். அவன் வருவதைக் கண்ட யோகி, ஓடோடியும் வந்து அவனை வரவேற்று உபசரித்து உட்கார வைத்தான். அவ்விடத்தில் அமர்ந்த பிறகு அரசன் நிதானமாகத் தன்னைச் சுற்றித் திரும்பி திரும்பிக் கவனித்தான். அங்கே அவன் கண்ட காட்சி?

பயங்கரமான கோர உருவங்களுடன் பலவிதமான குறளிகளும் பூதப் பிசாசுகளும் குதித்துக் கூத்தாடி தாண்டவமாடின. இவைகளைக் கண்ட அரசன் பயமோ அச்சமோ கொள்ளவில்லை.

"மா முனிவரே, எனக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள்?" என்று யோகியைப் பார்த்துக் கேட்டான் விக்கிரமாதித்தன்.

"புஜபராக்கிரமா! நீ வந்திருப்பதால் இந்த ஓர் உதவியைச் செய்! இங்கிருந்து நேர் தெற்கே இரண்டு யோஜனை தூரத்தில் ஒரு மயானம் இருக்கிறது! அங்கே ஒரு முருங்க மரத்தின் மேல் உயரமான கிளையில் ஒரு பிணம் தலைகீழாக தொங்கிக் கொண்டிருக்கிறது. அது யார் கைக்கும் அகப்படாதது. நீ மிகவும் பராக்கிரமம் பொருந்தியவனாதலால் உன் கைக்குத்தான் அது அகப்படும்! அதை எப்படியாவது நீ உபாய தந்திரத்தின் மூலம் கூட்டிக் கொண்டுவந்து என்முன் விடவேண்டும்!" என்று தெரிவித்தான் யோகி. மறுமொழி சொல்லாமல் பிணத்தைக் கொண்டுவரக் கிளம்பினான் விக்கிரமாதித்தன்.

அந்த இரவில் பயங்கரமான இருள் எங்கும் சூழ்ந்து கவ்விக் கொண்டிருந்தது. அன்றிரவு திடீரென்று மழை வேறு கொட்ட ஆரம்பித்து விட்டது. எப்படிப்பட்ட மழை? வானத்தில் உள்ள நீர் முழுவதும் அந்த ஒரே இரவில் பூமியில் கொட்டிவிட வேண்டும் என்பதைப் போல் அந்தரத் தாரையாகப் பெய்தது. குறளிகள் நாற்புறமும் கூச்சல் போட்டுக்கொண்டிருந்தன. இவ்வளவு கோரத்தைக் கண்ட எந்த மனிதனும் பின் வாங்கிவிடுவான். ஆயினும் விக்கிரமாதித்தன் நிலை கலங்கவில்லை; தைரியமாகப் போய்க் கொண்டிருந்தான்.

வெள்ளக் காட்டின் வழியே செல்லும் விக்கிரமாதித்தனின் கால்களைப் பாம்புகள் சுற்றிக் கொண்டன. மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே அவைகளை உதறித்தள்ளி விட்டு நடந்தான் வீராதி வீரன். பயங்கரமான அந்த இரவிலே இரண்டு யோஜனை தூரம் அவன் நடந்து, யோகி குறிப்பிட்ட மயானத்தை அடைந்தான். அங்கே குறளிகளும் பூத பிசாசங்களும்

மனிதர்களைப் பிடித்துவந்து அவர்களின் வயிற்றைக் கிழித்து ரத்தத்தை உறிஞ்சி எக்காளமிட்டன. பிணங்களைச் சுவைத்துத் தின்றும், பிள்ளைகளின் ஈரலை ருசித்துப் பார்த்தும் ஆனந்தக் கூத்தாடின. துஷ்டமிருகங்கள் நாற்புறமும் திரிந்தன.

இவைகள் ஒன்றையும் லட்சியம் செய்யாமல் விக்கிரமாதித்தன் நேராக முருங்கமரத்தை அடைந்தான். மரத்தை அவன் நிமிர்ந்து பார்த்த போது அடி முதல் நுனிவரையில் ஒவ்வொரு கிளையும் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. நாலு பக்கங்களிலும், "பிடி, பிடி, கொல்லு கொல்லு" என்று பிசாசுகள் சப்தம் போட்டுக் கொண்டிருந்தன. விக்கிரமாதித்தன் சிறிதும் அதைரியம் கொள்ளாமல் பக்கத்தில் நெருங்கிப் பார்த்தான். கிளை ஒன்றில் பிணம் ஒன்று தலைகீழாக கட்டித் தொங்கவிடப் பட்டிருந்தது.



அதைப் பார்த்த விக்கிரமாதித்தனுக்கு உவகை உண்டாயிற்று. "அப்பாடா, இவ்வளவு கஷ்டங்களுக்குப் பிறகு ஒரு முடிவு நெருங்கியதே!" என்று சந்தோஷத்தோடு அந்த மகாராஜன் மரத்தின் மேலேறினான்; கத்தியின் ஒரே வீச்சால் கயிற்றை அறுத்து பிணத்தைக் கீழே தள்ளினான். கீழே விழுந்த பிணம் பல்லை "நற நற" வென்று கடித்தது மேலும் அழத் தொடங்கி விட்டது. அதன் அழு குரலைக் கேட்ட ராஜன் ஆச்சரியம் அடைந்தவனாய், "இந்தப் பிணம் உயிருடன் இருக்க வேண்டும்" என்று தனக்குள் எண்ணியவனாய் கீழே இறங்கினான்.

என்ன ஆச்சரியம்? கீழே கிடந்த பிணத்தைக் காணவில்லை. திடுக்கிட்டுப்போன விக்கிரமாதித்தன் தலை தானாகவே உயர நிமிர்ந்து கிளையைப் பார்த்தது. அந்த இடத்தில் மறுபடியும் பிணம் தொங்கிக் கொண்டிருந்தது. மகாராஜன் 'சரசர'வென்று மரத்தில் ஏறி, பிணத்தைத் தன் கையால் கட்டிப் பிடித்துக் கொண்டு கீழே இறங்கினான். அதை ஒரு துணியால் மூடிக்கட்டி தோளின் மீது போட்டுக் கொண்டு யோகியிடம் செல்ல ஆரம்பித்தான்.

உடனே பிணத்தினுள் புகுந்திருந்த வேதாளம், விக்கிரமாதித்தனைப் பார்த்து, "நீ யார்? என்னை எங்கே தூக்கிச் செல்லுகிறாய்?" என்று கேட்டது.

"நான் உஜ்ஜயினி பட்டணத்து விக்கிரமாதித்த மகாராஜன்! உன்னைக் கொண்டு வரும்படி யோகி உத்திரவிடவே, தூக்கிச் செல்கிறேன்.!" என்று பதில் அளித்தான் அவன்.

"ராஜாதி ராஜனே! நான் யார் தெரியுமா? யாருக்கும் கட்டுப்படாத வேதாளம்! என்னைத் தூக்கிச் செல்வதாயிருந்தால் ஒரு நிபந்தனை உண்டு. வழியில் நீ வாய் திறந்து பேசினாயானால் நான் மறுபடியும் கட்டவிழ்த்துக்கொண்டு முருங்க மரத்துக்குப் போய் விடுவேன்" என்றது. அதன் பிரகாரமே விக்கிரமாதித்த மகாராஜன் மௌனமாக வேதாளத்தை தோளில் சுமந்து கொண்டு நடக்கத் தொடங்கினான்.

சிறிது தூரம் சென்றதும், வேதாளம் மெல்ல விக்கிரமாதித்தனிடம் பேசத் தொடங்கியது:

"மகாராஜனே! அறிவு, ஞானம், விவேகம், பாண்டித்தியம், இவைகளை உடைய பெரியோர் தங்கள் பொழுதை சாஸ்திர விசாரணையிலும், கவிதை ஆராய்ச்சியிலும் கழிப்பார்கள். முட்டாள்களும், மந்த புத்தியுள்ளவர்களும், தங்கள் பொழுதைத் தூங்குவதிலும், கேளிக்கைகளிலும் கழிப்பார்கள். ஆகவே, இந்த வழி நடைக் காலத்தையும் பிரயோஜனப்படக்கூடிய வகையில் கழித்தல் நலமல்லவா? பிரயாணத்தில் கஷ்டம் தெரியாமலிருக்க நான் ஒவ்வொரு புதிர்க் கதையாய் சொல்லுகிறேன், கேள்!" என்று சொல்லியது.

விக்கிரமாதித்தன் வாய் திறந்து பேசவில்லை. வேதாளம் மேலும் மேலும் பேசலாயிற்று.

"கேளுமையா, ராஜனே! கதையை வெறுமனே கேட்டுக் கொண்டு போக விடமாட்டேன். நான் ஒவ்வொரு கதையும் சொல்லிவிட்டு ஒரு புதிர் போடுவேன். அதற்குச் சரியான விடை சொல்லாவிட்டால் உன் தலை நூறு சுக்கல்களாக வெடித்துவிடும்" என்றும் சொல்லியது. விக்கிரமாதித்தன் என்ன செய்வான்? வேதாளத்தின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு புதிரை அவிழ்த்துச் சரியான விடை சொல்லாவிட்டாலோ தலை வெடித்துவிடும்! ஆரம்பத்திலே சொல்லியுள்ள நிபந்தனைப்படி அவன் வழியிலே வாய் திறந்து பேசவும் கூடாது. பேசினால் மறுபடியும் வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு பழையபடி முருங்க மரத்திற்குப் போய் தலைகீழாகத் தொங்கிவிடும்!

பார்த்தான் விக்கிரமாதித்த மகாராஜன். திரும்பவும் முருங்க மரத்தை அடைந்து, மரத்திலேறி வேதாளத்தை கட்டிப்பிடித்துத் தோளில் சுமந்து கொண்டு வரமுடியும் என்ற தைரியம் ஏற்பட்டது.

ஒவ்வொரு முறையும் வேதாளம் ஒரு கதை சொல்லிப் புதிர்போடும். தன் தலை நூறு சுக்கல்களாக வெடிக்காதிருக்க

விக்கிரமாதித்தன் வாய் திறந்து பதில் சொல்லி விடுவான். உடனே வேதாளம் முருங்க மரத்திற்குப் போய்விடும். இவ்விதம் இருபத்து நான்கு முறைகள் வேதாளம் விக்கிரமாதித்தனுக்குப் புதிர் கதைகள் சொல்லியது. ராஜனும் சளைக்காமல் திரும்பத் திரும்ப முருங்கமரத்தை அடைந்து வேதாளத்தைப் பிடித்துக் கட்டித் தூக்கி வந்தான்.



வேதாளம்

சொல்லிய

புதிர் கதைகள்

## 1. (i) பத்மாவதி கதை

வாரணாசி என்று ஒரு நகரம் இருக்கிறது. என்றைக்கும் வற்றாமல் நீர் நிறைந்திருக்கும் ஜீவநதியான கங்கை அங்கே ஓடுகிறது. முன்னொரு காலத்தில் அந்நகரத்தில் பிரதாபமகுடன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் மகா பராக்கிரமசாலி அவனுக்கு வஜ்ரமகுடன் என்னும் மகன் இருந்தான். தந்தையைப் போலவே மகனும் வீரம் நிறைந்தவன். அழகிலே மன்மதனுக்கும் மேம்பட்டவன். அவனுக்குப் புத்திசரீரன் என்ற பெயருடைய ஒரு நண்பன் இருந்தான். அவன் மந்திரி குமாரனவன். அவனை வஜ்ரமகுடன் தன் உயிரினும் மேலாக நேசித்து வந்தான்.

ஒருசமயம் இருவரும் பொழுது போக்குவதற்காக வேட்டையாடச் சென்றார்கள். துஷ்ட மிருகங்களை வேட்டையாடிக் கொண்டே அவர்கள் காட்டில் நெடுந்தூரம் சென்றார்கள். அங்கே மொக்கு அவிழ்ந்த மலர் நிறைந்த மரங்களும், செடி கொடிகளும் அவர்களை அழைப்பதே போலக் காற்றிலே அசைந்து ஆடின; குயில்கள் பாடி வரவேற்றன. அந்தக் காட்டின் நடுவே அழகிய ஏரி ஒன்று இருந்தது. வர்ணத்தாமரைகள் பூத்து விளங்கிய அது தெய்வலோகத் தடாகமோ என ஐயுறும்படி அமைந்திருந்தது. அதிலே மங்கையொருத்தி, தோழிகளுடன் நீராடி விளையாடிக் கொண்டிருந்தாள்.

ஜலக்ரீடை செய்யும் அந்தப் பெண் பேரழகு வாய்ந்தவள். அவளுடைய அழகு அந்த ஏரிக்கே ஒரு தனி வனப்பை அளித்தது. அவளுடைய கடைக்கண் பார்வையிலே மயங்கிய ராஜகுமாரன் தன் உள்ளத்தைப் பறி கொடுத்துவிட்டான். அவ்விதமே பத்மாவதியும் ராஜகுமாரனின் அழகிலே மயங்கி, அவன்மீது மோகமுற்று தன் வசம் இழந்தாள். குளித்துக் கொண்டிருந்த அவள் தன் நிலையை மறந்து நாணத்தைத் துறந்து அவனையே பார்த்து நின்றாள். ராஜகுமாரனும் அவளையே பார்த்து நின்றான்.

அப்போது அவள் விளையாட்டாக ஒரு தாமரைப் பூவைப் பறித்துத் தன் காதில் சூட்டிக்கொண்டாள். காதில் அணியும் தந்த பத்திரம் என்னும் ஆபரணம்போல அப்பூவை நீண்ட நேரம் சூட்டிக் கொண்டிருந்தாள். பிறகு, மற்றொரு பூவைப் பறித்துத் தன் தலையில் சூட்டிக் கொண்டாள். அதே சமயம் மற்றொரு கையை தன் நெஞ்சகத்தில் வைத்துக் கடைக்கண்ணால் அவனை நோக்கினாள். அவள் இதைச் சகஜமாகச் செய்ததால், அவளுடைய தோழிகள் இதை விளையாட்டாகவே கொண்டார்கள். அவளுடைய செயலைப் பார்த்து நின்ற ராஜகுமாரனுக்கு அதன் உட்கருத்து ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் கூரிய புத்திமானான புத்திசரீரன் அதை உடனே உணர்ந்து கொண்டான்.

சிறிது நேரம் கழித்து அந்த மங்கை கரையேறி தன் தோழிகளுடன் தன்னூருக்குப் போய்விட்டாள். அங்கு சென்ற பிறகும் அவளுடைய உள்ளம் தடாகக் கரையில் கண்ட ராஜகுமாரனையே நினைத்துக் கொண்டிருந்தது.

ராஜகுமாரனோ, அவள் புறப்பட்டுச் சென்ற பிறகு, மந்திர சக்தியை இழந்த வித்தியாதரனைப் போல, ஏதும் செய்ய இயலாதவனாக ஆகித் தன் நகரம் திரும்பினான். அவளைக் காணவேண்டும் என்ற ஏக்கத்தால் அவன் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வந்தது. ஒருநாள் அவன் தன் நண்பனான புத்திசரீரனுடன் தனியாகப் பேசிக் கொண்டிருந்தான். அப்போது. "நண்பா!ஏன் வருந்துகிறாய்? அப்பெண்ணை நீ சுலபத்தில் அடைந்துவிட முடியும்" என்றான் மந்திரிகுமாரன். அதைக் கேட்ட வஜ்ரமகுடன் ஆச்சரியம் அடைந்து, "அது எப்படி முடியும்? அவள் யார், எந்த நாட்டைச் சேர்ந்தவள், என்ன பெயர் என்பன போன்ற விபரம் ஒன்றும் தெரியாதே. அப்படியிருக்க வீணாக என் உள்ளத்தில் ஆசை வார்த்தைகளைச் சொல்லி ஏமாற்றப் பார்க்கிறாயா?" என்று கேட்டான்.

இதைக் கேட்ட புத்திசரீரன் வியப்புற்று, "என்ன? அவள் தன்னைப் பற்றிய விவரங்களை ஜாடையால் தெரிவித்தாளே! நீ பார்க்கவில்லையா?" என்று வினவினான்.

"நண்பா! நான் ஒன்றும் அறியேன். அவள் முகக் காந்தியைக் கண்டு மயங்கி நின்று விட்டேன்."

"அவள் தாமரைப் பூவைத் தன் காதில் வைத்துக் கொண்டதால் "நான் கர்ணோத்பலன் என்னும் அரசனுடைய நாட்டைச் சேர்ந்தவள்" என்பதை அறிவித்தாள். அந்தப் பூவை காதணியான தந்தபத்திரம் போலச் சுருட்டியதால், "அங்கேயுள்ள தந்தச் சிற்பி ஒருவன் மகள்" என்பதையும் குறிப்பிட்டாள். தாமரைப் பூவை எடுத்துத் தலையில் சூடியதால் தன் பெயர் பத்மாவதி என்றும் கையை நெஞ்சகத்தின் மீது வைத்துக்கொண்டு கடைக்கண்ணால் உன்னைப் பார்த்ததால், அவள் இதயம் உனக்கே சொந்தமாய்விட்டது என்றும் அறிவித்தாள். உண்மையாகவே, இப்போது கலிங்கதேசத்தில் கர்ணோத்பலன் என்னும் அரசன் இருக்கிறான். அவனுடைய ஆஸ்தானத்தில் தந்த சிற்பிகளுள் சிறந்தவனை சங்கிராமவர்த்தனன் என்பவன் இருக்கிறான். அவனுக்குப் பத்மாவதி என்ற பெண் ஒருத்தியும் உண்டு. மூவுலகத்திலும் அவள் அழகுக்கு ஈடானவள் இல்லை. அவளை அவன் ரொம்பப் பிரியமாக வளர்த்து வருகிறானும். இந்த விவரங்களைப் பிறர் கூற நான் கேட்டிருக்கிறேன். அதனால் அவள் ஜாடைகளால் தன் விவரங்களை உனக்கு அறிவித்தவுடனே அவற்றின் உட்பொருளை நான் தெரிந்து கொண்டேன்."

மந்திரிகுமாரன் இவ்வளவு விளக்கமாகக் கூறியதைக் கேட்ட வஜ்ரமகுடன் தன் நண்பனின் புத்திக் கூர்மையைக் கண்டு நிரம்பவும் சந்தோஷமடைந்தான். தன் இஷ்டம் பூர்த்தியாகும் என்ற நம்பிக்கையும் அவனுக்கு ஏற்பட்டது. ஆகவே, நண்பனிடம் இதைப்பற்றி இன்னும் விவரமாகக் கலந்து பேசி ஆலோசித்தான். பிறகு மறுபடியும் வேட்டைக்குப் போவது போல அவர்கள் அரண்மனையை விட்டுக் கிளம்பினார்கள். ஆனால், அவர்கள் காட்டுக்குப் போகவில்லை. பத்மாவதி இருக்கும் நகரத்தை நோக்கிச் செல்லவே திட்டமிட்டிருந்தார்கள். அதனால் ராஜகுமாரன் நடுவழியில் தன் குதிரையைத் தட்டி விட்டுப் பரிவாரத்தினிடமிருந்து தந்திரமாகப் பிரிந்து, தன் நண்பன் மட்டும் பின்தொடரக் கலிங்க தேசத்துக்குச் சென்றான். அங்கே கர்ணோத்பலன் ஆண்டு வந்த நகரத்தை அடைந்து, தந்தச் சிற்பியின் ஜாகையை அவர்கள் தேடியலைந்து கண்டு பிடித்தனர். பிறகு இருவரும் பக்கத்தில் குடியிருந்த ஒரு கிழவியின் வீட்டுக்குச் சென்று தங்கினார்கள்.

மந்திரி குமாரன் குதிரைகளை மறைவான இடத்தில் கட்டிப்புல்லைப் போட்டு தண்ணீர் காட்டிவிட்டு வந்தான். பிறகு அந்தக் கிழவியிடம், "அம்மா, இவ்வூரில் சங்கிராமவர்த்தனர்

என்னும் தந்தச் சிற்பி ஒருவர் இருக்கிறரே. அவரை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான். இதைக் கேட்ட கிழவி, அவனிடம் பணிவாக "அவரை எனக்கு நன்ருகத் தெரியும். நான்தான் அவருக்குப் பால் கொடுத்து வளர்த்தேன். அவர் என்னைத் தம் மகளின் செவிலித் தாயாக அமர்த்தியிருக்கிருர். ஆயினும் நான் இப்போது அங்கே போவது இல்லை. அதற்கு வேண்டிய புடவை துணிமணிகள் எனக்கு இல்லை. என் மகன் ஒரு சூதாடி. என் துணிமணி எதையாவது பார்த்துவிட்டால் அவன் உடனே அதை எடுத்துப் போய்விடுகிருன்" என்று தெரிவித்தாள்.

மந்திரி குமாரனுக்கு இந்தச் செய்தி ஆனந்தத்தை அளித்தது. உடனே அவன் கிழவிக்குத் தன் மேலாடையைக் கொடுத்ததுடன் வேறு பரிசுகளையும் அளித்தான். பிறகு அவளிடம். "அம்மா! எங்களுக்கு நீங்கள்தான் தாய். ஆகவே, ரகசியமாக எங்களுக்கு ஓர் உதவி செய்யவேண்டும். தந்தச் சிற்பியின் மகளான பத்மாவதியிடம் போய், "நீ குளக்கரையில் கண்ட ராஜகுமாரன் வந்திருக்கிருன். அவன் உன்மீது மோகம் கொண்டிருக்கும் செய்தியை உனக்கு அறிவிக்கவே என்னை அனுப்பி வைத்தான்." என்று ரகசியமாகத் தெரிவிக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டான்.

முன்னதாகவே பரிசுகள் அளித்துக் கிழவியைத் தங்கள் வசம் ஆக்கிக் கொண்டுவிட்டதால், கிழவி அவர்கள் கோரிக்கைக்கு ஒப்புக் கொண்டு பத்மாவதியைப் பார்க்கச் சென்ருள். போனவள் சீக்கிரமாகவே திரும்பிவிட்டாள். உடனே அவளை ராஜகுமாரனும், மந்திரி குமாரனும் சூழ்ந்துகொண்டு போய் வந்த சமாசாரம் என்னவாயிற்று என்று விசாரித்தார்கள். கிழவியோ அழுமாட்டாக் குறையாகப் பின்வருமாறு சொன்ஞள்.

"நான் அவளிடம் போய் நீங்கள் வந்திருக்கும் செய்தியை மிரகசியமாகக் கூறினேன். அதைக் கேட்ட அவள் என்னை மிகவும் கோபித்துக் கர்ப்பூரத்தில் தோய்த்த தன் இரண்டு கைகளால் என்னை இரு கன்னங்களிலும் அடித்துவிட்டாள். அவமானத்தால், நான் மனம் உடைந்து திரும்பிவிட்டேன். இதோ பாருங்கள், என் கன்னத்தில் அவள் விரல் அடையாளங்கள்!" என்ருள் கிழவி.

கிழவி இவ்விதம் சொன்னவுடனே ராஜகுமாரனுக்கு தன் எண்ணம் நிறைவேருது என்ற நினைப்பால் உள்ளம் உடைந்துவிட்டது. ஆயினும் மந்திரிகுமாரன் அவன் உள்ளத்தை வாடவிடாமல் தேற்றினுன்: "அதைரியப்படாதே, நண்பா, அவள் தன் உள்ளக்கிடக்கையைக் காட்டிக் கொள்ளாமல், கிழவியைக் கோபித்துக்கொண்டு அவள் முகத்தில் கர்ப்பூரம் தோய்ந்த பத்து விரல்களால் அடித்து அனுப்பி வைத்ததால், "இப்போது நிலா

காலமானதால், ஏற்ற சமயம் அல்ல. நிலா நாள் பத்துப் போகட்டும். அதுவரையில் பொறுத்துக் கொள்ளுங்கள்!' என்பதைத் தெரிவித்திருக்கிறாள்." என்று சொல்லி அவன் சோர்வைப் போக்கினான்.

மந்திரிகுமாரன் இவ்விதம் தேறுதல் கூறியதால், மனச் சமாதானம் கொண்ட ராஜகுமாரன் கடைத்தெருவுக்குச் சென்று தான் கொணர்ந்திருந்த பொன்னில் கொஞ்சம் விற்று வந்தான். அந்தப் பணத்தைக் கொடுத்துக் கிழவியைத் தங்களுக்கு நல்ல விருந்து தயார் செய்யச் சொன்னான்.

இவ்விதம் பத்து நாட்கள் கழிந்ததும், நிலைமை எப்படியிருக்கிறது என்பதை அறிந்து வர கிழவியை மறுபடியும் பத்மாவதியிடம் இருவரும் அனுப்பி வைத்தனர். அவ்விருவரும் அளித்த உபசரிப்பில் அவள் மயங்கிப் போய்விட்டாள். ஆகவே, மறுத்துக் கூறாமல் அவள் பத்மாவதியின் மாளிகைக்குப் போய்த் திரும்பினாள்.

"நான் இன்றைக்கு அங்கே போய் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தேன். அவள் என்னை வம்புக்கு இழுத்து, உங்களிடமிருந்து ஏதோ செய்தி கொணர்ந்திருப்பதாக வாதம் செய்தாள். மூன்று விரல்களைச் செம்பஞ்சுக் குழம்பில் நனைத்து, அதனால் என் மார்பில் அடித்து அனுப்பிவிட்டாள்." என்றாள்.

கிழவியின் வார்த்தைகளைக் கேட்ட புத்திசரீரன் "நண்பா, சோகப்படவேண்டிய அவசியமே இல்லை. இன்னும் மூன்று இரவுகளுக்கு அங்கே வரமுடியாதென்பதை உணர்த்தியிருக்கிறாள்" என்று தைரியம் கூறினான்.

அதே போல மூன்று நாட்கள் இருவரும் பொறுத்திருந்து விட்டுக் கிழவியை மீண்டும் பத்மாவதியிடம் அனுப்பினர். தன் மாளிகைக்கு வந்த கிழவியைப் பத்மாவதி வரவேற்று உட்கார வைத்து அன்புடன் உபசரித்தாள். பகல் முழுவதும் வயிறார உண்டு, பத்மாவதியுடன் காலம் கழித்தாள். காலையில் வீட்டுக்குக் கிளம்பியதும், தெருவாசலில் பெருத்த கூக்குரல் கேட்டது: "மதம் பிடித்த யானை ஒன்று அதன் கட்டுத் தறியிலிருந்து சங்கிலியை அறுத்துக் கொண்டு கிளம்பிவிட்டது. தெருவிலே அங்குமிங்கும் ஓடி மக்களைக் காலால் மிதித்துக் கொண்டு வருகிறது" என்று மக்கள் கூக்குரல் எழுப்பினர்.

உடனே பத்மாவதி கிழவியிடம், "நீ ராஜ வீதி வழியாகப் போகக் கூடாது. மதயானையினால் உனக்கு ஆபத்து நேரிடக்கூடும். என்னுடன் வா. வேறு வழியாக அனுப்பி வைக்கிறேன். உன்னை

ஓர் ஆசனத்தில் கட்டிக் கயிறு கொண்டு இந்த ஜன்னல் வழியாகத் தோட்டத்தில் இறக்கிவிடுகிறோம். நீ அவ்விடத்தில் உள்ள மரத்திலேறி மதில் சுவரைத் தாண்டி கீழே இறங்கு. அந்த வழியாகச் சென்றால் எந்தவிதமான ஆபத்தும் வராது" என்று தெரிவித்தாள். அவ்வாறே கிழவியைக் கயிறு கொண்டு தோட்டத்தில் இறக்கிவிட்டாள். கிழவி அவள் சொன்ன வழியே சென்று வீட்டை அடைந்தாள். அவள் என்ன செய்தி கொண்டுவரப் போகிறாளோவென்று காத்திருந்த இருவரிடமும் நடந்தவற்றை ஒன்றுவிடாமல் தெரிவித்தாள்.

"நண்பா. உன் ஆசை நிறைவேறியது. நீ எந்த வழியாகச் சென்று அவளை அடையவேண்டும் என்பதையும் அவள் தந்திரமாக நமக்கு உணர்த்திவிட்டாள். ஆகவே, சூரியாஸ்தமனம் ஆனதும் அவள் குறிப்பிட்ட வழியாகவே சென்று அவளை அடை" என்றான் மந்திரிகுமாரன்.



ராஜகுமாரனும் அதேபோல இரவு வந்ததும் புறப்பட்டுச் சுவரைத் தாண்டி தோட்டத்தை அடைந்தான். அங்கே மாளிகையின் மேல்மாடத்திலிருந்து கயிறுடன் ஆசனம் ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அவன் வரவை எதிர்பார்த்துத் தயாராக இருந்தனர் தோழிப்பெண்கள். ராஜகுமாரன் ஆசனத்தில் அமர்ந்ததும், அவர்கள் ஆசனத்தை மேலே தூக்கினார்கள்.

மாடியிலே பூர்ணசந்திரன் போன்ற முகத்துடன் பத்மாவதி காத்திருந்தாள். ராஜகுமாரனைக் கண்டவுடனே எழுந்திருந்து வந்து அவனை வரவேற்றாள். அவர்கள் இருவரும் கந்தர்வ விவாகம் புரிந்து கொண்டார்கள். தன் ஆசைக்கினியாளை அடைந்த ஆனந்தத்திலே ராஜகுமாரன் சில நாட்கள் உலகையே மறந்து அவளுடன் தங்கிவிட்டான்.

பிறகு ஒருநாள் அவன் பத்மாவதியிடம் "அன்பே! மந்திரி குமாரனை என் நண்பனும் என்னுடன் வந்திருக்கிறான். உன் செவிலித்தாய் வீட்டிலே அவனை விட்டு விட்டு வந்துள்ளேன். அவனைப்போய் பார்த்துவிட்டு உடனே திரும்பிவிடுகிறேன்." என்றான்.

அப்போது பத்மாவதி தன் காதலனை நோக்கி, "உங்களை ஒரு விஷயம் கேட்கவேண்டும். நான் காட்டிய ஜாடைகளின் உட்பொருளை நீங்களாகவே உணர்ந்து கொண்டீர்களா? அல்லது உங்கள் நண்பர்தான் அவற்றின் புதிரை விடுவித்து விடை கூறினாரா?" என்று கேட்டாள்.

"ஜாடைகளில் ஒன்றுமே எனக்கு விளங்கவில்லை. மகா சாமர்த்தியசாலியான என் நண்பன் அவற்றைத் தன் நுண்ணறிவால் கண்டு எடுத்துச் சொன்னான்." என்று உண்மையை அவளிடம் தெரிவித்து விட்டான் ராஜகுமாரன்.

"அப்படியானால் நீங்கள் இதை என்னிடம் முதலில் சொல்லவில்லையே? அவ்வாறு சொல்லாமல் பெருந்தவறு இழைத்துவிட்டீர்கள். அவர் உங்கள் நண்பர் ஆதலால் எனக்குச் சகோதரர் ஆவார். மற்றவர்களைவிட அவருக்கு நான் முதலில் மரியாதை செலுத்தி உபசரிக்க வேண்டியதவசியம்" என்று தன் காதலனை நோக்கிச் சொன்னாள் பத்மாவதி.

அங்கிருந்து புறப்பட்ட ராஜகுமாரன் தன் நண்பனை அடைந்தான். இருவரும் பேசிக் கொண்டிருக்கும் போது ஜாடைகளின் உட்பொருளை அறிந்து சொல்லியது புத்திசரீரனே என்று பத்மாவதியிடம் தான் சொன்னதைத் தெரிவித்தான் ராஜகுமாரன்.

"நண்பா! இது முறையில்லை. நல்லதும் இல்லை" என்று ராஜகுமாரனைக் கடிந்து கொண்டான் மந்திரி குமாரன்.

மறுநாள் காலையில் அவர்கள் இருவரும் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கையில் பத்மாவதியின் வேலைக்காரி கையில் பட்சணம், பலகாரம், வெற்றிலை பாக்கு ஆகியவற்றுடன் வந்து, மந்திரிகுமாரனின் சௌக்கியத்தை விசாரித்துவிட்டுக்

கொடுத்தாள். ராஜகுமாரன் அவற்றைச் சாப்பிடக்கூடாது என்பதற்காக, "தங்கள் வரவை எதிர் நோக்கி எஜமானி ஆகாரம் ஒன்றும் சாப்பிடாமல் காத்திருக்கிறாள். இன்றையப் பொழுதைத் தங்களுடன் விருந்துண்டு இன்பமாகக் கழிக்கச் சொன்னாள்." என்று அந்தரங்கத்தாதி சொல்லிவிட்டு யாரும் காணாமல் புறப்பட்டுப் போய்விட்டாள்.

உடனே மந்திரிகுமாரன் தன் நண்பனை நோக்கி, "ராஜகுமாரா! இதோ ஒரு வேடிக்கை. நீயே பார்" என்று சொல்லிக்கொண்டே பலகாரத்தில் ஒரு சிறிது எடுத்து பக்கத்தில் இருந்த ஒரு நாய்க்குப் போட்டான். அதைத்தின்றதும். நாய் அவ்விடத்திலேயே விழுந்து தன் உயிரைவிட்டது. இதைக்கண்ட ராஜகுமாரன் திகைத்துவிட்டான். "இது எதனால்? என்ன விஷயம்?" என்று அவன் பிரமிப்புடன் கேட்டான்.

"உண்மை என்ன என்றால், என் மதிநுட்பத்தை அவள் உணர்ந்துவிட்டாள். ஆகவே இரகசியம் வெளிப்படாமலிருக்க அவள் என்னைக் கொன்றுவிட வேண்டுமென்று இந்த விஷம் கலந்த பலகாரத்தை அனுப்பியிருக்கிறாள். என்னை எதற்காக அவள் கொல்ல விரும்பினாள் என்பதையும் கேள். அவளுக்கு உன்மீது பூரண ஆசை. நான் உயிருடன் இருக்கும்வரை, என்னுடைய தோழமை கொண்ட நீ அவளிடம் பூரண ஆசை கொண்டு அன்புடன் இருக்கமாட்டாய் என்று அவள் கருதுகிறாள். மேலும் என் வார்த்தையைக் கேட்டு அவளைத் துறந்து ஊர் திரும்பி விடுவாயோ என்றும் பயம். இதுதான் காரணம். அவள்மீது கோபித்து கொள்ள வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக அவளை இங்கிருந்து நாம் அழைத்துக்கொண்டு போய்விடவேண்டும். தன் உற்றார் உறவினர்களைத் துறந்து அவள் வெளியேற நான் உனக்கு ஓர் உபாயத்தைச் சொல்கிறேன்" என்றான் புத்திசரீரன்.

"நண்பா! உனக்கு புத்திசரீரன் என்று பெயரிட்டது மிகவும் பொருந்தும். அறிவின் ஆதாரமே நீ!" என்று புகழ்ந்தான் வஜ்ரமகுடன். இந்தச் சமயம் வெளியில் "ஐயோ! ராஜாவின் ஆண் குழந்தை இறந்து போயிற்றே" என்ற குரல் கேட்டது. அதைக் கேட்ட மந்திரிகுமாரன் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். உடனே அவன் தன் நண்பனைப் பார்த்து பின்வருமாறு சொன்னான்:

"நண்பா, இன்றிரவு நீ திரும்ப பத்மாவதியின் மாளிகைக்குச் செல். அவளுடன் குதூகலமாய் இருக்கும்போது அவளுக்கு நல்ல போதையூட்டி அவளை மதிமயங்கச் செய்துவிடு. தன் நிலைமை மறந்து பிணம் போலப் படுக்கையில் படுத்துத் தூங்கும்போது

அவள் நகைகளைக் களைந்து இடையிலே நகங்களினால் சூலாயுதத்தின் முக்குறிகளைப் போல கிறல் அடையாளம் செய்து விட்டு வந்துவிடு. அதற்கு மேல் நடக்க வேண்டியவற்றை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்." என்றான் மந்திரிகுமாரன்.

அந்தவிதமாக, வஜ்ரமகுடனும் தன் காதலியான பத்மாவதிக்குப் போதையூட்டி அவள் மயங்கிக் கிடக்கையில், கூரிய முனைகளை உடைய நகங்களினால் சூலாயுதத்தின் முக்குறிகளைப் போல் அடையாளம் செய்துவிட்டு நகைகளுடன் வந்து சேர்ந்தான். மந்திரிகுமாரனும் அதைக் கண்டு உவகை பூத்தான்.

மறுநாள் காலையில் மந்திரிகுமாரன் அவ்வூர் மயானத்தை யடைந்து ஒரு தபசிபோல வேஷம் போட்டுக் கொண்டான். ராஜகுமாரனைச் சீடனாக வேடம் தரிக்கச் சொல்லி, பத்மாவதியின் நகைகளில் முத்து மாலையை எடுத்துக் கொடுத்தான். "நண்பா, இதைக் கடைத் தெருவுக்குச் சென்று விலை கூறு. பலரும் காணும்படியாக, அதைக் கையில் பிடித்துச் செல். ஆயினும் யாரும் வாங்கமுடியாதபடி அதிகமாக விலைகூறு. காவலாளிகள் யாராவது உன்னைப் பிடித்து விசாரித்தால், பணிவாகவே, "இதை விற்கச் சொல்லி என் குருநாதர் என்னிடம் கொடுத்தார்." என்று சொல். வேறு ஒன்றையும் கூறாதே" என்று சொல்லி அனுப்பினான்.

வஜ்ரமகுடன் அவ்விதமே மாலையைக் கையில் ஏந்தி கடைத்தெருவுக்குச் சென்று, அதை விலை கூறினான். அதைக் கண்ட காவலாளிகள் அவனை ஒரு திருடன் என்றே நினைத்துப் பிடித்துக் கொண்டார்கள். முதல் நாள் இரவு தந்தச் சிற்பி வீட்டிலே நகைகள் திருட்டு போய்விட்ட விஷயம் அவர்களுக்கும் தெரியும்.

ராஜகுமாரனை அவர்கள் நகரக் கொத்தவாலிடம் அழைத்துச் சென்றனர். தபசி வேடத்தில் இருந்த அவனைப் பார்த்த கொத்தவால், "பெரியோய், இந்நகரத்துத் தந்தச் சிற்பியின் மகளுக்குச் சொந்தமான இம்மாலை உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டான். ராஜகுமாரன் தன் நண்பன் தெரிவித்தபடி, "என் குருநாதர் இதைக் கொடுத்து விற்று வரும்படி கூறினார். மற்ற விவரங்கள் அவரைக் கேட்டால்தான் தெரியும்" என்றான்.

கொத்தவால் மயானத்துக்கு வந்து அங்கே தபசி வேடத்தி லிருந்த மந்திரிகுமாரனை அணுகி, முத்துமாலை கிடைத்த விவரத்தைக் கேட்டான்.

மந்திரிகுமாரன் மிக்க சாமர்த்தியமாகக் கொத்தவாலைத் தனியே அழைத்துச் சென்று பின் வருமாறு தெரிவித்தான்:

"நான் ஒரு தபசி. எந்த இடத்திலும் நிரந்தரமாக வசிப்பவன் அல்ல. தற்செயலாக நேற்று இவ்விடம் வந்தேன். இரவு நேரம் ஆம்மயானத்தில் தங்கியிருக்கையில், நடுநிசியில் மோகினிகளின் கூட்டம் ஒன்று இங்கே வந்தது. அவர்களுள் ஒருத்தி ராஜகுமாரனின் உடலைத் தாங்கி வந்தாள். அவள் அந்த உடலைக் கிழித்து. இதய கமலத்தை வெளிப்படுத்தி, பைரவனுக்கு நிவேதித்தாள். அவள் மோகன வித்தையில் வல்லவள். நன்றாக மதுபானம் செய்து. போதையேறித் தன் வசம் இழந்து இருந்தாள். ஒரு புறம் தனியே அமர்ந்திருந்த என்னிடம் நெருங்கி, முகத்தைக் கோணி என் ஜபமாலையைப் பிடுங்க முயன்றாள். அவள் என்னிடம் வந்து அத்துமீறி வம்பு பண்ணியதால் எனக்குக் கோபம் ஏற்பட்டது. என் மந்திர சக்தியால் சூலாயுதத்தைப் பழுக்கக் காய்ச்சி அவள் இடைப்புறம் சூடு போட்டுத் துரத்தினேன். அப்போது அவள் கழுத்திலிருந்த இம்முத்துமாலையைப் பிடுங்கிக் கொண்டேன். தபசிக்கு முத்துமாலை எதற்கு? ஆகவே தான் "அதை விற்று வா" என்று அனுப்பினேன்.

இதைக் கேட்ட கொத்தவால் அரசரிடம் சென்று தான் அறிந்த விஷயத்தைத் தெரிவித்தான். செய்தியைக் கேட்ட மன்னனும் துறவி சொல்லியபடி பத்மாவதியின் இடையில் சூலாயுதத்தின் அடையாளம் இருக்கிறதா என்று பார்க்க நம்பிக்கையான கிழவி ஒருத்தியை அனுப்பினான். அவள் திரும்பி வந்து அடையாளம் தெளிவாகத் தெரிகிறது என்பதைத் தெரிவித்தாள். உடனே அந்த அரசன். பத்மாவதி ஒரு மோகினிப் பிசாசு என்றும் அவளே தன் குழந்தையைக் கொன்றவள் என்றும் தீர்மானித்து முடிவு கட்டிவிட்டான்.

அதனால் அவனே நேரில் சென்று தபசி வேடம் பூண்டிருக்கும் மந்திரிகுமாரனைப் பார்த்து, பத்மாவதிக்கு என்ன தண்டனை விதிக்கலாம் என்று கேட்டான். அவன் ஆலோசனைப்படியே அரசன் பத்மாவதியை ஊரைவிட்டுத் துரத்தி விடவேண்டும் என்று தீர்ப்புக் கூறினான். அவளுடைய பெற்றோர்கள் எவ்வளவோ வேண்டியும் அழுதும் அரசன் கேட்கவில்லை. ராஜ சேவகர்கள் பத்மாவதியை காட்டுக்கு இழுத்துச் சென்று ஆடையாபரணங்களை உருவிக்கொண்டு நடுக்காட்டில் விட்டு விட்டுத் திரும்பினர்.

இவ்விதம் ஆடையாபரணங்கள் இல்லாமல் நடுக்காட்டில் துரத்தி அடிக்கப்பட்ட பத்மாவதி தன் உயிரை மாய்த்துக் கொள்ளவில்லை. இவ்வளவும் மந்திரிகுமாரன் செய்த சூதே என்று அவள் நம்பினாள். அதே போல அன்றுமாலை ராஜகுமாரனும், மந்திரிகுமாரனும் தங்கள் வேடத்தை களைந்து குதிரையேறி அவள் இருந்த இடத்திற்கு வந்தனர். அங்கே தன் தலைவிதியை நினைத்து நொந்து அழுது கொண்டு உட்கார்ந்திருந்த பத்மாவதியை

அவர்கள் தேற்றி அவளையும் தங்களுடன் அழைத்துக் கொண்டு ஊர் திரும்பினர். அங்கே அவள் ராஜகுமாரனுடன் சந்தோஷமாக காலம் கழித்தாள். ஆயினும், தந்தச்சிற்பியோ தன் மகளைக் காட்டு மிருகங்கள் கொன்று தின்று விட்டன என்று நினைத்து மனம் உடைந்து சிறிது காலத்தில் இறந்து போனான். கணவன் இறந்த துக்கத்தால் அவன் மனைவியும் கணவனைப் பின் தொடர்ந்தாள்.

இவ்விதம் கதையைக் கூறி முடித்த வேதாளம் மன்னனைப் பார்த்து "இந்தக் கதையில் எனக்கு ஒரு சந்தேகம். அதைத் தீர்த்து வைக்க வேண்டும். தந்தச்சிற்பியும், அவன் மனைவியும் இறந்த தோஷம், ராஜகுமாரன், மந்திரிகுமாரன், பத்மாவதி இம்மூவரில் யாரைச் சாரும்? அறிவாளிகளுக்குள் சிறந்தவனான நீ எனக்கு இதை எடுத்துக் கூறவேண்டும். அரசே! தெரிந்து கொண்டும் உண்மையை நீ எனக்கு எடுத்துரைக்காவிட்டால் உன் தலை நூறு சுக்கலாக உடைந்து போய்விடும்" என்றது.

வேதாளம் இவ்விதம் கேட்டதும், அரசனுக்கு உண்மை விளங்கிவிட்டது. ஆகவே, அவன் சிறிதும் பயப்படாமல், "மந்திர வித்தையில் வல்ல வேதாளமே! இதில் என்ன சிக்கல் இருக்கிறது? நீ குறிப்பிட்ட மூவரையும் அந்தப் பாபம் சாராது. அந்தப் பழி முழுவதும் கர்ணோத்பல அரசனையே சாரும்" என்றான்.

"எப்படி? அரசன் என்ன செய்தான்? அந்த மூவரால் தானே தந்த சிற்பியின் உயிர் மாய்ந்தது? அன்னங்கள் அரிசியைச் சாப்பிட்டால் அந்தக் குற்றம் காகத்தைச் சாருமா?" என்று கேட்டது வேதாளம்.

"உண்மையில் மூவர் மீதும் பழியில்லை. மந்திரிகுமாரன் தன் எஜமானன் நன்மையை உத்தேசித்தே நடந்து கொண்டான். ராஜகுமாரனும், பத்மாவதியும் காமன் கணையால் தாக்குண்டு, அதனால் பாதிக்கப்பட்டவர்களாய் தாங்கள் செய்வதென்ன வென்பதை அறியாமல் நடந்து கொண்டார்கள். தங்கள் எண்ணம் ஈடேற வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் அவர்கள் நடந்து கொண்டனர். ஆனால் கர்ணோத்பல அரசனோ ராஜ தர்மத்தைச் சரியாக உணராமல், வழக்கைத் தீர விசாரித்து உண்மையறியாமல், அரசனுக்குரிய அறிவு இல்லாமல், தவறாக முடிவு கட்டித் தீர்ப்புக் கூறியதாலேயே அவ்விருவரும் உயிர் இழக்க நேர்ந்தது. அந்தப்பழி அவனையே சாரும்" என்று விளக்கிக் கூறினான் விக்கிரமாதித்த மன்னன்.

இவ்விதம் அரசன் தன் மௌனத்தைக் கலைத்து, புதிருக்குச் சரியான விடை கொடுத்ததைக் கேட்டு அவன் தோளில் இருந்த

வேதாளம், மன்னன் பொறுமையைச் சோதிக்க எண்ணி, உடனே கட்டவிழ்த்துக்கொண்டு கிளம்பிப் பழையபடி முருங்கை மரத்தில் சென்று ஏறிக்கொண்டது. மன்னனும் விடா முயற்சியுடன் வேதாளத்தை மறுபடியும் பிடித்துக்கொண்டுவர முருங்கை மரத்தை அடைந்தான்.

(இந்தக் கதை தமிழ் பாடத்தில் சில சிறு மாறுதல்களுடன் காணப்படுகிறது. பத்மாவதி தாமரைப் பூவொன்றைக் கொய்து கண்ணில் ஒற்றி ஜாடை காட்டியதின் மூலம் அவளுடைய ஊர் கண்ணாபுரம் எனவும், தாமரைப் பூவைப் பல்லினால் கடித்துக் காட்டியதின் மூலம் அவள் பெயர் பத்மாவதி எனவும், பூவைக் காலில் போட்டுக் காண்பித்ததின் மூலம் அவள் தந்தை பெயர் காளியங்கராயன் எனவும், பூவை நெஞ்சோடு வைத்து அணைத்துக் காட்டியதின் மூலம் தன்னருகில் வந்தால் அணைப்பைக் காணலாம் எனவும், பூவை சிரசின் மீது வைத்துக் காட்டியதின் மூலம், "தலை போகிறகாரியம், ஜாக்கிரதை"யென்ற எச்சரிப்பு எனவும், மந்திரிகுமாரன் யூகித்துச் சொன்னதின் பிரகாரம் அவனும் ராஜகுமாரனும் கண்ணாபுரத்திற்குச் செல்கிறார்கள்; பிறகு கதையின் முடிவில், "பத்மாவதியின் பெற்றோர்கள் மரித்த பாவம் யாரைச் சேரும்?" என்று வேதாளம் கேட்ட கேள்விக்கு, "வரும் பொருளைத் தீர ஆலோசியாமல் கூறிய மந்திரிக்கே அந்தப் பாவம்!" என்று விக்கிரமாதித்தன் பதில் சொன்னதாகவும் தமிழ் பாடத்தில் காணப்படுகிறது. பதுமைகள் சொல்லும் விக்கிரமாதித்தனின் ஆதி சரித்திரத்தில் வேதாளம் முதலில் கூறியதாகச் சொல்லப்படும் கதை, தமிழ் பாடத்திலும் வடமொழி மூலத்திலும் காணப்படவில்லை. அதற்கு மாறாகவுள்ள கதை பின்வருமாறு:)

## 1. (2) நீதிவேந்தன் கதை



ஹிமாலயத்தின் தென் சாரலில் விந்தியவதி என்றொரு நகரம் உண்டு. அங்கே ஸீவிசாரன் அரசன் ஆண்டுவந்தான். அவனுக்கு [illegible]கோனன் என்னும் மகன் இருந்தான். ஒரு சமயம் ராசகுமாரன் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். அங்கே ஒரு யானையைக்

கண்டு அதைத் தொடர்ந்து சென்றான். அவ்விதம் சென்றவன் பெருங்காடு ஒன்றினுள் நுழைந்துவிட்டான். அங்கிருந்து திரும்பிவரும் போது, காட்டின் நடுவிலே ஒரு நதி செல்வதைக் கண்டான். அதன் கரையில் அறநெறியாளன் ஒருவன் நீராடி தன் நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்து கொண்டிருந்தான்.

அரசகுமாரன் அவனிடம் சென்று, "ஐயா! என்னுடைய குதிரையைச் சிறிது நேரம் பிடித்துக்கொள்ளுங்கள். அதற்குள் நான் நதியிலிறங்கி தாகசாந்தி செய்து கொள்ளுகிறேன்." என்றான்.

அதைக்கேட்ட அறநெறியாளன், "நான் உன் வேலைக்காரன் என்று நினைத்துக் கொண்டாயா? உன் குதிரையைப் பிடித்துக் கொண்டிருப்பதுதான் என் வேலையா?" என்று கோபமாகக் கேட்டான்.

அவன் வார்த்தைகள் அரசகுமாரனின் சினத்தை அதிகரிக்கச் செய்துவிட்டன. தன் கையில் வைத்திருந்த சாட்டையினால் அவன் அந்த அந்தணனை அடித்தான். வலி பொறுக்கமாட்டாத அந்தணனோ அரசனின் சமூகத்திற்கு ஓடிவந்து, கதறியழுதான். அரசனும் அவனைச் சமாதானப்படுத்தி விஷயத்தை அறிந்தான்.

அரசியல் அதிகாரத்தில் அகங்காரம் கொண்டு தன் மகன் குதிரைச் சாட்டையினால் அறநெறியாளனை அடித்தான் என்று கேட்டதும் மன்னன் கண்களில் கோபாக்கினி வீசக் கொதித் தெழுந்தான். உடனே அவன் தன் மகனை நாட்டைவிட்டு வெளியேறுமாறு உத்தரவிட்டான்.

அப்போது அருகிலிருந்த மந்திரி, "அரசே! அரசனுக்குரிய சகல லக்ஷணங்களும் பொருந்திய தங்கள் குமாரனை நாட்டைவிட்டு வெளியேற்றுவது நல்லதா? அது சரியல்ல" என்றான்.

"மந்திரி! அறநெறியாளனைக் குதிரைச் சாட்டையினால் அவன் அடித்திருக்கிறான். முன் விசாரணை ஏதுமின்றி அவன் அடித்த தால் அவன் அரசாளும் தகுதியிலிருந்து விலகியவனாகிறது.

"அறிஞன் ஒருபோதும் 'விஷத்தை அருந்த மாட்டான்; பாம்புகளுடன் விளையாட மாட்டான்; துறவிகளை நிந்திக்க மாட்டான்; அறிஞர்களை விரோதித்துக் கொள்ளமாட்டான்.

"மந்திரி! நீ புராணங்கள் சொல்வதைக் கேட்டதில்லையா? முன் காலத்தில் அறநெறியாளனின் சாபத்தினால்தான் சிவபெருமான் லிங்கமாக உருவெடுத்தார்.

"ஒருவன் உயர்ந்த நிலையை அடைந்த போதிலும், ஒருபோதும் பூஜிக்கத் தகுந்த அறிஞர்களை நிந்திக்க மாட்டான்.

"ஆகவே, ஒருவன் எப்போதும் அறிஞர்களுக்கு மரியாதை கொடுக்கவேண்டும்." இன்னும்,

"அறநெறியாளர்களை ஒருபோதும் மரியாதைக் குறைவாக நடத்தக்கூடாது. ஏனெனில், அவர்கள் மூவுலகங்களின் சக்திகளை ஒருங்கே கொண்டவர்கள். அவர்கள், தானம், கௌரவம், புகழ் ஆகியவற்றால் பூசிக்கத் தகுந்தவர்கள்.

"எல்லாப் பொருள்களையும் அழிக்கக்கூடிய நெருப்பையும், குடிக்க முடியாத சமுத்திரத்தையும், நீந்த முடியாத களங்கத்தை (தேய்வை) உடைய சந்திரனையும் படைத்த அறநெறியாளரின் கோபத்தால் யார் தான் அழியமாட்டார்கள்?"

"அவர்களுடைய மூதாதையர்களும், தேவர்களும் எந்தப் பெரியோர் கரத்தினால் தங்கள் ஆகாரத்தை ஏற்றுக் கொள்ளுகின்றனரோ அவர்களைவிடப் பெரியவர் யார்?

"துறவறத்தைத் தங்கள் கடமையாகக் கொண்டுள்ள அவர்களை யார்தான் வணங்கமாட்டார்கள்?"

"துறவறத்தை மேற்கொண்டவனும், தேவர்களாலும் மனிதர்களாலும் கௌரவிக்கப்பட்டவனுமான பரதன் ஆண்ட தேசத்தில் உள்ள பெரியோர்களை யார்தான் ஆச்ரயிக்க மாட்டார்கள்?

"சமுத்திரத்தைக் கையில் ஏந்திக் குடித்தவரும், விந்திய மலையின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தியவருமான அகஸ்தியரைப் போன்ற பெரியோர்களைவிட எதைப் பெரிதாகச் சொல்ல முடியும்?"

"ஆண்டவனை பூஜிக்க விரும்புபவன் கேவலம் அறநெறியார்களைத் தங்களால் முடிந்த வரையில் திருப்தி செய்தாலே போதும்.

"துவாரகையில் கிருஷ்ணபகவான் சொல்லுகிறார். எவனொருவன் அறிஞர்களைப் பூஜிக்காமல், அடித்து, சபித்து, நிந்தையாகப் பேசுகிறானோ, அவன் என்னைச் சேர்ந்தவன் அல்ல; அவனை ஜ்வலிக்கும் நெருப்பிலே போடவேண்டியதுதான். மேலும், என்னைப் பூஜிக்க விரும்புபவர்கள் எப்போதும் அறநெறியாளர்களைக் கௌரவிக்க வேண்டும். அப்போதுதான் நான் திருப்தி அடைந்தவனாவேன்."

"ஆகவே, மந்திரி, ஒரு பாவமுமற்ற அறநெறியாளனை அடித்த குற்றத்திற்காக அவன் கையை வெட்டிவிடுங்கள்" என்றான் நீதி மன்னன்.

அப்போது அந்த அறநெறியாளன் ஓடிவந்து, "ராஜேந்திரா! உம் குமாரனின் அறியாமையினுல் இத்தவறு நடந்துவிட்டது. இனிமேல் அரசகுமாரன் அவ்விதம் நடந்து கொள்ளமாட்டான். நான் இப்போது திருப்தி அடைந்துவிட்டேன். எனக்காக அவனே மன்னித்து விடும்" என்று வேண்டினுன்.

அதைக்கேட்ட பார்த்திபனும் தன் உத்தரவை மாற்றிக் கொண்டான்.

-இவ்விதம் கதையை முடித்த வேதாளம், விக்கிரமாதித்தனே நோக்கி, "சொல்லுமையா ராஜனே! இவர்கள் இருவரில் சிறந்தவர் யார்?" என்று கேட்டது.

"அரசனே சிறந்தவன். தன் மகன் என்றும் பாராமல் தவறு செய்தான் என்பதற்காக அவன் தண்டனே கொடுத்தான் அல்லவா?" என்று விக்கிரமாதித்தன் சொல்லவே, வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு அவன் தோளேவிட்டு மறைந்து முருங்க மரத்திற்குப் போய் விட்டது.

## 2. மந்தாரவதி கதை



விக்கிரமாதித்த மகாராஜன் மறுபடியும் வேதாளத்தை முருங்க மரத்திலிருந்து பிடித்துக் கட்டிக் கொண்டு வரும் பொழுது அது பின் வருமாறு கதை சொல்ல ஆரம்பித்தது.

யமுனு நதிக் கரையிலே பிரம்மஸ்தலம் என்று ஒரு பிரதேசம் இருக்கிறது. அங்கே அக்னிஸ்வாமி என்ற பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் வேதங்கள் முழுமையும் அறிந்தவன். அவனுக்கு மந்தாரவதி என்னும் அழகிய பெண் ஒருத்தி இருந்தாள். அவளேச் சிருஷ்டித்த பிரம்மனுக்கு அவனே சிருஷ்டித்த தேவமாதரின் அழகுகூட அவள் அழகுக்கு ஈடாகத் தோன்றவில்லே. அவள் யுக்த வயதை அடைந்த சமயம்

யாகுப்ஜத்திலிருந்து அதேபோல எல்லா அம்சங்களிலும் பிறந்த மூன்று பிராமண இளைஞர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் ஒவ்வொருவனும் அந்தப் பெண்ணைத் தனக்கே மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று அவள் தகப்பனை வேண்டினான். அவளை வேறு யாருக்காவது கொடுத்தால் தன் உயிரை விட்டு விடுவதாகவும் ஒவ்வொருவனும் கூறினான். அவளை அவர்களுள் யாராவது ஒருவனுக்கு மணம் செய்து கொடுத்தால் மற்ற இருவரும் இறந்து போய் விடுவார்களோ என்று எண்ணி அக்னிஸ்வாமி. யாருக்கும் அவளை மணம் செய்விக்கவில்லை. பெண்ணும் கன்னியாகவே இருந்தாள். அம் மூன்று இளைஞர்களும் சந்திரமண்டலத்தையே நோக்கி நின்று தன் கிரணங்களால் வாழும் சகோதரப் பக்ஷியைப் போல அவள் முகத்தையே நோக்கிக் கொண்டு இரவும் பகலும் கழித்து வந்தனர்.

இப்படி இருக்கையில் திடீரென்று ஒரு நாள் மந்தாரவதிக்குச் சுரநோய் கண்டது; அது அவள் உடலையே தகித்தது. கடைசியில் அவள் உயிர் துறந்தாள். அவளை இழந்த இளைஞர் மூவரும் வருத்தத்தால் நிலை குலைந்தனர். அவள் உடலை நன்றாக அலங்கரித்து மயானத்துக்கு எடுத்துச் சென்று தகனம் செய்தனர். அம்மூவருள் ஒருவன் சுடுகாட்டிலேயே ஒரு குடிசை போட்டுக் கொண்டான். பிச்சை எடுத்து கிடைத்ததை உண்டு அவளைச் சுட்டு எரித்த சாம்பலையே படுக்கையாகக் கொண்டு காலம் கழித்து வந்தான். மற்றொருவன் அவள் அஸ்திகளைக் கொண்டு கங்கையில் சேர்ப்பிக்கப் போய்விட்டான். மூன்றாமவனோ துறவியாக மாறித் தேச சஞ்சாரம் செய்யப் புறப்பட்டான்.

துறவியாக இருந்தவன் இவ்விதம் ஒவ்வொரு ஊராகச் சுற்றி வரும்போது வஜ்ரலோகம் என்னும் கிராமத்தை அடைந்தான். அங்கே ஒரு பிராமணன் வீட்டில் சாப்பிடச் சென்றான். அவன் சாப்பிடும் போது ஒரு குழந்தை அழ ஆரம்பித்தது. அதை சமாதானப்படுத்துவதற்காகச் செய்த முயற்சிகள் எல்லாம் வீணாகவே, வீட்டுக்காரி கோபம் தாங்காமல் அந்தக் குழந்தையைத் தூக்கி நெருப்பில் எறிந்து விட்டாள். நெருப்பில் விழுந்தவுடனே குழந்தை வெந்து சாம்பலாயிற்று.

விருந்தாளியாக வந்திருந்த துறவிக்கு இதைக் கண்டதும் மயிர் கூச்செறிந்தது. "ஐய்யோ! நான் ஒரு பிரம்ம ராக்ஷஸி வீட்டுக்கன்றோ வந்து விட்டேன். இவ்விடத்தில் ஆகாரம் சாப்பிடுவது பிரத்யக்ஷமான மஹா பாபமாயிற்றே? நான் இங்கே சாப்பிடமாட்டேன்" என்று அவன் அழுது கதறிக் கொண்டே எழுந்தான்.

கிரஹஸ்தன் உடனே துறவியை நோக்கி, "ஸ்வாமி என் மந்திர சக்தியின் வலிமையால் உடனே குழந்தையை உயிர்ப்பிக்க வைத்துவிடுகிறேன். மந்திரத்தை உச்சரித்தவுடன் எழுந்து விடுவான்" என்று கூறினான். உடனே அவன் மந்திரப்புத்தகத்தை எடுத்து வந்து, கையில் ஒரு பிடி மண் எடுத்து வைத்துக் கொண்டு சஞ்சீவி மந்திரத்தை அவன்மீது உச்சாடனம் செய்தான். பிறகு அவன் அந்த மண்ணை சாம்பல் மீது வாரி இறைத்தவுடன், முன் இருந்தபடியே பையன் பிழைத்து எழுந்தான்.

இதைக் கண்ட துறவி மனச் சமாதானமடைந்து அங்கே உணவு கொண்டான். கிரஹஸ்தனும் அந்தப் புத்தகத்தைப் பரண் மீது வைத்துவிட்டான். துறவி அங்கேயே சாப்பிட்டு விட்டுத் தங்கினான். நள்ளிரவில் பிராமணன் அயர்ந்து தூங்கும் போது, மெதுவாகப் பூனை போல எழுந்து சென்று புத்தகத்தை எடுத்துக் கொண்டு வெளிக் கிளம்பினான் துறவி. அதைக் கொண்டு தன் காதலியை உயிர்ப்பித்து விடவேண்டுமென்ற ஆசை அவன் உள்ளத்தில் பதிந்திருந்தது.

வெளியே வந்த துறவி, இரவு பகலாக நடந்து தன் காதலியைச் சுட்டு எரித்த மயானத்தை அடைந்தான். அங்கே சாம்பல் மீது குடிசையைக் கட்டி காலம் கழித்து வந்தவனைக் கண்டான். கங்கைக்குச் சென்றிருந்தவனும் அச்சமயம் அங்கு அஸ்திகளைக் கொண்டு வந்திருந்தான். "நண்பா, இந்தக் குடிசையைப் பிரித்து விடு. அஸ்திகளைச் சாம்பலில் போட்டுவிட்டு என் மந்திர வலிமையால் சாம்பலிலிருந்து மந்தாரவதி என்கிற பெண்ணைப் பிழைப்பித்து விடலாம்" என்று சொல்லி குடிசையைப் பிரிக்கச் செய்தான். பிறகு புஸ்தகத்தைப் பிரித்து மந்திர உச்சாடனம் செய்து பிடி மண்ணை எடுத்துச் சாம்பல் மீது வாரியிறைத்தான். மந்தாரவதியும் உடனே பிழைத்து எழுந்தாள். அவள் உடல் புடம் போட்ட தங்கம் போல் ஜொலித்தது.

இவ்விதம் பிழைத்தெழுந்த அவள் அழகைக் கண்ட மூவருக்கும் அவள் மீது தாங்க முடியாத மையல் ஏற்பட்டது. யார் அவளை மணம் செய்து கொள்ளுவது என்பதைப் பற்றி அவர்களுக்குள் பெரும் விவாதம் ஏற்பட்டது. ஒவ்வொருவனும் அவள் தன்னால்தான் பிழைத்தெழுந்தாள் என்று வாதாடினார்கள்.

"என் மந்திர வலிமையாலே தான் அவள் உயிர் பெற்றாள்" என்றான் ஒருவன். "புண்ணிய தீர்த்தங்களின் மகிமையாலேதான் அவள் உயிர்பெற்றெழுந்தாள்" என்றான் அஸ்திகளைக் கொண்டு வந்தவன். "ஆகவே எனக்குத்தான் மனைவியாவாள்" என்று அவன் வாதித்தான். "நான் தான் அவள் சாம்பலைக் காத்து வந்து

அவளைப் பிழைக்கச் செய்தேன். ஆகவே எனக்கே உரியவள்" என்றான் மூன்றாமவன்.

இதைக் கூறிவிட்டு வேதாளம், "கதைகேட்ட மகாராஜனே! இப்போது அவர்களுடைய விவாதத்தின் தீர்ப்பு என்ன? அவள் யாருக்கு மனைவி? ராஜனே! தெரிந்து கொண்டு சொல்லா விட்டால் உன் தலை அனேக சுக்கலாகச் சிதறிவிடும்" என்றது.

உடனே விக்கிரமாதித்தன் பின்வருமாறு சொன்னான்: "எத்தனையோ கஷ்டங்களை அனுபவித்திருந்தாலும், மந்திர வலிமையால் அவளைப் பிழைக்கச் செய்தவன் அவள் புருஷனாக மாட்டான்: அவளுடைய தந்தையே ஆவான்! எலும்புகளைச் சுமந்து கங்கைக்குச் சென்றவன் மகனாவான். அவள்மீது கொண்டுள்ள ஆசையால் அவள் சாம்பலை விட்டுப் பிரியாமல் மயானத்திலேயே தங்கித் தபசு செய்து அதனைத் தழுவிக் கிடந்தவனே அவள் புருஷனாவான்!"

இவ்விதம் விக்கிரமாதித்தன் தன் மௌனத்தைக் கலைத்துக் கூறியவுடனே, வேதாளம் அவன் தோளை விட்டுக் கிளம்பி மறைந்து பழையபடி தன் இடத்திற்கே சென்றது. விக்கிரமாதித்தனும் தபசிக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதற்காக அதைத் தேடிக் கிளம்பினான்.

மன உறுதி கொண்டவர்கள், தாங்கள் எடுத்த காரியத்தை உயிர் துறக்க நேரிட்டாலும் நடுவில் கைவிடாமல் செய்து முடித்தே தீர்வார்கள் அன்றோ?

(தமிழ் பாடத்தில் மந்தாரவதியின் பெயர் சின்னியாள் எனவும், அவளுடைய தந்தையின் பெயர் சடகோபியன் எனவும் காணப்படுகின்றன)

## 3. மூன்று ரசிகர்கள் கதை

மறுபடியும் விக்கிரமாதித்தன் முருங்க மரத்தை அடைந்து வேதாளத்தைக் கட்டிப் பிடித்துத் தன் தோள்மீது சுமந்து வரும்போது பின்வரும் கதையை வேதாளம் சொல்ல ஆரம்பித்தது:

அங்க தேசத்திலே, அந்தணர்களின் குடியிருப்பான விருக்ஷகடம் என்ற ஒரு பகுதி இருந்தது. அங்கே ஒரு சமயம் விஷ்ணுஸ்வாமி என்று ஒருவன் இருந்தான். அவனுக்கு நற்குல மங்கை ஒருத்தி மனைவியாக இருந்தாள். அவர்களுக்கு மூன்று ஆண் குழந்தைகள் பிறந்தனர். பிறக்கும் போதே அம்மூவரும்



அபாரமான ரஸிகத்தன்மையை அடைந்திருந்தனர்.

ஒருநாள் பிதா ஒரு யாகம் செய்ய விரும்பினான். அதற்காகக் கடலிலிருந்து ஓர் ஆமையைப் பிடித்துவர மூன்று குமாரர்களையும் அவன் அனுப்பி வைத்தான். அவர்கள் அவ்விதமே சென்று ஒரு ஆமையைக் கண்டு பிடித்தார்கள். உடனே மூத்தவன் தன் தம்பியர் இருவரையும் பார்த்து, "இந்த ஆமையின் உடலெல்லாம் ஒரே வழுவழுப்பாக இருக்கிறது. என்னால் அதைத் தொட முடியாது. ஆகவே, உங்கள் இருவரில் யாராகிலும் இதை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான். உடனே தம்பிகள் இருவரும், "நீ அதைத் தொடுவதற்கு யோசித்தால் நாங்கள் மட்டும் தொடுவோமா?" என்று தமையனைப் பார்த்துக் கேட்டார்கள்.

இதைக் கேட்ட மூத்தவன், "நீங்கள்தான் இதை எடுத்துக் கொண்டு வரவேண்டும். இல்லாவிட்டால், தந்தையார் செய்ய விருக்கும் யாகத்தை தடை செய்த பாபம் உங்களுக்குச் சம்பவிக்கும். தவிர, அந்தப் பாபம் அவரையும் பாதிக்கும்!" என்றான்.

இரண்டு தம்பிகளும் கலகலவென்று சிரித்தார்கள். "எங்களுடைய கடமை என்ன என்பதைப் பற்றி கூறும் நீ உன் கடமையை மறந்துவிட்டாயே? அதே கடமை உனக்கும் இல்லையா?" என்று தம்பிகள் கேட்டார்கள்.

"என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? நான் எப்படிப்பட்ட ரஸிகன் என்பது உங்களுக்குத் தெரியாதா? சாப்பாட்டை ருசி பார்த்துச் சாப்பிடுவதிலே நான் சமர்த்தனாயிற்றே? அருவருப்பான ஒரு வஸ்துவை நான் எப்படித் தொடுவேன்?" என்று மூத்தவன் கேட்டான். நடுவில் பிறந்தவன், "பெண்களின் தராதரத்தை அறிந்து சொல்லக் கூடிய சாமர்த்தியம் வாய்ந்த நான் உன்னைக் காட்டிலும் உயர்ந்த ரஸிகன் ஆவேன்" என்றான். "அப்படியானால் கடைசித் தம்பி இந்த ஆமையை எடுத்துப் போகட்டும்" என்று மூத்தவன் சொன்னவுடனேயே "நான் படுக்கையின் சுகம் அறிந்தவன். ஆகவே, உங்கள் இருவரைக் காட்டிலும் நான் தான் உயர்ந்தவன்" என்று சொன்னான் கடைசிப் பையன்.

இவ்விதம் மூவரும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்ள ஆரம்பித்தார்கள். மமதை அதிகமாயிருந்ததால், யாரும் தாழ்ந்து போவதாக இல்லை. ஆகவே அவர்கள் ஆமையை அப்படியே போட்டுவிட்டு, விவாதத்தை அவ்வூர் அரசனிடம் தெரிவித்து முடிவைப் பெறக் கிளம்பினார்கள்.

அந்த நாட்டு ராஜாவான பிரசேனஜித் என்பவன் தன் தலைநகரான விடங்கபுரியில் இருந்தான். அங்குள்ள அரண்மனையை ரஸிகர்கள் மூவரும் அடைந்து, அரசனிடம் தங்கள் விவாதத்தை முறையிட்டுக் கொண்டார்கள். அதைக் கேட்ட ராஜனும், "சரி, இவ்விடத்தில் தங்கியிருங்கள். ஒவ்வொருவரையும் பரீக்ஷித்துப் பார்க்கிறேன்" என்றான். அவர்களும் சம்மதித்து அங்கேயே தங்கினார்கள்.

அன்றைக்கு ராஜா சாப்பிடப் போகும் சமயத்தில் அம்மூவரையும் தன்னுடன் உட்கார வைத்து உபசரித்து அறுசுவையுடன் ராஜபோஜனம் அளித்தான். மற்ற எல்லோரும் சம்பிரமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது சாப்பாட்டு ரஸிகன் மட்டும் எதையும் சாப்பிடாமல் அருவருப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். சமையல் நிரம்ப ருசியாக இருந்தும் அவன் ஏன் சாப்பிடவில்லையென்று அரசனே கேட்டபோது, "இந்த சாதத்தில் பிணத்தின் வாடை வீசுகிறது. ஆகவே சாப்பாடு எவ்வளவுதான் ருசியாக இருந்தாலும் என்னால் அதைச் சாப்பிட முடியவில்லையே" என்று பதில் அளித்தான் போஜனசுகம் அறிவதில் நிபுணனானவன்.

சாப்பிட்டுக் கொண்டிருந்த அத்தனை பேர் எதிரிலும் அவன் அப்படிச் சொன்னவுடன், அரசன் உத்தரவுப்படி அவர்கள் ஒவ்வொருவரும் சாதத்தை எடுத்து முகர்ந்து பார்த்தார்கள். பிறகு, அவர்கள் அனைவரும் "வெண்மையான அரிசி கொண்டு தயாரிக்கப்பட்ட இந்த உணவு நல்ல மணம் உள்ளதாகவே இருக்கிறது" என்றனர். ஆனால் போஜன சுகம் அறிந்த அவனோ மூக்கைப் பிடித்துக் கொண்டு சாப்பிடவே மறுத்து விட்டான். நீண்ட நேரம் யோசனை செய்து விட்டு அரசன் விசாரித்த போது, அன்றைக்கு சமைத்திருந்த அரிசி ஏதோவொரு கிராமத்தின் சுடுகாட்டுக்குப் பக்கத்தில் இருந்த நிலத்தில் விளைந்தது என்ற உண்மை தெரிய வந்தது. இதையறிந்த மன்னன் ஆச்சரியத்தால் திகைத்துவிட்டான். உடனே மூத்தவனைப் பார்த்து, "உண்மையிலேயே நீ போஜன சுகத்தையறிந்த ரஸிகன் தான். அதிலே உன்னை வெல்லக்கூடிய நிபுணர்கள் இந்தப் பூலோகத்தில் இல்லை! ஆகவே, வேறு ஆகாரம் உட்கொள்ள வேண்டும்" என்று சொல்லி உபசரித்தான்.

சாப்பாடு முடிந்த பிறகு அரசன் அந்த ரஸிகர்களை அவர்கள் விடுதிக்கு அனுப்பிவிட்டான். அஸ்தமித்தவுடன் தன் பரிவாரத்திலே மிக்க அழகுள்ளவளாக இருந்த கணிகை ஒருத்தியைப் பொறுக்கி எடுத்து அதிலாவண்யமாக அவளைச் சிங்காரித்து, அவளை ஸ்திரீ சுகம் அறியும் ரஸிகனை இரண்டாவது சகோதரன் விடுதிக்கு அனுப்பினான். பூர்ண சந்திரன் போன்ற முகப்பொலிவுடன் அந்தப் பெண் அவன் அறையிலே நுழைந்தபோது, அவன் தன் மூக்கைப் பிடித்துக் கொண்டு இடது கையால் ஜாடை காட்டி அவளை வெளியே அழைத்துச் செல்லுமாறு உடன் வந்த ராஜசேவகர்களுக்குத் தெரிவித்தான்.

"அவளை அழைத்துச் செல்லுங்கள். உடனே செல்லாவிட்டால், நான் இறந்து விடுவேன். அவளிடமிருந்து வெள்ளாட்டு மொச்சு நாற்றம் வீசுகிறது" என்றான் ஸ்திரீ சுகம் அறிவதில் நிபுணன்.

அவர்கள் உடனே கணிகையை மன்னனிடம் அழைத்துச் சென்று நடந்ததை எடுத்துச் சொன்னார்கள். அரசன் தந்திரமான கேள்விகளால் அந்தக் கணிகையிடமிருந்தே அவளுடைய ஆதிப்பிறப்பு விருத்தாந்தத்தை விசாரித்த போது அவள் குழந்தையாக இருந்தபோது தாயும், செவிலியும் இல்லாமல் வெள்ளாட்டுப் பாலால் வளர்ந்தவள் என்பது தெரிய வந்தது.

மன்னனுக்கு மலைப்பு இன்னும் அதிகமாயிற்று. "இவனையும்விடச் சமர்த்தன் சப்தலோகங்களிலும் உண்டா?" என்று மன்னன் ஆச்சர்யத்துடன் ஸ்திரீ சுகம் அறிவதில் நிபுணனைப் புகழ்ந்தான்.

பிறகு நித்திரை சுகம் அறிவதில் வல்லவன் என்று கூறிய மூன்றாவது சகோதரனைக் கூப்பிட்டு, அவனுடைய ரஸிகத் தன்மையையும் பரீட்சிக்க முற்பட்டான். நன்றாக அலங்கரிக்கப்பட்ட பள்ளியறையிலே அவன் விருப்பப்படியே ஒரு கட்டிலில் மிக மிருதுவான ஏழு மெத்தைகளை ஒன்றன் பின் ஒன்றாகப் போட்டு அவனைப் படுக்க வைத்தான் மன்னன். ஆயினும் பாதி ஜாமம் கழிவதற்குள்ளாகவே அந்த ரஸிகன் எழுந்து வலி பொறுக்க முடியாமல் அலறினான்.

பக்கத்தில் காவல் இருந்த அரசாங்க அதிகாரிகள் அவன் விலாவிலே ஒரு மயிர் பதிந்து அழுத்தியது போன்ற வளைந்த அடையாளம் ஒன்று இருக்கக் கண்டார்கள். உடனே அவர்கள் மகாராஜனிடம் ஓடிச் சென்று செய்தியை அறிவித்தார்கள். அரசனும் மெத்தைகளின் அடியில் ஏதாவது இருக்கிறதா என்று பரிசோதிக்க உத்திரவு அளித்தான். அவர்கள் அவ்விதமே

ஒவ்வொரு மெத்தையாக எடுத்துச் சோதித்து வரும்போது மெத்தையொன்றில் ஒரு புஷ்பத்தோடு ஒட்டிக்கொண்டு ஒரு கேசம் இருப்பதைக் கண்டார்கள். அதை எடுத்துக் கொண்டு, அவர்கள் அந்த ரஸிகனையும் அழைத்துச் சென்று அரசனிடம் காட்டினார்கள். அவன் உடலிலே அடையாளத்தைக் கண்ட அரசன் திகைத்துப் போனான். ஏழு மெத்தைகளுக்கு அடியிலி ருந்த கேசம் ஏழு மெத்தைகளையும் தாண்டி எப்படி அழுந்தி இருந்திருக்க முடியும் என்பதை எண்ணி எண்ணி அரசன் அன்றிரவு முழுவதும் சரியாகத் தூங்கவில்லை.

மறுநாள் காலையில் அவன் அம்மூவருக்கும் அவர்களுடைய ரஸிகத்தன்மையை மெச்சி மூன்று லக்ஷம் பொன் சன்மானம் வழங்கினான். அவர்களும் ஆமையை மறந்து அரசன் சபையிலேயே தங்கி விட்டார்கள். தங்கள் தகப்பனார் செய்ய வேண்டிய யாகத்தைத் தடை செய்த தோஷம் தங்களுக்குக் கிட்டியதே என்றும் அவர்கள் கவலைப்படவில்லை.

இவ்விதம் வேதாளம் கதையை சொல்லிவிட்டு, விக்கிரமாதித்தனைப் பார்த்து, "ஓ! ராஜனே! போஜன சுகம், ஸ்திரீ சுகம், நித்திரை சுகம், ஆகிய இம்மூன்றிலும் முறையே சமத்தர்களான இம்மூவருள் எவனுடைய ரஸிகத்தன்மை அதிகமானது? எவன் அசகாய நிபுணன்?" என்று கேட்டது.

அதற்கு விக்கிரமாதித்த மகாராஜன் பின்வருமாறு பதில் சொன்னான்:

"போஜன சுகம் அறிந்தவனும், ஸ்திரீ சுகம் அறிந்தவனும் ஐம்புலன்களும் விழித்திருக்கும் நேரத்தில் புத்தியினாலே சொன்னார்கள். சுயபுத்தி இல்லாமல் தூங்கும் போது அனுபவித்ததைச் சொன்ன நித்திரை சுக ரஸிகனே அசகாய நிபுணன்!"

இதைக் கேட்ட வேதாளம் முன் போலவே கட்டவிழ்த்துக் கொண்டு முருங்க மரத்தில் தொற்றிக் கொண்டது.

## 4. ஞானி சூஸ்திரவான் சூரன் கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் வேதாளத்தைப் பிடித்துக்கொண்டு வரும்போது அது பின்வரும் கதையைச் சொல்லியது:

உஜ்ஜயினி நகரத்தில ஹரிஸ்வாமி என்ற அந்தண சிரேஷ்டர் ஒருவர் இருந்தார். அவர் புண்ணியசேனன் என்னும் அரசனை



அண்டிப் பிழைத்து வந்தார். ஹரிஸ்வாமிக்கு ஒரு மனைவியும், அவரைப் போலவே உயர்ந்த குணங்களுடைய தேவஸ்வாமி என்ற ஒரு மகனும் இருந்தார்கள். ஈடு இணையற்ற சோமப்பிரபை என்ற மகள் ஒருத்தியும் அவருக்குண்டு. அவளுக்கு கல்யாண வயது வந்தது. தன் அழகில் பெருமிதம் கொண்ட அவள், தன் தாயார் மூலமாக, "வீரம், ஞானம், விஞ்ஞானம் ஆகிய மூன்றிலே ஏதாவது ஒன்றில் வல்லவனுக்கே என்னை மணம் செய்து கொடுக்க வேண்டும். என் வாழ்க்கையிலே உங்களுக்கு அக்கறையிருந்தால் என்னை வேறு யாருக்கும் மணம் செய்து கொடுக்கக் கூடாது" என்ற செய்தியைத் தன் தந்தைக்கு அறிவித்தாள்.

இதைக் கேட்ட ஹரிஸ்வாமிக்கு ஒரே கவலையாகப் போய் விட்டது. இம்மூன்று துறைகளில் ஏதாவது ஒன்றில் சமர்த்தனை மாப்பிள்ளையை எப்படித் தேடிப்பிடிப்பது என்ற கவலை அவரை வாட்டியது. அவர் இவ்விதம் இருக்கும் சமயம், புண்ணியசேன மன்னன் தன் நாட்டின் மீது படையெடுத்து வந்திருந்த தக்ஷிண தேசத்து அரசனிடம் ஹரிஸ்வாமியைத் தூதுவராக அனுப்பி வைத்தான். அவரும் அவ்விடம் சென்று தாம் வந்த காரியத்தை முடித்துக் கொண்டார். அப்போது அவர் குமாரியின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த சூஸ்திரவான் என்கிற பிராமண இளைஞன் ஒருவன் ஹரிஸ்வாமியை அணுகி அவர் மகளைத் தனக்கு மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டான். உடனே அவர் அந்த இளைஞனை நோக்கி, "வீரம், ஞானம், விஞ்ஞானம் ஆகிய மூன்றிலே ஏதாவது ஒன்றைப் பூர்ணமாக அறிந்தவனையே என் மகள் மணந்து கொள்வாள். உனக்கு என்ன தெரியும்?" என்று கேட்டார்.

சூஸ்திரவான் தனக்கு விஞ்ஞானத்தில் நல்ல பயிற்சி இருப்பதாகத் தெரிவித்தவுடன் ஹரிஸ்வாமியும், "அப்படியானால் அதை எனக்குக் காண்பி" என்று கேட்டார். உடனே அந்த இளைஞன் சாமர்த்தியத்தால் ஆகாயத்தில் பறக்கக்கூடிய ஒரு விமானத்தை தயார் செய்தான். அந்த மாய விமானத்தில் ஹரிஸ்வாமியை ஏற்றிக் கொண்டு உயரக் கிளம்பி ஒரு கணத்தில் அவருக்கு இந்திரலோகம் முதலிய எல்லா உலகங்களையும் காட்டி விட்டுத் திரும்பவும் தக்ஷிண தேசத்து அரசன் பாசறைக்கே கொணர்ந்து விட்டான். இதனால் திருப்தி அடைந்த ஹரிஸ்வாமி

யும் அந்த இளைஞனுக்குத் தம் மகளைக் கல்யாணம் செய்து கொடுப்பதாக வாக்களித்து கல்யாணத்துக்கு அன்றைத் தினத்திலிருந்து ஏழாம் நாள் என்று முகூர்த்தமும் நிச்சயித்து விட்டார்.

இங்கே இவ்விதம் இருக்க உஜ்ஜயினியிலே ஹரிஸ்வாமியின் மகனை தேவஸ்வாமியைச் சூரன் என்கிற மற்றொருவன் அணுகி அவன் சகோதரியைத் தனக்கு மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். தேவஸ்வாமியும் அதே போல, "அவளையடைய விரும்புகிறவன் வீரம், ஞானம், விஞ்ஞானம் ஆகிய மூன்றிலே ஒன்றில் சமர்த்தனாக இருக்க வேண்டும்" என்பதைத் தெரிவித்தான். உடனே அந்தப் பிராமணன் தான் ஒரு வீரன் என்று சொல்லி, வில்வித்தை, வாள் வித்தை, கத்திச் சண்டை, குத்துச் சண்டை முதலிய பலவற்றிலும் தனக்கு உள்ள திறமையை எடுத்துக் காட்டினான். இதைக் கண்ட தேவஸ்வாமியும் தங்கையை அவனுக்கு மணம் முடிக்க ஒப்புக் கொண்டான். ஜோஸ்யர்களைக் கொண்டு பார்த்த போது, அவன் தகப்பன் விஞ்ஞானிக்காக வாக்களித்திருந்த அதே ஏழாம் நாள் முகூர்த்தம்தான் கிடைத்தது.

அதே சமயத்தில் ஞானி என்கிற மூன்றாமவன் ஒருவன் பெண்ணின் தாயாரைத் தனிமையில் சந்தித்து பெண்ணைத் தனக்குக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டான். அவளும் தன் குமாரத்தி, வீரம், ஞானம், விஞ்ஞானம் ஆகியவற்றுள் ஒன்றில் தேர்ந்தவனையே மணந்து கொள்ளுவாள் என்பதை எடுத்துக் கூறினாள். அவனும் "அம்மா, எனக்கு ஞானம் இருக்கிறது" என்றான். அன்றி, அவன் நடந்தது, நடப்பது, நடக்கப்போவது ஆகியவற்றைப் பற்றிக் கேட்ட கேள்விகளுக்குத் தக்க விடையளித்தான். அதனால் திருப்தி அடைந்த தாயாரும் அதே ஏழாம் நாள் தன் குமாரியை அவனுக்குப் பாணிக்கிரஹணம் செய்து கொடுப்பதாக உறுதி கூறினாள்.

மறுநாள் ஹரிஸ்வாமி வீடு திரும்பினார். தம் மனைவியிடத்திலும், மகனிடத்திலும் குமாரத்தியின் விவாக விஷயமாகத் தாம் செய்திருந்த ஏற்பாட்டை ஹரிஸ்வாமி எடுத்துச் சொன்னார். உடனே அவர்களும் தாங்கள் இருவரும் தனித்தனியே கொடுத்திருக்கும் வாக்கைப் பற்றித் தெரிவித்தார்கள். இதைக் கேட்ட அவருக்கு முன்னிலும் அதிகமான கவலை வந்து விட்டது. மூன்று பேரை அழைத்திருக்கிறதே அவர்களில் யாருக்குப் பெண்ணை மணம் செய்து கொடுப்பது என்பதை அவரால் முடிவு செய்ய முடியவில்லை.

முகூர்த்த நாள் வந்தது. வரனாக வரிக்கப்பட்டிருந்த வீரன், ஞானி, விஞ்ஞானி ஆகிய மூவரும் ஹரிஸ்வாமியின் வீட்டுக்கு

வந்து சேர்ந்தார்கள். ஆனால் அந்தச் சமயத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. மணப்பெண்ணான சோமப்பிரபையைக் காணவில்லை. வீட்டிலிருந்து, அவள் திடீரென்று மாயமாக மறைந்து விட்டாள். எங்கெங்கோ தேடியும் அவள் கிடைக்கவில்லை.

உடனே ஹரிஸ்வாமி ஞானியை அழைத்து, "ஐயா, என் மகள் இப்போது எங்கிருக்கிறாள் என்பதைத் தயவு செய்து சீக்கிரமாக அறிந்து சொல்ல வேண்டும்" என்று ஆவலுடன் வேண்டிக் கொண்டார். ஞானியும் உடனே "தூம்ரசிகன் என்னும் ராக்ஷஸன் விந்திய மலைக் காட்டில் உள்ள தன் இருப்பிடத்திற்கு அவளைத் தூக்கிப் போயிருக்கிறான்" என்று அறிந்து சொன்னான்.

இதைக் கேட்ட ஹரிஸ்வாமி, பெரிதும் கலவரமடைந்து "ஐயோ, அவளை எப்படித் திரும்ப அடைவது? அவளை எவ்விதம் மணம் செய்து கொடுப்பது?" என்று அழுது புலம்பினான். இதைக் கண்ட விஞ்ஞானி, "கவலைப்படாதீர்கள். அவள் இருக்குமிடமென்று ஞானி குறிப்பிட்ட பிரதேசத்துக்கு உங்களை ஒரு கணத்திலே அழைத்துச் செல்லுகிறேன்" என்று கூறித் தைரியம் ஊட்டினான்.

உடனே, அவன் ஆகாயத்தில் பறந்து செல்லக்கூடிய மாய விமானம் ஒன்றைத் தயாரித்து அதிலே ஏராளமான ஆயுதங்களையும் நிரப்பினான். பிறகு ஹரிஸ்வாமி, வீரன், ஞானி ஆகியவர்களையும் ஏற்றிக் கொண்டு விமானத்தைச் செலுத்தி ராக்ஷஸன் வசித்து வந்த விந்திய மலைக் காட்டை அடைந்தான்.

இவர்களைக் கண்ட ராக்ஷஸன் கோபம் கொண்டு பயங்கரமான கூச்சல் போட்டுக் கொண்டு ஓடி வந்தான். அவ்விதம் வரும் ராக்ஷஸனை எதிர்த்து வீரன் சண்டை போட்டான். இருவரும் பலவிதமான ஆயுதங்களாலும் போர் புரிந்தார்கள். சிறிது நேரத்தில் நிரம்பவும் சாகஸமாக அர்த்த சஸ்திர பாணத்தை வீரன் எய்து ராக்ஷஸன் தலையைக் கொய்து விட்டான். சோமப்பிரபையை மீட்டுக்கொண்டு எல்லோருமாக அதே மாய விமானத்தில் உஜ்ஜயினி திரும்பினார்கள்.

எல்லோரும் ஹரிஸ்வாமியின் வீடு வந்து சேர்ந்த பிறகும் விவாகம் நடை பெறவில்லை. முகூர்த்த வேளையும் கடந்து விட்டது. வீரன், ஞானி, விஞ்ஞானி ஆகிய மூவருக்கும் இடையே பெருத்த விவாதம் ஏற்பட்டு விட்டது. "ராக்ஷஸன் அவளை மறைத்து வைத்திருந்த இடத்தை நான் கண்டுபிடித்து சொல்லாவிட்டால் அவளை எப்படித் திரும்ப அழைத்து வந்திருக்க முடியும்? ஆகவே அவளை எனக்கே மணம் செய்து கொடுக்க வேண்டும்" என்று கேட்டான் ஞானி.

"நான் இந்த மாய விமானத்தைத் தயாரித்து வான வீதியில் பறந்து உங்களை அழைத்துப் போய் திரும்ப அழைத்து வரவில்லையா? இந்த விமானம் இல்லாவிட்டால் உங்களால் எப்படி விந்தியமலைக்காட்டை அடைந்து சுப முகூர்த்தத்துக்குள்ளே திரும்பி வந்திருக்க முடியும்? ஆகவே அவளை எனக்குத்தான் மணம் செய்து கொடுக்க வேண்டும்'' என்று கேட்டான் விஞ்ஞானியான தூஸ்திரவான்.

''நீங்கள் பலபேர் பல காரியங்கள் செய்தும், நான் ராக்ஷஸனுடன் சண்டை போட்டு அவனை கொன்றிருக்காவிட்டால் உங்களால் எப்படி அவளை திரும்ப அடைந்திருக்க முடியும்? ஆகவே அவள் எனக்கே உரியவள்" என்றான் வீரனான சூரன்.

இப்படி அவர்களுக்குள்ளே விவாதித்துக் கொண்டிருந்த போது ஹரிஸ்வாமி என்ன செய்வதென்று தெரியாமல் கலங்கி நின்று விட்டான்.

இவ்விதம் கதையைக் கூறிய வேதாளம், "சொல்லுமையா ராஜனே! இப்போது நீரே சொல்லும்! அந்தப் பெண்ணை யாருக்கு மணம் செய்விக்க வேண்டுமென்பதைத் தெரிந்து கொண்டு சொல்லாமல் இருந்தால் உம் தலை வெடித்து விடும்!" என்றது.

இதைக் கேட்ட விக்கிரமாதித்தனும் தன் மௌனத்தைக் கலைத்துப் பதில் சொன்னான்.

"தன் உயிரையும் பொருட்படுத்தாமல், ராக்ஷஸனுடன் சண்டை போட்டுத் தோள் வலிமையால் அவளையடைந்த வீரனுக்கே அவளை மணம் செய்வித்தல் வேண்டும்! வீரத்திற்கே காதல் உரியது! ஞானியும், விஞ்ஞானியும் வீரனுக்கு உதவி புரிய வேண்டியவர்கள் என்றே கடவுளால் படைக்கப்பட்டவர்கள். கணக்கர்களும், வினைஞர்களும் பிறருக்கு அடங்கி உதவியாளர்களாகத்தானே இருக்கிறார்கள்?"

அதைக் கேட்ட வேதாளம் மறுபடியும் முருங்க மரம் ஏறிக் கொண்டது.

## 5. மதன சுந்தரி கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்திலிருந்து வேதாளத்தைப் பிடித்துத் தோள்மீது சுமந்து கொண்டு வேகமாகத் திரும்பி நடக்கலானான். வழியிலே வேதாளம் அவனைப் பார்த்து, "மனித குலாதிபதியே! நீ அஞ்சா நெஞ்சமும் புத்தி சாதுர்யமும் உடையவன். ஆகவே, கதை ஒன்று சொல்லுகிறேன், கேளுமையா ராஜனே!" என்று மறுபடியும் கதையை ஆரம்பித்தது:



சோபாவதி என்றொரு நகரம் உண்டு. அதை அரசாண்டான் யசகேது என்னும் மன்னன். நீதிவசய கேது என்னும் சிறப்புடன் இந்தப் பூவுலகத்திலே புகழ் பெற்று விளங்கினான். அவனுடைய தலை நகரிலே சக்தி வாய்ந்த தெய்வம் என உலகப் பிரசித்தியடைந்திருந்த துர்க்கையம்மனுக்கு அழகான ஓர் ஆலயம் இருந்தது. அதற்குத் தெற்கே 'துர்க்கை தீர்த்தம்' என்ற தடாகமும் இருந்தது. ஒவ்வொரு வருஷமும் ஆஷாட மாசத்திலே சுக்லபக்ஷ சதுர்த்தசி அன்றைக்கு அங்கே ஒரு பெரிய உற்சவம் நடக்கும். தேர் திருவிழாக் கொண்டாட்டங்களைக் காண்பதற்காக அன்றையத் தினம் ஏராளமான மக்கள் கூட்டம் கூட்டமாகத் திரண்டு வருவார்கள். துர்க்கையம்மனின் வரப்பிரசாதத்தினால் எதுவும் கைகூடும் என நம்பிக்கையுள்ளவர்களெல்லாம் தடாகத்திலே தீர்த்தமாடி அம்மன் சந்நிதியிலே பலவிதப் பிரதிக்ஞைகளும் செய்து கொண்டு போவார்கள்.

ஒருசமயம் அந்த உற்சவத்தின் போது அந்தப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதற்காகப் பிரம்மஸ்தலம் என்ற கிராமத்திலிருந்து தவளன் என்ற வாலிபன் ஒருவன் வந்திருந்தான். அவன் தன்னம்பிக்கை குறைந்தவனாகவும். கோழை மனசு படைத்தவனாகவும் விளங்கியதால் அவனுக்குத் தீனதாஸன் என்ற பெயரும் வழங்கி வந்தது. அவனுக்குத் துர்க்கையம்மனிடம் அபரிமிதமான பயபக்தியும் தேவியின் சக்தியில் அளவற்ற நம்பிக்கையும் உண்டு. அவன் தன் இதயத்தைக் கொள்ளைக் கொள்ளக்கூடிய பெண்ணை மணப்பதெனவும் முடிவு செய்திருந்தான். அந்த உற்சவ காலத்தில் சுத்தபடன் என்பவனுடைய மகளான மதனசுந்தரி என்னும் கன்னிப்பெண் ஒருத்தியும் தன்னைப் போலவே அங்கு ஸ்நானம் செய்ய வந்திருப்பதைத் தவளன் கண்டான். புது நிலவைப் பழிக்கும் அழகுடைய அவளைக் கண்டவுடனே அவன் தன் உள்ளத்தைப் பறி கொடுத்தான். திருவிழா பார்க்க வந்த பெண் தனக்குக் கிடைப்பாளா என்று

ந்த ஏக்கம் அவன் நெஞ்சை வாட்டியது. அவன் துர்க்கை சந்நிதானத்தை அடைந்து, "மகிஷாசுரமர்த்தனியே! நான் ய பெண்ணை மனைவியாக அடைவதுதான் என் க்கையின் லட்சியம்! அவளோடு நான் சிறிது காலமே வாழ்வை ருசித்தாலும் போதும்! என் உயிரின் ஒரே ஆசை தியடைந்து விடும்! என் ஆசை அபிலாஷையை வேற்று! அந்தப் பெண் என்னை மணம் செய்து ள்வாளேயானால் மறுமுறை உன்னை ஸ்மரணை செய்யும்போது, தலையை வெட்டி உன் பாதாரவிந்தத்திலே சமர்ப்பிப்பேன்!" று பிரதிக்ஞை செய்து கொண்டான்.

அதன் பிறகு தன் கருத்தைக் கவர்ந்து கொண்ட அந்த ரிகை யார், எந்த ஊர் என்பதைப் போன்ற விவரங்களை ரித்து அறிந்து கொண்டு அவள்மீது கொண்ட மோகத்தோடு ன் வீடு திரும்பினான். அங்கே அவனுக்கு இருப்புக் ளவில்லை. ஆகாரம் செல்லவில்லை. இதைக் கண்ட அவன் ார் கவலை கொண்டு இதற்குக் காரணம் என்னவென்று னை விசாரித்தாள். அவனும் உண்மையைச் சொல்லி தன் சையைத் தெரிவித்தான். தாயாரும் உடனே தன் கணவர் மலரிடம் சென்று விஷயத்தைச் சொன்னாள்.

இதைக் கேட்ட தகப்பனும் தன் மகனை வந்து பார்த்து, "மகனே, பமாய் கிட்டக்கூடிய இந்த விஷயத்துக்காக நீ ஏன் இப்படி தைரியப்பட்டு கலங்குகிறாய்? நான் கேட்டால் சுத்தப்படன் தன் களை உனக்கு கட்டாயம் மணம் செய்து கொடுப்பான். அவனுக்கு ம் குலம், செல்வம், அந்தஸ்து, தொழில் முதலிய ல்லாவற்றிலும் சமமானவர்களே: எந்தவிதத்திலும் றைந்தவர்கள் அல்ல. எனக்கு அவனைத் தெரியும். அவனும் ன்னை நன்றாக அறிவான். ஆகவே, இந்தச் சம்பந்தத்தை ஏற்பாடு செய்வதில் சிரமம் எதுவுமே இல்லை" என்று சொன்னான்.

இவ்விதம் விமலன் தன் மகனை பல வார்த்தைகளால் மாதானப்படுத்தி தேற்றி ஆகாரம் உட்கொள்ளச் செய்தான். மறுநாள் அவன் தன் மகனுடன் புறப்பட்டுச் சுத்தப்படன் வீட்டுக்குச் சென்றான். அங்கே அவன் தன் மகனுக்கு மதனசுந்தரியை மணம் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டான். சுத்தப்படனும் அதற்குச் சம்மதித்தான். முகூர்த்தம் பார்த்த போது மறுநாளே நல்ல நாளாக இருந்தது. அதனால் மறுநாளே கல்யாணம் நடந்தது. மதனசுந்தரியும் தவளனைப் பார்த்தது முதல் அவன் மீது மையல் கொண்டிருந்தாள். இந்தக் கல்யாணத்திலே அவளுக்கும் பரம சந்தோஷம் உண்டாயிற்று. கல்யாணம் கழித்துத் தவளன் புதுப் பெண்டாட்டியுடன் சொந்த ஊர் திரும்பி வந்து சேர்ந்தான்.

விரும்பியவளை அடைந்த வாலிபன் புதுமணத்தின் ஆனந்தத்தேனைப் பருகி, ஆசைதீர சில நாட்கள் இன்ப வாழ்வை அனுபவித்து வந்தான்.

இவ்விதம் புதுமணத் தம்பதிகள் இருவரும் ஊரில் இருக்கும் போது, ஒருநாள் மதனசுந்தரியின் சகோதரன் அவ்விடம் வந்து சேர்ந்தான். தமையனுக்கும் தங்கைக்குமிடையே உயிருக்குயிரான வாத்ஸல்யம் உண்டு. தங்கையின் வீட்டில் அவனை எல்லோரும் அன்புடன் வரவேற்று குசலப்பிரசனம் செய்து தங்கள் அன்பை தெரிவித்தார்கள். சாப்பாடு ஆனபிறகு, இளைப்பாறும் போது அவன், பெரியவர்களைப் பார்த்து, "ஊரிலே துர்க்கா தேவியின் உற்சவம் நடைபெறுகிறது. அதற்கு என் தங்கை மதன சுந்தரியையும், அவள் கணவரையும் அழைத்து வரச் சொல்லி என் தகப்பனார் என்னை அனுப்பி வைத்தார்!" என்று சொன்னான். அதற்கு அவர்கள் ஒப்புக்கொண்டு விருந்து வைத்து அனுப்ப விரும்பினார்கள்.

மறுநாள் காலையில் தவளன் தன் மனைவி மதனசுந்தரியுடன் மாமனார் வீட்டுக்குக் கிளம்பினான். உரிய காலத்தில் அவர்களுடன் சோபாவதி நகரை அவன் அடைந்தான். நகர்ப்புறத்திலே துர்க்கையின் பெரிய கோவில் இருப்பதைத் தவளன் கண்டவுடனே, அவனுக்குப் பக்தி மேலிட்டது. அம்மனின் சந்நிதானத்திலே அவன் முன்னொரு சமயம் செய்த பிரதிக்ஞை விஸ்வரூபமெடுத்து அவனுடைய நெஞ்சை முள்போல் உறுத்தியது. அந்தச் சந்தர்ப்பத்திலே தன் சபதத்தை நிறைவேற்றிவிடத் தீர்மானித்த தவளன் தன் இளம் மனைவியையும் மைத்துனனையும் நோக்கி, "நீங்கள் இங்கேயே தடாகத்தின் நிழலில் இளைப்பாறுங்கள். நான் ஆலயத்தினுள் துர்க்கையம்மனைச் சேவித்துவிட்டு வருகிறேன். மைத்துனா! நிர்மானுஷ்யமான ஆலயத்தினுள் பயங்கரரூபிணியை உன் தங்கை பார்த்தால் மிகவும் பயப்படுவாள்! அவளுக்குத் துணையாக நீ இங்கேயே இரு!" என்று சொல்லிவிட்டு ஆலயத்தினுள் சென்றான்.

மஹிஷாசுரனைக் கீழே தள்ளி மிதித்த காலையும், தானவர்களை வென்ற பதினெட்டு கரங்களையும் கொண்டு பயங்கரமாக விளங்கிய துர்க்கா தேவியை அவன் வழிபட்டு வணங்கிப் பிரார்த்தித்தான். அப்போது அவன் மனதில் பழைய எண்ணம் புதிய உருவில் வைராக்கியச் சித்தமாக உதித்தது.

"தேவியின் அருளைப்பெற மக்கள் எல்லோரும் பலவிதமாக உயிர்பலி இடுகிறார்கள். அவ்விதம் இருக்கத் தேவியைத் திருப்தி செய்து பரகதியில் உய்வதற்காக ஏன் அவளுக்கு என்னை பலி

யிட்டு கொள்ளலாகாது? இவ்விதம் நினைத்தவுடனே அவன், நிர்மானுஷ்யமாய் இருந்த அந்தக் கர்ப்பக்கிரகத்திலிருந்து நீண்ட காலத்துக்கு முன்னதாக யாரோ காணிக்கை செலுத்திய கத்தியை வெளியே எடுத்து வந்தான். பிறகு மணியை கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த சங்கிலியில் தன் தலை மயிரை முடிந்து கட்டிவிட்டு, அந்தக் கத்தியால் தன் கழுத்தை அறுத்துக் கொண்டான். துண்டித்தவுடனே தலைமயிர் கட்டு அறுந்து, தலை வேறு உடல் வேறாகக் கீழே விழுந்தன.

வெளியே வெகு நேரமாகக் காத்திருந்த மைத்துனனோ, கோவிலுக்குள் போன தன் தங்கை புருஷன் திரும்பி வராததைக் கண்டு எதனால் தாமதமேற்பட்டது என்று அறிந்துவர விரும்பினான்.

"தங்கையே! நீ இங்கேயே இரு! நான் போய் பார்த்து வருகிறேன்!" என்று அவன் சொல்லிவிட்டு ஆலயத்தினுள் சென்றான். உள்ளே தன் சகோதரி கணவன் தலையறுத்து கிடப்பதைக் கண்டு கலக்கம் அடைந்தான்! "இதைப் போய் சொன்னால் தங்கை எப்படி சகிப்பாள்?" என்று மனம் குலைந்த அவனும் அதே கத்தியால் அதேபோலத் தன் கழுத்தையும் அறுத்துக் கொண்டு, தலை வேறு உடல் வேறாகக் கிடந்தான்.

போன புருஷனும், அண்ணனும் வராததைக் கண்ட மதனசுந்தரி பெரிதும் கலவரம் அடைந்தாள். ஆகவே, அவளும் கோவிலுக்குள்ளே நுழைந்தாள். உள்ளே அம்மன் சந்நிதியிலே தன் கணவனும் அண்ணனும் கிடந்த நிலையை பார்த்தவுடனே அவள் நிலைகலங்கிப் பூமியிலே விழுந்து புரண்டாள்.

"ஐயோ! இது என்ன? என் வாழ்க்கை பாழாயிற்றே?" என்று மதனசுந்தரி அலறினாள். இவ்விதம் திடீரென்று கொலையுண்ட இருவரையும் நினைத்து அவள் பலவாறாகவும் பிரலாபித்தாள். பிறகு அவள் எழுந்து, "இனி இவ்வாழ்வினால் என்ன பிரயோஜனம்?" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். "அம்பிகே! மக்களின் நல்வாழ்க்கை, மாங்கல்யம், சம்பத்து ஆகியவற்றை காத்து ரக்ஷிக்கும் தேவி நீதான்! மாதர்களுக்கு உன்னையன்றி புகலிடம் வேறு உண்டோ? உன் கணவரான சிவபெருமானை உன் உடல் பாதியிலேயே கொண்டிருக்கிறாய். அவ்விதம் இருந்தும் நீ என்னுடைய கணவனையும், சகோதரனையும் அபகரித்து விட்டாய். நான் சதா உன்னையே நம்பி வழிபட்டு வருகிறேன். அப்படியிருக்க நீ செய்தது நியாயமே இல்லை. இப்போது உன்னை நான் ஒரு வரம் அளிக்க வேண்டுகிறேன். எதற்கும் அருகதையற்ற இவ்வுடலை உன் சந்நிதியிலே இப்போதே தியாகம் செய்துவிடப் போகிறேன். இனி எனக்குக் கிடைக்கப்

போகும் மறு ஜென்மத்தில், அது எதுவாக இருந்தாலும் சரி இவ்விருவரையுமே என் கணவராகவும், சகோதரராகவுட அடையும்படி அனுக்கிரகிக்க வேண்டும்!"

இவ்விதம் தேவியை மதனசுந்தரி வேண்டிக்கொண்டு மறுபடியும் மாதாவைப் பணிந்து எழுந்தாள். பிறகு அவள் பக்கத்திலிருந்த கொடியைக் கொண்டு சுருக்கு தயார் செய்து அதை ஓர் அசோக மரத்தில் கட்டினாள். தன் கழுத்தை நீட்டி அந்தச் சுருக்கை போட்டுக் கொள்ளும் சமயத்தில் ஆகாசத்தில் ஓர் அசரீரி வாக்கு எழுந்தது.

"அவசரப்பட்டு எதையும் செய்துவிடாதே! குழந்தாய். நீ சிறுசானாலும் உன்னுடைய மன உறுதியைக் கண்டு நான் சந்தோஷம் அடைந்தேன். இந்த சுருக்கு இப்படியே இருக்கட்டும். நீ உன் கணவன் சகோதரர் ஆகியவர்களுடைய தலைகளை அவர்கள் உடல்களுடன் சேர்த்துவிடு. என் அருளால் அவர்கள் மறுபடியும் உயிர்பெற்று எழுந்து விடுவார்கள்."

அதைக் கேட்ட மதனசுந்தரி மனமகிழ்ந்து, அந்தச் சுருக்கை விட்டுக் கீழே குதித்து, தலையறுபட்டு கிடக்கும் முண்டங்களை நோக்கி வேகமாக ஓடினாள். அவளுக்கிருந்த பதற்றத்தில், தான் என்ன செய்கிறோம் என்பதையறியாமல், கை தவறி அவள் தன் கணவனின் தலையைத் தமையனின் உடலிலும், தமையனின் தலையைக் கணவன் உடலிலும் மாறுபாடாகப் பொருத்திவிட்டாள். அசரீரியின் வாக்குப் பிரகாரம் அவ்விருவரும் உடனே உயிர் பெற்றெழுந்தனர்.

அவர்கள் ஒருவரை ஒருவர் அளவளாவித் தங்களுக்கு நேரிட்ட புனர்ஜன்மத்தைக் கேட்டுச் சந்தோஷம் அடைந்தார்கள். துர்க்கா தேவியை வழிபட்டு மூவரும் மேற்கொண்டு தங்கள் பிரயாணத்தைத் தொடங்கினார்கள். நடந்து செல்லும்போது தலைகளை மாற்றி வைத்துவிட்டதை, மதனசுந்தரி அறிந்து கொண்டாள். அவளுக்குக் கலக்கம் ஏற்பட்டது. என்ன செய்வதென்றே விளங்கவில்லை. கணவன் தலையோடும் தமையன் உடலோடும் கூடிய ஓர் உருவம்! கணவன் உடலோடும் தமையனின் தலையோடும் கூடிய ஓர் உருவம்!

"இவ்விருவரில் மதனசுந்தரிக்கு கணவன் யார்? தமையன் யார்?"

இவ்விதம் வேதாளம் கூறக்கேட்ட விக்கிரமாதித்த மகாராஜன், பின்வரும் பதிலைச் சொன்னான்.

"அந்த இரண்டு உருவங்களில் எவன் அவளைத் தன் மனைவி [illegible] நினைப்பில் பார்க்கிறானோ அவன்தான் அவளுடைய [illegible]வன்!"

(உடல் உறுப்புகளில் சிரசே பிரதானமானது. மனிதரை [illegible]யாளம் கண்டு கொள்வதும் தலையைக் கொண்டுதான். [illegible]வே. கணவன் தலையைக் கொண்டவனே அவளுடைய [illegible]வன் ஆவான்!" என்னும் விடை வடமொழி மூலமொன்றில் [illegible]ப்படுகிறது.)

அந்தப் பதிலை கேட்ட வேதாளம் மறுபடியும் முருங்க மரத்தின் [illegible] ஏறிக்கொண்டது.

## 6. கிளி மைனாக் கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் வேதாளத்தை முருங்க மரத்திலிருந்து பிடித்து வரும்போது வேதாளம் பின்வரும் கதையைச் சொன்னது:

இந்தப் பூமியிலே பாடலிபுத்திரம் என்று புகழ்பெற்ற நகரம் ஒன்று இருக்கிறது. அதிலே முன்னொரு சமயம் விக்கிரமகேசரி என்ற அரசன் ஆண்டு வந்தான். தெய்வ கடாக்ஷத்தில் சகல தர்மங்களுக்கும், தவபணிக்கும் ஓர் இருப்பிடமாக அவன் விளங்கினான். அவனிடம் பஞ்சவர்ணக் கிளி இருந்தது. அதன் பெயர் விதக்தசூடாமணி என்பது ஆகும். அதற்கு எல்லா

சாஸ்திரங்களும், திரிகால ஞானமும் தெரியும்; அதனால் அது நல்ல அறிவும் கூரிய புத்தியும் கொண்டிருந்தது.

அந்தக் கிளியின் யோசனைப்படியே அவ்வரசன் தனக்குச் சரிசமானமான அந்தஸ்துடைய மகத நாட்டு ராஜ குடும்பத்தைச் சேர்ந்த சந்திரபிரபை என்பவளை மணந்து கொண்டான். அரசியும் ஒரு நாகண வாய்ப் புள் (மைனா) ஒன்றை வளர்த்து வந்தாள். சோமிகை என்ற பெயர் கொண்ட அந்த மைனா கிளியைப் போலவே அறிவும் விவேகமும் வாய்ந்திருந்தது.

இவ்விடம் வந்த பிறகு கிளியும் மைனாவும் ஒரு கூட்டில் சேர்ந்து வாழ்ந்து, தங்கள் விவேக புத்தியில் அரசனையும், அரசியையும் களிப்பித்து வந்தன. ஒருநாள் கிளி தன் சகாவான மைனாவிடம் ஆசைகொண்டு, அதைப் பார்த்து, "நாம் இருவரும் ஒரே கூண்டில் இருந்து சாப்பிட்டுத் தூங்குகின்றோம். ஆகவே நீ என்னை மணந்து விடு," என்று கேட்டது. அதற்கு மைனா, "எல்லா ஆண்களுமே நன்றி கெட்டவர்கள்; கொடூர சித்தம் படைத்தவர்கள். ஆகவே, நான் எந்த ஆணையும் மணக்க விரும்பவில்லை," என்று பதில் சொல்லிவிட்டது. கிளியோ, "எல்லா ஆண்களும் கொடியவர் என்று கூறுவது உண்மையல்ல. பெண்களே கொடிய குணமும், குரூர மனமும் உடையவர்கள்" என்று சுடச்சுடப் பதில் அளித்தது.

இரண்டுக்கும் இடையே பெருத்த விவாதம் மூண்டு விட்டது. கடைசியில் இரண்டும் ஓர் ஒப்பந்தத்துக்கு வந்தன. தங்களுக்கிடையே உள்ள விவாதத்தை அரசனிடம் தெரிவித்து, அவன் தீர்ப்புக்கு விட்டுவிடவேண்டும். கிளி ஜெயித்து விட்டால், மைனா உடனே கிளியை மணந்து கொள்ள வேண்டும், மைனா ஜெயித்து விட்டாலோ கிளி அதற்கு அடிமையாகி விடவேண்டும்.

ஆஸ்தான மண்டபத்தில் இருந்த அரசன் அவ்விரு பறவைகளின் விவாதத்தைக் கேட்டான். உடனே மைனாவை நோக்கி, "ஆண்கள் எப்படி நன்றி கெட்டவர்களாவார்கள்? சொல்" என்று வினவினான். "கேளுங்கள் அரசே!" என்று மைனா சொல்லி ஆண்களின் குற்றங்களை எடுத்துக் காட்டி தன் கட்சியை நிரூபிக்கப் பின்வரும் கதையைக் கூறியது.

"காமாந்தகி என்ற பெயர் கொண்ட புராதன நகரம் ஒன்று இருக்கிறது. அங்கே அர்த்ததத்தன் என்னும் வியாபாரி ஒருவன் இருந்தான். அவன் மிக்க பணக்காரன். அவனுக்கு ஒரு மகன் உண்டு. அவன் பெயர் தனதத்தன் என்பது. காலக்கிரமத்தில் தந்தை இறந்த பிறகு, மகன் ஊதாரித்தனமாகச் செலவு செய்து வந்தான். தூர்த்தர்கள் சூழ்ந்து கொண்டு அவனை சூதாட்டத்திலும்,

...று துன்மார்க்கங்களிலும் அமிழ்த்தி விட்டார்கள். கெட்ட ...தை என்னும் மரத்துக்குத் துஷ்ட சகவாசமே வேராகும் ...ரே? சிறிது காலத்திலே அவன் செல்வம் முழுவதும் கரைந்து ...து. தன் ஏழ்மையைக் கண்டு வெட்கி, சொந்த நாட்டிலே ... பிடிக்காமல், அவன் வெளி நாடுகளிலே சஞ்சாரம் ... புறப்பட்டு விட்டான்.

"அவ்விதம் அவன் சுற்றி வரும்போது ஒரு சமயம் சந்தனபுரம் ...றும் நகரத்தை அடைந்தான். அங்கே சாப்பாட்டை வேண்டி ... வியாபாரியின் வீட்டுக்குள் அவன் நுழைந்தான். தெய்வ ...மாக அந்த வியாபாரி அவனுடைய அழகையும் இளமையையும் ...டு உள்ளம் பூரித்து அவனைப்பற்றி விசாரித்தார். அவன் ... குடியில் பிறந்தவன் என்பதையறிந்து வியாபாரி ...தத்தனை உபசரித்துத் தம் பராமரிப்பிலே வைத்துக் ...ண்டார்; ஏராளமான சீதனத்துடன் தம் மகள் ...த்திருவளியையும் அவனுக்கு மணம் செய்து கொடுத்தார். அதற்குப் பிறகு தனதத்தன் தன் மாமனார் வீட்டோடு ...ளக்கியமாக இருந்து வந்தான்.

"சில நாட்களிலே அவன் தனக்கு ஏற்பட்டிருந்த இந்தச் ...ந்தோஷத்தில் பழைய கஷ்டங்களையெல்லாம் மறந்து விட்டான். ...ல்வம் மறுபடியும் சேரவே, பழையபடியே அவன் ...தாரித்தனமாகச் செலவு செய்ய ஆசை கொண்டான். அதனால் அவன் திரும்பவும் தன் சொந்த ஊருக்கே போய்விட ...ரும்பினான். அந்த தூர்த்தன் தன் மாமனாரைத் தொந்திரவு ...ய்ய ஆரம்பித்தான். மாமனாருக்கு அந்தப் பெண்தான் ஒரு ...ழந்தை. எனினும் தொந்திரவு தாங்காமல் கடைசியில் மாமனாரும் ஒப்புக் கொண்டார். அவர் தம் பெண்ணுக்கு ...ல்லாவித நகைகளையும் போட்டு அலங்கரித்து ஏராளமான ...தனத்தோடு அவளை மாப்பிள்ளையுடன் அனுப்பினார். கூடவே அவர்களுக்கு உதவியாக ஒரு கிழவியையும் அனுப்பி வைத்தார். ...வரும் கிளம்பிச் சென்றார்கள்.

"நெடுந்தூரம் நடந்து அவர்கள் வழியிலே ஒரு காட்டை அடைந்தார்கள். அங்கே திருடர் பயம் உண்டு என்று சாக்குக்கூறி தனதத்தன் தன் மனைவியின் நகைகளையெல்லாம் கழற்றிவிடச் சொல்லி அவற்றைத் தன் வசப்படுத்திக் கொண்டான். சூதாடுவது ...ள்ளக்காதல் புரிவது முதலிய தொழில்களில் ஈடுபட்ட ஆண்கள், மனம் இரும்பு போல இறுகி, நன்றி கெட்டு, எவ்வளவு கேவலமான ...டத்தைக்கும் இழிந்து விடுவார்கள் என்பது இதனால் விளங்கவில்லையா?



"அந்த நீசன், தன் மனைவி எவ்வளவோ சீலவதியாக இருந்தும் அவளுடைய செல்வத்துக்கு ஆசைப்பட்டு, அவளைக் கொன்றுவிட முடிவு செய்தான். அதே போலத் தன் மனைவி யையும் கிழவியையும் பாதாளமான ஒரு படுகுழியில் தள்ளி விட்டுத் தன் வழியே அவன் போய்விட்டான். விழுந்த வேகத்தில் கிழவி இறந்துவிட்டாள். ஆயினும் அவன் மனைவி கொடிகளில் சிக்கியதால் உயிர் துறக்கவில்லை. அவளுக்கு விதித்திருந்த காலம் முடியவில்லை. துக்கம் தாளாமல் அழுது கொண்டே அவள் கோரைகளையும், கொடிகளையும் பிடித்துக்கொண்டு மெதுவாகக் கரையேறினாள். அங்கங்கே விசாரித்து வழிகேட்டுக் கொண்டு அவள் தன் பிறந்தகம் வந்து சேர்ந்தாள்.

"திடீரென்று அவள் இந்த நிலையில் திரும்பி வந்ததைக் கண்ட அவளுடைய பெற்றோர்கள் நடந்ததைப் பற்றி ஆவலோடு விசாரித்தார்கள். சீலவதியான அவள், தன் புருஷனுடைய குற்றத்தை வெளியிட விரும்பவில்லை. ஆகவே அவள் பின்வருமாறு தெரிவித்தாள். "வழியில் கொள்ளைக்காரர் எங்களைத் தாக்கி, என் புருஷனை கட்டிப்பிடித்து இழுத்துச் சென்றுவிட்டனர். கிழவி இறந்து விட்டாள். நான் ஒரு பகுதியில் விழுந்ததால் உயிர் தப்பினேன். அந்த வழியாகச் சென்ற வழிப்போக்கன் ஒருவன் என்மீது தயை கூர்ந்து என்னைப் பள்ளத்திலிருந்து கரையேற்றி விட்டான். நான் உயிருடன் இருக்க வேண்டுமென்று என் தலையில் எழுதியிருக்கிறது. பிழைத்து இவ்விடம் வந்து சேர்ந்தேன்."

"அவள் வார்த்தைகளைக் கேட்ட அவளுடைய பெற்றோர்கள் அவளைப் பெரிதும் தேற்றினர். அவளும் ஓடிப்போன தன் கணவன் நினைவாகவே பிறந்தகத்தில் தங்கியிருந்தாள்.

"சொந்த ஊர் திரும்பிய தனதத்தன் கொஞ்ச காலத்தில் தான் கொணர்ந்த செல்வம் முழுவதையும் சூதாடித் தொலைத்து விட்டான். ஆகவே அவன் மறுபடியும் தன் மாமனாரிடம் சென்று அவரிடத்திலிருந்து பணத்தை பெற்றுவர நினைத்தான். அவர் தம் பெண்ணைப் பற்றி விசாரிக்கும் போது அவளை ஊரிலே விட்டு வந்திருப்பதாகக் கூறிவிடலாம் என்றும் அவன் தீர்மானித்தான். இவ்விதம் முடிவு செய்து அவன் மாமனார் வீட்டை நோக்கி வந்தான்.

"அவன் தூரத்தில் வருவதைக் கண்ட அவன் மனைவி ஓடி வந்தாள். கணவன் எவ்வளவு கொடியவனாக இருந்தாலும் மனைவிக்கு அவனிடம் உள்ள அன்பும் பாசமும் குறையவே குறையாது. ஆகவே தன் கணவன் பெரிய துரோகியாக இருந்தும் அவள் அதைப் பொருட்படுத்தாது, அவன் கால்களில் விழுந்தாள்.

"தன் மனைவியைக் கண்டதும் அவன் மிரண்டு விட்டான். தன் கொடுமை வெளிப்பட்டு விட்டதோ என்று பயந்தான். ஆனால், அவன் மனைவியோ, தன்னுடைய தந்தையாரிடம் கூறியது அனைத்தையும் தெரிவித்து, அவனுடைய பயத்தை போக்கித் தைரியம் ஊட்டினாள். அவனும் பயமில்லாமல் மாமனார் வீடு வந்தான். அவனைக் கண்டதும் மாமனாரும், மாமியாரும் நிரம்பவும் சந்தோஷமடைந்து அவனை வரவேற்றார்கள். பெரிதும் மனமகிழ்ந்து உற்றார் உறவினர், எல்லோரையும் அழைத்துப் பெரும் விருந்து வைத்து, அந்த வைபவத்தைக் கொண்டாடினார். அதிர்ஷ்டவசமாகத் திருடர்கள் கையில் சிக்கிய தம்முடைய மாப்பிள்ளை மீண்டும் உயிருடன் திரும்பி வந்தான் என்று அவர் எண்ணினார்.

"அதற்குப் பிறகு, தனதத்தன் தன் மனைவியான ரத்தினவள்ளியுடன் மாமனார் வீட்டிலேயே சௌக்கியமாக வாழ்ந்து வந்தான். ஆயினும் அவனால் சும்மாயிருக்க முடியவில்லை. ஒருநாள் இரவு, அவன் நன்றிகெட்டு செய்ததைச் சொல்லவும் கூசுகிறது. இருந்தாலும் சொல்லத்தானே வேண்டியிருக்கிறது? தன்னையணைத்துப் படுத்திருந்த மனைவியையே அவன் ஒருநாள் இரவு கொன்றுபோட்டு அவள் ஆபரணங்களையெல்லாம் கழற்றிக் கொண்டு ஓடிப்போய் விட்டான். இப்படிப்பட்ட கொடிய சித்தம் படைத்தவர் ஆண்கள்."

இவ்விதம் மைனு தன் கதையைக் கூறி முடித்ததும் அரசன் கிளியைப் பார்த்து. "நீ என்ன சொல்கிருய்?" என்று கேட்டான்.

உடனே கிளி மன்னனைப் பார்த்து. "அரசே பெண்கள் தாங்கமுடியாத துடுக்குத்தனம், துணிவு, சோரத்தனம், கொடுமை, ஆகியவை வாய்ந்தவர்கள். இதை விளக்கும் பின்வரும் கதையைக் கேளுங்கள்" என்று ஆரம்பித்தது:

"ஹர்ஷவதி என்ற நகரம் ஒன்று இருக்கிறது. அந்நகரிலே தர்மதத்தன் என்னும் பிரபல வியாபாரி ஒருவர் இருந்தார். அவருக்குக் கோடிக்கணக்காகச் சொத்துகள் இருந்தன. அவருக்கு வசுதத்தை என்ற பெண்ணொருத்தி இருந்தாள். அவர் அவளைத் தம் உயிரினும் அதிகமாக நேசித்தார். தங்களுக்கு சரிசமமான அந்தஸ்துள்ள சமுத்திரதத்தன் என்பவனுக்கு அவளை மணம் செய்து கொடுத்தார் தகப்பனுர். "மணமகன் தாம்பரலிப்தி என்னும் நகரத்தைச் சேர்ந்தவன்; இளமையும் செல்வமும் ஒருங்கே சேரப்பெற்றவன். கண்டோர் காமுறும் வண்ணம் கண்ணுக்கு ஒரு விருந்தாக அவன் நல்ல அழகு வாய்ந்தவன்.

"ஒரு சமயம் அவள் புருஷன் தன் சொந்த நாட்டில் இருக்க, வசுதத்தை பிறந்தகம் வந்திருந்தாள். அப்போது ஒருநாள் அவள் நல்ல அழகுடன் கட்டிளங் காளையான இளைஞன் ஒருவனைத் தூரத்திலிருந்து பார்த்தாள். உடனே மாரன் கணை அவளைத் தாக்கியது. ஆகவே, அவள் தாதி ஒருத்தி மூலம் அந்த இளைஞனைத் தன் கள்ளக் காதலனுக ஏற்பாடு செய்து கொண்டாள். அது முதல் அவள் ஒவ்வோர் இரவையும் அவனுடன் கழித்து வந்தாள்.

"ஆனல் திடீரென்று அவள் கணவன் ஒருநாள் அவ்விடம் வந்து சேர்ந்தான். அவனுடைய பெற்றேர்கள் அவன் வரவைக் கண்டு நிரம்பவும் சந்தோஷம் கொண்டார்கள். தங்கள் பெண்ணை நன்ருக ஆடையாபரணங்களால் அலங்கரித்தார்கள். தன் தாய் எவ்வளவோ நல்ல வார்த்தைகள் சொல்லியும், வசுதத்தை தன் புருஷன் மனசைக் களிப்பிக்க ஒரு வார்த்தையும் பேசவில்லை. புருஷனே வலுவில் வந்து பேச முயன்ற போதும். அவள் மனம் வேறு ஒருவன் மீது இருந்ததால், தான் தூங்குவது போலப் பாசாங்கு செய்தாள். பாவம்; அவள் புருஷனும் வழிநடைக் களைப்பாலும், சாப்பாட்டு மயக்கத்தாலும் கண்சுழலச் சீக்கிரமாகவே தூங்கிப்போய் விட்டான்.

"இதற்கிடையில், அந்த வீட்டில் உள்ளவர்கள் யாவரும் சாப்பிட்டுப் படுத்துத் தூங்கி விட்டதையறிந்த ஒரு திருடன் சுவரில் கன்னம் வைத்து வழியுண்டாக்கி, வசுதத்தையும், அவள் கணவனும் படுத்துத் தூங்கும் அறையுள் நுழைந்தான். அதே

சமயம் அவள் படுக்கையை விட்டு எழுந்து, திருடன் வந்திருப்பதைக் கவனிக்காமல் வெளியே கிளம்பினாள். தன் காதலனை அடைவதற்காகத்தான் அவள் அவ்விதம் புறப்பட்டாள்.

"திருடனுக்கோ இதைக் கண்டவுடன் முதலில் பயமும் பின்னால் ஏமாற்றமும் ஏற்பட்டன. அவன் திருட வந்த நகைகளை யெல்லாம் அவள், புருஷன் வந்ததையொட்டி, தன் உடலிலே அணிந்திருந்தாள்.

"ஆகவே, அவன் "நான் திருட வந்த நகைகளை அவள் அணிந்து கொண்டு, சர்வாபரண பூஷிதையாக இந்த நள்ளிரவில் எங்கேயோ கிளம்பிவிட்டாளே. அவள் எங்கே போகிறாள் என்பதைக் கவனிக்க வேண்டும்" என்று நினைத்துக் கொண்டான். உடனே திருடனும் தன்னைப் பிறர் கவனியாதபடி வசுதத்தையை அவள் அறியாமல் பின் தொடர்ந்தான்.

வசுதத்தையோ, மலர் போன்ற பொருள்களை எடுத்துக் கொண்டு தன் கள்ளக் காதல் ரகசியத்தையறிந்த தாதி ஒருத்தி பின் தொடர, நகர்ப்புறத்தை அடைந்து அங்கிருந்த ஒரு தோட்டத்திற்குள் நுழைந்தாள். அங்கே அவனை அடைவதற்காகத்



தோட்டத்துக்கு வந்திருந்த அவளுடைய கள்ளக் காதலன் கழுத்திலே கயிற்றுடன் மரத்திலே பிணமாகத் தொங்கிக் கொண்டிருந்தான். நள்ளிரவில் பிறர் அறியாமல் ரகசியமாக நடமாடிய அவனைத் திருடன் என்று நகர காவலாளிகள் சந்தேகப்பட்டுப் பிடித்துத் தூக்கிலிட்டு விட்டார்கள்.

அதைக் கண்ட வசுதத்தை துயரம் தாங்காமல் கீழே விழுந்து புரண்டு அழுது புலம்பினாள். அப்பால் தன் காதலன் உடலை மரத்திலிருந்து இறக்கிப் பக்கத்தில் சார்த்தி, தான் கொணர்ந்திருந்த சந்தன புஷ்பங்களாலும், மாலைகளாலும் பிரேதத்தை அலங்கரித்தாள். அவள் உள்ளத்தில் அடங்கிக் கிடந்த ஆசையையும் துக்கத்தையும் கொட்டித் தன் காதலன் உடலைத் தழுவி முத்தமிட்டாள். அந்தச் சமயம் அவன் உடலில் புகுந்திருந்த வேதாளம் ஒன்று, சட்டென்று அவள் மூக்கைக் கடித்துத் துண்டித்து விட்டது. அவள் கலவரம் அடைந்து வலி பொறுக்காமல் அவ்விடத்தை விட்டுப் போய்விட்டாள். ஆயினும் அவள் ஆசை குறையவில்லை. உயிரோடு இருக்கிறானா, அவனைப் பிழைக்க வைக்க முடியுமா என்று கவனித்துப் பார்த்தாள்: அந்த உடலில் புகுந்திருந்த வேதாளம் வெளியேறிவிட்டது. ஆகவே அந்த உடல் விறைத்துக் கிடந்தது. தனக்கு நேர்ந்த துக்கத்தையும், அவமானத்தையும் நினைத்து மனம் தாளாமல் அழுது கொண்டே வசுதத்தை தன் வீடு திரும்பினாள்.

"இவைகளை எல்லாம் மறைந்து கொண்டே பார்த்திருந்த திருடன், ஐயோ இந்தப் பாதகி என்ன காரியம் செய்தாள்? பெண் மனத்தின் ஆழத்தைக் காண முடியாது என்று சொல்வார்களே, அது முற்றிலும் உண்மையே. அவள் இன்னமும் என்ன செய்யப் போகிறாளோ?" என்று தனக்குத் தானே எண்ணிக் கொண்டான். மேலே அவள் என்ன செய்யப் போகிறாள் என்பதை அறிய ஆவல் உள்ளவனாகத் திருடன் மறுபடியும் சிறிது எட்டியே அவளைப் பின் தொடர்ந்து சென்றான்.

"வீட்டில் தன் படுக்கை அறையை அடைந்ததும் தன் கணவன் ஆழ்ந்த நித்திரையில் இருப்பதைக் கண்டாள் வசுதத்தை. உடனே அவள், "ஐயோ! நான் ஒன்றும் செய்யாமல் இருக்கையிலேயே என் புருஷன் என்று சொல்லிக் கொள்ளும் இந்த மகா பாவி பாக்கு வெட்டியில் என் மூக்கை அறுத்து விட்டானே!" என்று ஓலமிட்டுப் பெருங்கூச்சலைக் கிளப்பினாள். இந்த சத்தத்தைக் கேட்டு அவளுடைய கணவனும் தாய் தந்தையரும் வேலைக்காரர்களும் திடுக்கிட்டு எழுந்தனர். வசுதத்தையோ அலறிக்கொண்டே இருந்தாள். இதைக் கேட்ட அவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. திக்பிரமை பிடித்தவர்களைப் போல சிறிது நேரம் நின்றார்கள். இதற்குள் அவளுடைய மூக்கு அறுபட்டு அதிலிருந்து ரத்தம் ஒழுகுவதைக் கண்ட அவள் தகப்பனார் தன் மகள் போட்ட கூச்சல் உண்மையானது என்றே நம்பி விட்டார். உடனே அவர் தம் மாப்பிள்ளையைப் பிடித்துக் கயிறு கொண்டு கட்டித் துன்புறுத்த ஆரம்பித்தார். அவ்விடம் கூடியிருந்தவர்கள் எல்லோரும்

மாப்பிள்ளை தீங்கிழைத்தவன் என்றே கருதி விட்டார்கள். அதனால் அவனும் வாயைத் திறக்காமல் மௌனமாகவே அவ்வளவிற்கும் உட்பட்டிருந்தான்.

"'இவைகளையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த திருடன் சந்தடி செய்யாமல் நழுவி விட்டான். இரவுப் பொழுதும் இந்த அமளியிலேயே கழிந்தது. மறுநாள் பொழுது விடிந்ததும், பெண்ணின் தகப்பனார் மூக்கறுக்கப்பட்ட தம் பெண்ணையும் மாப்பிள்ளையையும் மற்றவர்களையும் ராஜசபைக்கு அழைத்துச்சென்று மன்னனிடம் முறையிட்டார். அரசனும் அதை விசாரித்தான். மாப்பிள்ளை கூறியதை மன்னன் நம்பவில்லை; அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே தள்ளி விட்டான். மற்றவர்கள் கூறியதைக் கேட்டு அவனே குற்றவாளியென்று நீதியின் காவலன் தீர்மானித்தான். யாதும் அறியாத மனைவியின் மூக்கை அறுக்கத் துணிந்த அவனுக்கு மரண தண்டனையே ஏற்றது என்று விதிக்கப்பட்டது.

"நகர வீதிகளில் தண்டோராப் போட்டு மாப்பிள்ளையைக் கொலைகளத்திற்கு இட்டுச் செல்லும்போது, அங்கே வந்திருந்த திருடன் ராஜ சேவகர்களை அணுகி "அகாரணமாக இந்த நிரபராதியை கொலையை செய்யாதீர்கள். இந்த வழக்கின் விபரம் முழுவதையும் நான் அறிவேன். என்னை அரசனிடம் அழைத்துச் செல்லுங்கள். எல்லாவற்றையும் நான் அவரிடம் எடுத்துச் சொல்லுகிறேன்" என்று தெரிவித்துக் கொண்டான்.

"உடனே சேவகர்கள் திருடனை ராஜனிடம் அழைத்துச் சென்றார்கள். திருடன் முதலிலே அரசனிடம் தன்னுடைய குற்றத்திற்கு மன்னிப்பைப் பெற்று கொண்டான். பிறகு முதல் நாள் இரவு நடந்ததனைத்தையும், திருடன் ஒன்று விடாமல் சொன்னான். "என் வார்த்தைகளில் நம்பிக்கை இல்லையானாலும், இந்தப் பெண்ணின் அறுபட்ட மூக்கு அந்தப் பிணத்தின் வாய்க்குள் இருப்பதை பார்த்தாலாவது, விளங்காதா?" என்று வேண்டினான். அரசனும் அதே போல் ஆட்களை அனுப்பி சோதிக்கச் செய்தான். திருடன் கூறியது உண்மையாகவே இருந்தது. உடனே மாப்பிள்ளையை விடுதலை செய்து விட்டு அவனுடைய பத்தினியின் காதுகளையும் அறுத்து அவளை நாட்டை விட்டுத் துரத்தி விட்டான். அவளுடைய பெற்றோர்களின் சொத்துகளையும் பறிமுதல் செய்தான். திருடனுடைய நடத்தைக்கு மெச்சி, அவனை நகரக் கொத்தவாலாகவும் நியமித்தான்."

இவ்வாறு கதையைக் கூறிய கிளி, மன்னனைப் பார்த்து, "இதிலிருந்து பெண்கள் வஞ்சகமும் கொடுமையும் வாய்ந்தவர்கள் என்பது விளங்கவில்லையா?" என்று கேட்டது.

கிளி இவ்விதம் கதையைக் கூறி முடித்தவுடன் அதற்கு இந்திரனால் ஏற்பட்டிருந்த சாபம் நீங்கிவிட்டது. சித்திரரதன் என்னும் கந்தர்வனே சாபத்தால் அவ்விதம் வந்திருந்தான். அவன் பழைய கந்தர்வ உருவத்தைப் பெற்றுப் பறந்து போய் விட்டான். அதே சமயம் மைனாவாக வந்த திலோத்தமையும் தன் சாபம் நீங்கி அப்சரஸாக மாறி வானுலகம் சென்றுவிட்டாள். இதனால் வழக்கு முடிவு ஏற்படாமலே போயிற்று.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி முடித்து "பூலோக மகாராஜரே! மேற்கூறிய இரண்டு கதைகளில் வரும் புருஷன் மனைவியான ஆண், பெண் ஆகிய இருவருள் யார் அதிகம் மோசமானவர் என்பதை நீர்தான் முடிவு செய்ய வேண்டும். தெரிந்து கொண்டே சொல்லாவிட்டால் உம் தலை நூறு சுக்கலாக வெடித்துவிடும்!" என்றது.

தன் தோளில் சுமந்து வந்த வேதாளம், இந்தக் கேள்வியை கேட்டவுடனே விக்கிரமாதித்தனும், "மந்திரவாதிகளுக்குள் சிரேஷ்டமான வேதாளமே! பெண் தான் மோசமானவள். மனைவியை புருஷன் கொடுமைப்படுத்துவதை விட, புருஷனை மனைவி கொடுமைப்படுத்தும் செயல்தான் மிகவும் அதர்மமானது. ஆண்களில் சிலர் ஏதோ ஒரு சமயம் கொடிய சித்தம் படைத்தவர்களாக இருப்பார்கள். ஆயினும் பெண்கள் பொதுவாக எங்கேயும் அப்படித்தான் இருப்பார்கள்!" என்று பதில் கூறினான்.

இதைக் கேட்ட வேதாளம் விக்கிரமாதித்தன் தோளிலிருந்து முன்போலவே மறைந்து விட்டது. அரசனும் அதைப் பிடித்துவர முருங்கமரத்திற்கு திரும்பினான்.

(தமிழ்ப் பாடத்தில் இந்தக் கதை சிறு மாறுதல்களுடன் காணப்படுகிறது. கிளி, மைனா என்பதற்குப் பதிலாக, ஆண் கிளி, பெண் கிளி என்றும், சந்திரபிரபை என்பதற்கு இராக்கசி எனவும், காமாந்தகி என்பதற்கு அபயஸ்தம் எனவும், அர்த்ததத்தன் என்பதற்கு வீர தார்மீகஞ் செட்டியார் எனவும், தனதத்தன் என்பதற்கு தர்க்கசேகன் எனவும், சந்தனபுரம் என்பதற்கு அழகாபுரம் எனவும், இரத்தினாவளி என்பதற்கு அலங்காரி எனவும், ஹர்ஷவதி என்பதற்கு அரிஷ்டாபுரம் எனவும், தர்மதத்தன் என்பதற்கு கனவர்த்தன் எனவும் மாறுபாடுகள் உள்ளன.)

# 7. வீரவரன் கதை



விக்கிரமாதித்தன் அந்த நள்ளிரவிலே மறுபடியும் மயானத்தில் உள்ள வேதாளத்தைக் கட்டிப் பிடித்துத் தூக்கித் தோள்மீது சுமந்து கொண்டு வரும்போது, வேதாளம் பின்வரும் கதையைச் சொல்லியது:

சோபாவதி என்றொரு பட்டணம் இருந்தது. அங்கே ஒரு சமயம் சூத்ரகன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவன் மகா பராக்கிரமசாலி. அவன் வீரத்தைக் கண்டு எதிரிகள் பயந்து அவனுக்கு அடங்கிவிட்டார்கள். நேர்மையுடன் அவன் அரசு புரிவதைக் கண்ட பூமிதேவியும் மற்ற அரசர்களையெல்லாம் மறந்துவிட்டாள்; அவனையே தன் நாயகனுகக் கொண்டாள்.

ஒருநாள் வீரவரன் என்பவன் வீரர்களையே வரிக்கும் அந்த அரசனிடம் சேவகம் செய்வதற்காக மாளவதேசம் வந்து சேர்ந்தான். அவன் மனைவி பெயர் தர்மவதி என்பதாகும். அவர்களுக்கு சத்வவரன் என்ற ஒரு மகனும், வீரவதி என்ற ஒரு மகளும் இருந்தார்கள்.

அவன் ஒரு கையில் கத்தியையும், மற்றொரு கையில் கேடயத்தையும் இடுப்பிலே உடைவாளையுமே கொண்டிருந்தான். அவன் ஒரு நாளைக்கு ஐநூறு தினாரங்கள் சம்பளம் வேண்டுமென்று அரசனைக் கேட்டான். அவன் மிகுந்த பராக்கிரமம் வாய்ந்தவன் என்பதைத் தோற்றத்தால் அறிந்த அரசனும் அதற்குச் சம்மதித்தான். ஆயினும் குடும்ப பாரம் அதிகம் இல்லாத அவனுக்கு அவ்வளவு பணம் எதற்கு என்பதை அறிய அரசனுக்கு ஆசை ஏற்பட்டது. அந்தப் பணத்தை அவன் நல்ல வழியில் செலவழிக்கிருனு, கெட்ட வழியிலே செலவழிக்கிருனு என்பதைத்

தெரிந்து கொள்ளவும் விரும்பினுன். ஆகவே. அவன் எப்படி வாழ்க்கை நடத்துகிருன் என்பதை இரகசியமாகக் கவனித்து வர ஒற்றர்களை ஏவினுன்.

வீரவரன் தினந்தோறும் காலையிலே அரசனை பேட்டி கண்ட பிறகு. உருவிய கத்தியுடன் உச்சிப்பொழுது வரையில், அரண்மனை வாசலில் காவல் புரிந்து வருவான்: அதற்குப் பின் அவன் வீடு அடைந்து, தன் மனைவியின் கையில் சாப்பாட்டுச் செலவுக்கு காசு நூறு பொன்னைக் கொடுப்பான். மற்ருெரு நூறு பொன்னுக்கு அவன் துணிமணிகளையும், வெற்றிலை, வாசனைத் திரவியங்களையும் வாங்குவான். தெய்வ பூஜைக்காக நூறு பொன்னைச் செலவழிப்பான். மீதி இருநூறு பொன்னையும் ஏழை எளியவர்களுக்குத் தானம் செய்துவிடுவான். இவ்விதம் நாள்தோறும் அவன் தான் பெற்று வந்த ஐநூறு பொன்களையும் செலவு செய்துவிடுவான். அதற்குப் பிறகே அவன் ஹோமம் வளர்த்து நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு சாப்பிடுவான். மறுபடியும், அவன் வெளிக் கிளம்பி, அரண்மனை அடைந்து இரவு நேரத்தில் உருவிய கத்தியுடன் தனியாகக் காவல் புரிவான்.

வீரவரன் இவ்விதம் வாழ்க்கை நடத்தி வந்தான் என்பதை ஒற்றர்கள் மூலம் அறிந்த மன்னன் சந்தோஷப்பட்டு அவனுடைய நடமாட்டத்தை அதற்கு மேல் வேவு பார்க்க வேண்டாம் என்று தடுத்துவிட்டான். அவ்விதம் செய்வது வீரனுடைய கௌரவத்திற்கே இழுக்காகும் என்று மன்னன் நினைத்தான்.

காலம் சுழன்றது. கோடை போய் மழைக் காலம் வந்தது. வானமே பொத்துக்கொண்டது போல் அடை மழை பிடித்துக் கொண்டது; கூரிய கத்தி முனை போல உடலில் பட்ட இடத்தில் "சுரீர்" என்று தாக்கியது. எனினும் வீரவர்மன் அதை லக்ஷ்யம் செய்யவில்லை. வழக்கம் போலவே அரண்மனை மேன்மாடத்தி லிருந்து பகலில் கவனித்த அரசன், இரவு நேரத்திலும் அரண்மனை மேன் மாடத்திலிருந்து, "ஆசாரவாசலில் யார் காவல்?" என்று கூப்பிட்டுக் கேட்டான். வீரவரனும் "அடியேன் இருக்கிறேன் மகாராஜா!" என்று தெரிவித்தான்.

இதைக் கேட்ட மன்னன் "என் சேவகத்திலே கொஞ்சமும் வழுவாமல் வீரவரன் உறுதியோடு இருக்கிருன். இவ்வளவு எஜமான விசுவாசம் உள்ள அவனுக்கு மேற்பதவியளிக்க வேண்டுவது அவசியம்" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு சென்ருன்.

மறுநாளும் சூரியன் தெரியவே இல்லை. மழை கொட்டிக் கொண்டே இருந்தது. அன்று இரவும் அரசன் அரண்மனை

அரண்மாடத்திற்குச் சென்று ஆசாரவாசலில் "யார் காவல்?" என்று கேட்டான். வழக்கம் போலவே, வீரவரனும் தான் இருப்பதாகத் தெரிவித்தான். இதைக் கேட்ட மன்னன் அவனுடைய தைரியத்தை மெச்சி சந்தோஷமடைந்தான். அப்போது அவன் கவனத்தை வேறொன்று இழுத்தது.

பரிதாபமான குரலில் யாரோ பெண் அழும் சப்தம் கேட்டது. அந்தக் குரல் அரசனின் மனத்திலே இரக்கத்தை உண்டாக்கியது. "இந்நாட்டிலே கஷ்டப்படுகிறவர்கள், ஏழை முதலியோர் யாருமே இல்லாதிருக்க, இப்படி நள்ளிரவில் அழும் இந்தப் பெண் யார்?" என்று மன்னன் ஆச்சரியப்பட்டான். உடனே காவல் புரிந்து வந்த வீரவரனை அவன் கூப்பிட்டு, "தூரத்தில் யாரோ ஒரு பெண் அழும் குரல் கேட்கிறது. நீ போய் அவள் யார், எதற்காக அழுகிறாள்?" என்பதை அறிந்து வா" என்று கட்டளையிட்டான்.

"அப்படியே!" என்று கூறி வீரவரன் புறப்பட்டான். ஊழிக்காலந்தான் வந்துவிட்டதோவென இருள் கவ்வ, மேகங்கள் மறைந்து இருந்ததையும், இடியையும், மின்னலையும் கல்லை வீசுவதைப் போல மழைத் துளிகள் உடலைத் தாக்கியதையும் லட்சியம் செய்யாமல் வீரவரன் நடந்து சென்றான்.

இவ்விதம் அந்த நடுநிசியிலே வீரவரன் தனியாகப் புறப்பட்டதை அறிந்த அரசனுக்கு ஆச்சரியம், இரக்கம் இரண்டும் ஒருங்கே ஏற்பட்டன. ஆகவே, அவன் நடமாட்டத்தைக் கவனிப்பதற்காக அவனுக்குத் தெரியாமல் அரசனும் பின் தொடர்ந்து சென்றான். வீரவரனோ எதையும் பொருட்படுத்தாமல் சப்தம் வந்த திக்கிலே சென்று நகரத்துக்கு வெளியே போய் குளக்கரையை அடைந்தான். அங்கே நடுக்குளத்திலே ஒருத்தி, "ஐயா மகாவீரனே! தயாபரனே, தர்மவானே, உன்னைப் பிரிந்து நான் எப்படி வாழ்வேன்?" என்று அரற்றிக்கொண்டிருந்தாள். வீரவரன் அவளைப் பார்த்து, "யாரம்மா, நீங்கள்? எதற்காக இப்படி அழுகிறீர்கள்?" என்று கேட்டான்.

அதற்கு அவள், "வீரவரா! நான் பூமிதேவி! சூத்ரக மன்னன் தான் என் புருஷன். ஆனால் இன்றையிலிருந்து மூன்றாவது நாள் அவன் இறந்து விடுவான். அதற்குப் பிறகு அவனைப் போன்ற நாயகன் மறுபடியும் எனக்கு எவ்விதம் கிடைக்கப் போகிறான்? அதை நினைத்துத்தான் துக்கம் தாளாமல் நான் வருத்தப்படுகிறேன்" என்று பதில் அளித்தாள்.

இதைக் கேட்ட வீரவரன் திடுக்கிட்டான். அவன் உடலில் நடுக்கம் ஏற்பட்டது.

"தாயே! இவ்வுலகத்தையே ரக்ஷித்து வரும் இம்மன்னனுடைய மரணத்தைத் தவிர்ப்பதற்கு வழி ஏதும் இல்லையா?" என்று வீரவரன் கேட்டான்.

உடனே பூமிதேவி, "இருக்கிறது. இந்தக் கேட்டைத் தவிர்க்கும் மார்க்கம் ஒன்று உண்டு. அதை உன்னுலே தான் செய்து முடிக்க முடியும்."

"தாயே, அப்படியானுல் அதைத் தெரிவியுங்கள். இந்த க்ஷணத்திலேயே அதை முடித்து வைக்கிறேன். அதற்கில்லாமல் இந்த உயிர் வேறு எதற்குத்தான் இருக்கிறது?" என்று வீரவரன் வேண்டினுன்.

"உன்னைப் போன்ற தைரியசாலியும், எஜமான விசுவாசமும் உள்ளவனும் வேறு யார் கிடைப்பார்கள்? அரண்மனைக்குப் பக்கத்திலே வரப்பிரசாதையான சண்டிக்கு அரசன் ஒரு கோயில் எழுப்பியிருக்கிருன். அந்தச் சண்டிக்கு உன் மகனைப் பலி கொடுத்தாயானுல் அரசன் இன்னும் நூறு ஆண்டு வாழ்வான். அதை நீ உடனே செய்தாயானுல், அரசனுக்கு நேரிடவிருக்கும் கேடு நீங்கிவிடும். இல்லாவிட்டால் நிச்சயமாக இன்றையிலிருந்து மூன்ரும் நாள் அவன் இறந்து போவான்!"

பூமிதேவி இவ்விதம் கூறியதைக் கேட்ட வீரவரன், "தாயே, இதை இப்பொழுதே செய்து முடிக்கிறேன்" என்ருன். பூமிதேவியும் "உனக்கு வெற்றி கிட்டட்டும்" என்று கூறி மறைந்து போனுள்.

உடனே வீரவரனும் தன் வீட்டை நோக்கி கிளம்பினுன். அவனுக்குத் தெரியாமல் அவனைத் தொடர்ந்து வந்த மன்னன் இவ்வளவையும் கேட்டுக் கொண்டு தான் இருந்தான். ஆகவே வீரவரன் என்ன செய்யப் போகிருன் என்பதை அறிய ஆவல் கொண்டவனுய் முன்போலவே அவனைப் பின் தொடர்ந்தான்.

வீரவரன் வீட்டுக்குப் போய், தன் மனைவி தர்மவதியை எழுப்பிப் பூமிதேவி சொல்லியதைக் கூறினுன். அவளும் அதைக்கேட்டு "அரசருடைய நலனை நாம் கவனிக்க வேண்டும். ஆகவே குமாரனை எழுப்பி அவனிடம் விஷயத்தை நீங்களே சொல்லிவிடுங்கள்" என்ருள். அவனும் தன் மகனை எழுப்பி விஷயத்தைக் கூறி, "குழந்தாய்! சண்டிதேவிக்கு உன்னை பலியிட்டால் அரசன் நீண்டகாலம் உயிரோடிருப்பான் - இல்லாவிட்டால் அவன் மூன்ரும் நாள் இறந்து விடுவான்!" என்று சொன்னுன்.

இதைக் கேட்ட சத்வவரன் சிறு குழந்தையானுலும், தைரியமாகப் பின்வருமாறு சொன்னுன்: "என் உயிரைக்

கொடுத்து அரசனைக் காப்பாற்றக் கூடுமானால், எனக்குச் சகல பாக்கியங்களும் கிட்டிய மாதிரியே. ஆகவே காலதாமதம் செய்ய வேண்டாம். உடனே என்னை அழைத்துச் செல்லுங்கள்!" என்றான்.

சத்வவரன் இவ்விதம் கூறியதைக் கேட்ட அரசன் ஒருவருக்கொருவர் சளைப்பில்லை என்று தனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டான்.

பிறகு வீரவரன் தன் மகனைத் தன் தோள்மீது தூக்கிக் கொண்டு புறப்பட்டான். அவன் மனைவியான தர்மவதியும் தன் பெண்ணான வீரவதியை எடுத்துக் கொண்டாள். இருவருமாக அந்த நள்ளிரவிலே சண்டி தேவியின் கோவிலை அடைந்தார்கள். மன்னனும் அவர்களுக்குத் தெரியாமல் பின் தொடர்ந்தான்.

தேவியின் சந்நிதியில் தகப்பன் தன் தோளிலிருந்து மகனைக் கீழே இறக்கிவிட்டான். குமாரனும் மிக்க தைரியத்துடன் விக்கிரகத்தை வணங்கி, "தாயே! என் தலைப் பலியைக்கொண்டு மன்னன் உயிரைக் காப்பாற்று! இடையூறு ஏதுமில்லாமல் அவன் நூறாண்டு அரசு செலுத்தட்டும்!" என்று பிரார்த்தித்தான்.

இதைக் கேட்ட வீரவரன் தன் மகனுடைய உறுதிக்கு மெச்சி, வாளை உருவி அவன் தலையைக் கொய்து அம்பிகையின் பாதங்களில் சமர்ப்பித்து, "என் மகனைப் பலி கொடுத்துவிட்டேன். அரசன் உயிரைக் காக்கவேண்டும்" என்று வேண்டினான். உடனே அசரீரி ஒன்று, "வீரவரா, உன் தீரத்தை மெச்சினோம். உன்னைப் போல எஜமான விசுவாசம் உள்ளவன் யார்? உன்னுடைய ஒரே மகனைப் பலியிட்டதால் அரசனுக்குத் தீர்க்காயுளையும், ஸ்திரமான அரசையும் அளித்துவிட்டாய்!" என்று சொல்லியது.

அதற்குப் பிறகு வீரவரன் குமாரியான வீரவதி வந்து, துண்டிக்கப்பட்ட தன் தமையன் தலையைக் கட்டித் தழுவிக் கொண்டு அழுதாள். அவளுடைய அதிகமான துக்கத்தைப் பொறுக்காமல் அவள் இளம் உள்ளம் வெடித்து அவள் இறந்தாள்.

தர்மவதி அப்போது, தன் கணவனைப் பார்த்துப் பின்வருமாறு தெரிவித்தாள்: "அரசருடைய க்ஷேமத்தைக் கோரி நாம் செய்ய வேண்டியதைச் செய்தாகிவிட்டது. இப்போது நான் உங்களிடம் ஒன்று சொல்ல விரும்புகிறேன். என் மடமையால் அதைச் செய்யாமல் இருந்து விட்டேன். ஆகவே இப்போது குழந்தை உடல்களுடன் நானும் தீக்குளிக்க அனுமதிக்க வேண்டும்!"

அவள் தன் கோரிக்கையை வற்புறுத்திக் கூறவே, வீரவரனும் ஒருவாறு இணங்கினான். "அப்படியே செய். உனக்கு நற்கதி உண்டாகட்டும்! இனியும் உயிர் வாழ்வதால் குழந்தைகளை இழந்த

துக்கத்தால் வாடுவதைத் தவிர வேறு என்ன சந்தோஷம் உண்டாகப்போகிறது? ஆயினும் உன்னேயே பலியிட்டுக் கொள்ள வில்லேயே என்று வருத்தப்படாதே. நம் குமாரனேத் தவிர, வேறு யாரையாவது பலியிட்டாலும் காரியம் கைக்கூடுமென்றிருந்தால் நான் என்னேயே அர்ப்பணம் செய்திருக்கமாட்டேனே?"

இதைக் கூறிவிட்டு வீரவரன் கட்டைகளேச் சேர்த்து அடுக்கி இருகுழந்தைகளின் உடல்களேயும் அதன்மீது வைத்து ஒரு விளக்கிலிருந்து அந்த சிதைக்குத் தீ மூட்டினன். பிறகு தர்மவதி தன் கணவனே வணங்கிவிட்டு, "என் உயிரை தியாகம் செய்வதால், அரசனுக்கு எல்லா நன்மைகளும் ஏற்படட்டும். இப்போது என் கணவராக இருப்பவரே மறுப்பிறப்பிலும் என் கணவராக அனுக்கிரகிக்க வேண்டும்" என்று சண்டி தேவியை வேண்டினள். பிறகு கொழுந்து விட்டு எரியும் சிதையில் விழுந்து அவள் தன்னே மாய்த்துக்கொண்டாள்!

அதன் பின்னர் வீரவரன், "அசரீரி சொன்னப்படி அரசனுடைய க்ஷேமத்தைக் கோரிச் செய்ய வேண்டியதை செய்தாகிவிட்டது. நான் பாதுகாக்கவேண்டிய குடும்பத்தை பலி யிட்டு பிறகு தனியாக வாழ வேண்டிய அவசியமே இல்லே. நானும் என்னேத் துர்க்கைக்கு அர்ப்பணித்து அவளேத் திருப்தி செய்கிறேன்!" என்று தன் கத்தியின் ஒரே வீச்சால் தன் தலேயை துண்டித்துக் கொண்டான்.

இவ்வளவையும் மறைந்து பார்த்திருந்த மன்னன் பிரமித்து விட்டான். பிரமை, ஆச்சரியம், துக்கம் எல்லாம் சேர்ந்து அவனேத் திணறச் செய்தன. "இதுவரையிலும் யாரும் கேட்டோ பார்த்தோ அறியாத ஓர் அதிசயத்தை, செயற்கரிய தியாகத்தை எனக்காக இவனும், இவன் குடும்பத்தாரும் செய்திருக்கிருர்கள். பரந்த இவ்வுலகத்தில் எத்தனேயோ அதிசயங்களேக் காணலாம். ஆளுல் தன்னுடைய தியாகத்தை உலகம் அறியாமல் மறைத்து ரகசியமாக வைத்து அரசனுக்காக தன் உயிரையே கொடுக்கும் மனிதனேக் காண முடியுமா? இதற்குத் தக்க கைம்மாறு செய்யாவிட்டால், நான் அரசனுக இருப்பதில் என்ன பயன்? மிருகம்போல உயிர்வாழ்வதற்கே ஒப்பாகும்!"

இவ்விதம் நினேத்த மன்னன் உறையிலிருந்து கத்தியை உருவிக் கொண்டு தேவியை அணுகி, "தாயே, பெயருக்கு ஏற்ப அஞ்சா நெஞ்சுடன் எனக்காகத் தன் உயிரை தியாகம் செய்த வீரவரனே, அவன் குடும்பத்தாருடன் மறுபடியும் உயிர் பெற்றெழச் செய்தல் வேண்டும். உன்னேயே நம்பி இருக்கும் எனக்கு இந்த வரம் அளிக்காவிட்டால், நான் என் தலேயை

...க்கே அர்ப்பணித்து விடுவேன்" என்று வேண்டினான். ...விதம் சொல்லிவிட்டு அரசன் தன் தலையை துண்டிக்கத் ...னான்.

அதற்குள் மறுபடியும் அசரீரி வாக்குக் கேட்டது. ...அவசரப்பட்டு எதையும் செய்து விடாதே. உன்னுடைய ...யத்தை மெச்சினேன். வீரவரனும் அவன் பத்தினியும் ...குழந்தைகளும் மறுபடியும் உயிர் பெற்றெழுவார்கள்!"

இவ்விதம் தெரிவித்தவுடனே வீரவரனும் அவன் குடும்பத் ...தாரும் உயிர்பெற்றெழுந்தார்கள். அவர்களை உயிருடன் கண்ட ...அரசன் கண்களில் ஆனந்த பாஷ்பம் நிறைந்தது. அவர்களையே ...பார்த்துக் கொண்டு தன்னை மறைத்துக் கொண்டான்.

தூக்கத்திலிருந்து கண் விழித்தவன் போல எழுந்திருந்த ...வீரவரன் தன் மனைவி மக்களைக் கண்டதும் பிரமை ...கொண்டான். "சாம்பலாகப் போன நீங்கள் மறுபடியும் எவ்வாறு ...உயிர் பெற்றீர்கள்? நானும் தலையை வெட்டிக் கொண்டேனே! ...இது முழுதும் மாயையா? அல்லது தேவியின் அருளா?" என்று ...கேட்டான் வீரன்.

"தேவியின் அருளாலேதான் நம்மை அறியாமல் நாம் ஜீவன் ...பெற்றெழுந்தோம்" என்று பதில் அளித்தாள் பத்தினி.

அம்பிகையைத் தொழுது வணங்கி விட்டுத் தன் மனைவி ...மக்களுடன் வீடு திரும்பினான். வீட்டிலே அவர்களை விட்டு ...விட்டு, அவன் மறுபடியும் அரண்மனை வாசலையடைந்து வழக்கம் ...போல நின்று காவல் புரிய ஆரம்பித்தான். பிறர் அறியாமல் ...இவ்வளவையும் பார்த்துக் கொண்டிருந்த மன்னனும் ...அரண்மனையில் மாடத்திலிருந்து, "அரண்மனை வாசலில் காவல் ...யார்?" என்று கேட்டான். வீரவரனும், "அடியேன் தான் ...இருக்கிறேன், மகாராஜா, தாங்கள் ஆணைப்படி நான் அந்த ...ஸ்திரீயைத் தேடிச் சென்றேன். ஆனால் தோன்றியது போலவே ...அவள் திடீரென்று எங்கேயோ மறைந்து விட்டாள்!" என்றான்.

இதைக் கேட்ட அரசன் ஆச்சரியத்தால் திகைத்து விட்டான். நடந்தது முழுவதையும் அவன் தன் கண்ணால் நேரில் கண்டிருக்கிறான். "பிறருக்கு உதவி செய்தவர்கள் அது உயர்ந்த செயலாக இருந்தாலும் அதை வாய்விட்டுச் சொல்ல மாட்டார்கள்!" என்று மன்னர்பிரான் தன் மனதிலே நினைத்துக் கொண்டான்.

மறுநாள் காலை வழக்கம் போல வீரவரன். அரசன் ஆஸ்தானுக்கு வந்து மன்னனை வணங்கினான். அப்போது

மன்னனே தன் மந்திரிகளிடம் முதல் நாள் இரவு நடந்தது முழுவதையும் ஒன்றுவிடாமல் எடுத்துக் கூறினான். எல்லோரும் இடியுண்டவர் போல வாயைப் பிளந்து நின்றனர். இதனால் சந்தோஷம் அடைந்த மன்னன், அவர்கள் வீரத்துக்குப் பரிசாக வீரவரனுக்கும், அவன் மகனுக்கும் லாடதேசம் (கூர்ஜரம்) கர்நாடகம், ஆகிய இரண்டையும் அளித்து அந்தப் பிரதேசங் களுக்கு அவர்களை அரசர்களாக முடி சூட்டி வைத்தான்.

-இவ்விதம் ஆச்சரியம் மிக்க கதையைக் கூறிய வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "சொல்லுமையா, மகாராஜனே! இவர்களில் பராக்கிரமம் நிறைந்தவர் யார் என்பதைச் சொல்லும்! தெரிந்து கொண்டே சொல்லாமலிருந்தால் நான் தெரிவித்த படியே சாபம் உம் தலையில் விழும்" என்றது.

"சூத்ரக மன்னனே இவர்கள் எல்லோரிலும் சிறந்தவன்" என்று தெரிவித்தான் மன்னன்.

"வீரவரன் உயர்ந்தவன் இல்லையா? அவனுக்கு இணையானவர் உலகில் கிடைப்பாரா? அவனைக் காட்டிலும் அவன் மனைவி உயர்ந்தவள் இல்லையா? தன் கண் எதிரே தன் மகனைப் பலியிடக் காண எந்தத் தாய்தான் சகித்துக் கொண்டிருப்பாள்? சிறுவனாயினும் அஞ்சா நெஞ்சுடன் தன்னை பலியிட்டுக் கொண்ட சத்வவரன் சிறந்த வீரன் இல்லையா? இவர்களை எல்லாம் விட்டு, அரசன்தான் எவ்விதம் உயர்ந்தவன் என்று கூறுகிறாய்?" என்று திரும்பவும் கேட்டது வேதாளம்.

"அப்படிச் சொல்லாதே! தன் உயிர் மனைவி மக்கள் எல்லாவற்றையும் மன்னனை ரக்ஷிப்பதற்காகத் தியாகம் செய்ய வேண்டியது தான் என்பதையே நியதியாகக் கொண்ட நற்குடியில் பிறந்தவன் வீரவரன்; அவன் மனைவியும் நற்குல மங்கை; கற்புடையப் பெண். தன் புருஷன் அடிச்சுவட்டையே பின்பற்றுகிறவள்; அவர்களின் மகனை சத்வவரனும் அவர்களைப் போன்றவனே. அதனால் அவர்களின் வாழ்க்கையை அவ்விதம் பின்னிக்கிடப்பது. அரசர்களோ தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளத் தங்களுக்குக் கீழ்பட்டவர்களைச் சகஜமாக உயிர்ப்பலி யிட்டு விடுவார்கள். அவ்விதம் இல்லாமல் சூத்ரக மன்னன் தன் வேலைக்காரர்களுக்காகத் தன் உயிரைக் கொடுக்கத் தயாராக இருந்தவன்! அதனால் அவன் செயலே சிறந்தது" என்று விளக்கிப் பதில் அளித்தான் விக்கிரமாதித்தன்.

உடனே வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக் கொண்டு முருங்க மரம் ஏறிக்கொண்டது.

(இந்தக் கதையில் வரும் சூத்ரக மன்னன் என்பதற்கு சுக்ரீபன் எனவும், வீரவரன் என்பதற்கு வீரவர்த்தனன் எனவும் பாடபேதத்தில் பெயர்கள் வித்தியாசப்படுகின்றன.)

## 8. சத்வசீலக் காற்படிகன் கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்திலிருந்து வேதாளத்தைப் பிடித்துக்கொண்டு வருகையில், அது மறுபடியும் ஒரு கதை சொல்ல ஆரம்பித்தது:

கிழக்குக் கடற்கரையிலே தாம்பரலிப்தி என்ற பட்டணம் உண்டு. அதற்கு பாமபுரம் என்ற பெயரும் வழங்கி வந்தது. அந்த நகரத்திலே, சண்டஸிம்ஹன் என்ற அரசன் நீதிவழுவாமல் அரசு செலுத்தி வந்தான்.

ஒருசமயம் சத்வசிலன் என்ற க்ஷத்திரியனொருவன் அவ்வரசனுடைய அரண்மனையின் ஆசார வாசலை அடைந்தான். அங்கே அவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு அரசன் சமூகத்திலே மற்றுஞ் சில க்ஷத்திரியர்களுடன், ஏழ்மையால் கந்தலான ஓர் ஆடைத் துண்டைக் கிழித்து எறிந்தான். இவ்விதம் அவன் அந்த அரசனுடைய காற்படிகனை பரிவாரங்களுள் ஒருவனாக ஆகி விட்டான். காற்படிகனாக உள்ளவன் ஊதியம் ஏதும் பெறக்கூடாது. அவன் சேவகத்தை மெச்சி அரசன் அளிக்கும் பதவியையே ஏற்கலாம். நீண்ட காலம் அவன் தொடர்ந்து அரசனிடம் விசுவாசமாக ஊழியம் செய்து வந்தான்: ஆயினும் அதற்காக ஊதியம் ஒன்றும் அவன் பெறவில்லை.

"அரச குலத்தில் பிறந்திருந்தும் நான் ஏன் இப்படி பரம தரித்திரனாக இருக்கிறேன்? பரம ஏழையாக இருந்தும் ஆண்டவன் ஏன் எனக்கு அதிகமான ஆசாபாசங்களை அளித்திருக்க

வேண்டும்? இவ்வரசனிடம் நான் மிகுந்த விசுவாசத்துடனும் சிரத்தையுடனும் உழைத்து வருகிறேன். ஆயினும் இது வரையில் அரசனுடைய கடைக்கண் பார்வை என்மீது விழவில்லை. நீண்ட காலமாகவே, நான் பசியால் வாடுகிறேன்; என்னுடன் வந்தவர்களும் வெந்துயரால் அல்லல்படுகிறார்கள்"-இவ்விதம் அவன் தனக்குள்ளே சிந்தித்தான்.

இப்படி சத்வசீலன் சிந்தித்து வரும்போது ஒருநாள் பாராளும் பார்த்திபன் வேட்டைக்குக் கிளம்பினான். கொடிய விலங்குகள் வாழும் கானகத்துக்கு சதுரங்க சேனைகளும் பரிவாரங்களும் புடைசூழ மகாராஜன் சென்றபோது, சத்வசீல காற்படிகனே தன் கையில் ஒரு பிரம்பைப் பிடித்துக் கொண்டு அரசன் முன்னால் ஓடினான். சிறிது நேரம் வேட்டையாடிய பிறகு, புதரிலிருந்து தப்பிய ஒரு காட்டுப் பன்றியைத் துரத்திக் கொண்டு மன்னவன் வெகுதூரம் சென்று வேறு ஒரு வனாந்தரத்தை அடைந்தான். அரசனால் காட்டுப் பன்றியை பிடிக்கமுடியவில்லை. அது தப்பி ஓடிவிட்டது. வழி தெரியாமல் அரசன் களைத்துப் போய் நின்றுவிட்டான். உடன் வந்த பரிவாரத்தார் அனைவரும் பின் தங்கி விட்டனர். வேகமாகச் செல்லக்கூடிய குதிரை மீது மன்னன் சவாரி செய்து வந்தும் காற்படிகன் மட்டும் பசியும் தாகமும் வருந்தத் தன் உயிரையும் லக்ஷியம் செய்யாமல் அரசனுடன் ஓடி வந்திருந்தான்.

இவ்விதம் அவன் மட்டும் மிகுந்த கஷ்டங்களுக்கிடையிலும் தன்னைத் தொடர்ந்து வந்ததைக் கண்ட அரசன் அவனை நோக்கி, "நாம் வந்தவழி தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும். ஆயினும் இப்போது சூரியன் உச்சிக்கு வந்து வெய்யில் கொளுத்துகிறது. ஆகவே தாங்கள் சிறிது நேரம் தங்கி இளைப்பாறிய பிறகு கிளம்பலாம்!" என்று சத்வசீலக் காற்படிகன் தெரிவித்தான். உடனே அரசன் அவனை நோக்கி, "அப்படியானால் எங்கேயாவது சமீபத்தில் தண்ணீர் அகப்படுமா, பார்" என்றான்.

"அப்படியே" என்று சொல்லி விட்டுக் காற்படிகன் பக்கத்தில் இருந்து மரத்தின் மீது ஏறி நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். சமீபத்திலே ஓர் ஆறு ஓடுவதைக் கண்டு மரத்திலிருந்து கீழிறங்கி அரசனை அங்கே அழைத்துச் சென்றான் காற்படிகன்.

பாராளும் வேந்தன் நீராடிய பிறகு பசியால் பிராணன் போகும் நிலைக்கு வந்து விட்டான். காற்படிகனுக்கும் அதே பசி மயக்கந்தான். ஆனாலும் அவன் தன் ஆடையின் ஒரு நுனியில் முடித்து வைத்திருந்த நெல்லிக்காய்களை எடுத்து அலம்பி அரசனிடம் கொடுத்தான். அவை எங்கே கிடைத்தனவென்று

மன்னன் கேட்டபோது அவன், "சென்ற பத்து வருட காலமாக மனதைக் குளிரச் செய்து திருப்தி செய்விக்க நான் பசிக்கு இந்தக் காய்களை மட்டும் தின்று குடும்பத்திலே உழலும் துறவியாக வாழ்ந்து வருகிறேன்" என்று தெரிவித்தான். இதைக் கேட்டதும் அரசன் மனம் இறங்கியது. அவனுக்கு அவமானமாகவும் போய்விட்டது. "தங்கள் ஊழியர்களில், யார் யார் சௌகரியமாக இருக்கிறார்கள் யார் யார் கஷ்டப்படுகிறார்கள் என்பதையறியாத மன்னர்களும், இந்த நிலையை மன்னர்களுக்கு எடுத்துக் கூறாத மந்திரிமார்களும் மகாபாவிகள்" என்று தனக்குத்தானே மன்னன் கூறிக் கொண்டான்.

பிறகு காற்படிகன் குதிரைக்குச் சேணமிட்டுத் தயாரிக்க, அரசன் அதன்மீது ஏறித் தன் நகரத்துக்குக் கிளம்பினான். வழியிலே சேனையும் வந்து சேர்ந்து கொள்ள அவர்கள் கடைசியாகத் தலைநகரம் திரும்பினார்கள். அங்கே காற்படிகனுடைய ராஜ பக்தியையும், விசுவாசத்தையும் ராஜன் பலபடியாக எடுத்துரைத்துப் புகழ்ந்தான். காற்படிகனுக்கு ஏராளமான செல்வத்தையும் பிரதேசங்களையும் சன்மானமாக அளித்தான். அப்போதும் அவனுடைய தகுதிக்கு ஏற்ப அளித்ததாக அரசனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. சத்வசீலனும் காற்படிகப் பதவியை விட்டொழித்து, தன்னிலைக்கு தக்கபடி பிரமுகனாக வாழ்ந்து வந்தான். அது முதல் அவன் சண்டசிம்ஹ மகாராஜனோடு கூடவே இருந்து வந்தான்.

ஒருநாள் மன்னன் தனக்கு இலங்கையரசன் குமாரியை மணம் முடித்து வருமாறு சத்வசீலனை அனுப்பி வைத்தான். அவனும் தன் குலதெய்வங்களைப் பிரார்த்தித்துக் கொண்டு மணம் முடிப்பதற்காக புவி மன்னன் அனுப்பி வைத்த புரோகிதர்களுடன் கப்பலில் கிளம்பினான். பாதி வழி போனதும் சூறாவளி தோன்றி திடீரென நடுக்கடலிலிருந்து ஒரு கொடி கிளம்பியது. கடலுக்கும் ஆகாயத்துக்கும் ஒன்றாகத் தங்கத்தாலான அந்தக் கொடி காற்றிலே அலையுண்டு பலவிதமான வர்ணங்களை வாரி வீசியது. அதே சமயம் திடீரென்று வானத்திலே எங்கிருந்தோ மேகக் கூட்டம் தோன்றி சூறாவளிக் காற்றாக அடித்துப் பெருமழை பெய்தது. ஏதோ ஒரு சக்தியினால் அந்தக் கப்பலானது காற்றாலும், மழையாலும் கொடி மரத்தையடைந்து, அதனோடு ஒட்டிக் கொண்டது. அப்பால் அந்தக் கொடி மரம் மெதுவாகக் கப்பலுடன் நீருக்குள்ளே அமிழ ஆரம்பித்தது.

கப்பலிலிருந்த புரோகிதர்கள் பயத்தால் ஒடுங்கி ஆபத்தில் உதவக் கூச்சலிட்டனர். அவர்கள் கூச்சலைக் கேட்ட சத்வசீலன் தன் மேலாடையை வரிந்து கட்டிக்கொண்டு கையில் ஒரு கத்தியை

ஏந்திக் கடலில் குதித்தான். எதனால் கப்பல் நீருள் அமிழ்ந்து வந்ததென்பதை அறியாமல், சண்டை போட்டு அதைத் தடுத்து விடலாம் என்றே அவன் நினைத்தான். அவன் கடலில் குதித்த கணமே காற்றும், அலையும் சேர்ந்து கப்பலை வெகு தூரம் கடத்திச் சென்று விட்டன. அதிலே இருந்த அத்தனை பேரும் கடலின் வயிற்றுக்கு இரையானார்கள்.

கடலில் குதித்த சத்வசீலன் தன்னைச் சுற்றிலும் பார்த்தபோது, தான் கடலின் அடியிலுள்ள வேகமான ஒரு நீர்ச் சுழலால் இழுத்துச் செல்லப்படுவதையும் ஒரு மணல் திட்டின் மேல் மீது அவன் ஒதுக்கப்படுவதையும் உணர்ந்தான். அந்த மணல் திட்டு அமானுஷ்யமான ஒரு தீவாக மாறியது.

கண்ணுக்கு எட்டிய வரையில் கடல் தென்படவே இல்லை. விசாலமான அந்த அமானுஷ்ய தீவிலே அழகான ஒரு நகரம் இருப்பதை சத்வசீலன் கண்டான். அந்த நகரம் பொன்னாலும், மணிகளாலும் இழைக்கப்பட்ட மாட மாளிகைகளையும் நந்தவனங்களையும் தடாகங்களையும் கொண்டு ஜொலித்தது. ஆனால் மனித சஞ்சாரமே எங்கும் தட்டுப்படவில்லை. அங்கே துர்க்கையம்மனுக்கு மேரு பர்வதம் போன்ற உயரமான கோவில் ஒன்றும் இருந்தது. அவன் போய்த் தேவியை வணங்கிப் பிரார்த்தித்து விட்டு, "இது என்ன மாயம்?" என்று வியந்தபடியே, ஒரு பக்கத்தில் உட்கார்ந்தான்.

அதே சமயம் கோயிலுக்கு எதிர்புறத்தில் பிரகாசமாக விளங்கிய ஒரு மாளிகையின் கதவைத் திறந்து கொண்டு நாககன்னிகையோ என்று சந்தேகிக்கக் கூடிய பெண் ஒருத்தி வந்தாள். நீலோத்பலம் போன்ற இரு விழிகளைக் கொண்ட அவளின் அழகை வருணிக்கவே முடியாது. சுற்றி ஆயிரம் தோழியர்களுடன் அவள் அங்கிருந்த கோயிலுக்குள் நுழைந்தாள். அதே சமயம் சத்வசீலன் இதயத்திலும் அவள் நுழைந்து விட்டாள். கோயிலுக்குள்ளே அவள் தேவியை வழிபட்டு மீண்டும் வெளிக் கிளம்பினாலும், சத்வசீலன் இதயக் கோயிலை விட்டுக் கிளம்ப மறுத்துவிட்டாள்.

அவளுடைய மோகன உருவம் மறுபடியும் தன் மாளிகைக்குள் நுழைந்தபோது சத்வசீலனும் கூடவே அதனைப் பின் தொடர்ந்தான்.

உள்ளே நுழைந்த அவன் அங்கே மற்றொரு பட்டணத்தையே கண்டான். புவனத்தில் உள்ள எல்லாவிதமான சுக போகங்களையும் அங்கே அனுபவிக்கலாம் என்கிறபடி அது நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அங்கே மணிகள் வைத்து இழைக்கப்

...ருந்த ஓர் ஆசனத்தில் அந்த மோகனாங்கி அமர்ந்திருந்தாள். ...லனும் போய் மௌனமாக அவள் பக்கத்தில் அமர்ந்து ...ண்டான்.

அவனுடைய இளமை மணக்கும் உள்ளத்துணர்ச்சியை ...வின் படபடப்பு நன்கு எடுத்துக் காட்டியது. தன் மீது அவன் ...யல் கொண்டிருக்கிறான் என்பதையும், தன் அழகை ...பவியாமல் போகமாட்டான் என்பதையும் அறிந்து கொண்ட ... அதிசயக் கன்னிகை தன்னுடைய பாங்கியரின் முகத்தைப் பார்த்தாள். தலைவியின் உள்ளக்கருத்தை உடனே உணர்ந்து ...ண்ட தோழிகளும் அவனையணுகி, "நீங்கள் இவ்விடம் விருந்தாளியாக வந்திருக்கிறீர்கள். ஆகவே, எங்கள் எஜமானி ...ளிக்கும் உபசாரத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். ...ழுந்து முதலில் குளித்துச் சாப்பிடுங்கள்" என்று ...ண்டினார்கள்.

இதைக் கேட்ட அவனுடைய சபல புத்தியிலே கொஞ்சம் ...ம்பிக்கை ஏற்பட்டது. அவன் வேறு வார்த்தை பேசாமல் ...ழுந்திருந்து பக்கத்தில் அவர்கள் காட்டிய குளத்துக்கு குளிக்கச் ...ன்றான். அதிலே அவன் மூழ்கித் தலை நிமிர்ந்தவுடன், தான் ...ம்ரலிப்தி நகரில் சண்டசிம்ஹ மகாராஜாவின் ...ட்டத்துக்குளத்தின் மத்தியில் இருப்பதை கண்டதும், அவன் ...கைத்து விட்டான்.

"என்ன இது? சிறிது நேரத்துக்கு முன் ஓர் அழகிய அதிசயமான பட்டணத்தில் இருந்தேன். இப்போது இந்தத் தோட்டத்தில் இருக்கிறேன். அமுதம் போல் இனிப்பான அந்தக் கன்னிகையின் தரிசனம் ஒரே கணத்தில் அவளைப் பிரிந்து வாடும் விஷமாக மாறிவிட்டதே! இது கனவல்ல; நன்றாக விழித்திருந்த நிலையிலேதான் கண்டேன். பாதாளலோகத்துப் பெண்கள் என்னை இவ்விதம் மயக்கி இழுத்துப் போய் விட்டார்களென்று இப்போதுதான் விளங்குகிறது!"

இவ்விதம் சிந்தித்துக் கொண்டே அவன் தோட்டத்திலே அங்கு ...ங்கும் நடந்தான். அந்தக் கன்னிகையின் மீது கொண்ட மோகக் ...றக்கத்தின் காரணமாகப் பிரிவாற்றாமை தாளாமல் வருந்தினான். காற்றில் பறந்து வந்த புழுதியும், மகரந்தத்தூளும் படிந்த உடம்புடன் அவனை இந்நிலையில் கண்ட தோட்டக்காரர்கள் உடனே ஓடிப்போய் மகாராஜனிடம் தெரிவித்தார்கள்.

அதைக் கேட்ட மன்னவனும் திகைப்புற்று, தோட்டத்துக்கு வந்து அவனைக் கண்டு ஆச்வாசப்படுத்தி சமாதானம் செய்தான். பிறகு, "நண்பா, இதெல்லாம் என்ன? இங்கே எப்படி வந்து

சேர்ந்தாய்? எல்லாவற்றையும் என்னிடம் சொல்லவேண்டும்" என்றான் மன்னவன். உடனே சத்வசீலனும் தனக்கு நேரிட்டது முழுவதையும் அரசனுக்கு எடுத்துச் சொன்னான்.

இதைக் கேட்டதும் அரசனுக்கு சந்தோஷம் ஏற்பட்டது. "இவன் மகாவீரன் தான். ஆயினும் நம் அதிர்ஷ்டத்தினால் தான், பூர்வ ஜன்ம புண்ணியத்தினால்தான், இவன் இவ்விதம் காதலில் சிக்கினான். இப்போது நான் இவனுக்கு உதவி செய்யக்கூடிய நிலையில் இருக்கிறேன். அதேபோலச் செய்து என் பழங்கடனைத் தீர்த்து விடலாம்" என்று தனக்குத் தானே தீர்மானித்துக் கொண்டான். உடனே அவன், "கவலைப்படாதே, நானே உன்னை அந்த அசுரப்பெண் இருக்குமிடத்திற்கு அதே வழியாக அழைத்துச் செல்கிறேன்" என்று சொல்லி அவனைத் தேற்றினான்.

மறுநாள் அரசன் நாட்டு நிர்வாகத்தைத் தன் மந்திரிகளிடம் ஒப்படைத்து விட்டு, சத்வசீலன் வழி காட்ட, அவனுடன் கப்பலில் புறப்பட்டான். பாதி தூரம் போனவுடனே முன் மாதிரியே நடுக்கடலிலிருந்து அழகான துவஜம் ஒன்று கிளம்புவதைக் கண்டான். உடனே சத்வசீலன் அரசனை நோக்கி, "நான் கூறிய கொடிமரம் இதுதான். நான் இங்கே கடலில் குதிக்கிறேன். மகாராஜாவும் என் பின்னாலேயே குதித்து, கொடி மரத்துக்குப் பக்கத்தில் முழுகவேண்டும்" என்று சொன்னான். அவ்விதமே அவர்கள் கொடிமரத்தை அணுகினார்கள்; கொடிமரமும் கீழிறங்கியது. சத்வசீலன் அதைத் தொடர்ந்து மூழ்கினான். அரசனும் கூடவே மூழ்கினான். அவர்களிருவரும் அந்த அதிசயமான தீவை அடைந்தார்கள். துர்க்கையம்மனைப் பார்த்து மகாராஜன் மனமகிழ்ந்து வழிபட்டு, சத்வசீலனுடன் ஆலயத்தில் அமர்ந்து விசித்ர வனிதையின் வருகைக்காகக் காத்திருந்தான்.

ஜொலிக்கும் மாளிகையிலிருந்து கண்ணைப் பறிக்கும் வனப்புடைய அந்த கன்னிகை தன் பாங்கியருடன் வெளி வந்தாள். சத்வசீலன் உடனே அவளை மகாராஜனுக்குச் சுட்டிக் காட்டி "அவள் தான்!" என்றான். அரசனும் சத்வசீலன் மையல் கொண்டுள்ள பெண் பேரழகியே என்பதை கண்ணாரக் கண்டு திருப்தி கொண்டான். அவளோ சத்வசீலன் பக்கத்தில் சகல ராஜசின்னங்களுடன் அரசன் வீற்றிருப்பதைக் கண்டு, "இவர் யாராக இருக்கக் கூடும்?" என்று திகைத்துப் போனாள்.

துர்க்கையம்மனை வழிபட அவள் கோயிலுக்குள் நுழைந்தாள். அரசன் மிக்க அலட்சியத்துடன் சத்வசீலனையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு தோட்டத்தில் நுழைந்தான். கன்னிகையோ

பூஜையை முடித்துக்கொண்டு தனக்கு நல்ல கணவன் கிடைக்கவேண்டும் என்று துர்க்கையை வணங்கி விட்டு வெளியே வந்தபோது, அரசனையும், அவன் தோழனையும் காணவில்லை. ஆகவே அவள் தன் பாங்கியருள் ஒருத்தியை அழைத்து, "இப்போது நான் பார்த்த ராஜகம்பீரர் எங்கே இருக்கிறார் என்று தேடிப் பார்த்து அழைத்துவா. அவர் நிரம்பவும் பெரிய மனிதராகத் தோன்றினார். சாதாரணமாக நம் இருப்பிடத்துக்கு அவர் வரக்கூடியவர் அல்ல. அவரை நாம் தக்கபடி உபசரிக்க வேண்டும்" என்றாள்.

கன்னிகையால் தூதனுப்பப்பட்ட தாதியும், மகாராஜனைத் தேடிப் பார்த்து வணங்கித் தன் எஜமானியின் வேண்டுகோளைத் தெரிவித்தாள். அரசரோ அலட்சியமாக, "இந்தத் தோட்டமே ஒரு விருந்தாக இருக்கிறதே. இன்னும் வேறு என்ன உபசாரம் வேண்டியிருக்கிறது?" என்று கேட்டான்.

இதைக் கேட்ட பாங்கி அதைத் தன் எஜமானியிடம் தெரிவித்தாள். உண்மையில் அவன் சிறந்தவன் என்றும், அதற்குத் தக்கபடி உபசரிக்க வேண்டும் என்றும் விசித்திரக் கன்னிகை நினைத்தாள்.

அரசன் தன் புலன் அடக்கத்தால் அவளுடைய கவர்ச்சிகரமான உபசாரத்தை ஏற்பதில் எவ்வளவுக்கு எவ்வளவு அலட்சிய மனப்பான்மையைக் காட்டினானோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவளுக்கு அரசனிடம் மரியாதையும், வேட்கையும் ஏற்பட்டன. தன் பிரார்த்தனைக்கு இரங்கி தனக்குக் கணவன் ஆவதற்காகத் துர்க்காதேவியே அந்த ராஜகம்பீரனை அவ்விடம் அனுப்பி வைத்திருப்பதாக அவள் நினைத்துவிட்டாள். ஆகவே மனதிற்குகந்தவனை அழைக்க மங்கையே நேரில் புறப்பட்டாள்.

அவள் அருகில் வந்தபோது அந்த அசுர கன்னிகையை அரசன் உற்றுக் கவனித்தான். வஜ்ஜிரம் போல் உறுதியான தேகக் கட்டுடன், இளமை வனப்புள்ள, கண்களில் அடங்காத ஆசைத் துடிப்புடனும் விளங்கினாள். அரசனின் ஆடையாபரணங்களையும், அழகிய முகத்தையுங்கண்டு, அதிகமாக மோகக்கிறக்கம் கொண்டாள்.

அவள் அரசனை வணங்கி, தன் உபசாரத்தை ஏற்றுக்கொள்ள வேண்டினாள். அவன் உடனே சத்வசீலனைச் சுட்டிக் காட்டி அவளிடம், "இவன் குறிப்பிட்ட துர்க்காதேவியின் திருஉருவத்தை வழிபடுவதற்காகவே நான் இங்கே வந்தேன். துவஜஸ்தம்பத்தைத் தரிசித்துப் பிறகு உன்னையும் கண்டேன். இன்னும் என்ன உபசரிப்பு இருக்கிறது?" என்று கேட்டான்.

உடனே அந்தக் கன்னிகை, "மூவுலகத்திற்கும் அதிசயமாக விளங்கும் சிங்காரத் தோட்டத்தைப் பார்க்கவேண்டாமா? வாருங்கள்" என்று அழைத்தாள். இதைக்கேட்ட மன்னன் சிரித்துக்கொண்டே, "அதைப் பற்றி இவனும் சொல்லியிருக்கிறன். நீராடுவதற்காக அதிலே ஒரு தடாகம் இருக்கிறதாம்" என்றான்.

"பூமானே! தாங்கள் இப்படிப் பேசலாகாது. நான் ஏமாற்றுபவளல்ல! அன்றி தங்களைப் போல மரியாதைக்குரிய பெரியவர்களை யார் தான் ஏமாற்ற நினைப்பார்கள்? உங்கள் இருவருடைய மேன்மையையும் உணர்ந்த நான் உங்களுக்கு அடிமையாகி விட்டேன். ஆகவே என் கோரிக்கையை தட்டக் கூடாது!" என்று வேண்டிக்கொண்டாள்.

அதைக் கேட்ட அரசன் அதற்குச் சம்மதித்து, சத்வசீலனையும் அழைத்துக் கொண்டு அவளைத் தொடர்ந்து தோட்டத்திற்குச் சென்றான். விலை மதிக்க முடியாத ரத்தின சிங்காதனம் ஒன்றில் அரசனை உட்காரவைத்துக் கன்னிகை அவனுக்கு முறைப்படி அர்க்கியம் வழங்கினாள்.

"பாதாள வேந்தர்களுக்கு வேந்தனான காலநேமியின் குமாரி நான்! சக்ரதாரியான விஷ்ணு என் தந்தையை சுவர்க்கத்துக்கு அனுப்பிவிட்டார். எனக்குப் பிதிரார்ஜிதமாகக் கிடைத்துள்ள இந்த இரு அதிசய நகரங்களும் விசுவகர்மாவினால் நிர்மாணிக்கப் பட்டவை. நினைத்தவை ஈடேறும் இந்த இடத்தில் சாவும் மூப்பும் யாரையும் அணுகா. இந்த அமானுஷ்யமான தீவில் ஆண்களே இல்லை. இந்நகரங்களைப் பெண்ணொருத்தி எத்தனை காலந்தான் தன்னந்தனியாக ஆள முடியும்?" என்று கூறி அரசனை வணங்கினாள்.

அதன் பிறகு அவளே வலிய அரசனிடம் நெருங்கித் தன் தாபத்தைத் தீர்க்க வேண்டுமென்று சொன்னாள்.

அவளது அளவுமீறிய தேகப் பூரிப்பையும், அவளுடைய கருவிழிகளில் தென்பட்ட அடங்காத போதையையும் கண்ட அரசனின் மெல்லிய உடல் நடுங்கியது. அவள் அரசனை நோக்கி "நான் இது பரியந்தம் எந்த ஆடவன் மீதும் மோகம் கொண்ட தில்லை. உங்கள் அழகிய உருவத்தைக் கண்டதும் உற்றுக் கவனித்தேன். இத்தனை வருஷங்களாக அமிழ்ந்து அடங்கிக் கிடந்த ஆசையெல்லாம் இப்பொழுது பெரு வெள்ளமாகப் பொங்கியெழுகிறது. இனி தாளமாட்டேன். என்னை மணந்து என் தாகத்தைத் தீர்ப்பவர் எவரோ, அவரை இந்த மாயத் தீவிலிருந்து போகவும் விடமாட்டேன். ஆண் வாடை வீசாத இந்தத் தீவில் தன்னந்தனியாய் அரசாளும் நான் அவரை

உயிருக்குயிராய் காதலித்து உலகப் பிரளய பரியந்தம் இந்தத் தீவிலே மனம் மகிழ்ந்திருப்பேன். துர்க்கையம்மன் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன்! என் தந்தையைப் போல் ராஜ கம்பீரமாக விளங்குகிறீர்கள். அடியாளை இந்நகரங்களோடு அனுதையாக விட்டுப் போகாதீர்கள்!" என்றாள்.

உடனே அரசன் அவளை நோக்கி, "அப்படியானால் என் அருமை மகளே, உன்னை அனுதையாக விட்டுப் போகமாட்டேன்!" என்று கூறி விட்டு, அவளுடைய அடங்காத தேகப் பூரிப்பையும், வஜ்ஜிர தேகத்துடன் தன் அருகில் நின்ற சத்வசீலனையும் உற்று நோக்கிக் கொண்டே, "உன் தவிப்பை நான் அறிந்து கொண்டேன். பெண்ணே! உனக்குத் தேவையானது வெறும் அழகிய உருவமல்ல! இவன் என் அந்தரங்கத் தோழன். உன் மீது தீராத மோகம் கொண்டிருக்கிறான். மகளே! உன்னை இவனுக்கு அளிக்கிறேன். இவன் உன்னையும் உன் நகரங்களையும் ஆளுவான்! நீயும் இவனும் ரதியும் மன்மதனும் போல் பிரளய பரியந்தம் இந்த மாயத் தீவிலே குதூகலமாய் இருங்கள்!" என்றான்.

தன் குலதெய்வமே தந்தைக்குப் பதிலாக ராஜகம்பீரன் உருவில் வந்திருப்பதாக எண்ணிய பாதாள கன்னிகையும், அவனே அப்படிக் கூறிவிட்டதால், அதை ஏற்றுக்கொண்டு பணிந்தாள்.

சத்வசீலனின் விருப்பம் நிறைவேறியது. அவன் அந்தக் கன்னிகையை மணந்து மாயத் தீவிலுள்ள இரு நகரங்களின் அரசுரிமையையும் அடைந்தான். அதன் பிறகு மகாராஜன் தன்னை வணங்கிய அவனை நோக்கி, "அன்று நடுக்காட்டில் எனக்குச் சாப்பிட இரண்டு நெல்லிக் கனிகளைக் கொடுத்தாய். அதற்கு ஈடாக இன்று நான் உனக்கு ஒரு பெண் கனி தந்தேன்!" என்று சொன்னான். பிறகு விசித்திரக் கன்னிகையைப் பார்த்து, "என் ராஜ்யத்தின் தலைநகருக்கு நான் திரும்பிப் போக வழி காட்டவேண்டும்" என்று கேட்டான். அவள் அரசனுக்கு ஒரு கத்தியையும் ஒரு பழத்தையும் கொடுத்தாள். பழம் மூப்பைத் தடுக்கும் என்றும், கத்தி வெற்றியையே கொடுத்து கூற்றுவனை அணுகவொட்டாமல் தடுக்கும் என்றும் தெரிவித்துவிட்டு, பழையபடியே குளத்தில் மூழ்கச் சொன்னாள். அரசனும் அவ்விதமே குளத்தில் மூழ்கித் தன் தலைநகரை அடைந்தான். மாயத் தீவிலோ பாதாள கன்னிகையுடன் சத்வசீலனும் நீண்ட காலம் அரசாண்டு வந்தான்.

இவ்விதம் கதை சொல்லி முடித்த வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "சேவகனான சத்வசீலன், அவன்

மகாராஜன். இவ்விருவரில் யாருடைய நன்றி விசுவாசம் விசேஷமானது? சொல்லுமையா, ராஜனே!" என்று கேட்டது.

அதற்கு விக்கிரமாதித்த மகாராஜன் பின்வருமாறு பதில் சொன்னான்:

"சேவகன் நன்றி விசுவாசம் செலுத்துவது அவனுடைய கடமை! அரசாள்பவனுக்கு அது கடமையல்ல! ஆகவே, அரசன் தன்னை மோகித்த அதிசய கன்னிகையைத் தன் பழைய சிநேகிதனுக்குத் தத்தம் செய்த நன்றி விசுவாசமே விசேஷமானது!"

(வடமொழி மூலம் ஒன்றில் கேள்வியும் பதிலும் வேறொரு விதமாக, பின்வருமாறு காணப்படுகிறது:)

"இவ்விருவருள் யார் அஞ்சா நெஞ்சுடன் கடல் நீரில் மூழ்கினார்கள்? யார் செயல் விசேஷமானது?" என்று கேட்டது வேதாளம்.

"இருவருள், சத்வசீலனே தைரியசாலி! உண்மையில் அவன்தான் விளைவு என்ன ஆகும் என்பதை அறியாமல் முதலில் துணிந்து கடல் நீரில் குதித்தான். அரசனோ எல்லாவற்றையும் நன்றாக அறிந்துக் கொண்டு ஒரு காரியம் கை கூடுவதற்காகவே குதித்தான். அன்றியும் பாதாள கன்னிகையை மணப்பது தனக்குப் பொருத்தமில்லை என்று கருதியே அவன் அந்தப் பெண்ணின் மையலை ஏற்றுக் கொள்ளவில்லை. இதனால் சத்வசீலனே உயர்ந்தவன்!" என்று விக்கிரமாதித்தன் விடையளித்தான். மறுபடியும் வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு முருங்கமரத்தில் தொற்றிக் கொண்டது.

## 9. (1) மணிமான் கதை

உவிஷபுரம் என்ற பட்டணத்தை கிரகபுஜன் என்ற ஒரு மகாராஜன் ஆண்டு வந்தான். அவனுக்கு மணியியக்கிசை என்று அழகில் நிகரற்றவளான ஒரு குமாரி இருந்தாள். அவளை அறிவில் நிகரற்றவனும், சகலவிதமான வித்தைகளிலும் பாஷைகளிலும் தேர்ச்சி பெற்றவனுமான ஒருவனுக்கே விவாகம் செய்து கொடுக்க வேண்டுமென்று வேந்தன் எண்ணியிருந்தான். அப்போது சகல கல்விகளிலும் பாஷைகளிலும் தேர்ந்த மணிமான் என்ற அரசன் ஒருவன், அறிவில் நிகரற்றவனான தான் அழகில் நிகரற்றவளான ஒருத்தியை அடைய வேண்டுமென நிச்சயித்து, கிரகபுஜ மன்னனின் குமாரியை தனக்குக் கல்யாணம் செய்து



கொடுக்கும்படி கேட்டான். இரகபுஜ மன்னனும் அவனுடைய வித்தைகளையெல்லாம் பரிசோதித்துப் பார்த்து தனக்குத் திருப்திகரமாயிருக்கவே. தன் குமாரத்தியை அவனுக்கு மணம் முடித்துக் கொடுத்தான்.

மணிமான் மன்னன் தன் புது மனைவியை அழைத்துக் கொண்டு தன் ராஜ்யம் போய்ச் சேர்ந்தான். தம்பதிகள் இருவரும் சுகமாக வாழ்ந்து கொண்டு வந்தார்கள். ஆனால் ஓர் அறிவாளியும் ஓர் அழகான பெண்ணும் அதிக காலம் மனமொன்றி வாழ முடியுமா? ஒருநாள் அவர்கள் படுத்திருந்த மஞ்சத்தின் கீழே எறும்புக் கூட்டங்கள் சாரிசாரியாகப் போய்க் கொண்டிருந்தன. அவற்றில் முன்னே சென்ற எறும்புகளில் சில மேற்செல்லாமல் நின்றதைக் கண்ட மற்ற எறும்புகள் அவைகளை கூப்பிட்டு. "ஏன் நிற்கிறீர்கள்?" என்று கேட்டன. அதற்கு அவை. "மேற் செல்லக் கட்டிலில் இடமில்லை" என்றன. அப்போது பின்னால் இருந்த எறும்புகள். "அப்படியானால் கட்டிலைத் தூக்கி எறிந்து விட்டுப்போகிறது தானே?" என்றதும். முன் இருந்தவை, "மன்னனும் மகிஷியும் கட்டிலில் நித்திரை கொள்ளும் போது அவ்வாறு செய்வது தோஷமாயிற்றே" என்று சொல்லின.

அரைத் தூக்கத்திலிருந்த மணிமான் மன்னனுக்கு மிருகபாஷையைச் சேர்ந்த எறும்புகளின பாஷையும் தெரியுமாகையால். அவற்றின் சம்பாஷணையைக் கேட்டு ஆச்சரியப்பட்டுக் கலகலவென சிரித்தான். அப்போது பேரழகியான அவன் மனைவி கண்விழித்து, "ஏன் சிரித்தீர்கள்?" என்று கேட்டாள்.

அவள் வினவியதைக் கேட்டு அவ்வெறும்புகள் அரசனைத் தங்கள் பாஷையில் கூப்பிட்டு. "ராஜனே! நாங்கள் பேசிய வார்த்தைகளை நீர் யாரிடமாவது சொன்னால் உமது சிரம் வெடித்துப் போகும்!" என்றன.

அதைக் கேட்டு அவன் தன் மனைவியின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் விசாரத்துடன் இருக்கையில். "ஏன் சிரித்தீர்கள்?" என்று நச்சரித்துக் கொண்டே இருந்த அவள் மறுபடியும் அவனைப் பார்த்து. "நான் கேட்டதற்கு ஏன் ஒன்றும் சொல்லவில்லை? என்மேல் தயவில்லை போலிருக்கிறது? அப்படியானால் நான் உயிர் விடுகிறேன்" என்றாள்.

"இதற்கென்ன செய்வது!" என்று யோசித்த அரசன். மனைவியைப் பார்த்து. "கண்ணே! உன் கேள்விக்குப் பதில் சொன்னால் என் சிரம் வெடித்துப் போகும். ஆகையால் நாளைக்கு மயானத்திற்குச் சென்று அங்கே கட்டையை அடுக்கி. அதன் மீது படுத்துக்கொண்டே சொல்கிறேன். உடனே என் தலை வெடிக்கும். நீ வறட்டியால் என் உடலை மூடி கொள்ளி வைத்துவிடு" என்றான். அதை நம்பாத அவள் "அதையுந்தான் பார்த்து விடுவோமே" என்றாள்.

அந்தப்படியே மறுநாள் மயானத்தில் கட்டையை அடுக்கிக் குவித்து அரசன் அதன் மீது படுத்துக் கொண்டு. மனைவியை அழைத்தான். அவளிடம் எறும்புகள் பேசியதைச் சொல்லப்போகும் தருணத்தில் ஆணும் பெண்ணுமாக இரண்டு ஆடுகள் அவனுக்கு அருகாமையில் நின்று தர்க்கமிட்டுக் கொண்டிருந்தன.

பெண் ஆடு ஆண் ஆட்டைப் பார்த்து. "அதோ இருக்கும் கிணற்றில் முளைத்துள்ள புல்லை எனக்குப் பிடுங்கிக் கொடு" என்றது. அதற்கு ஆண் ஆடு. "நீ என் கிட்ட வராதே. புல்லை பிடுங்கப்போய் கிணற்றில் விழச் சொல்லுகிறாயா? பெண் புத்தி கேட்டு நடப்பதற்கு எனக்குப் பைத்தியமா?" என்று சொல்லி விட்டுப் பெண் ஆட்டை விட்டுப் போய்விட்டது.

இதைக் கேட்ட அரசன் திடுக்கிட்டு எழுந்து தன் மனைவியைப் பார்த்து. "என்னைக் கொல்ல நினைத்த பாதகி! இனி நீ என் முகத்தில் விழியாதே" என்று சொல்லிவிட்டுப் பட்டணம் போய் வேறு ஒருத்தியை கல்யாணம் செய்து கொண்டான்.

இவ்விதம் கதையை சொல்லி முடித்த வேதாளம், "ஆட்டுக்கிடா. அறிஞன் இவ்விருவரில் யார் அதிகப் புத்திசாலி? சொல்லுமையா. ராஜனே!" என்று கேட்டது.

இதற்கு விக்கிரமாதித்த மகாராஜன். "ஆடாயிருந்த போதிலும் பெண் புத்தி கேளாதிருந்தமையால் அதுவே அதிகப் புத்திசாலி!"

என்று விடை சொல்லிக் கொண்டிருக்கும் போதே வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு மறுபடியும் முருங்க மரத்தில் ஏறிக்கொண்டது.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பின் வரும் கதை உள்ளது.)

## 9. (2) அனங்கரதி கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்திலிருந்து வேதாளத் தைப் பிடித்து வரும்போது வேதாளம், "ராஜனே! இரவு வேளையில் இவ்விதம் மயானத்தில் அலைந்து திரிவது அரச பதவிக்கு ஏற்றதல்ல. பூதங்கள் நிறைந்த இவ்விடம் நள்ளிரவிலே பிணப் புகை சூழ்ந்து பயங்கரமாக விளங்க வில்லையா? அந்த யோகியைத் திருப்தி செய்வதற்காக நீ ஏன் இவ்வளவு தூரம் விடாப்பிடியாக நடக்க வேண்டும்? உன் வழி நடையைச் சுலபமாக்க ஒரு கதை சொல்லுகிறேன். கேளும்" என்று கதையை ஆரம்பித்தது:

அவந்தி தேசத்திலே ஒரு நகரம் இருக்கிறது: கிருதயுகத்திலே அதற்குப் பத்மாவதி என்ற பெயரும், திரேதாயுகத்தில் போகவதி என்றும், துவாபர யுகத்திலே ஹிரண்யவதி என்றும் வழங்கப் பெற்றிருந்தது. இக்கலியுகத்தில் அதற்கு உஜ்ஜயினி என்று பெயர் வழங்குகிறது. அதிலே வீரதேவன் என்றொரு மன்னன் இருந்தான். அவனுக்கு பத்மாவதி என்ற பெயருடைய ஒரு பத்தினி இருந்தாள். அவன் அவளுடன் மந்தாகினி நதிக்கரையை அடைந்து, பிள்ளை வரம் வேண்டிப் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்தான்.

நீண்ட கால தவசுக்குப் பிறகு ஒருநாள் சிவபெருமான் அசரீரி யாகப் பின்வருமாறு தெரிவித்தார்: "அரசே! உன் வமிசத்தை காக்க ஓர் ஆண் மகனும் தேவலோகத்து அப்ஸரஸ் ஸ்திரீகளையும் தோற்கடிக்கும் அழகுள்ள ஒரு பெண் குழந்தையும் பிறப்பார்கள்!" இதைக் கேட்ட அரசன் தன் ஆசை நிறைவேறியதற்கு சந்தோஷப்பட்டுத் தன் மனைவியுடன் தலை நகரம் திரும்பினான்.

அப்பால் அவனுக்கு முதலில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. சூரதேவன் என்று அதற்கு அவன் பெயரிட்டான். அப்பால் ஒரு

பெண் குழந்தை பிறந்தது. காமதேவன் உள்ளத்திலேயே ஆசையை உண்டாக்கக்கூடிய அழகு வாய்ந்த அவளுக்கு அனங்கரதி என்று தந்தை பெயரிட்டான். அவள் வளர்ந்து யௌவனப் பருவம் அடைந்ததும், அவளுக்கு ஏற்ற கணவனைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற ஆவலினால் வீரதேவன் பூலோகத்திலுள்ள மன்னாதி மன்னர்களின் திரு உருவங்களையும் திரைச்சீலைகளில் எழுதி கொணரச் செய்தான். அவர்களிலே எந்த மன்னனின் உருவமும் அவளுடைய பேரழகிற்குப் பொருந்தியதாக இருக்கவில்லை. அதனால் அவன் தன் குமாரத்தியை நோக்கி, "குழந்தாய்! உனக்கு ஏற்றவனை என்னால் தேர்ந்தெடுக்க முடியவில்லை. ஆகவே, நீயே உன் கணவனை தேர்ந்தெடுத்துக் கொள்!" என்றான்.

இதைக் கேட்ட அனங்கரதி தன் தந்தையிடம், "அப்பா, சுயம்வரம் நடத்துவதற்கு வெட்கமாக இருக்கிறது. ஆயினும், என் கணவர் பார்வைக்கு அழகான இளைஞனாக இருக்க வேண்டும். அவர் ஏதாவது ஒரு வித்தையில் வல்லவராக இருக்க வேண்டும். வேறு அதிகமாக நான் எதையும் வேண்டவில்லை" என்று சொல்லி விட்டாள்.

அரசனும் அதே போல உள்ள வரன்களைத் தேட ஆரம்பித்தான். அப்போது இந்தச் செய்திகளைக் கேட்டு தென் திசையிலிருந்து நான்கு இளைஞர்கள் வட திசை மன்னனிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் நால்வரும், ராஜகுமாரியை மணந்து கொள்ளும் நோக்கத்துடனே தான் அவ்விடம் வந்தார்கள். அந்நால்வரும் சாமர்த்தியசாலிகள்; ஒவ்வொருவரும் ஒவ்வொரு வித்தையில் தனித்திறமை வாய்ந்தவர்கள்.

அரசனும், அவர்களை மரியாதையுடன் வரவேற்றான். அவர்களில் ஒவ்வொருவரும் அந்தப் பெண் எதிரிலேயே அரசன் முன் தன்னுடைய திறமையைப் புகழ்ந்து கூறலானான்.

முதலாமவன் ராஜ சமூகத்தை நோக்கி, "பஞ்சபுட்டிகன் என்பது என் பெயர். நான் துணி நெய்வதில் மிகவும் வல்லவன். தினந்தோறும் ஐந்து ஜதை அழகான துணி நெய்வேன். ஒன்றை என் குல தெய்வத்துக்கும், ஒன்றை அறநெறியாளனுக்கும் அளித்துவிட்டு, ஒன்றை என் சொந்த உபயோகத்துக்கு எடுத்துக் கொள்வேன். இந்தக் கன்னிகையை நான் மணந்தால் மற்றொன்றை இவளுக்கு அணியக் கொடுத்துவிட்டு, ஐந்தாவதை விற்று ஆகாரப் பொருள் வாங்குவேன். நான் இந்தக் கலையில் வல்லவனாதலால், அனங்கரதியை எனக்கு மணம் செய்து கொடுங்கள்" என்றான்.

அவன் முடித்தவுடன் இரண்டாமவன் பின்வருமாறு கூறினன்: "நான் ஒரு வியாபாரி. பாஷாஜ்ஞன் என்பது என் பெயர். பாஷா ஞானங்களில் நான் வல்லவன். எனக்குப் பறவைகள் மிருகங்கள் ஆகியவற்றின் பாஷைகள் கூடத் தெரியும். எந்த ஊருக்குச் சென்றாலும் என்னால் பிழைக்க முடியும்! ஆகவே ராஜகுமாரியை எனக்கு அளியுங்கள்!"

மூன்றாமவன், "கட்கதரன் என்ற போர் வீரன் நான். புஜபலபராக்கிரமம் வாய்ந்தவன். வாள் வித்தையில் எனக்குச் சமமானவன் இந்த உலகத்திலேயே கிடையாது. ஆகவே, அந்தப் பெண்ணை எனக்கு அளியுங்கள்" என்றான்.

அவன் அவ்விதம் கூறி முடித்தவுடன், நாலாமவன் முன் வந்து, "ஜீவதத்தன் என்னும் பிராமணன் நான். இறந்தவர்களை உயிர்ப்பிக்க என்னால் முடியும். மந்திர வித்தையில் நான் வல்லவன். எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறேன். ஆகவே, அவளை எனக்கு மணம் செய்து கொடுங்கள்" என்று வேண்டினன்.

அவர்கள் நால்வரும் இவ்விதம் சொன்னவுடன், தன் குமாரத்தியுடன் கூட இருந்து இதைக்கேட்ட வீரதேவ மன்னன், அவர்கள் நால்வரும் ஆடையிலும் உருவத்திலும் ஒரே மாதிரியான தேவர்கள் போன்றே இருப்பதை நோக்கி என்ன செய்வதென்று விளங்காமல் திகைத்துப் போனன்.

அனங்கரதியோ அந்நால்வரில் ஒருவனை தனக்குப் பொருத்தமானவன் என்று தேர்ந்தெடுத்துக் கொண்டாள்.

இவ்விதம் கதை சொல்லிவந்த வேதாளம், விக்கிரமாதித்தனை நோக்கி, "ஓ! ராஜனே! அந்நால்வருள் யாருக்கு அனங்கரதியை மணம் செய்து கொடுக்க வேண்டும்? சொல்லுமையா!" என்று கேட்டது.

அதற்கு விக்கிரமாதித்தன் பின்வருமாறு விடையளித்தான்: "அரசகுலத்தைச் சேர்ந்த அனங்கரதியைத் துணி நெய்பவனுக்கு எப்படி கொடுக்க முடியும்? அவன் தினந்தோறும் ஐந்து ஜதை துணி நெய்வதினல் என்ன விசேஷப் பிரயோஜனம்? அவளை வியாபாரிக்குத் தான் மணம் செய்து கொடுக்க முடியுமா? பறவை வியாபாரிக்கு மிருகங்களின் பாஷை தெரிந்திருந்தால் என்ன பயன்? பிராமண குலத்தவனுக்குதான் அவளை மணம் செய்து கொடுக்க முடியுமா? மந்திரவாதத்தால் தன் குல தர்மத்தினின்றும் நழுவிப் போய் விட்டவனையிற்றே பிராமணனும்! ஆகவே அரசகுமாரியின் அதி அழகை வாள் முனையாலே காப்பாற்றக்

கூடியவனும், அரசகுலத்தைச் சேர்ந்தவனுமான போர்வீரன் கட்கதரனுக்கே அனங்கரதியை மணம் செய்து கொடுக்க வேண்டும்!

இதை கேட்ட வேதாளம் விக்கிரமாதித்தனின் தோளைவிட்டு ஜிவ்வென்று கிளம்பி பழையபடியே முருங்க மரத்தில் தொற்றிக்கொண்டது.

## 10. மதனசேனையின் கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்திலிருந்து வேதாளத்தைப் பிடித்து கட்டிக் கொண்டு வரும் போது, வேதாளம் மறுபடியும் பின் வரும் கதையை சொல்ல ஆரம்பித்தது:

மன்னாதி மன்னர்களையெல்லாம் ஏவல் கொள்ளும் வீரபாஹூ என்னும் மகாராஜன் ஆட்சிபுரிந்த மகத நாட்டிலே, அனங்கபுரம் என்னும் நகரம் ஒன்று இருந்தது. அந்தக் காலத்தில் வாணிபம் பெருகி இருந்ததால் அங்கே வணிகர்களுக்கெல்லாம் தலைவராக அர்த்ததத்தர் என்னும் தன வணிகர் ஒருவர் தலை சிறந்து விளங்கினார். அவர் தலை போனாலும் சொன்ன சொல் தவறாத நாணயஸ்தரெனப் பெருமை பெற்றிருந்தார். அவருக்கு தனதத்தன் என்ற குமாரனும், மதனசேனை என்ற குமாரத்தியும் இருந்தார்கள். மதனசேனை ஆடவர்களின் மனதில் மோகப்போர் மூட்டும்படியான அழகுக் கவர்ச்சி படைத்தவளாய் இருந்தாள். வள் மிகவும் வெகுளிப்பெண்; கள்ளங்கபடு இல்லாதவள்; தும் கலங்காதவள்; குணவதி; தந்தையைப் போலவே, சொல் தவற மாட்டாள். உயிரே போவதாய் தன் வாக்கை காப்பதே தன் குலதர்மம் என

ஒரு நாள் மதனசேனை, தோட்டத்தில் தன் தோழிகளுடன் விளையாடிக்கொண்டிருந்த போது, அவளுடைய தமையனின் பிராண சிநேகிதனை தருமதத்தன் என்பவன் அவளைப் பார்க்க வந்தான். சின்னஞ்சிறு வயதில் அவளோடு விளையாடியும் நெருங்கிப் பழகி வந்தவனுமாகையால், அவனுடைய நெஞ்சில் ஆழமாகப் பதிந்து கிடந்த அன்பின் வேர், அவளைப் பருவ மலர்ச்சியில் கண்டதும், மோகக் கொடியாகத் தழைத்து விட்டது. மதனசேனையின் மீது தருமதத்தன் தீராத மையல் கொண்டு விட்டான். பூந்தோட்டத்தில் புன்னகைச் சோலையாய் தோழிகளின் நடுவே கும்மாளமிடும் அவளை பகல் நேரம் முழுவதும் பார்த்துப் பார்த்து பெருமூச்சு விட்டவாறே தருமதத்தன் தன் பொழுதை போக்கினான். அவள் வீடு திரும்பியதும், அவளைத் தனித்து சந்திக்க முடியாமல் போன சோகத்துடன் அவன் தன் இருப்பிடத்தை அடைந்தான்.

இரவு முழுவதும் தூக்கம் வராமல் தருமதத்தன் தன் படுக்கையில் கிடந்து புரண்டான். பித்தனைப் போலாகிவிட்ட அவனை உற்றாரும் உறவினரும் விசாரித்த போது அவன் பதில் ஒன்றும் கூறவில்லை. நள்ளிரவுக்குப் பிறகு தூங்கிப் போனான். அப்போதும் அவன் தன் காதலியைச் சந்தித்துக் கொஞ்சி மகிழ்வதாகவே கனவு கண்டு வந்தான்.

அவன் மோகம் அவ்வளவு தூரம் தலைக்கேறியிருந்தது. மறு நாள் காலையில் அவன் கண்விழித்தவுடன் புறப்பட்டு, முதல் நாள் மதனசேனையைக் கண்ட அதே பூந்தோட்டத்தை அடைந்தான். மதனசேனை தன் தோழிகளுக்காகத் தோட்டத்தில் தனியாகக் காத்திருந்தாள். உடனே தருமதத்தன் அது சமயமெனக் கருதி, மதனசேனையிடம் தன் காதலைத் தெரிவித்துத் தன் ஆவலைப் பூர்த்தி செய்யுமாறு வேண்டினான். அவளும் அவன் நிலைக்காகப் பச்சாதாபப் பட்டாள். ஆனால் அவளுக்கு விபரம் தெரிவதற்கு முன்பாகவே அயலூரிலுள்ள சமுத்திரதத்தன் என்கிற வணிக குமாரனுக்கு மதனசேனையை மண முடிப்பதாக அவளுடைய தகப்பனார் வாக்குறுதி கொடுத்து விட்டார். இனி தலை போனாலும் தந்தை வாக்குறுதி தவறமாட்டார் என்பதும் மதனசேனைக்குத் தெரியும்! அதனால் அவள் கனிவுடன் கண்களில் நீர் துளிக்க தருமதத்தனை நோக்கி, "நான் ஒரு கன்னிப் பெண். என்னை ஏற்கனவே வேறொரு வணிககுமாரருக்கு மணம் முடித்துக் கொடுக்க நிச்சயமாகி விட்டது. சிறிது காலத்திற்குள்ளாகவே எப்படியும் விவாகம் நடந்தே தீரும். ஆகவே உங்கள் காதலானது மணம் பெற வழியேயில்லை! யார் கண்ணிலும் படாமல் வந்தவழியே திரும்பிச் சென்று விடுங்கள். இல்லாவிட்டால் வீண் அபவாதம் ஏற்படக் கூடும்" என்று எவ்வளவோ நல்வார்த்தைகள்

சொல்லித் தடுத்தும் தருமதத்தனின் மோகம் அடங்கவில்லை. பருவம் குலுங்கும் அவளுடைய புத்திளம் அழகைக் காணக்காண, தருமதத்தனின் நெஞ்சிலே அடக்க முடியாத ஓர் ஆசையின் உத்வேகமாய் கொழுந்து விட்டெரிந்தது.

"எது வேண்டுமானாலும் வரட்டும். நீ இல்லாமல் என்னால் வாழ முடியாது!"

இதைக் கேட்ட மதனசேனை பலவாறாகவும் சிந்தித்தாள். மோகத்தின் வேகத்தால் அந்தக் கணமே அவன் தன்னைப் பலவந்தம் செய்வானோ என்று தோன்றியது.

அவள் தருமதத்தனை நோக்கி, "தருமதத்தா! உன்னுடைய நோக்கம் பிசகானதென்றாலும் உன்மீது எனக்குக் கோபம் ஏற்படவில்லை! என் கன்னி அழகுதான் உன்னை இவ்வாறு தூண்டுகிறது. அதை நீ ஒரு முறை பருகிவிட்டால் உன் மோகம் தீர்ந்து போகும் என்பது எனக்குத் தெரியும்! ஆனால் உன் ஆசையை இப்போது அடக்கிக் கொள்! நான் கன்னிப் பெண்! கலியாணமாகும் முன் கன்னித் தன்மையை அழிப்பதனால் உனக்கு மகாதோஷம் உண்டாகும்! முதலில் எனக்கும் அந்த வணிக குமாரருக்கும் கலியாணம் முடியட்டும். அதனால் என் தந்தைக்குக் கன்யா பலன் கிட்டட்டும். அதன் பிறகு உன்னைச் சந்திக்க ஒரு நாள் நானாகவே வருகிறேன்" என்றாள் மதனசேனை. "தாமரையிலே ஒரு வண்டு தேன் அருந்திய பிறகு மற்றொரு வண்டு அதை அடையுமா? பிறன் ஒருவன் தொட்ட பெண்ணை நான் தொடமாட்டேன். உன் அழகின் முதல் மலர்ச்சி எனக்குத்தான் முதலில் சமர்ப்பணமாக வேண்டும்!" என்றான் தருமதத்தன்.

இவ்விதம் அவன் சொன்னவுடன் மதனசேனை, "காதலித்த கன்னிகையின் அழகு முதலில் உனக்குத்தான் உல்லாசம் தரவேண்டும் என்கிறாய்! அப்படியானால் எனக்குக் கல்யாணம் ஆனவுடனே நான் உன்னை அடைகிறேன். அதன் பிறகே கொண்ட கணவனை அடைவேன்! என் கணவர் என் அழகை ரசிக்கும் முன், கன்னித்தன்மை அழியாதவளாகவே, சூடாத மலராகவே, உன்னிடம் ஒரு நாள் வருவேன்! என்னை நம்பு! அர்த்ததத்தனரின் மகள் சொன்ன சொல் தவறமாட்டாள்!" என்று தெரிவித்தாள். அப்படி அவள் சொன்ன பிறகும் காதலனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. அவள் சத்தியம் செய்து கொடுத்த பிறகே அவளைப் போகவிட்டான்.

கல்யாணத்திற்கு நிச்சயித்த நாளும் வந்தது. முகூர்த்தமும் நடந்தது. புருஷன் வீட்டை அடைந்த மதனசேனை, பகல் முழுவதும் குதூகலத்துடன் இருந்தாள். ஆயினும் இரவு வந்து புருஷன் அவளை நெருங்கியதும், அவள் கண்ணீர்விட

ஆரம்பித்தாள். அதைக் கண்ட அவள் கணவன் அவள் தன்னை விரும்பவில்லையென்று நினைத்து அவளை நோக்கி, "பெண்ணே! நீ என்னை நேசிக்காவிட்டால் நானும் உன்னைத் தொட விரும்பவில்லை. ஆகவே, உன் உள்ளத்தைக் கவர்ந்த காதலன் எவனோ, அவன் யாராக இருந்தாலும் சரி, அவனிடம் செல்!" என்று சொன்னான். இதைக் கேட்டவள், தன் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, நாத்தழுதழுக்க, பின்வருமாறு சொன்னாள். "நான் உங்களை என் உயிரினும் அதிகமாக நேசிக்கிறேன். ஆயினும் நான் சொல்வதை தாங்கள் சாவதானமாகக் கேட்க வேண்டும். முதலில் எனக்குத் தாங்கள் மன்னிப்பு அளிப்பதாக வாக்குறுதியை அளித்தால்தான் நான் சொல்லுவேன்."

மனைவி இவ்விதம் கேட்டவுடன் கணவன் வேண்டா வெறுப்பாக அவள் வேண்டுகோளுக்கு இசைந்தான். அவளும் வெட்கமும் பயமும் பிடித்துக் கொள்ள கவலையுற்று தன் கதையை சொன்னாள்.

"ஒரு நாள் நான் தோட்டத்தில் தனியே இருக்கையில் என் தமையனுடைய நண்பனான தருமதத்தன் என்னைக் கண்டு மையல் கொண்டு, அவன் மோகத்தை என்னிடம் தெரிவித்தான். அவன் என்னைப் பலாத்காரம் செய்யப்போகும் தருணத்தில் என் தந்தைக்குக் கன்யாதான பலனை அளிக்கவும், வீண் அபவாதத்துக்கு இடம் கொடுக்காமல் இருக்கவும் நினைத்து, எனக்குக் கல்யாணம் ஆனவுடன் கணவனை அடைவதற்கு முன்னதாக அவனிடம் வருகிறேன் என்று அவனுக்கு வாக்குறுதி அளித்து அவனை அனுப்பினேன். ஆகவே என் வாக்கை நான் இப்போது காப்பாற்றவேண்டும். என் குழந்தைப் பருவத்திலிருந்து நான் உண்மையாக நடந்து வருகிறேன். கொடுத்த வாக்கை காப்பதே எங்கள் குல தர்மம். ஆகவே அதை மீறாமல் அவனைப் போய் பார்த்துவிட்டு தங்களை அடைவதற்கு அனுமதி அளிக்கவேண்டும்" என்று வேண்டினாள்.

இதைக் கேட்ட கணவனுக்கு இடியுண்டதுபோல் இருந்தது; என்ன செய்வது என்பது விளங்கவில்லை. ஆயினும் கொடுத்த வாக்கை மீறுவதற்கில்லை. "அவள் வேறு ஒருவன் மீது நாட்டம் கொண்டிருந்தாலும் இல்லாவிட்டாலும், வாக்குறுதியின் பிரகாரம் அவள் போகத்தான் வேண்டும். நான் எதற்காக அவளைத் தடுக்க வேண்டும்? இவ்விதம் நினைத்த சமுத்திரதத்தன் தன் மனைவியை நோக்கி, "உன் சத்தியத்தைக் காப்பாற்ற கலியாணமாகியும் கன்னியாகவே போ!" என்று அவள் இஷ்டப்படியே போக அனுமதி கொடுத்துவிட்டு, அவள் முகத்தைக் கூடப் பாராதபடி வேறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டான்.

மதனசேனை எழுந்து முக்காடிட்டுக் கொண்டு தன் புருஷன் வீட்டைவிட்டுக் காதலன் ஊருக்குக் கிளம்பினாள் - நடுநிசியிலே, உலகமே அறியாதபடி!

கணவனின் ஊருக்கும் காதலனின் ஊருக்கும் நடுவே சிறுகாடு ஒன்று தான் இருந்தது. அந்தக் காட்டில் பயங்கரமான வழிப்பறிக் கள்வன் ஒருவனும் இருந்தான்.

அந்த நள்ளிரவிலே. மதனசேனை மட்டும் தனியே போவதை பார்த்த வழிப்பறிக்கள்ளன், அவளை நோக்கிப் பாய்ந்து வந்து, முந்தானையின் முனையைப்பற்றி இழுத்து அவளைப் பிடித்துக் கொண்டான். "நீ யார்? எங்கே போகிறாய்?" என்று கேட்டான்.

அதைக் கேட்ட அவள் பயந்துவிட்டாள். எனினும் அவள், "அதைப்பற்றி உனக்கென்ன? என்னைவிட்டுவிடு! நான் அவசரமாகப் போகவேண்டும்!" என்றாள்.

"நான் திருடன், உன்னை விட்டுவிடுவேனா?" என்று கேட்டான் அவன்.

"அப்படியானால் என் நகைகளை எடுத்துக்கொள்!" என்று மதனசேனை சொன்னாள்.

"பார்த்தவர்களை மயக்கும், பெண்கள் குலத்துக்கே ஆபரணமான உன்னை விட்டுவிடுவேனா? உன்னைவிட்டுவிட்டு, இந்தக் கல் நகைகளைப்பற்றியா நான் யோசிக்கப் போகிறேன்?" என்று அந்தப் பயங்கரக் கள்ளன் சிரித்தான். அவன் முன் மெல்லிய மல்லிகைப் பூவைப்போல் துவளும் மதனசேனை வெலவெலத்துப் போனாள். கள்ளனின் விழிகளிலே வீசும் மோக வாடையையும், அவனுடைய பலநாளையப் பசியையும் அவள் புரிந்து கொண்டாள்.

"ஐயோ! என் உடல் அழகால் யோக்கியர்களும் அயோக்கியர்களாக மாறுகிறார்களே! ஆனால் என் உள்ளத்தின் அழகால் கெட்டவனும் நல்லவனாக மாறக்கூடாதாவென ஏங்குகிறேனே!" என்று மதனசேனை பலவாறாகவும் புலம்பினாள். ஆனால் திருடனோ, அவளுடைய அலாதியான அழகென்னும் ஆபரணத்தைத் தான் பிடிவாதமாக விரும்பினான்.

"திருடனே! என் கன்னித் தன்மையை மட்டும் திருடாதே! அதை முதன் முதலாக என்னிடமிருந்து திருடிக் கொள்ள வாக்குறுதி பெற்றவன் வேறொருவன் இருக்கிறான். அந்தத் திருடனிடம் போகத்தான் இந்த அர்த்தராத்திரியில் கணவன் அனுமதியுடன் கிளம்பி வந்திருக்கிறேன்!" என்று அவள் தன் கதையையெல்லாம் அவனிடம் சொல்லி வேண்டினாள்.

"தருமதத்தனிடம் நான் கொடுத்த வாக்கை நிறைவேற்று வதற்குத் தான், காட்டுப்பாதை என்றும் கலங்காமல் நடுநிசியில் கணவன் வீட்டிலிருந்து புறப்பட்டு வந்திருக்கிறேன். அதைக் காப்பாற்ற நீ மனமிளகி அனுமதி கொடு! சத்தியம் காப்பது எங்கள் குல தர்மம்! இப்போது என்னை விட்டுவிடு! என்னைக் காதலித்தவனிடம் கலியாணமாகியும் கன்னியாகவே என் அழகை முதல்பலி கொடுத்து, என் வாக்கைக் காப்பாற்றி விட்டு, மறுபடி உன்னிடம் வருகிறேன். நிச்சயம் இதே இடத்திற்கு வருகிறேன். நான் திரும்பி வரும்போது நீ இங்கே இருந்தால் உன் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளலாம்! என்னை நம்பு! இது சத்தியம்!" என்று மதனசேனை வாக்குறுதி கொடுத்தாள்.

இதைக் கேட்ட திருடன் அவள் வார்த்தையில் ஓரளவு நம்பிக்கை கொண்டு, அவள் தன் சொல்லை மீறமாட்டாள் என்று என்னவோ ஒன்று அவன் மனச்சாட்சியில் உறுத்தவே, மதனசேனைக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு, அவள் திரும்பிவருவதை எதிர்நோக்கி அங்கேயே தங்கியிருந்தான்.

இவ்வாறு மதனசேனை தன் கன்னித் தன்மையைத் தன் கணவனுக்கு நிவேதிக்காமல், கள்ளனிடம் பறி கொடுக்காமல், காதலனிடம் பலிகொடுக்க வந்து சேர்ந்தாள்.

தருமதத்தனே அவளைக் கண்டதும் தலை குனிந்தான். அவளுடைய கதையையெல்லாம் கேட்டதும் அவளை ஏறிட்டுப் பார்க்கவே அவன் கண்கள் கூசின.

"இதோ பார்! கொடுத்த வாக்கின்படி கலியாணமாகியும் பசுமை மாறாமல், புதுமை மறையாமல், வழிப்பறிக் கள்ளனிடம் சிக்கியும் எச்சிற் பாண்டமாகாமல், கன்னிப் பெண்ணாகவே உன்னிடம் வந்திருக்கிறேன்! இந்த ஓர் இரவில் அவ்வளவையும் உன்னிடம் பலிகொடுக்க வந்திருக்கிறேன்! அருகில் வா! ஏறிட்டுப்பார் என்னை!" என்றாள் மதனசேனை.

அதைக் கேட்டதும் தருமதத்தனால் அவளை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. உடம்பெல்லாம் சிலிர்த்தது.

"மதனசேனா! உன் கணவனின் பெருந்தன்மையையும், ஒரு வழிப்பறிக் கள்ளனின் பெருந்தன்மையையும் விட என் மனது குறுகியதல்ல! என்னிடம் பதிதையாக வந்தவள் இந்த இரவில் என் வீட்டைவிட்டுப் புனிதவதியாகவே போய்விடு! சொன்ன சொல் தவறாமல் நடந்து கொண்ட உன் நடத்தை ஒன்றே என்னைப் புதுமனிதனாக்கிவிட்டது. என் காதல், கள்ளனின் இருதயத்தையும் விடக் குறுகலானதோ, குரூரமானதோ அல்ல!" என்று தருமதத்தன் கூறி அந்த மங்கையைத் திருப்பி அனுப்பிவிட்டான்.

அவளும் சரியென்று அந்த இடத்திலிருந்து கிளம்பி, வழியிலே தனக்காகக் காத்திருந்த திருடன் இருக்குமிடம் வந்து சேர்ந்தாள். அவளைக் கண்டவுடனே, "போன இடத்திலே என்ன நடந்தது என்பதைச் சொல்!" என்று அந்தத் திருடன் கேட்டான். அவளும் நடந்தது நடந்தபடி, தருமதத்தன் எவ்விதம் தன்னைத் தொடாமல் திருப்பி அனுப்பிவிட்டான் என்பதைக் கூறத் தொடங்கி, "தருமதத்தனுக்கு இப்போதுதான் கண் திறந்தது! கள்ளனுக்கு இருக்கும் இதயம் காதலனுக்கு இராதா என்று சொல்லி என்னைக் கன்னிப் பெண்ணாகவே திருப்பி அனுப்பி விட்டான்!" என்றாள். அதைக் கேட்டதும் கள்ளன் கண்ணீர் வடித்தான்.

"அப்படியானால் நானும் உன்னை விட்டு விடுகிறேன்! உன் நேர்மையை நான் பெரிதும் பாராட்டுகிறேன்! விலைமகளும் கண்டு மிரண்டோடும் பயங்கரக் கள்ளனை என்னிடம் குலமகள் வந்திருக்கிறாய், சத்தியம் காக்க! உன்னைப்போல் ஒரு பெண்ணை என் வாழ்நாளில் கண்டதில்லை. உன் நகைகளும் எனக்கு வேண்டாம். நீயே எடுத்துக் கொண்டு புனிதவதியாக வீடு போய்ச் சேர்! இருதயம் என்ற விலை மதிப்பற்ற நகை உன்னால் எனக்குக் கிடைத்திருக்கிறது. அதுவே, இனி என் ஆயுள் முழுவதுக்கும் போதும்!" என்று சொல்லி அவளை விடுவித்து, அவள் வீடு வரையில் காவலாகத் துணை வந்து, அவளை வீட்டில் சேர்த்துவிட்டுப் போனான் கள்ளன்.

இவ்விதம் அவள் தன் கற்புக்கும் பங்கம் ஏதும் நேரிடாமல் திரும்பி வீடுவந்து சேர்ந்தாள். உடனே அவள் நேராகத் தன் கணவனிடம் சென்றாள். அவளைக் கண்ட கணவனும் நடந்ததை விசாரித்தான். அவளும் ஒன்றுவிடாமல் முழுவதையும் தெரிவித்தாள். தன் உடல் அழகால் ஒழுக்கம் கெடவிருந்த இருவர், உள்ளத்தூய்மையாகி நல்லவர்களாக மாறிய விந்தையையும் குறிப்பிட்டாள். தன் மானத்தையும் குடும்ப கௌரவத்தையும் இழக்காமல், சொன்ன சொல்லைக் காப்பாற்றிய தன் மனைவியை கண்ட சமுத்திரதத்தன், உள்ளம் பூரித்தான். அவ்வளவு தூய உள்ளம் படைத்த அவளை அவன் மறுபடியும் ஏற்றுக்கொண்டு அவளுடன் ஆனந்தமாக மணவாழ்க்கை நடத்தி வந்தான்.

-இவ்விதம் கதையை மயானத்தில் வேதாளம் சொல்லி முடித்துவிட்டு, விக்கிரமாதித்தனை நோக்கி, "ராஜனே! இந்தக் கதையில் கணவன், காதலன், கள்ளன் ஆகிய மூவரும் பெருந்தன்மையாக நடந்து கொண்டார்கள் என்றாலும், மூவரில் யாருடைய செயல் மிகவும் சிறப்பானது?" என்று கேட்டது.

அதற்கு விக்கிரமாதித்தன் பின்வருமாறு பதில் சொன்னான். "கணவன், காதலன் ஆகிய இருவரும் நாணயம் மிக்க வணிக குலத்தைச் சேர்ந்தவர்கள்: நாணயம் கெட்ட இருதயமில்லாதவன் என்று மனித சமூகத்தால் ஒதுக்கப்பட்ட கள்ளன் இருதயத்தோடு பெருந்தன்மையாக நடந்துகொண்ட செயலே மிகவும் சிறப்பானது! கணவனுகப்பட்டவன் தான் மணந்து கொண்ட மனைவியை வெளியே போக அனுமதித்தது பெருந்தன்மையானதென்றாலும், காலகதியால் காதலனுடைய பழைய மோகம் தணிந்து போயிருக்கலாம் என்றோ, அவளுடைய கணவனுக்கு எல்லா விஷயங்களும் தெரிந்து போய்விட்டதால் மறுநாள் மனஸ்தாபமும் சமுதாயப் புறக்கணிப்பும் ஏற்படுமெனப் பயப்பட்டிருக்கலாம் என்றோ கருதலாமல்லவா? ஆனால் நள்ளிரவில் அஞ்சாநெஞ்சுடன் யாருக்கும் பயப்படாமல் திருட்டுத் தொழில் செய்யும் ஒரு வழிப்பறிக் கள்ளன் அழகான அந்தப் பெண்ணைச் சிறிதும் தொடாமல் அவளுடைய நகைகளையும் கொடுத்துத் திருப்பியனுப்பிய செயலே மிகவும் பெருமைப் படத்தக்கதாகும்! ஆகையால் கள்ளனின் பெருந்தன்மைதான் மிகவும் சிறப்பானது!"

இவ்விதம் விக்கிரமாதித்த மகாராஜன் விடையளித்ததும் வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு பழையபடியே முருங்கமரத்தில் தலைக்கீழாகத் தொற்றிக் கொண்டது.

## 11. மூன்று தேவியர்

### கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்கமரத்திலிருந்து வேதாளத்தை பிடித்துக்கொண்டு வரும்போது, வேதாளம் மற்றொரு கதை சொல்ல ஆரம்பித்தது.

"ஹே, ராஜனே! கேள்!

முன்னொரு காலத்திலே வில்லி நகரத்திலே தர்மத்வஜன் என்னும் மன்னன் வமிசகேதுவெனப் பிரசித்தி பெற்றிருந்தான். அவனுக்கு மூன்று பத்தினிகள் இருந்தார்கள். அவர்களில் மூத்த தேவிக்கு தாராவலி என்றும், இரண்டாவது தேவிக்கு

இந்துலேகை அல்லது சந்தனக் குயத்தி என்றும், மூன்றும் தேவிக்கு மிருங்காங்கவதி என்றும் பெயர்கள் விளங்கின. அவர்கள் மூவரும் நல்ல அழகிகள்; மிகவும் மிருதுவான தேக அமைப்பு உடையவர்கள். பெண்மையின் மென்மையை அள்ளிச் சுவைப்பதையே இலட்சியமாகக் கொண்ட கலைமன்னன், தன்னுடைய முத்தேவிமாரில் எவள் மிகவும் மிருதுவான தேக நளினம் உடையவள் என்று திகைப்பதுமுண்டு.

ஒரு சமயம் வசந்த உற்சவத்தின் போது அந்த மன்னன் தன் தேவிமார் மூவருடன் சிங்கார தோட்டத்திற்குச் சென்று அவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தான். அதன் நடுவிலே மூத்த தேவியான தாராவலி விளையாட்டாக மன்னனுடைய கேசத்தைப் பற்றினாள். அப்போது அவள் கூந்தலில் காதோரம் அணிந்திருந்த தாமரை மலர் ஒன்று நழுவிக் குதித்து அவள் மடியில் விழுந்தது. அது விழுந்த அதிர்ச்சி தாங்காமல் தள்ளாடினாள். அவளது கூந்தலில் சூடியிருந்த மற்றொரு பூவின் மனோஹரமான நெடி பூங்காவனமெங்கும் பரவவே, அதன் நெடியில் போதையுற்ற ஒரு மெல்லிய பொன்வண்டு மகரந்தத்தேனை அள்ளிப் பருகப் பறந்து வந்து கூந்தலிலுள்ள பூவின் மீது அமர்ந்தது. அந்தப் பொன்வண்டின் பாரம் தாங்காமல், மெல்லிய உடல் வாய்ந்த தாராவலி மூர்ச்சித்து விழுந்துவிட்டாள். இதைப் பார்த்த அரசனும் பரிவாரத்தாரும் பதறிவிட்டார்கள். அவள் முகத்திலே குளிர்ந்த ஜலத்தைத் தெளித்து விசிறி கொண்டு விசிறியும் உணர்வு ஊட்டினார்கள். "இவ்வளவு மென்மை உடையவளா தாராவலி?" என்று அரசனும் அதிசயித்தவாறே அரண்மனை சென்றான்.

இரவு வந்த பிறகு, அவள் உடல் குணம் அடைந்து வருவதை அறிந்த மன்னன் திருப்தி அடைந்து இரண்டாம் தேவியான சந்தனக் குயத்தி எனப்படும் இந்துலேகையுடன் அந்தப்புரத்தின் மேன்மாடத்திற்குச் சென்றான். நள்ளிரவில், சந்திரகிரணம் சாளரத்தின் வழியாகப் பாய்ந்து, அருகில் உறங்கும் அரசியின் மீது விழுந்தது. தூக்கத்திலே, சரீரத்தின் மீது சந்திரகிரணம் விழுந்தது. உடனே அவள் கண் விழித்து, "ஆ! உடம்பெல்லாம் பற்றி எரிகிறதே!" என்று நிலவொளி படிந்த இடத்தைக் கையால் பிடித்துக்கொண்டு அலறினாள். இதைக் கேட்டு எழுந்த மன்னன் திகைத்து "இதெல்லாம் என்ன?" என்று வினவினான்.

அரசியின் தேகத்தில் நிலவொளி பட்ட இடங்களில் கொப்புளங்கள் கிளம்பியிருந்ததை அரசன் கவனித்து காரணம் விசாரித்தான். "என் மீது சந்திரகிரணம் விழுந்ததால் இது நேரிட்டது" என்று அவன் தேவி சொல்லிவிட்டு வலி பொறுக்க

முடியாமல் கண்ணீர்விட்டாள். உடனே அவள் நிலைக்காக மிகுந்த வேதனையுடன் பரிவாரத்தவர்களை கூப்பிட, அவர்களும் கலவரம் அடைந்து கவலை கொண்டு ஓடி வந்தார்கள். உடனே தாமரை இலைகளால் ஆன படுக்கையில் கிடத்தி அந்த இடத்திலே சந்தனக் குழம்பைப் பூசி பன்னீர் தெளித்து சிகிச்சை செய்தார்கள். "இவ்வளவு நுட்பமான உடல் வாய்ந்தவளா இந்துலேகை" என்று மன்னன் அதிசயித்தான்.

இதற்கிடையே அவனுடைய மூன்றும் தேவியான மிருங்காங்கவதி விஷயத்தைக் கேட்டு தன் அந்தப்புரத்தை விட்டுக் கிளம்பி புறப்பட்டு வந்தாள். திறந்த வெளியான முற்றத்தை அடைந்தவுடனே, நிசப்தமான அந்த இரவில், தூரத்தில், ஏதோ ஒரு வீட்டில் நெல்குத்தும் சப்தம் கேட்டது. இதைக் கேட்ட அந்த மான் விழியாள் "அப்பா, பிராணன் போகிறதே!" என்று அலறிக் கையை உதறிக் கொண்டு பாதையில் உட்கார்ந்து விட்டாள். உடனே, அவளுடைய தோழிகள் ஓடி வந்து, அவளை அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்று படுக்கையில் கிடத்தினார்கள். செக்கச் சிவந்த அவளுடைய கைவிரல்கள் செந்தாமரையில் வண்டுக் கூட்டம் உட்கார்ந்திருப்பது போல கன்றிப்போய் காணப்பட்டன. மிருங்காங்கவதி வலி பொறுக்க முடியாமல் படுக்கையில் புரண்டு அரற்றினாள்.

உடனே, இச்செய்தி மன்னனுக்கு அறிவிக்கப்பட்டது. அதைக் கேட்ட தருமத்வஜனும் மனங்கலங்கி ஓடி வந்து காரணத்தை விசாரித்தான். அவளும் தன் கைவிரல்களை அரசனுக்குக் காட்டி "உலக்கையின் சப்தம் என் காதில் விழுந்தவுடனே, என் கை விரல்கள் கன்றிப் போய்விட்டன" என்று தெரிவித்தாள். அரசனுக்கு ஆச்சரியமும், மனக்கலக்கமும் உண்டாயின. அவள் கை வலியைப் போக்க சந்தனத் தைலத்தையும், இதர மருந்துகளையும் பூசி ஆச்வாசப்படுத்தினான்.

"என் தேவிகளுள் ஒருத்திக்குப் பூப்பட்டு உடல் காயம் அடைந்து விட்டது. மற்றொருத்திக்கோ சந்திரகிரணம் உடலில் பட்ட இடத்தில் சுட்டெரித்து விட்டது. மூன்றுமவளுக்கோ உலக்கைச் சப்தம் கேட்ட மாத்திரத்திலேயே கை கன்றிவிட்டது. இவை அவர்களுடைய மென்மையையும், சுக வாழ்க்கையையும், புலனுணர்ச்சியையும் காட்டுகின்றனவே ஆயினும், அவர்களுக்கு ஒரு குறையாகவும் அன்றோ அமைந்துவிட்டன?" என்று அரசன் ஆலோசித்து, கவலையில் ஆழ்ந்தான்.

இவ்விதம் சிந்தித்துக் கொண்டே அவன் அந்தப்புரத்திலே குறுக்கும் நெடுக்குமாக அலைந்து மூன்று ஜாமங்களையும் கழித்துவிட்டான். மறுநாள் காலையில் வைத்தியர்களும்,

மற்றவர்களும் வந்து, மூன்று தேவிமாருக்கும் வேண்டிய சிகிச்சைகளைச் செய்து, அவர்களுக்குத் தீங்கு ஒன்றும் ஏற்படாது என்றும் அவர்கள் பிழைத்துவிடுவார்கள் என்றும் உறுதியளித்த பிறகே, அரசன் மனம் சமாதானமடைந்தது.

இவ்விதம் கதை கூறி முடித்த வேதாளம் "ஓ, ராஜனே! மூன்று தேவியரில் எவள் மிகவும் மென்மைத் தன்மை வாய்ந்தவள்?" என்று கேட்டது. அதற்கு விக்கிரமாதித்த மகாராஜன் பின்வருமாறு பதில் சொன்னான்:

"வண்டு கூந்தல் மேலேறினபடியால் துரகவல்லியின் தேகம் மூர்ச்சித்தது. நிலவின் ஒளி மேலே விழுந்ததால் சந்தனக் குயத்தியின் உடல் கொப்புளித்தது. மேலே படாமல், தொலைவில் எங்கோ கேட்ட உலக்கைச் சப்தத்தால் கைவிரல் கன்றிப்போன மிருங்காவதியே அதிக நுட்பமான உடல் வாய்ந்தவள்!"

இந்த விடையைக் கேட்ட வேதாளம் விக்கிரமாதித்தனின் தோளை விட்டுக் கிளம்பி பழையபடி முருங்கமரத்தில் தொற்றிக் கொண்டது.

## 12. யசக்கேது மகாராஜன் கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்திலிருந்து வேதாளத்தை பிடித்துக் கொண்டு வரும்போது அது மறுபடியும் 'கேளுமையா ராஜனே! புதிர் கதையொன்று சொல்கிறேன்!' என்று வேதாளம் பின்வரும் கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

அங்க தேசத்திலே வாரணபுரத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட யசக்கேது என்னும் மன்னன் ஒருவன் இருந்தான். அவனுக்கு வம்சமார்க்கன் என்ற விருது பெயரும் உண்டு. காம

தகனத்தில் எரிந்து போன மன்மதனே மீண்டும் உயிர் பெற்று எழுந்தவனே என்று எண்ணும்படியான அழகு வாய்ந்தவன் யசக்கேது. இந்திரனுக்குப் பிரஹஸ்பதி இருந்தது போல அந்த பூலோக வேந்தனுக்கும் திர்க்கதரிசி என்ற மந்திரி ஒருவன் இருந்தான். மன்னவனுக்குச் சந்திரவதனே என்ற நிலவைப் பழிக்கும் அழகிய நாயகி ஒருத்தி உண்டு. அவளுடைய இளமைக் கொழிப்பிலும், மோகக் கவர்ச்சியிலும் மயங்கிக் கிடந்த மன்னன் நாட்டின் நிர்வாகத்தையெல்லாம் தன் மந்திரி வசமே ஒப்படைத்துவிட்டு, சுகபோகங்களை அனுபவிக்கலானான்.

நாட்டின் நிர்வாகக் கவலையை இரவும் பகலும் ஏற்று மந்திரி திர்க்கதரிசி உழைத்து வந்தான். ஆயினும் ஊரிலே அவனைப் பற்றி "மந்திரி திர்க்கதரிசி அரசன் மனத்தைக் கலைத்து அவனைச் சுகபோகங்களில் ஆழ்த்திப் பெயருக்கு மட்டும் அவனை அரசனாக வைத்துவிட்டு, எல்லா அதிகாரங்களையும் தானே செலுத்துகிறான்" என்று வீண் அபவாதம் கிளம்பியது.

அதனால் மந்திரி மனம் வருந்தி தன் மனைவியான மேதாவதியிடம், "என் அன்பே! அரசனோ போகத்தில் ஆழ்ந்து கிடக்க அவன் வேலையை நான் செய்கிறேன். ஆனால் ஊரிலோ, நான் ராஜ்யத்தையே விழுங்கி விட்டதாக என் மீது அபாண்டம் சுமத்துகிறார்கள். இத்தகைய அபவாதம் பெரியவர்களையும் பாதிக்குமே. சீதையைப் பற்றிய பழிச் சொல்லுக்குப் பயந்து ஸ்ரீராமனே அவளைத் துறக்க நேர்ந்ததல்லவா? ஆகவே இந்தப் பழியிலிருந்து தப்ப வழி என்ன?" என்று கேட்டான்.

தன் பெயருக்கு ஏற்றபடி நல்ல மேதையுடைய மந்திரியின் மனைவி மேதாவதியும் பின்வருமாறு யோசனை கூறினாள். "நீங்கள் சிறிது காலம் இந்த இடத்தைவிட்டுத் தேசாந்திரியாக வெளி நாடுகளுக்குப் போயிருப்பதுதான் நல்லது. அப்போதுதான் உங்களுக்கு இந்த அரசாட்சியின் மீது பதவி மோகம் இல்லையென்ற உண்மை பிறருக்குத் தெரியும்; அபவாதமும் மறையும். அதோடன்றி தாங்கள் ஊரிலே இல்லாத காலத்தில் அரசரும் ராஜ்ய பாரத்தைத் தாமே ஏற்று நிர்வாகிப்பார். அதனால் பெண்ணாசையின் காரணமாக சுகபோகத்தின் மீது அவருக்கு உள்ள மோகமும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். அப்பால் நீங்கள் திரும்பி வந்த பிறகும், எவ்விதமான பழிச் சொல்லுக்கும் இடம் இல்லாமல் நீங்கள் மந்திரித் தொழிலை நடத்தலாம். ஆகவே, தாங்கள் நாடோடியாகப் புறப்பட்டு க்ஷேத்திராடனம் செய்து புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று அரசரிடம் அனுமதி பெற்றுக் கொள்ளுங்கள்."

தன் மனையாள் இவ்விதம் கூறியதைக் கேட்ட அமைச்சன், அந்த ஆலோசனையை ஏற்றுக் கொண்டு அவ்விதமே செய்வதாகச் சொன்னான். பிறகு அவன் அரசரின் சமூகம் சென்று பேசிக் கொண்டிருந்தபோது பேச்சு வாக்கிலே "மன்னர் பெருமானே! சிறிது காலம் க்ஷேத்திராடனம் பண்ணி வரலாம் என்று இருக்கிறேன். அந்த ஆசை என்னை நன்றாகப் பற்றிக் கொண்டிருக்கிறது. ஆகவே, அதற்கு அனுமதியளிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். ஆனால் அரசனோ, அதற்கு இணங்கவில்லை. "வேண்டாம்! வீட்டில் இருந்து கொண்டு தான தர்மம் முதலியனவைகளைச் செய்து அந்தப் புண்ணியத்தை அடைய முடியாதா? இதற்காகப் புண்ணியஸ்தலங்களுக்குச் செல்ல வேண்டிய அவசியமே இல்லையே" என்று மன்னவன் கூறி முடித்தான்.

இதைக் கேட்டு மந்திரி, "அரசே! செல்வத்தால் ஏற்படும் பயனால் அல்லவா தானதருமப் புண்ணியங்களை அடையமுடியும். ஆனால் புண்ணியஸ்தலங்களுக்குச் சென்று புனித நீராடுவது நிரந்தரமான புண்ணியத்தைக் கொடுக்கும். அன்றி, அந்தப் புண்ணியஸ்தலங்களைப் பெரியவர்கள் தங்கள் இளமையிலேயே சென்று தரிசிப்பார்கள். இல்லாவிட்டால் அந்தப்பேறு கிடைக்கும் என்ற நிச்சயம் ஏது? இந்த ஜன்மத்தையும் நிலையா உடலையும் நாம் நம்ப முடியுமா?" என்று திரும்பவும் மந்திரி தன் வேண்டுகோளை வற்புறுத்திக் கூறினான்.

அதை மறுபடியும் அரசன் மறுத்து உரைத்துத் தடுக்கப் போகும் சமயம் பணியாள் ஒருவன் உள்ளே வந்து அரசனிடம், "மன்னர் பெருமானே! சூரியன் வானவீதியின் மத்திக்கு வரப் போகிறான். தாங்கள் எழுந்து ஸ்நானம் செய்ய வேண்டிய காலம் கடந்து போகிறது" என்று தெரிவித்தான். உடனே நீள்நில வேந்தனும் எழுந்து நீராடச் சென்று விட்டான். மந்திரியோ வாய் பேசாமல், அரசனுக்கு வணங்கிவிட்டுத் தன் வீடு திரும்பினான்.

பிறகு மந்திரி யாருக்கும் தெரியாமல் தன் வேலைக்காரர்களுக்கும் கூடத் தெரியாதபடி ரகசியமாகப் புறப்பட்டு விட்டான். இல்லக்கிழத்தியை அவன் தன்னுடன் அழைத்து செல்லாமல் ஊரிலேயே விட்டு விட்டான். அவள் அவ்விடத்தை விட்டு கிளம்பக் கூடாது என்றும் தடுத்து விட்டான். தனியாக அவன் கொஞ்சமும் களைப்பு இல்லாமல் தேசம் தேசமாகச் சுற்றி அனேக புண்ணியஸ்தலங்களை தரிசித்து கடைசியாக, பௌண்ட்ர தேசத்தை அடைந்தான். அந்நாட்டிலே, கடற்கரையை ஒட்டிச் சமீபத்தில் இருந்த ஒரு நகரத்தை அடைந்து, அங்கே உள்ள

சிவன் கோவிலுக்குப் போய், ஸ்வாமி தரிசனம் செய்து விட்டு அதன் பிரகாரத்தில் உட்கார்ந்து விட்டான். மந்திரி தீர்க்கதரிசி.

அவ்வூரில் நிதிதத்தன் என்ற வியாபாரி ஒருவன் இருந்தான். ஸ்வாமி தரிசனத்திற்காக அவன் கோவிலுக்கு வந்தான். அங்கே பிரகாரத்தில் பிரயாணத்தால் புழுதி படிந்து, களைப்புற்று, வெயிலில் கிடந்த தீர்க்கதரிசியைக் கண்டான். அந்த வியாபாரி வந்தவர்களை நன்றாக உபசரிக்கும் குணமுள்ளவன். அவன் தீர்க்கதரிசியைப் பார்த்தான். நல்ல ஸ்திதியில் இருப்பவன் என்பதற்கான அடையாளங்களும் அவன் மேல் தென்பட்டன. உடனே வியாபாரி அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று அவனுடைய நிலைக்கு ஏற்றபடி நன்றாக உபசரித்தான். தீர்க்கதரிசி நீராடிச் சாப்பிட்டு களைப்பு நீங்கிய பிறகு. "நீங்கள் யார்? எங்கேயிருந்து வருகிறீர்கள்? எங்கே போகிறீர்கள்?" என்று நிதிதத்தன் குசலப்ரச்னம் செய்தான். தீர்க்கதரிசி தன் விவரம் முழுவதையும் கூறாமல், "தீர்க்கதரிசி என்பது என் பெயர்; நான் அங்க தேசத்திலிருந்து க்ஷேத்ராடனம் செய்ய வந்திருக்கிறேன்." என்று மட்டும் சொன்னான்.

இதைக் கேட்ட வியாபாரி, "நான் வியாபார விஷயமாக சுவர்ணத் தீவுக்குப் (சுமத்ரா) புறப்படப் போகிறேன். ஆகவே நான் திரும்பி வரும் வரையில் நீங்கள் என் வீட்டில் தங்கி இளைப்பாறுங்கள். நான் திரும்பி வந்த பிறகு நீங்கள் புறப்பட்டுப் போகலாம்" என்றான்.

"ஐயா! அப்படியானால் நான் மட்டும் இங்கே இருப்பானேன்! உங்களுக்கு ஆட்சேபனையில்லையானால் நானும் உங்களுடன் கூடவே புறப்பட்டு வருகிறேன்." என்று அவன் கூறியதைக் கேட்டு வியாபாரியும் அதற்கு ஒப்புக் கொண்டான்.

மந்திரி அன்றையத் தினத்தை அந்த வீட்டிலே கழித்தான். மறுநாள் அவன் வியாபாரியுடன் கப்பலேறிக் கடலில் பிரயாணம் செய்ய ஆரம்பித்தான். கப்பலில் சரக்கு நிறைய ஏற்றியிருந்தது. கடற் பிரயாணம் அரிய காட்சிகளுடன் மனதிற்கு ரம்யமாகத்தானிருந்தது. காலக்கிரமத்தில் சுவர்ணத்தீவை தீர்க்கதரிசி அடைந்தான். வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த நிதிதத்தனோடு அந்தத் தீவில் சிறிது காலம் தங்கியிருந்து விட்டுத் திரும்பவும் அவனுடனே புறப்பட்டு மந்திரி ஊர் திரும்பினான்.

அவ்விதம் வரும்போது வழியில் நடுக்கடலில் திடீரென்று ஓர் அலை மிகவும் உயரக் கிளம்பியதைக் கண்டான். உடனே கடலிலிருந்து கற்பக விருக்ஷம் தோன்றியது; அதன் கிளைகள்

எல்லாம் பொன்னுல் ஆனவை; அதன் பழங்கள் முத்தும் பவழமுமாக நிறைந்திருந்தன. நவரத்தினங்களே அந்த மரத்தின் புஷ்பங்கள். அதன் ஒரு கிளையில் மணிவைத்து இழைத்த ஒரு பஞ்சணையொன்றில் அழகான மங்கை ஒருத்தி சாய்ந்து கொண்டிருந்தாள். இதைக் கண்ட மந்திரி பிரமித்து "அந்த அதிசய மோகினி யாராக இருக்க முடியும்?" என்று நினைத்தான். அதே சமயம் கையில் யாழுடன் விளங்கிய அந்த மங்கை பாடத் தொடங்கினுள்.

"முன் ஜன்மத்தில் எந்தக் காரியங்களைச் செய்து விதை விதைத்தானே அவற்றின் பலனையே மனிதன் இந்த ஜன்மத்தில் அனுபவிக்கிருன். இதில் சந்தேகமே இல்லை. முன் ஜன்மத்தில் நடந்ததன் பலனைப் பிரம்மாவாலும் மாற்ற முடியாது"

மேற்கூறிய கருத்துள்ள பாடலைப் பாடி முடித்தவுடன் அந்த விசித்திர வனிதை கற்பக விருக்ஷத்துடனும் மஞ்சத்துடனும் கடலில் மறைந்து விட்டாள். "இன்றைக்கு நான் ஓர் அதிசயமான காட்சியைக் கண்டேன். நடுக் கடலிலிருந்து கற்பக விருக்ஷம் கிளம்பும் என்றோ, அதன் மீது தேவலோகப் பெண் ஒருத்தி அமர்ந்திருப்பாள் என்றோ அந்த அற்புதக் காட்சியைத் தான் காண முடியும் என்றோ, எவனும் கனவுகூட கண்டிருக்க முடியாது. ஆம்; முன்னொரு காலத்தில் பாரிஜாத விருக்ஷம், லக்ஷ்மி, சந்திரன் ஆகிய அனைத்தும் கடலிலிருந்துதானே தோன்றின? இன்றைக்கும் சமுத்திரம் நவநிதிக்கும் இருப்பிடமாகத்தான் இருக்கிறது" என்று மந்திரி திர்க்கதரிசி ஆச்சரியத்துடன் தனக்குத்தானே நினைத்தான். இவ்விதம் அவன் பிரமித்து நிற்பதைக் கண்ட கப்பலோட்டிகளும் இதரரும், "இந்த மாயா மோகினிப் பெண் இதே இடத்தில் இம்மாதிரியே எப்போதும் தோன்றி மறைவது வழக்கம். ஆனுல் இந்தக் காட்சி உங்களுக்குப் புதிதாக இருக்கிறது!" என்று தெரிவித்தார்கள். "மனித வாடையே வீசாத மகா சமுத்திரத்தின் நடுவே சல்லாபசுந்தரி ஒருத்தி எப்படி தன்னந்தனியாக பாடிக் கொண்டிருக்க முடியும்? அது வெறும் கானல் நீராகவோ, மாயையாகவோ, தெய்வீகமாகவோதான் இருக்க முடியும்! நாம் அதைக் காணலாகாது. வாரும் போய் விடலாம்!" என்று கப்பலோட்டிகளும் நிதிதத்தனும் மந்திரியை அழைத்துக் கொண்டுபோய் விட்டார்கள்.

ஆயினும் மந்திரியின் பிரமிப்பு நீங்கவில்லை. அவள் மீதுள்ள நினைப்பும் மறையவில்லை. கப்பல் கரையை அடைந்ததும் வியாபாரி கப்பலோட்டிகளுக்கு கைநிறையப் பணம் கொடுத்து அவர்களைக் களிப்படையச் செய்துவிட்டு வியாபாரச்

சரக்குகளைக் கீழே இறக்கினான். மந்திரியும் வியாபாரியுடனே அவனுடைய வீட்டிற்குச் சென்றான். வியாபாரி திரும்பி வந்து விட்டதையறிந்து அவன் குடும்பத்தார் குதூகலம் அடைந்தார்கள். மந்திரியும் அவ்விடம் சிறிது காலம் தங்கிவிட்டுப் பிறகு நிதிதத்தனிடம், "இது வரையில் உங்கள் வீட்டில் நான் சௌக்கியமாக இருந்து வந்தேன். இனி நான் என் சொந்த ஊர் திரும்ப விரும்புகிறேன்" என்று விடைபெற்றுக் கொண்டு கிளம்பினான்.

திர்க்கதரிசி ஊரைவிட்டுக் கிளம்பியது முதல் அவனைத் தேடிப் பிடித்துச் செய்தி கொணர்வதற்காக யசக்கேது மன்னன் ஒற்றர்களைப் பல இடங்களுக்கும் அனுப்பி வைத்திருந்தான். மந்திரி ஊர் திரும்புவதைக் கண்டு அவர்கள் முன்னதாகவே ஓடிவந்து மன்னர்பெருமானிடம் தெரிவித்தார்கள். மந்திரி யில்லாமல் மனவருத்தம் அடைந்திருந்த மன்னர்பெருமானும் மந்திரியை எதிர்கொண்டு வரவேற்று நேராக அரண்மனைக்கு அழைத்துச் சென்று பலவாறாகவும் உபசரித்தான்.

நீண்டகால பிரயாணத்தால் உடல் மெலிந்து வாடி வதங்கியிருந்த மந்திரியைப் பார்த்து அரசன், "அமைச்சரே! ராஜ்யபாரத்தை என் தலைமீது சுமத்தி என்னைத் தவித்து வாடவிட்டு, உம் உடலையும் துன்புறுத்திக் கொண்டு நாடோடி யாக ஊர்சுற்ற உமக்கு எப்படித்தான் மனம் வந்தது? ஆயினும் விதியின் செயலை யார் அறிவார்? திடீரென்று என்னைவிட்டு க்ஷேத்திராடனம் போனீரே, எந்த ஊர்களுக்கெல்லாம் சென்றீர்? என்ன அதிசயங்களையெல்லாம் கண்டீர்கள்? அவற்றைச் சொல்ல வேண்டும்?" என்று கேட்டான்.

மந்திரியும் தான் சுவர்ணத் தீவிற்குப் போய் வந்தது உள்பட எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் மன்னர் மன்னனுக்குக் கூறலானான். அதனால் கடலில் தான் கண்ட அதிசய காட்சியையும் நடுக்கடலில் கற்பக விருக்ஷம் கிளம்பியதையும், அதன் கிளையிலே மூவுலகமும் பிரமிக்கத்தக்க வனிதை ஒருத்தி அதில் அமர்ந்திருப்பதையும் மந்திரி சொல்ல நேர்ந்தது.

"கலாரசிகரான மன்னர் பெருமானே! தங்களின் ராஜஸ்திரீ சந்திரவதனை தான் உலகத்திலே அதிசய அழகி என்று மதிமயங்கி மணிமுடியின் கடமைகளை மறந்து கிடந்தீர்கள்! மதியாலோசனை படைத்த மந்திரியையும் மதிமயங்கச் செய்யும் மங்கையை நான் கண்டேன்! மனித ஜாதியின் வாடை படாத அந்தக் கன்னிகை யின் முகத்திலே அதிசயமான ஒரு மாயக் கவர்ச்சி இருக்கிறது! அவள் யாழ் மீட்டிப் பாடும் சோகத்திலுங் கூட அலாதியான ஒரு கவர்ச்சி இருக்கிறது" என்று வர்ணித்தான் மந்திரி.

இதைக் கேட்ட மாத்திரத்திலே ஸ்திரீலோலனுன மன்னனுக்கு அந்த மங்கையின் மீது மோகம் ஏற்பட்டது. அந்த அற்புதவல்லி இல்லாமல் தன் வாழ்க்கையும் ராஜ்யமும் வீண் என்றே அவன் எண்ணமிட்டான். ஆகவே, அவன் தன் மந்திரியை ஒருபுறமாக அழைத்துச் சென்று, "நான் அந்த அதிசய கன்னிகையை அவசியம் பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் என் உயிர் தரியாது! ஆகவே விதியை வேண்டிக் கொண்டு நீர் சொன்ன வழியிலே போய்ப் பார்க்கிறேன்! நீர் என்னைத் தடை செய்யக்கூடாது! என்னைத் தொடர்ந்தும் வரக்கூடாது! நான் மாறுவேடம் பூண்டே போவேன். நான் இல்லாத காலத்தில் இந்த ராஜ்யத்தை நீர்தான் கவனித்து ஆண்டு வரவேண்டும். என் ஆணைக்குக் கீழ்ப்படிய மறுக்கலாகாது. இல்லாவிடில் உம் மாளிகையின் வாசற்படியிலே என் உயிர் போய்விடும்!" என்று தெரிவித்தான்.

யசக்கேது மன்னன் அவ்விதம் பிடிவாதமாகச் சொல்லி, மந்திரிக்குச் சமாதானம் கூறவே இடம் அளிக்காமல், அவனை வீட்டுக்கு அனுப்பி விட்டான். மறுநாளே அவன் தன் ராஜ்ய நிர்வாகத்தை மந்திரியிடம் ஒப்படைத்துவிட்டு, அன்றைய இரவே ஒரு துறவி போல வேஷம் பூண்டு கிளம்பினன். வழியிலே அவன் குசநாபர் என்ற முனிவரைக் கண்டு அவரை வணங்கினன். துறவி போல மாறு வேஷத்திலிருந்த அரசனைப் பார்த்து அந்த ஞானி, "தைரியமாகச் செல்: லக்ஷ்மிதத்தன் என்னும் வணிகர் தலைவனோடு கப்பல் ஏறிக் கடல் பிரயாணம் செய்து நீ விரும்பும் அதிசய மங்கையை அடைவாய்!" என்று ஆசீர்வதித்தார். இது மன்னன் மனத்தை மகிழ்வித்தது. மறுபடியும் முனிவரை வணங்கிவிட்டு யசக்கேது மன்னன் தன் வழியே சென்றான். பற்பல தேசங்களையும் நதி மலைகளையும் தாண்டி அவன் கடற்கரையை அடைந்தான். அங்கே முனிவர் சொன்னபடியே லக்ஷ்மிதத்தன் என்னும் வணிகர் தலைவனைக் கண்டான். அவன் சுவர்ண தீவுக்குப் புறப்பட தயாராக இருந்தான். துறவி வேஷம் தரித்திருந்தாலும், யசக்கேதுவின் உடலிலே ராஜ சின்னங்கள் தோன்றியதைக் கண்டு அவனை வணங்கினன். அவனும் வியாபாரியுடன் கடற்பிரயாணம் செய்ய ஆரம்பித்தான்.

கப்பல் நடுக்கடலை அடைந்தபோது கடல் நீரிலிருந்து பிரும்மாண்டமான கற்பக விருக்ஷம் கிளம்பியது. அதன்மீது அந்த மாய மங்கையும் அமர்ந்திருந்தாள். மாரன் கணையால் மன்னன் தாக்குண்டு அந்த அற்புதசுந்தரி தனக்காகவே ஏற்பட்டவள் என்று நினைத்து அவளையே பார்த்துக் கொண்டு சிறிது நேரம் அசைவற்று நின்றான். பிறகு சமுத்திரத்திற்கு

தலைவணங்கி அதைப் போற்றி புகழ்ந்தான். கடலின் ஆழம் அளவிடமுடியாதது என்பது உண்மைதான். இல்லாவிட்டால் இவ்வளவு அழகான பெண்ணை மறைத்துக் கொண்டு, லக்ஷ்மியைக் காட்டி மகாவிஷ்ணுவைச் சமுத்திரம் ஏமாற்றியிருக்குமா? மன்னவனுக்காக அந்த மனமோகினியை இத்தனை காலமும் சமுத்திரம் ஒளித்து வைத்திருந்தது போலும்! அவளைத் தனக்கு அளிக்கும்படி மன்னன் மகா சமுத்திரத்தை வேண்டிப் பிரார்த்தித்தான்.

இவ்விதம் மன்னவன் வேண்டிக் கொண்டிருந்த போதே விருக்ஷத்துடன் அந்த மங்கை கடலில் மறைந்து விட்டாள். அதைக் கண்ட அரசனும் அவளைத் தொடர்ந்து கடலில் குதித்து விட்டான்.

எதிர்பாராமல் நிகழ்ந்த இச்சம்பவத்தைக் கண்ட வியாபாரியான லக்ஷ்மிதத்தன் அரசன் கடலில் மூழ்கி விட்டதாகவே கருதினான். அதனால் வருத்தம் அடைந்த அவன் தன் உயிரையே மாய்த்துக் கொள்ளக் கிளம்பினான். அப்போது ஓர் அசரீரி வாக்கு, "அவசரப் பட்டு எதையும் செய்யாதே. இவன் கடலில் குதித்தாலும் உயிர் துறக்கவில்லை. துறவி வேடத்தில் வந்திருக்கும் இவன் அங்க தேசத்து அரசனான யசக்கேது ஆவான். முன் பிறவியில் தம் மனைவியாக இருந்த மாயா கன்னிகையை அடைவதற்காகவே, இவன் வந்திருக்கிறான். அவளை அடைந்தவுடன் தன் தேசம் திரும்பி விடுவான்!" என்று, தெரிவித்து வணிகர் தலைவனைத் தேற்றியனுப்பியது.

கடலில் குதித்த யசக்கேது மன்னன் தன் எதிரே அழகிய நகரம் ஒன்று தோன்றுவதைக் கண்டு பிரமித்தான். முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட ஜன்னல்கள்; தங்கத்தால் பூசப்பட்ட சுவர்; மாணிக்கக் கற்களால் ஆன தூண்கள் முதலிய கொண்ட அரண்மனைகளை அவன் கண்டான். நவரத்தினப்படிகள் அமைந்த குளங்களையும், கற்பக விருக்ஷங்கள் படர்ந்த சோலைகளையும் கண்டு அவன் அதிசயத்தில் மூழ்கினான். அரசன் ஒவ்வொரு மாளிகையாக நுழைந்து நுழைந்து பார்த்தான். அந்த மாளிகையில் எல்லாச் செல்வங்களும் நிறைந் திருந்தன. ஆனால் அவை மனித சஞ்சாரம் அற்றுக் கிடந்தன. எந்த இடத்திலும் அவன் மனதைக் கொள்ளை கொண்ட மனமோகினி காணக் கிடைக்கவில்லை. இவ்விதம் அவன் தேடி வரும்போது நவமணிகளால் இழைக்கப்பட்டு வானளாவி நிற்கும் அரண்மனையொன்றை அடைந்து உள்ளே நுழைந்தான்.

அங்கே நவரத்தின மஞ்சத்தில் ஓர் மானிட உருவம் காலோடு தலைவரை ஒரு மிருதுவான போர்வையால் போர்த்துக்

கொண்டு நீட்டிக் கிடப்பதை அவன் கண்டான். தான் தேடி வந்த பெண்ணாக இருக்குமோவென்று நினைத்து ஏங்கி அவன் அந்த உருவத்தின் அருகிலே சென்று போர்வையை நீக்கிப் பார்த்தான். அந்த அற்புதவல்லிதான் படுத்திருந்தாள்! நிலாத்துண்டு போன்ற அவள் முகத்தைக் கண்டு அரசன் தன்னை மறந்து அவளையே பார்த்து நின்றான். அந்தப் பாதாள கன்னிகையும் துயில் நீங்கி கண் விழித்துத் தன் எதிரே ராஜ சின்னங்களெல்லாம் விளங்கத் துறவி வேடத்தில் நிற்பவரைக் கண்டு உவகை பூத்துப் படபடப்புடன் எழுந்து குனிந்த தலையுடன் அவரை வரவேற்றாள். மன்னன் காலிலே விழுந்து வணங்கினாள் மாயாசுந்தரி. "தாங்கள் யார்? இந்த பாதாள லோகத்திற்குத் தாங்கள் வந்த காரணம் யாது? தங்கள் உடலிலே ராஜ சின்னங்கள் இருந்தும் தாங்கள் துறவி வேஷம் பூண்டிருக்கிறீர்களே. அது எதனால்? இந்த விவரங்களைத் தெரிவிக்க வேண்டும்" என்று அவள் வேண்டினாள்.

அரசனும் அதைக் கேட்டு பின்வருமாறு பதில் சொன்னான். "நான் அங்க தேசத்து அரசன் யசக்கேது. தினந்தோறும் கடலில் இந்த இடத்திலே உன்னைக் காணலாம் என்று என் நண்பன் ஒருவன் சொல்லக் கேட்டேன். அவன் வார்த்தையை முற்றிலும் நம்பலாம். ஆகவே, உன்னைப் பார்க்க விரும்பி, என் நாட்டையும் துறந்து இந்த வேஷம் பூண்டு இவ்விடம் வந்தேன். உன்னைக் கண்டு உன்னை அடைய பின் தொடர்ந்து வந்தேன். இனி நீ யாரென்பதைச் சொல்"

அரசனுடைய கேள்வியைச் செவியுற்ற மங்கைக்கு வெட்கம், ஆசை ஆகிய உணர்ச்சிகள் ஏற்படலாயின. அவள் தன்னைப் பற்றி பின்வருமாறு தெரிவித்தாள்: "வித்தியாதரர்களுக்கு மிருங்காசேனர் என்ற தலைவர் ஒருவர் இருக்கிறார். நான் அவருடைய குமாரத்தி மிருங்காவதி என்று பெயர். என் பிதா ஏதோ ஒரு காரணத்தால் என்னை இந்நகரத்திலே தனியாக விட்டுவிட்டுத் தம் குடிபடைகளுடன் ஏதோவோர் இடத்துக்குப் போய்விட்டார். ஆகவே பிறர் துணையின்றி இருக்கும் நான் என் தனிமையின் வருத்தத்தைப் போக்கக் கடலிலிருந்து யந்திரத்தாலான கற்பக விருக்ஷத்தில் வெளிப்பட்டு விதியின் விளையாட்டைப் பற்றிக் கூறும் சோகப் பாடலை யாழிசையுடன் பாடி வருகிறேன்"

முனிவர் கூறிய மொழி அரசனுக்கு நினைவு வந்தது. அன்பு ததும்ப அவளிடம் பேசித் தன்னை மணந்து கொள்ளும்படி தன் கோரிக்கையைத் திரும்பத் திரும்ப வற்புறுத்திக் கூறினான். அதனால் அவளும் அவனை மணக்க ஒப்புக்

கொண்டாள். ஆயினும் ஒரே ஒரு நிபந்தனை விதித்தாள். "மாசத்திலே நான்கு நாள். சுக்லபக்ஷம், கிருஷ்ணபக்ஷம் இரண்டிலும் அஷ்டமி, சதுர்த்தி நாட்களில் என் நிலை வேறு. அந்த நாட்களிலே நான் எங்கே போனாலும் தாங்கள் அதைப் பற்றி என்னிடம் கேட்கக்கூடாது. நான் போகலாகாது என்று தடுக்கவும் கூடாது. இதற்குக் காரணம் இருக்கிறது" வித்தியாதர மங்கை இவ்விதம் சொன்னதைக் கேட்ட மன்னவன் அவள் விதித்த நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டு அவளைக் கந்தர்வ முறையில் மணம் செய்து கொண்டான்.

இவ்விதம் யசக்கேது மன்னன் மிருங்காவதியுடன் சந்தோஷமாக இருந்து வரும் காலத்தில் ஒருநாள் அவள் "இன்றைக்குக் கிருஷ்ணபக்ஷத்து சதுர்த்தசி நான் முன்னே தெரிவித்துள்ளபடி ஒரு முக்கியமான விஷயமாக நான் ஏதோவோர் இடத்துக்குப் போகவேண்டும். நீங்கள் இங்கே இருங்கள். அப்படி இருக்கும்போது பளிங்குக் கல்லாலான அந்த மண்டபத்தில் மட்டும் நுழைய வேண்டாம். அவ்விதம் செய்தால் தாங்கள் குளத்தில் மூழ்கி உங்கள் சொந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்து விடுவீர்கள்" என்று அரசனிடம் தெரிவித்து எச்சரித்தாள். அதன் பின்னர் மிருங்காவதி அவனிடம் விடைபெற்றுக் கொண்டு பாதாள நகரத்தை விட்டு வெளியேறினாள். அதன் ரகசியம் என்னவென்பதை அறிய விரும்பிய ராஜனும் தன் கையில் உருவிய வாளுடன் மறைவாக அவளைப் பின் தொடர்ந்து சென்றான்.

நாகலோகமே மனித உருவெடுத்து வந்தது போன்ற பயங்கர உருவத்துடன் ஜலதுஷ்டன் ஒருவன் வருவதை அரசன் கண்டான். அந்த துஷ்டனுடைய வாய் ஒரு குகை போல இருண்டு பெரிதாகத் திறந்திருந்தது. அவன் கோரமாகக் கூச்சலிட்டுக் கொண்டு அப்படியே மிருங்காவதி மீது பாய்ந்து அவளை வாரி எடுத்து வாயில் இட்டு விழுங்கிவிட்டான். இதைக்கண்ட அரசன் ஆத்திரம் பற்றிக் கொள்ள கனல் கக்கும் விழிகளால் பார்த்தான். உடனே அவன் தன் வாளை உருவி அந்தப் பயங்கரத் துஷ்டனைத் தாக்கி அவன் தலையை வெட்டிவிட்டான். அவன் உடலிலிருந்து "குபுகுபு"வென்று பீறிட்ட ரத்தத்தைக் கண்ட அரசனுடைய கோபத்தின் வேகம் கொஞ்சம் தணிந்தது. ஆயினும், தன் இன்பவல்லியை இழந்த துக்கம் அவனைவிட்டு நீங்கவில்லை.

மேலே என்ன செய்வது என்று அறியாமல் மன்னவன் திகைத்து நின்றபோது, மேகம் போலக் கறுத்திருந்த ஜலதுஷ்டனின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு, மிருங்காவதி

தனக்கு எவ்விதமான ஊனம் இல்லாமல் பூர்ண சந்திரோதயம் போலப் புது வனப்புடன் கிளம்பினாள். தன் பிரியை இவ்விதம் ஆபத்து நீங்கி வெளிவந்ததும் பார்த்திபன் ஆவலுடன் ஓடி வந்து அவளைக் கட்டித் தழுவிக் கொண்டான். "என் அன்பே இதெல்லாம் என்ன? கனவா, நனவா? எல்லாம் அதிசயத்தினுள் அதிசயமாய் இருக்கிறதே?" என்று கேட்டான்.

இப்படி அரசன் கேட்டவுடனே வித்தியாதர மங்கை முன் நடந்ததனைத்தையும் நினைவிற்கொண்டு பின்வருமாறு சொல்லலானாள்.

"இது கனவும் அல்ல; மாயத்தோற்றமும் அல்ல! வித்துவ ஜனங்களான வித்தியாதரர்களின் தலைவரான என் தந்தை முன்னர் இந்த நகரத்தில் தான் இருந்தார். அவருக்குப் பல குமாரர்கள் இருந்தும் ஒரே புதல்வியான என்மீது தான் அலாதியான பிரியம் வைத்திருந்தார். நான் இல்லாமல் அவர் போஜனமே அருந்தமாட்டார். நானோ சிவ பக்தையாதலால் இரு பக்ஷங்களிலும் அஷ்டமி, சதுர்த்தசி நாட்களில் மனித சஞ்சாரமற்ற இந்த இடத்துக்கு வருவது வழக்கம். ஒரு சதுர்த்தசி தினம் நான் இவ்விடம் வந்து கௌரியை நீண்ட நேரம் வழிபட்டுக் கொண்டிருந்தேன். பூஜையிலிருந்த நான் பொழுதுபோவதைக் கவனிக்கவில்லை. பூஜை முடிவதற்குள் சூர்யாஸ்தமனமும் ஆகிப் பகற்பொழுது முடிந்துவிட்டது. அன்றைய தினம் என் தகப்பனாருக்குப் பசி தாகமாயிருந்தும் அவர் அன்னபானம் செய்யவில்லை. எனக்காக அவர் காத்திருந்தார். நான் உபவாச விரதமிருந்து வரும்வரை அகோரப் பசியுடன் காத்திருந்த என் தந்தைக்கு நெருப்பு மலையெனக் கோபம் வந்துவிட்டது. என் தவறை உணர்ந்து நான் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு நின்றேன். விதிவசத்தால் என் மீதிருந்த அன்பையும் மீறி சபிக்கலானார்: "உன்னுடைய அகந்தையால் இன்றைக்குப் பசி என்னை விழுங்க அதனால் நான் தவிக்க நேர்ந்தது. வெறும் ஜலத்தையே குடித்து நீ உபவாசமிருந்ததாகச் சொல்கிறாய்! நான் ஜலங்கூட அருந்தாமல் உனக்காகப் பட்டினி கிடந்து காத்திருந்தேன். ஆகவே ஒவ்வோர் அஷ்டமி, சதுர்த்தசி தினங்களிலும் நகரத்துக்கு வெளியே சிவ பூஜைக்காக நீ போகும்போது உன்னைக் கிருதாந்த சந்தராஸன் என்னும் ஜலதுஷ்டன் விழுங்கி விடக் கடவன். ஒவ்வொரு தடவையும் உன்னை அவன் விழுங்கும் போது நீ அவன் வயிற்றைப் பீறிக்கொண்டு உயிரோடு வெளி வந்து விடுவாய். இந்த சாபத்தைப் பற்றி உனக்கு நினைவே வராது. உன்னை அவன் விழுங்கும்போது வலியும் தோன்றாது.

இந்த நகரத்தில் மனித சஞ்சாரமற்றுப் போய் நீ இதிலே தன்னந்தனியாகவே கிடந்து வாட வேண்டும்!" என்று தன் தந்தை சாபம் கொடுத்தவுடன், நான் அவரை வணங்கி சமாதானப்படுத்த முயன்றேன். அவர் சிறிது யோசித்துவிட்டு, "அங்கதேசத்து அரசனான யசக்கேது என்பவன் வந்து உன்னை மணந்து கொள்வான். அப்போது அவன் ஜலதுஷ்டன் உன்னை விழுங்குவதைக் கண்டு அவனைக் கொன்றுவிடுவான். ஜலதுஷ்டன் வயிற்றிலிருந்து நீ வெளிப்பட்டதும், உனக்குச் சாபவிமோசனம் ஏற்படும். சாப விஷயமும் அது நேரிட்ட சம்பவமும் உனக்கு ஞாபகம் வரும். உன் சக்தியையும் திரும்பப் பெறுவாய்!" என்றார்.

"இவ்விதம் தெரிவித்துவிட்டு அவர் நிஷத மலைப் பிரதேசத்துக்குச் சென்றுவிட்டார். நான் மட்டும் தனியாக இந்த அதிசய நகரத்தில் தங்கி சாபத்தால் கலங்கி வந்தேன். இப்போது சாபவிமோசனம் உண்டாகிவிட்டதால் நான் திரும்பவும் என் தகப்பனாரைக் காணவேண்டும். நீங்கள் விரும்பினால் இங்கேயே இருங்கள். இல்லையேல் உங்கள் ஊருக்குச் செல்லலாம்!" என்றாள்.

அவள் கூறியதைக் கேட்ட கலை மன்னனுக்கு துக்கம் உண்டாயிற்று. "மிருங்காவதி! இன்னும் ஏழு நாட்களுக்கு நீ இங்கே தங்கி இரு. இந்த ஒரு வரத்தைமட்டும் நீ எனக்குக் கொடு. உன்னைத் திடீரென்று பிரிந்துவிட என்னால் முடியவில்லை. இவ்விடம் இருக்கும் இந்த ஏழு நாட்களும் நாம் இன்ப வாழ்வின் உச்சியைப் பூரணமாக அனுபவித்து விடலாம்" என்று வேண்டினான்.

அவளும் அதற்கு இசைந்தாள்.

அதே போல அவர்கள் தோட்டத்திலும் தடாகத்திலுமாக குதூகலத்துடன் விளையாடிப் பொழுது போக்கினார்கள். இவ்விதம் ஆறு நாட்கள் கழிந்தன. ஏழாம் நாள் யசக்கேது மன்னன் தந்திரமாக மிருங்காவதிக்கு ஆசைகாட்டி பூலோகத்திற்குச் செல்லும் இரகசிய சுரங்கமுள்ள பளிங்கு மண்டபத்திற்கு அவளை அழைத்துச் சென்றான். அங்கே அவன் தன் காதலியின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அந்தத் தடாகத்தில் திடீரென மூழ்கினான். அடுத்தகணமே அவன் தன் மோகனாங்கியுடன் தன் நகரத்தின் தோட்டத்தில் உள்ள தடாகத்திலிருந்து வெளிக்கிளம்பினான்.

மன்னர் பெருமான் தேவ கன்னிகை போன்ற ஒருத்தியுடன் தடாகத்திலிருந்து கிளம்பியதைக் கண்ட தோட்டக்காரர்கள்

ஆனந்தப் பரவசமடைந்து மந்திரியாரிடம் ஓடிச் சென்று தெரிவித்தார்கள். மந்திரியும் மக்களும் கூடி அரசனையும் வித்தியாதர மங்கையையும் வரவேற்று அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். அரசன் தன் நகரத்துக்குத் திரும்பிவிட்டதையும், அவன் விரும்பிக் கேட்ட ஏழுநாள் கெடு தீர்ந்து விட்டதையும் கண்ட வித்தியாதரப் பெண் தன் தந்தையிடம் திரும்பிச் சென்றுவிட ஆசை கொண்டாள். ஆனால் அவள் எவ்வளவு தூரம் யோசித்துப் பார்த்தும் ஆகாயத்தில் பறக்கும் வித்தை அவளுக்கு ஞாபகம் வரவில்லை. பெருந்தனத்தைப் பறி கொடுத்தவள் போலவே அவள் கவலை கொண்டு நின்றாள்.

"சாப விமோசனம் ஆகியும் உங்கள் மீது கொண்ட ஆசையால் நான் நீண்டகாலம் தங்கிவிட்டேன். அதனால் எங்கள் வித்தை மறந்துவிட்டது. நான் தேவலோகம் பறந்து செல்லும் சக்தியை இழந்துவிட்டேன்" என்று கூறிப் புலம்பினாள் வித்தியாதரிப் பெண். உடனே யசக்கேது மன்னன் "ஆஹா! இப்போது நான் அதிசயக் கன்னிகையை நிரந்தரமாக அடைந்து விட்டேன்" என்று கூறி அளவிலாத மோகப் பரவசம் கொண்டான். அந்த அற்புதவல்லியுடன் கொஞ்சிக் குலாவி இருந்து வருவதற்கு, வானத்தைத் தொடும் நிலா உப்பரிகையுடன் புதிய அந்தப்புரம் ஒன்றையே நிர்மாணிக்கச் சொன்னான் மன்னன்.

இதைக் கண்ட மந்திரி தீர்க்கதரிசி வீடு திரும்பி இரவு படுக்கையில் படுத்திருக்கையில் திடீரென்று மனம் உடைந்து இறந்துவிட்டான். அவன் இறந்த செய்தியைக் கேட்டு மிக்க வருத்தமடைந்து யசக்கேது ராஜன் சிறிது காலம் துக்கம் கொண்டாடி விட்டு அப்பால் வித்தியாதரியான மிருங்கா வதியுடன் நீண்டகாலம் ராஜ்ய பாரத்தைச் சுமந்து வந்தான்.

இவ்விதம் கதை சொல்லி முடித்த வேதாளமானது விக்கிரமாதித்தனை நோக்கி, "ஓ, ராஜனே! தன் மன்னர் பெருமான் வெற்றி கொண்டு திரும்பி வந்திருக்கும்போது மந்திரி திடீரென மனமுடைந்து இறந்து போவானேன்? அந்த வித்தியாதரிப் பெண்ணைத் தானே அடைய முடியவில்லையே என்ற வருத்தமா? அல்லது ராஜ்யத்தைக் கைப்பற்ற வேண்டும் என்கிற எண்ணம் இனிப் பலிக்காது என்ற ஏமாற்றமா? எதனால் மந்திரி மாண்டு போனான்?" என்று கேட்டது.

அதற்கு விக்கிரமாதித்தன் பின்வருமாறு பதிலளித்தான்! "அவ்விரண்டு காரணங்களும் அல்ல. மந்திரி மிகவும்

நேர்மையுள்ளவன். பூலோகத்துப் பெண்களிடம் கொண்ட மோகத்திலேயே ராஜ்யபாரத்தை மறந்து கிடந்த மன்னன். இப்போது தேவகன்னிகை ஒருத்தியை அடைந்துவிட்டால் ராஜ்யம் என்ன ஆகுமோ என்ற ஏக்கத்தாலேயே மந்திரி மனம் பிளந்து மாண்டு போனான்!"

(வேதாளத்தின் கேள்விக்குப் பின்வரும் விடையும் தமிழில் வழங்கி வருகிறது. அது, "குழந்தைகளுக்கு நல்ல ருசியான தின்பண்டங்களைக் காட்டியது போலவும், பசியடங்காக் குருடனுக்குப் பாலும் சாதமும் கையில் திணித்தது போலவும், மந்திரி சொன்ன அதிசயக் கன்னிகையை அரசன் கொண்டு வந்ததால் மந்திரி மாண்டு போனான்!")

இந்த விடையைக் கேட்டதும், விக்கிரமாதித்த மகாராஜனின் தோளிலிருந்து வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு பழையபடி முருங்கமரத்தில் தொற்றிக் கொண்டது.



## 13. மந்திரோபதேசம் செய்த கதை

விக்கிரமாதித்த மகாராஜன் மறுபடியும் வேதாளத்தைக் கொண்டுவர மயானத்துக்குச் சென்றான். அந்த நள்ளிரவில் மயானத்தில் பிணங்கள் எரிந்து கொண்டிருந்த காட்சி பூதங்கள் நாக்கை நீட்டி திட்டிக் கூத்தாடுவது போன்று இருந்தது. சிறிதும் கலங்காமல் விக்கிரமாதித்தன் நேராக முருங்க மரத்தை அடைந்தான். ஆனால் அங்கே கண்ட காட்சி அவனைத் திகைக்க வைத்தது.

மரத்தின் மீது ஏராளமான பிணங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. ஒவ்வொன்றிலும் ஒரு வேதாளம் புகுந்திருப்பது போலவே தோன்றியது. இது என்ன? வேண்டுமென்றே காலஹரணம் செய்வதற்காக வேதாளம் இத்தகைய நிலைமையை

உண்டாக்கியிருக்கவேண்டும். இவற்றில் எதை வேதாளமெனக் கட்டிப் பிடித்துத் தூக்கிச் செல்லவேண்டும் என்பது தெரியவில்லை! இன்றிரவுக்குள் எடுத்த காரியத்தைச் செய்து முடிக்காவிட்டால் நேரிடக் கூடிய அவமானத்தைப் பொறுக்கமாட்டேன். அப்போது நிச்சயம் தீக்குளித்து விடுவேன் என்று விக்கிரமாதித்தன் தன் மனதிற்குள் சொல்லிக் கொண்டான். அவன் நினைப்பதை உணர்ந்த வேதாளம் உடனே பலவிதமான மாயத்தோற்றங்களை நிறுத்திக் கொண்டது. முன் போல மரத்தின் மீது ஒரே ஒரு வேதாளம் தான் தொங்கிக் கொண்டிருந்தது. விக்கிரமாதித்தன் அதை எடுத்து தன் தோள் மீது சுமந்து கொண்டு வழி நடந்து செல்லும்போது வேதாளம், "ஓ ராஜன்! உன் விடா முயற்சி பிரமிக்கத் தக்கது. ஆகவே, நான் கூறும் கதையைக் கேளுமையா" என்று கதை சொல்ல ஆரம்பித்தது.

உஜ்ஜயினி என்ற பட்டினம் ஒன்று உண்டு. போகவதி, அமராவதி ஆகியவற்றிற்கு அடுத்தபடியாக அதைத்தான் சொல்லவேண்டும். அதைச் சேர்ந்த புஷ்பரதம் என்னும் நகரிலே தேவஸ்வாமி என்ற அந்தணன் சகல சாஸ்திரங்களையும் அறிந்தவனாக இருந்தான். அந்த நகரத்து மன்னனும் அவனைக் கௌரவித்து வந்தான். காலக்கிரமத்தில் அந்தணனுக்குச் சந்திரஸ்வாமி என்ற மகன் பிறந்தான். அவன் பெரியவனாக வளர்ந்தபோது சாஸ்திரங்களை நன்றாகப் பயின்றானாயினும் சூதாட்டத்தின் மீது அலாதியான ஆசை கொண்டு அவன் சதா சூதாடி வந்தான்.

ஒரு சமயம் அவன் சூதாடும் மண்டபத்திற்குப் போனான். சுழலும் கண்களுடன் துள்ளிக் குதிக்கும் கருப்பு மான்போல உருண்டோடும் பாச்சிகைகள், தங்களைப் போல யாரையும் உருட்டலாம் என்றே எண்ணிக் காத்திருந்தன போலும். "என்னிடம் வந்த பிறகு ஒட்டாண்டியாகவும் போகாதவன் யார்? அளகாபுரிக்கு அரசனை குபேரனையும் பிச்சைக்காரனாக்கி விடுவேனே" என்று அந்த சூதாட்ட மண்டபமே கூறுவது போல் அங்கே "சளசள" வென்று இரைச்சலும் கூச்சலும் சதா இருந்து கொண்டே இருக்கும்.

வாலிபன் சந்திரஸ்வாமியும் அதனுள் நுழைந்து விளையாடி எல்லாவற்றையும் தோற்றான். இடுப்புத்துணியையும் தோற்றான். கடனை திருப்பிக் கேட்டபோது அவனால் கொடுக்க முடியவில்லை. சூதாடும் மண்டபத்தின் சொந்தக்காரன் அவனைப் பிடித்துக் கட்டித் தடி கொண்டு அடித்து நொறுக்கினான். உயிரற்றவன் போல அவன் தரையிலே வீழ்ந்தான்.

இரண்டு, மூன்று நாட்கள் அதே நிலையில் அவன் கிடந்தான். "இவன் நம்மை ஏமாற்ற ஆரம்பித்துவிட்டான். ஆகவே ஜீவனில்லாத இவனை எடுத்துப் போய் பாழுங்கிணற்றில் போட்டுவிட்டு வாருங்கள். உங்களுக்குப் பணம் தருகிறேன்" என்று சொன்னான் சூதாட்டக்காரன்.

உடனே சூதாடிகள், சந்திரஸ்வாமியைத் தூக்கிக் கொண்டு நீண்டதூரம் நடந்து காட்டை அடைந்து பாழுங் கிணற்றைத் தேடினார்கள். அப்போது பழுத்த சூதாடி ஒருவன் "இவன் இன்னும் செத்துப்போய் விடவில்லை என்பதைத் தவிர உயிரோடு இருப்பதற்கான அறிகுறி எதுவும் தென்படவில்லை. அப்படியிருக்க இவனை கிணற்றில் போடுவதால் என்ன பிரயோஜனம்? இங்கேயே போட்டுவிட்டு ஊர் திரும்பி நாம் இவனை கிணற்றில் எறிந்து விட்டதாகச் சொல்லிவிடலாம்!" என்று மற்றவர்களிடம் கூறினான். அவ்விதமே அவர்கள் அவனை அங்கேயே போட்டுவிட்டு ஊர் திரும்பினார்கள்.

அவர்கள் சென்ற பிறகு சந்திரஸ்வாமி மூர்ச்சை தெளிந்து எழுந்தான். பக்கத்திலே பாழடைந்த சிவன் கோயில் ஒன்று இருந்தது. அதனுள் அவன் நுழைந்து ஒளிந்து கொண்டான். "ஐயோ, நன்னம்பிக்கை அதிகம் கொண்டு சூதாடப்போன இடத்திலே சூதாடிகள் என்னை ஏமாற்றி எல்லாவற்றையும் பறித்துக் கொண்டுவிட்டார்களே. இந்த ஸ்திதியில் என்னைப் பார்த்தால் தந்தையும் உற்றார் உறவினரும் என்ன சொல்லுவார்கள்? ஆகவே பகற்பொழுதை இங்கே கழித்துவிட்டு இரவிலே வெளிக்கிளம்பி ஆகாரம் ஏதாகிலும் கிடைக்குமாவென்று பார்க்கவேண்டும்." இவ்விதம் நினைத்துக்கொண்டு சந்திரஸ்வாமி அங்கேயே உட்கார்ந்திருந்தான். பொழுது அஸ்தமித்ததும் அங்கே ஒரு பாசுபத சந்நியாசி வந்தான். தலையில் ஜடையும், சரீரம் முழுவதும் திருநீறும் தரித்து கையில் ஒரு சூலமும் கொண்டு ருத்திரன் போலவே அவன் தோற்றம் அளித்தான். அவன் சந்திர ஸ்வாமியைப் பார்த்தவுடன் "யார்?" என்று கேட்டான். அதன் மேல் சந்திரஸ்வாமி அவனை வணங்கித் தன் கதையைத் தெரிவித்தான்; அதைக் கேட்டுத் தபசியும் "நீ பசியுடன் திடீரென்று எதிர்பாராத விதமாக என் ஆசிரமத்துக்கு வந்திருக்கிறாய், ஆகவே எழுந்திருந்து நீராடி நான் பிக்ஷை எடுத்து வந்திருக்கும் உணவில் ஒரு பகுதியை உண்டு களைப்பாறு" என்றான். சந்திரஸ்வாமி, "பெரியோய், நான் ஓர் அந்தணன். தாங்கள் பிக்ஷை எடுத்து வந்ததை நான் எப்படிச் சாப்பிடுவது?" என்று பதில் சொன்னான்.

உடனே அந்த தபசி தன் குடிசைக்குள் நுழைந்தான். அவனுக்கு மந்திர வித்தை சித்தியாகி இருந்தது. ஆகவே அதை

அவன் நிலைவு கூர்ந்தான். வித்தியா தேவதையும் அவன முன் தோன்றி "என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டது. "இந்த விருந்தாளியை நன்றாக உபசரி" என்று உத்தரவிட்டான் தபசி. அப்படியே என்று மறுமொழி பகர்ந்தது தேவதை.

திடீரென்று தங்கமயமான நகரம் ஒன்று அங்கே தோன்றியது. அதிலே பெண்கள் நிரம்பிய ஓர் உத்தியான வனமும் இருந்தது. அந்தப் பெண்கள் சந்திரஸ்வாமியை அணுகி, பிரபோ! எழுந்துவந்து ஆகாரம் உட்கொண்டு களைப்பாறுங்கள்" என்று வேண்டினார்கள். அவனை உள்ளே அழைத்துச் சென்று நீராட்டி, அழகான ஆடைகளை அணிவித்து சாப்பிடுவதற்காக அழைத்துச் சென்றார்கள். பணிப்பெண்களின் தலைவி ஒருத்தி அங்கே இருந்தாள். இளம் வயது; எழில் வாய்ந்த அங்கங்கள் கொண்டவள். அவள் அவனை வரவேற்றுத் தன்னுடன் சமமாக ஒரே ஆசனத்தில் அமர்த்திக் கொண்டாள். அவனும் அவளுடன் சேர்ந்து தேவாமிர்தம் போன்ற அந்த ஆகாரத்தை உட்கொண்டான்.

மறுநாள் காலையில் விழித்து எழுந்த போது அங்கே பாழும் சிவன் கோயில் ஒன்றுதான் இருந்தது. "இராப்பொழுது சந்தோஷமாக இருந்ததா?" என்று தபசி அவனைக் கேட்டான். "பெரியோய்! தங்கள் தயவால் இரவு இன்பமாகக் கழிந்தது. ஆனால் இப்போது அந்தத் தேவமாது இல்லாமல் என் உயிர் தரியாது". என்றான். கருணையுள்ள தபசியும் இங்கே தங்கியிரு. இன்றைய இரவும் அதே போன்ற சுகபோகத்தை அனுபவிக்கலாம்" என்று தெரிவித்தான். தபசி தயவால் அவன் அதே போன்ற சுக போகங்களை ஒவ்வொரு நாள் இரவும் அனுபவித்து வந்தான்.

கடைசியாக அவனுக்கு அதன் மர்மம் தெரிந்தது. அவ்வளவும் மந்திர சக்தியால் நடந்து வருகிறதென்பதை அறிந்தான். ஆகவே ஒருநாள் அவன் தபசியிடம் "முனிவரே! நான் உங்களைத் தஞ்சம் என்று அடைந்திருக்கிறேன். உங்களுக்கு என்மீது கருணை இருக்குமானால் உயர்ந்த இந்த விஞ்ஞான ரகசியத்தை எனக்கு உபதேசிக்க வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டான்.

"அப்பனே! உனக்கு இந்த வித்தையில் சித்தி கிட்டாது. தண்ணீருக்குள் இருந்து மந்திரத்தை உச்சாடனம் செய்ய வேண்டும். அவ்விதம் உருவேற்றி வரும்போது சித்தி ஏற்படுவதைத் தடுக்கப் பலவிதமான சோதனைகள் ஏற்படும். மாயத் தோற்றங்கள் தென்படும். அவனே மறு ஜன்மம் எடுத்துக் குழந்தையாகப் பிறப்பது போலவும் பிறகு வளர்ந்து கல்யாணம் செய்து கொண்டு அவனுக்குக் குழந்தை பிறப்பது போலவும் தோற்றம் உண்டாகும். இந்தப் பிறப்பைப் பற்றியோ மந்திர சக்தி

அடைவதற்காக அவன் ஜபம் செய்து உருவேற்றுவதைப் பற்றியோ அவனுக்கு ஞாபகம் இராது. ஆயினும் அவன் தனக்கு இருபத்து நான்கு வயசு வந்துவிட்டதாக எண்ணும்போது அவனுடைய குரு அவனுக்கு உண்மையைத் தம் மந்திர வலிமையால் உணர்த்துவார். அப்போது அவன் நிலை தெளிந்து அவ்வளவும் மாயத் தோற்றம் என்பதையே அறிந்து அங்கே தோன்றும் நெருப்பில் புகுந்தானானால் மந்திர சித்தி கிட்டிவிடும். அன்றி சிஷ்யன் மந்திர சித்தி பெறாவிட்டால் சரியான பாத்திரம் அல்லாத ஒருவனுக்கு மந்திரோபதேசம் செய்த தோஷத்திற்காகக் குருவும் அவருடைய சக்தியை இழந்துவிடுவார். உனக்கு வேண்டுவது சுகபோகம். நீ அதை என் சக்தியைக் கொண்டே அனுபவிக்கலாம்" என்றான் பாசுபத தபஸ்வி.

முனிவர் இப்படிக் கூறியும் சந்திரஸ்வாமி கேட்கவில்லை. கடைசியாக, குருவும் அவனுக்கு மந்திரோபதேசம் செய்விக்கச் சம்மதித்தான். பிறகு அந்தப் பாசுபத தபசி அவனை ஓர் ஆற்றங்கரைக்கு அழைத்துச் சென்று, "குழந்தாய், நீ நீருக்குள் மூழ்கி மந்திர உச்சாடனம் செய்யும் போது நான் கரையிலிருந்து கவனித்துப் பார்த்துக் கொள்கிறேன். மாயத் தோற்றம் உண்டாகி மயக்கம் ஏற்படும்போது நான் உனக்கு உண்மையை ஞாபகத்துக்கு வரச் செய்கிறேன். தைரியமாக நெருப்பிலே குதித்து விடு!" என்றான்.

சிஷ்யன் குருவைத் தாழ்ந்து வணங்கிவிட்டு, ஆற்று நீரில் மூழ்கி, உருவேற்றி வரும்போது, அவன் இந்த ஜன்மத்தையே மறந்தான். ஏதோ ஒரு நகரத்தில் ஓர் அறநெறியாளனுக்கு மகனாகப் பிறந்து, வளர்ந்து, மணம் முடித்து, இல்லற வாழ்க்கையை நடத்துவது போலவும், ஒரு குழந்தை பிறந்து அப்பால் அவன் குடும்ப பாசத்தால் கட்டுண்டு வாழ்க்கை நடத்துவது போலவும் தோன்றியது.

இவ்விதம் அவன் மாய வாழ்க்கையில் மூழ்கியிருக்கும் போது, கரையில் தபசி தன் சக்தியால் சிஷ்யனுக்கு அவனுடைய உண்மை நினைவை உண்டாக்கினான். உடனே அவன் நெருப்பில் குதிக்கத் தயாரானான். சுக போகங்களிலே நாட்டம் கொண்ட அவன், உற்றார் உறவினர்கள் பலவிதமாகப் பேசித் தடுத்தும் கேளாமல் ஆற்றங்கரையில் அடுக்கியிருந்த சிதையில் நெருப்பிலே குதிக்கச் சென்றான். வயதான தாயும், ஆசை மனைவியும் துக்கம் தாங்காது அவனுடன் உயிர் துறக்கத் தயாரானார்கள். அப்போது ஏற்பட்ட மயக்கத்திலே அவன், "ஐயோ, நான் தீக்குளித்தால் என் உற்றார் உறவினருங்கூட இறந்து விடுவார்களே? தபசி மந்திரோபதேசம் செய்து உறுதி கூறியது சரியாக இருக்குமோ? அவர்

சொன்னபடியே இதுவரை நடந்து வந்திருக்கின்றன. ஆகவே, நான் தீக்குளித்து விடுகிறேன்'' என்று தனக்குத் தானே தீர்மானித்துக் கொண்டு நெருப்பிலே குதித்தான்.

ஆனால் நெருப்போ பனிக்கட்டி போலக் குளிர்ச்சியாக இருந்தது. உடனே மாயத் தோற்றம் மறைந்து விடவே. அவன் நீரிலிருந்து வெளிப்பட்டு கரைக்கு வந்தான். அங்கிருந்து தபசி நெருப்பு பனிக்கட்டி போன்று ஜில்லிட்டிருப்பதைக் கேட்டதும். "குழந்தாய்! உச்சாடனத்தில் நீ ஏதோ தவறு செய்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் நெருப்பு எப்படி ஜில்லிட்டுப் போகும்?" என்று சொல்லி ஆச்சரியப்பட்டான்.

"குருவே! நான் தவறு ஒன்றும் செய்து விடவில்லை" என்று சந்திரஸ்வாமி பணிவுடன் கூறினான். இந்த சந்தேகத்தை நிவர்த்தித்துக் கொள்ள தபசி, மந்திர வித்தையை நினைவு கூர்ந்து பார்த்தான். ஆனால் தேவதை அவனுக்கு பிரத்யக்ஷமாகவில்லை. இருவரும் மந்திர வித்தையை இழந்து விட்டார்கள்.

-இவ்விதம் கதை சொல்லி முடித்த வேதாளம், "ராஜனே! முறைப்படி உச்சாடனம் செய்து மந்திரத்தை உருவேற்றியும் சிஷ்யனுக்கு சித்தி ஏன் கிடைக்கவில்லை? குருவும் சக்தி இழந்தது எதனாலே? சொல்லுமையா. ராஜனே!" என்றது.

அதற்கு விக்கிரமாதித்தன் பின்வருமாறு பதில் சொன்னான்: "இலட்சியம், விரதம், சிரத்தை, தானம் இவற்றில் எதுவாயிருந்தாலும் ஏகமனதாய் ஏகாக்கிர சிந்தையாய்ச் செய்தால்தான் பலிக்கும். ஒருவன் எந்தக் காரியத்தையும் கிரமமாகச் செய்தாலும், அவன் ஏகாக்கிர சித்தத்துடன், நிலை கலங்காத உறுதியுடன் தைரியமாக நடத்தாவிட்டால், எதிலும் சித்தி கிட்டாது. குருவின் உபதேசத்தைப் பெற்றாலும் சிஷ்யனுக்குச் சஞ்சலமும், சந்தேகமும் தோன்றி விட்டன. அதனால்தான் அவனுக்குச் சித்தி கிட்டவில்லை. பாத்திரமற்றச் சிஷ்யனுக்கு உபதேசம் செய்ததால் குருவும் தன் சக்தியை இழந்தான்!"

விக்கிரமாதித்தன் சொன்ன பதிலைக் கேட்ட வேதாளம் கட்ட விழ்த்துக் கொண்டு அவன் தோளைவிட்டுக் கிளம்பி பழைய படியே முருங்க மரத்தில் தொற்றிக் கொண்டது.

## 14. அனங்க மஞ்சரி கதை

விக்கிரமன் மறுபடியும் முருங்க மரத்தை அடைந்து, வேதாளத்தைப் பிடித்துத் தோள்மீது சுமந்து கொண்டு கிளம்பினான். அவன் வழி நடக்கும் போது, வேதாளம் அவனைப்

பார்த்து, "மன்னனே, கனிந்த காதலைப்பற்றிய கதை ஒன்று சொல்லுகிறேன், கேள்" என்று சொல்ல ஆரம்பித்தது.



ஃ ஃ ஃ

விசாலா என்ற ஒரு பட்டணம் இருக்கிறது. தேவர்களுடைய இந்திர பட்டணம் போன்ற அந்நகரில் பத்மநாபன் என்ற அதிருஷ்டசாலியான அரசன் நீதி முறை தவறாமல் அரசாட்சி செய்து வந்தான். பலிச் சக்கரவர்த்தியைக் காட்டிலும் மேம்பட்டவனாக அவன் மக்களுக்கு நன்மைகள் பல புரிந்து வந்தான். அந்நகரத்தில் அர்த்ததத்தன் என்ற பெரிய வியாபாரி ஒருவன் இருந்தான். குபேரனைக் காட்டிலும் அதிக சம்பத்து வாய்ந்தவன். அவனுக்கு அனங்கமஞ்சரி என்ற பெண் குழந்தை பிறந்தது.

அந்தப் பெண் செல்லமாக வளர்ந்து வந்தாள். பாலும் பழமும் அருந்தி அலாதியான பூரிப்போடு பருவத்தின் தொட்டிலில் குறு குறுவென ஆடினாள். மனதிற்குகந்த ஒரு காதலனை அடைய ஆசைப்பட்டாள். அறியாப் பருவம் முதல் அந்தரங்கத்திலேயே ஆசை மலர் தூவி வந்த ஓர் அழகிய அந்தண வாலிபனிடம் நெஞ்சைப் பறிகொடுத்திருந்தாள். ஆனால் அவளோ நவநிதி வணிகனின் குமாரத்தி. அவனோ மறையோதும் ஏழை அந்தணன். ஏற்றத் தாழ்வு என்ற வேலி மட்டுமல்ல, ஜாதி என்ற அகழியும் குறுக்கே நின்றது. பெற்றோரிடம் தன் எண்ணத்தைச் சொல்லவும் பயந்திருந்தாள். அந்த அந்தண வாலிபனும் எங்கோ வேற்றூருக்குப் போனவன் வெகு நாளாகியும் திரும்பி வரவில்லை. அவனுடைய ஆசை முகமும் அவளுக்கு மறந்து விட்டது.

இந்நிலையில் அவள் தந்தையோ அவளை தாம்பரலிப்தியில் இருந்த மற்றொரு வியாபாரியின் மகனான மணிவர்மனுக்கு மணம் செய்து கொடுத்தான். ஆயினும் அவனுக்கு தன் ஒரே குழந்தையான அனங்கமஞ்சரியிடம் வாஞ்சை அதிகமாதலால் அவளைத் தன் வீட்டைவிட்டு அனுப்பாமல் புருஷனுடனே அவளை வீட்டோடு நிறுத்திக் கொண்டான். அனங்கமஞ்சரிக்குத் தன் கணவன் மணிவர்மனைப் பிடிக்கவில்லை. காதலில்லாக் கலியாணத்தில் சுவை ஏது? மனச்சுருதி ஒன்று சேராத இதய வீணையில் இன்னிசை ஏது? வியாதியஸ்தன் கசப்பு மருந்தைச்

சாப்பிட எப்படி மனம் ஒருப்பட மாட்டானே அப்படித்தான் அனங்கமஞ்சரி நினைத்து வந்தாள். ஆனால் அவளுடைய கணவனான மணிவர்மனுக்கோ தன் உயிரைக் காட்டிலும் மனைவியின் மீது ஆசை அதிகம்! நீண்ட காலம் கஷ்டப்பட்டு நிறைய சம்பாதித்துச் சேர்த்து வைத்திருக்கும் பணத்தின் மீது ஈயாத லோபிக்கு எவ்வளவு ஆசை இருக்குமோ அதைக் காட்டிலும் அதிகம் என்று சொல்லலாம்!

ஒரு சமயம் மணிவர்மன் தன் தாய், தந்தையர்களைப் பார்க்க விரும்பி தாம்பரலிப்திக்குச் சென்றிருந்தான். சில தினங்கள் கழிந்தன. கோடைக் காலமும் வந்தது!

சூரிய கிரணத்தின் கொடுமையால் மக்கள் பயணமே தடைப் பட்டது. காற்றுடன் வந்த உஷ்ணம், வசந்தம் போய்விட்டதே என்று விடும் பெருமூச்சு போல இருந்தது. மல்லிகை முதலிய மலர்களின் நறுமணம் கலந்து வீசியது தென்றல்! காற்றினால் எழுப்பப்பட்ட புழுதிப்படலம் வானத்தை அடைந்தது. சூரிய வெப்பத்தால் தகிப்புண்ட பூமி மழையை வேண்டி மேகத்தை அழைப்பதற்காகப் போனது போலிருந்தது. வழி நடைக் களைப்பால் மரத்தின் நிழலை நாடிச் செல்லும் பிரயாணி போல பகல் வேளை ஊர்ந்து சென்றது. இரவு நேரமும் உற்சாகமற்று, சந்திர கிரணங்களின் தண்ணிலவில் பிரகாசமில்லாமல் மெதுவாகக் கடந்து வந்தது.

ஆகவே, ஒருநாள் இரவு, வேலைக்காரர்கள் எல்லோரும் தூங்கும் போது அவள் வெளிக் கிளம்பி தோட்டத்திலே தடாகத்திற்கு வந்தாள். அங்கு அவள் தகப்பனால் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த சண்டிகாதேவியை மனதில் நினைத்து, "கமலாகரனை இந்த ஜன்மத்தில் அடைய முடியாவிட்டாலும் அடுத்த ஜன்மத்தில் அவன் கணவனாக வாய்க்க அருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு, புடவைத் தலைப்பினால் சுருக்குப் போட்டுக் கொண்டாள்.

இதற்கிடையில் அவளுடைய படுக்கையறையிலே தூங்கிக் கொண்டிருந்த தோழி மாலதிகை கண் விழித்துப் பார்க்கையில், அனங்கமஞ்சரியை அருகில் காணாமையால், அவளைத் தேடிக் கொண்டு தோட்டத்திற்கு வந்தாள். அங்கே கழுத்தில் சுருக்கு இட்டுக் கொண்டிருக்கும் வேளையில் அவளைப் பார்த்து ஓடி வந்து சுருக்கைக் கத்தரித்தாள். தன் தோழி வந்து சுருக்கை எடுத்து விட்டதை அறிந்த அனங்கமஞ்சரி வெந்துயர் கொண்டு கீழே விழுந்து விட்டாள். தோழியும் அவளைத் தேற்றி, துக்கத்திற்குக் காரணம் விசாரித்தாள். அதன்மேல் அனங்கமஞ்சரி தோழியிடம் தன் துக்கத்தின் காரணத்தை விளக்கிக் கூறினாள். "ஆகவே

மாலதிகா, இப்பொழுது தெரிந்ததா? பெற்றோர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருக்கும் நான் என் மனதிற்கிசைந்தவனுடன் வாழும் பாக்கியத்தை அடைவது துர்லபம். இந்த ஸ்திதியில் உயிரை இழப்பதே பேரானந்தம்!" இவ்விதம் அவள் சொல்லி வரும்போது உணர்ச்சி தாங்காமல் மூர்ச்சித்து விழுந்தாள்.

உடனே மாலதிகை குளிர்ந்த ஜலத்தை வாரியடித்து விசிறி சைத்தியோபசாரங்களால் அனங்கமஞ்சரியின் மூர்ச்சையைத் தெளிய வைத்தாள். இன்னும் ஜுரத்தின் தாபத்தைத் தணிக்கத் தாமரை இலைகளில் அவளைப் படுக்க வைத்தாள். பனிக்கட்டி போல சில்லிட்ட மாலையைக் கழுத்தில் போட்டாள். அனங்கமஞ்சரியோ, கண்ணீர் பெருகி வழிய, "தோழி! இந்த மாலையோ வேறு பூச்சோ உள்ளத்தைத் தகிக்கும் உஷ்ணத்தைத் தணிக்காதே. உண்மையிலேயே அதைத் தணிக்கக் கூடியதொன்றை உன் சாமர்த்தியத்தால் செய்து முடிப்பாயா? என் உயிரை ரக்ஷிக்க விரும்பினால் என் காதலனுடன் என்னைச் சேர்த்து வை!" என்று தெரிவித்தாள்.

உடனே மாலதிகை, "தோழி, கொஞ்சம் பொறுத்திரு. இரவு முடியப்போகிறது. பொழுது விடிந்ததும் நான் இதற்கு ஓர் ஏற்பாடு செய்து உன் ஆசைக்கினியானை இவ்விடம் அழைத்து வருகிறேன். ஆகவே உள்ளே போகலாம் வா" என்று கொஞ்சும் குரலில் கூறி அவளைத் தேற்றினாள். அனங்கமஞ்சரியும் சந்தோஷமடைந்து தான் அணிந்து கொண்டிருந்த மாலையைக் கழற்றி தோழிக்குப் பரிசாக அளித்தாள். அப்பால், "சரி, நீ உன் வீட்டுக்குப் போ. பொழுது விடிந்ததும் தாமதம் செய்யாமல் என் காதலன் வீட்டுக்குப் போ. உன் காரியம் வெற்றியடைய வேண்டும்" என்று சொல்லித் தோழியை அனுப்பிவிட்டுத் தன் அறைக்குத் திரும்பிச் சென்றாள்.

மறுநாள் காலையில் சீக்கிரமாகவே மாலதிகை யாரும் அறியாமல் கமலாகரன் வீட்டுக்குச் சென்று அவனைத் தேடினாள். அவனைத் தோட்டத்தில் ஒரு மரத்தடியில் கண்டாள். மோகத் தீயால் தகிக்கப்பட்ட அவன் சந்தனத் ஸ்தலம் பூசிய தாமரையிலைப் படுக்கையில் கிடந்து புரண்டான். அந்தரங்கமான தோழன் ஒருவன் பக்கத்தில் இருந்து வாழையிலையால் விசிறி அவனை ஆச்வாசப்படுத்தி வந்தான். "அவளுடைய பிரிவாற்றாமையாலே தான் இவன் இந்நிலைக்கு வந்து விட்டானோ?" என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டாள் மாலதிகை. எதற்கும் உண்மையை அறிவதற்காக அவள் அங்கு மறைந்து நின்றாள்.

இதற்கிடையில் கமலாகரனுடைய தோழன் அவனைப் பார்த்து, "நண்பா! அழகான இந்தத் தோட்டத்தைக் கண்ணால் கண்டு

மகிழ். மனச்சோர்வுக்கு இடம் கொடாதே!" என்று தேற்றினன். அதைக்கேட்ட கமலாகரனே, "நண்பா! வியாபாரியின் மகளான அனங்கமஞ்சரி என் உள்ளத்தைப் பறித்துக் கொண்டு விட்டாள். என் இதயம் சூன்யமாக இருக்கிறது. ஆகவே, நான் எப்படி மனம் மகிழ்வேன்? அன்றி, காமதேவனும் என் உடலை அவன் கணைகளுக்கு இருப்பிடமாக ஆக்கிக் கொண்டு போன அந்தப் பெண்ணை அடைவதற்கு உதவி செய்!" என்று கூறித் தன் நெஞ்சக் குமுறலைக் கொட்டினன்.

அதைக் கேட்ட மாலதிகை தன் சந்தேகம் தீர்ந்து உவகை கொண்டாள். அவனிடம் சென்று பின்வருமாறு தெரிவித்தாள். "நீங்கள் பாக்கியசாலிதான். தன் உள்ளத்தை உங்களிடம் தெரிவிப்பதற்காகவே என்னை இவ்விடம் அனுப்பியுள்ளாள். தாங்கள் அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவராயினும் அவள் தன்னையும், தன் ஜீவனையும் உங்களிடம் ஒப்படைக்க விரும்புகிருள். அவள் உள்ளத்திலிருந்து எரியும் மோகத்தீயி லிருந்து கிளம்பும் புகையைப் போல உஷ்ணக் காற்றுடன் இரவு பகல் சதா அவள் பெரு மூச்சு விட்டுக் கொண்டே இருக்கிருள். கன்னம் கரைய கறுப்பான கண்ணீர் சதா அவள் முகத்தாமரையைச் சுற்றி வட்டமிடும் தேனீப் போல சொட்டிக் கொண்டே இருக்கிறது"

அதைக் கேட்டவுடன் கமலாகரன் அவளை நோக்கி, "அம்மணி! தங்கள் வாயால் என் காதலி என் மீது ஆசை கொண்டிருக்கிருள் என்பதைக் கேட்டு அலாதியான ஆனந்தமடைகிறேன். ஆயினும் அந்த சுந்தரி துக்கப்பட்டுக் கொண்டிருப்பதைக் கேட்க திகிலாக இருக்கிறது. ஆகவே, எங்களுக்கு நீங்கள் தான் தஞ்சமளிக்க வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டான்.

"இன்றைய இரவு நான் அனங்கமஞ்சரியை ரகசியமாக அவள் வீட்டுத் தோட்டத்திற்கு அழைத்து வந்து விடுகிறேன். தாங்கள் அதற்குள் வெளியில் வந்து இருக்க வேண்டும்!" என்று தெரிவித்தாள் மாலதிகை.

விஷயத்தை அறிந்த அனங்கமஞ்சரியும் ஆனந்தமடைந்தாள்.

சூரியன் அஸ்தமித்து, நெற்றியில் இட்ட திலகம்போல மேல்வானில் சந்திரன் தோன்றினன். கமலாகரன் தன்னை நன்ருக அலங்கரித்துக் கொண்டு தன் காதலியின் வீட்டுத் தோட்டத்தை அடைந்தான். மாலதிகை தான் சொன்னபடி அனங்கமஞ்சரியைத் தோட்டத்திற்கு அழைத்து வந்திருந்தாள். அங்கே மாமரங்களின் மத்தியிலே ஒரு மலர் மண்டபத்திலே அவளை உட்கார வைத்து விட்டு வெளியே போய்க் கமலாகரனைத் தோட்டத்திற்கு அழைத்து வந்தாள்.

அவன் தன் காதலியை நெருங்கிச் செல்லும்போது அவளும் அவனைப் பார்த்து விட்டாள். காதலின் உணர்ச்சி வேகத்தால் அவள் வெட்கம் எல்லாவற்றையும் துறந்தாள். ஆசையுடன் ஓடி வந்து அவன் கழுத்தில் கையைப் போட்டுக் கட்டிக் கொண்டாள். ஆனந்தத்தின் மேலீட்டால் அவள் மூச்சு உடனே நின்று விட்டது! காற்றில் ஒடிந்த கொடிபோல அவள் தேகம் உயிரற்றதாய் சாய்ந்தது.

பேரிடி போல நேர்ந்த இந்த விபரீதத்தைக் கண்ட கமலாகரன், "ஐயோ, இது என்ன?" என்று அங்கலாய்த்து மயங்கிப் பூமியிலே விழுந்தான். சிறிது நேரத்தில் அவன் மூர்ச்சைத் தெளிந்து எழுந்து தன் காதலியைக் கையால் எடுத்துத் தழுவி "ஓ" வெனப் புலம்பினான். துயரம் அவனைப் பெரிதும் அழுத்தியது. அதன் பாரத்தைத் தாங்க முடியாமல் அவன் இதயம் வெடித்தது. அவன் உயிரும் போய்விட்டது! காதலர் இருவருக்கும் நேரிட்ட கதியைக் கண்ட மாலதிகை அவ்வுடல்கள் மீது விழுந்து புரண்டு அழுதாள்.

மறுநாள் நடந்ததையறிந்த இருவருடைய உற்றார் உறவினரும் அங்கு வந்து கூடினார்கள். அவர்களுக்கு அவமானம், ஆச்சரியம், துக்கம், பிரமிப்பு எல்லாம் ஒருங்கே உண்டாயின. இந்தச் சங்கடத்திலே என்ன செய்வது என்பதை அறியாமலே அவர்கள் தலை கவிழ்ந்து நின்றார்கள். கெட்ட ஸ்திரீ புருஷர்களால் அவர்களுக்குத் தௌர்ப்பாக்கியமும் அவர்களுடைய குடும்பத்துக்கு க்ஷீணமுமே உண்டாகுமன்றோ?

இந்தச் சமயம் அனங்கமஞ்சரியின் கணவனான மணிவர்மன் மனைவியைப் பார்ப்பதற்காக அதிக ஆவலுடன் மாமனாரின் ஊருக்கு வந்து சேர்ந்தான். மாமனார் வீடு சேர்ந்து நடந்ததை யறிந்ததும் தோட்டத்துக்கு ஓடோடி வந்தான். கண்களில் நீர் நிறைந்து அவன் பார்வையை மறைத்தது: அங்கே வேறொருவன் பக்கத்தில் தன் மனைவி பிணமாகக் கிடப்பதைக் கண்டான். மோகத்தின் வசப்பட்டிருந்த அவன் ஜீவனும் துயரத்தால் தகிக்கப்பட்டு உணர்ச்சி வேகம் தாங்காமல் உடலைவிட்டு உடனே பிரிந்தது! கணவனும் மாண்டுவிட்டான் மனைவியின் மீதுள்ள மோகத்தாலே! அவ்விடம் கூடியிருந்தவர்கள் உடனே அழுது புலம்பி பெருங்கூச்சல் கிளப்பினர். நடந்த விஷயத்தைக் கேள்வியுற்று நகர மாந்தர்களும் ஆச்சரியம் அடைந்து அங்கே திரண்டு விட்டனர்.

"தேவி, உன்னை இந்தத் தோட்டத்திலே பிரதிஷ்டை செய்திருக்கும் வியாபாரியான அர்த்ததத்தன் சதா உன்னையே வழிபட்டு வருபவன். ஆகவே அவன்மீது இரங்கி அவனை

இத்துக்கத்திலிருந்து மீட்க வேண்டும்" என்று மாலதிகை சண்டிகையிடம் முறையிட்டாள். பக்தருக்கு அனுக்கிரகிக்கும் சிவப்பிரியை உடனே அம்மூவரையும் மனோவிகாரம் எதுவுமில்லாமல் பிழைத்து எழுமாறு அனுக்கிரகித்தாள். அவள் அருளால் எல்லோரும் தூக்கத்திலிருந்து விழிப்பது போல உயிர் பெற்று எழுந்தார்கள். இந்த அதிசயத்தைக் கண்டு எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள். கமலாகரன் அவமானத்தால் தலைகிறக்கம் கொண்டு வீடு திரும்பினான். பிழைத்து எழுந்து வெட்கத்தால் உடல் குன்றிப்போன அனங்கமஞ்சரியை அவள் கணவனுடன் அர்த்ததத்தன் வீட்டுக்குச் சந்தோஷத்துடன் அழைத்துச் சென்றான்.

நள்ளிரவிலே இவ்விதம் கதை கூறி முடித்த வேதாளம் மறுபடியும் விக்கிரமாதித்த மகாராஜனை நோக்கி ஒரு கேள்வி கேட்டது "அரசே, மோகத்தால் கண்ணிழந்த இம்மூவருள் யார் அதிகமான விரகதாபம் கொண்டவர் என்பதைச் சொல்லும்? காதலன் - காதலி - கணவன் - இம்மூவரில் யார் உயிர் நீத்தது அபூர்வம்? தெரிந்து கொண்டே சொல்லாவிட்டால் நான் முன்னே கொடுத்த சாபம் நிறைவேறும்!" என்றது வேதாளம்.

அதற்கு விக்கிரமாதித்த மகாராஜன் பின்வருமாறு பதிலளித்தான்: "அம்மூவருள் மணிவர்மனே அதிகமான விரகதாபம் கொண்டவன். மற்ற இருவரும் பரஸ்பரம் மோகித்துக் காலத்தால் வளர்ந்த ஆசை வசப்பட்டு அதன் விளைவாக உயிர் துறந்தார்கள். ஆனால் மணிவர்மனோ தன் மனைவி வேறொருவன் மீது கொண்ட காதலால் உயிர் துறந்தாள் என்பதைக் கடைக் கண்ணால் கண்டும் அருவருப்புக் கொள்வதற்குப் பதிலாக மகத்தான காதலால் வருத்தத்தில் தன் உயிரை இழந்தான்! இன்னொரு மனைவியை அடைய வசதி இருந்தும், குலம் வளரப் புத்திரன் இல்லாதிருந்தும், மனதில்லா மனைவிக்காக உயிர் நீத்த கணவனின் செயலே அபூர்வமாகும்!" என்றான்.

இந்தப் பதிலைக் கேட்டதும் வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு பழையபடி முருங்க மரத்திலேறிக் கொண்டது. விக்கிரமாதித்தனும் மறுபடி அதைத் தேடிப்பிடிக்க அந்த கோரமான நடு இரவிலே கிளம்பினான்.

## 15. சிங்கத்தை சிருஷ்டித்த கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்தை அடைந்து அதன் உச்சியிலிருந்த வேதாளத்தைப் பிடித்துத் தோள்மீது சுமந்து வழி நடந்து வந்தபோது, வேதாளம் அரசனை நோக்கி,

"அரசே! நீ நல்லவனாகவும் வீரனாகவும் இருக்கிறாய். ஆகவே, நான் கூறப்போகும் இணையற்ற கதையைக் கேள்" என்று சொல்ல ஆரம்பித்தது.

இந்தப் பூலோகத்தில் பாடலிபுத்திரம் என்னும் நகரத்தின் அதிபதியாகத் தரணிவராஹன் என்ற அரசன் ஒருவன் இருந்தான். அவன் நாட்டிலே பிராமணர்கள் நிறைய இருந்தார்கள். பிரம்மஸ்தலம் என்ற பிரதேசத்தை அவர்களுக்குத் தானம் அளித்திருந்தான். அதிலே விஷ்ணுஸ்வாமி என்ற ஒருவனிருந்தான். அவனுக்கு ஏற்ற மனைவியும் வாய்த்திருந்தாள். காலக்கிரமத்தில் நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் வேதம் ஓதி இளமைப் பருவத்தைத் தாண்டியபோது விஷ்ணுஸ்வாமி பரகதி அடைந்தான். அவன் மனைவியும் அவனைத் தொடர்ந்தாள்.

காப்பாற்றுகிறவர் யாரும் இல்லாமல் நான்கு குமாரர்களும் நிரம்பவும் கஷ்டப்பட்டார்கள். அவர்களுடைய சொத்துக்களை யெல்லாம் உறவினர்கள் பறித்துக் கொண்டார்கள். ஆகவே, அவர்கள் ஒன்றுகூடி, "நமக்கு இங்கே ஜீவாதாரம் ஒன்றுமில்லை. ஆகவே நாம் இவ்விடத்தைவிட்டு யக்ஞஸ்தலத்தில் உள்ள தாயைப் பெற்ற பாட்டன் வீட்டுக்குப் போய்விட்டால் என்ன?" என்று யோசித்தார்கள். அவ்விதமே முடிவு செய்து அவர்கள் கிளம்பி, வழிநெடுக பிச்சையெடுத்துச் சாப்பிட்டு, பல நாட்கள் வழி நடந்து தாயைப் பெற்ற பாட்டன் வீட்டை அடைந்தார்கள். அவர்களுடைய பாட்டனார் இறந்து போய்விட்டார். ஆயினும் மாமன்மார்கள் அவர்களுக்குத் தங்க இடம் கொடுத்து ஆகாரம் அளித்தார்கள். அவர்கள் அங்கேயே வேதம் ஓதிக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். சிறிது காலம் பொறுத்து, அவர்களுடைய ஏழ்மையைக் கண்ட மாமன்மார்கள் அவர்களை வெறுக்கத் தலைப்பட்டனர். சோறு, துணி கொடுக்கவும் அசிரத்தைக் கொண்டனர்.

உறவினர்கள் தங்களைக் கேவலமாக நடத்துவதைக் கண்டு மனம் புண்ணாயிற்று. சதா இதைப் பற்றி வருந்தி வெளியில் சொல்லாமல் காலம் கழித்து வந்தார்கள். கடைசியில் ஒருநாள் மூத்தவன் மற்றவர்களைப் பார்த்துப் பின்வருமாறு தெரிவித்தான்: "தம்பிகளே! நாம் என்ன செய்ய முடியும்? எல்லாம் விதி ஆட்டி வைக்கிறது. உலகத்திலே எந்த மனிதனும் ஒரு காரியத்தை ஓரிடத்தில் அவனாகச் செய்துவிட முடியாது. உதாரணமாக, இன்றைக்கு நான் துக்கத்தால் உள்ளம் உடைந்து கால் போன போக்கில் திரிந்து கொண்டிருந்தேன். அப்போது மயானத்தை அடைந்தேன். அங்கே உயிர் அற்று போட்டது போட்டபடி ஒருவன்

உடல் கிடக்கக் கண்டேன். துன்பத்தின் பாரத்தை ஒழித்து இவ்விதம் சாந்தி பெற்றவன் பாக்கியசாலியே என்று அவனைப் பார்த்து பொறாமைப்பட்டு எனக்குள்ளேயே சொல்லிக் கொண்டேன். அப்போது எனக்கு அப்படித்தான் தோன்றியது. அதைப்போல நானும் இறந்து விடுவதென்று தீர்மானித்து ஒரு மரத்தின் கிளையிலே ஒரு கயிற்றைக் கட்டித் தூக்குப் போட்டுக் கொண்டேன். என் நினைவு போய்விட்டது. ஆயினும் ஆவி பிரியவில்லை. அந்த நிலையிலே கயிறு அறுந்து நான் பூமியிலே விழுந்தேன். நினைவு வந்து நான் பார்த்த பொழுது யாரோ இளகிய மனதுள்ள ஒருவன் தன் ஆடையால் என்னை விசிறிக் கொண்டிருந்தான். அவன் என்னைப் பார்த்து "நண்பா! அறிவுள்ளவனாக இருந்தும் நீ ஏன் இப்படி அவஸ்தைக்கு இடம் கொடுத்தாய்? நற்கருமாக்களால் இன்பமும் கெட்ட கருமாக்களால் துன்பமும் ஏற்படுகின்றன. இவைகளே மூலகாரணம். உன்னுடைய கஷ்டம் துன்பத்தால் நேர்ந்ததாயின் நற்கருமாக்களைச் செய். அவ்விதம் இல்லாமல் தற்கொலை செய்து நரக அவஸ்தைப்பட எப்படித்தான் விரும்பினாயோ?" என்று பலப்படியாகச் சொல்லித் தேற்றிவிட்டு எங்கோ போய்விட்டான். நானும் தற்கொலை செய்து கொள்ளும் எண்ணத்தை விட்டு இங்கு வந்தேன். இதிலிருந்து விதி எதிர்த்து நின்றால் பிராணனைக்கூட விடமுடியாது என்பது தெரியவில்லையா? ஆகவே. இனித் தரித்திரத்தின் கஷ்டத்தை அனுபவிக்க நேரிடாமல் இருக்க வேண்டுமென்று ஏதாவது ஒரு புண்ணியத் தீர்த்தத்தை அடைந்து காயக் கிலேசம் செய்து தவம் இயற்றப் போகிறேன்."

மூத்தவன் இவ்விதம் சொன்னதுமே அவன் தம்பிகளும் பதிலளித்தார்கள். "அண்ணா! நல்ல அறிவாளியாக இருந்தும் ஏழை என்பதற்காக தாங்கள் ஏன் மனச்சோர்வு அடைய வேண்டும்? செல்வம் பனிக்காலத்து மேகம் போல சீக்கிரம் கரைந்துவிடும் என்பது உங்களுக்குத் தெரியாதா? அதிர்ஷ்டத்தையோ சஞ்சல சுபாவமுள்ள ஸ்திரீயையோ யாரால்தான் கட்டிப்பிடித்து நிறுத்தி வைக்க முடியும்? என்னதான் கஷ்டப்பட்டுக் காவல் புரிந்தாலும் அது வெளிப்படுவதைத் தடுக்கவே முடியாது. ஆகவே அறிவுடைய ஒருவன் சிரமப்பட்டு ஏதாவது ஒரு வித்தையோ, சக்தியோ அடைய வேண்டும். அதனாலேயே அவன் செல்வாக்கையும் குறைவில்லா செல்வத்தையும் பெறமுடியும்."

தம்பிகள் தன்னைப் பார்த்து இப்படிச் சொன்னவுடன் மூத்தவன் சுதாரித்துக் கொண்டான். "இவற்றுள் எவ்வித்தையை நாம் கற்றுக் கொள்ளலாம்?" என்று தம்பிகளைப் பார்த்துக் கேட்டான். அவர்கள் ஒருவருக்கொருவர் கலந்து ஆலோசித்தனர். கடைசியாக "நாம் உலகத்திலேயே திரிந்து பார்த்து ஏதாவது

மாயவித்தை கற்றுக் கொள்வோம்" என்று தீர்மானித்தனர். அவ்விதம் முடிவு செய்த பின் அவர்கள் திரும்பவும் வந்து சேரவேண்டிய இடத்தை நிச்சயித்துக் குறிப்பிட்டுவிட்டு நால்வரும் கிழக்கு, தெற்கு, வடக்கு ஆகிய திசைகளில் சென்றனர்.

காலக்கிரமத்தில் அவர்கள் நிச்சயித்திருந்த இடத்தில் மறுபடியும் ஒன்று கூடினார்கள். யார் யார் எந்தெந்த வித்தையைக் கற்று வந்தார்கள் என்று ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்டார்கள். மூத்தவன் "ஏதாவது ஒரு பிராணியின் சிறு எலும்புத் துண்டு கிடைத்தாலும் அதைக் கொண்டு மற்ற எலும்புகளைச் சேர்த்து அந்தப் பிராணியின் மாமிச பிண்டத்தை என்னால் உற்பத்தி செய்துவிட முடியும். அந்த வித்தையை நான் கற்று வந்திருக்கிறேன்" என்றான்.

இவ்விதம் தன் சகோதரன் கூறியதைக் கேட்டவுடன் இரண்டாமவன், "ஏதாவது ஒரு பிராணியின் எலும்புத் துண்டின் மீது ஏற்ற தோல், மயிர், நரம்பு மண்டலம் இவற்றை நான் உற்பத்தி செய்துவிடுவேன்!" என்று தெரிவித்தான். உடனே மூன்றுமவன், "மாமிசப் பிண்டம் தோல் முதலியவைகளை உண்டாக்கிவிட்டால் நான் அந்தப் பிராணியின் மற்ற அவயவங்களையும், இரத்த உறுப்புகளையும் கொடுத்து விடுவேன்!" என்று கூறினான். நாலாம் சகோதரன் "எல்லா அவயங்களும் உடைய ஒரு பிராணியை சிருஷ்டித்து விட்டால் அதற்கு உயிர் ஊட்ட என்னால் முடியும்!" என்றான்.

இவ்விதம் அவர்கள் ஒவ்வொருவரும் கூறி முடித்தவுடன் நால்வரும் சேர்ந்து ஓர் காட்டுக்குச் சென்றார்கள். அங்கே கிடைக்கும் ஏதாவது ஒரு எலும்புத் துண்டைக் கொண்டு அவரவர் சக்தியைப் பரீட்சித்துப் பார்ப்பதற்காகவே போனார்கள். அங்கே சிங்கத்தின் எலும்புத் துண்டு ஒன்று கிடந்தது. எந்த மிருகத்தின் எலும்புத்துண்டு என்றறியாமல் அவர்கள் அதை எடுத்தனர். முதல்வன் அந்த எலும்பைக் கொண்டு மாமிசப்பிண்டத்தை உண்டாக்கினான். இரண்டாமவன் அதற்குத் தோலைப் போர்த்தினான். மூன்றுமவன் அதன் அவயங்களையும் உண்டாக்கினான். நான்காமவன் அதற்கு ஜீவனையும் கொடுத்துவிட்டான்.

உடனே பயங்கரமான சிங்கம் ஒன்று கிளம்பியது. அடர்த்தியான பிடரி, கோரப்பற்களுடன் எல்லாவற்றையும் விழுங்கக் கூடிய வாய் காலில் வளைந்த கூர்மையான நகங்கள்: இவ்விதம் கம்பீரமாகத் தோன்றிய அந்தச் சிங்கம் உடனே அதை சிருஷ்டித்த நால்வர் மீதும் பாய்ந்து, அந்த இடத்திலேயே அவர்களை அடித்துக் கொன்று வயிறு புடைக்கத் தின்றுவிட்டு காட்டுக்குள் மறைந்தது. ஆகவே, அந்த நான்கு நிபுணர்களும்

அழிந்து ஒழிந்தனர். எதிரியை உண்டாக்கி யார்தான் ஆத்ம திருப்தி அடைவார்கள்? ஆகவே விதி அனுகூலமாக இல்லா விட்டால், ஒருவன் எவ்வளவுதான் கஷ்டப்பட்டு வித்தையைக் கற்ருலும் அதனுல் அவனுக்கு நன்மை ஏற்படாது. அதற்குப் பதிலாகத் தீமையே உண்டாகும். மரத்திற்கு எவ்வளவு தண்ணீர் ஊற்றினுலும், அதன் வேர் அறுந்து போகாமல் இருந்தால்தான் அது காய்த்துப் பழுக்கும். அதே போல, விதியாகிய வேர் அனுகூலமாக இருந்து, அதற்கு அறிவாகிய தண்ணீரை வார்த்து வளர்த்தால் தான் புகழ் என்ற பலனை அடையலாம்.

விக்கிரமாதித்தன் தோள்மீது சுமந்திருந்த வேதாளம் நள்ளிரவில் அவன் வழி நடந்து செல்லும் பொழுது, இந்தக் கதையைச் சொல்லி முடித்துவிட்டு, "அரசே! அந்நான்கு நிபுணர்களைக் கொன்ற சிங்கத்தைச் சிருஷ்டி செய்த பழி அந் நால்வருள் யாரைச் சேரும்? இதை உடனே சொல். பழைய சாபம் அப்படியே இருக்கிறது என்பதும் ஞாபகமிருக்கட்டும்!" என்றது.

வேதாளம் இவ்விதம் கேட்டவுடனே விக்கிரமாதித்தன், "இந்த வேதாளம் என் மௌனத்தைக் கலைத்துத் தப்பி ஓடுவதற்கே விரும்புகிறது; பரவாயில்லை நான் மறுபடியும் போய் பிடித்து வருவேன்" என்று தனக்குத் தானே தீர்மானித்து கொண்டான். பிறகு வேதாளத்தைப் பார்த்து, "அவர்களுள் சிங்கத்துக்கு உயிர் ஊட்டியவனையே பழி சாரும். மற்றவர்கள் தங்கள் மாய சக்தியால் எந்த மிருகத்தை சிருஷ்டிக்கிருர் என்று அறியாமலே அதன் மாமிச பிண்டத்தையும், தோல் அவயவங்களையும் உண்டாக்கி ஞர்கள். அறியாமையினுல் செய்த காரியத்தால் பழி உண்டாகாது. ஆயினும் சிங்கத்தின் உருவத்தைக் கண்ணுற் கண்டும், தன் சக்தியை நிரூபிக்க வேண்டி அதற்கு உயிர் ஊட்டியவனையே பிரம்மஹத்தி தோஷம் பீடிக்கும்!" என்று முடிவு கூறினுன். இந்தப் பதிலைக் கேட்டதும் வேதாளம் மறுபடி கட்டவிழ்த்துக் கொண்டு முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது. அரசனும் அதைத் துரத்திச் சென்ருன்.

## 16. ஹரிஸ்வாமி கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்தை அடைந்து வேதாளத்தைப் பிடித்துத் தோள்மீது சுமந்துகொண்டு திரும்பி வரும்போது, வேதாளம் "கேளுமையா ராஜனே! ஒரு சிறுகதை சொல்லுகிறேன்" என்று பின்வரும் கதையை ஆரம்பித்தது.



சிவனுக்கு இருப்பிடமான வாரானசி நகரத்திலே தேவஸ்வாமி என்ற அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் அரசனுல் கௌரவிக்கப்பட்டு ஏராளமான செல்வம் அடைந்திருந்தான். அவனுக்கு ஹரிஸ்வாமி என்ற குமாரன் இருந்தான். மகனுக்கு லாவண்யவதி என்ற அழகி மனைவியாக விளங்கினுள். திலோத்தமை போன்ற அப்ஸர ஸ்திரீகளைச் சிருஷ்டித்திருந்த பின்னரே பிரம்மா அந்த அழகியைச் சிருஷ்டித்திருக்க வேண்டும். லாவண்யவதி அவ்வளவு அழகாகவும், வசீகரமாகவும் இருந்தாள்.

ஒரு நாள் இரவு ஹரிஸ்வாமி தன் மனைவியுடன் மாளிகையின் உப்பரிகையிலே படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். அந்தச் சமயம் மதனவேகன் என்ற வித்தியாதர ராஜகுமாரன் ஒருவன் ஆகாச மார்க்கமாகப் போய்க் கொண்டிருந்தான். அவன் லாவண்யவதியின் அழகைக் கண்டு மயங்கிக் கீழே இறங்கி அவளைத் தூக்கிக் கொண்டு ஆகாய மார்க்கமாகப் பறந்து சென்றுன்.

கண் விழித்துப் பார்த்தபோது ஹரிஸ்வாமி தன் பக்கத்தில் லாவண்யவதியைக் காணுது கவலையுடன் எழுந்தான். "என்ன இது? அவள் எங்கே போய்விட்டாள்? என்மீது கோபமா? என் உள்ளத்து உணர்ச்சியை அறிவதற்காக அவள் ஒளிந்து கொண்டிருக்கிறுளா? அல்லது வேடிக்கை செய்கிறுளா?" இவ்விதம் பலவிதமாக எண்ணி அவன் குறுக்கும் நெடுக்கும் நடந்து மாளிகை முழுவதும் தேடினுன்; தோட்டத்திலும் அவளைத் தேடினுன். எங்கும் அவளைக் காணவில்லை. இரவு அவன் தூங்கவே இல்லை. அவளைக் காணுத வருத்தத்தால் மனம் வெந்து அவதிப்பட்டான். பற்பல விதமாகப் புலம்பினுன்.

மறுநாள் பொழுது விடிந்த
சூழ்ந்திருந்த இருளைப் போக்கிய
கவ்வியிருந்த இருள் அகலவில்லை
வருத்தமும் அதிகமாயிற்று. உற்றா
அவன் தன் காதலியின் பிரிவை
"இவ்விடத்தில் அவள் நின்று
அலங்கரித்துக் கொண்டாள்; இந்
விளையாடினாள்" என்று அவன் வி
அலைந்து அழுது ஆற்றினான்.

"அவள் இறந்து போய்விடவி
மாய்த்துக் கொள்ளவேண்டும்
எப்படியாவது கண்டுபிடித்து வி
இரு. அவளைத் தேடிக் கிளம்பு. ஒரு
எந்தக் காரியமும் வெற்றியடையா
உறவினர் அவனைத் தேற்றினா
காலத்தில் தன்னம்பிக்கையுடன்
உள்ளது முழுமையும் சத் புருஷர்
தீர்த்த யாத்திரை கிளம்பி எல்லா
பாபங்களைப் போக்குவேன். பா
ஒருகால் யாத்திரையிலே என் மனை
அவன் தனக்குத்தானே முடிவு செ

உடனே அவன் எழுந்திருந்து
கர்மாக்களைச் செய்து முடித்தான்.
செய்து தன் சொத்து முழுவதை
அப்பால் அவன் தன் பிறவியைத்
எடுத்துக்கொள்ளாமல் தன் மனை
புண்ணிய க்ஷேத்திராடனம் செய்ய
அவ்விதம் அவன் அலைந்து திரி
வந்தது. வெய்யில் உக்கிரமா
நெருப்பைக் கக்கி வீசியது. கு
அடித்தளம் வெடிப்புக் கண்டுகிட
காய்ந்து கருகி பட்டை வெடித்து நி

பிரிவாற்றாமை, பசி, தாகம், வ
உருக்குலைந்து மாறிச் சோறு த
ஏக்கத்துடன் ஹரிஸ்வாமி வரும்போ
அங்கே பத்மநாபன் என்ற ஓர்
ஒன்றைச் செய்து பலருக்கு அன்
வீட்டில் பலர் சாப்பிடுவதைக் கண
வாசலை அடைந்து வாசற்படியிலே

மௌனமாக நின்றிருந்தான். இதைக்
அவன்மீது இரக்கப்பட்டு, "பாவ
யாரைத்தான் அது பணிய வைக்கா
ஒரு கிரஹஸ்தன் தலையைத் தொங்
ஆகாரத்துக்காகக் காத்திருக்கிறான்.
அலுப்பும் பசிக் கொடுமையும் அவ
போலும். இப்படிப்பட்டவனுக்கே அ
வேண்டும்" என்று தனக்குத் தானே
பால், நெய், சர்க்கரை ஆகியவை
அன்னத்தை ஒரு பாத்திரம் நிறைய
கொடுத்து. "இதைச் சாப்பிட்டு பசிய

அவனும் பாத்திரத்தை வாங்கிச்
அடைந்து, பக்கத்திலிருந்த ஓர் ஆலய
விட்டுக் குளத்திலிறங்கி கை கால்
வந்தான். இதற்குள் ஒரு பருந்து
நகங்களாலும் எங்கிருந்தோ கரு
தூக்கிக் கொண்டு அந்த மரக்கிளைய
அவ்விதம் பருந்து தூக்கிவந்த கரு
வாயிலிருந்து வெளிப்பட்டுக் கீழே
விழுந்தது. ஹரிஸ்வாமியும் அ
சோற்றையும் சாப்பிட்டு விட்டான்.
உடலுள் கலந்து அவதி கொடுக்
ஒருவனுக்குச் சதி செய்தால் உலகத்
விரோதமாக மாறி விடுமன்றோ? அ
எனக்கு விஷமாக வந்து வாய்த்தது"

விஷத்தின் கொடுமை பொறு
தள்ளாடிக் கொண்டே வந்து
மனைவியிடம் "நீங்கள் கொடுத்தச்
விட்டது. ஆகவே அந்த விஷத்தை
வாதியையோ, விஷ வைத்தியனையே
இல்லாவிட்டால் பிரம்மஹத்தி தோஷ
என்றான்.

இதைக் கேட்ட அம்மாது இவ்
அறியாமல் திகைத்து நிற்கும் போது,
மூடி உயிரை விட்டான்.

உடனே அந்தணன் கோபித்து அ
மீதே சுமத்தினான். நிரபராதியும், உ
அவளை வீட்டை விட்டே துரத்தி வி
செய்யப் போயும் அகாரணமாகத்

கிடைத்ததை எண்ணி மனம் நொந்து அவள் அதற்காகத் தபசு செய்ய புண்ணிய தீர்த்தத்தை நாடிச் சென்ருள்.

அதன் மீது பருந்து, பாம்பு, பிராமணனுக்கு சோறு கொடுத்த தம்பதிகள் ஆகிய நால்வருள் யாரைப் பிரம்மஹத்தி தோஷம் பீடிக்கும் என்பதைப் பற்றி தர்மராஜாவின் முன்னிலையில் விவாதம் நடந்தது. எனினும் முடிவு ஒன்றும் செய்யப்படவில்லை.

இவ்விதம் கதை கூறிய வேதாளம், "ஆகவே திரிவிக்கிரமசேன மன்னு! அந்தப் பிரம்மஹத்தி தோஷமும், ஹரிஸ்வாமி உயிர் நீத்த பழிக்குற்றமும் யாரைச் சாரும் என்பதை நீர் சொல்லும். இல்லாவிட்டால் பழைய சாபம் உம்மைப் பீடிக்கும்!" என்றது.

வேதாளம் இப்படிக் கேட்டவுடனே விக்கிரமாதித்த மகாராஜன் தன் மௌனத்தைக் கலைத்துப் பின்வருமாறு பதில் சொன்னுன்.

"யாரும் குற்றவாளியல்ல, தன்னை எதிரியான பருந்து பிடித்து விழுங்க வரும்போது அநாதையான நிலையிலிருந்த பாம்பின் மீது குற்றமேயில்லை. பருந்தை பற்றிக் கூறப் போனுல், பசிக்கும்போது தனக்கு இயற்கையான ஆகாரத்தை எங்கேயோ கண்டு எடுத்து அதை புசிக்கும்போது பருந்து என்ன தவறு செய்து விட்டது? தம்பதிகளோ அவர்கள் தருமத்தினின்றும் வழுவாமல் வாழ்க்கை நடத்தி வந்து, ஹரிஸ்வாமி பசியென்று வந்தபோது இரக்கப்பட்டு ஆகாரம் கொடுத்தார்கள். அவர்களும் குற்றம் செய்தவர்களாக மாட்டார்கள். ஆகவே நன்ருக யோசிக்காமல் இவர்களில் எவரோ ஒருவர்மீது யாராவது பழி சுமத்திஞல் அவ்விதம் பழிசுமத்துகிறவர்களையே பிரம்மஹத்தி தோஷம் பீடிக்கும்! தற்செயலாக நிகழ்ந்துவிட்ட உயிர்க்கொலையில் யார் மீதாவது குற்றம் சுமத்த முயலுபவர்கள் மீதுதான் குற்றம் ஏற்படும்!"

இந்தப் பதிலைக் கேட்ட வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக் கொண்டு கிளம்பி முருங்க மரத்தில் தொற்றிக் கொண்டது. அரசனும் அதைப் பிடித்து வரக் கிளம்பினுன்.

## 17. இரத்தினுவதி கதை

மறுபடியும் விக்கிரமாதித்தன் முருங்க மரத்தையடைந்து வேதாளத்தைப் பிடித்துத் தோள்மீது சுமந்து கொண்டு வரும் வழியில் வேதாளம் அவனைப் பார்த்து, "அரசே! நீர் களைத்துப் போயிருக்கிறீர். ஆகவே நான் அதிசயமான கதை ஒன்றை கூறுகிறேன். கேளும்!" என்று சொல்ல ஆரம்பித்தது.



முன்னொரு காலத்தில் விஷ்ணு பூலோகத்தில் ராமனாக அவதரித்து வசித்து வந்த அயோத்திமா நகரத்தில் வீரகேது என்ற ஒருவனிருந்தான். அவன் தன் நாட்டை நன்றாகப் பாதுகாத்து ஆண்டு வந்தான்.

அந்த நாளில் அந்த நகரத்தில் வணிகர் தலைவனான இரத்தினதத்தன் என்ற பெரிய வியாபாரி இருந்தான். அவன் பல தெய்வங்களை வேண்டிக் கொண்டதின் பேரில் அவனுக்கு நந்தயந்தி என்னும் மனைவியிடம் இரத்தினாவதி என்ற பெண் குழந்தை பிறந்தது. அவள் நற்குணங்கள் வாய்ந்து நல்ல சூடிகையாகவும், எழில் வாய்ந்தவளாகவும் வளர்ந்து பருவத்தை அடைந்தாள்.

அவளை மணந்து கொள்ள விரும்பி பெரிய வியாபாரிகளேயல்லாமல் அரசர்கள் பலரும் வந்து வலியப் பெண் கேட்டார்கள். ஆண் குலத்தையே வெறுத்து வந்த அவள் இந்திரனே ஆனாலும் வேண்டாம் என்று மறுத்து விட்டாள். கல்யாணத்திற்குச் சம்மதிப்பதைவிட இறந்து விடுவதே மேல் என்று நிச்சயித்திருந்த அவள் திருமணப் பேச்சையே காதால் கேட்கவும் விரும்பவில்லை. அவள்மீது பேரன்பு கொண்டிருந்த அவள் தந்தை இதனால் மிகவும் மனம் நொந்து போனார். செய்தியும் நகர முழுவதும் பரவி நிரம்ப ஆச்சரியத்தை விளைவித்தது.

அந்த காலத்தில் நகரெங்கும் திருட்டுத் தொல்லை அதிகமாகவே இருந்தது. ஒருவர்கூடத் தப்பவில்லை. ஆகவே ஜனங்கள் எல்லோரும் ஒன்று கூடி மன்னன் வீரகேதுவிடம் முறையிட்டார்கள். "அரசே, ஒவ்வொரு இரவும் திருடர்கள் சதா எங்களைக் கொள்ளையடித்துப் போகிறார்கள். எங்களால் அவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நீங்கள் அதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்." குடிமக்கள் இவ்விதம் முறையிட்டதைக் கேட்ட அரசனும் திருடர்களைப் பிடிப்பதற்காக நகரமுழுவதும் மாறு வேஷத்தில் காவற்காரர்களை நியமித்தான்.

அவர்களால் முடியவில்லை. திருட்டும் முன்போலவே நடந்து வந்தது. ஆகவே ஓர் இரவு அரசன் மாறு வேடம் புனைந்து

நேரில் காவலுக்குச் சென்றான். ஆயுதபாணியான அவன் திரிந்து வரும்போது நகரத்தின் ஒரு பாகத்தில் தனி மனிதன் ஒருவன் அலங்கத்தில் செல்வதைக் கண்டான். காலடிச் சப்தம் கேட்காமல் மிக்க சாமர்த்தியத்துடன் அவன் அடிக்கடி பின் பக்கம் திரும்பித் திரும்பி தன் விழிகளை உருட்டிப் பார்த்துக் கொண்டே சென்றான். "சந்தேகம் இல்லாமல் இவனே திருடன். தனியாக வந்து நகரத்தை கொள்ளையடித்துச் செல்கிறான்" என்று தனக்குத் தானே கூறிக்கொண்டு அவனை அணுகினான். அரசனைக் கண்ட திருடனும் "யார்?" என்று அதட்டிக் கேட்டான். தானும் ஒரு திருடன் என்று பதிலளித்தான்.

உடனே அரசனைத் திருடன் "ஆஹா! ஒரே தொழிலே உடைய என்னுடைய தோழனே! ஆகவே நீ என்னுடைய வீட்டுக்கு வா. நான் உன்னை நன்கு உபசரிப்பேன்" என்று கூறி அழைத்தான். இதைக் கேட்ட அரசன் அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டு அவனுடன் கிளம்பினான். திருடன் காட்டிலே ஒரு பூமிக்கு அடியிலே ஒரு பாதாள குகையில் வாழ்ந்து வந்தான். மஹாபலி மன்னன் ஆளாத பாதாளம் போல அந்த இடம் பிரகாசமான தீப அலங்காரத்துடன் ராஜ போகத்துடன் கூடிய சோபையாக விளங்கியது.

அவன் உள்ளே நுழைந்து ஓர் ஆசனத்தில் அமர்ந்தான். அவனை உபசரிக்க ஏற்பாடு செய்வதற்காகத் திருடன் உள் கட்டுக்குச் சென்றான். அப்போது அடிமைப் பெண் ஒருத்தி வந்து, "பிரபு, மரணத்தின் வாயிலில் அன்றோ நீங்கள் நுழைந்திருக்கி றீர்கள். இவன் பிரபலமான திருடன். அவன் உள் கட்டிலிருந்து வெளியே வந்ததும் நிச்சயம் உங்களுக்கு ஏதாவது கெடுதல் செய்வான். அவன் மகா தந்திரசாலி. ஆகவே, இந்த இடத்தை விட்டு உடனே வெளியேறி விடுங்கள்" என்று அரசனை எச்சரித்தாள். அதைக் கேட்ட அரசன் உடனே அந்த இடத்தை விட்டுக் கிளம்பித் தன் அரண்மனை திரும்பி அன்றைக்கு இரவே தன் படைகளைத் தயாரித்தான்.

போருக்குத் தயாராகப் படையைத் திரட்டிக் கொண்டு வந்த அரசன் அந்த குகை வாயிலைத் திறந்து யாரும் வெளியே வர முடியாதபடி தடுத்து விட்டான். வீரர்கள் போர் முரசு கொட்டி ஆர்ப்பரித்தனர். தன் இருப்பிடத்தைச் சுற்றிப் படை சூழ்ந்திருப்பதைக் கண்ட திருடன் தன் ரகசியம் வெளியாகி விட்டதைக் கண்டு அஞ்சா நெஞ்சுடன் உயிர் உள்ளவரை போர் புரியத் திடம் கொண்டு கத்தியும் கேடயமும் கொண்டு வெளிக் கிளம்பினான். அவன் தனியாக நின்றே, அமானுஷ்யமான திறத்துடன் சண்டை போட்டான். யானையின் துதிக்கைகளையும், குதிரையின் கால்களையும் வெட்டித் தள்ளிக் கொண்டிருந்தான்.

இவ்விதம் அரசன் சேனையைக் குலைத்தவுடன், அரசன் நேரில் அவனைத் தாக்க ஆரம்பித்தான். வாள் போரில் வல்லவனுன அந்த அரசன் திருடனின் கையில் இருந்த வாளைத் தட்டி விட்டான். திருடன் நிராயுதபாணியாக ஆனவுடனே தானும் ஆயுதங்களைத் தூக்கி எறிந்து விட்டு அவனைக் கீழேத் தள்ளி மல்யுத்தம் செய்து பிறகு அவனை உயிருடன் பிடித்து விட்டான். அப்பால் அவனைச் சிறைப்பிடித்து அவனுடைய பெருஞ் செல்வத்துடன் தலைநகருக்கு வந்தான். மறுநாள் காலையில் அவனை பகிரங்கமாகக் கழுவேற்றி கொலை செய்து விட வேண்டுமென்று உத்தரவிட்டான்.

மறுநாள் காலையில் தண்டோராப் போட்டுக் கொண்டு திருடனை கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லும்போது, வியாபாரியின் மகளான இரத்தினுவதி தன் மாளிகையிலிருந்து அவனைக் கண்டாள். அவன் உடலில் புழுதி படிந்திருந்தது. முதல் நாள் சண்டையில் பட்ட காயங்கள் வேறு இருந்தன. அந்த நிலையில் அவனைக் கண்டதும் அவளுக்கு அந்தத் திருடன் மீது காதல் பிறந்தது. அவள் உடனே தன் தந்தையான இரத்தினத் தத்தனிடம் ஓடி "அப்பா, இதோ கொலைக்களத்திற்குச் செல்லும் இம்மனிதனையே நான் என் கணவனுக வரித்திருக்கிறேன், ஆகவே அரசருக்கு தண்டம் அளித்து மீட்டு வாருங்கள். இல்லாவிட்டால் நானும் அவருடன் உயிர் நீத்து மறு உலகத்திற்கு போய் விடுவேன்!" என்று தெரிவித்தாள்.

இதைக் கேட்ட வியாபாரி "இது என்ன இப்படிச் சொல்கிறுய்? சகல குணங்களும் பொருந்திய மன்மதனையொத்து இதற்கு முன் வந்தவர்களையெல்லாம் நீ வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிவிட்டாய். கொடூரமான திருடர்களின் தலைவன் மீது உனக்கு எப்படித் தான் காதல் பிறந்தது?" என்று கேட்டான். தந்தையும் உற்றார் உறவினரும் இவ்விதம் பலபடியாகக் கூறித் தடுத்தும் ஒரே உறுதியுடன் இருந்தாள். உடனே இரத்தின வியாபாரி வெகு வேகமாக அரசனிடம் சென்று அந்தத் திருடனுக்கு உயிர் பிச்சை அளித்தால், தன் சொத்து முழுவதையும் அரசனுக்காக காணிக்கையாக செலுத்துவதாக கூறினுன். ஆனுல் அரசன் நூறு கோடி பொன் கொடுத்தாலும் முடியாது என்று சொல்லி விட்டான். ஏராளமான கொள்ளைகள், கொலைகள் நடத்திய அத்திருடனை அரசன் தன் உயிரையும் அலட்சியம் செய்தன்றோ போரிட்டுப் பிடித்தான்? அப்படிப்பட்ட திருடனுக்கு உயிர் பிச்சை அளித்துவிட முடியுமா?

ஏமாற்றம் அடைந்த தந்தை திரும்பி வந்தவுடன், யார் யாரோ தடுத்தும் கேளாமல் இரத்தினுவதி திருடனுடன் உலக

வாழ்க்கையை விட்டு விடத் தீர்மானித்து விட்டாள். ஆகவே அவள் உடன் கட்டை ஏறுவதற்குச் சித்தமாகி ஸ்நானம் செய்து விட்டுப் பல்லக்கில் ஏறிக் கொலைக்களத்திற்குக் கிளம்பி விட்டாள். அவளுடைய தாய் தந்தையரும் மற்றோரும் எவ்வளவு தடுத்தும் கேட்காதபடியால் அவர்களும் அழுது கொண்டே அவளைப் பின் தொடர்ந்து சென்றனர்.

இதற்குள்ளாகக் கொலையாளிகள் திருடனைக் கழுவேற்றி விட்டனர். அவன் உயிரும் கழுமரத்தில் ஊசலாடிக் கொஞ்சம் கொஞ்சமாய் போய்க் கொண்டிருந்தது. அந்த நிலையில் தன்னை நோக்கி இரத்தினவதி தன் உறவினருடன் வருவதைக் கண்டான். உடன் இருந்தவர்கள் கூறக் கேட்டு முழு விவரத்தையும் அறிந்தான். சிறிது நேரம் அழுதான். பிறகு கொஞ்சம் சிரித்தான். அப்பால் உயிர் துறந்தான். கற்பிற் சிறந்த அவள் அவனை உடனே கழுவிலிருந்து இறக்கச் செய்து அதைச் சிதையிலிட்டுத் தானும் உடன் கட்டை ஏறிவிட்டாள்.

அப்போது பிறர் கண்ணுக்குப் புலப்படாமல் மயானத்தில் பிரசன்னமாக இருந்த சிவபெருமான் "கற்புடைய பெண்ணே! நீயே வரித்த கணவனிடம் கொண்டிருக்கும் பக்தியைக் கண்டு மனம் களித்தேன்! ஆகவே வேண்டிய வரத்தைக் கேள்!" என்றார். இதைக் கேட்ட அவள் தேவதேவனை வழிபட்டு வணங்கி "எம்பெருமானே! என் தந்தைக்கு என்னைத் தவிர வேறு குழந்தையில்லை. ஆகவே என்னை இழந்த துயரத்தால் அவர் வாழ்க்கையைத் துறந்து விடலாம். ஆகவே அவருக்கு நூறு குமாரர்கள் பிறக்க அருள் புரிய வேண்டும்!" என்று வேண்டினாள்.

உடனே சிவபெருமான் மறுபடியும் அவளிடம் "உன் தந்தைக்கு நூறு பிள்ளைகள் பிறக்கட்டும்! உன்னைப் போன்ற உறுதியுள்ள பெண்ணுக்கு இன்னும் அதிகமாகவே அருள்புரிய வேண்டும்! ஆகவே இன்னும் ஒரு வரம் கேள்!" என்று தெரிவித்தார். இதைக் கேட்ட அவள், "கடவுள் அருள் எனக்கு இருக்குமானால் என் புருஷன் உயிர் பெற்று வாழ வேண்டும். இனிமேல் அவர் தீய வழிகளில் செல்லாமல் நன்னடத்தையுடையவராக வேண்டும்" என்று வேண்டினாள். மறைந்திருந்தபடியே சிவபெருமானும், "அப்படியேயாகுக! உன் புருஷன் உயிர் பெற்று நெறி பிறழா வாழ்க்கை நடத்துவான்." என்று அசரீரியாகக் கூறினார். திருடனும் தன் தேகத்தின் காயங்கள் மறைந்து உயிர் பெற்றெழுந்தான்.

இதைக் கண்ட வியாபாரி திகைத்து ஆச்சரியமும், பிரமிப்பும், மகிழ்ச்சியும் ஒருங்கே அடைந்தான். தன் மகள் இரத்தினவதி,

மாப்பிள்ளையான திருடன், சந்தோஷமடைந்த சுற்றத்தார் ஆகியவர்களுடன் தன் மாளிகையை அடைந்தான். தனக்கு ஆண் குழந்தைகள் பிறக்கப் போகின்றன என்ற வரம் கிடைத்ததைக் கொண்டாட பெரிய விருந்து நடத்தினான்.

நடந்தவற்றை கேள்வியுற்ற வீரகேது மன்னனும் சந்தோஷம் அடைந்து அஞ்சா நெஞ்சு படைத்த அத்திருடனை வரவழைத்து அவனைத் தன் சேனைத் தலைவனாக நியமித்தான். அதற்குப் பிறகு, திருடனும் தன் தீய வழியை விட்டு நன்னெறியில் நடந்து, அரசனால் கௌரவிக்கப்பட்டு வியாபாரியின் மகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தான்.

ஃ ஃ ஃ

இவ்விதமாகக் கதையை முடித்த வேதாளம் பின்வரும் கேள்வியைக் கேட்டது. "அரசே! அந்தத் திருடனைக் கழுவேற்றிய போது வியாபாரி தன் மகளுடன் வந்ததைப் பார்த்து அவன் ஏன் முதலில் அழுதான்? பிறகு எதற்காகச் சிரித்தான்? இதைச் சொல்" என்று கேள்வி கேட்டது. அதற்கு விக்கிரமாதித்த மகாராஜன் "தன்னைக் காப்பாற்றுவதற்காக அந்த வியாபாரி எடுத்துக் கொண்ட சிரமத்துக்குத் தக்கப் பிரதியுபகாரம் தன்னால் செய்யமுடியவில்லையே என்று நினைத்து முதலில் அழுதான். பிறகு தன்னை மணக்க விரும்பிய அரசர்களையும் மறுத்த இந்தப் பெண், கள்வனை தன்மீது மோகங் கொண்டாளே, உண்மையில் பெண்கள் மனதையறிய முடியாது, என்று நினைத்து அவன் சிரித்தான்!" என்று பதிலளித்தான்.

இந்தப் பதிலைக் கேட்டதும் வேதாளம் பழையபடி கட்டவிழ்த்துக் கொண்டு முருங்க மரத்திற்குச் சென்று விட்டது. விக்கிரமாதித்தனும் அதை மறுபடியும் பிடித்துவரக் கிளம்பினான்.

## 18. சசிப்பிரபை கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்தை அடைந்து வேதாளத்தைக் கட்டிப் பிடித்து எடுத்துக் கொண்டு கிளம்பினான். வழி நடந்து செல்லும்போது அவன் தோள் மீதிருந்த வேதாளம், "அரசே, நான் உனக்கு மற்றொரு கதை சொல்கிறேன்" என்று ஆரம்பித்தது.

நேபாள தேசத்திலே சிவபுரம் என்ற நகரம் உண்டு. அங்கே முன்னாளில் யசக்கேது என்ற அரசன் ஒருவன் இருந்தான். ராஜ்யபாரத்தை அவன் மந்திரியான பிரஞ்ஞானசாகரனிடம்



ஒப்பித்துவிட்டு, தன் தேவியான சந்திரபிரபையுடன் இன்பம் நுகர்வதில் பொழுது போக்கி வந்தான். காலக்கிரமத்தில் அவனுக்கு அவளிடம் சசிப்பிரபை என்ற பெண் பிறந்தாள். பெயருக்கு ஏற்ப அவள் நல்ல அழகாக இருந்தாள்.

அவள் பருவத்தையடைந்த பிறகு வசந்த காலத்தில் ஒரு நாள் ஊர்வலத்தைக் கண்டுகளிப்பதற்காகத் தன் தோழிகளுடன் சென்றிருந்தாள். அப்போது அந்த ஊர்வலத்தைப் பார்க்க மனஸ்வாமி என்ற அந்தண இளைஞன் ஒருவனும் தோட்டத்திற்கு வந்திருந்தான். துவளும் மேனியளான அவள் தோட்டத்தில் தன் மெல்லிய விரல்களால் பூக்கொய்வதைக் கண்டான். உடனே அரசகுமாரியின் அழகில் அந்தண இளைஞன் மயங்கித் தன் இதயத்தைப் பறிகொடுத்தான். தன் வசம் இழந்த அவன், "வசந்த காலத்திலே கொத்து கொத்தாகப் பூத்திருக்கும் மலர்களைப் பறித்து மாரன் கணைகளைத் தொடுப்பதற்காக ரதிதேவியே இவ்வுருவத்தில் வந்திருக்கிறாளா?" என்று நினைத்தான்.

இவ்விதம் அவன் நினைத்து மயங்கி நின்றபோது ராஜகுமாரியும் அவனைக் கண்டாள். இழந்த உடலை மீண்டும் பெற்று மன்மதனே வந்திருப்பது போல அவனைக் கண்டதும், அவள் தன்னிலை மறந்து பூக்கொய்வதையும் விட்டு அவனையே பார்த்து நின்றாள்.

பரஸ்பரம் ஒருவர்மீது ஒருவர் கொண்ட மோகத்தால் இருவரும் திகைத்து நிற்கும் போது, திடீரென்று அபாயக் குரல் ஒன்று கிளம்பியது. உடனே இருவரும் தலைநிமிர்ந்து விஷயம் என்னவென்பதை அறியப் பார்த்தனர். அப்போது அந்த வழியே மதயானை ஒன்று ஓடி வந்து கொண்டிருந்தது. பக்கத்திலே

மற்ருெரு யானை இருப்பதை வாசனையால் அறிந்த அது மதம் கொண்டு சங்கலியை அறுத்துக் கொண்டு விட்டது. மரக்கிளை முறித்து காதிலே அங்குசம் தொங்கிக் கொண்டிருக்கப் பயங்கரமாக ஓடி வந்தது. யானையைக் கண்ட ராஜகுமாரியின் தோழிகள் பயந்து மூலைக்கு ஒருவராக ஒளிந்து கொண்டார்கள். தனித்திருந்த ராஜகுமாரியைக் கண்ட மனஸ்வாமி அவளை வாரித் தூக்கிக்கொண்டு யானைக்கு அகப்படாமல் விலகி ஓடினுன். அப்போது ராஜகுமாரி பயம், ஆசை, அவமானம் ஆகியவற்ருல் மனம் கலங்கி அவன் தோளைக் கட்டிக் கொண்டாள். பத்திரமான இடத்தையடைந்ததும், தோழிகள் ஓடி வந்து மனஸ்வாமியைப் புகழ்ந்து பேசி, ராஜகுமாரியை அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர். போகும்போது, ராஜகுமாரி திரும்பித் திரும்பித் தன்னை மீட்டவனைப் பார்த்துக்கொண்டே போனுள். அரண்மனை போய்ச் சேர்ந்த பிறகு, தன் உயிரைக் காத்த அவ்விளைஞனை நினைந்து உருகி இரவு பகல் என்ற வேறுபாடு இல்லாமல் காமத் தீ தகிக்க அவள் தன் காலத்தைப் போக்கி வந்தாள்.

ராஜகுமாரி அரண்மனைக்குப் போய்விட்டாள் என்பதை யறிந்த மனஸ்வாமியும் தோட்டத்தை விட்டுக் கிளம்பினுன். ஆனுல் அவனுக்குக் கால் எழும்பவே இல்லை. "அந்த மங்கையர் திலகம் இல்லாமல் என்னுல் உயிர் வாழ முடியாது. ஆனுல் அவளை அடைவது எப்படி? சர்வ கலைகளிலும் வல்லவரான மூலதேவரைத்தான் அடையவேண்டும். அவர்தான் ஏதாவது உபாயம் சொல்லுவார்" என்று நினைத்துத் தன் இருப்பிடத்தை அடைந்தான்.

மறுநாள் காலையில் கலாவல்லபனுன மூலதேவரைப் பார்க்கக் கிளம்பி, அவர் இருக்குமிடத்தை அடைந்தான். எப்போதும் போலவே மூலதேவருடன் அவர் நண்பன் சசியும் கூட இருந்தான். மனஸ்வாமி அவரை வணங்கித் தான் வந்த காரியத்தை எடுத்துச் சொன்னுன். இதைக் கேட்ட மூலதேவர் சிரித்துவிட்டு, அவன் விருப்பத்தை ஈடேற்றி வைப்பதாக உறுதி கூறினுர். பிறகு மாயக்குளிகை ஒன்றைத் தன் வாயில் அடக்கி அதன் மகிமையால் கிழப்பிராமணன் போல உருமாறினுர். அதே போல மனஸ்வாமிக்கும் ஒரு குளிகையைக் கொடுத்து, அதை வாயில் அடக்கிக் கொள்ளச் செய்து அவனை ஓர் அழகிய பெண்ணுக உருமாறச் செய்தார்.

இவ்விதம் பெண்ணுக மாறிய மனஸ்வாமியை அவன் காதலியான ராஜகுமாரியின் தந்தையிடம் தூர்த்த சிகாமணியான மூலதேவர் அழைத்துச் சென்ருர். சபாமண்டபத்தில் இருந்த அரசனை அணுகி, "அரசே, எனக்கு ஒரே மகன். அவனுக்கு

மணமுடிப்பதற்காக இந்தப் பெண்ணை நீண்ட தூரத்திலிருந்து அழைத்து வந்தேன். ஆனால் அதற்குள்ளாக என் மகன் எங்கோ போன இடம் தெரியாமல் போய்விட்டான். இப்போது அவனைத் தேடிப்பிடித்து அழைத்துவர வேண்டும். அதுவரையில் இந்தப் பெண்ணை என்ன செய்வது? உலகத்தையே நீ காத்து ரக்ஷிக்கிறாய்? ஆகவே இப்பெண்ணையும் நீ காப்பாற்றி என்னிடம் ஒப்புவிக்க வேண்டும்" என்று, வேண்டிக் கொண்டார். அரசன் தன் குமாரி சசிப்பிரபையை அழைத்து, "குழந்தாய்! இந்தப் பெண் உன்னிடமே தோழியாக இருக்கட்டும்" என்று அவளிடம் ஒப்புவித்தான். ராஜகுமாரியும் அதற்கு இசைந்து, பெண் வேஷத்தில் இருந்த மனஸ்வாமியைத் தன் அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்றாள். கிழப்பிராமணன் உருவம் கொண்ட மூலதேவர் வெளிக் கிளம்பி தம் இஷ்டப்படி போய்விட்டார். மனஸ்வாமி தன் காதலியுடன் பெண் உருவத்தில் தங்கிவிட்டான்.

சிறிது காலம் சென்றது. ராஜகுமாரிக்குத் தன் புதிய தோழியிடம் ஓர் அலாதியான ஆசை உண்டாயிற்று. சதா அவர்கள் இணைபிரியாமலே ஒன்றாகவே இருந்து வந்தார்கள். ஒரு நாள் இரவு ராஜகுமாரி தான் அன்றொரு நாள் தோட்டத்தில் கண்ட மனஸ்வாமியின் மீது கொண்டுள்ள காதலால் உள்ளம் உருகி வாடிக்கிடந்தாள். தன் காதலன் பெண் உருவத்திலே அப்போது தன் பக்கத்திலேயே இருப்பதை அவள் அறியவில்லை. ராஜகுமாரியின் நிலையைக் கண்ட மனஸ்வாமி மெதுவாக அவளிடம், "தோழி! நாளுக்குநாள் உன் உடல் இளைத்து வருகிறது. நிறம் வெளிறி வருகிறது. உன்னைப் பார்த்தால் காதலன் பிரிவாற்றாமையினால் வருந்துபவளை போலத் தோன்றுகிறது. உன் அந்தரங்கமான தோழிகளிடமிருந்துகூட இதை மறைப்பானேன்? என்னிடம் சொல்லு. இல்லாவிட்டால் நான் ஆகாரம் எதுவும் உட்கொள்ளமாட்டேன்!" என்று பலபடியாகக் கேட்டாள்.

இதைக் கேட்ட ராஜகுமாரி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுத் தன் கதையைப் பின்வருமாறு தெரிவித்தாள்:

"அடியே, தோழி! இத்தனை பேர்களில் உன்னிடம் நான் எதற்காக அவநம்பிக்கைப்பட வேண்டும்? ஆகவே நான் விவரத்தைக் கூறுகிறேன், கேள்" என்று ராஜகுமாரி சொல்லி, ஊர்வலத்திலே தான் மனஸ்வாமியைச் சந்தித்ததையும், கட்டறுந்த யானையிடமிருந்து தன்னை அந்த வாலிபன் காப்பாற்றியதையும் தெரிவித்தாள்.

"தோழி! அவன் ஸ்பரிசம் என்மீது பட்டிருந்த அந்தச் சமயம் சந்தனக் குழம்பு பூசியது போலவும், அமிருத வருஷம் பொழிந்தது போலவும் இருந்தது. அந்த உணர்ச்சியை விவரித்துச் சொல்ல

முடியாது! அதுமுதல் எத்தனை தடவை அவனைப்பற்றி நான் கனுக்கண்டிருக்கிறேன். பகற்பொழுதிலும் அவன் பக்கத்தில் இருப்பதாகவே தோன்றும்! இரவு தூக்கத்திலோ அவனிடம் கொஞ்சிக் குலாவுவது போலக் கனுக் காண்பதுதான்! ஆயினும் என் தலைவிதி அவனை அடைய முடியவில்லை. அவன் யார், பெயர் என்ன என்பன போன்ற விஷயங்களில் ஒன்றுமே தெரியாதே. இவ்விதம் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவனை அடைய முடியாமல் நான் வாடி வதங்கிச் சாகிறேன்."

இதைக் கேட்டபொழுது அவ்விடம் பெண் உருவத்தில் இருந்த மனஸ்வாமியின் காதுகளில் அமிர்தத்தைப் பொழிந்தது போலவே இருந்தது. தன் எண்ணம் ஈடேறியதாகவே அவன் நினைத்தான். தான் யார் என்பதை வெளிப்படுத்திக் காட்டக்கூடிய தருணம் வந்து விட்டதாகவே அவன் நினைத்தான். உடனே தன் வாயில் அடக்கியிருந்த குளிகையை வெளியில் எடுத்து விட்டுத் தன் சுய ரூபத்துடன் அவள் முன்னிலையில் நின்றான். "மான் போன்ற மருண்ட விழியாளே! அன்றையத்தினம் தோட்டத்தில் உன் பார்வையால் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டு அடிமையாக்கிய வாலிபன் நான்தான். உன் பிரிவாற்றலால் மனம் வருந்தியே எப்படியாவது உன்னையடைய வேண்டுமென்றுதான் இந்தப் பெண்ணுருவம் தாங்கி நான் இங்கே வந்திருக்கிறேன். ஆகவே, நாம் இருவரும் அனுபவித்த பிரிவின் துன்பம் இதுமுதல் ஒழிந்தது என்று நினைத்துக் கொள்!"

இவ்விதம் கூறித் தன்னெதிரில் நிற்கும் காதலனைக் கண்ட ராஜகுமாரி உடனே ஆசை, வெட்கம், ஆச்சரியம் எல்லாம் மேலிட்டு தலையைக் குனிந்து கொண்டாள். அவர்கள் இருவரும் கந்தர்வ முறைப்படி மணம் புரிந்து கொண்டார்கள். பகல் நேரத்தில் பெண்ணாகவும், இரவு நேரத்தில் ஆணாகவும் அரண்மனையிலே இருந்து வந்தான் மனஸ்வாமி.

நாட்கள் பல சென்றன. யசக்கேது மன்னனின் மைத்துனனான மிருகாங்கதத்தன் தன் மகள் மிருங்காவதியை பிரஜ்ஞாசாகரன் என்னும் மந்திரியின் மகனுக்கு மணம் செய்து கொடுத்தான். அந்தக் கல்யாணத்திற்குச் சசிப்பிரபை தன் தோழிகளுடன் மாமன் வீடு சென்றாள். பெண்ணுருவம் தாங்கிய மனஸ்வாமியும் அவர்களோடு சென்றான்.

பெண்ணுருவத்தில் எழில் வாய்ந்த வனப்புடன் நின்ற அவனைப் பார்த்த மந்திரிகுமாரனுக்கு அந்த உருவத்தின் மீது ஆசை உண்டாகிவிட்டது. தன் உள்ளத்தை அவன் பறி கொடுத்தான். மணமகளை அவன் தன் புது மனைவியுடன் வீடு திரும்பியும் அவனுக்கு எந்தக் கேளிக்கையிலும் மனம்

கொள்ளவில்லை. அவள் அழகுவாய்ந்த முகத்தை நினைத்து ஏங்கித் தவித்தான்.

அங்கே கூடியிருந்தவர்களும் பிரமித்துக் கொண்டாட்டத்தை நிறுத்தி விஷயம் என்னவென்று அவனை விசாரித்தார்கள். இதைக் கேட்ட அவன் தந்தையான மந்திரியும் விரைந்து ஓடிவந்தார். தன் மகனைப் பலபடியாகத் தேற்றி உற்சாகப்படுத்தி விசாரித்த பொழுது, கனவிலிருந்து விழித்த அவன் ஜுரவேகம் தாங்காமல் இங்கொன்றும் அங்கொன்றுமாக உளறித் தன் உள்ளக் கிடக்கையை வெளியிட்டான். விஷயம் அறிந்த மந்திரி திகைத்து விட்டார். மகன் விரும்புவது அவர் சக்திக்கும் மீறியது அன்றோ? செய்தி கேட்ட அரசனும் அந்த இடத்திற்கு நேரில் விரைந்து வந்தான். மந்திரிகுமாரனே விரகதாபத்தின் ஏழாம் கட்டத்தை அடைந்து விட்டதை அரசன் நேரில் பார்த்ததும் ஒரு கணத்தில் அறிந்து கொண்டான். அதன் பிறகு தன் மந்திரிகளுடன் பின்வருமாறு ஆலோசித்தான். "அந்தப் பெண்ணை அந்தணன் ஒருவன் என்னிடம் ஒப்படைத்துப் போயிருக்கும் போது இவனுக்கு நான் எப்படி மணம் செய்து கொடுப்பேன்? ஆயினும் அவளையடையாத பட்சத்தில் மந்திரிகுமாரன் கடைசிக் கட்டத்தை அடைந்து விடுவான் என்பது நிச்சயம். அவன் இறந்து விட்டால், அவன் தந்தையான மந்திரியும் அதே விசாரத்தால் இறந்து போய்விடுவார். அவர் போய்விட்டால் ராஜ்யமே பாழாகிவிடும். ஆகவே, என்ன செய்ய வேண்டும் என்பதை நீங்கள் சொல்ல வேண்டும்."



இவ்விதம் அரசன் கேட்டவுடன் அவ்விடம் கூடியிருந்த மந்திரிகள் அரசனை நோக்கிப் பின்வருமாறு தெரிவித்தார்கள்: "அரசனுடைய முக்கியமான கடமை தன் நாட்டு மக்களின் தர்மத்தைக் காப்பாற்றுவதுதான் என்று சொல்வார்கள். அரசன் இவ்வாறு காப்பாற்றுவதற்கு மந்திரிகளின் கூரிய மதியும் ஆலோசனையும் முக்கியம். ஆகவே மந்திரி போய்விட்டால், ரக்ஷணையின் அடிப்படை நசித்து விடுகிறது. அதனால் தர்மத்திற்கு ஊறு நேரிடுவது நிச்சயம். அன்றி, மந்திரி, அவர் மகன் ஆகியவர் இறப்பதால் ஏற்படும் பிரம்மஹத்தி தோஷம் வேறு உங்களைப் பிடித்துக் கொள்ளும். ஆகவே, அந்தணன் உங்களிடம் ஒப்படைத்த பெண்ணை மந்திரிகுமாரனுக்கு இப்போது மணம் செய்து

கொடுத்து விடுங்கள். பின்னுல் அவன் வந்து பெண்ணைக் கேட்டுக் கோபித்துக் கொண்டால் அப்போது அவனைச் சமாதானப் படுத்த ஏதாவது வழி காணலாம்."

இதைக் கேட்ட அரசன் மந்திரிகளின் யோசனைக்கு இணங்கிப் பெண்ணுருவத்தில் இருக்கும் மனஸ்வாமியை மந்திரிகுமாரனுக்கு மணம் செய்து கொடுத்துவிட இசைந்தான். உடனே நாளும் நிச்சயிக்கப்பட்டது. இதையறிந்த மனஸ்வாமி அரசனிடம், "அரசே, என்னை வேறு ஒருவருக்கு மணம் செய்து கொடுக்க வேண்டு மென்பதற்காகவே தங்களிடம் ஒப்படைத்து வைத்தார்கள். ஆயினும் தாங்களாகப் பார்த்து, எனக்கு நிச்சயிக்கப்பட்டவருக்கு அல்லாமல் வேறு ஒருவருக்கு கொடுப்பதாக இருந்தால் அதற்கு நான் ஒப்புக் கொள்ளாமல் வேறு என்ன செய்ய முடியும்? தாங்கள் அரசர். தர்ம பரிபாலனம் உங்கள் கையில் இருப்பது. ஆனுலும் தங்கள் விருப்பத்தை நான் ஒரே நிபந்தனையுடன் ஏற்றுக் கொள்கிறேன். என்னை மணக்க இருப்பவர் ஆறு மாத காலம் புண்ணிய க்ஷேத்திராடனம் செய்து ஊர் திரும்பிவந்த பிறகே என்னை மனைவியாக ஏற்றுக் கொள்ளவேண்டும். அதுவரையில் என்னை நெருங்கக்கூடாது. இந்த நிபந்தனையை ஒப்புக் கொள்ளா விட்டால் நான் நாக்கைக் கடித்துக்கொண்டு பிராணத் தியாகம் செய்துவிடுவேன்" என்று கூறினுள்.

இவ்விதம் அவன் நிபந்தனை விதித்ததைக் கேட்ட அரசன் அதை மந்திரிகுமாரனுக்கு அறிவித்தான். மந்திரிகுமாரனும் தன் எண்ணம் ஈடேறும் என்று திருப்தி கொண்டு அதற்கு உடன்பட்டான். சீக்கிரமாகவே திருமணம் நடைபெற்றது. தன் முதல் மனைவி மிருங்காவதியையும், இரண்டாம் மனைவியாக வந்த போலிப் பெண்ணையும் ஒரே வீட்டில் அமர்த்தி அதற்குக் கட்டும் காவலும் ஏற்படுத்திவிட்டு, முட்டாள் போலப் புண்ணிய க்ஷேத்திராடனம் செய்யக் கிளம்பினுன் மந்திரிகுமாரன்.

இவ்விதம் மிருங்காவதியும் பெண்ணுருக்கொண்ட மனஸ்வாமியும் ஒரே வீட்டில் ஒன்ருக இருந்து வந்தார்கள். ஓர் இரவு படுத்திருக்கும்போது மிருங்காவதி தனக்குத் தூக்கம் வரவில்லை என்று கூறி நேரம் போக்க ஒரு கதை சொல்லும்படித் தன் தோழியை வேண்டினுள். இதைக் கேட்ட மனஸ்வாமி அவளுக்குத் தன் கதையையே கூறினுன். "பழைய காலத்தில் சூரிய வமிசத்தைச் சேர்ந்த ராஜரிஷியான இடா என்பவர் கௌரியின் சாபத்தால் பெண் உருவத்தையடைந்துவிட்டார். அவள் அழகைக் கண்டு உலகமே மயங்கியது. புதன் அவளுடன் கூடிப் புரூரவஸைப் பெற்ருன்! இவ்விதம் கதையைக் கூறிய மனஸ்வாமி, "இதனுல் தெய்வானுக்கிரகத்தாலும், மணி மந்திர ஔஷதங்

களாலும் ஆண் பெண்ணாகவும், பெண் ஆணாகவும் மாறமுடியும். காம வசப்பட்டால் முக்காலும் அறிந்த முனிவர்களும் இவ்விதம் நடந்து கொள்வார்கள்." என்று முடித்தான்.

கல்யாணம் செய்து கொண்ட உடனே கணவனைப் பிரிந்த காரிகை, மற்றவள் தனக்குச் சக்களத்தியாக வந்து தன் வாழ்வைக் குலைக்க முற்பட்டவள் என்பதையும் கருதாமல், "நீ சொன்ன கதையைக் கேட்ட என் உடல் பதறுகிறது. உள்ளம் உருகிவிட்டது. ஆகவே அதன் விவரம் என்ன என்பதைத் தெளிவாக எடுத்துக் கூறவேண்டும்" என்று கேட்டாள். உடனே மனஸ்வாமி அவளை நோக்கி, "தோழி! இவை மோக விகாரத்தின் சேஷ்டைகள். இவற்றை நானே அனுபவித்திருக்கிறேன். ஆகவே உன்னிடமிருந்து எதற்காக மறைக்க வேண்டும்?" என்றாள்.

இதனால் தூண்டப் பெற்ற மிருங்காவதி மேலும் தூண்டித் துளைத்துக் கேட்க மனஸ்வாமி, "மகா விஷ்ணுவிடமிருந்து எனக்கு ஒருவரம் கிடைத்திருக்கிறது. ஆனால் இரவு வேளையில் நான் ஆணாக மாறலாம். ஆகவே, உனக்காக அவ்விதம் மாறுகிறேன்" என்று கூறி வாயிலிருந்த குளிகையை வெளியே எடுத்து ஆணாக மாறினான். இவ்விதம் அவன் பகலில் பெண்ணாகவும், இரவிலே ஆணாகவும் மாறி இருந்து வந்தான், க்ஷேத்திராடனம் போயிருந்த மந்திரிகுமாரன் ஊர் திரும்பும் நாள் நெருங்கியது. ஆகவே, ஒரு நாள் மிருங்காவதியுடன் அவன் வீட்டை விட்டு வெளியேறி விட்டான்.

இந்நிலையிலே விஷயம் மூலதேவருக்கு எட்டியது. அவர் எல்லாவற்றையும் அறிந்து கொண்டார். தம் நண்பனை சசியை தன் மகன் போல உருமாறச் செய்தார். இருவருமாக யசக்கேது மன்னனை அடைந்தார்கள். மூலதேவர் அரசனிடம், "நான் என் குமாரனை அழைத்து வந்து விட்டேன். ஆகவே நான் உம்மிடம் ஒப்புவித்து விட்டுப்போன என் மருமகளை என்னிடம் ஒப்புவித்து விடுங்கள்!" என்று கேட்டார். தன்னைக் கிழவன் எங்கே சபித்துவிடுவானோ என்று பயந்து அரசன் சிறிது யோசித்துவிட்டு, "முதியவரே! உம் மருமகள் எங்கேயோ போய்விட்டாள். அதை நான் அறியேன். ஆகவே என்னை மன்னித்துவிடவேண்டும். ஆயினும் குற்றம் என்னுடையது, ஆதலின் உங்கள் மகனுக்கு என் பெண்ணைக் கொடுத்துவிடுகிறேன்." என்று தெரிவித்தான். தூர்த்த சிகாமணியான மூலதேவரோ தம் மருமகள் தான் வேண்டும் என்று விடாப்பிடியாகக் குதித்தார். கடைசியில் ஒருவாறு சமாதானம் ஏற்பட்டது. அந்தணகுமாரன் உருவத்தில் இருந்த சசிக்கும் ராஜகுமாரியான சசிப்பிரபைக்கும் திருமணம் நடந்தது. அதன்மேல் அரச சம்பத்து எதிலும் நாட்டம்

கொள்ளாமல் மூலதேவர் புதுமணத்தம்பதிகளை அழைத்துக் கொண்டு தன் வீடு திரும்பினார்.

அங்கே மனஸ்வாமி வந்து சேர்ந்தான். அவர்களுக்குள் பலத்த வாக்குவாதம் ஏற்பட்டது. "சசிப்பிரபை எனக்கே உரியவள். கன்னிப் பருவத்திலேயே அவளை நான் கந்தர்வ முறையில் மணந்து கொண்டேன்." என்று மனஸ்வாமி சொன்னான். சசி, "அவள் தந்தை எனக்கு அவளை அக்கினி சாட்சியாக மணம் செய்து கொடுத்திருக்கிறார்." என்றான். இவ்விதம் அவர்கள் தங்களுக்குள் பிரமாதமாகச் சண்டையிட்டுக் கொண்டார்கள். அவர்கள் விவாதம் முடியவில்லை.

"ஆகவே, அரசே! இவ்விருவருள் யாருக்கு அவள் முறைப்படி மனைவியாவாள்? இந்தச் சந்தேகத்தைத் தீர்க்கவேண்டும். இல்லாவிட்டால் முன் சொன்ன சாபம் உன்னைப் பீடிக்கும்."

இவ்வாறு கதையை முடித்ததும், கேள்வி கேட்ட வேதாளத்திற்கு விக்கிரமாதித்த மகாராஜன் பின்வருமாறு பதில் சொன்னான்:

"ராஜகுமாரியை முறைப்படி அவள் தந்தை, சசிக்கே திருமணம் செய்து கொடுத்தபடியால், அவள் சசிக்கே மனைவியாவாள். மனஸ்வாமியோ திருடன் போல ரகசியமாக அவளை கந்தர்வ முறையில் மணந்து கொண்டான். திருடனுக்கு எப்போதும் மற்றவனுக்கு உரித்தான பொருள்மீது உரிமை கிடையாது!" என்று கூறி முடித்தான்.

இந்தப் பதிலைக் கேட்ட வேதாளம் மறுபடி கட்டவிழ்த்துக் கொண்டு, அரசன் தோளைவிட்டுக் கிளம்பி முருங்க மரத்தில் தொற்றிக் கொண்டது. விக்கிரமாதித்தனும் அதை மறுபடியும் பிடித்து வரக் கிளம்பினான்.

(தமிழ்ப் பாடத்தில் இக்கதை சில மாறுதல்களுடன் பகவதியின் கதை என உள்ளது.)

## 19. ஜீமுதவாகனன் கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்தை அடைந்து வேதாளத்தைப் பிடித்துச் சுமந்து கொண்டு கிளம்பினான். அப்போது வேதாளம் அவனைப் பார்த்து "அரசே, நல்ல கதை ஒன்று சொல்லுகிறேன்" என்று சொல்ல ஆரம்பித்தது.



இவ்வுலகில் ஹிமவத் என்ற பெரிய மலையொன்று இருக்கிறது. சிவனுக்குப் பிரியமான கங்கை, கௌரி ஆகியவருக்கும் பிறப்பிடமான அந்த மலை உலகத்திலேயே தலை சிறந்ததாக விளங்குகிறது. அதன் உச்சியை யாரும் அடைய முடியாது. மலையின் சாரலில் சுவர்ணபுரி என்ற நகரம் இருக்கிறது.

ஒரு சமயம் அந்த ஊரிலே வித்தியாதரர்களுக்கு அரசனான ஜீமுதகேது ஆண்டு வந்தான். அவனுடைய அரண்மனைத் தோட்டத்திலே பிதிரார்ஜிதமாக வந்து கொண்டிருக்கும் பரம்பரை சொத்தான கற்பக விருக்ஷம் இருந்தது. அரசன் அதை வேண்டி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றான். போதிசத்வரே அவ்விதம் வந்து அவதரித்தார். குழந்தைக்கு ஜீமுதவாகனன் என்று பெயரிட்டான். குழந்தை அஞ்சா நெஞ்சம் ஜீவகாருண்யமும் தயையும் கொண்டு விளங்கிற்று. அவன் யுக்த வயது அடைந்ததும் தந்தை மந்திரி பிரதானிகளைக் கலந்து கொண்டு அவனை இளவரசனாக நியமித்தார்.

இளவரசு பட்டாபிஷேகம் முடிந்ததும், தந்தையின் மந்திரிகள் அவனிடம் வந்து, "ராஜகுமாரா, நாம் விரும்புவதையெல்லாம் அளிக்கும் இந்த கற்பக விருக்ஷத்தைத் தாங்கள் தொடர்ந்து வழிபட்டு வரவேண்டும். அது நம்மிடம் இருக்கும் வரையில் மற்ற எதிரிகள் கிடக்கட்டும், இந்திரனாலும் நம்மை அசைக்க முடியாது!" என்று தெரிவித்தார்கள்.

இதைக் கேட்ட ஜீமுதவாகனன், "ஐயோ, இவ்வளவு அருமையான தெய்வலோக மரத்தை அடைந்திருந்தும் நம் முன்னோர்கள் அதனால் எந்தப் பலனையும் பெறவில்லையே. சிலர் செல்வத்தை மட்டும் விரும்பி அடைந்தார்கள். இதன் அருமையை அவர்கள் அறியாமல் பாழ்படுத்தி விட்டார்களே. சரி நான் இதை வேறு விதமாக பயன்படுத்திக் கொள்வேன்" என்று தனக்குள்ளேயே யோசித்துக் கொண்டான்.

இந்த முடிவை அடைந்த உடனே அவன் தன் தந்தையிடம் சென்று மிகுந்த அடக்கமாக நடந்து அவர் தயவைப் பெற்றான். அவருடன் தனித்து உட்கார்ந்திருக்கும் போது, அவன் தந்தையைப் பார்த்து பின்வருமாறு சொன்னான். "அப்பா, இந்த சம்சார

சாகரம் அநித்தியமானது. அலேகளைப் போன்று தோன்றி மறையும் மாயத் தோற்றம். இதிலே சம்பத்தும் உஷைக் காலம், சந்தியா காலம் போலத் தோன்றி மறைவது. அதை நிரந்தரமாக யாராவது அடைந்திருக்கக் கண்டதுண்டா? அந்தச் சூழலிலே தானம் வழங்குவது ஒன்றுதான் ஸ்திரமான பலனைக் கொடுக்கக் கூடியது. யுகங்களுக்கு நிலேத்திருக்கும் புகழைக் கொடுக்கும். இத்தகைய அநித்தியமான வாழ்க்கையில் கற்பக விருக்ஷத்தைக் கொண்டு நாம் அடைந்த பயன் என்ன? "அது என்னுடையது" என்று கருதிவந்த நம் முன்ஞேர்கள் எங்கே? ஆகவே தாங்கள் அனுமதியளித்தால் விரும்பியதைத் தரும் இந்த கற்பக விருக்ஷத்தைக் கொண்டு யாவருக்கும் பயன் கொடுக்கச் செய்யலாம்." "அப்படியே செய்" என்று தந்தை அனுமதி அளித்ததும் ஜீமுதவாகனன் தோட்டத்திற்குச் சென்று கற்பகவிருக்ஷத்தை வணங்கி வேண்டினுன். எங்கள் முன்ஞேர் விரும்பியவைகளையெல்லாம் நீ கொடுத்து வந்திருக்கிருய். இப்போது நான் வேண்டும் ஓர் விருப்பத்தையும் பூர்த்தி செய்தல் வேண்டும். இந்த உலகத்தையே பஞ்சத்திலிருந்தும், ஏழ்மையிலிருந்தும் விடுவிக்க வேண்டும். எனக்கு இந்த உதவி செய்தால் போதும். ஆகவே நீ இந்த இடத்தை விட்டுக் கிளம்பி உலக முழுவதுக்கும் சம்பத்தை அளித்துவிடு"

இவ்விதம் ஜீமுதவாகனன் தன் கைகளைக் கூப்பி மரத்தை வேண்டிக் கொண்டான். "அப்போது நீ என்னை விடுதலே செய்து விட்டபடியால் நான் போகிறேன்" என்று மரத்திலிருந்து ஒலி எழுந்தது. அதே சமயம் கற்பக விருக்ஷம் ஆகாயத்தில் பறந்து சென்று, பணத்தை வருஷித்து விட்டு மறைந்தது. அந்தக் கனக வருஷத்தால் பூமியில் ஏழை என்பவனே இல்லாமல் போனுன். இதனுல் ஜீமுதவாகனனுடைய புகழும் ஜீவகாருண்யமும் மூவுலகமும் பரவின.

ஆயினும் அவனுடைய தாயாதிகள் இதைக் கண்டு பொருமையால் வருந்தினர். கற்பக விருக்ஷம் இல்லாதபடியால் இப்போது அவனையும் அவன் தந்தையையும் சுலபமாக வென்று விடலாம் என்றே அவர்கள் தீர்மானித்தார்கள். ஆகவே அவர்கள் ஒன்று கூடி யோசித்துப் பெரும்படை திரட்டி ஜீமுதவாகனனையும் அவன் தந்தையையும் நாட்டை விட்டு துரத்திவிட முடிவு செய்து திட்டம் வகுத்தார்கள்.

இதையறிந்த ஜீமுதவாகனன் தன் தந்தையிடம் சென்று, "அப்பா! தாங்கள் கையில் ஆயுதத்தை எடுத்தால் தங்களுக்கு எதிராக நின்று போரிட சக்தி யாருக்கு இருக்கிறது? ஆயினும், அழிந்து போகக்கூடிய இந்த உடலே காப்பதற்காக உற்ருர்

உறவினரைக் கொன்று நாட்டை ஆள வேண்டுமென்று தயையுள்ள எவனும் விரும்புவாஞ? இந்த அரசுரிமையால் நமக்கு என்ன பயன்? ஆகவே, நாம் இதைவிட்டு வேறு எங்காவது போய் இகத்துக்கும் பரத்துக்கும் நன்மை கொடுக்கக் கூடிய புண்ணிய காரியங்களைச் செய்வோம். மண்ணாசை கொண்ட அவர்களே நாட்டைக் கட்டி ஆளட்டும்" என்று சொன்னான். உடனே அவன் தந்தையான ஜீமூதகேதுவும், "குழந்தாய், உனக்காகவே நான் இந்த ராஜ்யத்தைக் காப்பாற்றி வருகிறேன். ஜீவகாருண்யத்தால் நீயே இதை வேண்டாமென்று உதறித் தள்ளினால் கிழவனான எனக்கு அதைப்பற்றி என்ன?" என்று தெரிவித்து விட்டான். தந்தையும் ஒப்புக் கொண்டபடியால் ஜீமூதவாகனன் தாய் தந்தையருடன் நாட்டைத் துறந்து வெளிக் கிளம்பினான். மலயப்பர்வதத்தை அடைந்து அங்கே சந்தன மரங்கள் நிறைந்த மலைச்சாரலிலே ஒரு நீரோடைக்குப் பக்கத்தில் பர்ணசாலை அமைத்துக் கொண்டு அதிலே தன் தாய் தந்தையருக்குச் சிச்ருஷை செய்து காலம் கழித்து வந்தான். அவ்விடம் இருக்கும் பொழுது அந்த மலையிலே வாழ்ந்த சித்தர்களுடைய அரசனான விச்வாசுவின் குமாரனான மித்ரவாசுவுடன் தோழமை பூண்டான்.

ஒருநாள் ஜீமூதவாகனன் சுற்றித் திரியும் போது அங்கே ஒரு தோட்டத்திலிருந்து கௌரி தேவியின் கோவிலுக்குள் நுழைந்து வழிபட்டு வரச் சென்றான். அங்கே மலைமகளை மகிழ்விப்பதற்காகவே போலும், சேடியர்களுடன் அழகிய மங்கை ஒருத்தி வீணை வாசித்துக் கொண்டிருந்தாள். ஜீமூதவாகனன் அவள் எழிலைக் கண்டவுடன் அவன் கண்வழியாக உள்ளே நுழைந்து அவன் இதயத்தை அவள் அபகரித்துக் கொண்டாள். அவனைக் கண்ட அந்தப் பெண்ணும் அவன் மையலில் சிக்கி தன்னை மறந்தாள்; வீணகானமும் நின்றது. ஜீமூதவாகனன் சேடிகளுள் ஒருத்தியை, "அவள் யார்? என்ன பெயர்?" என்று கேட்டான். இதைக் கேட்ட அந்தத் தோழி "இவள் சித்தர்களின் மன்னனான விச்வாசுவின் குமாரி. மலயவதி என்று பெயர். மித்ரவாசுவின் சகோதரி" என்று தெரிவித்தாள். இதைச் சொல்லி விட்டு அவள் ஜீமூதவாகனனுடன் வந்திருந்த முனிவர் குமாரனிடம், அவனைப் பற்றி கேட்டு அறிந்தாள். பிறகு சிரித்துக் கொண்டு மலயவதியிடம் "தோழி, இவ்விடம் வந்திருக்கும் வித்தியாதரர்களின் ராஜகுமாரனை வரவேற்க வேண்டாமா? உலகமே விரும்பி உபசரிக்கக்கூடிய பெருமை வாய்ந்தவ ராயிற்றே" என்று கூறினாள். இதைக் கேட்ட மலயவதி வாய் பேசவில்லை. வெட்கத்தில் அவள் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். உடனே தோழி "ராஜகுமாரி வெட்கப்படுகிறாள்.

ஆகவே உங்களை உபசரிக்க அவள் ஸ்தானத்தில் எனக்கு அனுமதியளிக்க வேண்டும்" என்று சொல்லி, மாலை, அர்க்கியம் முதலியன கொடுத்து ஜீமூதவாகனனை உபசரிக்க முற்பட்டாள். அவனுக்கு மாலையைக் கொடுத்தவுடனே ஜீமூதவாகனன் அதைக் கையிலெடுத்து ஆசை நிரம்பிய கண்களுடன் மலயவதியின் கழுத்தில் போட்டான். அவளும். அவனைத் தன் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே அதை ஒரு நீலோத்பல மாலையாகப் பாவித்து அவனுக்குப் போட்டாள்.

இவ்விதம் அவர்கள் ஒருவருக்கொருவர் வாய் பேசாமல் மாலையிட்டுக் கொண்டார்கள். அப்போது வேலைக்காரி ஒருத்தி வந்து ராஜகுமாரியின் தாயார் அழைப்பதாக தெரிவிக்கவே, மலயவதி மிகுந்த தயக்கத்துடனும், வருத்தத்துடனும் அந்த இடத்தை விட்டுப் புறப்பட வேண்டியதாயிற்று. தன் உள்ளத்தை கொள்ளை கொண்டவனிடமிருந்து அந்த மங்கையால் தன் பார்வையை எடுக்க முடியவில்லை. இரவு நேரத்தை மிகுந்த கஷ்டத்துடன் கழித்தாள். அவள் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்த தீயின் புகைப் படலம் அவள் கண்ணை மறைத்தது. கண்ணீர் ஆறாகப் பெருகியது.

ஜீமூதவாகனனும் அன்றைய இரவை அதே நிலையில்தான் கழித்தான். காதலின் பிரிவாற்றாமையால் தூக்கம் வரவில்லை. படுக்கையில் கிடந்து புரண்டான்.

மறுநாள் காலையிலே அவளைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையுடன் அவன் முனி குமாரனுடன் கௌரி தேவியின் கோவிலுக்குக் கிளம்பினான். சிறிது நேரத்துக்கெல்லாம் மலயவதியும் அங்கே வந்தாள். அங்கே ஒரு மரத்தின் பின்புறமாக மறைந்து நின்ற ஜீமூதவாகனனை அவள் பார்க்கவில்லை. ஆகவே அவன் அவ்விடம் வரவில்லையென்றே நினைத்தாள்! கண்களில் நீர் தளும்ப, "தேவி, உன்னை நான் வேண்டிக் கொண்டும், இந்த ஜென்மத்தில் ஜீமூதவாகனனைக் கணவனாக அடைய முடியவில்லை. அடுத்த ஜென்மத்திலாவது அந்தப் பாக்கியம் எனக்குக் கிட்டட்டும்" என்று வேண்டிக் கொண்டாள். பிறகு, கோவிலின் எதிரிலிருந்த அசோக மரக்கிளையில் தன் புடவைத் தலைப்பால் சுருக்கிட்டு, அதைக் கொண்டு உயிர்விடத் தீர்மானித்தாள்.

அதை நிறைவேற்றுவதற்காக அவள் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டபோது "குழந்தாய், எதையும் அவசரப்பட்டு செய்யாதே, சக்ரவர்த்தியாகப் போகும் வித்யாதர ராஜகுமாரனான ஜீமூதவாகனனே உன்னை மணப்பான்; கவலைப்படாதே", என்று தேவி அசரீரியாக சொன்னாள். ஜீமூதவாகனன் அவளை அணுகி அன்பும் ஆசையும் ததும்பும் வார்த்தைகளைச் சொல்லி தேற்றி தன் கையாலேயே அவள் கழுத்திலிருந்த சுருக்கை அவிழ்த்தான்.

அதே சமயம் தோழி ஒருத்தி அங்கு வந்தாள். "தோழி! நீ பெரிய அதிர்ஷ்டக்காரி. ராஜகுமாரர் மித்ரவசு தன் தந்தையிடம், "அப்பா! உலகத்துக்கே கற்பக விருக்ஷத்தை அளித்த புண்யவானை வித்தியாதர குமாரர் ஜீமூதவாகனன் நம் விருந்தாளியாக இங்கே வந்திருக்கிறார். உலகமே புகழ்ந்து வணங்கக் கூடிய அவரை நாம் தக்கபடி உபசரிக்க வேண்டும் அன்றோ? அவருக்குச் சமமான வேறு வரனும் கிடைப்பதரிது. ஆகவே, நம் கன்யா ரத்தினமான மலயவதியை அவருக்கு மணஞ் செய்து வைத்து உபசரிக்கலாம்" என்று கூறினார். அதற்கு அரசரும் சம்மதித்து விட்டார். ஆகவே இது விஷயமாக உன் சகோதரர் மங்களச் செய்தி சொல்வதற்கு ராஜகுமாரரைத் தேடிப் பர்ணசாலைக்குச் சென்றிருக்கிறார். உன் விவாகம் சீக்கிரமாகவே நடைபெற்றுவிடும். நீ உடனே அரண்மனைக்குத் திரும்பிவிடு. ராஜகுமாரரும் பர்ணசாலைக்குத் திரும்பி செல்லட்டும்" என்று தெரிவித்தாள்.

தோழி இவ்விதம் சொன்னவுடன் அரசகுமாரி சந்தோஷமும் வருத்தமும் கலந்த உள்ளத்துடன் அந்த இடத்தை விட்டுக் கிளம்பினாள். ஜீமூதவாகனனும் உடனே ஆசிரமத்திற்குத் திரும்பினான். அவ்விடம் மித்ரவசு வந்து சுபச் செய்தியை தெரிவித்தான். அதைக் கேட்ட ஜீமூதவாகனன் பெருத்த சந்தோஷம் அடைந்தான். அவனுக்கு முன் பிறப்புகளைப் பற்றிய விவரங்கள் நன்றாக ஞாபகம் இருந்தன. அத்தகைய பிறப்புகளில் ஒன்றின் போது மித்ரவசு அவன் தோழனாகவும் மித்ரவசுவின் சகோதரியே அவன் மனைவியாகவும் இருந்தார்கள். அந்தச் செய்தியை ஜீமூதவாகனன் தன் தோழனுக்குத் தெரிவித்தான்.

இதைக் கேட்ட மித்ரவசு மனமகிழ்ந்து, அவனை தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று, வித்யாதரர்களுடைய பெருமைக்கும், சக்திக்கும் ஏற்றவாறு விவாகத்தை விமரிசையாக நடத்துவதற்கு ஏற்பாடு செய்தான். அன்றையத் தினமே திருமணமும் நடைபெற்றது. ஜீமூதவாகனனும் தன் மனதிற்கு இனியாளான மலயவதியை அடைந்து சந்தோஷமாக இருந்தான்.

ஒருநாள் அவன் மலயபர்வதத்தில் வேடிக்கையாகப் பொழுது போக்க, மித்ரவசுவுடன் திரிந்து கொண்டிருந்தான். அப்போது கடற்கரையோரமாக இருந்த ஒரு காட்டை அடைந்தான். அங்கே ஏராளமான எலும்புத் துண்டுகள் குவியல் குவியலாகக் கிடந்தன. அவைகளைப் பார்த்து அவன் வியந்து "இந்த எலும்புகள் ஏது? ஏன் குவிந்து கிடக்கின்றன?" என்று தன் நண்பனைக் கேட்டான். மைத்துனனும் அதற்கு பின் வருமாறு பதிலளித்தான்.

"இது பெரிய கதை. எனினும் சுருக்கமாகச் சொல்கிறேன் கேள். நீண்ட காலத்திற்கு முன் நாகங்களின் தாயான கத்துரு என்பவள் ஏமாற்றி, கருடன் தாயான விநதையை வெற்றி கொண்டு அவளை அடிமையாகப் பெற்ருள். கருடன் பின்னுல் தாயை அவளுடைய அடிமை நிலையிலிருந்து விடுவித்தான். ஆயினும் அந்த விரோதத்தால் கோபம் கொண்டு கத்துருவின் குழந்தைகளான பாம்புகளை கொன்று தின்று வந்தான். அடிக்கடி பாதாள லோகத்தில் புகுந்து நாகங்களை அழித்து வந்தான்."

"இவ்விதம் ஒரேயடியாகப் பாம்பின் குலமே அழிந்து வருவதைக் கண்டு பயந்து நாகராஜனுன வாசுகி தன் குலத்தைக் காப்பாற்ற நினைத்துக் கருடனை அணுகி, "மகாராஜனே! இவ்விதம் ஒரேயடியாக நாகங்களை அழிப்பதால் உங்களுக்கு என்ன லாபம்? தினந்தோறும் உங்கள் ஆகாரத்துக்காகத் தென் கடலுக்கு ஒரு நாகத்தை நான் அனுப்பி வைக்கிறேன். நீங்கள் பாதாள லோகத்துக்குள் நுழையாமல் இருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். அவ்விதம் நாகராஜன் தினந்தோறும் அனுப்பும் பாம்புகளின் எலும்புகளே இங்கு குவிந்து கிடக்கின்றன.

இவ்விதம் மித்ரவசு கூறிய கதையைக் கேட்டவுடனே வீரத்துடன் கருணையும் கொண்ட ஜீமூதவாகனனின் உள்ளம் வருத்தத்தால் கரைந்தது.

"பயங்கொள்ளி போல எதிரிக்குத் தினந்தோறும் தன் பிரஜைகளுள் ஒருவனைத் தன் கையாலே பலியாக அளிக்கும் நாகராஜனின் நிலை வருந்தக் கூடியதே. தன் குலத்தையே அழித்து விடுமாறு கருடனைக் கேட்டுக் கொள்ளும் அளவிற்கு அவன் ஆண்மையை இழந்து விட்டானு? நாக மங்கையர் ஓயாமல் அழும் குரலைக் கேட்க அவன் மனம் கலங்கவில்லையா? ஆச்யப முனிவரின் புத்திரனும் வீரனும் விஷ்ணுவிற்கு வாகனமாகவு மிருந்த தெய்வீகம் அடைந்தவனுமான கருடன் இத்தகைய கொடூரத்தைச் செய்கிருன் என்பதை நினைக்கும் போது, மாயையின் தோற்றம் எவ்வளவு ஆழமாக இருக்கிறது என்பது தெரிகிறதே."

இவ்விதம் வெளிப்படையாகத் தன் மைத்துனனிடம் சொன்ன அந்த மகானுன ஜீமூதவாகனன் தன் மனதிற்குள்ளாக ஓர் அபிப்பிராயத்தைக் கொண்டான். "அநித்தியமான இந்த உடலைத் தியாகம் செய்து, கிடைத்தற்கரிய பாக்கியத்தை அடையலாமே. அநாதரவான ஒரு நாகத்தையாவது கருடனிடமிருந்து மீட்டு உயிர் அளிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டாதா?" இவ்விதம் அவன் தன் மனதிலே யோசித்துக் கொண்டிருந்த போது, வாசற்காப்போன் அவர்களை அழைக்க வந்தான். "நீ முதலில்

போ. நான் பின்னால் வருகிறேன்." என்று சொல்லி தன் மைத்துனனை அனுப்பி விட்டான்.

தனியாக இருந்த அவன் தன் எண்ணத்தை எப்படி நிறைவேற்றலாம் என்பதை யோசித்தவாறே அங்கே குறுக்கும் நெடுக்குமாகத் திரிந்து கொண்டிருந்தான். அப்போது தூரத்தில் யாரோ பரிதாபமாக அழுவது கேட்டது. அதுவென்ன என்பதையறிவதற்காக மேலே நடந்து சென்று பார்த்தபோது, உயரமான பாறையருகில் அழகான இளைஞன் ஒருவன் வருத்தமே உருவாக நின்று கொண்டிருந்தான். அந்த இளைஞனைப் பிரியமாட்டாமல் அழுதுகொண்டிருந்த கிழவி ஒருத்தியைத் திரும்பி போகுமாறு அந்த இளைஞன் தேற்றி வற்புறுத்திக் கூறிக் கொண்டிருந்தான்.

மறைவிலிருந்தபடியே இதைக் கேட்ட ஜீமுதவாகனனுக்குச் சோகத்தால் உள்ளம் உருகியது. சோகம் தாங்காமல் அந்தக் கிழவி தன் உள்ளம் வெடித்துவிடும் போல இளைஞனைப் பார்த்து அழுதாள். "அப்பா, சங்கசூடா! நான் எவ்வளவு கஷ்டப்பட்டு பெற்றெடுத்தேன். ஐயோ குடும்பத்துக்கு ஒரே குழந்தையாயிற்றே நீ. உன்னை நான் எப்போது மறுபடியும் காண்பேன்? சந்திர பிம்பம் போன்ற முகத்தைக் காணாமல் உன் தந்தை மனம் உடைந்து விடுவாரே! தள்ளாத வயதில் அதற்குப் பிறகு எப்படி உயிர் வாழ்வார்? சூரிய கிரகணமும் உன்மீது பட்டால் பொறுக்காத நீ, கருடன் உன்னை உயிருடன் கொத்தித் தின்னும் போது எப்படி சகிப்பாய்? நாகராஜனுக்கு எத்தனையோ பேர் பிரஜைகள் இருக்க, அவன் உன்னைத் தேர்ந்தெடுக்க வேண்டி நேர்ந்த விதியை என்ன சொல்வது?"

அவள் இவ்விதம் புலம்பிக் கொண்டிருக்கும் போது மகன் தாயை நோக்கி, "அம்மா, ஏற்கனவே நான் நொந்து போயிருக்கிறேன். நீ ஏன் இன்னும் அதைக் கிளறுகிறாய்? கருடன் வரும் நேரமாகிவிட்டது. நீ வீட்டுக்கு போ. நானும் உன்னைக் கடைசி தடவையாக வணங்குகிறேன்" என்று சொன்னான். இதைக் கேட்ட கிழவி நீர் நிறைந்த தன் கண்களால் நாலு திசைகளையும் சுற்றிப் பார்த்து, "என் பிள்ளையை யாராவது காப்பாற்று வார்களா?" என்று இரைந்து கூக்குரல் இட்டாள்.

இதற்கிடையில் "கருணை பொங்கும் உள்ளத்துடன் அநாதரவாக உள்ள சங்கசூடன் என்னும் இந் நாகத்தை கருடனுக்கு உணவாக நாகராஜன் வாசுகி அனுப்பியிருக்கிறான். ஒரே மகனான அவன் பிரிவாற்றாமையால் தாயும் கூடவே வந்து புலம்புகிறாள். அநித்தியமான இந்த உடலை அளித்து இந்த நாகத்தை மீட்காவிடில் என் பிறப்பால் என்ன பயன்?" என்று ஜீமுதவாகனன் தனக்குத் தானே நினைத்துக் கொண்டான்.

பிறகு மலர்ந்த முகத்துடன் கிழவியிடம் சென்று, "அம்மா, உங்கள் மகனை நான் காப்பாற்றுகிறேன்" என்று சொன்னான். இதைக் கேட்ட கிழவி, கருடனே வந்து விட்டதாக நினைத்து மிரண்டு போய், "கருடா, என்னை விழுங்கிவிடு!" என்று கூச்சலிட்டாள். உடனே சங்கசூடன் "அம்மா இது கருடனல்ல; சந்திரன் போன்ற குளிர்ச்சி தரும் இந்த உருவத்திற்கும் பயங்கரமான கருடன் உருவத்திற்கும் பெருத்த வித்தியாசம் உண்டு" என்று கூறித் தேற்றினான். அப்போது ஜீமூதவாகனன், "அம்மா! நான் ஒரு வித்தியாதரன். உன் மகனை காப்பாற்றுவதற்காகவே வந்திருக்கிறேன். கருடன் பசிக்கு என் உடலை அர்ப்பணிப்பேன், உன் மகனை அழைத்துக் கொண்டு நீ வீடு திரும்பு!" என்றான்.

இதைக் கேட்ட கிழவி, "ஒருக்காலும் முடியாது. நீயும் என் மகன்தான். இந்தக் கஷ்டத்தில் எங்களுக்கு ஆறுதல் அளித்த உன்னை வேறுவிதமாகக் கொள்ள முடியாது" என்றாள். "பெரியோய், உங்கள் உதார குணத்தை வெளிப்படுத்தி விட்டீர்கள். ஆயினும் உங்களைக் காட்டிலும் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பவில்லை. சாதாரணக் கல்லுக்காக உயர்ந்த ரத்தினத்தை யாராவது இழப்பார்களா? என்னைப் போலத் தம் நிலையையே குறித்து வருந்தும் மக்கள் உலகத்தில் ஏராளமாக இருக்கிறார்கள். ஆனால் உங்களைப் போல பிறருக்காக இரங்குவார்கள் மிகவும் குறைவு" என்று கூறி அவனைத் தடுத்தான் சங்கசூடன்.

பிறகு அவன் தன் தாயைப் பார்த்து "அம்மா, கோரமான இந்தப் பொட்டலை விட்டு உடனே புறப்பட்டுத் திரும்பிப் போ. இந்தக் கொலைக்களத்தைப் பார்ப்பதற்கே பயமாக இல்லையா? நான் கடற்கரைக்குப் போய் கோகர்ண சுவாமியைத் தொழுது விட்டு கருடன் வருவதற்குள் திரும்பி விடுகிறேன்" என்று சொல்லி, அவளை வணங்கி விட்டுக் கடற்கரைக்குச் சென்றான்.

அழுது கொண்டே கிழவி அங்கிருந்து சென்றாள். ஜீமூதவாகனன் கடற்கரையிலிருந்து சங்கசூடன் திரும்பி வருவதற்குள் கருடன் வந்துவிடாதா என்று காத்திருந்தான். அப்போது பெரும் புயல் அடிப்பதுபோல மரங்கள் ஆடி அலையுண்டு நிற்கக் கருடன் வந்து சேர்ந்தது. பாறையிலிருந்த மகா வீரனை மூக்கினால் கொத்தித் தூக்கிச் சென்றது. அவனைச் சாப்பிடுவதற்காக மலையபர்வதத்தின் உச்சிக்குத் தூக்கி செல்லும் போது, அவன் தலையிலிருந்து சிரோரத்தினமான மணிமாலை விழுந்தது; பூமியில் ரத்தம் சிந்தியது. மலையுச்சியை அடைந்து கருடன் அவனைக் கொத்திச் சாப்பிடும்போது, ஜீமூதவாகனன் "இதே போல ஒவ்வொரு பிறப்பிலும் என் உடல் பரோபகாரமாக

உபயோகப்படட்டும். பிறருக்கு உபயோகப்படக்கூடாத நிலையில் இருந்தால் ஸ்வர்க்கப் பதவியும் எனக்கு வேண்டாம்" என்று வேண்டிக் கொண்டான்.

இதற்குள்ளாக அவன் தலையிலிருந்து பிய்ந்த மணிமாலை ரத்தத் துளிகளுடன் மலயவதியின் முன்னால் வந்து விழுந்தது. அதைக் கண்டவுடன் அவள் அது தன் கணவனுடையதென்பதை உணர்ந்து கொண்டாள். நீர் நிறைந்த கண்களுடன் அவள் அதைத் தன் மாமனார் மாமியாரிடம் காண்பித்தாள். அவர்கள் தங்கள் தபோமகிமையால் ஞான திருஷ்டி மூலம் நடந்ததை அறிந்து மருமகளையும் அழைத்துக்கொண்டு கருடனிருக்குமிடம் வந்தனர்.

கோகர்ண பூஜையை முடித்துக்கொண்டு திரும்பி வந்த சங்க சூடன் பாறையில் ரத்தம் சிதறியிருப்பதைக் கண்டதும் பதறி விட்டான். "ஐயோ, பழி சூழ்ந்துகொண்டு விட்டதே. அந்த மகான் எனக்காகத் தம்மையே கருடனுக்கு அர்ப்பணம் செய்து கொண்டு விட்டாரே! அவரைக் கருடன் எவ்விடம் தூக்கிப் போயிருக்கிறான் என்பதை உடனே அறியவேண்டும்" என்று கதறினான்.

இப்படியிருக்கையில், ஜீமூதவாகனனைத் தின்னும் போது அவன் சந்தோஷமாக இருப்பதைக் கண்ட கருடன் வியந்து, "இதென்ன ஆச்சரியமாக இருக்கிறதே. உயிருடன் வைத்தே அலகினால் நான் கொத்தித் தின்னும் போதும், சிரித்த முகத்துடன் சந்தோஷமாக என்னையே பார்த்துக் கொண்டிருக்கும் இவர் ஒரு மகா புருஷனாகத்தான் இருக்க வேண்டும். நாகமாக இருத்தற்கில்லை" என்று தீர்மானித்தது.

அப்போது ஜீமூதவாகனன், "பக்ஷி ராஜனே, ஏன் நிறுத்தி விட்டீர்கள்? என் உடலில் மாமிசமும், இரத்தமும் இருக்கின்றன. தங்களுக்கும் திருப்தி ஏற்படவில்லை. ஆகவே சாப்பிடுங்கள்!" என்று வேண்டிக் கொண்டான். உடனே கருடன், "பெரியோய், தாங்கள் நாகம் அல்ல; ஆகவே யார் என்பதைத் தெரிவிக்க வேண்டும்." என்று கேட்டது. ஆனால் ஜீமூதவாகனனோ, "இது என்ன கேள்வி? உண்மையில் நானும் ஒரு நாகமே. எடுத்த காரியத்தை முடிப்பதுதானே அறிவுடையவர்களுக்கு அழகு?" என்று தெரிவித்தான்.

இந்த நிலையில் சங்கசூடன் அங்கே வந்துவிட்டான். தூரத்தி லிருந்தே அவன் "பக்ஷி ராஜனே! அவசரப்பட்டு பாவச்செயல் எதையும் செய்யாதே. மாயையில் மூழ்கிவிட்டாயா? உங்களுக்காக நியமிக்கப்பட்ட நாகம் நானே. அவர் நாகம் அல்ல!" என்று கூறிக் கொண்டே வந்தான்.

அதே சமயம் ஜீமூதவாகனனுடைய மனைவியும் பெற்றோர்களும் அந்த இடத்திற்கு வந்துவிட்டார்கள். "ஐயோ, ஜீமூதவாகனா, பிறருக்கு இரங்கி உன் உயிரையும் தியாகம் செய்தாயா? பக்ஷி ராஜனே! இத்தகைய அக்கிரமம் செய்ய உனக்கு எப்படித்தான் மனம் துணிந்ததோ?" என்று சின்னா பின்னமாகிக் கிடக்கும் அவன் உடலைக் கண்டு அரற்றினார்கள்.

அதைக் கேட்ட கருடன் மிகவும் வருந்தியது. "மாயத் தோற்றத்திலே நான் போதிசத்வ அவதார புருஷனையே சாப்பிட்டு விட்டேனா? பிறருக்காகத் தம் உயிரைத் தியாகம் செய்யும் ஜீமூதவாகனரே இவர். இப்போது இவர் இறந்துவிட்டார்; இந்தப் பாப உடலையும் திக்குளித்து விட வேண்டிய தருணம் வந்து விட்டது." என்று தனக்குத்தானே கூறிக்கொண்டது.

இதைக்கண்ட ஜீமூதவாகனனின் பெற்றோர்கள் வருத்தம் தாங்காது அழுதார்கள். சங்கசூடனும் தன்னுடைய அஜாக்கிரதைக்காகத் தன்னை நொந்து கொண்டான். ஆனால் மலயவதியோ, தொண்டை அடைக்க, நாத் தழுதழுக்க தனக்கு முன்னர் வரம் அளித்த அம்பிகையை நோக்கி, "தேவி, கௌரி! அன்றொருநாள் எனக்கு வித்தியாதர அரசர்கள் எல்லோருக்கும் சக்ரவர்த்தியாக இருக்கப்போகிறவனே கணவனாக வாய்ப்பான் என்று அருளினாயே, அது இப்போது பொய்த்துவிட்டதே" என்று கதறினாள்.

அப்போது தேவி பிரத்யக்ஷமாகி, "குழந்தாய்! நான் சொன்னது பொய்யாகாது." என்று கூறிக் கொண்டே தன் கைக் கமண்டலத்திலிருந்து அமிர்தத்தை எடுத்து ஜீமூதவாகனன் உடல்மீது தெளித்தாள். உடனே அவனும், தன் உடல் காயங்கள் எல்லாம் நீங்க முன்னிலும் அழகுடன் உயிர்பெற்று எழுந்தான். தேவி அவனை நோக்கி, "குழந்தாய், நீ உன் உடலைத் தியாகம் செய்ததைக் கண்டு நான் மகிழ்கிறேன். ஆகவே, இப்போதே என் கையாலே உன்னை வித்தியாதரர்களுக்குச் சக்கரவர்த்தியாக அபிஷேகம் செய்கிறேன். நீ ஒரு கல்ப காலம் ஆட்சி புரிவாய்" என்று கூறிக் கமண்டலத்திலிருந்து நீரை அவன்மீது தெளித்து விட்டு மறைந்தாள்.

உடனே வானத்திலிருந்து மலர் மாரி பொழிந்தது. தேவதுந்துபிகள் முழங்கின.

பிறகு ஜீமூதவாகனனை கருடன் வணங்கி, "சக்கரவர்த்தியே! தங்கள் ஜீவகாருண்யத்தையும் ஈடு இணையற்ற தங்கள் தியாகத்தையும் கண்டு நான் பெரிதும் மகிழ்ந்தேன். இந்தக் கடுஞ்செயல் மூவுலகத்தையும் ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டது.

ஆகவே எனக்கு உத்திரவு கொடுங்கள். வேண்டிய வரத்தையும் கேளுங்கள்!" என்றது.

"தாங்கள் பச்சாதாபப்பட்டு நாகத்தைக் கொன்று தின்று விடுவதை விட்டுவிடவேண்டும். இதற்கு முன்னர் தாங்கள் சாப்பிட்ட நாகங்களின் எலும்புகள் மலைப்போல் குவிந்து கிடக்கின்றனவே. அவர்கள் பிழைத்து எழுந்திருக்க வேண்டும்." என்று ஜீமுதவாகனன் வேண்டிக்கொண்டான்.

அவ்வாறே கருடன் அருளவே அந்த வரத்தின் மகிமையால் கருடனால் முன்னர் உயிர் இழந்த நாகங்கள் எல்லாம் உயிர்பெற்று எழுந்தன. தேவர்கள், முனிவர்கள், நாகங்கள் ஆகிய எல்லோரும் மலயபர்வதத்தில் கூடியதால் அதற்கு மூவுலகின் புகழ் கிட்டியது. கௌரியின் அருளால் ஜீமுதவாகனன் கதையைக் கேட்ட வித்தியாதர மன்னர்கள் எல்லோரும் ஓடிவந்து. அவனை அடி பணிந்து வணங்கினார்கள். கருடன் புறப்பட்டுப் போன பிறகு உற்றார் உறவினர் புடைசூழ அவனை அவர்கள் இமய மலைக்கு அழைத்துச் சென்று, கௌரியே தன் கையால் அபிஷேகம் செய்தபடி சக்கரவர்த்தியாக அமர்த்தினார்கள்.

இவ்விதம் ஆச்சரியமான கதையைச் சொல்லி முடித்த வேதாளமானது விக்கிரமாதித்த மகாராஜனைப் பார்த்து பின்வரும் கேள்வியைக் கேட்டது. "ஆகவே, சங்கசூடன், ஜீமுதவாகனன் ஆகிய இருவருள் யார் சிறந்தவன் என்பதைச் சொல்!" இதைக் கேட்ட மன்னன் தன் மௌனத்தைக் கலைத்து சாந்தமாகப் பதிலளித்தான்.

"ஜீமுதவாகனன் நடத்தையில் அதிசயம் ஏதும் இல்லை. பல ஜன்மங்களாக அவன் அந்த மனப்பக்குவத்தையும், புண்ணியத்தையும் அடைந்திருந்தான். ஆனால் சங்கசூடன் தான் உயிர் தப்பிய பிறகும், தனக்குப் பதிலாக வேறு ஒருவனைக் கொண்டு ஓடிய கருடனைத் துரத்திச் சென்று தன்னையே சாப்பிட வேண்டுமென்று மன்றாடிக் கேட்டான். அவனே சிறந்தவன்!"

இவ்விதம் அவன் சொன்னவுடனே வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக்கொண்டு தன் இடத்தை அடைந்தது. மகாராஜனும் அதை தேடிக் கிளம்பினான்.

(இந்தப் புதிர் கதைக்கு. "பகுத்தறிவு உள்ள மனிதனின் இலட்சிய உள்ளத்தைவிட, பகுத்தறிவில்லாத பறவை இனத்தின் கருணையுள்ளமே அதிசயமானது!'' என்றும் விடை கூறப்படுவதுண்டு.)



## 20. உன்மாதினி கதை

விக்கிரமாதித்தன் திரும்பவும் முருங்க மரத்தை அடைந்து வேதாளத்தைக் கட்டிப் பிடித்துத் தன் தோள்மீது சுமந்து கொண்டு கிளம்பினான். "மகாராஜனே! ஒரு கதை சொல்கிறேன், கேள்!" என்று சொல்ல ஆரம்பித்தது.

கங்கைக் கரையிலே கனகபுரம் என்ற நகரம் ஒன்று இருந்தது. அங்கே வாழ்ந்த மக்கள் எல்லோரும் தருமவான்கள். அவர்களுக்கு யசோதனன் என்ற அரசன் இருந்தான். அவன் தயாள குணம் உடையவன். பக்கத்து நாட்டைக் கவர்ந்து கொள்ள வேண்டும் என்று அவன் நினைத்ததே இல்லை. சாஸ்திரங்களை நன்கு அறிந்தவன்.

அந்த நகரத்திலே பெரிய வியாபாரி ஒருவன் இருந்தான். அவனுக்கு உன்மாதினி என்ற கன்னிப் பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய அழகைக் கண்டு எல்லோரும் மயங்கினர். அவள் யுக்த வயது அடைந்ததும், வியாபாரி யசோதன மன்னனிடம் சென்று, "அரசே! மூவுலகிலும் நிகரற்ற அழகுள்ள ஒருத்தி இருக்கிறாள். உலகத்திலுள்ள இரத்தினங்களும், மணிகளும் அரசனையே சார்ந்தவை. ஆகவே என் குமாரத்தியைப் பற்றி உங்களுக்குத் தெரிவிக்காமல் நான் வேறு யாருக்கும் மணம் செய்து கொடுக்க விரும்பவில்லை. அவளைக் கொள்வதோ, தள்ளுவதோ தங்கள் இஷ்டம். அதைக் கேட்ட பிறகு தான் நான் மேற்கொண்டு காரியங்களைச் செய்ய வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டான்.

அதன் பின்னர் மன்னவன் அந்தப் பெண்ணின் அழகிலே மங்கலக் குறிகள் அமைந்திருக்கின்றனவா என்பதை அறிவதற்காக, வியாபாரியுடன் அறவாளர்கள் சிலரை அனுப்பி

வைத்தான். மூவுலகையும் மயக்கும் அவளுடைய அழகைக் கண்டு வியந்தனர். "அரசன் இவளை மணந்து கொண்டால் இவள் அழகில் மயங்கி நாட்டைக் கவனிக்காமல் அலட்சியம் செய்து விடுவான். அதனால் நாடு பாழாகிவிடும். ஆகவே இவளுடைய அழகில் மங்கலக் குறிகள் தோன்றுவதை நாம் அரசனிடம் சொல்லக் கூடாது" என்று முடிவு செய்தனர். அவ்வாறே அரசனிடம் சென்று, "அவள் தேகத்தில் அமங்கலக் குறிகளே தோன்றுகின்றன" என்று தெரிவித்து விட்டார்கள். அரசனும் அந்தப் பேரழகியான உன்மாதினியைத் தன் தேவியாக ஏற்க மறுத்து விட்டான்.

அப்பால் அரசன் சொன்னபடியே வியாபாரி தன் குமாரத்தியான உன்மாதினியைப் படைத் தலைவனான பலதரனுக்கு மணம் செய்து கொடுத்தான். அவள் தன் புருஷன் வீட்டில் சந்தோஷமாக இருந்தாள். ஆயினும் அவள் மனதிலே தன் தேகத்தில் ஏதோ அமங்கலக்குறியைக் கண்டதாகச் சொல்லித் தன்னை ஏற்க மறுத்து அரசன் தன்னை நிராகரித்தது மட்டும் உறுத்திக் கொண்டே இருந்தது.

மாரிக் காலம் போய் வசந்தம் வந்தது. மலர்கள் மொக்கு அவிழ்ந்து நறுமணம் பரப்பின. வசந்தம் வந்ததைக் கொண்டாட மக்கள் உற்சவம் நடத்தினார்கள். அரசன் யானையேறி வீதியிலே புறப்பட்டான். அவ்விதம் வரும்போது அவனைக் கண்ட குலமங்கையர் அவன்மீது மையல் கொண்டு விடக் கூடுமாதலாலும், அதனால் விபரீதம் ஏற்படக் கூடுமாத லாலும் அவர்கள் மறைந்து விலகிப் போவதற்காக மன்னர் பிரானின் வருகையைப் பறை கொட்டித் தெரிவித்தார்கள்.

அதைக் கேட்ட உன்மாதினி அரசன் தனக்கிழைத்த அவமானத்திற்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காக தன் மாளிகையின் மேன்மாடத்தில் நின்று வீதியில் உலாவரும் அரசனுக்குத் தரிசனம் தந்தாள். அவள் உருவத்தையும் அழகையும் கண்ட அரசன் திகைத்துவிட்டான். மாரன் எய்த கணைகள் அரசன் உள்ளத்தில் நன்றாகத் தைத்தன. அரண்மனை வந்து சேர்ந்ததும் அந்த மங்கை யார் என்பதைப் பற்றி விசாரித்தான். முன்னர் ஒருசமயம் தான் வேண்டாம் என்று நிராகரித்த வியாபாரியின் மகளே அவள் என்பதை அறிந்தான். அவள் அழகில் அமங்கலக் குறிகள் தெரிகின்றனவென்று முன்னர் தன்னிடம் சொன்னவர்களை அரசன் நாட்டிலிருந்து பிரஷ்டம் செய்து துரத்திவிட்டான்.

அதற்குப் பிறகு அரசனுக்கு இரவு பகல் அவள் நினைவுதான்! அந்த நினைவால் அவன் வாடி வதங்கினான்.

அந்தப் பெண்ணிடம் கொண்ட காதல் அரசன் உடலையும் உள்ளத்தையும் உருக்கி வந்தது. அவன் உடல் நிலையைக் கண்டு பலரும் வந்து விசாரித்தார்கள். ஆனால் தன் உள்ளத்தைத் தகித்து வரும் காதலைப் பற்றி மன்னனுக்கு வெளியே சொல்ல வெட்கம்! கடைசியில் அவர்களுடைய தொந்திரவு பொறுக்க முடியாமல் தனக்கு அந்தரங்கமானவர்களிடம் விஷயத்தைத் தெரிவித்தான். உடனே அவர்கள், "இதற்காக ஏன் கவலைப்பட்டு வாடவேண்டும்? தங்கள் ஆணைக்கு அவள் காத்திருக்கிறாள். தாங்களே அவளை அழைத்துக் கொள்ளலாம்" என்றார்கள். ஆனால் நீதி தவறாத மன்னன் அவர்கள் உபதேசத்தை ஏற்கவில்லை.

உன்மாதினியின் கணவனான படைத் தலைவன் பலதரனுக்கு இந்தச் செய்தி எட்டியது. மன்னனிடம் அத்யந்த ராஜபக்தியும் விசுவாசமும் உடைய அவன், அரசன் காலில் விழுந்து சொன்னான்: "மன்னர் பிரானே! இந்த அடிமைப் பெண்ணைத் தங்கள் அடிமைகளுள் ஒருத்தியாகவே தாங்கள் கருதவேண்டும். வேறு ஒருவன் மனைவியாகக் கொள்ளக் கூடாது. நானே அவளை மனமார அர்ப்பணம் செய்கிறேன். தாங்கள் அவளை ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அவளைக் கோவிலுக்குத் தானமளித்து விடுகிறேன். குலமங்கையரை அடையும் தோஷம் அப்போது ஏற்படாது; ஆகவே தாங்கள் அவளைத் தாராளமாக ஏற்றுக் கொள்ளலாம்!"

இவ்விதம் படைத் தலைவன் திரும்பத் திரும்ப வற்புறுத்திச் சொன்னபோதும் அரசன் கோபம் கொண்டு அதற்கு இணங்க மறுத்துவிட்டான். "அரசனாக உள்ள நான் அறநெறியை விட்டு விலகினால் அப்பால் யார்தான் அதைப் பின்பற்றுவார்கள்? இந்தக் குற்றத்தைச் செய்யும்படி என்னிடம் விசுவாசமாக உள்ள நீயே தூண்டுவதற்கு உனக்கு எப்படித்தான் மனம் வந்ததோ? இதனால் க்ஷண நேரச் சந்தோஷம் உண்டாகலாம். ஆனால் நிரந்தரமாக இம்மையிலும், மறுமையிலும் பெருங் களங்கத்தை இது உண்டாக்கிவிடும். அன்றி, நீ உன் மனைவியைத் துறந்தால், நான் உன்னைச் சும்மாவிடமாட்டேன். பெண்களின் கற்பை அவ்வளவு எளிதாகக் கருதி நடந்தால், உனக்கு நிச்சயம் தண்டனை கிடைக்கும். ஆகவே, சாவே இதற்கு ஏற்ற மருந்து."

இவ்விதம் அரசன் தன் படைத்தலைவனின் கோரிக்கையை உதறித் தள்ளிவிட்டான். இவ்வாறே நாட்டு மக்களும் மந்திரிகளும் வேண்டிக் கொண்டபோதும் மன உறுதியுடன் ஒரே நிலையில் நின்று அதை மறுதளித்துவிட்டான். எனினும் காலக்கிரமத்தில் அரசன் உள்ளத்தையும் உடலையும் அரித்து

வந்த அந்த மோக நெருப்பு அவன் உடலைக் கடைசியிலே நீறாக்கியது. அரசன் இறந்த பிறகு உயிர்வாழ மனம் பெறாத படைத் தலைவனும் தீக்குளித்து உயிர் துறந்தான்.

இவ்விதம் கதையை முடித்த வேதாளமானது விக்கிரமாதித்தனின் தோளிலிருந்தபடியே அவனை நோக்கி, "மகாராஜனே! இவ்விருவருள் யார் சிறந்தவர் அரசனா, படைத்தலைவனா?" என்று கேட்டது.

"இவ்விருவருள் அரசனே சிறந்தவன்" என்று பதிலளித்தான் மகாராஜன்.

இதைக் கேட்டதும் வேதாளம், "அது எப்படி? தன் மனைவியின் பெருமையை நன்கு அறிந்த படைத் தலைவன் அவளிடம் மோகம் கொண்டிருந்தும் ராஜ விசுவாசத்தால் அவளை அவனுக்கு அளித்தான். அரசன் இறந்த பிறகும் தன் உயிரை மாய்த்துக் கொண்டான். அரசனோ அவளைப் பற்றி நன்றாக அறிந்து கொள்ளாமல் அவளை ஏற்க மறுத்தான். அவ்விதம் இருக்கப் படைத் தலைவனைக் காட்டிலும் அரசன் எப்படி உயர்ந்தவன் ஆவான்?" என்று கேட்டது.

விக்கிரமாதித்தன் அதைக் கேட்டுக் கடகடவென்று சிரித்தான். "நீ சொல்லுவது உண்மைதான். ஆயினும் எஜமான விசுவாசங் கொண்ட படைத்தலைவன் நடத்தையில் சிறந்த அம்சம் என்ன இருக்கிறது? வேலைக்காரர் தங்கள் உயிரையும் கொடுத்து எஜமானர்களைக் காப்பாற்ற வேண்டும் அன்றோ? ஆனால் அரசர்களோ மமதையால் பருத்து வளர்ந்தவர்கள். பதவியாலும் அதிகாரத்தாலும் அவர்கள் பார்வை மறைந்து போகிறது. போகத்தைப் பற்றிய எண்ணம் எழுந்துவிட்டால் அறநெறியையுங்கூட உதறிவிடுவார்கள். அவர்களுக்கு நிழல் கொடுக்கும் குடையும் அவர்களுடைய குற்றங்களை மறைத்து நின்று அவர்களுக்குப் புகலிடம் அளித்துக் காப்பாற்றிவிடும். நகுஷன் போன்ற பேரரசர்களும் இதற்குத் தப்பாமல் பழி சுமந்திருக்கிறார்கள். ஆனால் இம்மன்னனோ உன்மாதினியிடம் கொண்ட காதலால் தன் உடலையே இழந்தாலும் அறநெறியின் வழியிலிருந்து நழுவவில்லை. அவ்வளவு திடச்சித்தம் கொண்ட அரசனே உயர்ந்தவன்!"

இந்தப் பதிலைக் கேட்டதும் வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக் கொண்டு சென்றது. பழையபடி அதைத் தேடிப் புறப்பட்டான் விக்கிரமாதித்தன்.

## 21. சிறுவன் சிரித்த கதை

மறுபடியும் விக்கிரமாதித்தன் முருங்கமரத்தை அடைந்து வேதாளத்தைப் பிடித்து இறக்கித் தோளில் சுமந்து கொண்டு கிளம்பினான். வாய் மூடி மௌனியாக அவன் நடந்து செல்லும் போது வேதாளம் அவனைப் பார்த்து "மகாராஜனே! இந்தக் கதையைக் கேள்" என்று சொல்ல ஆரம்பித்தது.

சித்திரக்கூடம் என்றொரு நகரம் உண்டு. அதன் பெயருக்கு ஏற்றபடி அழகாக இருந்தது. அதிலே சந்திராவலோகன் என்ற அரசன் ஒருவனிருந்தான். அவன் அரசருக்குள் மாணிக்கம்; ஜனங்களை நன்றாகப் பாதுகாத்து வந்தான். எல்லோரும் அவனைப் போற்றினார்கள். ஆயினும் அவனுக்கு ஒரு குறை இருந்தது. அவனுக்கு எல்லா வகையான சம்பத்தும் கிட்டி யிருந்தது. ஆனால் அவனுக்கேற்ற ஒரு மனைவி இல்லை.



மனைவி இல்லாத குறையை மறைக்க அவன் ஒருநாள் தன் பரிவாரங்களுடன் வேட்டையாட ஒரு காட்டிற்குச் சென்றான். அப்போது காட்டுப் பன்றிகளைக் கொன்றான். வில் வித்தையில் விஜயனை வென்ற அவனைக் கண்டு எல்லா மிருகங்களும் நடுங்கின. சிங்கங்களையும், சர்ப்பங்களையும் அடித்தான். வேட்டை ஆடுவதில் இருந்த ஆர்வத்தில் நடு காட்டிற்குத் தனியாகச் செல்ல விரும்பி குதிரையைக் குதி காலால் உதைத்தான். சவுக்கடியும், கால் உதையும் பட்ட குதிரை வாயு வேகத்துக்கும் அதிகமாகக் கிளம்பி மேடு பள்ளம்

பார்க்காமல் ஒரு க்ஷணத்திற்குள் பத்து யோசனைத் தூரம் சென்றது. அரசனுக்கு ஒரே பிரமிப்பாய் போய்விட்டது.

அங்கே குதிரையும் களைத்துப் போய் நின்றவுடன் அரசன் காட்டிலே சிறிது உலாவினன். அவ்விடம் தாமரை நிறைந்து விசாலமான ஒரு தடாகத்தைக் கண்டான். காற்றிலே முன்னும் பின்னும் வளைந்து ஆடும் தாமரைகள் அரசனை வா வா என்று கைக்காட்டி அழைப்பது போல இருந்தன. உடனே அரசன் குளத்தை அடைந்து குதிரையை விட்டுக் கீழே இறங்கினன். சேணத்தை எடுத்து குதிரையைக் கீழே புரள விட்டு, குளிக்க விட்டு, தண்ணீர் காட்டிவிட்டு ஒரு மரத் தடியில் கட்டி ஒரு கட்டு புல்லையும் போட்டு மேயவிட்டான். பிறகு அவன் குளத்தில் குளித்து தண்ணீர் அருந்தி களைப்பாறினன். அதற்கப்பால் அவன் சுற்றுப்புறங்களைக் கவனித்தான்.

அங்கே அசோக மரத்தடியில் பேரழகு வாய்ந்த முனிவர் குமாரி ஒருத்தி தன் தோழியுடன் உட்கார்ந்திருந்தாள். அந்தப் பெண் மரவுரி தரித்து மாலையணிந்து ரிஷிபத்தினிகளைப் போல தலை மயிரை எடுத்துக் கட்டியிருந்தாள். அவளைக் கண்டு மாரன் கணையால் தாக்குண்ட மன்னன் "இவள் யாராக இருக்கும்? தடாகத்தில் குளிப்பதற்காக சாவித்திரியே வந்திருக்கிருளா அல்லது சிவனிடமிருந்து பிரிந்து கௌரி தேவியே மறுபடியும் தபசு பண்ண வந்து விட்டாளா? சூரியோதயமாகிச் சந்திராஸ்தமனம் ஆகிவிட்டதால் சந்திரனின் தண்ணொளியே தபசுப் பண்ணப் பெண்ணுருவம் கொண்டு வந்திருக்குமா? நேரிலேயே போய்க் கேட்டுப் பார்க்கலாம்" என்று எண்ணி அவளை நெருங்கினன்.

அவன் வருவதைப் பார்த்த அவள் அவன் அழகைக் கண்டு திகைத்துப் போனுள். மாலை தொடுத்து வந்த மங்கையின் கை நழுவியது. "இந்தக் காட்டில் நுழைந்து வரும் இவர் யார்? சித்தரா? வித்தியாதரரா? இவர் அழகைக் கண்டு உலகம் முழுவதும் வியந்து நிற்குமே!" இவ்விதம் எண்ணிய அவள் இருக்கையிலிருந்து எழுந்து கடைக்கண்ணுல் அவனைப் பார்த்தபடியே அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள். ஆனுல் அவள் கால்களோ அடியெடுத்து வைக்க மறுத்தன.

இங்கிதம் அறிந்த மன்னன் மெல்ல அவளையணுகி "சுந்தரி! முன்பின் அறியாமல் முதல் தடவையாகப் பார்க்கும் என்னை உபசரிக்க வேண்டுமென்று நான் கேட்கவில்லை. நெடுந்தூரத்தி லிருந்து வரும் நான் உன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு எதுவும் விரும்பவில்லை. ஆயினும் இப்படி நீ

பிரண்டு ஓடுவது தபசிகளுடைய வாழ்க்கையின் கடமையோடு எப்படி பொருந்தும்?" என்று கேட்டான்.

அரசன் இவ்விதம் கேட்டவுடன் அவளுடைய தோழி அங்கே அமர்ந்து அரசனை உபசரித்தாள். அரசனைப் போலவே அவளும் இங்கிதம் அறிந்தவள். பிறகு மன்னன் சகஜமாக அன்போடு அவளிடம் "பெண் பாவாய்! உன் தோழி எந்த நற்குடியில் பிறந்தாள்? அவள் நாமதேயம் என்ன? மலர் போன்ற மென்மையான தன் உடலை அவள் ஏன் இந்தக் கானகத்தில் தபசிக்கு உரிய வாழ்க்கையில் ஈடுபடுத்தி அவதிப்படுகிறாள்?" என்று கேட்டான்.

தோழியும், "கண்வ முனிவருக்கு மேனகையிடம் பிறந்த இவளுக்கு இந்திரப்பிரபை என்று பெயர். கன்னிப் பெண்ணை இவள் இன்னும் ஆசிரமத்திலேதான் வசித்து வருகிறாள். ஆசிரமம் பக்கத்தில்தான் இருக்கிறது. தந்தையரின் அனுமதி பெற்று இந்தத் தடாகத்திலே நீராட வந்தாள்" என்று தெரிவித்தாள்.

இதைக் கேட்ட அரசன் சந்தோஷமடைந்து அவளைத் தனக்கு மணம் செய்து கொடுக்கும்படி கண்வமகரிஷியிடம் கேட்டு விடலாம் என்று குதிரை மேலேறி ஆசிரமத்திற்கு கிளம்பினான். குதிரையை ஆசிரமத்திற்கு வெளியே விட்டு விட்டு, பய பக்தியோடு மிகுந்த பணிவுடன் ஆசிரமத்திற்குள் நுழைந்தான். அங்கே ஜடா மகுடமும் மரவுரியும் தரித்த மகரிஷிகள் கூடியிருந்தனர். நக்ஷத்திர மண்டலத்தின் நடுவில் சந்திரன் பிரகாசிப்பது போல அந்த ரிஷிக் கூட்டத்தின் நடுவில் கண்வர் கண்கள் ஜொலிக்க உட்கார்ந்து இருந்தார். அரசன் அவரை அணுகி அவருடைய கால்களைத் தொட்டு வணங்கினான். முனிவரும் அவனை வரவேற்று உபசரித்து அவன் கவலையைப் போக்கினார்.

அப்பால் நேரத்தை வீணாக்காமல் அவனைப் பார்த்து "குழந்தாய், சந்திராவலோகா! நான் சொல்லப் போகும் புத்திமதியைச் செவிமடுத்துக் கேள்! உலகத்தில் வாழும் எல்லா ஜீவராசிகளும் சாவுக்குப் பயப்படுகின்றனவென்பதை நீ அறிவாய். அப்படியிருக்க அகாரணமாக இந்தப் பிராணிகளை ஏன் கொன்று விடுகிறாய்? பயப்படுகிறவர்களை ரக்ஷிக்கவே பகவான் இந்த ஆயுதங்களை அளித்திருக்கிறார். ஆகவே யுத்த சன்னதமான யானை, குதிரைகளைக் கொண்டு எதிரிகளையடித்து, நாட்டுக்கு க்ஷேமத்தைக் கொடுத்து மக்களை நீதி வழுவாமல் அரசு புரிந்து வரவேண்டும். அரசுரிமையை நன்றாகப் பயன்படுத்தி, அனுபவித்து, தான தருமம் செய்து உன் புகழை

உலகம் முழுவதும் பரப்புவாய். ஆயினும் கொடூரமான இந்த வேட்டைத் தொழிலை விட்டொழித்துவிடு. வேட்டை ஆடுகின்றவன், வேட்டை, குதிரை எல்லாம் களைத்துத் தன் வசம் இழந்து போவதைத் தவிர, இந்த வேட்டையால் காணும் பயன் என்ன? பாண்டுவுக்கு என்ன நடந்ததென்பதை நீ கேள்விப் பட்டதில்லையா?" என்று கூறினார்.

இவ்விதம் கண்வ முனிவர் கூறிய புத்திமதியைக் கேட்டு புத்திமானான சந்திராவலோகன் அந்த புத்திமதியைச் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்டான். "முனிபுங்கவ! தங்கள் உபதேசம் பெற்றேன். தங்களால் தன்யனானேன். வேட்டையாடுவதைத் துறந்து விட்டேன். இனி மிருகங்கள் எல்லாம் பயமின்றி வாழலாம்" என்று தெரிவித்தான். முனிவரும் இதைக் கேட்டு "உயிர் வாழும் பிராணிகளுக்கு ஜீவஹிம்சை செய்வதில்லையென்ற உன் சங்கல்பத்தைக் கேட்டு மகிழ்வடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்!" என்றார். தன் விருப்பத்தைத் தெரிவிக்க ஏற்ற தருணம் கிட்டியதை அறிந்த அரசன் "தங்களுக்கு என்மீது திருப்தி ஏற்பட்டிருந்தால் தங்கள் புத்திரி இந்திரப்பிரபையை எனக்கு மணம் செய்து கொடுக்க வேண்டுகிறேன்" என்று பணிவுடன் வேண்டினான்.

அரசன் இவ்விதம் விரும்பி கேட்டவுடன் முனிவர் தம் புத்திரி அரசனுக்கேற்ற மனைவி என்று நினைத்து அவனுக்கு மணம் செய்து கொடுக்க ஒப்புக் கொண்டார். அப்ஸரஸ் ஸ்திரீ ஒருத்திக்கு மகளான அவள் அப்பொழுது தான் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள். உடனே ரிஷிப் பத்தினிகள் கூடி அலங்கரித்தார்கள். விவாகம் நடந்தது. சந்திராவலோக மன்னனும் தன் புது மனைவியை அழைத்துக் கொண்டு குதிரையேறி ஊருக்குக் கிளம்பினான். ஆசிரமவாசிகள் கண்களில் நீர் வழிந்தோட ஆசிரமத்தின் எல்லை வரை வந்து அவர்களை வழியனுப்பினார்கள்.

அவர்கள் கிளம்பி வழி நடந்து செல்லும்போது சூரியன் அஸ்தமித்தான். இரவு சூழ்ந்து கொண்டது. அப்போது அரசன் சாலையோரத்தில் தடாகத்தின் அருகில் ஓர் அரசமரத்தைக் கண்டான். அந்தக் குளத்தின் நீர் தெளிவாக இருந்தது. மரக் கிளைகள் மறைத்து அந்த இடம் குளிர்ச்சியாகவும் நிழல் அடர்ந்து நன்றாக புல் முளைத்து மனோரம்மியமாகவும் இருந்தது. இரவுப் பொழுதை அரசன் அந்த இடத்திலே கழிப்பதற்குத் தீர்மானித்தான். அரசன் குதிரையை விட்டிறங்கி அதற்குத் தண்ணீர் காட்டி புல் கட்டுப்போட்டான். பிறகு அந்தக்

குளக்கரை மணலில் தங்கி இளைப்பாறினன். அன்றைய இரவு மலர்ப்படுக்கையில் ரிஷிப் பத்தினியான தன் மனைவியின் அருகே உறங்குவதற்கு அமர்ந்தான். அப்பொழுது கிழக்கே சந்திரோதயம் ஆகி இருளைப் போக்கிப் பிரகாசத்தை வீசியது. தண்ணிலாவிலே அரசன் இரவு பொழுதைச் சந்தோஷமாகக் கழித்தான்.

மறுநாட் காலையில் அரசன் படுக்கையை விட்டெழுந்து பிரார்த்தனையை முடித்துக் கொண்டு. சைன்யத்தை அடைவதற்காகத் தன் மனைவியுடன் புறப்படுவதற்குத் தயாரானன். அப்போது சந்திரன் ஒளியிழந்து மேற்கு மலை வாயிலில் அஸ்தமித்தான். கிழக்கே செக்கச் செவேலென்று சூரியனும் உதயமானன். அந்த சமயம் அங்கே திடீரென்று ஒரு பிரம்ம ராக்ஷஸன் தோன்றினன். உடல் ஒரே கறுப்பாகவும், மயிரெல்லாம் மஞ்சளாகவும் மின்னல் தோன்றும் மேகமாகவும் காட்சியளித்தான். அவன் மயிரைத் திரித்து பூணூலாகவும், பிணத்தின் குடலை மாலையாகவும் அணிந்து. மனிதனுடைய தலையின் மாமிசத்தை பிய்த்து கடித்துக் கொண்டும், மண்டையோட்டிலிருந்து ரத்தத்தை குடித்துக் கொண்டும், கோரப் பல்லுடன் பயங்கரமாகத் தோன்றினன். பிரம்ம ராக்ஷஸன் வாயிலிருந்து நெருப்புக் கக்கி, குலை நடுங்கும்படிக் கோரமாகச் சிரித்தான். பிறகு அரசனைப் பார்த்து பின்வருமாறு கர்ஜித்தான். "அடே பழிகாரா, நான் ஜ்வாலமுகன் என்ற பிரம்ம ராக்ஷஸன் என்று அறிந்து கொள். இந்த அரச மரத்தைக் கொண்ட என் சாம்ராஜ்யத்தில் தேவர்கள் கூட நுழையமாட்டார்களே? அப்படியிருக்க நீ இதை ஆக்ரமித்து உன் மனைவியுடன் அனுபவித்துப் பாழ்படுத்திவிட்டாய். ஆகவே நீ சாசரத்திலிருந்து திரும்பி வரும் என்னிடத்திலிருந்து உன் காரியத்தின் பலனை பெற்றுக்கொள். அடே பாதகா, காம வசப்பட்ட உன் ரத்தத்தை பிய்த்து எடுத்து விடுகிறேன். உன் ரத்தத்தை உறிஞ்சுகிறேன்." பிரம்ம ராக்ஷஸன் இவ்விதம் மிரட்டிப் பயமுறுத்தியதும் அதைக்கேட்ட தன் மனைவி பயப்படுவதையும் கண்டு ராக்ஷஸனை அசைக்க முடியாது என்று எண்ணி அரசன் நடுநடுங்கி, "உங்கள் பாதுகாப்பை நாடி நான் இவ்வாசிரமத்திற்கு வந்திருக்கும் விருந்தாளி. என்னையும் அறியாமல் நான் ஏதாவது குற்றம் செய்திருந்தால் என்னை மன்னித்து விடவும். உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக நரபலி ஒன்றைக் கொடுக்கிறேன். அதைக் கொண்டு உங்கள் பசியையாற்றிக் கொண்டு கோபத்தைத் தணிக்க வேண்டும்" என்று வேண்டினன்.

அரசன் இவ்விதம் சொன்னதைக் கேட்ட பிரம்ம ராக்ஷஸனும் கோபம் தணிந்து "அது போதும். அப்படியே செய்" என்று அதற்குச் சம்மதித்தான். அன்றி இதற்கு ஒரு நிபந்தனையும் தெரிவித்தான். "எனக்கு இழைத்த அவமானத்தை ஒரே ஒரு நிபந்தனையின் பேரில் மன்னித்து உன் கோரிக்கையை ஏற்றுக் கொள்வேன். ஏழு வயதுள்ள அந்தணச் சிறுவன் ஒருவனையே இதற்கு நீ தேர்ந்தெடுக்க வேண்டும். அவன் நல்ல அறிவும் உயர்ந்த குணமும் வாய்க்கப் பெற்றவனாகவும், உன் பொருட்டு தன்னைத்தானே தியாகம் செய்து கொள்ள அவனாக இஷ்டப்பட்டு முன் வரவேண்டும். பலியிடும் போது அவனுடைய தாய் தந்தையர்கள் அவனைப் பூமியில் கிடத்தி கை கால்களைப் பிடித்துக் கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட நரபலியைத் தேர்ந்தெடுத்து இன்றிலிருந்து ஏழாம் நாள் நீயே வாளால் வீசி அவனை எனக்குப் பலி கொடுக்க வேண்டும். இதை இப்படியே நிறைவேற்றுவாயாகில் நல்லது. இல்லாவிட்டால் அரசே, ஒரே க்ஷணத்தில் உன்னையும், உன்னைச் சார்ந்தவர்களையும் நான் அழித்து விடுவேன்" இதைக் கேட்டவுடன் அரசன் பயந்து அந்த நிபந்தனைகளுக்கு அப்படியே ஒப்புக் கொண்டான். பிரம்ம ராக்ஷஸனும் உடனே மறைந்தான்.

பிறகு சந்திராவலோக அரசன் தன் மனைவியுடன் குதிரையேறி கலங்கிய மனத்துடன் தன் பரிவாரத்தை அடையக் கிளம்பினான். "ஐயோ, என்ன முட்டாள்தனம் இது? வேட்டை மோகத்தாலும் காம வசத்தாலும் அறிவிழந்து பாண்டுவைப் போல அழிவைத் தேடிக் கொண்டேனே! பிரம்மராக்ஷஸன் விதித்த குண விசேஷங்களை உடைய நரபலி எங்கே கிடைக்கப் போகிறது? விதி விட்ட வழி நடக்கட்டும். தலை நகரத்திற்கு திரும்பி என்ன நடக்கிறதோ பார்க்கலாம்" என்று பற்பல விதமாகக் கவலைப்பட்டான்.

இவ்விதம் சிந்தனையிழந்து அவன் வரும்போது அவனைத் தேடிக் கிளம்பிய சேனையைக் கண்டான். அதனோடும், தன் மனைவியோடும் அவன் தன் தலை நகரமான சித்திரக் கூடத்தை அடைந்தான். அரசன் தனக்குச் சமமான மனைவி கிடைத்ததைக் கண்டு ராஜ்யம் முழுவதும் குதூகலம் அடைந்தது. ஆயினும் அரசன் தன் வருத்தத்தை அடக்கிக் கொண்டு அன்றைய மீதிப் பொழுதைக் கழித்தான்.

மறுநாள் தனக்கு நேர்ந்தவற்றையெல்லாம் மந்திரிகளிடம் இரகசியமாகத் தெரிவித்தான். அதிவிவேகியான மந்திரி ஒருவன், "அரசே! இதற்காக மனம் உடைந்து விடவேண்டாம். உலகத்தில் எத்தனையோ அதிசயங்களைக் காணலாம். அத்தகைய

பலியைத் தேடி நான் உங்களுக்கு அளிக்கிறேன்" என்று கூறி அரசனைத் தேற்றினான்.

மந்திரி இவ்விதம் அரசனைத் தேற்றிவிட்டு அதி சீக்கிரத்திலேயே ஏழு வயதுள்ள பையனைப்போல் தங்கத்தால் ஓர் உருவம் செய்தான். அதற்கு காதிலும் கழுத்திலும் ஏராளமான நகைகளைப் போட்டு ஒரு தேரில் வைத்து நாடு நகரங்களிலெல்லாம் இழுத்துச் செல்ல உத்தரவிட்டான். அவ்விதம் தங்கப் பிரதிமையை எடுத்துச் செல்லும்போது அதற்கு முன்னதாக பின்வருமாறு தண்டோரா போடச் செய்தான். "சமூகத்தின் நன்மையை உத்தேசித்து தன் பெற்றோருக்கு பிரயோஜனம் அளிக்க விரும்பும் யாராவது ஏழு வயது அந்தணச் சிறுவன் ஒருவன் தானாக இஷ்டப்பட்டு ஒரு பிரம்ம ராக்ஷஸனுக்குப் பலியாக முன் வருவானாகில், அவன் தன்னை அவ்விதம் பலியிட்டுக் கொள்ள தாய் தந்தையர் அனுமதி கொடுப்பதுடன் பலி கொடுக்கும்போது அவனுடைய கைகால்களை பிடித்துக் கொள்வார்களாகில், இந்தத் தங்கப் பிரதிமையும், நவரத்தினங்களுடன் இனாமாக அளிக்கப்படும்."

அப்போது அந்தணர்களுக்கு அரசர் பிரத்தியேகமாக அளித்திருந்த தானத்தால் வாழ்ந்துவந்த ஏழு வயது அந்தணச் சிறுவன் ஒருவன் இதைக் கேள்வியுற்றான். அவன் உயர்ந்த வீரமும், பிரமிக்கத்தக்க நற்குணங்களும் பெற்றவன். சிறு வயது முதலே பிறருக்கு உபகாரம் செய்வதிலே சிரத்தையும், ஆனந்தமும் கொண்டவன். பூர்வ ஜன்மத்திலும் அவன் அவ்விதமே பிறருக்கு உபகாரம் செய்து அடைந்த நற்கருமத்தின் தொடர்பே போலும். உண்மையில் நாட்டு மக்களின் புண்ணிய பலனே உருவம் எடுத்து வந்திருப்பது போலத் தோன்றினான். அவன் பறை சாற்றுவார்களிடம் வந்து "உங்கள் நன்மைக்காக நான் என்னைத் தியாகம் செய்து கொள்ளுகிறேன். ஆயினும் முதலில் நான் போய் என் பெற்றோர்களிடம் சொல்லி விட்டுவந்து விடுகிறேன்" என்று தெரிவித்தான். அவர்கள் சந்தோஷப்பட்டு அவனுக்கு அனுமதியளித்தார்கள்.

சிறுவன் தன் வீடு சென்று தாய் தந்தையர்களிடம் கைக் கூப்பி பின்வருமாறு வேண்டினான். "அநித்தியமான இந்த உடலைச் சமூகத்தின் நன்மைக்காகப் பலியிட விரும்புகிறேன். இதனால் உங்கள் தரித்திரமும் ஒழியும். ஆகவே அதற்கு எனக்கு அனுமதியளிக்கவேண்டும். இவ்விதம் செய்தால் பொன்னும் மணியும் கொண்டு என்னைப்போல் செய்யப்பட்ட உருவத்தையும், நூறு கிராமங்களையும் அரசன் எனக்குத் தானம் அளிப்பான். அவைகளைப் பெற்று நான் உங்களுக்கு அளித்து விடுவேன்.

அதனால் உங்கள் தரித்திரமும் நீங்கிவிடும். இன்னும் அநேக பிள்ளைகளைப் பெற்றுக்கொள்ளலாம்!"

இதைக் கேட்ட அவன் தாய் தந்தையர்கள் திடுக்கிட்டனர். "குழந்தாய், என்ன சொல்கிறாய்? உனக்குச் சங்கா (காற்று) தோஷம் ஏற்பட்டிருக்கிறதா? அல்லது கிரகச்சாரம் பிடித்திருக்கிறதா? இந்த இரண்டில் ஒன்று இல்லாவிட்டால் நீ இப்படி விபரீதமாகப் பேசமாட்டாய். பணத்தை உத்தேசித்து குழந்தைகளைப் பலியிட யாருக்குத்தான் மனம் வரும்? எந்தக் குழந்தைதான் தன் உடலைத் தியாகம் செய்யும்?" என்று கேட்டனர்.

"நான் சித்த ஸ்வாதீனமற்று பேசவில்லை. ஸ்வாதீன புத்தியுடன் தான் பேசுகிறேன். இதைக் கேளுங்கள். பிறப்பிலேயே இந்த உடலுக்குத் துக்கம் ஏற்பட்டுவிடுகிறது. சொல்லமுடியாத அசுத்தங்களைத் தாங்கி நிற்கிறது. என்றைக்காவது ஒருநாள் அழிந்து போக வேண்டியதே. ஆகவே அநித்தியமான இந்த உடலைக் கொண்டு சம்பாதிக்கும் புண்ணியத்தையே நிரந்தர வஸ்துவாகப் பெரியோர் கருதுகின்றனர். உலகத்து மக்கள் எல்லோருக்கும் பயன்படக் கூடியதைத் தவிர வேறு என்ன புண்ணியம் கிடைத்துவிடும்? என் தாய் தந்தையர்களைப் போற்றாவிட்டால் இந்த உடலால் என்ன பயன்?" என்று குமாரன் தன் பெற்றோர்களுக்கு விஷயத்தைச் சொன்னான். கடைசியில் அவர்கள் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகி ஒழுக அழுதுகொண்டே, அவன் விருப்பத்திற்குச் சம்மதித்தார்கள். உடனே அவன் ஸ்வர்ணப்பிரதிமையையும், நூறு கிராமங்களையும் பெற்று அவைகளைத் தன் தாய் தந்தையர்களிடம் ஒப்படைத்தான். பிறகு தன் பெற்றோர்களுடனும் ராஜசேவகர்களுடனும் வெகு சீக்கிரமாகச் சித்திரகூடத்தில் உள்ள அரசனை அடைந்தான். கலங்காத நெஞ்சுடன் ஒரு சஞ்சீவி போல ஜொலித்துக் கொண்டுவந்த அந்த இளைஞனைக் கண்டு அரசன் உவகை பூத்தான். உடனே அவனுக்கு அஞ்சனம் இட்டு, மாலை சூட்டி அலங்கரித்து, யானைமீது ஏற்றி பெற்றோர்களுடன் அவனை பிரம்ம ராக்ஷஸனின் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கே ராஜபுரோகிதர் அரச மரத்தடியில் சக்கரம் வரைந்து விதிப்படி கர்மாக்களைச் செய்து ஓமம் வளர்த்தார். ஜ்வாலாமுகன் என்ற பிரம்ம ராக்ஷஸனும் வேதம் ஓதிக்கொண்டு கடகடவென்று சிரித்தபடி வந்து சேர்ந்தான். அவன் தோற்றம் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. அளவுக்கு மீறி ரத்தபானம் பண்ணியிருந்ததால் வெறி கொண்டு மூச்சுவிட முடியாமல் திணறிக் கொண்டு கொட்டாவி விட்டான். அவன் கண்கள் தீப்பிழம்புபோல ஜொலித்தன.

அவன் உருவத்தால் அந்தப் பிரதேசத்தையே இருள் சூழ்ந்து கொண்டது. அவனைக்கண்ட அரசன் சந்திராவலோகன் தாழ்ந்து வணங்கி "பெரியோய், இன்று ஏழாவது நாள், நான் சொன்னபடியே இதோ நரபலியை கொணர்ந்திருக்கிறேன். மனமிரங்கி இதை ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று பிரார்த்தித்தான். அவ்விதம் அரசன் வேண்டும் பொழுது பிரம்மராக்ஷஸன் அந்தப் பையனைப் பார்த்து நாக்கால் தன் கடைவாய்களை நக்கிக் கொண்டான்.

அதே சமயம் உன்னதப் பிறவி வாய்ந்த அந்தச் சிறுவன் "என் உடலைத் தியாகம் செய்து கிட்டும் புண்ணியத்தால் எனக்கு சுவர்க்க பதவி கிடைக்காமல் போகட்டும். மேலான பதவியும் வேண்டாம். அவற்றால் பிறருக்கு எந்த நன்மையும் உண்டாகாதே! ஒவ்வொரு பிறப்பிலும் என் உடலைப் பிறருக்கு அர்ப்பணிக்கும் பாக்கியம் எனக்குக் கிட்டினால் போதும்" என்று தன் மனதிற்குள்ளாகவே வேண்டிக் கொண்டான். இவ்விதம் அவன் தன் அபிலாஷையைத் தெரிவிக்கும் தருணம் ஆகாயத்திலே தேவர்கள் தோன்றி மலர்மாரி பொழிந்தனர்.

பிறகு அந்தப் பையனை பிரம்ம ராக்ஷஸன் எதிரில் கிடத்தி தாய் கைகளைப் பிடித்துக் கொண்டாள். தகப்பன் கால்களைப் பிடித்துக் கொண்டான். பலி கொடுக்கத் தயாராக அரசன், கத்தியை உருவிக் கொண்டான். அந்தச் சமயம் சிறுவன் உரக்கச் சிரித்தான். அந்தச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு பிரம்ம ராக்ஷஸன் உள்பட எல்லோரும் தங்கள் செயலை மறந்து ஆச்சரியத்தோடு கைகூப்பி அவன் முகத்தை கூர்ந்து நோக்கி வணங்கினார்கள்.

அதிசயமும் ஆச்சரியமும் நிறைந்த இந்தக் கதையை கூறி முடித்த வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து "மகாராஜனே! தன் உயிர் போகப் போகிற அபாயம் சூழ்ந்திருக்கும் அந்தச் சமயத்திலே அந்த சிறுவன் சிரித்த காரணம் என்னவென்பதைச் சொல்ல வேண்டும்!" என்றது.

அதற்கு மகாராஜன் பின்வருமாறு பதில் சொன்னான்: "சிறுவன் சிரித்ததின் பொருள் என்னவென்பதைக் கேள்! எளிய ஜீவன் தனக்கு ஆபத்து நேரிடும்பொழுது பாதுகாப்பு அளித்து உயிரைக் காக்கும்படி தாய் தந்தையரிடம் முறையிட்டுக் கொள்ளும். தாய் தந்தையர் இல்லாவிட்டால் அரசனிடம் முறையிடும். வெந்துயிர் படுகிறவர்களுக்கு அரசன் தானே உதவவேண்டும்? அரசன் உதவி இல்லாவிட்டால் குழந்தை தன் ஸௌபாக்கியத்துக்குப் பொறுப்பு வாய்ந்த இஷ்ட தேவதையை வேண்டிக் கொள்ளும். இப்போது இந்தக் குழந்தை

விஷயத்திலோ அவர்கள் எல்லோரும் பிரசன்னமாகி இருந்தார்கள். அன்றி அவர்கள் நடந்து கொள்ளவேண்டிய முறைக்கு நேர்மாருக நடந்து கொண்டனர். குழந்தையின் பெற்ருேர்கள் பேராசை கொண்டு அவன் கைகால்களைப் பிடித்திருந்தனர். தன் உயிரைக் காப்பாற்றுவதற்காகச் சுயநலம் கொண்டு அவனைக் கொல்ல அரசன் தயாராக இருந்தான். ''அருவருக்கத்தக்க பொருள் நிரம்பியதும் வியாதி வசப்பட்டதுமான இந்த உடலை வளர்ப்பதற்காக இவர்கள் எல்லோரும் இப்படி நெறிதவறி நடக்கிருர்களே? பிரம்மா, இந்திரன், விஷ்ணு, சிவன் ஆகிய தேவர்கள் கூட என்றைக்காவது ஒருநாள் அழிந்துவிட வேண்டுமென்ற நியதி கொண்ட இவ்வுலகில் பூதவுடலைக்கொண்டு நீண்டகாலம் வாழும் ஆசை அவர்களுக்கு எப்படித்தான் ஏற்பட்டதோ?" இவ்விதம் நினைத்துச் சிரித்தான். அந்தச் சிரிப்பில் ஆச்சரியமும், சந்தோஷமும் கலந்திருந்தன. தன் கடமையைச் செய்து முடிப்பதற்கான சந்தோஷமும், மாயத்தோற்றத்தால் மதிமயங்கிப் பிறர் செய்யும் அற்புதக் காரியங்களைக் கண்டு ஆச்சரியமும் அடைந்தான்!"

இந்தப் பதிலைக்கேட்ட வேதாளம் மறுபடி கட்டவிழ்த்துக் கொண்டு முருங்கமரத்தில் தொற்றிக் கொண்டது.

## 22. வாமசிவன் கதை

விக்கிரமாதித்தன் திரும்பிச் சென்று முருங்க மரத்தை அடைந்து மறுபடியும் வேதாளத்தைக் கட்டிப் பிடித்துத் தோள்மீது சுமந்து கொண்டு மௌனமாகக் கிளம்பினுன். அப்போது வேதாளம், "மகாராஜனே! உனக்கு ஏற்படும் அசதியைப் போக்க ஒரு கதை கூறுகிறேன், கேள்!" என்று சொல்ல ஆரம்பித்தது.

கலிங்க தேசத்திலே சோமாவதி என்ற ஒரு பட்டணம் இருக்கிறது. தர்மவான்கள் வசிக்கும் இந்திரப் பட்டணம் போன்றது அது. அவ்விடத்திலே பிரத்தியும்நன் என்ற அரசன் இருந்தான். அவன் வீரம், சக்தி எல்லாம் அடைந்திருந்தான்.

அந்த நகரத்தின் ஒரு பகுதி யஜ்ஞஸ்தலம் என்று பிரம்ம தேயமாக விடப்பட்டிருந்தது. அதிலே அந்தணர்கள் பலர் குடியேறி இருந்தார்கள். அவர்களுள் யஜ்ஞசோமன் என்று ஒருவன் இருந்தான். அவன் வேதங்களை நன்ருக ஓதியவன். பொருட் செல்வமும் பெற்றிருந்தான். அவன் மனைவியும்



அவனுக்குச் சகலவிதங்களிலும் ஏற்றவள். யௌவனம் நீங்கிய பிறகு, நூறு நோன்பு இருந்து அவனுக்கு ஓர் குழந்தை பிறந்தது. அவனுக்குத் தேவ சோமன் என்று பெயரிட்டனர். நல்ல அறிவாளியாக இருந்த பையன் பிற்காலத்தில் பேரும் புகழும் பெற்று அறிஞனாகவே விளங்குவான் என்று யாவரும் நினைத்தனர். பதினாறு வயதுக் குள் அவன் தன் அறிவாலும், பவ்யத்தாலும் எல்லோரையும் மனங்குளிரச் செய்தான். அவ னுடைய பதினாறாவது வயதில் ஒரு நாள் திடீரென்று அவன் ஜுரத்தில் படுத்து இறந்து போனான்.

யஜ்ஞசோமனும் அவன் மனைவியும் பிள்ளையின்மீது உள்ள அன்பாலும், வாஞ்சை யாலும் பிணத்தைக் கட்டிக் கொண்டு அழுதார்கள். தகனத்துக்கு அதை எடுத்துப் போக அனுமதிக்காமல் நீண்ட நேரம் தடுத்து வந்தார்கள். பிறகு வயது முதிர்ந்தவர்கள் ஒன்று கூடி அவனைத் தேற்றி புத்தி கூறினார்கள்: "இந்த வாழ்க்கை நீர் மேல் குமிழி போன்ற தென்பது உனக்குத் தெரியாதா? இதற்குமேல் இவ்வுலகத்திலே எத்தனையோ மணிமுடி மன்னர்கள் ஆண்டு வந்தார்களே? அவர்கள் சதுரங்க சேனையுடன் உலக வாழ்க்கையைச் சாசுவத மாக மதித்து சகல சுகபோகங்களுடனும் ஆண்டு வந்தார்களே! அவர்கள் இப்போது எங்கே? கடைசியில் அவர்களுடைய உடலையும் நெருப்பிலிட்டுத்தானே கொளுத்தினார்கள்? அவர்கள் முடிவும் பிடி மண்ணாகத்தானே ஆயிற்று? புத்திசாலியான நீ ஏன் இப்படி பிணத்தைக் கட்டிக் கொண்டு அழுகிறாய்?"

கடைசியாக, மிகுந்த சிரமத்தின்மேல் உற்றார் உறவினர் அவனைப் பிள்ளையின் சடலத்திலிருந்து பிரித்தார்கள். அப்பால் பலர் சூழ்ந்து வர, ஒரே அழுகையும் கூக்குரலும் ஒலிக்கக் கண்ணீர் வடித்துக் கொண்டு அதைச்சுமந்து சுடுகாட்டிற்குக் கிளம்பினார்கள்.

அந்தச் சமயத்திலே அந்தச் சுடுகாட்டில் பாசுபதத் துறவி ஒருவன் வசித்து வந்தான். வயோதிகனான அவனுக்கு மந்திர சித்தி கிட்டியிருந்தது. அங்கே ஒரு குடிசை கட்டி அதில் வாழ்ந்து வந்தான். மூப்பினாலும் ஓயாமல் விரதம் அனுஷ்டித்து வந்ததாலும் அவன் உடல் முழுவதும் அவன் வெண்ணீறு பூசியிருந்தான். சடைமுடி மின்னல் போல மஞ்சளாக மின்னியது. பார்வைக்குச் சிவனைப் போலவே தோன்றினான். தூரத்தில் அழுகையைக் கேட்டதும், அவன் தன்னுடன் இருந்த சிஷ்யனை அழைத்து, "இதுவரையில் கேட்டிராத இப்பெரும் கூச்சல் எப்படி உண்டாகிறது பார்த்து வா" என்று கட்டளையிட்டான்.

அந்தச் சீடன் ஒரு முட்டாள். போக்கிரி! அகம்பாவம் பிடித்தவன்; தவம் செய்து அதனால் கிட்டிய சித்தியிலே பெருமிதம் கொண்டு மமதை பிடித்தவன். அதற்குச் சற்று முன்னதாகக் குரு அவனைக் கோபித்துக் கொண்டதால் மனம் கலங்கி ஆத்திரம் அடைந்திருந்தான். ஆகவே, துறவி இவ்விதம் உத்தரவு போட்டதும், "என் பிக்ஷாவேளை கடந்து போகிறது, என்னால் போக முடியாது. ஆகவே நீங்களே போய் பாருங்கள்" என்று பதில் கூறிவிட்டான். அதைக் கேட்ட துறவி, "அட முட்டாளே! இன்னும் பாதி ஜாமப் பொழுது ஆகவில்லை; அதற்குள் பிக்ஷா வேளை எப்படி வரும்? போய்ப் பார்த்து வா!" என்றான். அதைக் கேட்ட சீடனுக்குக் கோபம் வந்துவிட்டது. "கிழமே! இனி நான் உன் மாணவன் அல்ல; நீயும் என் ஆசாரியன் அல்ல! நான் போகிறேன். நீயே உன் கமண்டலத்தைச் சுமந்து செல்" என்று சொல்லி கமண்டலத்தை அவன் எதிரில் வைத்துவிட்டுப் போய்விட்டான்.

அதன்மீது துறவி தன் குடிசையை விட்டுக் கிளம்பி, தேவசோமனை எரிப்பதற்காகக் கொணர்ந்த இடத்தை அடைந்தான். அவன் உடலைக் கண்ட துறவி உடனே நரைதிரையால் மெலிந்த தன் உடலைத் துறந்து மாயச் சக்தியால் இளைஞன் தேகத்தில் கூடுவிட்டுக் கூடு பாய்வதெனத் தீர்மானித்தான். ஆகவே, அவன் சட்டென்று பக்கத்தில் சென்று உரக்க வாய்விட்டு அழுதான். பிறகு துள்ளிக் குதித்துக் கூத்தாடினான். மறுபடியும் இளமையை அடைய வேண்டுமென்ற ஆசையினால் அவன் தன் உடலை விட்டு மந்திர சக்தியால் தேவ சோமன் தேகத்துக்குள் புகுந்தான். அதனால், சிதையில் வைக்கத் தயாராக இருந்த தேவசோமன் உயிர் பெற்றுக் கொட்டாவி விட்டுக் கொண்டு எழுந்தான்.

அதைக் கண்ட உற்றார் உறவினர், "ஆகா! பிழைத்து விட்டான்; பிழைத்து விட்டான்" என்று ஆனந்தக் கூச்சலிட்டார்கள்.

மகா மந்திரவாதியான அந்தத் துறவி அந்த இளைஞனுடைய உடலை அடைந்ததும் தன் விரதங்களைத் துறக்க விரும்பவில்லை. ஆகவே, பக்கத்தில் இருந்தவர்களிடம், "இப்போது நான் உயிர் துறந்து மறு உலகம் சென்றேன். சிவபெருமானே உயிரை மறுபடியும் அளித்து பாசுபதத் துறவியின் விரதங்களை மேற்கொள்ள வேண்டுமென்று உத்திரவிட்டு இவ்விடம் அனுப்பி வைத்திருக்கிறார். ஆகவே, நான் தனிமையை நாடியடைந்து விரதங்களை அனுஷ்டிக்க வேண்டும். இல்லாவிட்டால் உயிர் வாழ முடியாது. நீங்கள் வீட்டுக்குப் போங்கள். நானும் கிளம்புகிறேன்" என்று தெரிவித்தான். சந்தோஷமும் துக்கமும் கலந்த மனத்தினராக அவர்களை வீட்டுக்குத் திரும்ப அனுப்பி வைத்தான். பிறகு தன் பழைய உடலை ஒரு பள்ளத்தில் தூக்கி எறிந்து விட்டு, இளமை வாய்ந்த சரீரத்துடன் வெளிக் கிளம்பினான் துறவி.

இவ்விதம் நள்ளிரவில் நடு வழியில் கதை சொல்லி முடித்த வேதாளம், விக்கிரமாதித்தனைப் பார்த்து, "மகாராஜனே! கூடுவிட்டுக் கூடு பாயும் போது அந்தத் துறவி முதலில் எதற்காக அழுதான்? பிறகு எதற்காகச் சிரித்துக் கூத்தாடினான்?" என்று கேட்டது.

அதற்கு மகாராஜன் பின்வருமாறு பதில் சொன்னான்: "அந்தத் துறவிக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளைக் கூறுகிறேன் கேள்! தன்னுடைய நெடுநாளையக் கிழட்டுச் சரீரத்தை திரஸ்கரிக்க வேண்டி வந்ததே என்ற வருத்தம் அவனைப் பற்றிக் கொண்டது. அவன் அந்தச் சரீரத்துடன் தான் நீண்ட காலம் வாழ்ந்து வந்தவன். குழந்தைப் பருவத்தில் அவனுடைய தாய் தந்தையர் தாலாட்டிச் சீராட்டி வளர்த்தது அதையேதான். அவன் தவம் புரிந்து மந்திர சித்தி பெற்றதும் அந்தச் சரீரத்துடன் தான். நெடுநாளைய பழக்கத்தால் அதன்மீது அவனுக்கு ஒரு பாசம் ஏற்பட்டது. ஆகவேதான் அவன் அழுதான்; ஆயினும் புதிய சரீரம் ஒன்றையடையப் போவதால் சந்தோஷமும் உண்டாயிற்று. இளமை வாய்ந்த அதைக் கொண்டு இன்னும் அதிகமான மந்திர சக்திகளை அடைய முடியும் அன்றோ? இளமைப் பருவம் யாருக்குத்தான் ஆனந்தத்தைக் கொடுக்காது? அதனாலே அவன் குதித்துக் கூத்தாடினான்."

இந்தப் பதிலைக் கேட்டதும் மறுபடியும் வேதாளம் கட்டவிழ்த்துக் கொண்டு சென்று முருங்க மரத்தில் தொற்றிக் கொண்டது.



## 23. (I) அவசத்திகாள் கதை

சேரபுரம் என்னும் பட்டணத்திலே நக்ஷத்திரராசன் என்பவன் ஒருநாள் வீதி மார்க்கம் போகிறபோது, அவசத்திகாள் என்ற பெண்ணைக் கண்டு மோகித்தான். அவளை அழைத்துக் கொண்டு அவன் பட்டணம் போகிறபோது, வழியிலே கள்ளர் வளைத்துக் கொண்டார்கள். அவர்களையும் ஜெயித்துக் கொண்டு பட்டணத்திலிருக்கும் ஒரு பாழுங் கோயிலை அடைந்தான். அங்கே சமையல் செய்து சாப்பிடுவதற்காகச் சாமான்கள் வாங்கி வருவதற்காக அவளைவிட்டு விட்டுக் கடைத் தெருவுக்குச் சென்றான். அங்கே ஒரு தாசி அவனைக் கண்டு மகா அன்போடு அழைத்துச் சென்று தன்னுடைய எஜமானியான தாசியின் முன்விட்டாள். அவள் அவனைக் கண்டு மோகித்துத் தன்னிடத்திலே வைத்துக் கொண்டாள்.

சாமான் வாங்கிவரச் சென்ற அரசன் திரும்பி வரவில்லையே என்று விசனமாக அவசத்திகாள் உட்கார்ந்திருக்கையில் ஒரு வைசியன் அவளைக் கண்டு மோகித்து, அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான். அவளும் அவனும் சந்தோஷமாக இருக்கும்போது அவ்வழியே ஒரு எலி ஓடியதைக் கண்டு, அதைப் பிடித்து அடித்துக் கொன்று போட்டான். பிறகு தன் பிரதாபத்தை மெச்சி அதிகம் பிரதிக்ஞைகளையும் வீம்புகளையும் சொன்னான். "நீ எலியைக் கொன்றதற்கு இத்தனை வல்லபங்கள் பேசுகிறாய்; முன்னம் என்னை அழைத்த ராஜன் கள்ளரை வென்றபோது இப்படிப் பேசியதில்லை" என்று மனதில் நினைத்த அவசத்திகாள், "இவன் துஷ்டன். இனி நாம் இவனிடம் இருக்கலாகாது" என்று எண்ணி ஜீவனை விட்டாள்.

அதைக் கண்டு பயந்த வைசியன், அரசன் வந்து கேட்டால் என்ன சொல்வதென்று தெரியாமல், தன்னுடைய ஆஸ்தியையெல்லாம் தர்மம் செய்து, தானும் ஜீவனை விட்டான். பின்பு அவளை நினைத்துத் தேடிவந்த அரசன் பாழுங் கோயிலிலே அவசத்திகாளைக் காணமல் விசனமுற்று உயிரை

விட்டான். தாசியும் உயிர் நீத்தாள். இதையெல்லாம் அந்தத் தாதி கேட்டு, "நம்மாலேயல்லவோ மரித்தார்கள்" என்று அவளும் உயிரை விட்டாள்.

"இந்த நான்கு பேருக்குள் யார் செயல் பெரியது?" என்று வேதாளம் கேட்க, விக்கிரமன், "அவர்கள் மோகத்தினால் மடிந்தார்கள். தாதி மடிந்த செயலே பெரிது!" என்று சொல்லக் கட்டவிழ்த்துக் கொண்டு பழையபடி முருங்க மரத்தை அடைந்தது.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பின்வரும் கதை காணப்படுகிறது.)

## 23. (II) திருடன் மகன் கதை



விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்திலிருந்து வேதாளத்தைக் கட்டிப் பிடித்துத் தோள்மீது சுமந்து கொண்டு கிளம்பினான். திரும்பி வரும்போது வேதாளம், "மகாராஜனே! நான் ரம்மிய மான கதை ஒன்று சொல்லுகிறேன், கேள்" என்று ஆரம்பித்தது.

வக்ரலோகம் என்ற நகரம் ஒன்று இருந்தது. அந்நகரத்தில் சூர்யப்பிரபன் என்னும் அரசன் இருந்தான். அவனுக்கு எல்லா செல்வங்களும் வாய்த்திருந்தும் ஒரே ஒரு குறை மட்டும் இருந்தது. தேவியர் பலர் வாய்த்திருந்தும் அவனுக்குப் புத்திரன் பிறக்கவில்லை.

அந்தக் காலத்தில் தாம்ரலிப்தி என்னும் பெரிய பட்டணத்தில் தனபாலன் என்ற வியாபாரி ஒருவன் இருந்தான். அவன் செல்வச் சீமான். அவனுக்குத் தனவதி என்ற ஒரே பெண். அவள் யுக்த வயதை அடைந்தபோது, வியாபாரி இறந்துவிட்டான். உறவினர்கள் அவன் சொத்தை அபகரித்துக் கொண்டார்கள். அந்த நாட்டரசன் அதைத் தடுக்க ஏதும் செய்யவில்லை.

புருஷன் பங்காளிகளிடமிருந்து தப்புவதற்காக வியாபாரியின் மனைவி ஹிரண்யவதி தன் நகை நட்டுகளுடன் பெண் தனவதியையும் அழைத்துக் கொண்டு ஒரு நாளிரவு முன் ஜாமத்திலேயே புறப்பட்டு விட்டாள். மிகுந்த பிரயாசையுடன் மகள் கையைப் பிடித்துக் கொண்டு நகர் புறத்தை அடைந்தாள். அவள் உள்ளத்தைப் போலவே வெளியிலும் இருள் சூழ்ந்திருந்தது.

அத்தகைய இருட்டிலே அவள் நகர் புறத்தே வழி நடந்து செல்லும் போது, விதிவசத்தால் அவளது தோள் அங்கே கழுவேற்றப்பட்டிருந்த ஒரு திருடன்மீது உராய்ந்தது. கழுவேற்றப்பட்டிருந்தாலும் அவன் உயிர் போகவில்லை. அவள் தோள் இடித்ததினால் ஏற்பட்ட வலி பொறுக்கமாட்டாமல் அவன் துடித்து அலறினான்.

வியாபாரியின் மனைவி அவனைப் பார்த்து "நீ யார்?" என்று கேட்டாள். "நான் ஒரு திருடன். என்னைக் கண்டுபிடித்து இங்கே கழுவேற்றியிருக்கிறார்கள். ஆயினும் ஜீவன் இன்னும் என் உடலைவிட்டுப் பிரியவில்லை. அதுவும் என் பாவத்தின் பலனே போலும்." என்று சொல்லிய திருடன் தொடர்ந்து கேட்டான். "அம்மணி, நீங்கள் யார்? இவ்விதம் எங்கே போகிறீர்கள்?" உடனே ஹிரண்யவதியும் அவனிடம் தன் கதையைச் சொன்னாள். அந்தச் சமயம் பொழுது நன்றாக விடிந்தது.

பொழுது நன்றாக விடிந்து விடவே வியாபாரியின் மனைவியான ஹிரண்யவதியைப் பார்த்து திருடன் "என் வேண்டுகோளுக்கு செவி சாய்க்க வேண்டும். நான் உங்களுக்கு ஆயிரம் பொன் தருகிறேன். தங்கள் மகளான இந்தக் கன்னிப் பெண்ணை எனக்கு மனைவியாக அளியுங்கள்'' என்று வேண்டினான். அதைக் கேட்ட அவள் நகைத்து "அவளிடம் உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினாள்.

அப்போது திருடன் பின்வருமாறு பதில் சொன்னான். "நான் இறந்தால், எனக்குப் பிள்ளையில்லாததால் ஸ்வர்க்கப் பிராப்தி இல்லை. என் கோரிக்கைக்கு இணங்கினால் என் உத்திரவுப்படி யார் மூலமாக அவள் பிள்ளையைப் பெற்றாலும் அவன் என் புத்திரனே. அவன் என்னைக் கரையேற்றுவான்."

இதைக் கேட்ட ஹிரண்யவதி பணத்தாசைக் கொண்டு அதற்குச் சம்மதித்தாள். உடனே அவள் எங்கிருந்தோ கொஞ்சம் தண்ணீர் கொணர்ந்து, திருடன் கையில் தாரை வார்த்து, "என் மகளான தனவதியை உனக்கு மணம் செய்து கொடுக்கிறேன்" என்றாள்.

திருடனும் தான் முன் சொன்னபடியே அவள் குமரிக்குப் புத்திரன் பெற்றுக் கொள்ள அனுமதி கொடுத்து விட்டு, "இந்த மரத்தடியில் தோண்டிப் பார்த்துக் கிடைக்கும் பொருளைக் கொண்டு என் உடலைக் கிரமப்படி தகனம் செய்து, அஸ்தியை புண்ணிய தீர்த்தம் எதிலாவது சேர்த்து விடுங்கள். வக்ரலோகம் என்ற நகரத்து அரசன் சூர்யப்பிரபன் நீதி வழுவாமல் ஆட்சி புரிகிறான். அங்கு சென்றால் நீங்கள் விசாரமற்று இருக்கலாம்"

என்று தெரிவித்தான். இதைச் சொல்லி முடித்தவுடன் தாகமாக இருக்கிறதென்று தண்ணீர் கேட்டான். அவளும் கொடுத்தாள். அதைக் குடித்தவுடன் திருடனின் உயிர் நீங்கியது.

ஆலமரத்தடியில் தோண்டி எடுத்த பொன்னை எடுத்துக் கொண்டு ஹிரண்யவதி அவன் உடலைத் தகனம் செய்து அஸ்தியைப் புண்ணிய தீர்த்தத்தில் சேர்த்தாள். மறு நாளே அவள் மகளை அழைத்துக் கொண்டு வக்ர லோக நகரத்தை அடைந்தாள். அங்கே வசுதத்தன் என்னும் வியாபாரியின் வீட்டை விலைக்கு வாங்கி அதிலே தன் மகள் தனவதியுடன் வாழ்ந்து வந்தாள்.

அவ்வூரிலே விஷ்ணுஸ்வாமி என்ற ஆசாரியரிடம் மனஸ்வாமி என்னும் ஓர் இளைஞன் படித்து வந்தான். பேரழகு வாய்ந்த அவன் உயர் குடியில் பிறந்து நன்றாகப் படித்தாலும் ஹம்ஸவல்லி என்னும் பரத்தையின் மீது அவனுக்கு மோகம் ஏற்பட்டது. அவள் தன்னையடைய விரும்புவாரிடம் ஐந்நூறு பொன் கூலி பெற்று வந்தாள். அவனிடம் அவ்வளவு பவுன் இல்லை. சதா மனங்கலங்கி வாடி வந்தான்.

ஒருநாள் வியாபாரியின் மகளான தனவதி தன் மாளிகையின் உப்பரிகையில் நின்று பார்த்தபோது அழகான அந்த இளைஞன் கவலை தோய்ந்த முகத்தோடு இருப்பதைக் கண்டாள். அவன் அழகைக் கண்டு மயங்கி மோகம் கொண்டாள். தன் கணவனை திருடன் கொடுத்துப்போன உத்தரவு நினைவு வந்தது. உடனே பக்கத்திலிருந்த தன் தாயிடம் தந்திரமாக, "அம்மா! அதோ இருக்கும் இளைஞனைப் பார். அவன் அழகும் இளமையும் பார்க்க என்ன ஆனந்தமாக இருக்கின்றன!" என்று கேட்டாள். இதைக் கேட்ட தாய்க்குத் தன் மகள் அந்த இளைஞன் மீது காதல் கொண்டு விட்டாள் என்ற விஷயம் விளங்கியது. "அவள் கணவன் ஆணைப்படி என்றைக்காவது ஒரு நாள் அவள் கட்டாயம் ஒரு மகனைப் பெற்றெடுக்க வேண்டும்" என்று தனக்குத் தானே யோசித்தாள். உடனே அவள் தனக்கு அந்தரங்கமான வேலைக்காரி ஒருத்தியிடம் விஷயத்தைத் தெரிவித்து அந்த இளைஞனை அழைத்துவரச் செய்தாள்.

ஆனால் மனஸ்வாமியோ "ஹம்ஸவல்லிக்குக் கொடுக்க வேண்டிய ஐந்நூறு பொன்னையும் அவர்கள் கொடுத்தால் நான் அவ்விடம் ஒரு நாள் வருவேன்" என்று தீர்மானமாகச் சொல்லி விட்டான். வியாபாரியின் மனைவியும் அதற்கு ஒப்புக் கொண்டாள். பணத்தை வாங்கிக் கொண்ட மனஸ்வாமி அவளுடன் சென்று அந்த வீட்டில் இரவு இருந்து, மறு நாள் விடியற்காலையில் இரகசியமாக வெளிக் கிளம்பிப் போய் விட்டான்.

தனவதி கருவுற்றாள். காலக் கிரமத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை மங்களக் குறிகளைத் தாங்கிப் பார்க்க அழகாக இருந்தது. அன்றிரவு சிவபெருமான் அவள் கனவில் தோன்றி "தொட்டிலில் கிடக்கும் அந்தக் குழந்தையைத் தொட்டிலோடு விடியற்காலை எடுத்துச் சென்று சூர்யப்பிரப அரசனுடைய அரண்மனை ஆசாரவாசலில் ஆயிரம் பொன்னுடன் வைத்து விடுங்கள்" என்று தெரிவித்து மறைந்தார்.

சிவபெருமான் ஆணைப்படி தாயும் மகளும், குழந்தையையும் பொன்னையும் எடுத்துச் சென்று அரண்மனை வாசலில் விட்டு வீடு திரும்பினார்கள்.

இதற்கிடையில், தனக்குப் பிள்ளை பிறக்கவில்லையே என்ற ஏக்கமும் கவலையும் கொண்டு வாடி வந்த அரசன் கனவிலே சிவபெருமான் தோன்றி "அரசே! எழுந்திரு. அரண்மனை வாசலில் ஒரு குழந்தையையும், கொஞ்சம் பொன்னையும் யாரோ கொணர்ந்து வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். தொட்டிலில் கிடக்கும் குழந்தையை நீ எடுத்துக் கொள்." என்று தெரிவித்தார். அதே சமயம் வாயிற்காப்போர் ஓடிவந்து அரசரிடம் விஷயத்தைத் தெரிவித்தனர். அரசனும் நேரில் அரண்மனை வாயிலை அடைந்து, குழந்தையையும் பொன்னையும் கண்டான். "நமக்கு ஏற்ற குழந்தையைத்தான் சிவபெருமான் அருளி யிருக்கிறார்" என்று நினைத்து அவன் குழந்தையை கையில் எடுத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான்.

நாளாக ஆக ராஜகுமாரன் சந்திரப்பிரபன் உருவத்திலும், குணத்திலும் சிறந்து விளங்கி பெற்றோர் மனதைக் களிப்பித்தான். யுக்த பருவத்தை அடைந்து, தன் வீரத்தாலும், உதார குணத்தாலும், வித்தையாலும், இதர சிறப்பாலும் மக்களின் அன்பைப் பெற்று நாட்டை ஆளும் திறமை பெற்றான். இதை உணர்ந்து அவன் தந்தையும் அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து விட்டு, முதுமையால் வாரணாசிக்குச் சென்றான். மகன் நாட்டை நன்றாக ஆண்டு வந்தான், என்பதைக் கேட்டு மனம் திருப்தியடைந்து சூர்யப்பிரபன் கடுந்தவம் செய்து வாரணாசியில் பூத உடலை நீத்தான்.

பக்தி மிகுந்த சந்திரப்பிரபன் தந்தையின் மரணச் செய்தியைக் கேட்டு மிகவும் கலங்கிப் புலம்பினான். அப்பால் அவருக்குச் செய்ய வேண்டிய கருமங்களைச் செய்தான். பிறகு, மந்திரிகளைப் பார்த்து, "என் தந்தையிடம் பட்ட கடனை எப்படி தீர்க்கப் போகிறேன்? எனினும், என் கையாலே அவருக்கு ஒன்று செய்வேன். அவருடைய அஸ்திகளைக் கங்கையில் சேர்த்து, கயையில் பிதிர்களுக்குப் பிண்டம் போட்டு கீழ்க் கடல் வரையில்

உள்ள புண்ணிய தீர்த்தங்கள் ஆடி வருவேன்" என்றான். ஆனால் மந்திரிகளோ, "அரசே! ராஜாக்கள் இவ்விதம் செய்யக் கூடாது. ராஜாங்கத்தில் எத்தனையோ பாகங்கள் சன்னமாக இருக்கும். அவற்றைத் தாங்கி நின்றாலொழிய அரசாங்கம் நடைபெறாது. ஆகவே தங்கள் கடமையான ராஜாங்கத்தை நடத்துவதைத் தவிர வேறு க்ஷேத்திராடனம் எதற்கு?" என்று கூறி அரசனை தடுக்க முயன்றார்கள்.

மந்திரிகள் இவ்விதம் சொன்னதைக் கேட்ட அரசன், "சந்தேகத்தையும் தயக்கத்தையும் உதறித் தள்ளுங்கள்; தந்தைக்காக இந்தப் பணி கட்டாயம் நான் செய்தாக வேண்டும். இளமையால் உடல் வலிமை பெற்றிருக்கும் போதே புண்ணிய தீர்த்தங்கள் ஆடிவிடவேண்டும். அநித்தியமான இந்த உடலுக்கு எப்போது என்ன நடக்குமோ? நான் திரும்பி வருகிற வரையில் ராஜ்யத்தை நீங்கள் பாதுகாக்க வேண்டும்" என்று தீர்மானமாகச் சொல்லி விட்டான்.

ஒரு நல்ல நாளில், அரசன் ஸ்நானம் செய்து விதிப்படி பூஜை முதலியன முடித்து துறவியின் உடையை உடுத்து தேரிலேறி யாத்திரை கிளம்பினான்.

வழியிலே பல்வேறு பாஷைகளையும், பல்வகையான ஆடைகளையும், கண்டும் கேட்டும், பற்பலவிதமான பழக்க வழக்கங்களையறிந்தும் பயணத்தை நன்கு ரசித்துப் பொழுது போக்கினான் அரசன். இவ்விதம் அனேக நாடுகளைக் கடந்து, கடைசியாகக் கங்கையை அடைந்தான். அதில் ஸ்நானம் செய்து விதிப்படி தூரியப்பிரபன் அஸ்திகளை அந்நதியில் சேர்த்து தானங்களை அளித்து சிரார்த்தத்தைச் செய்து விட்டுப் புறப்பட்டு பிரயாகையை அடைந்தான். அங்கு பட்டினிக் கிடந்து பக்தியுடன் எல்லா கர்மாக்களையும் கிரமப்படி செய்து முடித்தான்.

அங்கிருந்து புறப்பட்டுக் காசியை அடைந்து, சிவபெருமானை வழிப்பட்டுக் கயையை அடைந்தான். அங்கே பலவகையான சிரார்த்தம் செய்து கடைசியாக தன் தந்தைக்குப் பிண்டம் இட்டான். அப்போது குண்டத்திலிருந்து அந்தப் பிண்டத்தை வாங்க மூன்று கைகள் தோன்றின. இதைக் கண்ட அரசன் பிரமித்து, "இது என்ன? பிண்டத்தை நான் எந்தக் கையில் போடுவது?" என்று பிராமணர்களைக் கேட்டான். அவர்களும் திகைத்து, "அரசே ஒரு கையில் கன்னக் கோல் இருக்கிறது. ஆகவே அது ஒரு திருடனுடையதாகத்தான் இருக்க வேண்டும். மற்றொரு கையில் யாகத்தின் போது நெருப்பில் நெய்யை ஊற்ற உபயோகப்படும் சருகு இருக்கிறது. அது ஒரு பிராமணனுடையது. மூன்றாவது கையிலோ மோதிரம் இருக்கிறது. மங்களக் குறிகளும்

காணப்படுகின்றன. ஆகவே, அது ஓர் அரசனுடையதாகவே இருத்தல் வேண்டும். இந்த மூன்று பேர்கள் யார்? இவர்களுடைய கைகள் இங்கே தோன்றுவானேன்? எங்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆகவே யார் கையில் பிண்டத்தை இடவேண்டுமென்பது எங்களுக்குத் தெரியவில்லை," என்று சொல்லி விட்டார்கள். அவர்கள் இவ்விதம் சொன்னவுடன் அரசனும் எந்தவிதமான முடிவிற்கும் வர முடியவில்லை.

இந்தக் கதையை வேதாளம் கூறி முடித்ததும் விக்கிரமாதித்தனை நோக்கி, "மகாராஜனே! யாருடைய கையில் அந்தப் பிண்டம் சேரவேண்டும்?" என்றது.

வேதாளம் இப்படிக் கேட்டவுடனே தர்மத்தை நன்றாக அறிந்த விக்கிரமாதித்தன் தன் மௌனத்தைக் கலைத்து பின்வருமாறு பதிலளித்தான்:

"சந்திரப்பிரப மன்னன் பிண்டத்தைத் திருடன் கையில் இட்டிருக்க வேண்டும். அவன் திருடனுடைய பிள்ளையே. அவன் பிராமணனுக்குப் பிறந்தது உண்மையாயினும், ஓர் இரவுக்காகப் பணம் பெற்றுக் கொண்டு பிராமணன் தன்னை விற்றுக் கொண்டபடியால், அவனுக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை. சூர்யப்பிரப அரசனும் குழந்தையை எடுத்து வளர்த்து அவனுக்கு உபநயனம் முதலியன செய்வித்து தந்தை போலவே விளங்கினார். ஆயினும், அவர் தொட்டிலிலே கிடந்த குழந்தையுடன் பணத்தையும் பெற்றுக் கொண்டார். குழந்தையை வளர்த்ததற்குக் கூலியாகவே அந்தப் பணத்தைக் கொள்ள வேண்டும். அதனால் அரசருக்கும் உரிமையில்லை. இதனால் சந்திரப்பிரபன் திருடனுடைய பிள்ளையே. திருடனுடைய மனைவியை அவள் தாயார் கையில் தாரை வார்த்து அளித்திருந்தாள். திருடன் அளித்த அனுமதியின் பேரிலேதான் இந்தக் குழந்தை பிறந்தது அன்றி, அதன் வளர்ப்பிற்கும் திருடன் பணமே உதவியது. ஆகவே பிண்டத்தை திருடன் கையிலேதான் இடவேண்டும். இதுதான் என் அபிப்பிராயம்."

இந்தப் பதிலைக் கேட்டதும் வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக் கொண்டு முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.

## 24. முறை தெரியாத கதை

அஞ்சா நெஞ்சு படைத்த விக்கிரமாதித்தன் மறுபடியும் முருங்க மரத்தை அடைந்தான். இருள் சூழ்ந்த அந்த நள்ளிரவிலே மயானத்தில் சிதை எரிவது, கருநிறம் கொண்ட



ராக்ஷஸியின் சிவந்த கண்களிலிருந்து எழுந்த ஜ்வாலை போலத் தோற்றம் அளித்தது. இரவின் கோரத்தை மன்னன் பொருட்படுத்தவில்லை. வேதாளத்தை மறுபடியும் பிடிப் பிடித்துத் தோள்மீது சுமந்து கொண்டு முன் போலவே கிளம்பினான். பழையபடியே வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "மகாராஜனே! இந்த முன்னேட்டம் பின்னேட்டம் உனக்குச் சலிப்பைக் கொடுக்காவிட்டாலும் எனக்கு அலுத்து விட்டது. ஆகவே கஷ்டமான கேள்வி ஒன்றைக் கடைசியாகக் கேட்கிறேன். இந்தக் கதையைக் கவனமாகக் கேள்!" என்று சொல்ல ஆரம்பித்தது.

தக்ஷிணத்திலே ஏதோ ஒரு சிறு ராஜ்ஜியத்தில் தருமன் என்ற பெயர் படைத்த ராஜன் ஒருவன் இருந்தான். தர்ம நெறியில் வாழ்பவர்களுக்கெல்லாம் அவன் தலை சிறந்தவன். அவனுக்கு ஏராளமான உறவினர் இருந்தார்கள். அவர்கள் அவனிடமிருந்து நாட்டைக் கைப்பற்றிவிட ஆவல் கொண்டிருந்தனர். அவ்வரசனுடைய மனைவிக்குச் சந்திராவதி என்று பெயர். அவள் மாளவ தேசத்தைச் சேர்ந்தவள். நல்ல உயர்குடி பிறந்தவள். கற்பில் சிறந்தவள். அவர்களுக்கு லாவண்யவதி என்ற பெண் குழந்தை பிறந்தது.

அந்தப் பெண்ணுக்கு யுக்த வயது வந்தவுடன், தர்மராஜனுடைய உறவினர்கள் ஒன்று சேர்ந்து அவனைச் சிங்காதனத்திலிருந்து விரட்டிவிட்டு, நாட்டைத் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர். அதனால் அரசன் இரவோடு இரவாக ஏராளமான நகைகள், விலையுயர்ந்த பொருள்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு, மனைவி, குமரி ஆகிய இருவருடன் வெளிக்கிளம்பினான். மாமனார் வசித்து வந்த மாளவ தேசத்திற்குக் கிளம்பிய அரசன் அன்றைய இரவு மனைவியுடனும், குமரியுடனும் விந்திய மலை ஆரண்யத்தை அடைந்தான். இரவுப் பொழுது முடிந்து பகலும் வந்தது. திருடர்கள் நிறைந்த அந்தக் காட்டில் அவர்கள் நுழையவே வேண்டாமென்று தடுப்பது போன்றிருந்தது சூரியோதயம். அவன் காட்டிலே வழி நடந்து செல்லும் போது கூரிய நாணல் கீறி அவன் பாதமெல்லாம் புண்ணாகிவிட்டது. கடைசியாக பில்லர்களுடைய கிராமம் ஒன்றை அடைந்தான். அங்கே அயலாரைத் தாக்கி கொலை கொள்ளை ஆகியவற்றை

நிகழ்த்தும் கொடூர மனிதர்கள் நிரம்பியிருந்தார்கள். யமபுரத்தைக் கண்டு ஒதுங்குவதுபோல அவ்விடத்தை யாரும் அணுகமாட்டார்கள்.

அரச ஆடை ஆபரணங்களைத் தரித்து மன்னவன் வருவதைக் கண்டவுடன் அநேக சவரர்கள் பலவகையான ஆயுதங்களை எடுத்துக் கொண்டு அரசனைக் கொள்ளையடிக்க ஓடிவந்தனர். அதைக் கண்ட அரசன் தன் மனைவியையும், பெண்ணையும் பார்த்து, "அந்தக் கிராதகர்கள் முதலில் உங்களையே கைப் பற்றுவார்கள். ஆகவே, இந்த வழியே நடுக்காட்டிற்குள் புகுந்து விடுங்கள்" என்று சொன்னான். உடனே மனையாள் சந்திரவதியும், ராஜகுமாரியான லாவண்யவதியும் பயத்தால் நடுங்கி நடுக்காட்டுக்கு ஓடிவிட்டனர். சவரர்கள் அம்பெய்து கொண்டே அரசனை நெருங்கினார்கள். ஆயினும் அரசன் தன் கத்தியையும், கேடயத்தையும் கொண்டு ஏராளமான கிராதகர்களைக் கொன்று விட்டான். அதன்மேல் கிராதகனின் தலைவன் கிராமத்திலிருந்த அனைவரையும் ஒன்று திரட்டி அரசனைத் தாக்கினான்.

தனித்து நின்ற அரசனை கூட்டமாகச் சேர்ந்து தாக்கிய அவர்கள் வெகு சீக்கிரம் வெற்றி கொண்டார்கள். தர்ம ராஜனின் கேடயத்தைச் சுக்கல் சுக்கலாக உடைத்து அவனையும் கொன்று விட்டார்கள். அப்பால் அவனிடமிருந்த ஆபரணங்களை எடுத்துக் கொண்டு மறைந்தார்கள்.

காட்டுப் புதர் ஒன்றில் மறைந்திருந்து நடந்தது முழுவதையும் கவனித்து வந்த சந்திராவதி, தூரத்திலிருந்தே தன் கணவன் கொலையுண்டதைத் தன் கண்களாலே கண்டாள். அதற்குமேல் அவள் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்து தன் பருவக் குமாரியுடன் நீண்டதூரம் ஓடி அடர்ந்த காட்டை அடைந்தாள். அப்போது உச்சிப் பொழுதாகிவிட்டது. அங்கே நடுக்காட்டிலே தாமரை குளக்கரையிலே ஓர் அசோக மரத்தடியில் தளர்ச்சியும் துக்கமும் மேலிட அவள் தன் மகளுடன் உட்கார்ந்து அழுது கண்ணீர் உகுத்தாள்.

இதற்கிடையில் பக்கத்து நாட்டைச் சேர்ந்த அரசனான சண்ட சிம்மன் என்பவன் காட்டிலே வேட்டையாடத் தன் புத்திரனுடன் குதிரையேறி வந்திருந்தான். அங்கே மண்ணில் பெண்கள் இருவரின் காலடிச் சுவடுகள் பதிந்திருப்பதைக் கண்ட மன்னன் தன் மகன் சிம்ஹபராக்கிரமனிடம், "மங்கலக் குறிகளைக் கொண்டதும் அழகியதுமான இந்தக் காலடி சுவட்டைப் பின்பற்றிப் போய் பார்ப்போம். இந்தச் சுவடைவிட்டுச் சென்ற பெண்மணிகளை நாம் காண்போமானால் உனக்கு விருப்பமானவளை நீ தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்" என்று சொன்னான்.

தந்தை இவ்விதம் சொன்னவுடன் மகன் "சிறிய காலடி வடுகளுக்குரியவளை நான் மனைவியாக அடைய விரும்புகிறேன். அவள் தான் இளமைப் பருவத்தில் இருக்கவேண்டும். எனக்கு ஏற்றவளாக இருப்பாள். பெரிய காலடியை உடையவள் வயதானவளாக இருக்கவேண்டும். அவள் உங்களுக்கு ஏற்றவளாக இருப்பாள்" என்று பதில் அளித்தான்.

மகன் இப்படிப் பேசியதைக் கேட்டு சண்டஸிம்ஹன், "இது என்ன இம்மாதிரி பேசுகிறாய்? உன் தாயார் இப்போதுதான் வானுலகத்தை அடைந்தாள். அவளைப்போன்ற நல்ல மனைவி ஒருத்தியை விரும்புவேனா?" என்று கேட்டான்.

"அப்பா, இவ்விதம் பேசாதீர்கள், மனைவியில்லாத மனை பூர்ணத்துவம் பெற்றதாகாது. அன்றி "வீட்டிலே நுழையும் புருஷனை அன்புடன் வரவேற்க ஆசை மனைவி இல்லாத இடம் வீடு என்று குறிக்கப்பட்டாலும் விலங்கு அற்ற சிறைக்கூடமே ஆகும்" என்று மூலதேவர் இயற்றிய சுலோகம் உங்களுக்குத் தெரியாதா? ஆகவே இப்போது நான் தேர்ந்தெடுத்த பெண்ணைத் தாங்கள் மனைவியாக ஏற்றுக்கொள்ளாவிட்டால் நான் உங்கள் காலடியிலேயே உயிரை விட்டுவிடுவேன்" என்று தன் தந்தையைப் பார்த்து மகன் தெரிவித்தான்.

இதைக் கேட்ட தந்தையும் மகன் வார்த்தையை ஏற்றுக் கொண்டான். இருவருமாகக் காலடிச் சுவடுகளைப் பின்பற்றி பெண்மணிகள் இருவரையும் அந்தக் காட்டில் தேடிச் சென்றார்கள். அவர்கள் தடாகத்தை நெருங்கிய போதே அதன் கரையில் முத்துமாலையணிந்த ராணி சந்திராவதி அங்கே கரையில் உட்கார்ந்திருக்கக் கண்டார்கள். நண்பகலில் வெள்ளிரவின் தோற்றம் போல இருந்தது அவள் உருவம். பக்கத்திலே ராஜகுமாரியான லாவண்யவதி பூர்ண சந்திரனின் ஒளிபோல நின்று கொண்டிருந்தாள். தந்தையும் மகனும் அவர்களை நெருங்கினார்கள். இதையறிந்த ராணி சந்திராவதி அவர்களைத் திருடர்களென்று நினைத்து அலறிப்புடைத்து எழுந்தாள்.

ஆனால் ராஜகுமாரி தன் தாயைப் பார்த்து, "அம்மா, பயப்படாதே இவர்கள் திருடர்கள் அல்ல. இவர்கள் நன்றாக ஆடை உடுத்தி சாந்த பாவத்துடன் தோன்றுவதைப் பார்த்தால் நல்ல குலத்தில் பிறந்தவர்கள் என்பதும் வேட்டைக்காக வனம் வந்தவர்களென்பதும் தெரிகிறது" என்று கூறினாள். ஆயினும் தாயின் தயக்கம் குறையவில்லை. உடனே சண்டஸிம்ஹ ராஜனும் தன் குதிரையிலிருந்து கீழே இறங்கி அப்பெண்மணிகளைப் பார்த்துக் கூறினான்.

"பயப்பட வேண்டாம், பெண்மணிகளே! அன்பு பூண்டு உங்களைப் பார்ப்பதற்காகவே நாங்கள் வந்திருக்கிறோம். ஆகவே நம்பிக்கை கொண்டு தைரியமாக நீங்கள் யார் என்று சொல்லுங்கள். சிவனுடைய நெற்றிக் கண்ணால் காமன் நீறான வருத்தம் தாங்காமல் காட்டுக்கு ஓடி வந்த ரதி, பிரீதி ஆகியவர்களைப் போலிருக்கிறீர்கள் நீங்கள். மணிகள் இழைத்த அரண்மனையிலிருக்க வேண்டிய நீங்கள் நிர்மானுஷ்யமான இந்த காட்டுக்கு எப்படி வந்தீர்கள்? அழகிய சேடிகள் தூவும் பூப்பாயின் மீது உலாவ வேண்டிய இந்த மிருதுவான பாதங்கள் முட்கள் நிறைந்த இந்தக் காட்டுப் பூமியிலே நடக்கையில் எவ்வளவு நொந்திருக்கும் என்பதை நினைக்கவே எங்கள் உள்ளம் வேதனைப் படுகிறது. காற்றில் கிளம்பி உங்கள் முகத்தில் படிந்துள்ள புழுதி, உங்கள் உடலைத் தகிக்கும் வெய்யிலின் வெப்பம் மிகுந்த கிரணங்கள் ஆகியவை எங்களையே தாக்குவது போலத் தோன்றுகின்றன. காட்டு மிருகங்கள் நிறைந்த இந்தக் காட்டிலே நீங்கள் தங்கியிருப்பதைக் காண எங்கள் மனம் வெதும்புகிறது. ஆகவே, உங்கள் வரலாற்றைத் தெரிவிக்க வேண்டும்."

சண்டசிம்மராஜன் இவ்விதம் கேட்டவுடனே அரசி நீண்ட ஒரு பெருமூச்சுவிட்டு, வருத்தமும் வெட்கமும் பிடுங்கித்தின்ன, மெதுவாகத் தன் வரலாற்றைத் தெரிவித்தாள். அநாதரவாக அவள் இருப்பதையறிந்த சண்டசிம்மராஜன் அவளுக்கும் அவள் மகளுக்கும் இதமான வார்த்தைகளைக் கூறித் தேற்றினான். அவ்விருவரையும் தங்களுடனே வந்து தங்கள் குடும்பத்திலேயே சேர்ந்துவிடுமாறு வேண்டினான். அவ்விருவரையும் தங்கள் குதிரைகளின் மேல் ஏற்றிக்கொண்டு அரசனும், மகனும் தங்கள் தலைநகரான வித்தபுரிக்குத் திரும்பினார்கள். திக்கற்ற நிலையிலிருந்த அரசி என்ன செய்வாள்? மறுபிறப்பை அடைந்ததேபோல அவள் அரசன் விருப்பத்திற்குச் சம்மதித்தாள். ஆகவே சிறிய பாதத்தையுடைய ராணி சந்திராவதியை ராஜகுமாரனை ஸிம்ஹபராக்கிரமன் மணந்து கொண்டான். பெரிய பாதத்தைக் கொண்ட ராஜகுமாரி லாவண்யவதியை அரசனை சண்டசிம்மன் மணம் புரிந்து கொண்டான். முதன் முதலில் காட்டில் காலடிச் சுவடுகளைக் கண்ட அவர்கள் அவ்விதம் தானே தீர்மானித்திருந்தார்கள். சொன்ன சொல்லை மீறுவார்களா?

இவ்விதம் பாத அளவால் ஏற்பட்ட தவறால் தாய் ராஜகுமாரன் மனைவியானாள். ராஜகுமாரியோ அரசனுடைய மனைவியானாள். ஆகவே மகள் தன் சொந்தத் தாயின் மாமியாரானாள். அதே போலத் தாயும் தன் சொந்த மகளின் மருமகளாக வந்தாள். காலக்கிரமத்தில் அவர்களுக்குப் பிள்ளைகளும், பெண்களும் பிறந்தார்கள். அந்தக் குழந்தை

களுக்கும் பெண்ணும், பிள்ளையுமாகக் குழந்தைகள் பிறந்தன. இந்தவிதமாக சண்டசிம்ம ராஜனும், அவனுடைய குமாரன் சிம்ஹ பராக்கிரமனும் தங்களுக்கு முறையே ராஜகுமாரி லாவண்யவதியையும், ராணி சந்திராவதியையும் மனைவிகளாக அடைந்து அந்நகரத்தில் வாழ்ந்து வந்தார்கள்.

இருட்டிலே வழி நடந்து செல்லும் வேளையிலே இவ்விதம் கதையைக் கூறி முடித்த வேதாளம், விக்கிரமாதித்தனைப் பார்த்து பின்வருமாறு கேட்டது: "மகாராஜனே! தந்தையும் மகனும் தலைமுறை மாறி மகளையும் தாயையும் முறையே மணந்து, பெற்று எடுத்த குழந்தைகள் தங்களுக்குள்ளே எத்தகைய உறவுமுறை கொள்வர்? இதைச் சொல். உனக்குத் தெரிந்தால் சொல்லியாக வேண்டும். தெரிந்திருந்தும் சொல்லாவிட்டால், முன்னே கொடுத்த சாபம் நிச்சயம் உன்னைப் பீடிக்கும்."

வேதாளம் போட்டக் கேள்வியைக் கேட்ட விக்கிரமாதித்தன் தன் மனதிற்குள்ளாகவே, அதைத் திரும்ப திரும்பக் கேட்டு யோசித்து யோசித்துப் பார்த்தான். இருபத்து மூன்று கதைகளுக்குச் சரியான விடை சொன்ன மகாராஜன் இருபத்து நான்காவது கதை முறை தெரியாத கதை என்று எண்ணி விழித்தான். ஆகவே அவன் வாய் பேசாமல் தன் வழியே போய்க் கொண்டிருந்தான். அதனால் அரசன் தோள்மீது சுமந்து வந்த வேதாளம் தனக்குத் தானே சிரித்துக் கொண்டது.

"ஹா....ஹா! இந்த முறை தெரியாக் கதைக்கு விடை சொல்ல அவனுக்குத் தெரியவில்லை. ஆகவே, சந்தோஷப்பட்டுக்கொண்டு வாய்மூடி மௌனியாகத் தன் கால்களை எட்டி எடுத்து வைத்துச் செல்கிறான். வீரத்தின் பொக்கிஷமான இம்மன்னனை இனிமேலும் பரிசோதிப்பதும் ஏமாற்றுவதும் முடியாது. அன்றி, இவனை என்னிடம் அனுப்பிய அந்தக் கிராதக முனிவன் ஞானசீலன் என்பான் என்னை ஒரு கருவியாக உபயோகித்து வஞ்சகச் செயல் புரிவதையும் தடுத்து விடமுடியாது. ஆகவே இப்போது அந்தக் கிராதக முனிவனை ஏமாற்றி அவன் அடைந்திருக்கும் வெற்றியைத் தந்திரத்தாலே இம்மகாராஜனுக்கு அளித்துவிடவேண்டும். எதிர் காலத்திலே இவன் பேரும் புகழும் கொண்டு சிறந்த மன்னாதி மன்னனாக விளங்குவான்."

இவ்விதம் தனக்குத் தானே யோசித்து முடிவு செய்த வேதாளம் விக்கிரமாதித்தனை நோக்கிப் பின்வருமாறு சொல்லியது. "மகாராஜனே! பயங்கரமான இருள் சூழ்ந்த இந்த மயானத்தில் உம்மை முன்னும் பின்னும் இழுக்கடித்துப் பலபடியாகத் தொந்தரவு செய்தும் நீர் வருத்தம் கொள்ளாமல்

சந்தோஷமாகவும் மன உறுதியிலிருந்தும் கொஞ்சமும் வழுவாமலும் இருக்கிறீர். உம் அஞ்சா நெஞ்சத்தைக் கண்டு நான் பெரிதும் மகிழ்ச்சி கொள்கிறேன். உம்மிடம் இப்புதிர் கதைகளை ஏன் கூறினேன் என்பதைச் சொல்லுகிறேன்; கேளும் மகாராஜனே!" என்று வேதாளம் தன் சுய சரிதையைச் சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளத்தின் சுய சரித்திரம்

"மகாராஜனே! பூர்வத்தில் நான் காளத்தியன் என்ற பெயருடன் சோழ தேசத்தில் ஓர் கோயில் ஸ்தானிகளுக இருந்தேன். செவ்வந்தி ஈஸ்வரனை சிவபெருமானுக்குத் தினமும் பூசை, நைவேத்தியம் முதலானவற்றை முடித்துக் கொண்டு திருக்கோவிலின் கதவை மூடிவிட்டு வீட்டுக்குப் போவது வழக்கம். ஒருநாள் ஏதோ ஒரு பிரசாதத்தை மறந்து விட்டு வெளியே வந்துவிட்டபடியால் அதை எடுத்துவரக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றேன். அப்போது கர்ப்பகிரகத்தின் உள்ளே மனிதர் பேசுவது போன்று குரல் கேட்கவே சாவித் துவாரத்தின் வழியாகப் பார்த்தேன். உமையவள் தன் பர்த்தாவின் மடிமீது அமர்ந்திருக்க, பகவான் தன் நாயகிக்குக் கதைகளைச் சொல்லி வந்தார். நான் உம்மிடம் சொன்ன இருபத்தி நான்கு புதிர் கதைகளையும் பிராட்டியாரிடம் சொல்லி, அவற்றில் இருபத்து மூன்று கதைகளுக்கு விடையும் தெரிவித்தார். கடைசியாகச் சொல்லப்பட்ட இருபத்து நான்காவது கதை முறை தெரியாத கதையென்றும், அதன் புதிருக்கு விடை ஒருவருக்கும் தெரியாதென்ருர். நான் வீடு திரும்பியபோது என் மனைவி ஏன் இவ்வளவு நேரம் கழித்துவர நேரிட்டதென்று கோபித்து கேட்கவே, நான், "கண்ணே, சுவாமி தன் நாயகிக்கு இருபத்து நான்கு கதைகள் சொல்லி வந்தார். அதைக் கேட்டுக் கொண் டிருந்தபடியால் நேரமாகி விட்டது" என்றேன். அதன் மீது அவள் பிடிவாதமாக அக்கதைகளைச் சொல்லுமாறு என்னை வற்புறுத்தினுள். நான் எவ்வளவோ மறுத்தும் என் மனையாள் கேட்கவில்லை. கடைசியாகச் சொல்லிவிட்டேன். அக்கதைகளை வேறு ஒருவரிடமும் சொல்லக் கூடாதென்று வேறு எச்சரித்திருந்தேன்....

"ஆனல் என் மனைவியோ மறுநாள் காலையில் மற்றப் பெண்களிடம் சொல்லி பகிரங்கப் படுத்திவிட்டாள். அதனல் கோபம் கொண்ட பரமேச்வரன் என் முன் தோன்றி, "ஸ்தானிகா! என் பத்தினிக்கு நான் இரகசியமாகச் சொன்ன கதைகளை நீ ஒட்டுக் கேட்டு உன் மனைவியிடம் சொன்னுய்! அதனல் நீ

வேதாளமாக போகக் கடவாய்!" என்று சபித்து விட்டார். அவர் கால்களைப் பிடித்துக் கொண்டு நான் கெஞ்சிய போது, பகவான் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினார். "வேதாளமே! உஜ்ஜயினி மாகாளிப் பட்டணத்திற்கு இரு காத வழி தூரத்தில் ஒரு வனந்திரம் இருக்கிறது. அந்த ஆரண்யத்தில் ஒரு கோயில் உண்டு. அந்தக் கோயிலுக்கு எதிரே ஒரு பெரிய முருங்க மரம் இருக்கிறது! வேதாளமாக மாறி நீ அந்த மரத்தின் ஒரு கிளையில் தலை கீழாகத் தொங்கிக் கொண்டிருப்பாய்! அப்படியிருக்கும் நாளில் வெகுகாலத்திற்குப் பிறகு ஞானசீலன் என்கிற முனிவன் உன்னைத் தன் வசப்படுத்தி அஷ்டமாசித்திகளையும் பெற முயற்சி செய்வான். காளிமாதேவி தன் முன் பிரசன்னமாக வேண்டுமென்றும், காளி சந்நிதியின் முன்னால் யாக குண்டம் செய்து நரபலி எடுக்கவும் காத்திருப்பான். தனக்கு உதவி செய்ய உஜ்ஜயினி மன்னனையும் தந்திரமாக அழைத்து வருவான். அவனைக் கொண்டு உன்னைப் பிடித்து வரவும், கடைசியில் அந்த மகாராஜனையே காளிக்கு பலி கொடுக்கவும் சூழ்ச்சியாகத் திட்டமிடுவான்! உன்னை விக்கிரமாதித்தன் பிடித்துக் கட்டிக் கொண்டு வந்ததும், அவன் சிரசைத் துண்டித்து யாககுண்டத்தில் போட நினைப்பான். அப்போது நீ விக்கிரமாதித்தனுக்கு இருபத்து நான்கு கதைகளையும் சொல்லி விடை கேள். இருபத்து மூன்று கதைகளுக்கும் சரியான விடைசொல்லி இருபத்து நான்காவது முறை தெரியாக் கதைக்கு விடை சொல்லாமல் திகைத்து நிற்பான். அப்போது அவனை விக்கிரமாதித்தனென்று அறிந்து கொள். நீ அவனுக்கு முனிவனின் வஞ்சக எண்ணத்தையும் அதைத் தடுத்து வெற்றி பெற்று முனிவனை ஒழிக்கும் வழியையும் நீ அவனுக்குத் தெரிவித்து, அந்த மகாராஜனுக்கு நீ அடிமையாகி இரண்டாயிரம் வருடம் துணையாக இருந்து முடிவில் சாபம் நீங்கி என்னிடம் வந்து சேருவாயாக!" என்று சிவபெருமான் எனக்குச் சாப விமோசனம் தெரிவித்தார். ஆகவே, மகாராஜனே நான் உமக்குத் தொண்டு புரியவும், வாகனமாக விளங்கவும் ஆட்பட்டுவிட்டேன்! என் எஜமானனாகிவிட்ட உம்மைக் காக்க கடமைப் பட்டவனாதலின் அந்த வஞ்சக முனிவனிடமிருந்து நீர் உயிர் தப்பவும் உதவி புரிவேன், என்று கூறிய வேதாளம் அதற்குரிய வழிவகைகளையும் சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் கட்டுப்பட்ட கதை

"மகாராஜனே! உம்மை வரவழைத்திருக்கும் ஞானசீல முனிவன் நல்லெண்ணத்துடன் அழைக்கவில்லை. மன்னாதி மன்னர்களையெல்லாம் ஆளும் ஏகாதிபத்தியப் பதவியையும்,

நீண்ட ஆயுளையும், என்னுடைய சேவையையும் பெறவே அந்த முனிவன் காளிமாதேவியைக் குறித்து கடுந்தவம் செய்தான். தவத்தால் மகிழ்ந்த தேவியானவள் பிரத்தியக்ஷமாகி, ஆயிரம் அரசர்களுடைய தலையைக் கொண்டு யாகம் செய்தால், அவன் விருப்பம் நிறைவேறும் என்று சொல்லிவிட்டு மறைந்தாள். மகாராஜனே! இம்முனிவன் தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஒன்பது அரசர்களைக் கொன்று அவர்கள் தலையை யாக குண்டத்தின் அக்கினியில் போட்டிருக்கிறான். கடைசியாக ஒன்று குறைகிறது. அதற்காகவே உம்மை வஞ்சகமாக அழைத்திருக்கிறான். உம் அறிவும், உறுதியும் என்னை மகிழச் செய்துவிட்டது. வீணில் அந்த முனிவனிடம் சிக்கி நீர் அழிவதை நான் விரும்பவில்லை.

"அதனால் நான் சொல்கிறபடி தந்திரமாக நடந்து கொள்ளவும். இப்போது நான் இந்தச் சவத்தின் உடலைவிட்டுப் போய்விடுகிறேன். என்னுடைய சரீரக்கட்டையை மட்டுமே நீர் எடுத்துச் சென்று விடும்! இதை அந்தத் துஷ்ட முனிவனிடம் எடுத்துச் சென்றதும் அவன் என்னை அந்தச் சவக்காட்டில் ஆவனம் செய்ய வேண்டுமென பூஜிப்பான். அப்பால் உம்மை நரபலி போட சூழ்ச்சி செய்து அக்கினி மூட்டப்பட்டுள்ள யாக குண்டத்திற்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்யும்படி உம்மிடம் சொல்வான். அந்த முனிவனையே முதலில் யாக குண்டத்திற்கு நமஸ்காரம் செய்து காட்டும்படி சொல்லும். தரையில் குனிந்து வணங்கும் அந்த முனிவனின் சிரத்தை உடனே உம் உடை வாளால் அறுத்து யாக குண்டத்தில் போட்டுவிடும்! காளிமாதேவி பிரத்யக்ஷமாகி உமக்குச் சகல சௌபாக்கியங்களும் அளிப்பாள். நீர் கேட்ட வரமெல்லாம் கொடுப்பாள். அந்த முனிவன் எந்தப் பதவியை அடைய விரும்பி இந்தக் காரியம் செய்ய திட்டமிட்டிருந்தானோ அந்த மகத்தான வித்யாதர அரச பதவி உமக்குக் கிட்டிவிடும்! தந்திரமாக நடந்து கொள்ளாவிட்டால் அந்த முனிவன் உம்மைப் பலியாகக் கொடுத்து விடுவான்! அதைத் தடுப்பதற்காகவே நீர் முன்னேறிச் செல்லமுடியாதபடி இவ்வளவு தூரம் கதைகளைச் சொல்லிக் காலம் கடத்தி வந்தேன்! இனி நீர் செல்லலாம்! வெற்றியும் உமக்குக் கிட்டும்!" என்றது வேதாளம்.

அவ்விதமே நடப்பதாக தலையை ஆட்டினான் விக்கிரமாதித்தன்.

ஞானசீல முனிவன் யாககுண்டம் வளர்த்திருக்கும் ஆரண்யத்தில் காளிமாதேவிக் கோயிலுக்கு வந்த விக்கிர மாதித்தன் வேதாளத்தைக் கீழே இறக்கி "முனி சிரேஷ்டரே! மிகுந்த சிரமத்தின் பேரில் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி

விட்டேன். அடுத்து நான் செய்ய வேண்டிய காரியம் என்ன?" என்று பணிவுடன் வேண்டினான்.

"அரசே! புனித தீர்த்தத்தில் குளித்து, நிர்மலமான உள்ளத்துடன் வாரும். அதற்குள் பூஜைகளை முடித்து விடுகிறேன்" என்றான் முனிவன்.

அரசன் குளித்துவிட்டு வந்து சேர்ந்ததும் யோகியானவன், "அரசே! இந்த யாககுண்டத்தை மும்முறை வலம் வந்து வணங்குங்கள்." என்றான்.

"முனிசிரேஷ்டரே! நானோ மகாராஜன். இவைகளின் வழி முறைகளை அறியாதவன். தாங்கள் முதலில் எவ்விதம் செய்யவேண்டுமென்று செய்து காட்டினீர்களானால் சௌகர்யமாகயிருக்கும். வழி பிசகி தவறுதலாகச் செய்து அதன் மூலம் உங்கள் யாகத்தைக் கெடுக்க விரும்பவில்லை" என்று விநயமாகக் கூறினான் விக்கிரமாதித்தன்.

அரசன் உள்ளத்திலிருப்பதை அறியாத முனிவன் யாகக்குண்டத்தை மும்முறை வலம் வந்து தரையில் சாஷ்டாங்கமாகப் படுத்து வணங்கினான். உடனே விக்கிரமாதித்தன் தன் இடையிலிருந்த மகோன்னத வாளை உருவி முனிவனின். தலையைத் துண்டித்து யாகக் குண்டத்தில் போட்டான்.

உடனே காளிமாதேவியும் பிரசன்னமாகி, "வாராய் மகனே! உன் காரியங்களைக் கண்டு மிகவும் சந்தோஷம் அடைந்தேன். உனக்கு வேண்டிய வரங்களை கேள்!" என்று சொல்லவே விக்கிரமாதித்தன் பின்வருமாறு கேட்டான்.

"தேவி! உன் அடிமையாகிய எனக்கு எப்பொழுதும் தரும சிந்தனையும், பரிசுத்த மனமும், சகல வல்லமையும் நான் நினைக்கும்போது தயாபரியான உன் தரிசனமும் உண்டாகும்படி அருள வேண்டும். மேலும் முனிவனால் கொல்லப்பட்ட இந்தத் தொள்ளாயிரத்து தொண்ணூற்றொன்பது மணிமகுட மன்னர்களும் பிழைத்தெழும்படி விரும்புகிறேன். தடை சொல்லாது என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்" என்று விக்கிரமாதித்தன் கேட்டான்.

"அவ்விதமே ஆகுக!" என்று காளிமாதேவியும் வரப்பிரசாதம் அளித்து மறைந்தாள். பிழைத்தெழுந்த மன்னர்களையெல்லாம் அவரவர் நாட்டிற்குச் செல்ல அனுமதித்து, வேதாளத்தை அழைத்துக் கொண்டு தலைநகருக்குத் திரும்பிய விக்கிரமாதித்தன், இந்தச் சிங்காதனத்தில் அமர்ந்து அழியாப் புகழுடன் அரசாண்டு வந்தான்.

இவ்வாறு இரண்டாம் படிக்குக் காவலான மதனுபிஷேக வல்லி என்னும் சிங்காதனப் பதுமை, கதையைச் சொல்லி முடித்ததும், போஜ மகாராஜனை நோக்கி "ஹே, ராஜனே! எங்கள் விக்கிரமாதித்த மகாராஜனைப் போன்ற அறிவும் ஆற்றலும் உமக்கிருந்தாலன்றோ, இந்த அதிசய சிம்மாதனத்தில் நீர் ஏறி அமரலாம்" என்று கூறி மௌனமாகிவிட்டது.

அதுசமயம் சூரியனும் அஸ்தமித்து விடவே, போஜராஜன் சிம்மாதனத்தின் மீது ஏற விரும்பாமல் மௌனமாகத் திரும்பிக் கீழே இறங்கிச் சென்றான்.



## 3-வது கோமளவல்லிப் பதுமை சொல்லிய ஏலாகரம்பையின் கதை

மறுநாள் அடிவானத்தில் சூரியன் உதயமானதும் போஜ ராஜனும் நீதிவாக்கிய மந்திரியும் நியம நிஷ்டைகளை முடித்துக் கொண்டு பரிவாரத்தினர் புடை சூழ, சித்திரக்கூட மண்டபத்தை அடைந்தனர். அங்கிருந்த நவரத்தின சிம்மாசனத்தை போஜராஜன் வணங்கி, அந்தச் சிம்மாசனத்திலேறி கொலுவிருக்க வேண்டும் என்ற ஆசையுடன், அதன் முதற்படியையும், இரண்டாவது படியையும் கடந்து மூன்றாவது படியில் வலது காலை எடுத்து வைக்கும் தருணத்தில் அப் படிக்குக் காவலாக இருந்த கோமளவல்லிப் பதுமை கைகொட்டிக் கலீரென சிரித்து பின்வருமாறு சொல்லியது:

"ஹே, போஜ ராஜரே! நானறிந்த வரை எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற குணாதிசயம் உம்மிடம் இருந்தாலன்றோ இந்த சிம்மாசனத்தில் நீர் வீற்றிருக்க முடியும்?"

"சொல்லாய் பதுமையே! அப்படி உங்கள் விக்கிரமாதித்த பூபதியிடம் நீ கண்ட அபூர்வமான குணாதிசயந்தான் என்ன? அந்தக் கதையைச் சொல்!"

பதுமையும் கதை சொல்லத் தொடங்கியது.

ஃ ஃ ஃ

விக்கிரமாதித்த மகாராஜனும் மதிமந்திரி பட்டியும் நீதி வழுவாது உஜ்ஜயினி மாகாளி பட்டணத்தை அரசாண்டு வரும் நாளில் பட்டணத்தில் வேத கோவிந்தன் என்றொரு பிராமணன் இருந்து வந்தான். அவன் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்திருந்தான். அவனுக்கு வெகு நாட்கள் பிள்ளை பிறக்காமலிருந்து, பகவானைக் குறித்து தவம் செய்யவே, ஆண்டவன் அனுக்கிரகத்தால் குமாரன் பிறந்தான்.

அந்தப் பிள்ளைக்கு ஏழு வயதான போது ஒரு நாள் சமுத்திர ஸ்நானம் செய்வதற்காக அவனைப் பிராமணன் அழைத்துச் சென்றான். இடுப்பளவு ஜலத்தில் நின்று ஸ்நானம் செய்து கொண்டிருக்கும் போது மகர மீன் ஒன்று அப்பிள்ளையை பிடித்து விழுங்கி விட்டது. உடனே பிராமணன் அலறி அடித்துக் கொண்டு கரையேறினான். "விக்கிரமாதித்த பூபதி நெறி தவறாது ராஜ்யபாரம் நடத்தும் இந்நாட்டில் நம்முடைய பிள்ளையை மகர மீன் விழுங்கக் காரணம் என்ன? நாம் ஒரு பாவமும் செய்யவில்லையே! அரசனுடைய பரிபாலனம் நீதிநெறி தவறி விட்டிருக்க வேண்டும். அரசன் முன்பாகச் சென்று பிராணத் தியாகம் செய்ய வேண்டும்'' என்று எண்ணியவனாய் அரண்மனைக்குச் சென்று அலறித் துடித்தவாறு ஆராய்ச்சி மணியை அடித்தான். மணி சப்தம் கேட்டு விக்கிரமாதித்தன் மதிமந்திரி பட்டியை அனுப்ப பட்டி வெளியே வந்து கண்ணீரும் கம்பலையுமாக நிற்கும் பிராமணனைக் கண்டு தன் மன்னவனிடம் அழைத்துச் சென்றான். விக்கிரமாதித்த மன்னனைக் கண்டதும் வேதகோவிந்தன் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறி "அரசே! உங்கள் பரிபாலனத்தில் நூறு வயதுக்குக் குறைவில்லை. அப்படியிருக்க சமுத்திரத்தில் ஸ்நானம் செய்யச் சென்ற என் பால குமாரனை மகர மீன் விழுங்கக் காரணமென்ன? அவனுக்கு மட்டும் பால்யத்தில் மரணம் வரக் காரணமென்ன? நீங்கள் நீதியிலிருந்து வழுவியது தான் காரணமாக இருக்க வேண்டும். என் மகனை விட்டுப் பிரிந்து என்னால் உயிர் வாழ முடியாது!" என்று அழுதான்.

அதைக் கேட்ட விக்கிரமாதித்தன், "என்ன? பிள்ளையை மகர மீன் விழுங்குவதா!" என்று வெகு ஆங்காரத்துடனே குதித்து எழுந்தான். "ஐயா! வருந்தாதீர்கள். உமது பிள்ளையைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்ப்பிக்கிறோம்.'' என்று தேற்றிவிட்டுத் தன் தேவதையான பத்ரகாளியம்மன் சந்நிதானத்தை அடைந்தான். தேவி அவனுக்கு பிரத்யக்ஷமாகி திருநீறும், எலுமிச்ச பழமும், தீர்த்தமும் தந்து ஆசிர்வதித்து அனுப்பினாள். விக்கிரமாதித்தன் உடனே தன் அரண்மனைக்கு

வந்து இரத்தின கம்பளி, செம்புப் பாத்திரம், பிரம்பு, பாதக்குறடு ஆகிய பதினெட்டு ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு தன் மதி மந்திரியான பட்டியைப் பார்த்து, "சொல்லுமையா, பட்டி! இன்றோடு நாடாறு மாதம் முடிந்து காடாறு மாதம் புறப்பட வேண்டிய வேளை வந்ததோ?" என்று கேட்கவே, மந்திரியாரும் அதற்கு ஆம் என்று தலையசைத்தார். உடனே தன் முத்திரை மோதிரத்தைத் தன் மந்திரியிடம் கழற்றிக் கொடுத்து, "மதி மந்திரி பட்டியே! நான் காடாறு மாதம் முடிந்து திரும்பி வரும் வரை நீ ராஜ நீதி தவறாமல் செங்கோல் செலுத்தி வா!" என்று கூறி விடை பெற்றுக் கொண்டு வேதாளத்தையும் கூட்டிக் கொண்டு பிராமணனோடு புறப்பட்டு மகர மீன் பிராமணன் பிள்ளையை விழுங்கிய சமுத்திரத்தின் துறைக்கு வந்து சேர்ந்தான்.

"பிராமணோத்தமா! இனி நீ எங்கும் உன் பிள்ளையைத் தேட வேண்டாம். இன்றிலிருந்து ஆறு மாதத்திற்குள் உன் பிள்ளையைக் கொண்டு வந்து ஒப்புவிக்கிறேன்" என்று விக்கிரமாதித்தன் பிரதிக்ஞை சொல்லிவிட்டு இரத்தின கம்பளியை விரித்து சமுத்திர ஜலத்தில் தெப்பம் போல மிதக்கவிட்டு, அதிலேறிக் கொண்டு இடது சாரி வலது சாரியாக வந்து அட்டகாசம் செய்தான். அப்போது மகர மீனும் வெளியே வந்தது. அதை வெட்டுவது கூடாதென்று எண்ணிய விக்கிரமாதித்தன் அந்த விசித்திர மீனின் எதிரே போகவே அது அவனையும் விழுங்கிவிட்டது.

மீன் வயிற்றினுட்சென்ற விக்கிரமாதித்தன் அங்கு மாட மாளிகையும் கூட கோபுரங்களும் அளவற்ற தெருக்களும் கொண்ட ஒரு பட்டணம் இருப்பதைக் கண்டான். அத்தெருக்களைப் பார்த்துக் கொண்டு அதிசயத்தோடு வரும்போது, ஓரிடத்தில் சில பிள்ளைகளுடன் பிராமணப் பிள்ளை ஒருவன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவனைப் பிடித்துக் கொண்டு "குழந்தாய்! நீ யாருடைய மகன்? உன்னுடைய ஊர் எது?" என்று கேட்டான். "ஐயா! நான் இருப்பது உஜ்ஜயினி பட்டணம். என் தகப்பனார் பெயர் வேதகோவிந்தன் என்பது!" என்றான் அந்தப் பையன்.

உடனே பிள்ளையைப் பிடித்தபடி விடாமல் இரத்தின கம்பளி மற்றும் தனது பொருள்களை எடுத்துக் கொண்டு மந்திர வாளை உருவி, மகர மீனின் வயிற்றைக் கிழித்து அசையாது வெளியே வந்தான். இரத்தின கம்பளத்தை விரித்து அதில் பிராமணப் பிள்ளையை இருக்கச் செய்து, ஜலம் மீன் வயிற்றில் புகுந்தால் பட்டணம் பாழாகி விடும் என்று, மந்திர வாளினால் கிழித்த இடத்தில் தனக்கு பத்திரகாளி தந்த விபூதியைத் தடவி தேவியைத்

துதிக்கவே, மீனின் உடல் பழையபடி ஆகி விடவே மீன் மறுபடி சமுத்திரத்திற்குள் ஓடிப்போய் விட்டது. பிறகு விக்கிரமாதித்தனும் வந்து கம்பளியில் ஏறிக் கொள்ளவே, அது தெப்பம் போல சமுத்திர ஜலத்தில் வேகமாக மிதந்து சென்றது.

அவ்விதம் ஓடிய தெப்பம் புஷ்கரம் என்ற தீவை அடைந்தது. அத் தீவிலே இறங்கிய விக்கிரமாதித்தன் தான் கொண்டு வந்த கம்பளம், பிரம்பு, பாத்திரம் முதலியன பொருள்களை வேதாளத்திடம் ஒப்புவித்து விட்டு பிராமணப் பிள்ளையுடன் சென்றான்.

அத்தீவிலே சம்புநாதன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு வெகு காலம் புத்திரப் பேறில்லாமலிருந்து, கடைசியில் பகவானுடைய அனுக்கிரகத்தால் சூர்யகோடி பிரகாசம் பொருந்திய பெண் குழந்தை ஒன்று பிறந்தது. ஏலாகரம்பை என்று பெயரிடப்பட்ட அப்பெண் தக்க வயதை அடைந்ததும், தன் குமாரத்திக்கு மணம் செய்விக்க வேண்டுமென்று சம்புநாத மன்னன் விரும்பினான். அப்போது ஏலாகரம்பை "அப்பா! ஐம்பத்தாறு தேச அரசர்களையும் வரச் செய்து அவர்களைப் பார்த்து எனக்கிஷ்டமானவரை மாலையிடவேண்டும்" என்றாள். அரசனின் அழைப்பை ஏற்று சம்புநாதபுரத்திற்கு வந்தனர். அவர்களை வரவேற்று தனித்தனியே விடுதிகள் அமைத்து தங்கச் செய்தான்.

அந்தச் சுயம்வர விழாவை முன்னிட்டு சம்புநாதபுரம் கோலாகலமாக இருக்கும்போது தான் விக்கிரமாதித்தனும் பிராமணப் பிள்ளையும் அப் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தனர். நகரின் கோலாகலத்தை கண்டு வியந்து விக்கிரமாதித்தன் அங்குள்ளவர்களிடம் அது பற்றி விசாரிக்கவே, அதற்கு அவர்கள் ஏலாகரம்பையின் சுயம்வரம் நடக்கப் போவதைத் தெரிவித்தனர். விக்கிரமாதித்தன் தானும் அம்முகூர்த்தத்திற்கு போக வேண்டுமென்று விரும்பி அந்நகரத்திலிருந்த பிராமணன் ஒருவனை நட்பு கொண்டு, அவன் பாதுகாப்பில் அப்பிராமணப் பிள்ளையை ஒப்புவித்து நாற்பது நாளில் திரும்பி வந்து, அழைத்து செல்வதாகத் தெரிவித்து, நாற்பது பொன்னும் செலவிற்குக் கொடுத்தான். பிறகு அங்கிருந்து நகரத்திற்கு வெளியே வந்து தன் ஆடையாபரணங்களை வேதாளத்திடம் ஒப்புவித்து, இரத்தின வியாபாரி போன்று மாறு வேடம் தரித்துக் கொண்டு கடை வீதிக்குச் சென்றான். அங்கு ஒருபுறம் அவன் இரத்தினக் கம்பளத்தை விரித்து தேவியின் அனுக்கிரகத்தினால் முத்து, பவளம், வைடூரியம் போன்ற நவரத்தினங்களையும் வரவழைத்து கடை வைத்தான். அவ்வழியே போகிறவர்கள், வருகிறவர்கள் அனைவரும் அவனிடம் வந்து, அப்பொருளைக் கண்டு அதிசயித்து வாங்கிக் கொண்டு சென்றனர். இச்செய்தி அந்நகரத்தில் வந்து

கூடியிருந்த ராஜாக்களுக்கு எட்டவே அவர்களும் தங்கள் விடுதிகளை விட்டு கடைத் தெருவிற்கு வந்து விநோத இரத்தின வியாபாரியான விக்கிரமாதித்தனைச் சூழ்ந்து கொண்டனர். விக்கிரமனின் சாதுர்யமான பேச்சு அவர்களை ஏலாகரம்பையின் சுயம்வரத்தைக் கூட மறக்கச் செய்து அங்கேயே தங்கச் செய்து விட்டது.

அரண்மனையிலே, இராத்திரி பத்து நாழிகையிலே சுயம்வரத் திற்கான நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அரசர்களைச் சுயம்வர மண்டபத்திற்கு வரும்படி அறிவிக்கப்பட்டது. அவர்களை தேடிச் சென்ற அதிகாரிகள் கடை வீதியில் விநோதமான இரத்தின வியாபாரியை சூழ்ந்து கொண்டு ஐம்பத்தாறு தேச மன்னர்களும் மெய்மறந்திருப்பதைக் கண்டு திரும்பி வந்து தங்கள் மன்னனிடம் அந்த அதிசயத்தைத் தெரிவித்தான். உடனே சம்புநாத மன்னனும் கடைவீதிக்குப் புறப்பட்டுச் சென்றான். அங்கு விக்கிரமாதித்தனை வியாபாரியின் சாதுர்ய பேச்சைக் கேட்டு வியந்து, அந்த இராஜாக்களுடன் விக்கிரமனையும் அழைத்துக் கொண்டு சுயம்வர மண்டபத்திற்குத் திரும்பினான்.

குறித்த வேளையில் அரசகுமாரி ஏலாகரம்பை மணக்கோலம் பூண்டு அதிரூப சுந்தரியாக உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை பலவித ஆபரணங்களை அணிந்தவளாய் தாதிமார்கள் சூழ்ந்து வர, வலது கையில் புஷ்ப மாலையும் முத்து மாலையும் ஏந்திக் கொண்டு சுயம்வர மண்டபத்திற்குள் நுழைந்தாள். தனக்குத் தகுந்த நாயகன் யார் என வரித்து மாலை போடலாம் என்று அங்கு கூடியிருந்த ஐம்பத்தாறு தேசத்து அரசர்களையும் பார்த்து வந்தாள். அங்கு மண்டபத்தின் ஒருபுறம் வியாபாரி போல் வீற்றிருந்த விக்கிரமாதித்தன் மோகினி மந்திரம் உச்சரித்து, அம்மன் திருநீற்றை நெற்றியில் அணிந்து கொண்டான். அப்போது அவனைப்பார்த்த ஏலாகரம்பை அவனுடைய முக லாவண்யத்தில் மயங்கி தனக்குத் தகுந்த நாயகன் என வரித்து அவன் கழுத்தில் மாலையைப் போட்டு மோக போதை தாளாமல் மூர்ச்சையடைந்து கீழே விழுந்தாள். உடனே தாதிமார்கள் அரசகுமாரியைத் தாங்கியணைத்து உள்ளே தூக்கிச் சென்று, சப்ரகூட மஞ்சத்தில் அவளைச் சயனிக்கச் செய்து, அவளுடைய முகத்தில் பன்னீர் தெளித்துக் களபகஸ்தூரிகள் பூசி சோகமாகிய களையை மாற்றலானார்கள்.

அப்போது சுயம்வர மண்டபத்தில் ஏளனச் சிரிப்புகள் கிளம்பின. அரசகுலத்தில் பிறந்த எங்களை விட்டுவிட்டு கேவலம் வர்த்தகம் செய்யும் செட்டியார் ஒருவனுக்கு ஏலாகரம்பை மாலையிட்டு நம்மை அவமானப்படுத்திவிட்டாளே" என்று

கோபமடைந்த ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் இழிவாகப் பேசியவர்களாய் சுயம்வர மண்டபத்திலிருந்து ஏளன சிரிப்புகளுடன் எழுந்து வெளியே சென்றனர்.

சம்புநாத ராஜனுக்கு அவமானத்தால் முகம் சிறுத்துவிட்டது. முகம் வாடி வந்து நிற்கும் தகப்பனுரை ஏலாகரம்பை உற்று நோக்கினுள். "என் மதிப்பிற்குரிய தந்தையே! மன்னுதி மன்னர்களையும் புறக்கணித்து செட்டியார் ஒருவருக்கு நான் மாலையிட்டதைப பற்றி தாங்கள் மனம் வருந்துகிறீர்களா? நம்முடைய பட்டணத்திற்கு வந்திருந்த மற்ற அரசர்களுக்கு எது கேட்டாலும் இல்லையெனுது அந்த வர்த்தகர் கொடுத்து வந்ததிலி ருந்து அவரிடம் அளவற்ற ஐசுவரியமிருக்கிறது என நினைக்கிறேன். மேலும் அவரைப்பார்த்தால் முப்பத்திரண்டு லட்சணங்களும் பொருந்தியவராகக் காணப்படவில்லையா? அவருடைய வசீகரத்தைக் காணும்போது இந்த உலகமெல்லாம் ஒரு குடையின் கீழ் அரசாளும் இராஜனைப் போன்று தோன்றவில்லையா? ஆனபடியால்தான் நான் அவருக்கு மாலையிட்டேன். வாள்வேந்தரைப் போன்று முகக்களை படைத்தவர் வர்த்தகரைப் போன்று ஏதோ மர்மத்துடன் தான் வந்திருக்கவேண்டும். இன்னும் தங்களுக்குச் சந்தேகமிருந்தால் நான் ஒரு யோசனை சொல்லுகிறேன். பொழுது விடிய இன்னமும் பதினைந்து நாழிகை இருக்கிறது. நான் இருக்கிற மணவறை வீட்டுக்கு அவரை அழைத்துவாருங்கள். குறுக்கே திரைச்சீலை கட்டிக் கொண்டு அவர் முகதரிசனம் செய்யாமலும், அவருடன் பேசாமலும் இருந்து அவருடைய குலம், கோத்திரம், பெயர் வரலாறு முதலான விவரங்களைத் தெரியச் செய்விக்கிறேன். அப்புறம் தாங்கள் விரும்பினுல் என்னை அவருக்குக் கல்யாணம் செய்துகொடுங்கள். இல்லையேல் அப்புறம் யோசனை செய்து கொள்ளலாம்!" என்ருள் ஏலாகரம்பை.

சம்புநாத ராஜன் அதற்குச் சம்மதித்து விக்கிரமன் என்கிற இரத்தினச் செட்டியாரைக் கோலாகலமாக தன் குமரியின் மணவறை வீட்டிற்கு அழைத்துச் சென்ருன். அறுசுவை பதார்த்தங்களுடன் போஜனம் எடுத்து வந்து வைக்கப்பட்டது. இரத்தின வியாபாரியும் போஜனமருந்தி தாம்பூலம் தரித்து சப்ரகூட மஞ்சத்தில் அமர்ந்தவாறு ஏலாகரம்பையின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தான்.

அப்போது ஏலாகரம்பை தாதிகள் புடைசூழ அங்கு வந்து விக்கிரமாதித்தனுக்கெதிரே மற்றொரு மஞ்சத்தை போடச் செய்து குறுக்கே திரையிடச் சொல்லி அமர்ந்தாள். சம்புநாத ராஜனும் அவன் தேவியும் மந்திரி பிரதானிகளும் அவ்வீட்டைச் சுற்றிக் கூடியிருந்தனர்.



"நம்முடைய குலம் கோத்திரம் ஒன்றும் தெரியாததால் இவ்விவாகம் தடைப்பட்டுவிட்டது. நம்முடைய வரலாற்றைத் தெரிவிக்காமலிருந்தால் பொழுது விடிந்ததும் பிடரியில் கை வைத்து வெளியே கொண்டுபோய் தள்ளிவிடுவார்கள்!" என்று யோசித்த விக்கிரமாதித்தனுகிற வியாபாரி உடனே, வேதாளத்தை நினைத்து, குறுக்கே கட்டியிருந்த திரைச்சீலையில் வந்திருக்கச் செய்தான். வேதாளம் திரைச்சீலையில் வந்து தங்கியது.

அப்போது வியாபாரி, "ஏ, திரைச்சீலையே! சுயம்வர மண்டபத்திற்கு மற்ற ராஜாக்களுடன் வேடிக்கை பார்க்க வந்த என் கழுத்தில் இந்த மங்கை மாலையிட்டாள். ஆகவே இவள் எனக்கு மனைவியாக வேண்டும். அப்படியிருக்க இவளோ என் முகத்தைப் பாராமலும், என்னுடன் பேசாமலும் குறுக்கே திரைச் சீலையைக் கட்டி தொங்கவிட்டுக் கொண்டு அமர்ந்திருக்கிறாள். தூக்கமும் வரவில்லை, தூங்கா விளக்கோ எரிந்து கொண்டிருக்கிறது! இரவுப் பொழுதைக் கழிக்க உனக்குத் தெரிந்த கதை ஒன்று சொல்" என்று கேட்டான்.

"ஐயா! நல்ல வார்த்தை சொன்னீர். நான் படுகிற வருத்தத்தில் எந்தவித கதை சொல்லுவது? வெகு பாடுகள் பட்ட பிறகு நான் இரண்டு துணியாக இருந்தேன். அதை மனிதர்கள் வாங்கி துண்டு துண்டாய்க் கிழித்து நூல் தைத்து கயிறு கோர்த்து நாலுபுறத்திலும் இழுத்துக் கட்டியதால் உங்கள் இரண்டு பேர்களுக்கும் நடுவே குறுக்காகத் தொங்குகிறேன். அப்படியிருக்க என் அவஸ்தையைக் காணுமல் கதை சொல்லும்பம

சொல்லுகிறீரே!" என்று திரைச் சீலையிலிருந்த வேதாளம் சொல்லிற்று.

திரைச்சீலை பேசுவதைக் கேட்ட ஏலாகரம்பை ஆச்சரியப் பட்டு வந்திருப்பவர் சாதாரண மனிதர் இல்லையென்று உணர்ந்து அவருடைய வரலாற்றை எப்படியும் அறியவேண்டும் என்கிற ஆசையினால் திரைச்சீலையைக் கட்டியிருந்த கயிறுகளை அவிழ்த்து விட்டாள்.

"ஏ திரைச்சீலையே! உன் வருத்தத்தைக் கண்டு இப்பெண் அவிழ்த்து விட்டாள். இனி உனக்குத் தடை ஏதுமில்லை. கதை சொல்" என்று இரத்தின செட்டியாரான விக்கிரமாதித்த மகாராஜன் சொல்லவே திரைச்சீலை கதை சொல்லலாயிற்று.

## திரைச்சீலை சொல்லிய காந்தரூபன் - காந்தரூபி கதை

சந்திரகிரி என்ற பட்டணத்தை கெந்தேஸ்வரன் என்றொரு ராஜன் ஆண்டு வந்தான். அவனுக்கு நூற்றிருபது மனைவிகள் இருந்தார்கள். அவர்களுக்கு வெகுகாலம் பிள்ளைகள் இல்லாம லிருந்து, ஆண்டவனைக் குறித்து மகா தவம் செய்ய, கடவுள் அனுக்கிரகத்தால் முதல் மனைவி நல்ல ரூபலாவண்யமுள்ள ஓர் ஆண்பிள்ளையைப் பெற்றாள். காந்தரூபன் என்று பெயரிடப்பட்ட அக்குமாரன் அந்தந்த வயதில் தான் கற்க வேண்டியவற்றைக் கற்று, சகல லக்ஷணங்களும் பொருந்தியவனாய் உரிய வயதை அடைந்தான். கெந்தேஸ்வரன் தன் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்று பெண் விசாரிக்க, தகுந்த பெண் அகப்படாமையால், அவனைப் போன்று ஒரு படம் எழுதி மந்திரிகள் கையில் கொடுத்து தகுந்த பெண் தேடிவருமாறு அனுப்பி வைத்தான். மந்திரிகள் படத்துடன் ஒவ்வொரு தேசமாகச் சுற்றிக் கொண்டு தந்திரபுரம் என்ற பட்டணத்தில் வந்து கூடாரமடித்துத் தங்கினார்கள்.

இது இப்படியிருக்க, மகேந்திரகிரியென்றொரு பட்டணத்தை யாண்ட மகேஸ்வரன் என்ற அரசனுக்கும் வெகுகாலம் பிள்ளை யில்லாமலிருந்து கடைசியில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு காந்தரூபி என பெயரிட்டு அருமையாக வளர்த்து வந்தார்கள். அந்தப் பெண் யுக்த வயதடைந்ததும், சரியான மணாளன் கிடைக்காமையால், அவளைப் போன்ற சித்திரம் ஒன்றை எழுதி மந்திரிகள் கையில் கொடுத்து மணமகனைத் தேடி வருமாறு அனுப்பி வைத்தான். அவர்களும் தந்திரபுரத்துக்கு வந்து எதிர்புறத்தில் தங்கியிருந்தனர்.

சந்திரகிரியிலிருந்து வந்திருந்த மந்திரிகள் அவர்கள் எதற்காக வந்திருக்கிறார்களென்று தூதுவர்களை அனுப்பி தெரிந்து வரும்படி சொன்னார்கள். அவர்கள் திரும்பிவந்து காந்தரூபிக்குத் தகுந்த மணாளனைத்தேடி வந்திருப்பதாக அறிவிக்கவே, இருதரத்தாரும் ஒருவரையொருவர் சந்தித்து, தேடிப்போன பொருள் வழியிலே தட்டுப்பட்டதென்று மகிழ்ந்து படங்களைப் பரஸ்பரம் மாற்றிக் கொண்டு ஊர் திரும்பினர். இருதேசத்து அரசர்களும், படத்தைப் பார்த்து மனத் திருப்தியுற்றவர்களாய் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தனர். அரசாங்கத்து புரோகிதர் குறித்த சுபமுகூர்த்தத்திலே, ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் சூழ்ந்திருக்க காந்தரூபன் காந்தரூபியை மணந்து கொண்டான். திருமணம் முடிந்ததும் காந்தரூபன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு நகரம் திரும்பினான். அவர்கள் இருவருடைய அழகையும் கேட்டு அவர்களைத் தரிசிக்க நாலுபக்கங்களிலிருந் தெல்லாம் மக்கள் அரண்மனைக்கு வந்தனர். திருஷ்டி பட்டுவிடப் போகிறதென்று பயந்து சந்திரகிரி அரசன் அவர்களுக்காகத் தனியே சகல வசதிகளையும் கொண்ட ஏழடுக்கு உப்பரிகை ஒன்றை உண்டு பண்ணி, அதிலே இருக்கச் செய்தான். அங்கு சாதாரண ஜனங்கள் போகமுடியாதபடி பலத்த காவல் வைத்தான். தினமும் இரவு வேளையில் போஜனமருந்திய பிறகு காந்தரூபனும், காந்தரூபியும் ஏழாவது மாடத்து உப்பரிகையிலே காம்பு அரிந்த புஷ்பங்களைப் பரப்பிய மஞ்சத்தில் சயனித்திருப்பார்கள்.

இவ்விதம் இருக்கும் நாளையில் தேவ கன்னிகைகள் ஏழு பேர் தினமும் இராக்காலத்தில் தேவலோகத்திலிருந்து பூலோகத்திற்கு வந்து சந்திரகிரியின் உச்சியிலிருக்கும் சுனையில் இறங்கி ஸ்நானம் செய்துவிட்டுப் போவது வழக்கம். அவர்கள் ஒருநாள் காந்தரூபனின் நேர்த்தியான ஏழடுக்கு உப்பரிகை மாளிகையைக் கண்டு அதிசயித்து "இதைப் போன்ற உப்பரிகையை நாம் கண்டதில்லை. இதில் தேவர்கள் வாசம் செய்கிறார்களோ? அல்லது முனீஸ்வரர் யாராவது இருக்கிறார்களோ, தெரிய வில்லையே? இறங்கிப் போய் பார்த்துவிட்டு வருவோம்" என்று அவர்கள் உப்பரிகையில் வந்து இறங்கினார்கள். காந்தரூபன் பூர்ண சந்திரனைப் போன்ற முககாந்தியுடன் மஞ்சத்தில் சயனித் திருப்பதைக் கண்டதும் அவன்மீது மோகம் கொண்டனர் ஏழு அப்சரஸுகளும். உடனே காந்தரூபனை அடைய ஆசைப்பட்ட தேவ கன்னியர்கள், அவனருகில் உறங்கும் அவனுடைய நாயகியான காந்தரூபிக்குத் தெரியாமல் மந்திரங்களை உச்சரித்து அவனை ஆகாயமார்க்கமாகத் தேவலோகத்திற்கு எடுத்துச் சென்று விட்டனர்.

ஃ ஃ ஃ

இத்துடன் கதை சொல்லுவதை நிறுத்திய திரைச்சீலையிலிருக்கும் வேதாளம், தன் எஜமானனை நோக்கி, "கேட்டீரா ஐயா, கதையை! இதுவரைதான் எனக்குத் தெரியும்!" என்றது.

கதையைத் திடீரென்று நடுவில் நிறுத்தியதும், ஏலாகரம்பையின் முகத்தில் பெரிய ஏமாற்றம் தோன்றியது. "ஆகாய மார்க்கமாக ஸப்த கன்னியரால் எடுத்துச் செல்லப்பட்ட காந்தரூபன் கதி என்ன? நாயகனைக் காணாது தவிக்கப்போகும் காந்தரூபியின் நிலை என்ன?" என்பதை அறிய அவள் துடிப்பதை அவளுடைய முகத்தோற்றமே நன்கு காட்டியது.

அப்போது வர்த்தகனாகிய விக்கிரமாதித்தன், "ஓ! திரைச்சீலையே! இவ்விதம் திடீரென்று கதையை நடுவில் நிறுத்தி விட்டால் என்ன செய்வது? குறைக் கதையையும் முடித்துவிடு" என்றான்.

"தேவரீர் அறியச் சொல்கிறேன்! எனக்கு இவ்வளவு தான் தெரியும். இனிக் குறைக் கதையைச் சொல்ல வேண்டுமானால் தங்களுக்கும் ஏலாகரம்பைக்கும் நடுவே பிரகாசமாக எரிந்துக் கொண்டிருக்கும் சரவிளக்கைக் கேளுங்கள். அது சொல்லும்!" என்றது திரைச்சீலை.

அதன் பின்னர் விக்கிரமாதித்த வர்த்தகன் சரவிளக்கிலே வேதாளத்தைப் பிரயோகித்து. "வாராய், சரவிளக்கே! திரைச்சீலை நிறுத்தியதிலிருந்து கதையை மேலே தொடர்ந்து சொல்ல வேண்டும்." என்றான்.

"கேளுமையா, ராஜனே!" என்று சரவிளக்கு கதை சொல்ல ஆரம்பித்தது.

சரவிளக்கு கதை சொல்லுகிறதே என்று ஆச்சரியப்பட்டவர்களாய் ஏலாகரம்பையும் மற்றவர்களும் வியப்போடு அமர்ந்திருந்தனர்.

## சரவிளக்கு சொல்லிய கதை

காந்தரூபனை ஆகாய மார்க்கமாகத் தூக்கிச் சென்ற தேவ கன்னிகையர்கள் தங்கள் இருப்பிடமான தேவலோகத்தை அடைந்தனர். அப்போது பூலோகத்தில், உப்பரிகையில் மயக்கத்திலிருந்து கண் விழித்த காந்தரூபி தன் அருகில் தன் நாயகனைக் காணாமல் உப்பரிகை முழுவதும் தேடினாள்; காந்தரூபனைக் காணவில்லை. உடனே வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு தாதிகளிடம் தெரிவிக்க அவர்கள் கெந்தேஸ்வர மன்னனிடம்



ஓடிச் சென்று முறையிட்டனர். மகனைக் காணாது திடுக்கிட்ட அரசன் மயங்கி விழுந்தான். மந்திரிகள் அரசரின் மூர்ச்சையைத் தெளியவைத்து, அவனைத் தேற்றினார்கள். "அரசே! விசனப்படுவதினால் பலனில்லை. அவரவர் விதிப்படி எல்லாம் நடந்தேறும். கவலைப்படாது எல்லாவற்றையும் ஆண்டவன்மீது போட்டுவிட்டு நிம்மதியாயிருங்கள். தங்கள் குமாரன் எந்த விதத்திலாகிலும் திரும்பி விடுவார்" என்றனர்.

அரசன் மிகுந்த மனக் கிலேசமுடையவனாய், பருவ வயதில் மணாளனைப் பிரிந்திருக்கும் மருமகளின் விதியை நினைத்து அதிகக் கவலைப்பட்டவனாய், அந்த மங்கையினுடைய பதிவிரதா தர்மம் காத்துவர வேண்டும் என்பதற்காக ஏழடுக்கு மாட மாளிகையிலே காந்தரூபியை இருக்கச் செய்து, அதைச் சுற்றிலும் ஏராளமாகக் கட்டுக் காவலையும் ஏற்படுத்தியிருந்தான்.

தேவலோகத்தில் ஏழு தேவகன்னிகையரும் நாளொன்றுக்கு ஒருவர் வீதம் காந்தரூபனுடன் முறை வைத்துக் கொண்டு சுகித்திருந்தனர். இவ்வாறிருக்கும் போது, ஏழு கன்னியர்களும் ஒன்றாக யோசித்து காந்தரூபனின் மனைவியான காந்தரூபியும் தங்களைப் போன்ற ஒரு பெண்தானே, அவள் வயிறு எரியக் கூடாது என்று நினைத்து ஏழு நாட்களுக்குப் பிறகு எட்டாம் நாள் அவள் தன் கணவனிடம் சுகித்திருக்கட்டும் என்ற முடிவிற்கு வந்தனர். எட்டாம் நாளிரவு பத்து நாழிகைக்கு மேல் அவர்கள் பூலோகத்தில் சந்திரகிரி சுனைக்கு நீராட வரும்போது, காந்தரூபனையும் எடுத்துவந்து, கட்டுக்காவல் மிகுந்த ஏழாவது மாடத்தில் இறங்கி அங்கு ஏக்கத்துடன் சயனித்திருக்கும் காந்தரூபிக்கு மயக்கமுண்டாகச் செய்து, அவளருகில் காந்தரூபனை ஏகபோகமாக விட்டுவிட்டுச் சென்று சுனையில் நீராடித் திரும்பும் போது அவனைத் தங்களுடன் தூக்கிக் கொண்டு தேவலோகம் போவார்கள். இதுபோன்ற நடப்பு காந்தரூபிக்கோ, காவல் புரியும் தோழியருக்கோ தெரியாது.

சில நாட்கள் இவ்வாறு சென்றன. காந்தரூபி கர்ப்பம் தரிக்கத் தொடங்கினுள். நாலைந்து மாதம் சென்ற பிறகுதான் தோழியர்கள் விஷயத்தை உணர்ந்தனர். திடுக்கிட்டு, உடல் நடுங்க, காந்தரூபியைக் கேட்க அவள் கண்களிலிருந்து நீர் கொட்ட, "தோழிப் பெண்களே, என்னை நீங்கள் அறியமாட்டீர்களா? என் நாயகனை விட்டு மற்றொரு புருஷனைக் கனவிலும் நான் நாடுவேனு? இது ஏதோ மாயமாய் வந்திருக்கிறது. நான் படும் அவஸ்தை போதாதென்று இன்னும் தொல்லைகள் கொடுக்க வந்திருக்கிறது" என்று தெரிவித்தாள்.

அவள் வார்த்தையை நம்பாத தோழியர்கள் எவனே ஒரு சோர நாயகன் கள்ளத்தனமாக வந்திருக்கிறான் என்று நினைத்து அவன் வருவதைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று எவ்வளவோ பிரயத்தனப்பட்டார்கள். ஒன்றும் பலிக்கவில்லை. கடைசியில், அரசனுக்கு விஷயத்தை தெரிவிக்காமலிருந்தால் தங்கள் தலைகள் போய்விடுமென்று நினைத்துப் பயந்து, கெந்தேஸ்வர மன்னனிடம் சென்று நடந்ததை தெரிவித்தார்கள்.

மகன் காணுமற் போய்விட்டபிறகு மருமகள் கர்ப்பவதியாகி யிருக்கும் விஷயத்தை அறிந்ததும் அரசன் அடைந்த வருத்தத்திற்கு அளவேயில்லை. உடனே மந்திரிகளை வரவழைத்து, நடந்ததை தெரிவித்து, இனி என்ன செய்யவேண்டுமென்று கேட்டான். "அரசே! மனுநீதி சாஸ்திரப்படி இராஜ ஸ்திரீகள் தகாத காரியத்தில் ஈடுபட்டால், இராத்திரி பதினைந்து நாழிகைக்கு மேல் அவர்களைத் தலையாரியிடம் ஒப்புவித்து ஆரணியமான காட்டில் கொண்டுபோய் விட்டுவிட வேண்டும். இதுவே அவர்களுக்குச் சரியான தண்டனை" என்று தெரிவித்தார்கள். அவ்விதமே, அரசனும் தன் மருமகளான காந்தரூபியைத் தலையாரிகளிடம் ஒப்புவித்து ஆரணியத்திலே கொண்டு போய்விட்டுவிட்டு வரும்படி உத்தரவிட்டான். தலையாரியும் அவளை அழைத்துச் சென்று நடுக்காட்டில் விட்டுவிட்டு வந்தான்.

கோரமான அந்த இருண்ட காட்டில் திக்குச் திசை தெரியாது காந்தரூபி தடுமாறிய போது, முட்கள் சரீரத்தில் குத்திக் கிழித்தன. காலிலே கற்கள் பட்டு உதிரம் வந்தது. விடிய ஒரு ஜாமம் இருக்கும் பொழுது அலைந்து திரிந்து கடைசியாக ஒரு கொடி வழியைக் கண்டு, அதைப் பின்பற்றி சென்றாள். அப்போது சற்று தூரத்திலே நெருப்பு எரிவது தெரிந்து, அதன் அருகே சென்றாள். அது சந்திரகிரியின் எல்லையிலே உள்ள மயானமாகும். அந்தப் பட்டணத்திலிருந்த சௌந்தரவல்லி என்னும் தாசிக்கு சித்திர வல்லியென்கிற பெண் ஒருத்தி இருந்தாள். அந்தப் பெண் பிரசவ வேதனையால் வயிற்றிலே குழந்தை மரித்துப் போக, அதனுல்

இறந்து விட்டாள். தாசி சௌந்தரவல்லிக்கு வேறு திக்கில்லாத படியால், தன் குமாரத்தியின் பிரேதத்தை எடுத்துக் கொண்டு மயானத்திற்கு வந்து தானே சிதை அடுக்கித் தீயிட்டாள். அந்தத் தீ வெளிச்சத்தை நோக்கித்தான் காந்தரூபி வந்தாள்.

நெருப்பினருகில் சென்று, அங்கு நின்று கொண்டிருந்த தாசியைச் சுடுகாட்டுப் பேய் என்று நினைத்த காந்தரூபி, அதனிடம் சென்று வருந்துவதைவிட நெருப்பிலே விழுந்து உயிரை விடுவதே மேல் என்று தீயைச் சுற்றி மும்முறை வலம் வந்தாள். மூன்றாவது தரம் சுற்றி தீயிலே குதிக்கப் போகும் முன்பு அவளைக் கண்டு திடுக்கிட்டு, தாசியானவள் காந்தரூபியின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தீயில் விழாமல் தடுத்தாள்.

"பெண்ணே! உன்னைப் பார்த்தால் ராஜகுடும்பத்தை சேர்ந்தவள் போல் தோன்றுகிறது. தவிர பூரண கர்ப்பிணி. அப்படியிருக்க நெருப்பிலே விழ ஏன் வந்தாய்?" என்று கேட்டாள் தாசி சௌந்தரவல்லி.

"அம்மணீ! ஏதோ என் கஷ்டம் பொறுக்க முடியாமல் உயிரைவிடத் துணிந்தேன். நீ ஏன் என்னைத் தடுக்கிறாய்?" என்று கேட்டாள்.

"பெண்ணே! உன்னைப் போன்று ஒரு பெண் எனக்கிருந்தாள். அவள் இன்றையத்தினம் இறந்துவிட்டாள். அவளைத் தூக்கி வந்து இதோ கொளுத்திக் கொண்டிருக்கிறேன். குழந்தாய்! நீ நெருப்பிலே விழுந்து ஏன் உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டும்? என்னுடன் என் வீட்டிற்கு வா. உன்னை என் பெண்ணைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாய் பாதுகாக்கிறேன்!" என்று கேட்டாள் தாசி. அதற்குச் சம்மதித்து காந்தரூபி, தாசி சௌந்தரவல்லியுடன் புறப்பட்டுச் சென்றாள்.

ஃ ஃ ஃ

உரிய காலம் கடந்ததும் காந்தரூபிக்குப் பிரசவ வேதனை தொடங்கியது. உடனே தாசி சௌந்தரவல்லி தனக்கு நம்பகமான ஒரு மருத்துவச்சியை அழைத்து, "இப்பெண்ணுக்கு ஆண்பிள்ளை பிறந்தால் கொன்றுவிடு. பெண் குழந்தை பிறந்தால் வைத்துக்கொள்ளலாம்" என்று சொல்லி அவளுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்தாள். அவளும் பிரசவ சமயத்தில் காந்தரூபியின் கண்களைக் கட்டி மறைத்து விட்டாள்! பேரழகும் கோடி சூரியப் பிரகாசமும் பொருந்திய ஆண் குழந்தையொன்று காந்தரூபிக்குப் பிறந்தது. தாசி சௌந்தரவல்லி, ஒரு

மரப்பொம்மையை எடுத்து காந்தரூபியின் அருகில் போட்டுவிட்டு, ஆண் குழந்தையை எடுத்து மருத்துவச்சியிடம் கொடுத்து, மறைவான இடத்திற்குச் சென்று கொன்றுவிடுமாறு உத்தர விட்டாள். மயக்கம் தெளிந்து கண் விழித்துப் பார்த்த காந்தரூபி தனக்கு மரப்பொம்மையே பிறந்ததென்பதைக் கேட்டு பெரும் துயரமடைந்தாள்.

பச்சைக் குழந்தையைத் தூக்கிச் சென்ற மருத்துவச்சி, அதன் அழகைக் கண்டு வியந்து, இப்பிள்ளையைக் கொன்றால் அந்தப் பாவம் தன் ஏழு தலைமுறையையும் இலேசில் விடாது என்று பயந்தவளாய், ஊருக்கு வடக்கே இருந்த அம்மன் கோவில் அருகே உள்ள ஐந்து தலை நாகத்தின் புற்றுக்கருகே அந்தக் குழந்தையை வைத்துவிட்டுப் போய்விட்டாள்.

இவ்வாறு கதை சொல்லிவந்த சரவிளக்கிலிருந்த வேதாளம் சட்டென கதையை நடுவில் நிறுத்திவிட்டு விக்கிரமாதித்த மகாராஜனை நோக்கி "ஹே, ராஜனே! எனக்கு இதுவரைதான் கதை தெரியும்!" என்றது.

"சரவிளக்கே நீ செய்தது சரியல்ல; கணவன் காந்தரூபன் தேவலோகத்தில் ஸப்த கன்னியரின் மோகப் பிடியிலும், நாயகி காந்தரூபியோ தாசி சௌந்தரவல்லியின் வீட்டிலும், அவர்களின் ஆண் குழந்தையோ ஐந்து தலை நாகத்தின் புற்றருகிலும் இருக்க, கதையை அந்தரத்தில் விட்டுவிட்டாய். கதையின் முடிவை அறிய நாங்கள் காத்திருக்கிறோம்" என்று போலி இரத்தின வியாபாரி தெரிவிக்கவே, சரவிளக்கு பின்வருமாறு சொல்லியது: "ஐயா! தேவரீர் என்னை மன்னித்தருள வேண்டும்! இதற்குமேல் கதை தெரியாது. இனிமேல் நடந்த கதையை அறிந்து கொள்ள வேண்டுமானால் ஏலாகரம்பை சாய்ந்து கொண்டிருக்கும் தலையணையைக் கேளுங்கள்."

இதைக் கேட்டு ஏலாகரம்பை அதிசயப்பட்டு இன்னும் என்னவெல்லாம் நடக்கப் போகிறதோ என்று அமர்ந்திருந்தாள். வர்த்தகனான விக்கிரமாதித்தன் உடனே தலையணையிலே வேதாளத்தைப் பிரயோகித்து, "ஏ தலையணையே, மேலே கதையைச் சொல்!" என்று கேட்டான்.

"என்னய்யா ராஜனே! நான் எவ்விதம் கதை சொல்லுவது? பஞ்சு போன்ற மிருதுவான அமைப்பை உடைய என்மீது ஒரு பெண்ணானவள் சாய்ந்து கொண்டிருக்கிறாள். சரியாக மூச்சுவிட முடியவில்லை. நான் எங்கே கதை சொல்லப் போகிறேன்?" என்றது தலையணையில் வந்து புகுந்த வேதாளம்.

உயிரற்ற பொருளான தலையணை பேசுவதைக் கண்டு அதியாச்சரியமடைந்த ஏலாகரம்பை, அதை எடுத்து இருவருக்கும் நடுவில் போட்டு விட்டாள். வர்த்தகனான விக்கிரமாதித்தன், "ஏ தலையணையே! இந்தப் பெண் மிகவும் விவேகமுள்ளவள், உன் வருத்தத்தை அறிந்து, அதை நீக்கி விட்டாள். இனி என் வார்த்தையைத் தட்டாது கதையைத் தொடர்ந்து சொல்!" என்று கேட்கவே, தலையணை சொல்லத் தொடங்கியது.

## தலையணை சொல்லிய கதை



பாம்பு புற்றினருகிலே தனித்து விடப்பட்ட ஆண் குழந்தை அழுது கொண்டிருந்தது. அதன் அழுகுரலைக் கேட்டு புற்றிலிருந்து வெளியே வந்த நாகம் கோடி சூர்யப் பிரகாசம் பொருந்திய குழந்தையைக் கண்டு ஞான திருஷ்டியால் கெந்தேஸ்வரனுடைய குமாரன் காந்தரூபனின் பிள்ளையென்று அறிந்தது. "கெந்தேஸ்வரனுடைய தகப்பனார் முதலான இருபத்தோரு தலைமுறையினர் அந்தப் பாம்பு புற்றிற்கு அபிஷேகம் செய்வித்து, பாலும், பழமும் கொடுத்து வந்திருக்கின்றனர். இனி பிற்காலத்தில் இக்குழந்தை கொடுக்கப் போகிறது" என்று அறிந்து, அப்பிள்ளையைத் தூக்கிக் கொண்டு, பத்திரகாளியம்மன் சந்நிதியில் வைத்து விட்டுச் சென்றது நாக சர்ப்பம்.

பொழுது விடிந்ததும் வழக்கம் போல கெந்தேஸ்வர மன்னன் தன் குலதேவதையான பத்திரகாளி அம்மனைத் தரிசிக்க வந்தான். சந்நிதியிலே குழந்தை அழுது கொண்டு கிடப்பதைக் கண்டு மனமிரங்கி அம்மன் வரப்பிரசாதமாகக் கொடுத்த குழந்தை என்று மகிழ்ச்சி கொண்டு அதை வாரி எடுத்துக் கொஞ்சினான். "என் குமாரன் காந்தரூபன் காணாமற் போய்விட்டதற்காக அம்மன் இக்குழந்தையை அருளியிருக்கிறாள்" என்ற ஆனந்தத்தோடு அந்தக் குழந்தையை அரண்மனைக்கு எடுத்துச் சென்று காந்தரூபனின் தாயாரான தன் பட்டமகிஷியிடம் கொடுத்தான்.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்த மதனகேசரி என்ற அக்குமாரன் பதினாறு வயதை அடைந்தான். ஒருநாள் தன் சினேகிதர்களுடன் யானை, சேனைகள்

ழ ரதத்திலேறி வீதியில் வரும்போது சௌந்தரவல்லித் தாசி நக்கும் வீதியில் வந்தான். அரசகுமாரன் வரும் ாலாகலத்தைக் கண்டு களிக்க வெளியே வந்து எட்டிப் பார்த்த ரந்தரூபி அரசகுமாரனின் ரூபத்தைக் கண்டு தன் யகன்தானே என்று திகைத்து நின்றாள். அருகில் வந்த றகுதான் அவன் தன் நாயகனில்லை என்பதும் இளவயதுப் ள்ளை என்பதும் தெரிந்தது. உடனே காந்தரூபி உள்ளே சென்று ட்டாள். ஆனால் ராஜகுமாரனை மதனகேசரி அவளைப் பார்த்து ட்டான். ஒரு விநாடிதான் அவளைப் பார்த்தான் என்றாலும் தற்குள்ளாக அந்தப் பெண்மணியிடமிருந்த ஏதோ ஓர் கர்ஷணை சக்தியும், ஏதோ ஓர் பாசமும் அவனைக் கவர்ந்திழுப்பது பால் இருந்தது. அந்தக் காந்தரூபியாளின் அழகு வேறு அவனை மய்மறக்கச் செய்து விட்டது.

அரண்மனையை அடைந்ததும் அவன் தன் நண்பர்களை ழைத்து, ஆயிரம் பொன் கொடுத்து, தாசி சௌந்தரவல்லி ன் வீட்டிலிருக்கும் அப்பெண்ணைச் சம்மதிக்கும்படி செய்ய னுப்பினான். பொன்னைப் பெற்றுக் கொண்டு அரசகுமாரன் ருவதற்கு தடையேதுமில்லை என்று தாசி சௌந்தரவல்லியும் சால்லியனுப்பிவிட்டாள். இரவு பதினைந்து நாழிகைக்கு மேல் ன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு தாசி வீட்டிற்கு ாஜகுமாரன் மதனகேசரி கிளம்பினான். எங்கும் இருள் ரவியிருந்தது. தாசி வீட்டின் தெரு வாயிற்படியருகே, காராம் சு ஒன்றும் அதன் கன்றும் கட்டப்பட்டிருந்தன.

அப்போது கன்று தன் தாயைப் பார்த்து, "அம்மா! இவ்வரச மாரன் என்னைத் தாண்டிச் செல்கிறான். இது நியாயமா?" என்று கட்டது:

அதற்குக் காராம்பசு, "இவனோ தாயைப் பெண்டாளப் பாகிறான்! அவனுக்கு எப்படிக் கண் தெரியும்? இதுவும் சய்வான், இன்னமும் செய்வான்!" என்று பதில் அளித்தது.

மிருக பாஷை அறிந்திருந்த மதனகேசரி அந்தக் காராம் சுவின் வார்த்தைகளைக் கேட்டுத் திடுக்கிட்டான். அதன் ார்த்தைகளை அவனால் தாங்க முடியவில்லை. இருந்தும் மேலே ன்ன நடக்கிறது என்பதை அறிய விரும்பியவனாய் உள்ளே சன்றான். தாசி சௌந்தரவல்லியோ அரசகுமாரனை வரவேற்று பசரித்துச் சயனகூடத்தின் மலர் மஞ்சத்தில் உட்காரச் செய்தாள். றகு உள்ளே சென்று, எவ்வளவோ தூரம் மறுத்துக் கெஞ்சும் ாந்தரூபியைப் பலவந்தமாக அலங்கரித்து அரசகுமாரன் மர்ந்திருந்த அறைக்கு அனுப்பி வைத்தாள்.

மிக்க விசனத்தோடு உள்ளே நுழைந்த காந்தரூபியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் மதனகேசரி. அவன் தாயிடம் அமுதம் அருந்தாதவனுன படியால் காந்தரூபியிடம் இத்தனை காலமாக அடங்கிக் கிடந்த தாய்ப்பாலெல்லாம் சுரந்து சரேலென்று அவன் முகத்தில் வீசி அடித்தது. அரசகுமாரன் திடுக்கிட்டெழுந்து காராம்பசு சொன்னது சரியென்று உணர்ந்து அவ்விடத்தை விட்டுக் கிளம்பி ஓடிவிட்டான்.

தாசி வீட்டிலிருந்து புறப்பட்ட அரசகுமாரன் நேராக அரண்மனை சென்று தன் அறையில் படுத்துக் கொண்டான். காலையில் அவனைக் காணுது தேடிவந்த காவலாளர்கள், அறையிலே அவன் படுத்திருப்பது கண்டு அரசனிடம் தெரிவித்தனர். கெந்தேஸ்வர மன்னன் அங்கு வந்து, அவனை எழுந்து வருமாறு அழைக்க, "அரசே! எனக்கொரு சந்தேகம் உண்டு. அதை விளக்குவதாக வாக்கு கொடுத்தாலன்றி நான் எழுந்திருக்க மாட்டேன்" என்றுன். அரசனும் அவ்விதமே வாக்கு கொடுக்க, மதனகேசரி எழுந்து போஜனமருந்தச் சென்றுன்.

பிறகு மந்திரி பிரதானிகள் சூழக் கெந்தேஸ்வர மன்னன் கொலுவிலிருக்கும்போது, ராஜகுமாரனுன மதனகேசரியை அழைத்து, "உன் சந்தேகமென்ன? அதைச் சொல்லு" என்று கேட்டான்.

"அரசே! நான் தங்களுக்குப் பிள்ளை என்று இதுகாறும் நினைத்திருந்தேன். இப்போது சில சந்தேகங்கள் ஏற்பட்டுள்ளன. தாங்கள் தான் என் பிதாவா? அல்லது வேறு ஒருவரா? இதை விளக்காமல் போனுல் நான் உயிரை மாய்த்துக் கொள்வேன்!" என்றுன் மதனகேசரி.

"குழந்தாய்! என் குமாரன் காந்தரூபனையும், அவன் மனைவி காந்தரூபியையும் இழந்து பரிதவிக்கும் காலத்தில் நமது குல தெய்வமான பத்திரகாளி கோவிலுக்குத் தரிசனம் செய்யப்போக, அங்கு அவள் சந்நிதானத்தில் உன்னைக் கண்டு எடுத்து வளர்த்து வந்தேன். இதுதான் எனக்குத் தெரிந்தது!" என்று அரசன் தெரிவித்தான்.

அப்போது மதனகேசரி, "அப்பா! இந்தப் பட்டணத்தில் சௌந்தரவல்லி என்ற தாசி ஒருத்தி இருக்கிறுள். அவளிடத்தில் அழகிய பெண் ஒருத்தி உண்டு. அவர்கள் இருவரையும் இங்கே தங்கள் சமூகத்திற்கு அழைத்து, அந்தப் பெண் அங்கு வந்த விதத்தை விசாரிக்க வேண்டும்" என்றுன்.

உடனே காவலர்கள் சென்று தாசி சௌந்தரவல்லியையும், காந்தரூபியையும் சபைக்கு அழைத்து வந்தனர். அப்போது

காந்தரூபியைக் கண்ட அரசன் திடுக்கிட்டு, தன் மருமகள் போலத் தோன்றுகிறதே என்று வியந்தான். ஆனால் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் "சௌந்தரவல்லியே! இந்தப் பெண் யார்? இவள் உன்னிடம் வந்தவிதமென்ன?" என்று கேட்டான்.

உண்மையைச் சொல்லாவிட்டால் ஆக்கினை வந்துவிடியும் என்று எண்ணமிட்ட தாசி பின்வருமாறு சொன்னாள்:

"மகாராஜா! என் குமாரத்தி பிரசவ வேதனை தாங்காமல் மரித்துப் போய்விட, அவளை மயானத்திற்குக் கொண்டு சென்று தகனம் செய்து கொண்டிருந்தேன். அப்போது பூர்ண கர்ப்பத்துடனிருந்த இந்தப் பெண் தீயிலே விழப்போக நான் தடுத்து வீட்டிற்கு அழைத்து வந்தேன். இவள் பிரசவ வேதனைப்படும் சமயத்தில் மருத்துவச்சியை அழைத்து, ஆண் குழந்தை பிறந்தால் கொன்று விடும்படி சொல்லியிருந்தேன். அவளும் இந்தப் பெண்ணிற்குக் கண்ணைக் கட்டிவிட்டு, பிறந்த ஆண் குழந்தையை எடுத்துச் சென்று விட்டாள். நான் மரப்பொம்மையை எடுத்து அவளருகில் போட்டு விட்டு "இதுதான் பிறந்தது" என்று சொல்லி விட்டேன். மகாராஜா! என்னை மன்னித்து விடுங்கள். இதுதான் எனக்குத் தெரியும்" என்றாள்.

"அம்மா, பெண்ணே! நீ யார்? உனக்கு எந்த ஊர்? நீயேன் நெருப்பிலே விழத் துணிந்தாய்?" என்று கெந்தேஸ்வர மன்னன் அந்தப் பெண்ணான காந்தரூபியைக் கேட்டான்.

"அரசே! என் பெயர் காந்தரூபி. என் தகப்பனார் மகேந்திர புரியை ஆளும் அரசராவார். என் நாயகர் பெயர் காந்தரூபன். என் மாமனார் ஏழடுக்கு உப்பரிகை கட்டினார். அதில் என் நாயகனுடன் இருந்துவரும் நாளையில் என் நாயகனைத் தெய்வீகமாகக் காணாமல் தவிக்கையில், மாயமாகக் கர்ப்பம் உண்டாக, என் மாமனாராகிய கெந்தேஸ்வர மன்னர், என்னை நடுக்காட்டில் கொண்டு விட்டு விட்டார். துயரம் தாங்காமல் நெருப்பிலே விழப் போகையில் இந்தத் தாசியானவள் என்னைத் தடுத்துத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள்" என்றாள் காந்தரூபி.

அதற்குப் பிறகு அரசன் மருத்துவச்சியை அழைத்து விசாரிக்க, அவள் குழந்தையைப் புற்றினருகில் வைத்துவிட்டுச் சென்றதை தெரிவித்தாள். அப்போது மதனகேசரி, தான் தாசி வீட்டுக்குச் சென்றதையும், காந்தரூபியிடமிருந்து தாய்ப்பால் தன் முகத்தில் வீசி அடித்ததையும் தெரிவித்து, "அப்பா! இதில் பெரும் சிக்கலாக இருக்கிறதே? எல்லாவற்றையும் விளக்குங்கள்" என்றான்.

"குழந்தாய்! இதுவரை நாம் கேட்டதெல்லாம் சரிதான். புற்றினருகில் மருத்துவச்சியால் விடப்பட்ட பிள்ளையும் காளியம்மன் சந்நிதானத்திலிருந்து எடுத்து வந்த நீயும் ஒருவர் தானு என்பதை அறிய வேண்டும். வா! இப்பொழுதே தேவியிடம் சென்று அறிந்து கொள்ளலாம்'' என்று புறப்பட்டான் கெந்தேஸ்வர மன்னன்.

காளிதேவியை வழிபட்டு தோத்திரம் செய்து நிற்கையில், தேவி அவர்கள் முன் தோன்றி, "இதோ நிற்கும் மதனகேசரியாகிய இக்குமாரன் காந்தரூபியின் மகனேயாவான்! பாம்புப் புற்றில் கிடந்த இவனை நாகசர்ப்பந்தான் கொண்டு வந்து என் சந்நிதியில் போட்டது! கெந்தேஸ்வர மன்னு! உன் குமாரன் காந்தரூபனின் குமாரன் என்பதால் இவனை உன்னிடம் சேர்ப்பித்தேன்!" என்று தெரிவித்தாள்.

"தேவி! என் தந்தையார் எங்கிருக்கிறுர்கள்? அவர் இல்லாமலிருக்கும் போது என் தாயார் என்னைக் கர்ப்பம் தரித்தது எங்ஙனம்?'' என்று காளியம்மனை நோக்கி மதனகேசரி பிரார்த்தித்தான்.

"குழந்தாய்! தேவலோகத்திலிருந்து சப்த கன்னியர்கள் தினமும் இரவு வேளையில் உச்சியிலிருக்கும் சுனையில் குளித்துச் செல்வது உண்டு. அவ்விதம் வந்து விட்டுப் போகும் போது ஏழாவது உப்பரிகையில் காந்தரூபியின் அருகே உறங்கிக் கொண்டிருந்த காந்தரூபனின் அழகைக் கண்டு மோகித்து அவனை எடுத்துச் சென்றனர். ஒவ்வொருவரும் ஒரு நாள் அவனுடன் சுகித்திருந்து, எட்டாம் நாள் காந்தரூபியின் அருகிலே கொண்டு வந்து விட்டு, குளித்துவிட்டுத் திரும்பும் போது, அவனை மறுபடியும் தேவலோகத்திற்கு அழைத்துச் சென்று விடுவார்கள். இது விஷயம் காந்தரூபிக்குத் தெரியாது. இப்போது காந்தரூபன் தேவலோகத்தில் தேவ கன்னிகைகளுடன் இருக்கிறுன். சோமவாரத்தில் காந்தரூபி விரதமிருந்து அர்த்த ராத்திரியில் சப்த கன்னியரை நோக்கித் தவம் செய்வாளாகில் அவர்கள் தோன்றி என்னவேண்டுமென்று கேட்பார்கள். மாங்கல்ய பிக்ஷை தரவேண்டுமென்று கேட்டால் காந்தரூபனைக் கொண்டு வந்து விட்டுப் போவார்கள்'' என்று அருளி மறைந்தாள் பத்திரகாளியம்மன்.

அவ்வாறே காந்தரூபியும் சோமவாரம் விரதமிருந்து தேவ கன்னியர்களைக் குறித்து தவமிருக்க, அவர்களும் பிரத்தியக்ஷமாகி, "என்ன வேண்டும்?" என்று கேட்டார்கள்.

"தாயே! எனக்கு மாங்கல்ய பிக்ஷை தரவேண்டும்!" என்று காந்தரூபி கேட்க அவர்களும் அதற்கு சம்மதித்துக் காந்தரூபனைக் கொண்டு வந்து விட்டுச் சென்றார்கள்.

மகனைக் கண்ட கெந்தேஸ்வர மன்னன் மிக்க மகிழ்ச்சி அடைந்தவனாய், அவனை மார்புறத் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் விடுத்தான். பிறகு சந்திரகிரிப் பட்டணத்திற்குக் காந்தரூபனை அரசனாக முடி சூட்டி வைத்தான்!

இவ்வாறு சொல்லி முடித்த தலையணையிலிருந்த வேதாளம் "கேட்டீரா, விக்கிரமாதித்த ராஜாவே! திரைச்சீலையும் சரவிளக்கும், தலையணையாகிய நானும் நீர் கேட்டபடியால் கதை சொன்னோம். சாதாரண மனிதர்களுக்கு நாங்கள் கதை சொல்வதேது!" என்றது.

வர்த்தகர் உருவில் வந்திருப்பது விக்கிரமாதித்த பூபதிதான் என்பதை அறிந்த ஏலாகரம்பையும், அவள் பிதாவான சம்புநாத ராஜனும் திடுக்கிட்டு, விக்கிரமாதித்தனின் காலில் விழுந்து தங்கள் அபசாரத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டினார்கள். ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் அவனை வர்த்தகன் என்று எண்ணி கேலி வார்த்தைகள் பேசியதற்காக மன்னிக்கும்படி வேண்டினார்கள்.

விக்கிரமாதித்தன் அவர்களை பயப்படாமலிருக்கும்படி தெரிவித்து, அவரவர்களுக்குத் தகுந்த மரியாதை செய்வித்தான். பிறகு நல்ல சுப முகூர்த்தத்தில் விக்கிரமாதித்தனுக்கும் ஏலாக ரம்பைக்கும் திருமணம் நடந்தது.

அங்கிருந்து விக்கிரமாதித்தன் எல்லோரிடத்திலும் விடைபெற்றுக் கொண்டு தன் பாரியாள் ரம்பையை அழைத்துகொண்டு அங்கு ஒரு பிராமணன் வீட்டில் ஒப்படைத்திருந்த வேதகோவிந்தனின் பிள்ளையையும் கூட்டிக் கொண்டு வேதாளத்தின் மீது ஏறிக் கொண்டான். அது சமயம் தன் காடாறு மாதம் முடிவடைந்து விடவே, உஜ்ஜயினி பட்டணத்திற்கு வந்து சேர்ந்தான். வேதகோவிந்தனைக் கண்டு அவன் வசம் அவனுடைய பிள்ளையை ஒப்புவித்து, அவனுக்கு அனேக பரிசுகளை அளித்துக் கௌரவித்தான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த கோமளவல்லிப் பதுமை, "கேட்டீரா, போஜராஜனே! எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற வல்லமையும், தன்னுயிரைப் போன்று மன்னுயிரைக் காக்கும் திறமையும் உமக்கிருந்தால், இந்த விநோதமான சிம்மாசனத்தில் ஏறி அமரும்! இல்லையெனில் இறங்கிவிடும்!" என்றது.

வியப்புடன் நின்ற போஜராஜன், அது சமயம் சூரியன் அஸ்தமித்து விட்டதால், சிம்மாசனப் படிகளிலிருந்து கீழிறங்கி தன் அந்தப்புரத்திற்குச் சென்று விட்டான்.

(மேற் கூறிய கதை தமிழ் பாடத்தில் உள்ளதாகும். அதற்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பின்வரும் கதை, 22-ம் படிக்குக் காவலான பிரியதர்சனை என்னும் பதுமை சொன்னதாகக் காணப்படுகிறது.)

## சுரங்க வாசலைத் திறந்த கதை



ஒரு சமயம் விக்கிரமாதித்தன் அயல் நாடுகளில் பிரயாணம் செய்து வரக் கிளம்பினான். அனேக யாத்திரை ஸ்தலங்களையும், கோவில் களையும், நகரங்கள், மலைகள், நதிகள் ஆகியவற்றையும் கண்டு களித்து வரும்போது ஒரு நகரத்திற்கு வந்து சேர்ந்தான். அந்நகரத்தை சுற்றிலும் ரத்னமயமான சுவர்கள் இருந்தன. ஆகாயத்தை அளாவும் உயர்ந்த மாளிகைகளும், சிவ விஷ்ணு ஆலயங்களும் நகரத்தில் நிறைந்திருந்தன.

நகரத்துக்கு வெளியே இருந்த விஷ்ணுவின் கோவில் எதிரிலிருந்த குளத்திலிறங்கி நீராடினான் விக்கிரமாதித்தன். பிறகு கோவிலுக்குள் சென்று பிரார்த்தித்தான்.

"பிரபோ! உன்னைப் போற்றுவதற்கு மௌனமாக இருப்ப தொன்றே சிறந்தவழி என்பதை அறிவேன். வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட விஷ்ணுவை பிரம்மாவினால் கூட சரியாக அறிய முடியாது. உன்னுடைய பாதாரவிந்தங்களையன்றி வேறு எதைப் பற்றியும் பேசுவதும், கேட்பதும், நினைப்பதும், ஆச்சர்யிப்பதும் இல்லை. ஸ்ரீநிவாஸமூர்த்தியான புருஷோத்தமா! நான் எப்போதும் உன்னைப் பூசித்து வரும்படி அருள வேண்டும்.

"கைகளாலோ அல்லது கால்களாலோ செய்தவை, செயல், வாக்கு, உடல் ஆகியவற்றால் தெரிந்தோ தெரியாமலோ ஏற்பட்ட என்னுடைய பாவங்கள் அனைத்தையும் மன்னித்து விடு. ஸ்ரீபதி, கருணைக்கடலே, முகுந்தா, என்னை வாழ்த்தி அருள் செய்."

தெய்வ சந்நிதானத்தில் பிரார்த்தனைகளை முடித்துக் கொண்டு விக்கிரமாதித்தன் மண்டபத்தில் வந்தமர்ந்தான்.

அப்போது வழிப்போக்கன் ஒருவன் அங்கு வந்து சேர்ந்தான்.

"ஐயா! தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று அவனிடம் கேட்டான் விக்கிரமாதித்தன்.

"ஐயா! நானோர் தேசாந்திரி. உலகம் முழுவதும் சுற்றி வருகிறேன். தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று அரசனை நோக்கிக் கேட்டான் வழிப்போக்கன்.

"நானும் உன்னைப் போன்று ஒரு யாத்ரீகன் தான்" என்றான் விக்கிரமாதித்தன்.

அந்த வார்த்தையில் அவனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. விக்கிரமாதித்தனின் அருகில் நெருங்கி வந்து கூர்ந்து கவனித்தான்.

"ஸ்வாமி! தாங்கள் யார்? உங்களிடம் அரச வம்சத்திற்குரிய எல்லா அறிகுறிகளும் தென்படுகின்றன. மகிமை நிறைந்தவர் என்பதைத் தங்கள் தோற்றமே அறிவிக்கிறது. நீங்கள் ஓர் அரசனாக இருக்க வேண்டுமென்றே நினைக்கிறேன். தலையில் எழுதி வைத்த எழுத்தை சிவன், விஷ்ணு, பிரம்மா இதர தேவதைகளாலும் அழித்து விடமுடியாது என்று சொல்லியிருக்கிறார்களே!" என்றான் தேசாந்திரி.

"ஆம், ஐயா! நீங்கள் சொல்வது அனைத்தும் உண்மையே! நான் உஜ்ஜயினி நகரத்து வேந்தன் விக்கிரமன்!" என்று தெரிவித்த மகாராஜன் மேலும் தொடர்ந்து.

"விவேகமுள்ள உபதேசம் சிறு குழந்தையிடமிருந்து வந்தாலும் ஒருவன் அதை ஏற்க வேண்டும். அவனிடமிருந்து கெடுதலான யோசனை அவன் நல்ல வயிற்றில் பிறந்தவனாக இருந்தாலும் அவனிடமிருந்து வந்தால் நல்ல வம்சத்தவனாக இருந்த போதும், அவற்றை நிராகரிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஏன் தாங்கள் மிகவும் வருத்தமுடையவராய் காணப்படுகிறீர்கள்?" என்று கேட்டான்.

"என்னுடைய வருத்தத்தின் காரணத்தைத் தெரிவிப்பதால் என்ன பிரயோசனம் ஏற்படப் போகிறது? நான் மிகுந்த கஷ்டத்திலிருக்கிறேன்." என்று மிகவும் அலுத்துக் கொண்டான் அந்த தேசாந்திரி.

"உங்கள் வருத்தத்தின் காரணத்தைத் தயங்காமல் சொல்லுங்கள். அதைப் போக்க என்னாலான உதவியைச் செய்கிறேன்." என்று விக்கிரமாதித்தன் மீண்டும் அவனை வற்புறுத்தினான்.

"அரசே! பக்கத்திலே நீலம் என்றொரு மலை இருக்கிறது. அங்கு காமாக்ஷிதேவி தன் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டிருக்கிறாள். கோவிலின் அருகே பூமிக்குள் செல்லும் சுரங்கம் ஒன்று உண்டு. அதன் வாயில் மூடப்பட்டிருக்கிறது. காமாக்ஷி மந்திரத்தை ஜபித்தால் அச்சுரங்கத்தின் வாயில் திறக்கும். அதனுள் எட்டுவித உலோகங்களைத் தங்கமாக்கும் பாதரசமுள்ள பாத்திரம் இருக்கிறது. பன்னிரண்டு வருஷங்களாக நான் தேவியைப் பிரார்த்தித்து வருகிறேன். சுரங்க வாசல் திறந்த பாடில்லை" என்றான் அவன்.

"ஐயா! உங்களுடன் நான் வருகிறேன். காமாக்ஷிதேவியின் இருப்பிடத்தைக் காட்டுங்கள். நான் தேவியைப் பிரார்த்தித்து திருப்தியடையச் செய்து உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன்" என்றான் விக்கிரமாதித்தன்.

அவனைத் தேசாந்திரி அழைத்துக் கொண்டு கோவிலுக்குச் சென்றான். இரவு இருவரும் மண்டபத்தில் படுத்து உறங்கினர். விக்கிரமாதித்தன் நித்திரையிலே தேவி தோன்றி, "ராஜன்! நீ இங்கு ஏன் வந்தாய்? சுரங்க வாசல் திறக்க வேண்டுமென்றால் முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய ஒருவனுடைய இரத்தத்தைக் கதவில் தெளிக்க வேண்டும்!" என்று சொல்லி மறைந்தாள்.

விழித்து எழுந்ததும் விக்கிரமாதித்தன் சுரங்கத்தின் அருகில் சென்றான். தன் உடைவாளை உருவி, காமாக்ஷி தேவியைப் பிரார்த்தித்தான்.

"தேவி, முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய ஒருவனின் இரத்தத்தை விரும்பும் பட்சத்தில் இதோ என்னுடைய இரத்தத்தைப் பெற்றுக் கொள்" என்று கழுத்தைத் துணித்துக் கொள்ளப்போனான். அப்போது தேவி நேரில் தோன்றி அரசனைத் தடுத்து நிறுத்தினாள்.

"மன்னா! உன் செய்கை என்னை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி விட்டது. உனக்கு விருப்பமானதைக் கேள்; தருகிறேன்" என்று தேவி அருளினாள்.

"தேவி! இச்சுரங்கத்திலிருக்கும் பாதரசமுள்ள பாத்திரத்தை விரும்பி இந்தத் தேசாந்திரி பன்னிரண்டு வருஷகாலமாக துதித்து வருகிறான். அவன் விருப்பம் இதுவரை நிறைவேற வில்லை. அவன் அபிலாஷையை நிறைவேற்றுவது ஒன்றே போதுமானது" என்று வேண்டினான் விக்கிரமாதித்தன்.

தேவியும் அவ்வாறே சுரங்கத்திலிருந்து பாத்திரத்தை எடுத்துக் கொடுத்து மறைந்தாள். அவனிடம் விடைபெற்றுக் கொண்டு விக்கிரமாதித்தன் தன் நகரம் திரும்பினான்.

கதையை முடித்த பதுமை போஜராஜனைப் பார்த்துக் கேட்டது. "ஹே. ராஜன்! வழிப்போக்கன் எவனோ அடையும் கஷ்டத்தைக் கண்டு மனம் வருந்தி அவனுக்காகத் தான் அத்துன்பத்தை ஏற்றுகொண்டு அவன் விருப்பத்தை நிறைவேறச் செய்தான் எங்கள் விக்கிரமாதித்த பூபதி. அவ்விதம் பரோபகார குணமுடைய மகாராஜன் யாருண்டு? சொல்?"

போஜராஜன் பதில் ஏதும் தெரிவிக்காமல், பொழுது அஸ்தமித்து விடவே, சிம்மாசனப்படியை விட்டு கீழிறங்கிச் சென்றான்.

## 4-வது மங்கள கல்யாணிவல்லிப் பதுமை சொல்லிய சண்பகவல்லி கதை



நான்காம் நாட் காலையில் போஜராஜன் மேள தாள முழக்கங்களுடன் பரிவாரத்தினர் புடைசூழ ஆடம்பரமாகக் கொலுக்கூடத்திற்கு வந்து அங்கிருந்த நவரத்தினகசிதமான சிங்காதனத்தின் படிகளில் ஏறலானான். மூன்றாவது படியைக் கடந்து நான்காவது படியில் அவன் தன் வலது காலை எடுத்து

வைத்தபோது, அந்தப் படிக்குக் காவலாக இருந்த மங்களகல்யாணி எனும் பதுமை கைகொட்டிச் சிரித்தது.

"ஹே, போஜராஜரே! நில்லும். நான் அறிந்தவரையில் எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற வீர தீரமும், குண விசேஷமும் உள்ளவரன்றோ இந்தச் சிம்மாசனத்தில் ஏறி அமரமுடியும்?" என்றது பதுமை.

"மங்கள கல்யாணிப் பதுமையே! அப்படி உங்கள் விக்கிரமாதித்த பூபதியிடம் நீ அறிந்த விசேஷ வல்லமை என்ன? அந்தக் கதையைச் சொல்!" என்றான் போஜராஜன். பதுமை அந்தக் கதையை சொல்ல ஆரம்பித்தது.

ஃ ஃ ஃ

நாடாறு மாதம் முடிந்து காடாறு மாதம் புறப்பட்ட விக்கிரமாதித்த பூபதியும், மதிமந்திரியான பட்டியும் ராஜ்ய பாரத்தை மந்திரிமார்களிடம் ஒப்படைத்துவிட்டு வேதாளத்தின் மீது ஏறிக் கொண்டு காடு, மலை, வனாந்திரங்களைக் கடந்து ஆகாய மார்க்கமாக வந்து கொண்டிருந்தனர். வழியே புஷ்பவனம் சூழ்ந்த ஒரு தடாகமும் அதன் கரையிலே அலங்காரமான சத்திரம் போன்ற ஓர் உல்லாசமடமும் இருந்தன. அதைக் கண்ட விக்கிரமாதித்தனும் பட்டியும் தடாகத்தில் இறங்கி தாகம் தீர்ந்து, மடத்திலே சிரமபரிகாரம் செய்து கொண்டிருந்தனர்.

அப்போது சண்பகப்பூவின் வாசனை கமகமவென வீசியது. அதை உணர்ந்த விக்கிரமாதித்தன் தன் மதிமந்திரியை நோக்கி, "பாருமைய்யா, பட்டி! சண்பகப்பூ வாசனை கமகமவென்று வருகிறதே. அதன் காரணத்தை அறிந்து வா!" என்று அனுப்பினான். பட்டியும் வெளியேறிச் சென்று காரணம் அறிய முடியாமல் திரும்பி வந்தான். பின்பு அவ்விருவரும் அவ்வனத்திலே சுற்றி வருகையில் எதிரே வந்த நான்கு வழிப்போக்கர்களிடம் சண்பகப்பூவின் நறுமணம் கமழ்வதின் காரணம் என்னவென்று கேட்டான். அவ்விருவரையும் அவர்கள் அப்போது சத்திரத்தை விட்டு வெகுதூரம் அழைத்துச் சென்று, "ஐயா! நீங்கள் கேட்டதற்கு உடனே பதில் சொல்லாமல் இவ்வளவு தூரம் அழைத்து வந்ததற்கு எங்களை மன்னித்து விடுங்கள். அந்தச் சத்திரத்தில் ஆண் வாடையே படக்கூடாது. இங்கிருந்து காதவழி தூரத்தில் விஜயநகரம் என்றொரு பட்டணம் இருக்கிறது. அப்பட்டணத்தின் அரசனான விஜயரங்க ராஜனின் மகளே சண்பகவல்லி. அவள் பிறக்கும் போதே சண்பகப் பூ வாசனையுடன் பிறந்தாள். அதனால் அவளுக்குச் சண்பகவல்லி என்று

பெயரிட்டனர். அவளுக்கு இருபத்திரண்டு வயதாகிறது. அவள் புஷ்பவதியான பன்னிரண்டாவது வயதிலிருந்து இன்னும் பன்னிரண்டு வயதாகும் வரையில், ஆண்வாடையே கூடாதென்று அவள் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறாள். அவள் விஜயநகர பட்டணத்திலிருந்து ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் தாதிப் பெண்களுடனே இங்கு வந்து ஆனந்தமாக நீராடி, சத்திரத்திலே தன் தாதிப் பெண்களுடன் ஆடிப்பாடி சதுரங்கம் விளையாடி ஏகபோகமாகவும் கோலாகலமாகவும் பொழுதைக் கழித்துவிட்டுச் செல்வாள். வெள்ளிக் கிழமையன்று அவள் புறப்பட்டு வரும் வழியில் ஆண்பிள்ளைகள் ஒருவரும் வரக் கூடாதென்று வியாழக்கிழமையே யானை மீது முரசறிவிப்பார்கள். தவிர, அவள் தனியே ஒரு கோட்டை கட்டி ஆண் வாடையே இன்றி கன்னிமாடத்திற்குள் இருந்து வருகிறாள். அந்தக் கோட்டையின் பக்கங்கூட ஆண்கள் போகக்கூடாதென்று தடையுத்தரவு போடப்பட்டிருக்கிறது. தடையை மீறி ஆண்கள் எவராவது அந்தக் கோட்டைக்குள் நுழைந்து விட்டால் அவர்கள் சிரசாக்கினைக்கு உட்பட வேண்டியதுதான். அந்தச் சண்பகவல்லியாள் வந்தமரக்கூடிய சத்திரத்திலே நீங்கள் அமர்ந்திருந்த செய்தி தெரிந்தாலே தலையை வெட்டிப் போடுவார்கள்! இப்போதே போய்விடுங்கள்!" என்று தெரிவித்து விட்டுச் சென்றனர்.

அப்போது விக்கிரமாதித்தன் மந்திரியைப் பார்த்து "கேட்டீரைய்யா பட்டி! இதற்கென்ன செய்வது? அந்தச் சண்பக வல்லியாளின் சரீரத்தினின்று எழும் வாசனையே இவ்வளவு மேன்மையானதென்றால் அவள் எவ்வளவு அழகுள்ளவளாக இருக்க வேண்டும்? அவளைச் சந்தித்து அவள் கொண்டுள்ள கன்னி விரதத்தை மாற்றி மணம்புரிய வேண்டும்! இதற்கு ஓர் உபாயம் சொல்!" என்றான்.

"ராஜாதி ராஜனே! அந்தச் சண்பகவல்லி ஒரே அரசகுல மங்கையாகப் பிறந்தும் ஆண்வாடை கூடாதென்று கன்னி விரதம் இருப்பதற்கு என்ன காரணமென்பதை நாம் முதலில் அறிய வேண்டும். நாளை வெள்ளிக் கிழமையானபடியால் சண்பகவல்லி தன்னுடைய தோழியரோடு இங்கு நீராடி விளையாடிப் போக வருவாள்! அப்போது நம்மில் ஒருவர் அவளுடன் எந்த விதத்திலாவது தந்திரோபாயமாகச் சென்று அவள் கன்னி விரதம் அனுஷ்டிப்பதற்குரிய காரணத்தை முதலில் அறிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும். அரசே! தாங்கள் விருத்தாப்பிய வடிவம் புனைந்து முதுகிழவரைப்போல் மறைந்திருங்கள். நான் ஒரு யௌவனப் பெண்ணாக வேடந்தரித்து அவளுடன் சென்று முடிந்தவரை அறிந்து வருகிறேன்" என்றான் பட்டி.

மறுநாள் வெள்ளிக்கிழமையன்று பகல் பத்து நாழிகை நேரத்தில் ஆயிரம் தாதிமார் புடைசூழ, மோகனுங்கிகளைத் தூக்கி வரும் முத்துப் பல்லக்கில், சண்பகவல்லி புறப்பட்டுச் சில தாதியர் சாமரை வீச, சில கன்னியர் கட்டியங் கூற, சில செல்வியர் கானமிசைக்க வெகு விஞேதமாகவும், ஆடம்பரமாகவும் மண்டபத்தை நோக்கி வந்தாள். செடி மறைவில் தொண்டு கிழவனைப் போல ஒளிந்திருந்த விக்கிரமாதித்தன், அந்த முத்துப் பல்லக்கு கடந்து போகும் போது. அதில் சுந்தரவடிவமாய் சண்பகவல்லியைப் பார்த்துக் கொண்டு மோகமதிகரித்தவனுன்.

அழகிய பெண்ணுகை வேடமணிந்த பட்டியோ, ஆயிரம் தாதியர்களோடு தானும் ஒருத்தியாகக் கலந்து கொண்டு போனுன்! சண்பகவல்லி வழக்கம் போல் நீராடிச் சத்திரத்தில் கோலாகலமாக இருந்து விட்டுக் கன்னிக் கோட்டைக்குச் சென்றபோது, பட்டியாகிய போலிப் பெண்ணும் அவர்களுடன் கோட்டைக்குள் நுழைந்தான்.

முதல் வாசலைக் கடக்கும் போது ஆயிரம் தாதிமார்களில் சிலர் முதற் வாசற்படியிலேயே நின்று விட்டார்கள். இரண்டாவது வாசலில் சிலர் நின்று விட்டார்கள். இவ்வாறு ஏழு வாசல்களிலும் தாதியர்கள் பகுதி பகுதியாக நின்று கொண்டேயிருந்தார்கள். எட்டாவது வாசலைச் சண்பகவல்லியும், நான்கு தாதிமார்களும் மட்டும் கடந்து சயன மண்டபத்திற்குள் சென்றனர். யௌவனப் பெண்ணுகை வேடம் தரித்து வந்த பட்டி ஏழாவது வாசற்படியிலே நின்று விட்டாள். இனியும் தொடர்ந்து சென்ருல், "நீ யாரடி?" என்று சண்பகவல்லி கேட்டு விடுவாளாகில் பதில் மொழி என்ன கூறுவது என்ற சந்தேகம் எழக்கூடுமென்று நினைத்துப் பட்டி வந்த வழியே திரும்பி விட்டான்.

பட்டி எதை உத்தேசம் செய்து வந்தானே, அந்தக் காரியம் நிறைவேறவில்லை. தோல்வியுடன் விக்கிரமாதித்தனின் எதிரில் போய் நிற்பது நன்ருயிருக்காது என்று உஜ்ஜயினி பட்டணம் சென்று, அம்மனிடம் பிரார்த்தித்து, சண்பகவல்லியின் விரதத்திற்கான காரணத்தை அறிய வேண்டுமென்று புறப்பட்டான். போகும் வழியில் அதிக வெய்யிலாய் இருந்ததால், குளத்தங்கரை ஒன்று தென்படவே அதில் நீரருந்தித் தாகவிடாய் தணிந்து, அந்தக் குளத்தங்கரையிலுள்ள ஓர் ஆலமரத்தடியில் சற்று நேரம் படுத்துக் களைப்பாறிக் கொண்டிருந்தான்.

அவ்வனத்திலே ஒரு ரிஷியும் அவர் பத்தினியாரும் வெகு காலமாகத் தவம் செய்து வந்தனர். அந்த ரிஷி, குளத்திற்கு நீராட வந்தபோது ஆல மரத்தடியில் படுத்த பட்டியைப் பார்த்து, "ஆஹா! இந்த இளைஞன் எவ்வளவு அழகாக இருக்கிருன்? என்

பத்தினி இந்தச் சுந்தரனைப் பார்த்தால் மோகம் கொண்டு விடுவாள்!" என்று நினைத்து ஆணைப் பெண்ணாக்கக் கூடிய மூலிகை வேர் ஒன்றை அங்கு வளர்ந்திருந்த ஒரு செடியிலிருந்து கிள்ளியெடுத்துப் பட்டியின் மீது போட்டு விட்டுப் போனார். உடனே பட்டியும் ஆணுருவம் நீங்கி பெண்ணாக மாறி விட்டான்.

ரிஷி ஸ்நானம் முடித்துக் கொண்டு போன சிறிது நேரத்துக்கெல்லாம், நீராட ரிஷி பத்தினி அவ்வழியே வந்தபோது, ஆல மரத்தடியில் பெண் ரூபமாகப் படுத்திருக்கும் பட்டியைப் பார்த்து, "ஆஹா! இந்தப் பெண் எவ்வளவு அழகாக இருக்கிறாள்? இவள் தேவ கன்னியோ? ராஜ கன்னியோ? இந்த சுந்தர ரூபவதியை என் கணவர் கண்டால் என்னை விட்டு விட்டு இவளிடம் மையல் கொண்டு சென்று விடுவார் அன்றோ?" என்று நினைத்தாள். உடனே பெண்ணை ஆணாக்கக் கூடிய சக்தி வாய்ந்த மூலிகை வேர் ஒன்றை மற்றொரு செடியிலிருந்து பறித்தெடுத்து, பெண் ரூபமாகப் படுத்திருக்கும் பட்டியின் மீது போட்டு விட்டுச் சென்றாள். உடனே பட்டியும் பழையபடியே ஆண் உருவை அடைந்தான்.

இதைக் கண்ணுற்ற பட்டி காளிமாதேவியே இவ்வாறு வந்து அருளியதாக நினைத்து ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் மாற்றக் கூடிய இரண்டுவித மூலிகை வேரையும் எடுத்துக் கொண்டு விக்கிரமாதித்தனிடம் திரும்பினான். விருத்தாப்பிய வடிவம் புனைந்து பொழுது அஸ்தமிக்கும் வரை காத்திருந்த விக்கிரமாதித்தன், "இன்னும் பட்டி வரவில்லையே? போன இடத்தில் என்ன நேர்ந்ததோ?" என்று நினைத்து சுய வடிவமாகி ஆயுதங்கள் எடுத்துக் கொண்டு போகும் தருணத்தில் நல்ல வேளையாகப் பட்டியும் வந்து சேர்ந்தான். "பட்டி, இவ்வளவு நேரம் என்னைத் தவிக்கவிட்டுச் சென்றுவிட்டாயே?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

பட்டி தான் சண்பகவல்லியாளின் முத்துப் பல்லக்கைத் தொடர்ந்து அவளுடைய அரண்மனை கோட்டைக்குள் சென்றதும், ஏழாவது வாசலைத் தாண்டிப் போக முடியாமல் திரும்பி வந்ததும், உஜ்ஜயினி காளி கோயில் நோக்கிச் செல்லும் வழியில் அதிசய வேர்களை அடைந்ததுமான விவரங்களைத் தெரிவித்து, "அரசே! இவ்வேரின் உதவியால் உம்மை பெண்ணாக்கி, விஜயரங்க ராஜன் வசம் ஒப்புவிக்கிறேன். நீங்கள் சண்பகவல்லியுடன் பழகி அவள் கன்னி விரதத்தின் ரகசியத்தை அறிய முயற்சி செய்யுங்கள்!" என்றான்.

பிறகு பட்டி ஒரு ராஜனைப் போல் வேடம் புனைந்து விக்கிரமாதித்தனைப் பெண்ணாக்கி, அவனைப் பட்டி தன் பத்தினியைப்

போல் தன் பின்னால் நடந்து வரச் செய்து, சண்பகவல்லியின் தந்தையான விஜயரங்க ராஜனிடம் அழைத்துச் சென்றான். அவனைப் பட்டி நோக்கி, 'விஜயரங்க மன்னா! என் பெயர் சல்லியராஜன். நான் இருப்பதும், அரசாண்டதும் வீமாபுரி தேசமாகும். இதோ நிற்கும் என் மனைவியாகிய விக்கிரம பெண்ணாகப் பட்டவள் உஜ்ஜயினி பட்டணத்தை அரசாளும் விக்கிரமாதித்த மகாராஜனின் தங்கையேயாவாள்! நெடுநாளாய் நான் விக்கிரமாதித்தனுக்குக் கப்பம் கட்டி வருவது வழக்கம். மூன்று வருஷகாலமாய் நாட்டில் மழையின்மையால் நாட்டில் பஞ்சம் தோன்ற நான் கப்பம் கட்டாமல் இருந்து விட்டேன். கப்பம் செலுத்துவதற்குப் பூஸ்திதி முதலியன பொருள்களை யெல்லாம் விற்று செலுத்தியும் தீராமல் ஆயிரம் பொன் பாக்கியாக நின்றுவிட்டது. அதற்காக தன் சகோதரி என்றும் பார்க்காமல், "உன் மனைவியை எங்காகிலும் அடமானம் வைத்தாவது, பாக்கி ஆயிரம் பொன் பணம் வாங்கி கட்டு" என்று விக்கிரமாதித்தன் கடுமையாக கண்டித்துச் சொல்லி விட்டான். மனம் பொறாத நான் தங்களிடம் வந்திருக்கிறேன். என் மனைவியைத் தங்களிடம் அடமானமாக விட்டுச் செல்கிறேன். ஆயிரம் பொன் கொடுத்து உதவுங்கள். உமது பொன்னுக்குப் பழுது வராமல் பிறதேசங்களுக்குச் சென்று நான் என்ன பாடுபட்டாவது, யாசகம் செய்தாவது பணம் சம்பாதித்துக் கொண்டு வந்து, பணத்தைத் திருப்ப கொடுத்துவிட்டு என் பத்தினியாளை மீட்டுச் செல்கிறேன்" என்றான்.

அதற்கு விஜயரங்க மன்னன், "சல்லிய ராஜரே, உம்மையும் அந்த விக்கிரமாதித்தன் தன் தங்கை புருஷன் என்றும் பாராமல் பாடுபடுத்தினால் என்னை என்ன செய்வாரோ தெரியாது! நீர் உமது மனைவியை அடகு வைக்கத் தேவையில்லை. நான் ஆயிரம் பொன் தருகிறேன்" என்றான்.

"மன்னவா! அப்படி சொல்லாதீர்கள். விக்கிரமாதித்தன் என்னை நம்பமாட்டான். நான் இவ்வளவு சுலபமாகப் பணத்தை வைத்துக் கொண்டு ஏமாற்றியதாக நினைப்பான். யாசகத்தால் வரும் பணத்தையும் ஏற்றுக் கொள்ள மாட்டான். ஆகவே, உம்முடைய குமாரி சண்பகவல்லி தனிக் கோட்டை கட்டி கன்னி விரதம் காத்து வருகிறதாகக் கேள்விப்பட்டேன். சண்பகவல்லி யின் பாதுகாப்பில் என் பத்தினி விக்கிரமப் பெண் இருப்பாளேயாகில் எனக்குக் கவலையில்லை" என்றான் சல்லிய ராஜனாக வந்த பட்டி.

அவ்விதமே சல்லிய ராஜனுக்கு விஜயநகர மன்னன் ஆயிரம் பொன் கொடுத்ததும், விக்கிரமப் பெண்ணை அவ்விடம் விட்டு

விட்டு பட்டிமட்டும் வெளியே சென்றான். அவன் உஜ்ஜயினி பட்டணத்திற்குப் போவது போல் போக்குக் காட்டிவிட்டு, விஜய நகரத்தின் எல்லையிலிருந்து ஒரு காட்டை அடைந்து ஆயிரம் பொன்னையும் பூமிக்கடியில் புதைத்து விட்டு, ஓர் அணிலை பிடித்துக் கொன்று, கூடுவிட்டு கூடுபாயும் வித்தையின் மூலம் அந்த அணிலின் உடலிலே தான் புகுந்து கொண்டு, தன் உடலைப் பாதுகாக்கும்படி வேதாளத்தை நிறுத்திவிட்டு, அணிலின் உருவத்திலே சண்பகவல்லியின் கோட்டைக்குள் வந்து, சண்பகவல்லியின் சப்ரகூட மஞ்சத்தின் மேல் கட்டிலின் விதானத்திலே ஒளிந்திருந்தான். சல்லிய ராஜன் சென்றதும் விஜயநகர மன்னன் தன் குமாரி சண்பகவல்லியின் கோட்டைக்கு விக்கிரமப் பெண்ணை அழைத்து வந்து அவளிடம் ஒப்புவித்துச் சென்றான்.

விக்கிரமப் பெண்ணும் சண்பகவல்லியும் இளமைப் பருவத்தின் குறுகுறுப்போடு மிகவும் சிநேகமாகி பகற் பொழுதில் சொக்கட்டான்.. சதுரங்கம், சோழி முதலியன ஆட்டங்கள் ஆடிப் பொழுது போக்குவதும், இராக் காலங்களில் வீணை முதலான வாத்தியங்களிசைத்து ஆடிப்பாடி மகிழ்வதுமாக விளங்கி பிரிக்க முடியாதவர்களாகி, ஒரே சப்ரகூட மஞ்சத்தில் ஒன்றாகப் படுத்துறங்குவதுமாக இருந்து வந்தனர்.

அந்தப் பஞ்சணையின் மேல்விதானத்திலே அணிலின் ரூபத்தில் பட்டி ஒளிந்திருந்து கவனிப்பதும் விடிய நான்கு நாழிகைக்கெல்லாம் எழுந்து காட்டிற்குப் போய் விடுவதுமாய் இருந்து வந்தான்.

இவ்வாறிருக்கும் நாளையிலே, ஒரு நாளிரவு விக்கிரமப் பெண் பின்வருமாறு யோசித்தாள். "நாம் இந்தப் பெண் ரூபத்தில் காலம் கடத்தி வருகின்றோமேயன்றி, ஆண் வாடை கூடாதென கன்னி விரதமிருக்கும் சண்பகவல்லியின் அந்தரங்கத்தை வெளிப் படுத்தவில்லையே!



காடாறு மாதம் வேறு முடியப் போகிறதே! இனி ஒரு க்ஷணங்கூட சும்மா இருக்கக் கூடாது!" இவ்வாறு யோசித்த விக்கிரமப் பெண்,

உடனே ஏதோ விசாரப்பட்டவள் போல் வேண்டுமென்றே தனியாகச் சென்று படுத்திருந்தாள். அவள் முகம்வாடி இருப்பதைக் கண்ட சண்பகவல்லி, "தோழி! உன் முகம் வாடியிருப்பதின் காரணமென்ன? என்னிடம் சொல்" என்று கேட்டாள். விக்கிரமப் பெண்ணோ ஒன்றும் பதில் பேசாமல் தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளை ஆசையுடன் சண்பகவல்லி தன் சப்ரகூட மஞ்சத்திற்கு அழைத்து வந்து அதில் அமர்த்தி, "தோழி! உன் உள்ளத்தைத் துன்புறுத்தும் துயரம் என்னவென்பதை என்னிடம் சொல்" என்று சண்பகவல்லி பரிந்து கேட்கவே, "நான் சொல்லுவதால் என் கஷ்டம் நீங்கி விடுமா? இல்லை, என் விசாரத்தைச் சொன்னால் அதை தீர்த்துவிடப் போகிறாயா?" என்று சற்று சலிப்போடு சொன்னாள் விக்கிரமப் பெண்.

"கண்ணே தோழி! உடல் இரண்டானாலும் உயிர் ஒன்றெனப் பழகும் என்னை அப்படியா நினைத்துக் கொண்டாய்? முன் காலத்தில் இருவர் பிராண சிநேகிதமாய் இருந்த கதை ஒன்றைச் சொல்லுகிறேன். அதைக் கேட்ட பிறகாவது உன் உள்ளத்திலிருப்பதைச் சொல்லுவாய்!" என்று சண்பகவல்லி சொல்லிவிட்டு அந்தக் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள்.



## சண்பகவல்லி சொல்லிய வேடன் கதை

சதுரகிரி பட்டணத்தை சைந்தவனென்ற அரசன் ஆண்டு வந்தான். அவனுக்குச் சித்ரசேனன் என்ற மகன் பிறந்தான். சித்ரசேனன் சிறு வயதில் படிக்கையில் வில்லிய சிங்கன் என்ற வேடச் சிறுவனுடன் சிநேகம் கொண்டான். அவர்கள் இணைபிரியாத நண்பர்களானார்கள். இனி எக்காலத்திலும் பிரிவதில்லை எனவும் வாக்குதத்தம் செய்து கொண்டார்கள். நாளடைவில் ராஜகுமாரனை சித்ரசேனன் பெரியவனாகி, அப்பட்டணத்தின் அரசனாக முடி சூட்டப்பட்டான்.

அவன் அரசனான பிறகு மிகுந்த கஷ்டத்தில் அவதிப்பட்ட வேடகுமாரனை வில்லியசிங்கன் தன் நண்பனை அரசனைக்

கண்டு ஏதாகிலும் உதவி புரியுமாறு கேட்கலாமென்று, தினமும் அரண்மனைக்கு வந்து பகல் முழுவதும் வாசலில் அரசனுக்காகக் காத்திருப்பான். அரசனோ போகும் பொழுதும் வரும் பொழுதும் அவனை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை! "இவ்வளவுதான் உன் சிநேகிதமா?" என்று வருந்திய வில்லியசிங்கன் இனி வயிற்றுப் பிழைப்பிற்கு வழி தன் குலத்தொழில்தான் என்று எண்ணி வில்லையும், அம்பையும் எடுத்துக் கொண்டு மனம் வெறுத்து காட்டிற்குச் சென்றான். ஆனால் அவன் சிறுவயதிலே முறையான படி அத்தொழிலை கற்காதபடியாலே ஒரு காட்டேரந்திகூட சிக்கவில்லை. அந்திப் பொழுதும் அஸ்தமிக்கத் தொடங்கியது. காட்டிலே மிருகங்களைத் தேடி அலையும் போது வில்லியசிங்கன் இருளில் வழி தப்பிச் சென்று ஒரு மலைக்குகையைக் கண்டான். அதனுள் விகாரமான ஒரு முனிவன் தன் தவ மகிமையால் ஏதோ ஒரு தேசத்து ராஜகுமாரி ஒருத்தியைத் தூக்கிக் கொண்டு வந்து அந்தக் குகையில் வைத்து அவள் மடியிலே சிரம் வைத்து அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான்.

வேடனைக் கண்ட பேரழகி, "ஏ வேடா! நீ என்ன காரியம் செய்தாய்? நீ ஏன் இங்கு வந்தாய்? இந்த உக்கிர முனிவன் நித்திரை தெளிந்து எழுந்துவிட்டால் உன்னையும் என்னையும் அழித்துவிடுவான்! போய்விடு" என்று சைகை காட்டினாள். உடனே வில்லியசிங்கன் பயந்து நடுங்கியவனாய் மலைக்குகையை விட்டு வெளியே ஓடி வந்தான்.

"இந்தப் பெண் தேவ கன்னிகை போன்றிருக்கிறாள். நம் பால்ய சிநேகிதனான அரசனுக்குத் தகுந்த பெண் அன்றோ? அதனால் நமக்கும் அனுகூலம் ஏற்படும்!" இவ்விதம் நினைத்த வில்லியசிங்கன், நேராக அரண்மனைக்கு வந்து அதிசயம் கொண்டு வந்திருப்பதாகக் காவற்காரர் மூலம் செய்தி சொல்லி அனுப்பி அரசனைச் சந்தித்து காட்டிலே தான் கண்ட அதிசயத்தைத் தெரிவித்தான்.

உடனே சித்திரசேன மன்னன் அகமகிழ்ந்து, பழைய நட்புரிமை கொண்டாடி, "நண்பா! ராஜாங்க அலுவல்களிலே உன்னை மறந்து விட்டேன். என்னை மன்னித்துவிடு. இப்போதே நாமிருவரும் அங்கு சென்று அம்முனிவனிடமிருந்து அப் பெண்ணை மீட்டுவருவோம். நீ வழிகாட்டு! என்று தெரிவித்துத் தன் பஞ்சகல்யாணி குதிரையில் ஏறி வேட நண்பனுடன் விரைந்தான்.

அவன் மலைக்குகையை அடைந்ததும், "நண்பா! நான் சொல்லும் உபாயப்படி நடந்துகொள். அதோ அமர்ந்திருக்கும் சுந்தராங்கியின் மடிமீது அந்த அகோர முனிவன் சிரம் வைத்து

அயர்ந்து உறங்குகிறான். அவன் கண் விழிப்பதற்குள் காரியத்தை முடிக்கவேண்டும்! குகைக்குள் சென்று முனிவனின் சிரத்தை அசையாமல் உன் மடிமீது வாங்கி வைத்துக் கொண்டு அந்தக் கன்னிகையை வெளியே வரச் சொல். அவள் வந்ததும் அவளைக் குதிரைமீது ஏற்றி வைத்துவிட்டு உடனே நான் வந்து முனிவனை இரு துண்டுகளாக வெட்டி எறிகிறேன்!" என்றான்.

அதன்படி வில்லியசிங்கன் குகைக்குள் சென்றான். அவனைக் கண்டதும் அந்தக் கன்னிகை. "அட மூடா! முன்னொருதரம் வந்தபோது நான் தெரிவித்ததை மறந்துவிட்டாயா? உனக்குக் காலம் நெருங்கிவிட்டதா?" என்று கேட்டாள்.

"பெண்ணே! நான் வந்திருப்பது உன் நன்மைக்காக அன்றி வேறில்லை. இம்முனிவனுடன் எவ்வளவு காலம்தான் கஷ்டப்படுவது? என் நண்பனான சதுரகிரி பட்டணத்து அரசன் வெளியே காத்திருக்கிறான். அயர்ந்து உறங்கும் முனிவனின் தலையைச் சிறிதும் அசையாமல் மெதுவாக உன் மடிமீதிருந்து எடுத்து என் மடிமீது தாங்கிக் கொள்ளுகிறேன். நீ வெளியே சென்று அரசனை வரச்சொல். இம்முனிவனைக் கொன்று உன்னை அழைத்துச் செல்லுகிறோம்." என்றான் வேடன் வில்லியசிங்கன்.

அந்த மங்கையும் அதற்குச் சம்மதித்து அவ்வாறே முனிவன் தலையை வேடனின் மடிமீது வைத்துவிட்டு வெளியே சென்றாள். அவளைக் கண்டதும் மோகாவேசம் கொண்ட சித்ரசேனராஜன் அவளை அடைந்ததும் "இனி வேடன் கதி எப்படியானால் என்ன? நாம் இனி ஒருகணமும் இங்கிருக்கக்கூடாது" என்று அவளை அள்ளியணைத்துக் குதிரைமீது ஏற்றிக்கொண்டு தன் தலை நகரத்தை நோக்கி காற்றெனப் பறந்து சென்றுவிட்டான்!

வேடனோ வெகு நேரமாகக் காத்திருந்தும் தன்னைக் காப்பாற்ற தன் நண்பன் வராததைக் கண்டதும் தேகம் நடுநடுங்கவே, அவன் மடியில் தலைவைத்துப் படுத்திருந்த முனிவன் கண் விழித்துக் கொண்டான். அரசகுமாரியைக் காணாது வேடன்மீது கோபித்து சாபம் கொடுக்கையில், முனிவனின் காலிலே வேடன் விழுந்து, நடந்ததைத் தெரிவித்து, மன்னிக்கும்படி வேண்டினான்.

"அடே மூடா! உனக்கு அறிவு எங்கே போய்விட்டது? கூடத் தகாத நண்பனுடன் நட்புகொண்டு அவனுக்காக அடாத செயல் புரிந்ததின் பலனைக் கண்டாயா? உன்னை ஆபத்தில் திண்டாட விட்டுவிட்டு அவன் அற்புத சுந்தரியுடன் அந்தப்புரத்திற்குச் சென்றுவிட்டான். இவன்தான் இணைபிரியா நண்பனா? சிநேகிதத்தின் நன்மையை விளக்கும் விதமாய் முற்காலத்தில் நடந்த ஒரு கதையைச் சொல்லுகிறேன் கேள்" என்று சொல்லி விட்டு கதையை ஆரம்பித்தார்.

# இரு நண்பர் கதை



சரயுநதி தீரத்தில் பிரமா புரி என்ற பட்டணத்தில் இராஜகுமாரனென சன்மார்க் கனும், மந்திரிகுமாரனென தனபத்திரன் என்பவனும் உயிருக்குயிரான சிநேகத் துடன் இருந்து வந்தார்கள். அவர்கள் இருவருக்கும் விவாக வயது வந்ததும் சோழ தேசத்து இராஜனென குசனின் குமாரி சுரதவல்லி யை இராஜகுமாரனும், கலிங்க தேசத்து ராஜகுமாரியை மந்திரிகுமாரனும் மணந்து கொண்டார்கள். பிறகும் அவ்விரு பெண்களும் தங்கள் தாய் வீட்டிலேயே இருந்து வந்தார்கள். இராஜகுமாரனும், மந்திரிகுமாரனும் ஒருநாள் தங்கள் மனைவிமார்களைத் தாய் வீட்டிலிருந்து தங்கள் நாட்டிற்கு அழைத்து வருவதற்காக சோழ தேசம் புறப்பட்டுச் சென்றார்கள்.

இராஜகுமாரன் முன்னும் மந்திரிகுமாரன் பின்னும் நடந்து செல்லுகையில், வழியில் ஒரு மரத்திலிருந்த பக்ஷியானது முன்னால் போகிறவனுக்கு சாவு காத்திருக்கிறது!" என்றது. பறவைகளின் பாஷையை அறிந்திருந்த மந்திரிகுமாரன் சட்டென்று தன் ஆருயிர் நண்பனென ராஜகுமாரனைத் தன் பின்னால் வரச்செய்து தான் முன்னே நடந்து சென்றான். சிலதூரம் சென்றதும் மறுபடி அந்த பக்ஷியானது. "பின்னாலே போகிறவனுக்கு சாவு" என்று சொல்லவே, அதனால் கிலேசமடைந்த மந்திரிகுமாரன் தன் நண்பனின் கையைப் பிடித்துக் கொண்டு அவனை முன்னும் பின்னும் போகவிடாமல் தன் வலப்பக்கமே சரி சமமாக நடந்துவரும்படி செய்தான்.

சாவு எங்கே காத்திருக்கும் என்று சிந்தித்துக் கொண்டிருந்த மந்திரிகுமாரனுக்கு, இராஜகுமாரனின் மாமனரான குச மகாராஜனின் சோழ தேசத்தில்தான் சாவு காத்திருக்கும் என்ற சந்தேகம் உண்டாயிற்று. சோழ தேசத்தின் எல்லையை அவர்கள் அடைந்ததும், குச மகாராஜனுக்குச் செய்தி அனுப்பினார்கள். மகாராஜனும் அவர்களை மேளதாளத்துடன் ஆடம்பரமாக வரவேற்று உபசரித்து தன் மருமகனென இராஜகுமாரனுக்கு ஒரு தந்தப் பல்லக்கையும், மந்திரிகுமாரனுக்கு ஒரு பச்சைப்

பல்லக்கையும் அனுப்பினுன். இதில் ஏதாகிலும் சூது இருக்கக் கூடுமென்று பயந்த மந்திரிகுமாரனை குணபத்திரன் தன் நண்பனுக்கு வந்த பல்லக்கில் தானும், தனக்கு வந்த பல்லக்கில் இராஜகுமாரனையும் ஏறச்செய்தான். அவ்வாறே அவரவர்களுக்குத் தனித்தனியாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த விடுதிகளையும் மாற்றிக் கொண்டார்கள்.

இரவு பத்து நாழிகையான சமயம். இராஜகுமாரன் தங்கியிருந்த விடுதிக்கு அவனுடைய பத்தினியான குசராஜனின் குமாரி சுரதவல்லி தின்பண்டங்கள் நிறைந்த பொன் தட்டுடன் களப கஸ்தூரி பரிமளாதிகளுடன் வந்தாள்.

மந்திரிகுமாரன் குணபத்திரனே பக்ஷி சொன்ன வார்த்தையை மனதில் நினைத்துக் கொண்டவனுய், இராஜ குமாரனின் அறையில் இருட் கதவில் மறைந்திருந்தான். பகலெல்லாம் நடந்து வந்த அலுப்பினுல் இராஜகுமாரன் சன்மார்க்கன் அயர்ந்து நித்திரை செய்வதை அறிந்த சுரதவல்லி வெறுப்புடன் முகம் சுளித்து காறி உமிழ்ந்துவிட்டு, தின்பண்டத் தட்டுடன் கள்ளத்தனமாக அங்கிருந்து புறப்பட்டுப் பட்டணத்தின் வடபுறத்தில் ஒதுக்குப்புறமாயுள்ள ஒரு பாழடைந்த ஓர் மண்டபத்திற்கு வழக்கப்படி சென்ருள். அங்கு ஒரு முடவன் இருந்தான். அவன் இராஜகுமாரி சுரதவல்லியின் கள்ளப் புருஷனுவான்! விகாரவடிவனுன அந்த முடவன் மீது சுரதவல்லி அலாதியான மோகம் கொண்டிருந்தாள். அன்றையதினம் நேரங்கழித்து வந்ததற்காக அந்த முடவன் சலித்துக் கொண்டு, "ஏனடி! இவ்வளவு தாமதமாய் வந்தாய்?" என்று கோபித்துக் கொண்டான்.

"என் ஆசைக்காதலா! கோபம் வேண்டாம்! என்னை மணந்த ராஜகுமாரன் என்னை அழைத்துப் போகத் தன் தேசத்திலிருந்து வந்திருக்கிருன். அவன் விடுதியில் நன்கு நித்திரையில் ஆழ்ந்த பிறகல்லவா நான் இங்கு வரவேண்டும்? அதனுல் தான் நான் இங்கு வரத் தாமதமாகிவிட்டது, சுவாமி!" என்ருள் சுரதவல்லி.

"அப்படியா பெண்ணே! இது நாள் வரை நீ கல்யாணமாகாத கன்னிப் பெண் என்றல்லவா உன் சகவாசத்தை நாடியிருந்தேன். இனி இங்கு வராதே மீறி வருவாயானுல் நம்மிருவருக்கும் பிராணுபத்து நேரிடும்!" என்ருன் முடவன்.

அப்போது சுரதவல்லி அவன் கால்களில் விழுந்து "சுவாமி! அப்படிச் சொல்லக்கூடாது. ஒரு நாளாவது உம்மிடம் வராதிருந்தால் மோகாவஸ்தையால் என் பிராணன் போய்விடும்!" என்று கெஞ்சினுள். உடனே அந்த முடவன் தன் உடைவாளை எடுத்துத்

தன் கள்ளக் காதலியின் கையில் கொடுத்து, "கேளடி பெண்ணே! நமக்கு இடையூறாக வந்து முளைத்த ராஜகுமாரனின் தலையை உபாயங்களின் மூலம் துண்டித்துவிட்டு வாடி!" என்றான்.

"அப்படியே செய்கிறேன், சுவாமி! அவன் தலையை வெட்டி எறிந்து, அவனுடன் வந்திருக்கும் மந்திரிகுமாரனின் மீது குற்றத்தைச் சுமத்தி அவனையும் சிரசாக்கினைக்கு உட்படுத்தி விட்டு வருகிறேன்" என்று சுரதவல்லி உடைவாளை வாங்கிக் கொண்டு தான் கொண்டு வந்த தின்பண்டங்களை முடவனுக்கு ஊட்டி அவனுடன் கொஞ்ச நேரம் கொஞ்சி குலாவி மகிழ்ந்திருந்து விட்டு, அரண்மனை விடுதிக்குத் திரும்பினாள்.

அரண்மனையிலிருந்து அவளைப் பின் தொடர்ந்து வந்த மந்திரிகுமாரன், மடத்தில் நடந்தவைகளையும், கள்ளக் காதலனையும் ஒளிந்து நின்று கவனித்துவிட்டு, "இனி அந்த காமவெறி பிடித்த அரசகுமாரி என்ன செய்யப் போகிறாளோ, என்னதான் மோகாவேசத்தில் முடவனிடம் கூறினாலும் அதன் பிரகாரம் தன் பர்த்தாவை கொல்லவும் துணிவாளோ?" என்றெல்லாம் மனம் குழம்பியவனாய் சுரதவல்லியை இரகசியமாகப் பின் தொடர்ந்து அவனும் விடுதிக்கு வேகமாகத் திரும்பினான்.

விடுதியை அடைந்த சுரதவல்லியோ, வேகமாக நடந்து தனது நாயகன் அயர்ந்து உறங்கும் பள்ளியறைக்குள் புகுந்து, சிறிதும் முன் பின் யோசிக்காமல் ராஜகுமாரனின் சிரசை கைவாளால் துண்டித்து விட்டாள். பதறிப்போன குணபத்திரன் அவள் கையைப் பிடித்து "அடி பஞ்சமாப் பாதகி! என் ஆருயிர் நண்பனை உன் பர்த்தாவென்றும் பாராமல் கழுத்தறுக்கிறாயா? இப்படி செய்வது நியாயமா?" என்று கேட்கவே, சுரதவல்லியாள் கூக் குரலிட்டு காவலாட்களைக் கூவியழைத்து, "ஐயையோ! இந்தப் படுபாவி மந்திரிகுமாரன் என் நாயகனை கழுத்தை வெட்டிக் கொன்று, என்னையும் கைப்பிடித்து இழுத்து பலாத்காரம் செய்கிறானே!" என்று மந்திரிகுமாரன் மீது குற்றம் சாட்டினாள். உடனே காவலாட்கள் உள்ளே ஓடி வந்து மந்திரிகுமாரனைக் கட்டியிழுத்துக் கொண்டு போய், குசராஜனை எழுப்பி விஷயத்தை அறிவித்தார்கள். சுரதவல்லியும் ராஜனை நோக்கி, "கேளும், என் பிதாவே! இந்த வஞ்சக நெஞ்சம் படைத்த மந்திரிகுமாரன் செய்த கொடுமையை! நானும் என் நாயகனும் விடுதியில் ஆழ்ந்த நித்திரை செய்யும் போது, இந்த வஞ்சகன் என் பிராணபதியின் கழுத்தை வெட்டி என்னையும் கைப்பிடித்துப் பலாத்காரம் செய்தான். நல்ல வேளையாக நகர் சோதனைக்கு வந்த காவலாட்கள் என் கூக்குரலைக் கேட்டு உள்ளே ஓடிவந்து என் மானத்தை

காப்பாற்றினுர்கள். என் புருஷனைக் கொன்று விட்ட இந்தப் பாவிக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும், என் பிதாவே!" என்று முறையிட்டாள்.

உடனே குசராஜனும் வெகுண்டெழுந்து, "இந்த மந்திரிகுமாரன் வஞ்சகன் என்பதில் சந்தேகமில்லை. என் மருமகனுக்கு அனுப்பிய தந்தப் பல்லக்கில் இவன் ஏறிக்கொண்டு இவனுக்கு அனுப்பியதில் ராஜகுமாரனை ஏறிவரச் செய்தான். அதுபோல் ராஜகுமாரனுக்கு ஏற்பாடு செய்த விடுதியையும் மாற்றிக் கொண்டான். அப்போதே சந்தேகந்தான். இப்போது ராஜகுமாரனுக்குப் பத்தினியான என் குமாரியையும் கைப்பற்றினுன். இவன் வெகு துன்மார்க்கன். இவனைக் கொண்டு போய் முதல் வாசல் மந்திரியிடம் ஒப்படைத்து சிரசாக்கினை செய்து விடுங்கள்" என்று உத்தரவிட்டான். தலையாரிகள் அதன் பிரகாரம் மந்திரிகுமாரன் குணபத்திரனை முதல் வாசல் மந்திரியிடம் அழைத்துச் சென்றுர்கள். அந்த மந்திரியாரிடம் குணபத்திரன் தானும் இராஜ குமாரனும் தங்கள் தேசத்தை விட்டு புறப்பட்டது முதல் அது வரை நடந்ததையெல்லாம் தெரிவித்துத் தான் ஒரு குற்றமும் செய்யவில்லை என்று மன்றுடினுன். அவன் வார்த்தைகளை நம்பிய முதல் வாசல் மந்திரி "இவன் முகத்தைப் பார்த்தால் தர்மவானெனத் தோன்றுகிறது! இவனைத் தண்டித்தால் அந்தப் பாபம் நம்மை சும்மா விடாது!" என்று பயந்து இரண்டாவது வாசல் மந்திரியிடம் அனுப்பி வைத்தான். அவன் மூன்றுவது வாசல் மந்திரியிடம் அனுப்ப, அவன் நான்காவது வாசல் மந்திரியிடம் அனுப்பினுன். அதற்குள் பொழுது விடிந்து விட்டது. நான்கு மந்திரிகளும் ஒன்று கலந்து குணபத்திரன் கூறிய விருத்தாந்தத்தைப் பரிசோதிக்க வேண்டுமென்று முனைந்து, மந்திரிகுமாரனுக்குப் பதிலாக ஒரு மிருகத்தை கொன்று அதன் இரத்தத்தை மட்டும் அரசனிடம் அனுப்பி மந்திரிகுமாரனை தண்டித்ததாகக் கூறினுர்கள். மந்திரிகுமாரன் கேட்டுக் கொண்ட பிரகாரம் இராஜகுமாரனின் தேகத்தை உடனே தகனஞ்செய்து விடாமல் காப்பாற்றி வந்தார்கள். பிறகு அன்றிரவு யாரும் அறியாமல் அரசகுமாரி சுரதவல்லியைப் பின் தொடர்ந்து மந்திரிமார்கள் சென்றுர்கள்.

ஊருக்கு ஒதுக்குப் புறமாயிருந்த மடத்திற்குச் சுரதவல்லி உல்லாச மோகினிபோல் சென்று, முடவனைச் சந்தித்து, தான் பர்த்தாவைக் கொன்றதையும், மந்திரிகுமாரனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டதையும் தெரிவித்துவிட்டு முடவனேடு உல்லாசமா யிருந்தாள். அப்போது அங்கு ஒளிந்திருந்து கவனித்துக் கொண் டிருந்த நான்கு மந்திரிமார்களும் வெளிப்பட்டு, அவளைப் பிடித்து அரசனிடம் இழுத்துச் சென்று விவரத்தை அறிவித்தனர்.

அதனால் கடுங்கோபம் கொண்ட அரசன் தன் குமாரத்தியையும், முடவனையும் இரண்டிரண்டு கூறுகளாகப் பிளந்து கொன்று நான்கு வாசல்களிலும் தொங்க வைத்து, தன் கருமத்தைத் தொலைக்க காசி யாத்திரை சென்றான்.

மந்திரிகுமாரனோ தன் ஆருயிர் நண்பனான ராஜகுமாரனின் சவத்தை எரிக்காமல், அவனை உயிர்ப்பிக்க வேண்டுமென்று பிரதிக்ஞை செய்து கொண்டு, சரீரம் அழியாதபடி தைலமிட்டுப் பதனம் செய்து ஒரு பேழையில் வைத்து ஒரு பல்லக்கில் வைத்து ஒவ்வொரு புண்ணிய தீர்த்தமாகப் பிரயாணப்பட்டுக் கொண்டே தான தருமங்கள் செய்து கொண்டே வந்தான். தீர்த்த யாத்திரையின் முடிவில் ராஜகுமாரனின் சடலம் உயிர் பெற்று எழுந்திராவிடில் தானும் உயிரை விட்டு விடுவது என்றும் முடிவு செய்து கொண்டான். தீர்த்தயாத்திரையும் முடிந்தது, இராஜகுமாரனும் உயிர் பெற்று எழவில்லை. மந்திரிகுமாரன் தன் பிரதிக்ஞைபடி தன் உயிரையும் விட்டுவிடத் தீர்மானித்தான். அதற்குள்ளாக கலிங்க தேசத்தில் உள்ள தன் மனைவி எப்படியிருக்கிறாளெனப் பார்க்க வேண்டுமென்று தன் மாமனாரின் கலிங்க தேசத்திற்கு வந்தான். இராஜகுமாரனின் சவமுள்ள பேழையைத் தன்னுடைய பள்ளியறைக்குள் வைத்துக் கொண்டு படுத்தான்.

அன்று இரவு பத்து நாழிகைக்குப் பிறகு பள்ளியறையில் மந்திரிகுமாரன் கண்மூடி துயில்வது போலிருந்த சமயம், அவனுடைய பத்தினியான அமிர்தசம்போகவல்லி தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு தின்பண்டங்கள் உள்ள தட்டுடன் வந்தாள். தன் நாயகன் தூங்குவதைக் கண்டு, கட்டிலையும், நாயகனையும் மும்முறை வலம் வந்து ஓர் எலுமிச்சம் பழத்தையும், கத்தியையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டு விட்டாள். மந்திரி குமாரன் உண்மையில் தூங்கவில்லை. அவளையே கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்தபடியால், அவள் புறப்பட்டுச் சென்றதும், அவள் போகும் மர்மத்தை அறிய வேண்டுமென்று நினைத்து தானும் அவளைப் பின் தொடர்ந்து சென்றான்.

அந்த நிர்மானுஷ்யமான அர்த்த ராத்திரி வேளையில் அமிர்தசம்போகவல்லி நேரே இரணபத்திர காளி கோவிலுக்குத்தான் சென்றாள். அம்மனின் பொய்கையிலே நீராடி, சந்நதியை அடைந்து மும்முறை பிரதக்ஷணம் செய்து, தன் கணவன் திரும்பி வந்தால் தன்னை பலியிட்டுக் கொள்வதாகச் செய்திருந்த சபதப்படி, தன் கழுத்தை அறுத்துக் கொள்வதற்காக உடைவாளை உருவியபோது, தேவி பிரசன்னமாகி அவள் கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தி "மகளே! நீ தீர்க்க சுமங்கலி

யாக இருப்பாய். உனக்கு என்றென்றும் பன்னிரெண்டு வயதும் உன் நாயகனுக்குப் பதினாறு வயதும் அளித்துள்ளேன். உன் நாயகனின் நண்பனான ராஜகுமாரன் தன் மனைவியால் மரணமடைந்தான். அவனுடைய சவத்தைப் பேழையில் வைத்து உன் நாயகன் கொண்டு வந்திருக்கிறான். அவன் பிழைத்தால் தான் உன் கணவன் உயிர் வாழ்வான்! ஆகவே, நான் கொடுக்கும் திருநீறையும், எலுமிச்சம் பழத்தையும், காக தீர்த்தத்தையும் எடுத்துச் சென்று இராஜகுமாரனின் அறுப்புண்ட சிரசை உடலோடு பொருந்த வைத்து; எலுமிச்சை பழத்தை அறுத்து கழுத்தறுப்புண்ட இடத்தில் பிழிந்து இந்த விபூதியைத் தூவி தீர்த்தம் தெளித்து இந்தப் பிரம்பால் தட்டினால் இராஜகுமாரன் உயிர் பெற்றெழுவான்" என்று அருளி மறைந்தாள்.

காலையிலே மந்திரிகுமாரன் இரவில் கண்டதை கனவிலே கண்டதாகக் கூறினான். அப்போது அவள், "சுவாமி! அடியாள்தான் அப்பெண். இதோ கொண்டு வருகிறேன்" என்று காளியம்மன் கொடுத்த வரப்பிரசாதங்களைக் கொண்டு வந்து தந்தாள். அவற்றின் உதவியால் இருவரும் இராஜகுமாரனை உயிர்பெற்றெழச் செய்தார்கள். பிறகு மந்திரிகுமாரன் தன் மனையாளையும் இராஜகுமாரனையும் தன் தேசத்திற்கு அழைத்து வந்து, ராஜ குமாரனுக்கு மறு தேசத்து ராஜகுமாரியை மறு மணம் செய்து வைத்து, நால்வரும் ஆனந்தமாக வாழ்ந்து வந்தனர்.

இவ்வாறு கதையை முடித்த அகோர முனிவர், "வேடனே! இப்படியல்லவோ நண்பன் இருக்க வேண்டும். உன் நண்பனான அரசகுமாரனே உன்னை ஆபத்தில் மாட்ட வைத்துவிட்டு, ஆரணங்கை அபகரித்துப் போய்விட்டான். இனி அப்பாதகனின் முகத்தில் விழிக்காதே!" என்று புத்திமதிகள் சொல்லி திரவியங் களும் கொடுத்தனுப்பிவிட்டு அவரும் காமக் குரோதாதிகளைக் கடிந்து கடும் தவம் புரியச் சென்றார்.

## இரு புறக்கள் கதை

"முற்காலத்தில் சிநேகிதர்கள் இவ்வாறிருந்தனர். ஆகையால் உன் மனதிலிருக்கும் விசாரத்தையும் பிராண சிநேகிதியான என்னிடம் தெரிவி!" என்று விக்கிரமப் பெண்ணை நோக்கிக் கேட்டாள் சண்பகவல்லி.

"தோழி! பூலோகத்தில் பெண்ணாகப் பிறந்தவர்கள் தாங்கள் வாழ ஒரு நாயகனை அடைவதல்லவோ நியதி! பேரழகும்



யௌவனமும் உள்ள கன்னிகையான நீ தகுந்ததொரு நாயகனை வரிக்கா விட்டால். அரசனில்லாத நாடும் வேலியில்லாத பயிரும் போலாகி விடுமன்றோ? கணவனோடு சுகித்திருக்கும் இளமையின் ஆனந்தங்களை என்னைப் போல நீயும் அனுபவித்தாலன்றோ எனக்கும் மகிழ்ச்சியாயிருக்கும்? அப்படியிருக்க நீயோ ஆண் வாடையே ஆகாதென்று இருக்கிறாய். அதை நினைத்து நீ ஏன் இப்படி வருந்த வேண்டுமென்று எண்ணித்தான் நான் மிகவும் விசாரப்படுகிறேன்!" என்று விக்கிரமப் பெண் தெரிவித்தாள்.

"தோழி! அது ஒரு பெரிய கதை! உன்னிடம் சொல்லாமல் யாரிடம் சொல்லப் போகிறேன். கேள்" என்று சண்பகவல்லி அந்தக் கதையை சொல்ல ஆரம்பித்தாள்.

"முற்காலத்தில் இளங்காவனம் என்றொரு வனம் இருந்தது. அதில் இளங்காவதி என்ற அம்மன் இருந்தாள். அம்மன் சந்நதி எதிரிலுள்ள மூங்கில் புதரில் சல்லியானென்றும். சல்லரியென்றும் தம்பதிகளான இரண்டு மாடப் புறாக்கள் இருந்தன. அவைகளுக்கு வெகு காலம் குஞ்சுகள் பிறக்காமலிருந்து கடைசியில் அப்பெண் புறா இரண்டு முட்டையிட்டுச் சென்றது. காற்றிலே ஒன்றோடொன்று அசைந்த போது மூங்கில்கள் உராய்ந்து தீப்பற்றிக் கொண்டது. அதிலே அப்புறாவின் முட்டைகளும் எரிந்து விட்டன.

இதைக் கண்ட இரு புறாக்களும் புத்திர சோகமுற்று இரண்டு புறாக்களும் வாழ்வதால் பயனில்லை என்று. தீயில் விழுவதாகச் சங்கற்பம் செய்து. உயரப் பறந்து சென்று தீயிலே விழும்போது. சல்லியன் என்னும் ஆண் புறா தீயில் விழாமல் பறந்து ஓடி விட்டது. அதைக் கண்ட சல்லரி என்னும் பெண் புறா மனம் பொறுது பக்கத்து காளியம்மன் சந்நதியில் சென்று. அம்மனிடம் தன் மனத்துயரை எடுத்துச் சொல்லி. "தேவி! என் நாயகன் என்னை மோசம் செய்து விட்டான். ஆகவே. நான் தீயில் விழுந்து இறக்கப் போகிறேன். அடுத்த ஜன்மத்தில் ராஜனிடத்தில் நான் சண்பகப் பூவின் மணத்தோடு பிறக்கும்படி அருள் செய், தாயே!

அடுத்த ஜன்மத்தில் நான் ஆண் வாடையே இன்றி இருக்கப் போகிறேன்!" என்று வேண்டிக் கொண்டது.

இந்தக் கதைகளையெல்லாம் கட்டிலின் மேல் விதானத்தில் அணில் ரூபத்தில் ஒளிந்திருந்து கேட்டுக் கொண்டிருந்த பட்டியானவன் பொழுது புலரும் தருணத்தில் அங்கிருந்து கிளம்பி கானகம் சென்று. சண்பகவல்லியின் பிதாவான விஜயநகர ராஜனிடம் வந்தான். ஆயிரம் பொன்னையும் அவனிடம் திருப்பிக் கொடுத்து அதற்கு அடையாளமாக வைத்திருந்த பாரியாளான விக்கிரமப் பெண்ணை அழைத்துக் கொண்டு வெளியே சென்றான்.

காட்டை அடைந்ததும் சல்லிய ராஜனின் ரூபத்திலிருந்த பட்டியும், விக்கிரமப் பெண்ணின் ரூபத்திலிருந்த விக்கிர மாதித்தனும் சுயரூபம் எடுத்துக் கொண்டார்கள்.

"வாருமையா, பட்டி! காடாறு மாதம் முடியப் போகிறதே! அதற்குள் நான் சண்பகவல்லியை மணம் புரிந்து செல்ல வேண்டுமே! அதற்கு ஓர் உபாயம் சொல்லுமையா!" என்று விக்கிரமாதித்தன் கேட்கவே, "இன்னும் எட்டு நாளில் அவளை உமக்கு மணம் முடித்து வைக்கிறேன்!" என்று கூறிய பட்டி அதற்கு ஓர் உபாயம் செய்தான்.

அவன் ஓர் யௌவனப் பெண்ணாகவும், விக்கிரமாதித்தன் கழைக்கூத்தாடியாகவும் உருமாறினார்கள். அரண்மனை செல்லும் கழைக் கூத்தாடிகளைக் கண்டு, பட்டியாகிய யௌவனப் பெண் அவர்களுடன் சென்றாள். அரண்மனையிலே விஜயநகர மன்னனுக்கும், அவனுடைய குமாரி சண்பகவல்லிக்கும் அனேக விதமான வித்தைகளைக் காட்ட அவன் பட்டியாகிற அப் பெண்ணை அழைத்துக் கௌரவித்தான்.

அப்போது பட்டியாகிய பெண், "அரசே! தங்கள் புகழ்ச்சி அனைத்தும் காட்டிலிருக்கும் என் குரு நாதரைச் சேர்ந்தது!" என்றாள்.

"அவர் ஏன் வரவில்லை?" என்று விஜயநகர மன்னன் கேட்டபோது, "அவருக்குப் பெண் வாடையே ஆவதில்லை" என்றாள் பட்டியாகிய கழைக் கூத்தாடிப் பெண்.

"அவர் வித்தையை நாங்கள் கண்டு களிக்க முடியுமா?" என்றான் அரசன்.

"நாளை காட்டிற்கு வாருங்கள் ஏற்பாடு செய்கிறேன்" என்றாள். கழைக் கூத்தாடிப் பெண்.

அவ்வாறே அவள் மறுநாள் விஜயநகர மன்னனை அழைத்துக் கொண்டு காட்டிற்குச் சென்றாள். அவளுடைய குருநாதரின்

அற்புதமான வித்தைகளைச் சண்பகவல்லியும் காண விரும்பியதால், ஒரு கூடாரம் அடித்து அதற்குள் சண்பகவல்லி மறைந்திருந்து பார்ப்பதென ஏற்பாடும் செய்யப்பட்டிருந்தது. அங்கு விக்கிரமாதித்தனை பட்டியாகிய பெண் தன் குருநாதரான கழைக் கூத்தாடியின் வேஷத்தில் வரச் செய்தாள். குருநாதரின் அற்புதமான வித்தைகளையெல்லாம் கண்டு பிரமித்த விஜயநகர மன்னன், "ஐயா, கழைக்கூத்தாடி! நீங்கள் ஏன் பெண் வாடை கூடாதென்று விரதமிருக்கிறீர்?" என்று கேட்கவே அதற்கு விக்கிரமாதித்தன், பட்டி சொல்லிக் கொடுத்தபடி, சண்பகவல்லி சொன்ன அதே மாடப் புறா கதையைச் சொல்லி, "பெண் புறா தீயில் விழாமல் மோசம் செய்ததால், ஆண் புறா இனி பெண்களையே நினைப்பதில்லை என்று சபதம் செய்து கொண்டது. அந்தப் புறா நான் தான்!" என்றான்.

கூடாரத்தின் உள்ளே மறைவாக இருந்து அவனைக் கவனித்து வந்த சண்பகவல்லி சட்டென வெளிப்பட்டு, "இல்லவே, இல்லை! ஏ, கூத்தாடி நீ சொல்வது சுத்தப் பொய்! ஆண் புறாதான் மோசம் செய்தது!" என்று சொல்ல இருவருக்கும் பெரிய தர்க்கம் உண்டாகி விட்டது. "ஏ, கூத்தாடி! நீ சொன்னதை நிரூபிக்க வேண்டும்" என்று விக்கிரமாதித்தனின் கையைப் பிடித்திழுக்க, "நீ தான் நிரூபிக்க வேண்டும்" என்று அவள் முந்தானையை அவன் பிடித்திழுக்க, கைகலப்பு ஏற்பட்டு பெரும் சண்டையாகி விடும் போலிருந்தது. அதன் மீது விஜயரங்க ராஜன் அவர்களை சமாதானம் செய்வித்து, "கொஞ்சம் பொறுங்கள்! இரண்டு புறாக்களுமே மோசம் செய்திரா. ஆண் புறாவும், பெண் புறாவும் ஒருவருக்கொருவர் தெரியாமல் தீயில் விழுந்து உயிர் நீத்திருக்கலாம். எப்படி இருந்த போதிலும் இருவரும் கற்பு நெறி தவறாமல் இருந்து வந்திருக்கிறீர்கள். ஆகவே, நீங்கள் இருவரும் இந்த ஜன்மத்தில் திருமணம் செய்து கொண்டு, மனமொத்து வாழுங்கள்" என்றான்.

அதற்கு இருவரும் சம்மதிக்கவே, சண்பகவல்லிக்கும், கழைக் கூத்தாடியின் ரூபத்திலுள்ள விக்கிரமாதித்தனுக்கும் ஒரு நல்ல சுபமுகூர்த்தத்தில் திருமணம் நடந்தது.

அப்போது காடாறு மாதம் முடிந்து விடவே, கூத்தாடி பெண்ணுருவிலிருந்த பட்டி சுயரூபம் எடுத்துக் கொண்டு, "விக்கிரமாதித்த மகாராஜனே! நம் உஜ்ஜயினி மாகாளி பட்டணத்திற்குப் புறப்படுங்கள்" என்று கூப்பிட்டான்.

அப்போது தான் விஜயரங்க ராஜனுக்கு தன் மருமகன் உஜ்ஜயினி மன்னன் விக்கிரமாதித்தன் என்பது தெரிந்தது.

அவன் மேலும் மகிழ்ச்சி கொண்டவனாய், அனேக பரிசு வகைகளுடன் சண்பகவல்லியையும் உஜ்ஜயினி நகரம் அனுப்பி வைத்தான்.

ஃ ஃ ஃ

இவ்வாறு கதை சொல்லி முடித்த மங்களகல்யாணிப் பதுமை, "ஹே, போஜராஜரே! எங்கள் விக்கிரமாதித்த பூபதியின் வல்லமையைக் கேட்டீரல்லவா? அது போன்ற வல்லமை உம்மிடம் இருந்தால் இந்த விநோத சிம்மாசனத்தில் ஏறி அமரும். இல்லையெனில் இறங்கிவிடும்!" என்றது.

அப்போது சூரியன் அஸ்தமித்து விடவே, போஜராஜன் அச் சிங்காசனப் படியை விட்டுக் கீழிறங்கித் திரும்பிச் சென்றான்.

(இந்தக் கதைக்குப் பதிலாக, வடமொழி மூலத்தில் 26ம் படிக்குக் காவலான காமசரோன மாதினி எனும் பெயருள்ள பதுமை பின்வரும் கதையைக் கூறியதாகக் காணப்படுகிறது)

## காமதேனு பரீட்சித்த கதை



தைரியம், உதவிக் குணம், விவேகம், நுண்ணறிவு, உறுதி ஆகியவற்றில் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற வேறு அரசர்களை இப்பூவுலகில் தேடினும் கிடைக்க மாட்டார்கள். மேலும், அவனுடைய வார்த்தைகள் ஒரு போதும் மாறியதில்லை. அவனுடைய இருதயத்தில் என்ன தோன்றுகிறதோ அதைச் சொல்லத் தயங்க மாட்டான். அவன் வாயிலிருந்து எந்த வார்த்தைகள் வருகின்றனவோ, அவைகளையே அவன் செய்து வந்தான். ஆகவே, அவன் நேர்மையான மனிதனாக இருந்து வந்தான்.

நேர்மையான மனிதர்களுடைய எண்ணம் எதுவோ அவ்விதமே அவர்கள் பேச்சும், அதன்படியே அவர்கள் காரியமும் இருக்கும். அவர்கள் எண்ணத்தின்படியே பேச்சு, பேச்சின்படியே செயல், ஆக இவ்விதம் ஒன்றாகவே இருக்கும்!

அன்போடு பேசுவது, இன்பமாகப் பேசுவது, எல்லையில்லா நேசத்தைக் காட்டுவது, ஆகியவை நேர்மையான மனிதர்களுக்குக் கூடப் பிறந்த குணங்கள். சந்திரனைக் குளிரச் செய்தது யாராவது ஒருவருடைய காரியமா?

ஒரு சமயம் தேவப் பட்டணமாகிய அமராவதியில் இந்திரன் தன் சபையில் அமர்ந்திருந்தான். எண்பத்தெட்டாயிரம் முனிவர்கள் சபையில் கூடியிருந்தனர். முப்பத்தி மூன்று கோடி தேவதைகளும் அங்கே குழுமியிருந்தனர். இன்னும் எட்டு லோக பாலர்களும், நாற்பத்தொன்பது பருந்துகள், பன்னிரண்டு சூரியர்கள், நாரதர், சந்திரன், தும்புரு ஆகியோரும் கூடியிருந்தனர். ஊர்வசி, ரம்பை, திலோத்தமை, மிச்ரகேசி, க்ருதாசி, மஞ்சு, கோஷை, ப்ரியதர்சனை ஆகிய அப்சரஸ் ஸ்திரீகளும், தேவ கன்னியர்களும் அங்கு வந்திருந்தனர். மற்றும் கந்தர்வர்களும் கின்னரர்களும் சபையை அலங்கரித்தனர்.

இவ்வளவு கோலாகலமாக கூடியிருந்த இந்திர சபையில் நாரதர் எழுந்து நின்று, "தேவேந்திரா! இந்த உலகத்தில் கீர்த்தியும் பரோபகாரமும், நற்குணமும் தீரமும் நிறைந்த விக்கிரமாதித்தனைப் போன்ற அரசன் கிடையாது!" என்றார்.

அவருடைய வார்த்தைகளைக் கேட்டு அங்கிருந்த தேவர்கள் வியப்பில் ஆழ்ந்தனர். அப்போது தெய்வீகப் பசுவான காமதேனு "இதில் வியப்படைவதற்கு என்ன இருக்கிறது? என்ன சந்தேகம்? தானம், தவம், வீரம், அறிவு, விநயம் ஆகியவற்றைக் கண்டு ஒருவரும் ஆச்சரியப்பட வேண்டாம். பூமி இத்தகைய முத்துக்கள் நிறைந்தது அன்றோ? இன்னும் பலவகையான குதிரைகள், யானைகள், உலோகங்கள், மரங்கள், கற்கள், ஆபரணங்கள், ஆண்கள், பெண்கள் மற்றும் தண்ணீர் ஆகியவற்றிடையே எத்தனையோ வித்தியாசங்கள் இருக்கின்றன" என்றது.

காமதேனுவின் உறுதியான வார்த்தைகளைக் கேட்ட இந்திரன், "தேனு! நீ மனிதர்கள் நிறைந்த பூலோகத்திற்குச் சென்று, விக்கிரமாதித்தனுடைய குண விசேஷங்களைப் பரீட்சித்து எனக்குத் தெரிவி" என்று உத்தரவிட்டான்.

அதை ஏற்றுக் கொண்டு காமதேனு, சாதாரண மெலிந்த பசு போன்ற உருக் கொண்டு பூலோகத்திற்கு வந்து சேர்ந்தது. விக்கிரமாதித்தன் காட்டிற்குச் சென்று துஷ்ட மிருகங்களை வேட்டையாடி அழித்து விட்டுத் திரும்பும் வழியில் சேறும், சகதியும், நிறைந்த சதுப்பு நிலத்தில் சிக்கிக் கொண்டு திண்டாடியது. அவ்வழியே வரும் விக்கிரமாதித்தனைப் பார்த்து, உள்ளத்தை உருகச் செய்யும் குரலிலே அழுதது.

பசு அழுவதைக் கண்ட விக்கிரமன் அருகிலே வந்தான். கரையேற முடியாது சேற்றிலே அழுந்தித் தத்தளித்துக் கொண்டிருந்தது பசு. விக்கிரமாதித்தனும் சேற்றிலே இறங்கிப் பசுவின் அருகில் வந்து அதன் முகத்தைப் பிடித்து இழுத்தான். பசு இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. உடனே மன்னவன் வேகமாகக் கரையை நோக்கி இழுக்கப் பசுவானது சேற்றிலே பலமாக அழுத்திக் கொண்டது. அந்தச் சமயத்திலே அதன் அழு குரலைக் கேட்ட புலி ஒன்று, அதைக் கடித்துச் சாப்பிட அங்கு வந்தது. சூரியனும் மலை வாயிலில் மறைந்து விடவே, கருமையான இருள் பரவத் தொடங்கியது. அத்துடன் மழையும் பெய்ய ஆரம்பித்து விட்டது.

விக்கிரமாதித்தன் என்ன செய்வான்? பசுவை விட்டு விட்டுச் செல்லவும் விருப்பமில்லை. அவன் அப்பால் நகர்ந்தால் புலி கொன்று புசித்து விடும். ஆகவே, இரவு முழுவதும் இருந்த இடத்தை விட்டு நகராமல் கொட்டும் மழையிலும், குளிரிலும், சேற்றிலும் நின்றிருந்தான். விடியற்காலை நேரத்திலே புலி ஓடிவிட்டது. அரசனது கருணையையும், உறுதியையும் இதர நற்குணங்களையும் கண்டு மகிழ்ந்த காமதேனு சுய உருக் கொண்டு சதுப்பு நிலத்திலிருந்து வெளியேறி வந்தது.

"விக்கிரமா! நான் சாதாரண பசு அல்ல; தேவலோகத்தி லிருந்து வந்திருக்கும் காமதேனு. உன் நற்குணங்களைப் பற்றி நாரதர் சபையிலே எடுத்துச் சொல்லிப் பாராட்டியதைக் கேட்ட இந்திரன் அதைப் பரீட்சிக்க என்னை அனுப்பினான். நாரதர் சொன்ன விஷயத்தில் எள்ளளவும் பொய்யில்லை. உன்னைப் போன்ற பரோபகாரமுடைய அரசனை பூவுலகிலே காண முடியாது. நான் சந்தோஷமடைந்தேன்; உனக்கு வேண்டிய வரத்தைப் பெற்றுக் கொள்!" என்றது காமதேனு.

"காமதேனுவே! உன்னுடைய ஆசிர்வாதத்தால் எனக்கு ஒரு குறைவும் இல்லை. உன்னிடம் கேட்கக் கூடிய தேவை எனக்கொன்றும் இல்லையே!" என்றான் விக்கிரமாதித்தன்.

"அரசே! என் வார்த்தைகள் வீணாகப் போகக்கூடாது. ஆகவே, நான் உன் அருகில் இருக்கப் போகிறேன்!" என்றது காமதேனு.

அவ்விதமே அரசனை அடைந்தது. அரசனும் பசுவை அழைத்துக் கொண்டு நகரத்திற்குத் திரும்பினான். வழியிலே, அவர்களை ஒருவன் சந்தித்தான்.

"ரிஷபாரூடரான சிவபெருமான் தாண்டவத்தின் போது நந்தி கேச்வரன் சந்தோஷமாக மத்தளத்தை அடிக்க, அதிலிருந்து

கிளம்பிய சப்தத்திஞல் சுப்ரமணியரின் வாகனமான மயில் மிரண்டது. அதைக் கண்ட நாகசர்ப்ப ராஜஞனை வாசுகி தன் உடலைச் சுருட்டிக் கொண்டு கணேசருடைய துதிக்கையில் புகுந்து கொண்டது. பயந்துபோன கணேசர் அலறிப் புடைத்துத் தலையை இருபுறமும் ஆட்டிஞர். அப்போது உண்டான காற்றின் அசைவிஞல் யானை மதத்தைப் பருக வந்த வண்டுகள் சிதறி ஓடின. அக்கணேசர் உம்மைக் காப்பாற்றட்டும்" என்று அந்த வழிப்போக்கன் விக்கிரமனை நோக்கி வாழ்த்திஞன். பிறகு தொடர்ந்து. "அரசே! என்னுடைய ஏழ்மையிஞல் நான் சித்தஞக மாறிவிட்டேன் எல்லோரையும் நான் காண்கிறேன். ஆஞல் மற்றவர்கள்தான் என்னைக் காண்பதில்லை. உம்முடைய கருணையால் நான் சித்தஞகி விட்டேன். ஏனெனில் நான் மற்றவர்களைக் கண்டாலும், அவர்கள் என்னைக் காண்பதில்லை யல்லவா? என்று சொல்லியிருக்கிருர்களே. இன்னும் தரித்திரத் தின் முத்திரையைப் பெற்ற ஒருவன் வீட்டில் சதா குழந்தை பிறந்த சூதகம் (திட்டு நிலை) குடி கொண்டிருக்கிறது. அதற்குக் காலவரை இல்லையா? உயிர் உள்ளவரை இது இருக்கும். அப்பால் மறு பிறப்பு இல்லை. இது எனக்கு பிறந்த புத்திரஞல் கிடைத்தது. செல்வம் ஏதும் இல்லாத இந்த நிலையிலே, எனக்கு யார் மகஞகப் பிறந்தவன் என்று கேட்கிறீரா? ஏழ்மை எனும் பெயர் கொண்ட மகன் அவன், என்று சொல்லுவார்கள்" என்முன் அந்த வழிப்போக்கன்.

"அரசே! தாங்கள் நினைப்பதைக் கொடுக்கும் கற்பக விருக்ஷம்! உம்மை அண்டி வந்தவர்கள் ஏமாறுவதில்"லை. அவ்விதமாகவே, என்னுடைய வறுமையைப் போக்கி, என் வருங்காலத்தை நிம்மதியாகக் கழிக்க வழி செய்யுங்கள்" என்று வேண்டிஞன்.

விக்கிரமஞே சிறிதும் தயங்காமல் "ஐயா, இதோ இருக்கும் பசு சாதாரணமானது அன்று. நீ விரும்பியதைத் தட்டாமல் கொடுக்கக் கூடிய காமதேனு! இதை அழைத்துச் சென்று, உன் வறுமையைப் போக்கிக் கொள்" என்று அவனுக்குக் காமதேனுவை அளித்து விட்டான். விக்கிரமனுடைய பரோபகாரத் தன்மையைக் கண்ட காமதேனுவும் அவனைப் பலவாறு போற்றிவிட்டு அந்த மனிதனின் தேவைகளை நிறைவேற்றி வைத்தது. அளவில்லா ஆனந்தத்துடன் விக்கிரமன் உஜ்ஜயினிக்கு திரும்பிஞன்.

இவ்விதம் கதையை முடித்த பதுமை, போஜனை நோக்கி, "அரசே! எங்கள் அரசனுக்கு ஈடாக எவரைக் குறிக்க முடியும்!" என்று கேட்டது. போஜராஜன் மௌனமாகக் கீழிறங்கிச் சென்முன்.

## 5-வது மந்திர மனோன்மணிப் பதுமை சொல்லிய தனபதி, குணபதி, பேசாமடந்தையின் கதை



ஐந்தாம் நாள் பொழுது விடிந்ததும் மன்னன் பரிவாரத்துடன் சித்திரகூட மண்டபத்திற்கு வந்து, கொலுவிருக்கும் வேட்கையுடன் அதிசய சிங்காதனத்தின் நான்கு படிகளைக் கடந்து ஐந்தாம் படியில் ஏறும்போது, அந்தப் படிக்கு காவலான மந்திர மனோன்மணிப் பதுமை கைகொட்டி குலுங்க குலுங்கச் சிரித்தது.

"போஜ சக்கிரவர்த்தியே, சற்று நில்லும்! எங்கள் விக்கிரமாதித்த சக்கிரவர்த்தியைப் போல், சான்றோரைக் காத்தருளும் சற்குணமும் சகல வல்லபமும் இருந்தாலன்றோ நீர் இந்தச் சிங்காதனத்தில் கொலு வீற்றிருக்க முடியும்!" என்றது பதுமை.

"மந்திர மனோன்மணிப் பதுமையே! உன் விக்கிரமாதித்த வேந்தரிடம் நீ கண்ட விசேஷந்தான் என்ன? அந்தக் கதையைச் சொல்!" என்றான் போஜராஜன்.

பதுமை அந்தக் கதையைச் சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்த பூபதி சகலவிதமான சித்திகளும் பெற்று மதிமந்திரி பட்டியுடன் மிகவும் வல்லமையோடு இந்த நவரத்தின சிம்மாதனத்திலமர்ந்து ராஜ்ய பரிபாலனம் செய்துவரும் காலத்தில் நாடாறு மாதம் முடிந்து காடாறு மாதம் போக வேண்டிய காலம் வந்து விட்டது. ராஜ்யத்தை மந்திரிமார்களிடம் ஒப்படைத்துவிட்டு விக்கிரமாதித்தனும், பட்டியும் புறப்பட்டுத் தங்கள் குலதெய்வமாகிய பத்ரகாளியம்மனை வணங்கிவிட்டு, மனம் போன போக்காக காடு, மலை வனாந்திரங்களையும் கடந்து சென்றார்கள். அவ்வாறு போகையில் இருளடர்ந்த ஒரு வனத்தில் கொடிவழியொன்று சென்றது. அந்த வழியில் செல்லும்போது ஒரு குத்துக்கல் தென்பட்டது. அதன் வடபக்கத்தில் ஒரு பாதையும், தென் பாகத்தில் ஒரு பாதையும் காணப்பட்டன. சாஸனக்கல் போல் நடப்பட்டிருந்த அந்தக் குத்துக்கல்லில் பின்வரும் வாசகம் எழுதப்பட்டிருந்தது.

"இங்கிருந்து வடக்குப் பாதையில் போனால் அழகாபுரி என்றொரு பட்டணமுண்டு. அப்பட்டணத்தை அரசாளும் அழகேசனுக்குத் தனபதி, குணபதி என இரு கொலுப் பெண்கள் உண்டு. அவ்விரு மங்கையரும் இராஜனுடன் சரிசமமாகக்

கொலுவிருப்பார்கள். அவர்கள் தங்களிடம் ஆசைப்பட்டு அணைய வரும் புருஷர்கள் ஆயிரம் பொன் தரவேண்டுமெனத் தங்களின் அரண்மனைகளின் முன் ஆராய்ச்சி மணிகள் கட்டியிருக்கிறார்கள். தென்புறம் செல்லும் பாதையில் சென்றால் வீமாபுரி என்னும் பட்டணம் ஒன்று உண்டு. அப்பட்டணத்திலே ஏழு சுற்றுத் திருமதில்களைக் கொண்ட விசித்திர விநோதமான அரண்மனை ஒன்றுண்டு. அந்த அரண்மனைக்குள் வீற்றிருக்கும் அமிர்தமோகினி என்பவளுக்கு பேசாமடந்தை என்ற பெண்ணொருத்தி இருக்கிறாள். அந்தப் பெண்ணைப் பேச வைத்து திருமணம் செய்து கொள்ளச் சென்ற மன்னாதி மன்னர்களெல்லாம் அவமானப்பட்டு தலை மொட்டையாகி வீரம் குலைந்து போனார்கள். இவ்விரண்டு பாதைகளில் ஒருவர் போன வழி மற்றொருவர் போகக்கூடாது"

அதைப் பார்த்து வியப்புற்று விக்கிரமாதித்தன் தன் மதிமந்திரியை நோக்கி, "என்ன, ஐயா பட்டி! இதற்கு ஓர் ஆலோசனை சொல்லும்!" என்றான். அதற்கு பட்டி, "கேளும் மன்னவா! நான் தென்புறப் பாதையில் சென்று வீமாபுரியை அடைந்து அங்கு பேசாமடந்தையின் சிறப்பையும், அவளால் மன்னாதி மன்னர்களெல்லாம் தலை மொட்டையடிக்கப்படுவதையும், மற்றும் அங்கே நடக்கிற அதிசய காரியங்களையும், பேசா மடந்தையின் ரகசியங்களையும் அறிந்து கொள்கிறேன்! தாங்கள் அழகாபுரிப் பட்டணம் சென்று, அங்கே தனபதி, குணபதி ஆகியோரின் தன்மை பெருமைகளை அறிந்துகொண்டு வீமாபுரி வந்து சேருங்கள்!" என்றான்.

அதன்படி விக்கிரமாதித்தன் வேதாளத்துடன் வடக்குப் பாதையில் புறப்பட்டு அழகாபுரிப் பட்டணம் சென்றான். அவன் நகருக்குள் நுழையும் முன் எல்லைப்புறக் காட்டிலே ஆபரணங்களை வேதாளத்திடம் ஒப்புவித்துக் காவி வஸ்திரமும், தாடி சடைமுடியும் புனைந்து கொண்டு கிழவனைப் போன்று வேடம் தரித்து, தண்டு கமண்டலம் எடுத்துக் கொண்டு, ஆண்டிப் பண்டாரமாகச் சென்றான். முதலில் தனபதி நாச்சியார் என்னும் தாசியின் மாளிகைக்குச் சென்று அதன் வாசலில் கட்டியிருக்கும் ஆராய்ச்சி மணியை அடித்தான். சப்தம் கேட்ட தனபதி நாச்சியார் பாங்கிமார்களை அழைத்து, "பொன்னுள்ள புருஷரானால் ஆயிரம் பொன் வாங்கிக் கொண்டு அந்தச் சீமானை அழைத்து வாருங்கள். ஆண்டிப் பரதேசியானால் அமுது படைத்து அனுப்பிவிடுங்கள்! கோயில் மாடானால் புல்லும் தண்ணீரும் வைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டாள்.

அவள் சொற்படி வந்து பார்த்த தோழிகள், வாசலிலே தொண்டு கிழவனைக் கண்டதும், "ஐயா! பெரியவரே! உமக்கு

அமுதுபடி, பருப்பு, நெய் வேண்டுமா?" என்று கேட்டார்கள். அப்போது விக்கிரமாதித்தனை கிழப் பரதேசி நகைத்து, "அடி, பெண்டுகளா! உங்கள் நாச்சியாரை அணைந்து போவதற்காக வந்துள்ளேன்!" என்றான். அதைக் கேட்டு சிரித்த தோழிகள் தனபதியிடம் சென்று, "கேட்டீர்களாம்மா கதையை! ஓர் ஆண்டிக் கிழவன் உங்களை அணைய வந்தேனென்று சொல்லுகிறான்!" என்று தெரிவிக்கவே, தனபதி நாச்சியார் அளவிலாத ஆத்திரங் கொண்டு, ஓர் உலக்கையை எடுத்துக் கொண்டு வெளியே வந்து, "ஆண்டிக் கிழவா! இவ்வளவு வயதாகியும் ஆசை போகவில்லையா? நீயா என்னை அணைய வந்தாய்? போடா, போ!" என்று திட்டி உலக்கையால் கிழப் பரதேசியை அடித்துத் தள்ளினாள். தள்ளாடி விழுந்த கிழ வேஷதாரியான விக்கிரமாதித்தன் "இந்த மர்மத்தை நான் கேட்டுக் கொள்கிறேன்!" என்று நிச்சயித்துக்கொண்டு, அதன் பிறகு மற்றொரு தாசியான குணபதி நாச்சியாரின் மனதை அறிவோமென அவளுடைய அரண்மனைக்குச் சென்று ஆராய்ச்சி மணியை அடித்தான்.

தோழிமார் வந்து பண்டாரத்திடம் விசாரித்துச் சென்று குணபதியிடம், "ஓ, நாச்சியாரே! ஒரு கிழப் பரதேசி உங்களைக் கூடிப் பிரியாமலிருக்க வந்தேனென்கிறார்!" என்று சொல்லி விட்டுச் சிரித்தார்கள். அதற்குக் குணபதியானவள், "அடியே பைத்தியக்காரிகளே! எத்தனை தவம் செய்தாலும் ஞானியார் நம் இல்லம் தேடி வரக்கூடியவரா?" என்று சொல்லி வாசலுக்கு ஓடி கிழப் பண்டாரத்தை எதிர்கொண்டழைத்து வணங்கிப் பாதம் கழுவி வரவேற்று, சப்ரகூட மஞ்சத்தில் அவரை அமர்த்தி மும்முறை வலம் வந்து வணங்கி, "சுவாமி! தாங்கள் அடியாளை நாடி வந்தது என் பாக்கியம்!" என்று கூறி பணிவுடன் நின்றாள். அதற்கு கிழப் பண்டாரம் இருமலும், இளைப்புமாகத் தள்ளாடியவாறு, "அடி குணபதி! உன்மீது ஆசைப்பட்டு நான் வெகுதூரத்திலிருந்து வருகிறேன். நீயும் என்னிடம் பிரியமாகி இணைபிரியாமல் இன்ப சுகம் தந்தும், அறுசுவை உண்டியும் கொடுத்து இருமலுக்கு பரிகாரிகளை அழைத்துக் குணப்படுத்துகிறே னென்றால், உன் மாளிகையில் நான் நித்தம் கூடியிருப்பேன். இல்லையெனில் இப்போதே போய் விடுகிறேன்!" என்றான்.

அதற்கு குணபதி "சுவாமி! உம் கருத்துப் பிரகாரம் நடந்து கொள்கிறேன்!" என்று சொல்லி கையிலடித்து சத்தியம் செய்து கொடுத்தாள். அதற்குப் பண்டாரக் கிழவன், "அடி பைத்தியக்காரி! நானோ ஏழைக் கிழவன்; வயதும் தளர்ந்திருக்கிறேன்; என்னால் உனக்கு என்ன பிரயோசனம் கிடைக்கப்போகிறது? என்னை நம்பி இச்சை வைத்து கைபோட்டு சத்தியம் செய்து கொடுக்கலாமோ?" என்று கேட்டான்.

அதற்கு குணபதி "சுவாமி! உமது பாதாரவிந்தமே அடியாளுக்குப் போதும்!" என்று கூறி பண்டாரக் கிழவனை அழைத்துச் சென்று வெந்நீர்போட்டு, எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி, உடம்பெல்லாம் களப கஸ்தூரி புனுகு ஜவ்வாது முதலான வாசனைகள் பூசி, ஜடாமுடியில் மோகனப் பூச்சூடி, ஆடையாபரணங்கள் கொடுத்து பால் பழம் முதலிய அறுசுவை உணவு ஊட்டுவித்து, தாம்பூலம் கொடுத்து படுக்கையறைக்கு அழைத்துச் சென்று, சப்ரகூட மஞ்சத்திலிருக்கச் செய்து, ரதிக்கேற்ற மன்மதனைப் பாவித்து சரச சல்லாபங்களுடன் ஆனந்தமாக விளங்கினாள்.

தனபதி நாச்சியாரோ தான் வெளியே பிடித்துத் தள்ளிய கிழவன் யார் காலிலாவது போய் விழுந்தால் என்ன கெடுதி நேரிடுமோ என்று அஞ்சியவளாய் தன் பாங்கிமார்களை அனுப்பி விவரம் அறிந்து வரும்படி சொன்னாள். பண்டாரக் கிழவன் குணபதி வீட்டில் குதூகலமாயிருப்பதைக் கண்டு வந்து தெரிவித்தனர் தாதியர்கள். தான் விரட்டிய கிழவனைக் குணபதி நாச்சியார் குணப்படுத்தி வைத்துக் கொண்டதால் கோபங்கொண்ட தனபதி நாச்சியார் மறுநாட் காலையில் அரசவையில் குணபதி வந்தமரும்போது "ஆண்டிக் கிழவனை வைத்திருப்பவளுக்கு அரசவையில் என்னுடன் சம அந்தஸ்தோ?" என்று ஏசினாள். அதற்கு குணபதி "நீ பஞ்சாங்கக்காரனை வைத்திருப்பவள்தானே?" என்று ஏசினாள். இவ்விரு தாசிகளுக்கும் சண்டை மூளவே, அழகேசனும் மந்திரி பிரதானிகளும் அவர்களது சண்டையை விலக்கினார்கள். அப்போது தனபதி நாச்சியார் ஏராளமான திரவியத்தை அரசன் முன்குவித்து, "அரச பெருமானே! தேவரீர் சமூகத்தில் நாங்கள் சண்டை போட்டுக் கொண்டதற்கு நான் இவ்வளவு பணம் அபராதம் கட்டுகிறேன். அவளும் எனக்குச் சரிசமமாக அபராதத் தொகை செலுத்தாவிடில் எனக்குத் தோற்றவளே!" என்று வீம்பு பேசினாள்.

அதைக்கண்டு குணபதி நாச்சியார் இவ்வளவு பொன்னுக்கும், பொருளுக்கும் எங்கே போவோமென்று மனவருத்தமுற்று தன் அரண்மனை போய் துக்கத்துடனிருந்தாள். அவளுடைய மோகன முகம் வாடியிருப்பதைக் கண்ட விக்கிரமாதித்தனாகிய கிழப் பரதேசி ரகசியமாகத் தன் வேதாளத்தை அழைத்து அரசவையில் நிகழ்ந்தவற்றையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு குணபதியை அணுகி, "அடி; என் இச்சைக்குகந்தவளே! உன் மனதிலுள்ள துயரத்தை ஒளியாமல் சொல்!" என்றான். குணபதி நாச்சியார் நடந்ததையெல்லாம் கூறி, அவ்வளவு அதிகமான அபராதத் தொகை கட்ட வழியில்லை என வருத்தமுற்றாள். அவளுக்கு ஏழைப் பரதேசி திடம் சொல்லிவிட்டு வேதாளத்தைக்

கொண்டு பச்சை மரகதத்தால் ஒரு தாழ்வடம் வரவழைத்து குணபதி நாச்சியாரின் கையில் கொடுத்து "அடி பெண்ரத்தினமே! இது வெகு நாளாய் நான் பிரயாசைப்பட்டு சம்பாதித்த அற்புதப் பொருளாகும்! இதைக் கொண்டுபோய் அபராதமாகச் செலுத்து!" என்று கொடுத்தான்.

குணபதியும் அரசவைக்குச் சென்று, மன்னர்பிரானுக்குப் பாத காணிக்கையாகப் பச்சை மரகதத் தாழ்வடத்தை வைத்து, தனபதி நாச்சியாருக்குச் சமமாகக் கொலுவீற்றிருந்தாள். பச்சை மரகதத்தால் புனைந்த அதிசய தாழ்வடத்தைப் பார்த்து வியந்த பார்த்திபன், வணிகர்களையெல்லாம் வரவழைத்து அதற்கு மதிப்பு கேட்க, அவர்கள் அதைப்போன்று இதற்கு முன்பு எங்கும் கண்டதில்லையாதலால் அதற்கு விலைமதிப்பிட முடியாதென்று கூறிவிட்டனர்.

இதனால் மேலும் பொறாமை கொண்ட தாசி தனபதி எந்தவிதத்திலும் குணபதியைத் தனக்குத் தாழ்ந்தவளாய் ஆக்கிவிடவேண்டும் என்ற எண்ணத்துடன் மறுநாள் அரசனை அணுகி, அரசன் தன்னுடைய இரதகஜதுரகபதாதி என்னும் நால்வகைச் சேனையுடன் தன் வீட்டிற்கு விருந்திற்கு எழுந்தருள வேண்டுமென வேண்டிக் கொண்டாள். அரசனும் அவ்வாறே அவள் வீடு சென்று விருந்துண்டு மகிழ்ந்தான்.

அதைக் கேட்ட குணபதி நாச்சியார் தானும் அவ்வாறு அரசபரிவாரம் அனைத்திற்கும் ஆடம்பரமாக விருந்து வைக்காவிடில் தனபதிக்குத் தோற்றவளாகி விடுவோமே என்றெண்ணி, அன்றிரவு பண்டாரக் கிழவனின் மனம் போல் நடந்து கொண்டு அன்பு சுகம் தந்து, விடிந்த பிறகு நடப்பதைப் பார்க்கலாம் என்று எண்ணியிருந்தாள். அப்போது பண்டாரக் கிழவன் அவளுடைய முக வாட்டத்தை நோக்கி, "என்னடி குணபதி நாச்சியாரே, யோசனை? உன் மீது பிரியமுள்ளவர்கள் யாராவது நூறு ஐம்பது ரொக்கப் பணம் தருகிறேன் என்றார்களா? அவர்கள் மீது ஆசை திரும்பி விட்டதோ?" என்று கேட்டான். அதற்குக் குணபதி நாச்சியார், "தங்கள் அடியாள் அப்படியெல்லாம் நடக்கமாட்டாள், சுவாமி! போகப் போக அது உமக்கே அனுபவத்தில் தெரியவரும்" என்று கூறி அன்றிரவு பண்டாரக் கிழவனின் மனம் போல் குதூகலம் தந்து நித்திரையில் ஆழ்ந்தாள். அவள் கண்ணுறங்கியதும், பண்டாரக் கிழவன் வேதாளத்தை அழைத்து, குணபதியின் மனதிலுள்ள அபிலாஷைகளை அறிந்து கொண்டு, இரவோடு இரவாக அவள் தங்கியிருக்கும் மாளிகை முழுவதும் இரத்தினக் கால்கள் நிறுத்தி, ஒன்பது வகை நவரத்தினங்களால் பந்தல்கள் அலங்கரித்து அந்த

மாளிகையிலிருந்து அரண்மனை வரை இரத்தினக் கம்பளங்கள் விரித்து மகாமேரு போன்ற மகர தோரணங்களால் ஜோடித்து, பந்தல் நிர்மாணம் செய்து மறுநாள் அரசனை பரிவாரத்தோடு விருந்துக்கு அழைக்க எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து வைத்துவிட்டுத் தூங்கி விட்டான்.

விடிந்தெழுந்ததும் மகர தோரணங்களைக் கண்டு மன்னனும் மந்திரி பிரதானிகளும் பிரமித்து நிற்கும்போது, குணபதி நாச்சியார் மிகவும் குதூகலமடைந்தவளாய், பண்டாரக் கிழவனை வாயாரப் புகழ்ந்து, "வானத்துத் தேவனோ, வல்லபமுனிவனோ" என்றெல்லாம் வியந்து சித்திரம் போல் அசைவற்று நின்றாள். பண்டாரக் கிழவன் அவளை நோக்கி, "அடி பெண்ணே! உன் எண்ணப்படி மன்னனையும் மண்டலத்துச் சேனையையும் விருந்துக்கு அழைத்து வாடி கண்ணே!" என்றான்.

குணபதியும் அவ்வாறே சென்று, அரசனைத் தன் சதுரங்க சேனைகளுடன் விருந்துண்ண அழைத்தாள்.

அதற்கு அரசன், "நீ குணத்தைச் சம்பாதித்தவளேயன்றி, பணத்தைச் சம்பாதித்தவளில்லையே! எவ்வாறு எனக்கு விருந்து வைப்பாய்?" என்றான்.

அதற்குக் குணபதி, "சுவாமி! தனபதி வீட்டில் அறுசுவை அமுதிருந்தால் குணபதி வீட்டில் கூழ் கூடவா இல்லாமற் போய்விடும்? நீங்கள் என்மீது கருணை கூர்ந்து வரவேண்டும்" என்று வேண்டவே, அரசனும் அவ்வாறே குணபதி வீட்டுக்கு விருந்துண்ணச் சதுரங்கச் சேனையுடன் வந்தான். வந்த அரசனுக்கு ஒரு பதுமை வரவேற்பு வழங்க, ஒரு பதுமை சாமரைவிசிற, ஒரு பதுமை வாசல் காக்க, ஒரு பதுமை பரிமாற, ஒரு பதுமை பணிவிடை செய்ய வியப்புற்று ஊமைகண்ட கனவைப் போல் வீற்றிருந்த வேந்தன், "இந்தக் குணபதி வைத்திருக்கும் பண்டாரக் கிழவன் மாயமந்திரம் வல்ல தேவனோ, முனிவனோ" என்று பிரமித்தபடி விருந்துண்டு சென்றான். அப்பொழுது குணபதியானவள் லட்சம் பொன்னும் அரசனுக்குப் பாதகாணிக்கை கொடுத்தனுப்பினாள்.

இதைக் கேள்வியுற்ற தனபதி நாச்சியாரானவள் தான் என்ன செய்தும் அதைவிடப் பன்மடங்கு அதிகமாகச் செய்து வருவதைக் கண்டு அதிகமாக பொறாமையுற்றவளாய் அரசவையில் அமர்ந்திருக்கும் போது மன்னவரை நோக்கி "அரசர் பெருமானே! வீமாபுரி என்னும் பட்டணத்திலே காலஞ்சென்ற பஞ்சசேனாதிபதியின் பத்தினியான அமிர்தமோகினியாள் அரசாட்சி செய்து வருகிறாள். அவளுக்கு பேசாமடந்தை என்றொரு

புத்திரி உண்டு. அவ்விருவரும் இருக்கும் அரண்மனையைச் சுற்றிலும் ஏழு சுற்று கோட்டைகளும் சில வாசல்களுமுண்டு; பேசாமடந்தையை விவாகம் செய்ய வரும் பூமான்களெல்லாம் முதலில் வாசலில் ஆயிரம் பொன் கொடுத்து, மற்ற வாசல்களிலுள்ள தந்திர சூஸ்திரங்களையெல்லாம் வென்று, பேசாமடந்தையை பேசும்படி செய்தால் அப்பெண்ணை மணக்கலாம் என்று உறுதிகூறி, ஆராய்ச்சி மணி கட்டி விருதுக் கொடி நாட்டி, செம்புப் பட்டயத்தில் விளம்பரம் எழுதி முதல் வாசலில் பதித்திருக்கிறார்கள். அந்தப் பேசாமடந்தையை விவாகம் புரியப்போன ராஜாக்களெல்லாம் முதல் வாசலில் ஆயிரம் பொன் கொடுத்து விருந்துண்டு, இரண்டாவது வாசலில் தோல்வியுண்டு தலை மொட்டையடிக்கப்பட்டுத் தேசாந்திரியாகப் போனார்கள். அப்பேசாமடந்தையானவள், இவ்வாறு ராஜாதி ராஜாக்களையெல்லாம் ஏமாற்றி இதுவரை அறுபது கோடி பொன் திரட்டியிருக்கிறாள். அப்பேர்ப்பட்ட வல்லமை பொருந்திய பேசாமடந்தையை என் ஆசைநாயகரான பஞ்சாங்கக்காரர் பேசச்செய்து சூதுவாதுகளில் வென்று, அவள் தலையில் விறகுக் கட்டைச் சுமக்கச் செய்து அழைத்து வருவார். அப்படி என்னவர் வெற்றி பெற்று வந்தால் எனக்குச் சமானமாக வீற்றிருக்கும் குணபதி தன் தலையை மழுங்கச் சிரைத்து மொட்டையடித்துக் கொண்டு எனக்கு அடிமையாக வேண்டும். என்னவர் அப்படி வெற்றி பெறாமல் வந்து அவள் வைத்திருக்கும் கிழவன் வெற்றி பெற்றால் அவ்விதமே நான் அவளுக்கு அடிமையாகிறேன்!" என்று சவால் விடுத்துப் பேசினாள். அதற்கு குணபதி நாச்சியாரும் ஒப்புக் கொண்டாள்.

அதன் பின்னால் தனபதியானவள் தான் வைத்திருக்கும் ஆசை நாயகனை பஞ்சாங்கக்காரனிடம் வந்து தன் சவால் வெற்றி பெற பேசாமடந்தையை வென்று வரச் சொன்னாள். அது தன்னால் முடியாதெனத் தெரிந்திருந்தும் பஞ்சாங்கக்காரன் வேறு வழியின்றி தான் ஒப்புக்கொண்டு அரசனிடம் மூன்று மாதத் தவணையும், ஆயிரம் குதிரைகளும், ஐம்பது யானைகளும், பதினாயிரங் காலாட்களும் பெற்றுத் தரும்படி வாங்கிக் கொண்டு, கைச்செலவிற்கு தனபதியாளிடம் இரண்டு லக்ஷம் பொன்னும் வாங்கிக் கொண்டு சேனைகளுடன் புறப்பட்டான்.

அவன் வீமாபுரியை அடைந்ததும் ஒரு விடுதியில் தங்கி, மறுநாள் ஆயிரம் பொன்னெடுத்துக் கொண்டு சென்று கோட்டை வாயிலில் கட்டியுள்ள ஆராய்ச்சி மணியை அடித்தான். அதைக் கண்ட கணக்கர் ஆயிரம் பொன் கேட்டார்கள். அப்போது பஞ்சாங்கக்காரன் ஆயிரம் பொன்னை எண்ணிக்கொடுத்து, முதல் வாசலில் விருந்துண்டு, இரண்டாம் கோட்டை வாசலுக்குச் சென்று வாசற்படியில் காலை வைத்தான்.

உடனே மூன்று பதுமைகள் வெடுக்கென்று வெளிப்பட்டு வந்தன. ஒரு பதுமை அவனுக்கு முக்காலி போட. ஒரு பதுமை அவனை முக்காலியில் பிடித்திருத்த, மூன்றாவது பதுமை அவனுடைய தலையை மழுங்கச் சிரைத்து மொட்டை யடித்துவிட்டது!

பஞ்சாங்கக்காரன் வெட்கித் தலைகுனிந்து வெளியில் வந்து பரிவாரங்களை அழைத்துக்கொண்டு அழகாபுரிப் பட்டணத்திற்கு திரும்பி வந்து சேர்ந்து, வீமாபுரியில் நடந்த வேதனையான விசித்திரச் சேதிகளையெல்லாம் தன் ஆசை நாயகியிடம் சொன்னான். அதற்கு தனபதி, "உம்மால் ஆகாதது அந்த குணபதியினுடைய ஆண்டிப் பயலாலா ஆகப் போகிறது?" என்று கூறிவிட்டு, அரசரிடம் சென்று தன் ஆள் தோற்றுவிட்டு வந்து விட்டதாகவும், குணபதியினுடைய பண்டாரக் கிழவனை அனுப்பும்படியும் கேட்டுக் கொண்டாள்.

அவ்வாறே அரசன் கட்டளையிட, குணபதி நாச்சியார் தன்னுடைய ஆசைநாயகனிடம் வந்து சொல்ல, அதற்கு விக்கிரமாதித்தனாகிய ஆண்டிப் பண்டாரம், "அடி பைத்தியக்காரி! நானோ நாடி `தளர்ந்த கிழவன்! பேசாமடந்தையை வெல்லச் சென்ற ராஜாக்களெல்லாம் தலைமொட்டையாகித் திரும்பியிருக்க, என்னால் மட்டும் எப்படி இந்தக் காரியம் முடியும்? என்னைப் பேசாமடந்தையின் பட்டணத்திற்கு அனுப்பிக் கொன்றுவிடவே, இச்சூழ்ச்சி செய்கிறாயோ?" என்று கேட்டான்.

அதற்கு குணபதி நாச்சியார், "உம்முடைய சக்தி எனக்குத் தெரியாதா? உம்முடைய மாயாஜால வித்தையை அளவிடத்தான் முடியுமா? உமக்கு அடியாளான நான் அந்த தனபதி நாச்சியாருக்கு அடிமைப்பட நேர்ந்தால் அது உமக்கன்றோ குறைவாகும்?" என்றாள் குணபதி.

அதற்கு ஆண்டியாகிய விக்கிரமாதித்தன், "அடி, கண்ணே, குணபதி! உனக்காக நான் போகிறேன்! நீ உன் இராஜனிடம் சென்று ஒரு பல்லக்கும் நாற்பது காலாட்களும், இரண்டாயிரம் பொன்னும், நாற்பத்தைந்து நாள் தவணையும் வாங்கி வா!" என்றனுப்பினான். அவ்வண்ணமே அரசனிடம் வாங்கிக் கொண்டு வந்த குணபதியாள், பண்டாரக் கிழவனை நோக்கி, "சுவாமி! தாங்கள் நாற்பத்தைந்து நாள் கெடு தீர்வதற்குள் திரும்பி வராவிடில், உமது பாதசாட்சியாகத் தீக்குளித்து விடுவேன்!" என்று சொல்லியனுப்பினாள்.

ஆண்டிக் கிழவனை விக்கிரமாதித்தன் பொய் இருமலுடன் பல்லக்கில் ஏறி காடுமலை வனாந்திரங்களையெல்லாம் கடந்தான்.

வீமாபுரி பட்டணத்தில் நடுநாயகமாக விளங்கிய பேசாமடந்தையின் அரண்மனைக் கோபுரம் கண்ணைப் பறித்தது. சிந்தனை வயத்தவனாய் வர்த்தக வீதியிலே நடந்து சென்ற விக்கிரமாதித்தன், வியாபாரமில்லாத கடையொன்றிலே தன்னுடைய மதிமந்திரியான பட்டி சதுரங்கமாடிக் கொண்டிருப்பதைக் கண்டான். உடனே அவன் பட்டிக்கு சைகை செய்துவிட்டு, ஊருக்கு வெளியே உள்ள சத்திரத்திற்குச் சென்றான். தன்னுடன் வந்த சேனைக்கு செலவுக்குக் கொடுத்து, ஒரு மாதத்திற்குத் தன்னைத் தேட வேண்டாமென்று அவர்களைச் சத்திரத்திலே விட்டுவிட்டு, பண்டார வேடங்களைந்து, சுயரூபத்துடன் திரும்பி வந்து பட்டியைச் சந்தித்துப் பேசினான். அன்றிரவு பட்டி தங்கியிருந்த அம்மையாரின் வீட்டிற்கு விக்கிரமாதித்தனைத் தன் தமையன் என்று உறவு கொண்டாடி அழைத்து வந்து இருவருக்கும் பாட்டியம்மாளைச் சமைக்கச் சொன்னான். சாப்பாடு வேளையில் ஆயிரம் பொன்னைக் குவியல் குவியலாக எடுத்து வைத்துக் கொண்டு அவர்களிருவரும் பேசிக் கொண்டிருக்கையில், அவ்வீட்டுக்காரக் கிழவி, "இப்பணத்தைக் கொண்டு என்ன வியாபாரம் செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டாள். அதற்கு மதி மந்திரி பட்டி "பாட்டி! என் தமையனார் இன்றிரவு பேசாமடந்தையிடம் செல்ல வேண்டுமென ஆயிரம் பொன்னைக் கணக்கிட்டு வைக்கிறார்" என்றான்.

"ஐயோ பாவமே!" என்ற கிழவி, "கேளுங்களப்பா, பிள்ளைகளே! அந்தத் தந்திரக்காரி பேசாமடந்தையை விவாகம் செய்ய வேண்டுமெனப் போய் மொட்டையான ராஜாக்கள் மெத்தவுண்டு! அந்தக் கதி நீங்களும் அடைய வேண்டுமா?" என்று பரிதாபப்பட்டாள்.

"பட்டி! பேசாமடந்தையின் வரலாறும், அவள் அரண்மனையில் நடக்கும் விசித்திரங்களையும் தெரிவித்தால் உனக்கு மிகவும் புண்ணியமுண்டு!" என்றான் பட்டி.

"கேளுங்கள், மக்களே! அந்தப் பேசாமடந்தையின் கோட்டையிலிருந்து அரண்மனை வரையிலும் பத்து வாசல்கள் உண்டு. முதல் வாசலில் ஆராய்ச்சி மணி கட்டியிருக்கும். அதனருகில் கணக்கர்கள் இருப்பார்கள். மணியடித்ததும் அவர்கள் வந்து ஆயிரம் பொன் கேட்பார்கள்; கொடுத்ததும் விருந்து வைப்பார்கள். அந்த விருந்தில் வெந்த சோறும் வேகாத சோறும், உரித்த பழமும், உரியாத பழமும் கலந்திருக்கும். அந்த விருந்தை அருந்தியதும் இரண்டாம் வாசலுக்குச் செல்ல வேண்டும். அங்கு மூன்று பதுமைகள் இருக்கும். ஒரு பதுமை முக்காலி போட, மற்றொன்று ஆளைப் பிடித்து அதில் உட்கார வைக்க, மூன்றாவது

பதுமை தலையை மொட்டையடித்து விடும்! அதைக் கடந்து மூன்றுவது வாசலில் காலை வைத்தால், இரண்டு மல்லர்கள் உண்டு. அவர்களை வென்று நான்காம் வாச்லுக்குப் போனுல் கருங்குரங்கு இருக்கும். அதை ஏமாற்றி ஐந்தாம் வாசலுக்குப் போனுல் புலி இருக்கும். ஆறும் வாசலில் யானை இருக்கும். ஏழாம் வாசலில் கிணறு இருக்கும். எட்டாவது வாசலில் சேற்று வாய்க்கால் இருக்கும். அதிலிறங்கி அப்பால் சென்றுல் ஒரு நத்தைக் கூட்டில் தண்ணீரும். ஓர் ஓலைச் சுருளுமிருக்கும். கால்கள் மீது ஒட்டிய சேற்றையெல்லாம் அந்நீரைக் கொண்டு சுத்தி செய்து பாதி நீரை மிச்சமும் வைக்க வேண்டும். பிறகு ஒன்பதாம் வாசலில் பளிங்கு மண்டபம் இருக்கும். அதில் நடக்கும் போது வழுக்கி விழுந்தால் தலை பல துண்டுகளாகி விடும். அதுவும் தப்பிப் பத்தாவது வாசலை அடைந்தால் இருளடர்ந்த ஆயிரக்கால் மண்டபமிருக்கும். அதற்குள் வாசலறிந்து வழியறிந்து போகவேண்டும். இவ்வாறு போகும்போது அங்கு இருட்டிலுள்ள தூண்களில் அடிபட்டுத் தலை சிதறிவிடும். அதற்கும் தப்பி உள்ளே போனுல் பேசாமடந்தையின் விசித்திர விநோதங்கள் நிறைந்த நவரத்தின சிங்கார மண்டபம் இருக்கும். அதில் பீதாம்பரங்கள் விரித்திருக்கும். அங்கே இராப்பகலாகத் தூங்கா விளக்குகளும், குத்து விளக்குகளுமாக ஆயிரம் விளக்குகள் எரிந்து கொண்டேயிருக்கும். அந்த மண்டபத்திலே பஞ்சலோகத்திலே உருவான கட்டிலொன்று இருக்கும். அக்கட்டிலில் கால்மாடு தலைமாடு அறியவேண்டும். தெரியாமல் கால் வைக்கும் பக்கம் தலைவைத்தால் சில பதுமைகள் வரும். சாணத்தைக் கரைத்துத் தலையில் ஊற்றிச் சிரைத்து, ஐங்குடுமி வைத்து அனுப்பிவிடும். சரியாக தலைமாட்டுப் பக்கம் அமர்ந்தால் சில பதுமைகள் வந்து, களப கஸ்தூரி முதலிய பரிமளமான வஸ்துக்களும், தாம்பூலமும் கொடுத்து கௌரவிக்கும். இரண்டு பதுமைகள் அவனுக்கு வெண்சாமரைகள் விசிறும். சில பதுமைகள் ஆடல்பாடல் புரிந்து மகிழ்விக்கும். சில பதுமைகள் கட்டியம் கூறி செபிக்கும். இவ்வளவையும் தப்பிப் பேசாமடந்தை யாரென்பதை அந்த ஒரே இரவிற்குள் இனமறிந்து, அவளை மூன்று வார்த்தைகள் பேசச் செய்யவேண்டும். இவைகளெல்லாம் நிறைவேறினுல் பேசா மடந்தையை விவாகம் புரியலாம். ஒன்று தவறினும் அவமானப் பட்டு வெளியேற நேரிடும்!" என்றுள் கிழவி.

இதைக் கேட்ட விக்கிரமாதித்தன், "அந்தப் பேசாமடந்தையின் பெருமை சொன்னுயே தவிர, அவளுடைய ரூபலாவண்யத்தைப் பற்றிச் சொல்லவில்லையே?" என்றுன்.

அதற்குப் பாட்டியானவள், "கேளுங்கள், மக்களே! சாந்து சவ்வாது சம்பங்கியெண்ணை பூசி, முல்லைப் பூக்கள் சூடி, சந்திர

பிறை மின்னும் கருமேகக் கூந்தல்; முகில் கூட்டங்களிடையே மூன்றும் பிறை சந்திரனைப் பழிக்கும் முன்நெற்றி, வானவில்லைப் போல் வளைந்த புருவங்கள்; நீலோற்பல விழிகள்; சண்பகப் பூவைப்போன்ற மூக்கு, கண்ணாடிக் கன்னங்கள், பம்பரமோ, பர்வதமோ, பால் குடமோ, பூங்கமலமோ, பூரண கும்பமோ, சுவர்ணச் செப்போ, சொக்கட்டான் காயோ, தாளமோ, சக்கரவாளமோ, யானை மத்தகமோ என்றெல்லாம் மயங்கச் செய்யும் நெஞ்சகம்; உடுக்கை போன்ற சிற்றிடை, தாமரைத் தண்டுகள் போன்ற தளிர்கரங்கள்; இளவாழைத் தண்டைப் போன்ற கால்கள், நவமணிப் பாவாடையும், நல்முத்து இழைத்த ரவிக்கையும், மேலான பொன் ஜரிகை மேலாடையும், மாமணிச் சடை நாகமும், மதுர மேனியெங்கும் மனமோகன ஆபரணங்களும், எண்திசையும் கலீர் கலீரெனச் சப்திக்கும் காற் சிலம்புகளும் அணிந்து அரண்மனையில் சஞ்சரிப்பாள். செம்பஞ்சுக் குழம்பு தீட்டிய தாமரைப் பாதங்கள், பொன்னிற மேனி இத்தனையும் கொண்ட அந்தப் பேசாமடந்தையின் அழகை ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனும் வர்ணிக்க இயலாது! அவள் காம்பரிந்த மலர்கள் பரப்பிய பஞ்சணையில்தான் படுத்துறங்கு வாள்! அத்தர் பன்னீரில் தான் குளித்தெழுவாள்! எவர் நெஞ்சையும் கொள்ளை கொள்ளும் பெண்ணவள்! கற்பு நிலை வழுவாத கன்னியாவாள்! சோழி, சொக்கட்டான், சதுரங்கம் ஆடியும், அல்லும் பகலும் அரும்பெரும் நூல்களை ஆராய்ந்தும், எவருக்கும் வல்லவளாய் விளங்குகிறாள். அந்தப் பூவையாளை வெல்ல உம்மால் ஆகாது. போகாதீர் அங்கே!" என்றாள் பாட்டி.

இவற்றையெல்லாம் கேட்ட விக்கிரமாதித்தனோ, பேசா மடந்தையின் மீது தீராத மோகம் கொண்டான். போஜனம் முடிந்ததும், பட்டணம் சுற்றி வருகிறேனெனப் பாட்டியிடம் சொல்லிவிட்டு, ஆயிரம் பொன் எடுத்துக் கொண்டு மந்திரி பட்டியுடன் வேதாளத்தையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான். பேசாமடந்தையின் கோட்டையருகில் சென்று முதல் வாசலில் கட்டியிருந்த ஆராய்ச்சி மணியை அடித்தான். குதிரையொன்றில் கணக்கன் வந்து, ஆயிரம் பொன்னை வாங்கிக் கொண்டு முதல் வாசலில் விருந்துண்ணச் சொன்னான். விருந்திலே பரிமாறப்பட்ட வெந்த சோற்றையையும் கறியையும், உரித்த பழங்களையும் விக்கிரமாதித்தன் சாப்பிட்டான். வேகாததையும் உரியாததையும் பட்டி தந்திரமாக வாங்கி, தன் கையுருமாலில் போட்டு கட்டிக் கொண்டு, கணக்கனுடன் பேசிச் சினேகமும் பிடித்துக் கொண்டான். விக்கிரமாதித்தன் விருந்துண்டு தாம்பூலம் தரித்து எழுந்த பிறகு பட்டி கணக்கனின் கையைப் பிடித்துக் கொண்டு, ஆசை மொழிகள் பேசியவாறே

இருவருடனும் இரண்டாவது வாசலுக்குச் சென்றான். கணக்கனின் குதிரையைப் பிடித்துக் கட்டுவதற்காக வாசலின் முன்னால் காத்திருந்த பணியாளை பட்டி பார்த்ததும், "அடே, கிழ் மகனே! நாங்கள் வரும்போது விலகக்கூடாதா?" என்று அதட்டி அவனைத் திடீரெனப் பிடித்து அந்த வாசலுக்குள் தள்ளிவிட்டான். உடனே மூன்று பதுமைகளும் வெளிப்பட்டு, அந்தப் பணியாளனைப் பிடித்து முக்காலியில் உட்கார வைத்துத் தலையை மொட்டை யடித்துவிட்டன!

அந்த வாசலைக் கடந்து மூன்றாவது வாசலை நெருங்கும்போது பட்டி தன் பார்த்திபனுக்கு பின்தங்கிவரும்படி ஜாடை காட்டிவிட்டு, தன் கையோடு கூட்டி வந்த கணக்கனைப் பிடித்துத் திடீரென மூன்றாவது வாசலுக்குள் தள்ளிவிட்டான். உடனே அவ்வாசலிலிருந்த மல்லர்கள் வெளிப்பட்டு கணக்கனைப் பிடித்துக் குத்தும் உதையும் கொடுக்கலானார்கள். அந்தச் சமயம் பட்டியும் விக்கிரமாதித்தனும் அவ்வாசலைக் கடந்து நான்காம் வாசலை அடைந்தார்கள்.

அந்த வாசலில் பயங்கரமான ஒரு கருங்குரங்கு காத்திருந்தது. பட்டியின் கையுருமாலில் கட்டிக் கொண்டிருந்த வேகாத சோற்றை அந்தக் குரங்கின் முன் வைத்தார்கள். அது அதைத் தின்னாமல் முகர்ந்து கொண்டிருக்கவே, "இது நிஜக் குரங்கல்ல! சூழ்ச்சியான யந்திரப் பாவை!" என்பதை அறிந்து வேதாளத்தை விட்டு அதை அடித்து நொறுக்கினார்கள். இவ்வாறே ஐந்தாவது வாசலிலிருந்த கொடும் புலிக்குப் பச்சை இறைச்சியையும், ஆறாவது வாசலிலிருந்த மத யானைக்குக் கரும்பு முதலான பழவர்க்கங்களையும் வைத்து அவை தின்னாமலிருக்கவே, வெறும் யந்திர மிருகங்கள் தாம் என்பதை தெரிந்து கொண்டு வேதாளத்தை ஏவி அவற்றை அடித்து நொறுக்கிவிட்டு, ஏழாவது வாசலை அடைந்தார்கள்.

அந்த வாசலில் பிரும்மாண்டமான ஒரு பாழுங்கிணறு இருந்தது. அதைத் தாண்டிப் போக முடியாதேயென்று யோசித்த பட்டி, அங்கே கிடந்த ஒரு பாறாங்கல்லைப் புரட்டி அந்தக் கிணற்றுக்குள் போடவே, அது சூத்திரக்கிணறான படியால் இரண்டு பலகைகள் விசையிலிருந்து கிளம்பிவந்து கிணற்றை மூடிக்கொண்டன. பிறகு மன்னவனும் மதி மந்திரியும் அதன் மீது ஏறி எட்டாம் வாசலை அடைந்தார்கள்.

அங்கிருந்த சேற்று வாய்க்காலில் இறங்கி விக்கிரமாதித்தன் கரையேறினான். பட்டியோ வேதாளத்தின் மேலேறி வாய்க்காலைக் கடந்தான்.

பிறகு அங்கிருந்த ஓலைச் சுருளைக் கொண்டு, அரசன் காலில் ஒட்டிய சேற்றையெல்லாம் வழித்தெடுத்து நத்தை யோட்டில் இருந்த தண்ணீரில் தன் உருமால் முனையை நனைத்து காலைச் சுத்தம் செய்து, நத்தையோட்டில் அரைவாசி தண்ணீரை மிச்சமும் வைத்துவிட்டு அங்கிருந்து ஒன்பதாம் வாசலுக்கு சென்றான்.

அங்கே ஒரு பளிங்கு மண்டபம் இருந்தது. பேசாமடந்தையை மணமுடிக்க வருபவர்கள், அம்மண்டபத்தில் நடந்துதான் கடந்து செல்லவேண்டும். அதைக் கடப்பதற்குப் பளிங்குத் தரைமீது வெறுங்காலோடு நடந்தாலோ வழுக்கி விழுந்து தலை சிதறிப் போகும்! அதனால் விக்கிரமாதித்தன் தன் வேதாளத்தையனுப்பி மெழுகும் நெருப்பும் கொணரச்செய்து, நெருப்பிலே மெழுகைக் காய்ச்சி, தன் இரு பாதங்களிலும் தடவிக் கொண்டு பளிங்கு மண்டபத்தை கடந்து சென்றான்! பட்டியோ பறக்கும் வேதாளத்தின் மீது ஏறி அதைக் கடந்து பத்தாவது வாசலை அணுகினான்.

அந்த வாசலிலே மரணக் குகைபோல் ஆயிரங்கால் மண்டபம் ஒன்று இருந்தது. அதனுள் கரும் கும்மென இருள் கவிந்திருந்தது. கோணல் மாணலான தூண்கள் நிறைந்து, வழி நேராக இல்லாமலும், சரியாகத் தெரியாமலும் இருந்தன. அதற்குள் நடந்து செல்லும் போது தூணில் சிரம் மோதிச் சிதறிப் போக நேரிடும்!

பட்டி சிறிது ஆலோசித்து விட்டு விக்கிரமாதித்தனிடம், "தேவரே! நான் வேதாளத்தின்மீது ஏறி வண்டுபோல் ரீங்கார மிட்டுக் கொண்டே இம்மண்டபத்தைக் கடந்து செல்லக்கூடிய வழியையும், உளவையும் அறிந்து செல்கிறேன்! தாங்கள் அந்த ரீங்கார சப்தத்தைப் பின் தொடர்ந்து அவ்வழியே நடந்து வாருங்கள்!" என்றான். அதன் பிரகாரமே விக்கிரமாதித்தன் அந்த இருண்ட மண்டபத்தினுள் நுழைந்து பலவாறாகச் சுற்றி சுற்றி முடிவில் சிறுவாசல் தென்படுவதை உணர்ந்தான். அந்த சிறு வாசலுக்குள் நுழைந்ததும் விசித்திர வினோதமான ஒரு வசந்த மண்டபம் தென்பட்டது.

அந்தச் சிங்காரக் கூடத்திலே ஆயிரம் தீபங்கள் பகல் வத்திகள் போல எரிந்து கொண்டிருந்தன. அவற்றின் நடுவே பஞ்சலோகத்தாலான பள்ளியறைக் கட்டில் ஒன்று ஒளி வீசிக் கொண்டிருந்தது. அந்தக் கட்டிலைச் சுற்றிலும் கட்டழகு வாய்ந்த ஆயிரம் தாதிப்பெண்கள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தார்கள்.

பேசாமடந்தையை வென்றணைய வருகிற பூமான் அந்தப் பள்ளியறைக் கட்டிலில் கால்மாடு தலைமாடறிந்து படுக்க வேண்டும்; கால்வைக்கும் பக்கத்தில் தலையை வைத்துவிட்டால் யந்திரப் பதுமைகள் வெளிப்பட்டு, அவன் தலையில் சாணத்தைக் கரைத்து ஊற்றி ஐங்குடுமி வைத்து அவமானப்படுத்தி அனுப்பிவிடும்! இதற்கு என்ன செய்யலாமென மதிமந்திரி பட்டி சிறிது ஆலோசித்துவிட்டு, விக்கிரமாதித்தனின் கையிலுள்ள எலுமிச்சம் பழத்தை அக் கட்டிலின் நடு மைய்யத்தில் வைக்கச் சொன்னான். அவ்வாறே வைக்கவும் பழம் ஒரு புறம் உருண்டோடியது. பழம் உருண்டோடிய பக்கம் கட்டிலின் கால்மாடு என்று உணர்ந்து கொண்டு தலைமாட்டிலே விக்கிரமாதித்தனை உட்காரச் சொன்னான் பட்டி. அரசனும் அவ்வாறே கட்டிலில் அமர்ந்ததும், பதுமைகள் வெளிப்பட்டு நிலைக் கண்ணாடி காட்டுவதும், தாம்பூலங் கொடுப்பதும் இருபுறமும் வெண்சாமரம் வீசுவதும், உடம்பெல்லாம் களப கஸ்தூரி வாசனைகள் பூசுவதும், கனிமொழி பேசுவதும், கட்டியங் கூறுவதும், நடனமாடுவதும், கானம் பாடுவதும், உச்சிமுதல் உள்ளங்கால்வரை பூரிக்கும்படியாகக் கால் கைகள் பிடித்து விடுவதுமாக ஏக அமர்க்களமாய் உபசரிக்கலாயின. இந்த ஆரவாரத்தைக் கேட்டும் தூங்கும் ஆயிரம் தோழிகளும் திடுக்கிட்டு எழுந்திருப்பதற்கு முன்னால் பட்டி ஓடிச்சென்று ஆயிரம் தோழிகளின் கூந்தல்களையும் ஒன்றோடொன்றாக வரிசையாக முடிந்து வைத்துவிட்டு அங்கு எரிகின்ற ஆயிரம் தீபங்களையும் குபீரென அணைத்து, ஒருத்தியின் தொடையில் சுருக்கென கிள்ளிவிட்டுக் கட்டிலுக்கடியில் மறைந்து கொண்டான். கிள்ளப்பட்ட தாதி திடுக்கிட்டெழுந்தாள். அவளுடைய கூந்தலில் அடுத்த தாதியின் கூந்தல் முடியப் பட்டிருந்ததால் அவளும் இழுபட்டு எழ இவ்வாறு ஆயிரம் தாதிகளும் இழுபட்டு எழுந்து, ஒருத்தியின் கூந்தலை ஒருத்தி இழுத்தபடி குய்யோமுறையோவெனக் கத்திக்கொண்டிருந்தார்கள். இவ்வாறு ஆயிரம் தாதிகளும் ஒரு முகூர்த்த நேரம் கூச்சலிட்ட பின்னர், தங்கள் கூந்தல்களின் முடிச்சுகளை அவிழ்த்துக் கொண்டும், அறுத்துக் கொண்டும் வெருண்டோடத் தலைப் பட்டார்கள். அவர்களை நோக்கி, பஞ்சணையில் சாய்ந்திருந்த விக்கிரமாதித்தன் கலகலவென சிரித்து, "அடியே, கூந்தலழகிகளா! அழைத்து வாருங்களடி உங்கள் அரசகுமாரியை! பஞ்சணைக்கு வரச்சொல்லுங்களடி உங்கள் பேசாமடந்தையை! கொஞ்சிப் பேச கூட்டி வாருங்களடி அந்தக் கோமளாங்கியை!" என்றான். ஆயிரம் தாதிகளும் தறிகெட்டோடி பேசாமடந்தையிடமும், அவளுடைய தாயாரிடமும் சென்று, தங்கள் வாயிலறைந்து கொண்டு "அம்மா! என்றுமில்லாமல் இங்கே யாரோ ஒருவன் கட்டுக் காவலையெல்லாம்

கருவறுத்துக் கடந்து வந்து, சிங்கார மண்டபத்தினுள் புகுந்து ஆயிரம் திருவிளக்குகளையும் அணைத்து, எங்கள் கூந்தலையும் முடிந்து இவ்வாறு அவமானப்படுத்திவிட்டான்!'' என்று முறையிட்டு விம்மி விம்மி அழுதார்கள்.

பேசாமடந்தையும், அவளுடைய தாயாரும் மோசம் வந்ததேயென்று நடுங்கி, வந்திருப்பவனை ஏமாற்றி அனுப்ப வேண்டுமென எண்ணங்கொண்டு அரண்மனையில் விளக்குகள் ஏற்றும் தாதியான தீப நாயகியை வரவழைத்து பேசா மடந்தையைப் போல பிரமாதமாக அலங்கரித்து அவளை "சிங்கார மண்டபம் நோக்கி செல்லடி!" என்று அனுப்பி வைத்தார்கள். அவளும் பார்த்தவர்கள் பிரமிக்கும்படியாக அரசிக்குரிய ஆடம்பரங்களுடன், ஆயிரம் அடிமைப் பெண்கள் தீபங்கள் ஏந்திவர அவளுக்கு முன்னால் வீணை முதலிய வாத்தியங்களுடன் கலைச்செல்விகள் ஆடிப் பாடிவர அதிக் கோலாகலமாய் அரசியைப் போல் கம்பீரமாக நடந்து வந்தாள் அவளை எதிர்நோக்கி விக்கிரமாதித்தன் பிரமித்து நின்றவனாய் வேதாளத்தை நோக்கி "இவள்தானோ பெருமை பேசற்கரிய பேசாமடந்தை?" என்று மெல்லக் கேட்டான். அதற்கு வேதாளம் "அதைத் தந்திரத்தாலேதான் அறியவேண்டும்! நான் அவர்கள் ஏந்திவரும் தீபங்களின் திரியையெல்லாம் உள்ளே இழுக்கிறேன். அப்போது அவர்களின் தலைவியும் தன் கைவிரலால் தீபத்தைத் தூண்டி அந்த விரலை மற்றொன்றில் துடைப்பாளேயாகில் அவள் பேசாமடந்தையே ஆவாள்! தலையில் துடைத்துக் கொள்வாளேயாகில் அவள் தீபமேற்றுகிற தாதிதானென அறிந்துகொள்ளும்!" என்று ரகசியமாகச் சொல்லிவிட்டு, அவ்வாறே அரூபமான வேதாளம் தீபங்களின் திரியையும் உள்ளே இழுத்தது. உடனே ஆயிரம் தாதியர்களெல்லாம் தீபங்களைத் தூண்டிவிடும்போது அவர்களின் தலைவியும் திரியைத் தூண்டிவிட்டு எண்ணெய் படிந்த கைவிரலைத் தன் தலையில் துடைத்துக்கொண்டாள்!

அதைக் கண்டதும் விக்கிரமாதித்தன் கலகலவெனச் சிரித்து அவளை நோக்கி "வாடியம்மா தீபநாயகி! உனது அரசியாகிய பேசாமடந்தை நாச்சியார் இங்கே வந்தால் அவளின் அழகு குறைந்து போமோ? நான் ஏமாறவில்லையென்பதை உன் நாச்சியாருக்குத் தெரிவித்து என் பசிக்கு உணவெடுத்து அவளை பரிமாற வரச்சொல்லடி!" என்றான். இதைக் கேட்ட தீப நாயகி வெட்கித் தலைகுனிந்து, வந்தவழியே திரும்பிச் சென்று, அமிர்தமோகினியிடமும், தன் தலைவியிடமும் சொன்னாள். அதைக்கேட்டு துணுக்குற்ற பேசாமடந்தையும் அவளுடைய

தாயாரும் "இனி என்ன மோசம் செய்யலாம்?" என்று யோசித்து சமையல் செய்யும் தாதியான சம்பிரவல்லியை வரவழைத்து அவளுக்குப் பேசாமடந்தையைப்போல் அலங்காரங்கள் செய்து சில தாதிகள் கட்டியம் கூற, சிலர் காளாஞ்சியேந்த, சிலர் வெண்சாமரம் வீச, சிலர் முப்பத்திரண்டு நளபாகத்துடன் சோறு கறிகள் எடுத்தேக ஆடம்பரத்துடன் இராஜனிடம் அனுப்பி வைத்தார்கள்.

இம்முறையும் விக்கிரமாதித்தன் பிரமித்து "இவள்தான் பேசாமடந்தையோ?" என்று மெல்ல வேதாளத்தைக் கேட்டான்.

அதற்கு அரூபமான வேதாளம் "அதைத் தந்திரத்தால்தான் அறியவேண்டும். அவள் ஆசையோடு உமக்கு உணவு பரிமாறும் போது நான் மறைமுகமாக நெய்க்கிண்ணத்தைக் கவிழ்த்து நெய்யையெல்லாம் கொட்டிவிடுகிறேன். வேறு நெய் கொண்டுவரும்படி அவள் அதிகாரத்துடன் உத்திரவிட்டால் அவள் பேசாமடந்தையேதான். கொட்டிய நெய்யை வழித்து அள்ளி மறுபடி விடுவாளேயானல் அவள் சமையற்காரி என்று அறிந்து கொள்ளும்!" என்றது.

அவ்வாறே தாதி சம்பிரவல்லி சல்லாபச் சிரிப்புடன் சாதம் பரிமாறும் போது வேதாளம் அரூபமாகச் சென்று நெய்க் கிண்ணத்தைக் கவிழ்த்துவிட்டது. உடனே அவள் சட்டென்று கொட்டிய நெய்யை வழித்து அள்ளி கிண்ணத்தில் வடித்தாள். அது கண்ட விக்கிரமாதித்தன் கலகலவெனச் சிரித்து "அடி, சமையல் செய்கிற வெள்ளாட்டியே! எனக்குப் பணிவிடை செய்ய அந்த பேசாமடந்தை வரலாகாதோ? அள்ளக் குறைந்துவிடுமோ அவள் அழகு? போடி, போய் அவளை வரச் சொல்லடி!" என்றான். வெட்கித் தலைகுனிந்த வெள்ளாட்டியும் ஓடிச் சென்று பேசாமடந்தையின் தாயாரிடம் நடந்ததையெல்லாம் தெரிவித்தாள்.

அதைக் கேட்டு கலக்கங்கொண்ட அமிர்தமோகினி பலவாறாய் வருத்தமுற்று, வேறு வழியின்றி பேசாமடந்தையைக் கூப்பிட்டு "ஆ, மகளே! இதுகாறும் உன்னை சூதில் ஜெயித்துக் கூட்டிப் போக வந்த ராஜாதி ராஜாக்களெல்லாம் இரண்டாவது வாசலிலே தலை மொட்டையாகிப் போனார்களே தவிர நம்மை ஜெயிக்கவில்லை. இப்போது வந்திருப்பவனே பத்து வாசலுங் கடந்து வந்து பள்ளியறைக்கு உன்னை வாடியென்று உன்னை கூப்பிடுகிறான். நாம் அனுப்பிய இரண்டு தாதியர்களில் ஒருத்தியை நீயென நினைத்து அழைத்துப் போவான் என எண்ணியிருந்தோம். அதிலும் அவன் ஏமாறவில்லை! இனி அவனை வெறுங்கையோடு

விரட்டி அனுப்ப வேண்டுமென்றால் அதற்கு ஒரே ஒரு வழிதானிருக்கிறது!" என்று சொல்லிவிட்டு விக்கிரமாதித்தன் காத்திருக்கும் சிங்கார மண்டபத்தில் வந்து நின்றவளாய் நான்கு தாதியர்களின் மறைவில் நின்று கொண்டு, "ராஜ கம்பீரனே! நீர் என் குமாரியை ஜெயித்து மணம் புரிந்து கூட்டிச் செல்ல வேண்டுமென்றால் நீர் நிறைவேற்றவேண்டிய நிபந்தனை இன்னும் ஒன்று பாக்கியிருக்கிறது! அது என்னவென்றால் உமது கட்டிலுக்கெதிரில் ஒரு கட்டில் போட்டு இரு கட்டிலுக்குமிடையே ஒரு திரைச்சீலை கட்டி பேசாமடந்தை இன்றிரவு முழுவதும் அமர்ந்திருப்பாள். பொழுது விடிவதற்குள் அவளை மூன்று வார்த்தை பேசுமாறு செய்யவேண்டும். அப்போதுதான் நீர் அவளைத் தொடலாம். இரவு முழுவதும் அவள் பேசாமலிருந்துவிட்டால் பொழுது விடிந்ததும் நீர் வந்த வழியைப் பார்த்துக் கொண்டு போக வேண்டும்! அவள் வாயைத் திறந்து பேசுவதற்கு முன்னால் அவளை நீர் வலியத் தீண்டினால் உம் தலை ஆயிரம் சுக்கலாய் உடைந்து போய்விடும்!" என்று அறிவித்தாள்.

அதற்கு விக்கிரமாதித்தன் சம்மதிக்கவே, அவனுடைய கட்டிலுக்கு எதிராக, பேசாமடந்தைக்கு மற்றொரு கட்டிலும் போடப்பட்டு, இரண்டுக்குமிடையே கனமான திரைச்சீலையொன்று கட்டித் தொங்கவிடப்பட்டது. பிறகு அமிர்தமோகினி, பேசாமடந்தையைக் கூப்பிட்டு, "மகளே! வந்திருப்பவன் என்ன சொன்னாலும் நீ வாய்திறந்து பேசாதே! இன்றிரவு முழுவதும் நீ மூன்று வார்த்தை பேசாதிருந்தால் அந்தப் பொல்லாதவன் பொழுது விடிந்ததும் வந்த வழியே ஓடிவிடுவான்!" என்று புத்தி புகட்டினாள். பேசாமடந்தையும் "நாம் வாய்திறந்து பேசினால்தானே வந்திருக்கும் வல்லாளன் நம்மை வாரியணைப்பான்!" என்று எண்ணியவளாய் வழக்கமாய் அணியும் ஆடையாபரணங்களைத் தவிர வேறு விசேஷமான ஜோடிப்புகள் எதுவுமில்லாமல், நான்கு தாதியர்களுடன் பள்ளியறைக்கு வந்து தன் கட்டிலில் அமர்ந்தாள். ஆசையைத் தூண்டும் அந்த இரவிலே அவளுக்கும் விக்கிரமாதித்தனுக்குமிடையே தொங்கும் கனமான திரைச்சீலை மௌனத்தைப் பெரிதாக்கி எதிரொலித்துக் கொண்டிருந்தது. இராப்பொழுதின் ஒவ்வொரு நாழிகையும் மௌனத்தினால் ஒவ்வொரு யுகம் போல் மெல்லக் கரைந்து கழியலாயிற்று.

விக்கிரமாதித்தன் பொறுமையிழந்தவனாய் திரைச்சீலையை நோக்கி அதனுள்ளிருக்கும் பேசாமடந்தையைக் கூப்பிட்டு, "பெண்ணே, உன் பேரழகைக் கேட்டு உன்னிடம் கொஞ்சிப் பேசிக் கூடியணைய வந்த கோமானை இப்படி மௌனத்தால் கொல்லுகிறாயே? இது அழகாகுமா? பத்துவாசல் கடந்து பூத்துக்

குலுங்கும் உணர்ச்சிகளைப் பொழிய வேண்டுமென வந்திருக்கும் பூமானிடம் இப்படிப் பாராமுகமாய் இருப்பதாகுமா? உன் அரண்மனைக்கு ஆசை விருந்தாளியாக வந்திருக்கும் என்னை இவ்விதந்தான் உபசரிப்பதா? வாய் திறந்து ஒரு வார்த்தை பேசினால் உன் வாய்முத்து உதிர்ந்துவிடுமா?" என்றெல்லாம் பலவிதமாக ஆசைமொழிகள் பேசியும் பேசாமடந்தை வாய்திறக்கவேயில்லை!

எச்சரிக்கையுடன் பிடிவாதமாக மௌனம் சாதிக்கும் அவளை இனிக் கதைகள் சொல்லித்தான் எதிர்பாராதவிதமாகப் பேசச் செய்ய வேண்டுமென்று கருதிய விக்கிரமாதித்தன் எதிரேயிருக்கும் திரைச் சீலையில் வேதாளத்தை பிரவேசிக்கச் செய்து அதை நோக்கி "திரைச் சீலையே! பேசாமடந்தையோ பேசவில்லை! என் கண்களோ உறங்கவில்லை! இராப்பொழுதோ எளிதில் கரைவதாயில்லை! எரியும் தீபங்களோ இன்னும் அணைவதாயில்லை! பொழுது விடிவதற்குரிய வேளையே வெகு நாழிகை இருக்கிறது. அதுவரை நீயாவது ஒரு கதை சொல்லு" என்றான். அப்போது திரைச்சீலை தென்றல் காற்றில் சலசலத்து "மன்னருக்கெல்லாம் மன்னராய் மண்டலங்களை ஆளும் பூமானே! என்னையும் ஒரு பொருட்டாக மதித்து கதை சொல்லச் சொன்னீரே! நான் எந்தக் கதையைச் சொல்லுவது? நான் பாடுபட்ட கதையைச் சொல்லவா? கேடுகெட்ட கதையைச் சொல்லவா? அல்லது ஏதாவது பழைய கதையொன்றை சொல்லவா?" என்றது.

"நீ பட்டகதையும், கெட்டகதையும் சொல்லி பின்பு பழைய கதையையும் சொல்" என்றான் விக்கிரமாதித்தன்.

அதற்கு திரைச்சீலையிலிருந்த வேதாளம், "நான் பாடுபட்ட கதையையும், கேடுகெட்ட கதையையும் சொல்லுகிறேன் கேளும்! நான் ஆதியில் ஒரு சிறு வித்தாயிருந்தேன். பயிரிடும் பாட்டாளி என்னைத் தேர்ந்தெடுத்து மண்ணை உழுது அதில் என்னை விதைத்தான். அப்போது மழைபெய்ய, வித்து முளைகிளம்பி இரண்டு இலைகள் விரித்து நான்கு இலைகளாகி பத்து இலைகளாகப் பெருகி பருத்திச் செடியாகி பூத்துக் காய்த்து பஞ்சானேன். என்னை பெண்கள் வாங்கிப்போய் பிய்த்துப் பிடுங்கி அரைத்து திரைத்து நூலாக்கி நெசவாளியிடம் விற்றார்கள். அவன் என்னை பாவாக்கித் தறியில் பூட்டி நெய்து இரட்டாக்கி துணி வியாபாரியிடம் விற்றான். துணி வியாபாரியிடம் இரட்டு என்ற பெயரில் கடைச் சரக்காயிருந்த என்னை இந்தப் பேசாமடந்தையின் ஆட்கள் வாங்கிச் சென்று தையற்காரனிடம் கொடுத்து தாறுமாறாய் வெட்டித் தைத்து, திரைச் சீலைகளாக்கினார்கள். இப்போது வளையங்களில் கயிறு கோர்க்கப்பட்டு இழுத்துக் கட்டப்பட்டு

உங்கள் இருவருக்குமிடையே திரைச்சீலையாய் துயரத்தோடு தொங்குகிறேன். இவ்வளவு கஷ்டப்பட்டு வந்த என்னைக் கட்டி வைத்துக் கொண்டு கதை சொல்லென்றால் முடியுமா?" என்றது.

திரைச்சீலை பேசுவதைக் கண்டு பேராச்சரியமடைந்த பேசாமடந்தை தன் தோழிகளுக்கு சமிக்ஞை செய்து, திரைச் சீலையை அவிழ்த்துவிடச் செய்தாள். அப்போது விக்கிரமாதித்தனுக்கு முதன் முதலாகப் பேசாமடந்தையின் முகதரிசனம் கிடைத்தது. அவளும் ஆணழகனின் முகத்தை உற்று நோக்கிவிட்டு தலையைக் கவிழ்த்து கொண்டாள்.

அவளுடைய முகலாவண்யத்தைக் கண்டு குதூகலமடைந்த விக்கிரமாதித்தன் கீழே அவிழ்ந்து கிடக்கும் திரைச்சீலையிலுள்ள வேதாளத்தை நோக்கி, "திரைச்சீலையே! உன் எஜமானியான பேசாமடந்தை ஈவிரக்கமுள்ள பூங்கொடியானபடியாலே. உன் குறையைத் தெரிவித்ததும் உன்னைத் துன்புறுத்தும் கட்டுகளை அவிழ்த்துவிட்டாள்! இனிமேலாகிலும் நீ தங்கு தடையின்றி நல்லதொரு கதை சொல்ல வேண்டும்!" என்றான்.

திரைச் சீலையிலிருந்த வேதாளமும் கதை சொல்லத் தொடங்கியது.



## திரைச்சீலை சொல்லிய சங்கீத சாகித்திய சரச சல்லாப உல்லாச ருக்மணி கதை

மந்தாகினிபுரத்தை மன்மதவசிகரன் என்ற மன்னன் அரசாண்டு வந்தான். அவனுக்கு மங்களகரனென்ற மதியமைச்சன் ஒருவன் இருந்தான். அரசனுக்கு மதனமோகனன் என்ற குமாரனும் மந்திரிக்குத் தந்திரலோலன் என்ற குமாரனும் பிறந்து வளர்ந்து, சகலவிதமான கலைகளும், அஸ்திர சஸ்திர வித்தைகளும் கற்று வாலிப தசை அடைந்தார்கள். இருவரும் பால்யம் முதலாய் உயிருக்குயிரான நண்பர்களாய்

விளங்கினார்கள். கணநேரம் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாம லிருந்து வந்தார்கள்.

ஒருநாள் இருவரும் குதிரைகள் மீதேறி வெகு தொலைவி லுள்ள காட்டுக்கு வேட்டையாடச் சென்றார்கள். கானகம் முழுவதும் சுற்றி வேட்டையாடியதால் தாகவிடாய் மேலிட்டு, எங்காவது ஜலம் தட்டுப்படுகிறதாவென்று தேடியலைந்து வரும்போது, வனாந்திரத்தில் ஒரு தடாகமும், ஆலவிருக்ஷமும், நிசப்தமான ஆலயம் ஒன்றும் இருப்பதைக் கண்டு பிடித்தார்கள். நீரருந்திக் களைப்புத் தீர கரையிலிருந்த ஓர் ஆலமரத்தின் நிழலில் படுத்திருந்தார்கள். இராஜகுமாரன் உறங்கிவிட்டான். மந்திரி குமாரனுக்கு உறக்கம் வரவில்லை. அங்கிருந்த விசித்திர மான ஆலயத்தைப் பார்க்கவேண்டும் என்கிற ஆவல் மேலிட்டது. மெல்ல எழுந்து சென்று அதைச் சுற்றிப் பார்க்கையில் அவ்வாலயத்தின் வடக்குப்புறத்தில் ஓர் அதிசய அற்புத சுந்தரியின் கற்சிலையைக் கண்டு பிரமித்து நின்றான். அது, கையில் பூச்செண்டு ஏந்தி மோகனப் புன்முறுவலுடன் மோகனாங்கி ஒருத்தி நிற்பது போலவே பிரமையூட்டியது. அதைக் கண்டு வியந்த மந்திரிகுமாரன், இதை அழகு ரசிகனான அரசகுமாரன் கண்டால் மோகாவேசம் கொண்டு பித்து பிடித்துப் போவான் என்று நினைத்துக் கொண்டு ஆலமரத்தடிக்குத் திரும்பி வந்தான்.

அப்போது இராஜகுமாரனும் களைப்பு நீங்கி விழித்தெழுந்து, "நண்பா! எதிரே உள்ள ஆலயம் இந்த வனாந்தரத்தில் மிகவும் விசித்திரமாகத் தோன்றுகிறது. அதை நானும் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்!" என்றான். "போய் பார்! ஆனால் கோயிலைப் பிரகாரம் செய்யும் போது வடக்குப் பக்கம் மட்டும் போகாதே!" என்றான் மந்திரிகுமாரன்.

கோயிலுக்குள் நுழைந்த இராஜகுமாரன், "வடக்குப் பக்கம் போக வேண்டாம் என மந்திரிகுமாரன் சொன்ன காரணம் என்ன?" என்று நினைத்து, ஆவல் மேலிட்டவனாய் அதையறிய வடக்குப் பக்கமாகச் சென்றான். அப்போது கையில் பூச்செண்டு பிடித்தபடி புது எழிலுடன் அங்கு நின்றிருந்த மோகனாங்கியின் சிலையைக் கண்டு, அதனுடைய அதிரூபமான அழகில் மதிமயங்கித் தன்னை மறந்து நின்றுவிட்டான். அதைப் பார்க்கப் பார்க்க மோகாவேசம் மீறிப் பித்துபிடித்தவனைப்போல், "பெண்ணே! பூச்செண்டு தா! பெண்ணே! பூச்செண்டு தா!" என்று கேட்ட வண்ணமேயிருந்தான். வெகு நேரமாகி விட்டபடியால் அரசகுமாரனைத் தேடிவந்த மந்திரிகுமாரன், நண்பனின் நிலையறிந்து அவனுக்கு வேண்டிய புத்திமதிகள் கூற முயன்றான். அரசகுமாரன் எல்லாவற்றிற்கும், "பெண்ணே! பூச்செண்டு தா!"

என்று பிதற்றுவதைத் தவிர மற்றொன்றுங் கூறவில்லை. சிலை வடிவமாய் நிற்கும் சிருங்கார மங்கையின் மீதுள்ள மயக்கம் இராஜகுமாரனைப் பித்தனாகி விட்டதென்பதை அறிந்த மந்திரி குமாரன். இனி என்ன செய்வதெனப் புரியாமல் மனங் குழம்பிக் கவலையுடன் நிற்கும் தறுவாயில், அக்கோயிலின் அர்ச்சகன் வந்தான். அவனிடம் மந்திரிகுமாரன். "அந்தச் சிலையை செதுக்கிய சிற்பி யார்? அவன் எந்தப் பெண் வடிவத்தைப் பார்த்து இந்தச் சிலையை செதுக்கி வைத்தான்?" என்று கேட்டான்.

"இங்கிருந்து பத்து காத வழிக்கு அப்பால் கூடல் என்னும் ஓர் ஊர் இருக்கிறது. அந்த ஊரிலுள்ள கோதண்டம் என்கிற சிற்ப சாஸ்திரிதான் இந்தச் சிலையை செய்து வைத்தார். அவர் வருஷத்திற்கு ஒருநாள் இந்த ஆலயத்திற்கு வந்து ஆராதனை அர்ச்சனை பூஜைகளுக்கெல்லாம் ஏற்பாடு செய்து விட்டுப் போவார். அவரிடம் சென்று விசாரித்தால் இந்தக் கற்சிலையிலுள்ள பெண் வடிவம் யாருடையதென தெரியவரும்!" என்று தெரிவித்தான்.

"அர்ச்சகரே! அந்தச் சிற்பி எந்தப் பெண்ணைப் பார்த்து இந்தச் சிங்கார சிலையை செதுக்கினாரோ, அந்தப் பெண்ணை நேரில் பார்த்தாலொழிய. என் நண்பனின் பித்து தெளியாது: இந்த ஆலயத்தை விட்டு நகரமாட்டான். நான் அந்தப் பெண்ணை இன்றோ நாளையோ அல்லது எப்படியும் ஆறுமாத காலத்திற்குள் இங்கே கொண்டு வருகிறேன். அதுவரை என் நண்பனுக்கு வேண்டிய உணவு முதலான வசதிகளையெல்லாம் நீர்தான் கவனித்துக் கொள்ள வேண்டும்!" என்று கூறி தன் கழுத்திலுள்ள விலையுயர்ந்த முத்து மாலையைக் கழற்றி அர்ச்சகனிடம் கொடுத்து விட்டுத் தனது பஞ்ச கல்யாணிக் குதிரை மீது ஏறிக்கொண்டு காடு, மலை, வனாந்திரங்களைக் கடந்து கூடல் என்ற ஊருக்கு வந்து மிகவும் சிரமப்பட்டுக் கோதண்ட சிற்பியைக் கண்டு பிடித்து, "ஐயா! காட்டுக் கோயிலுள்ள அந்தப் பேரழகியான சிலையை செதுக்கிய கைதேர்ந்த கலைஞர் நீர்தானே?" என்று கேட்டான். "ஏதோ கைக்கு வந்தபடி செதுக்கினேன்" என்றான் சிற்பி!

"உண்மையைச் சொல்லும்! அந்தச் சிலையைப் பார்த்து பித்தேறிய என் நண்பனின் உயிர் ஊசலாடுகிறது. அவனைக் காப்பதற்கு, எந்தப் பெண்ணைப் பார்த்து அந்தக் கற்சிலையை செதுக்கினீர் என்பது தெரிய வேண்டும்!'' என்றான் மந்திரிகுமாரன்.

அதைக் கேட்டு மனமிளகிய சிற்பி, "அது ஒரு விசித்திரமான வரலாறு! சொல்லுகிறேன் கேளுங்கள்! சுமார் ஒரு மாதத்திற்கு

முன்பு அந்த காட்டுக் கோயிலுக்குப் போயிருந்தேன். அந்தி சாய்ந்து பொழுது இருட்டும் நேரத்தில் கோயிலின் முகப்பு வாசலில் நான் நின்று கொண்டிருந்தபோது, தெற்கே, ஒரு சிற்றூரிலிருந்து பெருமாள் என்னும் ஒரு குயவன் என்னிடம் வந்து பளபளவென்று விலை மதிப்பற்ற ரத்தினக் கல்லைப்போல் மின்னும் ஒரு பொருளைக் கொடுத்து விலை கூறினான். என் குழந்தையின் கழுத்தில் தொங்கிய தங்கப் பதக்கத்தைக் கழற்றிக் கொடுத்து அந்த அதிசய ரத்தினக் கல்லை விலைக்கு வாங்கிக் கொண்டேன். மறு நாள் பொழுது விடிந்து சூரிய வெளிச்சத்தில் பார்த்தபோது ரத்தினக் கல் என்று நினைத்து நான் வாங்கிய பொருள் பெண்ணொருத்தியின் வெறும் விரல் நகமாய் இருப்பதைக் கண்டு வருத்தப்பட்டேன். அந்தத் துயரை மறப்பதற்காக அந்த நகத்தை வைத்துக் கொண்டு அதற்குப் பொருத்தமான அங்க வடிவங்களுள்ள பெண்ணொருத்தியைக் கற்பனை செய்து கற்சிலையாகச் செதுக்கினேன். இவ்வளவுதான் எனக்குத் தெரியும்!" என்றான்.

அதன் பின்னர் மந்திரிகுமாரனை தந்திரலோலன் அங்கிருந்து புறப்பட்டு தெற்கேயுள்ள சிற்றூரை அடைந்து பெருமாளைக் கண்டுபிடித்து, தன் நண்பனின் பரிதாப நிலையைக் கூறி தன் கையிலுள்ள மோதிரத்தைக் கழற்றி இனாமாகவும் கொடுத்து "பெண்ணின் நகம் உன் கைக்கு வந்த வரலாறு என்ன?" என்று கேட்டான். அதற்கு அவன், "அது ஒரு மோசமான கதை! காற்கோடக வனத்திலிருக்கும் வேடன் ஒருநாள் அந்தி இருட்டில் பளபளவென ரத்தினம்போல் மின்னும் இந்த நகத்தைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் பதிலுக்கு சட்டிபானைகளும் இலுப்பைக் கட்டியும் வாங்கிச் சென்றான். மினுமினுக்கும் இந்த நகத்தை ரத்தினக்கல் என்று எண்ணிக் குழந்தைக்குப் பதக்கம் பண்ணிப் போடலாமென்று ஆசையோடு வாங்கினேன். பொழுது விடிந்து பார்க்கும்போதுதான் இது வெறும் நகம் என்பது தெரிந்தது! நான் ஏமாந்துபோன கவலையையும் நஷ்டத்தையும் ஈடுகட்ட இந்த நகத்தை கூடல் நகரத்துக் கோதண்ட சிற்பியிடம் கொடுத்து ஏமாற்றிப் பதக்கம் பெற்று வந்தேன்" என்றான்.

மந்திரிகுமாரன் அவனிடம் விடைபெற்றுக் கொண்டு அதிவேகமாகச் சென்று காற்கோடக வனத்திலிருக்கும் வேடனுடைய குடிசையை அடைந்து, "இந்த விரல் நகம் எந்தப் பெண்ணுடையது? இது உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்று விசாரித்தான். அதற்கு வேடன் "ஐயா! ஒரு நாள் இந்தக் காட்டில் வழக்கப்படி வேட்டையாடச் சென்றேன். வேட்டைக்கு ஒரு பிராணியும் அகப்படாமல் போகவே மனமுடைந்து, உச்சி வெய்யிலைத் தாங்க முடியாமல், அங்கிருந்து மூன்று நாழிகை

தூரத்திலுள்ள ஓர் ஆலமரத்தடியின் நிழலில் படுத்து என்னை யறியாமல் உறங்கி விட்டேன். இருட்டிய பிறகுதான் திடுக்கிட்டு விழித்தேன். என் எதிரே இந்த நகம் பளபளவென மின்னியது. நாக ரத்தினமாயிருக்கும் என்று நினைத்து இனிக் குபேரனாகி விடலாம் என்ற ஆசையுடன் அந்த நகத்தை எடுத்து வந்தேன். பொழுது விடிந்ததுந்தான் இது நகம் என்பது தெரிந்தது. இதை அந்தி இருளில் பெருமாளிடம் கொடுத்து ஏமாற்றிச் சட்டிபானைகள் வாங்கிக் கொண்டு வந்தேன். இவ்வளவுதான் எனக்குத் தெரியும்!" என்றான்.

இந்தப் பதிலைக் கேட்டு ஏமாற்றமடைந்த மந்திரிகுமாரன், இதுவரை ஒருவரால் ஒருவரைப் பற்றி வந்தோம், இப்போது அவன் அந்தரத்தில் விட்டு விட்டானே என்று வருந்தி மிகுந்த விசனத்துடன் அந்த ஆலமரத்தடிக்குச் சென்றான். கொடிய காட்டுமிருகங்கள் சஞ்சரிக்கக் கூடிய அந்த இடத்தில் நகத்திற்குரிய நங்கையைப் பற்றிய விபரம் கிடைத்தாலன்றி உயிரோடு ஊர் திரும்புவதில்லை என்று தீர்மானித்துக் குதிரையை மரத்தில் கட்டிவிட்டு அந்த ஆல விருக்ஷத்தினடியிலே படுத்துவிட்டான். பொழுது சாய்ந்து அந்தி இருளும் கவியலாயிற்று. அந்த ஆலமரத்தில் அப்பொழுது ஆயிரங்கிளிகள் வந்து தங்கின. அவைகளில் ராஜகிளி அவனை நோக்கி, "ஓ, மானிடனே! நீ யார்? துஷ்ட மிருகங்கள் நிறைந்த இவ்வனத்திலே தனியே சயனித்திருப்பதின் காரணமென்ன?" என்று கேட்டது.

அதனிடம் மந்திரிகுமாரன் பரிதாபமான குரலில் தான் வந்த காரியத்தை தெரிவித்தான். அதைக் கேட்டு மனமுருகிய ராஜகிளி மற்ற கிளிகளை நோக்கி, "உங்களில் யாருக்காவது அந்த நகத்தை இங்கு போட்டவர் யார் என்பது தெரியுமா?" என்று விசாரித்தது. அப்போது ஒரு கிளி முன் வந்து, "சுவாமி! முன்னொரு சமயம் நாங்களெல்லாம் ஏழு சமுத்திரங்களைக் கடந்து அப்பால் வனத்திலிருக்கும் கனிவர்க்கங்களையும் புசித்து உமக்காக ஆளுக்கொரு கனியைக் கவ்விக் கொண்டு அங்கிருந்து ஆகாயமார்க்கமாகத் திரும்பும் போது, மல்லிகாபுரம் என்ற தீவிலே ஏழடுக்கு உப்பரிகையிலே, பூர்ணச் சந்திரன் உதயமானது போல் பேரழகு வாய்ந்த பெண்ணொருத்தி தோன்றி கூந்தலைத் தன் கைவிரல்களால் கோதிக் கொண்டிருந்தாள். அவளுடைய சிறு விரலிலிருந்து அந்த நகம் பெயர்ந்து விழுந்தது. அந்த இருளில் அது பளபளவென மின்னியதால், அவளுடைய கூந்தலில் சூடியிருக்கும் சந்திர பிறையிலிருந்து நவரத்தினக் கல் ஒன்று பெயர்ந்து விழுந்ததோ என்று நான் நினைத்து என் வாயிலிருந்த கனியை விட்டுவிட்டு நகத்தைக் கவ்விக் கொண்டு இங்கே வந்தேன். அந்தி நேரத்தில் ரத்தினமாக ஜொலித்த அது

பொழுது விடிந்ததும் வெறும் நகமாகத் தோன்றியது. அவரவரும் தாங்கள் கொண்டுவந்த கனிகளைத் தங்களுக்குக் கொடுக்க, நான் நகத்தைக் கொடுத்தேன். "எல்லோரும் பழம் கொண்டுவர, நீ நகமா கொண்டு வந்தாய்?" என்று கோபித்து நகத்தை இந்த விருக்ஷத்தினடியில் போட்டுவிட்டு என் தலையில் நறுக்கென்று கொத்தினீர். இன்னும் என் தலையில் நீர் கொத்திய தழும்பிருக்கிறது. பாரும்!" என்று தலையைக் காட்டியது கிளி.

அதைக் கேட்டதும் துள்ளியெழுந்த மந்திரிகுமாரன், "சப்த சமுத்திரங்களையும் தாண்டி மல்லிகாபுரம் தீவை அடைய உபாயம் என்ன? நான் உங்களைப்போல் ஆகாயமார்க்கமாய் பறக்க முடியாதே!" என்றான். அதற்கு ராஜாக்கிளி, "கேளாய் மானிடனே! இங்கிருந்து மூன்று யோசனை தூரத்தில் ஆகாயத்தை அளாவி நிற்கும் புண்ணிய விருக்ஷம் ஒன்றிருக்கிறது. அதில் ஆண் பெண்ணாகிய இரண்டு அண்டபேரண்டப் பக்ஷிகள் இருக்கின்றன. அவைகளிடம் எப்படியாவது சினேகம் செய்து கொண்டால் சப்த சமுத்திரங்களைக் கடந்து அந்தத் தீவை அடைய உனக்கு வழி கிடைக்கும்!" என்றது. மந்திரிகுமாரனும் அவ்வாறே புறப்பட்டு தன் குதிரையின் மீதேறி காற்றாய் பறந்து புண்ணிய விருக்ஷத்தை அடைந்தான். அண்டபேரண்டப் பக்ஷிகளிரண்டும் இரைதேடுவதற்காகத் தீவாந்திரம் சென்றிருந்தன. அப்போது பயங்கரமான ஒரு சர்ப்பம் கூட்டிலிருக்கும் அதன் குஞ்சுகளைச் சாப்பிடுவதற்காக மரத்தின்மீது ஏறியது. குஞ்சுகள் பயத்தால் இறக்கைகளைப் படபடவென்று அடித்துப் பரிதவித்தன. மந்திரி குமாரன் அந்தச் சர்ப்பத்தைத் தன் உடைவாளால் இரண்டு துண்டாக வெட்டிக் கொன்று பக்ஷிகளின் குஞ்சுகளைக் காப்பாற்றினான்.

அப்போது அவை மந்திரிகுமாரனை நோக்கி, நயன பாஷையில், "ஐயா, பரோபகாரம் மிக்க பூமானே! எங்களை அந்தக் கொடிய சர்ப்பத்தின் கோரவாயிலிருந்து காப்பாற்றிய உமக்கு நாங்கள் ஏதாவது கைம்மாறு செய்யவேண்டும். இன்னும் கொஞ்ச நேரத்தில் எங்கள் தாய் தந்தையர் திரும்பி வந்து விடுவார்கள். அவர்களிடம் சொல்லி ஆவன செய்கிறோம். ஆனால் அவர்கள் ஆங்காரமாய் வருகிற வேகத்தில் அடிபட்டுப் போவீராகையால் நீர் நேரிடையாக எதிர்ப்படாமல், செடியின் மறைவில் இரும்!" என்றன. அவ்வாறே மந்திரிகுமாரனும் மறைந்திருந்தான்.

சிறிது நேரத்தில் எங்கும் புயற்காற்று வீசும்படியான வேகத்தில் பேரிரைச்சலுடன் அண்டபேரண்டப் பக்ஷிகளிரண்டும் திரும்பிவந்து புண்ணிய விருக்ஷத்தில் அமர்ந்து தங்கள் குஞ்சுகளுக்கு இரை கொடுக்க முயன்றன. குஞ்சுகள் இரை

உண்ணமாட்டோமென விசாரமாயிருக்க, தாய்ப் பறவை காரணம் வினவ, அதற்கு அவைகள் நடந்ததைத் தெரிவித்து, மந்திரிகுமாரனுக்கும் ஆகாரம் கொடுத்து உபசரித்து பிரதியுபகாரம் செய்யும்படி கெஞ்சின. பாம்பினிடமிருந்து தன் குஞ்சுகளைக் காப்பாற்றியதற்காகப் பக்ஷிகளிரண்டும் அகமகிழ்ந்து, மந்திரிகுமாரனின் இலட்சிய யாத்திரையைக் கேட்டறிந்து சப்த சமுத்திரத்தைத் தாண்டி மல்லிகாபுரம் தீவை அடைவதற்குத் தாங்கள் உதவி புரிவதாகக் கூறின. அதன் பின்னர் மந்திரி குமாரன் அவை கொடுத்த ஆகாரத்தை அருந்தி, தன்னுடைய குதிரையை அடுத்த ஊரிலுள்ள ஒரு குடியானவனிடம் பத்திரமாகப் பாதுகாக்கும்படி ஒப்படைத்துவிட்டுத் திரும்பிவந்தான். அவனிடம் ஆண் பக்ஷியானது, "ஐயா! என் கழுத்தைக் கெட்டியாகக் கட்டிப்பிடித்துக் கொண்டு கண்ணை மூடிக்கொள்ளும்" என்று கூறி, அவ்வாறே அவனுடன் ஆகாய வீதியில் பறந்து சென்றது. வழியிலே நவ இரத்தினங்கள் நிறைந்த சமுத்திரம் ஒன்றை கடந்து செல்கையில் மந்திரிகுமாரன் காலைசுத்தி செய்யவேண்டுமெனச் சொல்லிக் கீழிறங்கி கை நிறைய நவ இரத்தினங்களை வாரிக் கட்டிக் கொண்டு புறப்பட்டான். மல்லிகாபுரம் என்னும் தீவின் கரையை அடைந்ததும் ஆண் பக்ஷி அவனைக் கீழே இறக்கிவிட்டுத் தன் சிறகில் ஒன்றைக் கொடுத்து, "நீர் அக்கரைக்குத் திரும்பவேண்டுமென்று தோன்றும் பொழுது இந்த இறகிற்குச் சாம்பிராணி தூபமிட்டு எங்களை நினையும். அப்போது நானும் என் மனையாளும் வந்து உம்மையும் நீர் நாடிவந்த பெண்ணையும் தூக்கிக்கொண்டு திரும்பி எமது இருப்பிடத்தில் விடுகிறோம்" என்று சொல்லிப் பறந்து சென்றது.

அப்பால் மந்திரிகுமாரனும் நவஇரத்தினச் செட்டியார்போல் மாறுவேடம் பூண்டு கடை வீதி சென்று, ஒரு கடையை வாடகைக்குப் பேசி அதில் இரத்தினக் கம்பளம் விரித்து, தான் சமுத்திரத்திலிருந்து அள்ளி வந்த நவரத்தினங்களை விற்பனைக்குப் பரப்பி வைத்தான். வைர வைடூரியங்கள் ஒவ்வொன்றும் பல லக்ஷக்கணக்கான ரூபாய்கள் கொடுத்தாலும் கிடைத்தற்கரிய அபூர்வ சரக்குகளாய் இருப்பதைக் கண்டு அங்குள்ள தன வணிகர் களெல்லாம் அவற்றிற்கு விலை மதிப்பிட முடியாதவராய் அதிசயித்துப் போயினர். அத்தீவிலே இரத்தினங்களை மதிப்பிடுவதில் வல்லவராயும், மதிப்பிற்குரிய பெரு நிதிச் செல்வந்தராகவும் விளங்கிய நவ கோடி நாராயணன் செட்டியார் என்ற ஒருவர் அந்தப் பக்கம் வந்தார். அவர் வசிக்கும் மாளிகை அரண்மனைபோல் ஏழடுக்கு உப்பரிகைகள் கொண்டது. அந்தச் செட்டியாருக்கு ஒரு செல்வக் குமாரி இருந்தாள். சங்கீத சாகித்திய சரசசல்லாப உல்லாச ருக்மணி என்று பலராலும்

போற்றப்படும் அந்தப் புத்திரியைப் போன்ற பேரழகியை இந்தப் புவியில் வேறு எங்குங் காண இயலாது. அவளுடைய அழகிற்கும் அறிவிற்கும் கலைஞானங்களுக்கும் பொருத்தமான நாயகன் கிடைக்காததால் அவள் கல்யாணமாகாமல் கன்னிப் பெண்ணாகவே இருந்து வந்தாள். அவளுடைய தந்தையும். தம்முடைய குலப்பெருமைக்குப் பொருத்தமான மாப்பிள்ளை கிடைக்காவிடில் தம் புத்திரி கன்னியாகவே இருந்து விடட்டும் என்று கருதியிருந்தார். அந்தப் பேரழகியான பெண்தான் காட்டுக் கோயிலில் கண்ட கற்சிலைக் குமரியாக இருக்கும் என்று மந்திரி குமாரன் எண்ணமிட்டான்.

கடைவீதியிலே அவனைக்கண்ட நவகோடி நாராயணன் செட்டியார் அவனுடைய விருத்தாந்தத்தை விசாரிக்க, தான் மந்தாகினிபுரத்தைச் சேர்ந்த சதகோடி ராமன் செட்டியாரின் குமாரன் வைரலிங்கம் செட்டி என்றும், சில இரத்தினங்களுடன் தேசாந்திரம் புறப்பட்டு வந்ததாகவும் தெரிவித்தான். நவகோடிச் செட்டியாரும் அவனுடைய வளமையைக் கண்டு பிரியங்கொண்டு விருந்திற்கு அழைத்துச் சென்று, விருந்திட்டு தன்னுடைய ஏழடுக்கு மாளிகையில் நாலைந்து தினங்கள் தங்கும்படி செய்தார். அப்பொழுது அவன் அவருடைய செல்வக் குமாரியான ருக்மணியைப் பார்த்து, கற்சிலையாகவுள்ள முகச்சாயலும் அங்க லக்ஷணங்களும் அவளுடையதுதான் என்று நிச்சயித்துக் கொண்டு. அவளை அங்கிருந்து எப்படியாவது இளப்பிச் செல்லவேண்டுமென ஒரு திட்டம் வகுக்கலானான். அந்தப் பருவமங்கையும் அவனுடைய தேஜஸ் தவழும் முகப்பொலிவைக்கண்டு கவர்ச்சிப்பட்டு அவனை அடையவேண்டுமென உள்ளூர ஆசைப் படலானாள். அதற்குத் தன் தந்தை சம்மதிக்க மாட்டார் என்று எண்ணி தன் ஆசையை வெளியிடாமலிருந்தாள்.

மந்திரிகுமாரனும் அவளுடைய உட்கருத்தைப் புரிந்து கொண்டு அவளைக் கள்ளவழியில் சந்தித்துக் கவர்ந்து செல்ல வேண்டுமென அதற்கு ஓர் உபாயம் தேடியவனாய் ஆறுநாள் நவகோடி வணிகரின் மாளிகையில் தங்கியிருந்து அவருடைய குடும்பத்தில் நெருங்கிப் பழகி அவரை மாமா என்றும், அவருடைய மனையாளை அத்தை என்றும், அவருடைய மைத்துனரை அப்பா என்றும் கூப்பிட்டு, ஆளுக்குத் தகுந்த படியெல்லாம் உறவு கொண்டாடி எல்லோருடைய அன்பையும் கவர்ந்து கொண்டான். இப்படியிருக்கும் பொழுது அவன் ஒரு நாள் நவகோடிச் செட்டியாரிடம், "மாமா! என் ஊரிலிருந்து என் மனையாளை அழைத்துவந்து இந்தத் தீவில் சிறிதுகாலம்

குடித்தனம் நடத்திச் செல்லலாம் என்று ஆசைப்படுகிறேன். உங்களுடைய மாளிகையின் திருமதிலுக்கெதிரே உள்ள காலி இடத்தைத் தந்தால் என் இஷ்டம் போல் ஒரு தனி மாளிகை கட்டிக் கொண்டு என் குடும்பத்தை அழைத்துக் கொள்வேன். பிறகு போகும் பொழுது அந்த மாளிகையைத் தங்களிடமே கொடுத்துவிட்டுச் செல்கிறேன்!" என்று கேட்கவே, அவரும் அதற்கிணங்கிவிட்டார். உடனே மந்திரிகுமாரன் கொல்லர்களை வரவழைத்துச் சிறிது திரவியம் கொடுத்து எதிரிலிருக்கும் இடத்தில் எண்ணப்படி இன்பமாளிகையொன்றை உருவாக்கி அங்கிருந்து செட்டியாரின் மாளிகையிலுள்ள ருக்மணியின் பள்ளியறைக்குச் சுரங்கமொன்றும் இரகசியமாக அமைத்து அந்தச் சுரங்க சாலே ருக்மணிக்கும் தெரியாதவாறு மர்மமாக மூடிபோட்டு மறைத்து வைத்தான்.

ஒரு நாள் இரவு எல்லோரும் கண்ணயர்ந்த நேரத்தில் மந்திரி குமாரன் விழித்தெழுந்து, கையில் ஒரு தீபத்தை எடுத்துக் கொண்டு தன் மாளிகையிலிருந்து சுரங்க வழியாகப் புறப்பட்டு ருக்மணியின் பள்ளியறைக்குச் சென்று, மோகனத்துயில் புரியும் அந்தப் பருவ மங்கையை தன் கையால் தொடாமல் தன் கையிலி ருந்த ஒரு கொம்பினுல் தட்டியெழுப்பினுன். அவளுக்கு அவன் மீது ஏற்கனவே ஒரு விதக் கவர்ச்சி ஏற்பட்டிருந்தபடியால் அவனே ஆவல் குறு குறுப்புடன் வரவேற்ருள். ஆனுல் மந்திரிகுமாரனே, தன்மீது மோகம் கொள்வது சரியல்ல என்று கூறி, தான் ராஜகுமாரன் பொருட்டு வந்திருக்கும் வரலாறு முழுவதையும் தெரிவித்தான்.

நகம் தெறித்து விழுந்த சம்பவம் நினைவுவரவே ருக்மணியும் காட்டுக் கோயிலிலுள்ள கற்சிலையின் உருவம் தன்னுடையதாகத் தானிருக்குமென நிச்சயித்து, அதன்முன் மோகப் பித்தேறிப் புலம்பிக் கிடக்கும் அரசகுமாரன்மீது மானசிகமாகக் காதல் கொண்டாள். அப்பால் அவர்கள் இருவரும் சுரங்கவழியாய் மந்திரிகுமாரனின் உப்பரிகை சென்று உரையாடினுர்கள். அவள் தன்னுடன் தந்திரமாகக் கிளம்பிக் காட்டுக் கோயிலுக்கு வந்து தரிசனம் கொடுத்தால் தான் மோகப் பித்தேறிக் கிடக்கும் நண்பன் உயிர் பிழைப்பான் என்று மந்திரிகுமாரன் சொன்னுன். மனமுருகிய ருக்மணியோ "தாய்தந்தையரும் ஊராரும் அறியாமல் தெருவில் நடந்து செல்லவோ தீவைக் கடந்து செல்லவோ முடியாதே! அதற்கு ஓர் உபாயம் சொல்லும்!" என்ருள். "இன்னும் பத்து நாளில் இந்தத் தீவை விட்டு எல்லோரும் அறியும்படியாக பகிரங்கமாகவே பயமின்றி நாமிருவரும் ஒன்ருகவே சேர்ந்து போய்விடலாம். அதற்கு முன்னதாக உன் தாய் தந்தையருக்கும்,

உறவினருக்கும், ஊராருக்கும் ஒரு பிரிவுபசார விருந்து என் மாளிகையில் வைக்கப் போகிறேன். அப்போது நீ என் ஊரிலிருந்து வந்த என் மனைவிபோல் நீயே சாமர்த்தியமாக நடித்து, அவர்களை அன்னியர்களாகப் பாவித்து அன்புடன் விருந்து பரிமாறி, வணங்கி விடைபெற்று என்னுடன் புறப்படவேண்டும். அப்படி நீ நடித்துவிட்டால் போதும். என் மனைவியை என் ஊருக்கு அழைத்துப் போவதை யாரால் தடுக்கமுடியும்?" என்றான் மந்திரிகுமாரன். அவ்வாறு செய்வதாக ஒருவருக்கொருவர் வாக்குத்தத்தம் செய்துகொண்டபின் ருக்மணி விடைபெற்றுக் கொண்டு பள்ளியறைக்குச் சுரங்கவழியாக வந்து சேர்ந்து கண்காணாத காதலனை இராஜகுமாரனை எப்போது அடைவோம் என்ற ஆவலுடன் சயனித்துக் கொண்டாள்.

மறுநாள் சூரியோதயமானதும் மந்திரிகுமாரனை வைர லிங்கம் செட்டியார் ஊரிலிருந்து தன் மனைவி வந்திருப்பதாகக் கூறி, நவகோடி நாராயணன் செட்டியாரின் குடும்பத்தினர் அனைவரையும் தன் மாளிகை விருந்திற்கு அழைத்துவிட்டுச் சென்றான். நவகோடி நாராயணன் செட்டியாரின் குடும்பத்தினர் முழுவதும் விருந்திற்குப் புறப்பட்டார்கள். ருக்மணி மட்டும் உச்சிமுதல் உள்ளங்கால்வரை ஒரு போர்வையை இழுத்துப் போர்த்திப் படுத்துக் கொண்டு தனக்குத் தலைவலியென்றும், வயிற்றுவலியென்றும் கூறி, விருந்திற்கு வர இயலாது என்றும் கூறி, தன் பள்ளியறைக் கதவை மூடிக்கொண்டு போய்விட்டாள். குடும்பத்தினர் அனைவரும் விருந்திற்குச் சென்றவுடனே ருக்மணி அவசரமாக எழுந்து தன்னை நன்றாக அலங்கரித்துக்கொண்டு அவர்களுக்கு முன்பாகவே சுரங்க வழியாக மந்திரிகுமாரனின் மாளிகைக்குச் சென்று அவனுடைய மனைவிபோல் தத்ரூபமாய் நடித்தவளாய், விருந்தாளிகளுக்கு உணவு பரிமாற வந்தாள். மந்திரிகுமாரன் சொல்லிக் கொடுத்த பிரகாரம் தன் தாய் தந்தையரை "மாமா, மாமி" என்று கூப்பிட்டு வரவேற்று உபசரித்தாள்.

அவளைக் கண்டு திகைத்துப்போன நவகோடி நாராயணன் செட்டியார் அவள் தன் மகள் போன்றிருப்பதாகத் தெரிவித்தார். அதற்கு மந்திரிகுமாரன், "உமது புத்திரியைப் போன்று அங்க அடையாளங்களுள்ள பூவையர் இந்தப் பூலோகத்திலே இன்னும் எத்தனை பேர்கள் இருக்கிறார்களோ? இதெல்லாம் இறைவன் படைப்பிலேயுள்ள லீலாவினோதங்கள்!" என்று சமாதானம் கூறினான். ஆனாலும் செட்டியார் அந்தப் பெண்ணின் நடையுடை பாவனைகள் அனைத்தும் தம் பெண்ணைப் போலிருப்பதாகப் பார்த்துப் பார்த்து பெருமூச்செறிந்தார். தம்முடைய சந்தேகத்தை

தும் மைத்துனனிடமும் இரகசியமாகச் சொன்னார். விருந்து பரிமாறும்போது அந்தப் பெண்ணின் புடவையில் நெய்ப் பாத்திரத்தைக் கவிழ்த்து அடையாளம் வைத்துவிட்டால் வீடு திரும்பியதும் அதன் கறையைக் கொண்டு தம் மகள்தானா என்பதைக் கண்டு பிடித்துவிடலாமென்று மைத்துனர் சொல்லிக் கொடுத்தார். அதன் பிரகாரம் செட்டியார் நெய்யைக் கவிழ்த்து புடவையில் அடையாளம் ஏற்படும்படி செய்தார். அதைக் கடைக் கண்ணால் கவனித்திருந்த மந்திரிகுமாரன் தாம்பூலம் தரிக்கும்போது ருக்மணியிடம் அதைச் சொல்லி, அவள் சுரங்க வழியாகத் தன் பள்ளியறைக்குத் திரும்பும்போது, அவளுடைய நெய்க்கறைபட்ட புடவைக்குப் பதிலாக அதுபோன்று வேறு புதுப்புடவை உடுத்திச் செல்லும்படி ஏற்பாடு செய்துவிட்டான்.

வீடு திரும்பிய செட்டியார் தம்முடைய புத்திரியின் பள்ளியறையைப் பரிசோதித்துப் பார்த்தபோது, அவள் முன்மாதிரியே ஜுரம் கண்டவள் போலப் படுத்திருப்பதையும், அவளுடைய புடைவையில் நெய்க்கறையில்லாமலிருப்பதையும் கண்டு சந்தேகம் தீர்ந்தார். உள்ளபடியே வைரலிங்கத்தின் மனைவியைத் தம் மகள் என்று அநியாயமாகப் பழிசொன்னோமே என்று வருந்தினார்.

சிறிது நாளைக்கெல்லாம் அவரிடம் மந்திரிகுமாரன் வந்து அவசர காரியமாகத் தன் மனைவியுடன் ஊர்திரும்ப வேண்டுமென்றும் இரண்டொரு மாதங்களில் திரும்பிவிடுவதாகவும், தங்களை வழியனுப்பி வைக்கும்படியும் கேட்டுக்கொண்டான். அந்தச் சமயம் ருக்மணி மறுபடியும் தலைவலி கண்டவள் போல் பாசாங்கு செய்து தன் பள்ளியறைக் கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு, சுரங்க வாசல் மூலமாக மந்திரிகுமாரனின் மாளிகைக்கு வந்து அவனுடைய மனைவிபோல் நடித்தவளாய் தயாராய்க் காத்திருந்தாள். நவகோடிச் செட்டியார் குடும்பத்துடன் அங்கேவந்து அவளைத் தன் மகளென அறியாமல், மந்திரிகுமாரனின் மனைவியென்றே நினைத்து கப்பலேற்றி வழியனுப்ப முனைந்தனர்.

ருக்மணி பிரிவு விடை பெறும்போது தன் தாய் தந்தையரின் பாதங்களில் விழுந்து வணங்கிக் கண்ணீர் சொரிய நின்றாள். பழகிய பாசத்தால் பிரிய முடியாமல் கண்ணீர் சொரிகிறாளென்று எண்ணிய பெற்றோர், "விசனப்படாமல் உன் புருஷனோடு போய்வாம்மா!" என்று கண் கலங்கியபடி விடைகொடுத்து வாழ்த்தியனுப்பினார்கள். பிறகு வீட்டிற்கு வந்து பார்க்கையில் தங்கள் புத்திரியின் பள்ளியறைக் கதவு வெகு நேரமாகியும்

திறக்கப்படாமலிருக்கவே திடுக்கிட்டு கதவைப் பிளந்து கொண்டு போய் பரிசோதித்துப் பார்த்தார்கள். உள்ளே குமாரி காணுமல் போயிருப்பதையும், மந்திரிகுமாரனின் மாளிகைக்குச் சுரங்க வழி இருப்பதையும் கண்டுபிடித்து "மதிமோசம் போனுமே! குலம் நாசமாகப் போயிற்றே!" என்று புலம்பித் துடித்தார்கள்.

மந்திரிகுமாரனே கடற்கரை சென்று இறகிற்குத் தூபமிட்டு அண்டபேரண்ட பக்ஷிகளை நினைத்தவுடன் அவை இரண்டும் பறந்து வந்தன. அவைகளின்மீது ஏறிக் கொண்டு மந்திரி குமாரனும் ருக்மணிப் பெண்ணும் புண்ணிய விருக்ஷத்தை அடைந்தார்கள்.

பிறகு மந்திரிகுமாரன் அங்கிருந்து பக்ஷிகளிடம் விடைபெற்றுக் கொண்டு, முன்பு குடியானவனிடம் தான் கொடுத்த குதிரையை வாங்கி, அதில் ருக்மணியை ஏறி அமர்ந்து வரும்படி செய்து, தான் நடந்து சென்று ராஜகுமாரனிருக்கும் கோவிலை நெருங்கினன். கோவிலுக்குள் நுழையும் முன்பு, மந்திரி குமாரன் அங்குள்ள நந்தவனத்தில் சில பூக்களைப் பறித்து ஒரு பூச்செண்டாகக் கட்டி, அதை ருக்மணியின் கையில் கொடுத்து, "மங்கையர் திலகமே! நீ, அந்தக் கோயிலின் வடக்குப் பக்கம் சென்ருல் கற்சிலே முன், "பூச்செண்டைத் தா! பெண்ணே!" என்று பதறிக் கொண்டிருக்கும் இராஜ குமாரனைக் காண்பாய்! அவனிடம் இந்தப் பூச்செண்டைக் கொடு! அவனுடைய பித்தம் தெளியும்! தான் மோகித்த நாயகி கிடைத்து விட்டாளெனப் பெரிதும் மனம் பூரிப்பான். பிறகு என்னைப் பற்றி விசாரித்தால் நான் இறந்து விட்டதாகச் சொல். ஏனெனில் அவன் நாடிய பெண்ணை இவ்வளவு தூரம் சிரமப்பட்டுத் தேடிக் கொண்டு வந்து கொடுத்த என்மீது அவனுக்கு எவ்வளவு தூரம் நட்பு இருக்குமெனச் சோதிக்க விரும்புகிறேன்!" என்று கூறியனுப்பினன்.

அதன் பிரகாரம் ருக்மணி "இதோ கண்ணாளா!" என்று பூச்செண்டைக் கொடுத்ததும், இராஜகுமாரனின் பித்தம் தெளிந்து அளவில்லா மகிழ்ச்சி கொண்டான். பிறகு "என் நண்பன் தந்திரலோலன் எங்கே?" என்று அவன் கேட்டதும் ருக்மணி மனங்கலங்கியவள் போல் நடித்து, மந்திரிகுமாரன் வழியில் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டதாகத் தெரிவித்தாள்.

அதைக் கேட்ட இராஜகுமாரன் அளவற்ற துக்கவசமாகி, "ஆ! எனக்காக இவ்வளவு அல்லலுற்று உன்னைக் கொண்டுவந்த என் ஆருயிர் நண்பன் போய்விட்டானு? என் பிராண சிநேகிதன் போன பிறகு இந்தப் பூவுலகில் என் பிராணன் மட்டும் இருந்து

என்ன பயன்?" என்று புலம்பித் துடித்துச் சட்டென உடைவாளை உருவி மார்பில் பாய்ச்சிக் கொண்டு இறந்து விட்டான். சற்றும் எதிர்பாராமல் நடந்துவிட்ட அந்நிகழ்ச்சியைக் கண்டு ருக்மணி திடுக்கிட்டாள். இந்த இராஜகுமாரன் மீதல்லவா ஆசை வைத்துத் தாய் தந்தையரைப் பிரிந்தோம் என்று அவளும் துக்கம் தாங்காமல். அதே இரத்தவாளை இராஜகுமாரனின் நெஞ்சிலிருந்து பிடுங்கித் தன் நெஞ்சில் குத்திக் கொண்டு உயிர் நீத்தாள். அவர்களைத் தேடி வந்த மந்திரிகுமாரன் இருவரும் உயிரிழந்து கிடப்பதைக் கண்டு, தன்னாலல்லவா இவர்கள் உயிர் இழந்தார்களென்று வருந்தித் தானும் அதே இரத்த வாளால் நெஞ்சில் குத்திக் கொண்டு உயிர் துறந்தான். அங்கு வந்த அர்ச்சகன் நம் ஆலயத்திலல்லவா இத்தகைய சோகம் நடந்தது என்று மனம் பொறுமியவனாய் அதே வாளால் தன் நெஞ்சில் குத்திக் கொண்டு உயிரை விட்டான்.

மறுநாள் கோவிலுக்கு வந்த பக்தர்கள் அங்கே நால்வர் உயிரிழந்து கிடப்பதைக் கண்டு மனம் வருந்தி அவர்கள் பிழைக்காவிட்டால் தாங்கள் அனைவரும் ஒரே முகமாக உயிரை விட்டு விடுவதென்று பராசக்தியை வேண்ட, தேவியும் பிரசன்னமாகி அந்நால்வரையும் உயிர்பெற்றெழச் செய்தாள். பின்னர் இராஜகுமாரன் மதன மோகனுக்கும் ருக்மணிக்கும் அதி விமரிசையாகக் கல்யாணம் நடந்தது. மந்திரிகுமாரன் தந்திரலோலனும் ஒரு மங்கையை மணம் புரிந்து இனிது நல்லறம் நடத்தி வந்தான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த திரைச்சீலை எதிரே மஞ்சத்திலிருக்கும் விக்கிரமாதித்தனை நோக்கி, "கதை கேட்ட பூமானே! இந்தக் கதையில் வரும் மந்திரிகுமாரன், இராஜகுமாரன், ருக்மணிப் பெண், அர்ச்சகன், இந்நால்வரில் யார் செய்த உயிர்த் தியாகம் பெரிது?" என்று கேட்டது.

விக்கிரமாதித்தனோ பேசாமடந்தையின் வாயைக் கிளறி எப்படியாவது அவளறியாமல் அவளைப் பேச வைத்துவிட வேண்டுமென்று, எண்ணியவனாய், "மந்திரிகுமாரனின் உயிர் தியாகமே சிறந்தது!" என்று தவறான விடை சொன்னான். அதைக் கேட்டதும் திரைச்சீலையின் மறுபக்கமிருந்த பேசாமடந்தை கதா சுவாரசியத்தில் தன்னை மறந்தவளாய்த் துள்ளியெழுந்து, "அதெப்படி? மந்திரிகுமாரனால் இராஜகுமாரனும், அவனால் ருக்மணிப் பெண்ணும் உயிர் துறந்தார்கள். அவர்கள் இருவரும் இறந்ததைக் கண்டு, அது தன்னாலென்று வருந்தி மந்திரிகுமாரன் தன் உயிரை நீத்தான். இம்மூவரையும் விட, ஒரு பாவமுமறியாமல் ஓர் உறவு பந்தமுமில்லாமல் அங்கு வந்த அர்ச்சகன்,

பழிக்கஞ்சி பரிதாபப்பட்டு உயிர் துறந்ததே விசேஷமாகும்!" என்றாள்.

உடனே விக்கிரமாதித்தன் கல கலவென்று சிரித்து. "அதுதான் சரி! கதை ஒன்றுக்கு பேசாமடந்தையை ஒரு வாசகம் பேச வைத்தாயிற்று!" என்று உரக்கச் சொல்லிவிட்டு, பொழுது விடிவதற்குள் இன்னும் இரண்டு வாசகம் பேச வைக்க வேண்டுமேயென மனதிற்குள் எண்ணிக் கொண்டான்.

பேசாமடந்தையோ, "அடடா, ஏமாந்து போய் ஒரு வாசகம் பேசி விட்டோமே! இனி இரவு விடியும்வரை ஒரு வார்த்தை கூடப் பேசக் கூடாது!" என்று வாயை மூடிக் கொண்டு மௌனமானாள்.

விக்கிரமாதித்தன் அங்கு நிலவும் மௌனத்தை கலைக்க விரும்பியவனாய் இரகசியமாக வேதாளத்தை அழைத்து பேசாமடந்தையின் இரவிக்கையில் பிரயோகித்து "இரவிக்கையே! பேசாமடந்தை பேசவுமில்லை! பொழுதோ இன்னும் விடியவில்லை! கண்களோ உறங்கவுமில்லை! பொழுதோ இன்னும் விடியவில்லை! ஆகையால் உற்சாகமாக பொழுது கழியும்படியாக நீயாவது ஒரு கதை சொல்!" என்றான்.



அதற்கு இரவிக்கை ஓவென விம்மிப் புலம்பி "பூமானே! நான் பருத்தியாகப் பிறந்து பஞ்சாக வளர்ந்து நூலாகத் திரிந்து பட்ட பாடே பெரிய கதையாகும்! அதுவுமின்றி என்னைப் பிய்த்துத் தைத்து இரவிக்கையாகப் போட்டிருக்கிறாள். அதுவும் போதாது என்று வியர்வையில் நனைந்து நான் மூச்சுப் பேச்சில்லாமல் புழுங்கிக் கிடக்கிறேன். இந்த நிலையில் நான் கதை சொல்வதேது? நீர் கேட்பதேது?" என்றது. பேசாமடந்தைக்குத் தூக்கி வாரிப் போட்டது. வெடுக்கென்று இரவிக்கையைத் தூக்கி எதிரே விட்டெறிந்துவிட்டு தன் மேலாடையை இறுகப் போர்த்திக் கொண்டாள். அதைப் பார்த்து கலகல வென்ற சிரிப்புடன் "இரவிக்கையே! இனி உனக்கு என்ன சிரமம்? உன் எஜமானி தான் மனமிளகி உன்னை விடுதலை செய்து விட்டாளே! இனியாவது கருத்துள்ள கதையொன்று

சொல்!" என்று வேண்டிக் கொள்ளவே இரவிக்கையிலிருந்த வேதாளமும் கதையைத் தொடங்கியது.

## இரவிக்கை சொன்ன மதிவல்லபன் மோகனாங்கி கதை

இரங்கநாதபுரத்தை அரசாண்டு வந்த வீரவர்ம மகாராஜனுக்கு மோகனாங்கி என்றொரு புத்திரியிருந்தாள். சமரவர்மன் என்பவனுக்கு மதிவல்லபனென்று ஒரு குமாரனிருந்தான். அரசகுமாரி மோகனாங்கியும் மந்திரிகுமாரன் மதிவல்லபனும் பால்யப் பருவத்தில் ஒன்றாகப் பள்ளியில் படித்து உயிருக்குயிராய் பழகி வந்தார்கள். இளவரசி புஷ்பவதியாகி கன்னிமாடத்தில் இருக்கும் போதுகூட அவளால் மந்திரிகுமாரன் மீதுள்ள ஆசையை மறக்கமுடியவில்லை. மன்னர்பிரான் மகளை மந்திரிகுமாரன் மணக்க முடியாதே என்று தடுமாறிய காதலனுக்கும் தன் காதலியின் ஆசை முகத்தைக் காண முடியவில்லை. கன்னி மாடத்தின் நிலவறையில் தன் காதலனை நினைத்து எந்நேரமும் உருகிக் கொண்டிருந்த இளவரசி ஒரு நாள் தன் அந்தரங்கத் தாதியை அழைத்து மதிவல்லபனை இரவில் பன்னிரண்டு நாழிகை நேரத்தில் பள்ளியறைக்கு அழைத்து வரவேண்டுமென்று தூதனுப்பினாள். அது போல மந்திரிகுமாரன் ஆவலும் அச்சமும் ஒருங்கே மருங்கித் தள்ள இளவரசியின் பள்ளியறைக்கு வந்து ஏங்கி நின்றான். அவனிடம் மோகனாங்கி பாய்ந்தோடி வாரியணைத்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். இருவரும் மட்டற்ற காதல் கொண்டு அந்த இரவிலே இரகசியமாக கந்தர்வ மணம் புரிந்து கொண்டார்கள். பிறகு சரச சல்லாபப் பேச்சுக்களுடன் சப்ரகூட மஞ்சம் சென்று தாம்பூலம் மாற்றிக் கொண்டு வாசனை திரவியங்கள் பூசி, சிவந்த உதடுகள் வெளுக்க வாய் நிறையப் பேசிக் குதூகலமாய் இரவைக் கழிக்கலானார்கள்.

இது போல் பல இரவுகள் கழிந்த பின்னர் ஒருநாள் மோகனாங்கி கர்ப்பமுற்றாள். ஐந்து மாதம் வரை அதை யாரிடமும் சொல்லாமல் மறைத்து வந்தாள். ஆறுமாதம் ஆனால் அதை அன்னை அறிந்து கொண்டு விடுவாளோ என்று கலங்கியவளாய் மோகனாங்கி ஒரு நாளிரவு தன் ஆசை நாயகனை மந்திரி குமாரனை அழைத்து, "இனிமேல் இந்த விஷயத்தை ஒளிக்க முடியாது. என்ன செய்யலாம்?" என்று குழம்பினாள். அதற்கு மந்திரிகுமாரன், "அன்பே மோகனாங்கி! இனிமேல் உன் பிதாவான மன்னர்பிரான் இவ்விஷயத்தை அறிந்தால் ஊர் சிரிக்குமே என்று உறுமிச் சீறுவார். அவரால் உனக்கும் எனக்கும் பெரும் தீங்கும்

நேரிடும்: ஆகவே. இருவரும் கொஞ்சம் திரவியத்தை எடுத்துக் கொண்டு இந்த ஊரை விட்டே எங்காவது கண்காணாத தேசத்திற்குப் போய்விடலாம்!" என்றான். வேறு வழியின்றி மோகனாங்கியும் சம்மதித்தாள். ஒருநாள் காதலர்கள் இருவரும் புறப்பட்டு பல ஊர்களிலும் நாடோடிகள் போல அலைந்து கடைசியாகக் கோதாவரிப் பட்டணத்தை அடைந்து அங்கிருந்த ஒரு அன்ன சத்திரத்தில் தங்கினார்கள். அப்போது மோகனாங்கி பிரசவ வேதனையால் வருத்தப்படவே மந்திரிகுமாரன் எழுந்து மருத்துவச்சியை அழைத்து வருவதற்காக ஊருக்குள் சென்று பல தெருக்களிலும் அலைந்து விட்டு பசி வேறு எடுக்கவே ஒரு வீட்டுத் திண்ணை மீது சோர்ந்து போய் உட்கார்ந்தான். அந்த வீட்டிலிருந்த சுந்தரி என்கிற தாசி ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து திண்ணையில் அமர்ந்திருக்கும் மந்திரிகுமாரனின் அழகையும் வாலிபப் பொலிவையும் கண்டு மயங்கி மோக வசமாகி அவனைத் தன்னிடமே வைத்துக் கொள்ள விரும்பினாள்.

அவள் வசியம், பில்லி சூன்யம் கற்றவள். அதோடு தந்திரமும் சாதுரியமும் வாய்ந்தவள். தான் ஆசைப்பட்ட ஆணழகனின் வரலாற்றை விசாரித்து நல்லதொரு மருத்துவச்சியை அழைத்துவர ஆள் அனுப்புவதாகச் சொல்லி மந்திரிகுமாரனை வீட்டினுள் அழைத்துச் சென்று, உணவு பரிமாறி உபசரித்துத் தாம்பூலம் கொடுத்தாள். அதை வாயில் போட்டுக் கொண்டதும் மதிவல்லபன் எருமைக் கடாவாக மாறிவிட்டான். அதோடு தன் சுய நினைவையும் இழந்து விட்டான். உடனே தாசி தும்புக் கயிற்றால் மந்திரிகுமாரனை எருமைக் கடாவை பந்தற்காலிற் கட்டி வைத்துவிட்டுப் பொழுது அஸ்தமித்து சந்திரோதயமான பிறகு புல்லும் தண்ணீரும் வைத்து அவனைப் பழையபடி சுந்தர வாலிபனாக மாற்றி அவனுடன் இரவை இன்பமாகக் கழித்தாள். இவ்வாறு மந்திரிகுமாரனைத் தாசி தன்னிடமே வைத்துக் கொண்டு இஷ்டப்பட்ட போதெல்லாம் பழைய உருவமாக்கி ஆனந்தம் அனுபவித்து வரலானாள்.

அன்ன சத்திரத்தில் தன் நாதனை எதிர் நோக்கித் துடித்துக் கொண்டிருந்த மோகனாங்கியோ, பிரசவ வேதனையால் வருத்தப்பட்டுக் கூச்சலிட்டாள். வழியில் போகிற சில பெண்கள் முன்வந்து அவளுக்கு உதவி செய்தனர். நல்ல நாழிகையில் ஓர் ஆண் மகவும் பிறந்தது. குழந்தை பிறந்து மூன்று நாளாகியும் தன் கணவனை மதிவல்லபன் வராமையால் மோகனாங்கி மனம் கலங்கி, அந்நகரத்தையாளும் தருமாங்கத ராஜன், நீதிநெறி மந்திரி ஆகிய இருவரிடமும் சென்று, "எனது நாயகன் மருத்துவச்சியை அழைத்து வரப் போய் நாள் மூன்றாகியும் திரும்பவில்லை. இதில் ஏதோ மோசம் நடந்திருக்கிறது. என்

கணவரை மீட்டு தருவது உங்கள் பொறுப்பு!" என்று முறையிட்டாள். அதை நிறைவேற்றும்படி மன்னவனும் தன் மந்திரிக்கு கட்டளை பிறப்பித்தான். மந்திரியும் அதைத் தன் கடமையாகக் கொண்டு, ஊரிலுள்ள மருத்துவச்சிகளையெல்லாம் விசாரித்தும், ஊரிலுள்ள வீடுகளையெல்லாம் சோதித்துங்கூட மதிவல்லபனின் கதியை அறியவே முடியவில்லை. அதைக் கேட்டு மனமுடைந்து போன மோகனாங்கி, "இனி என் கணவரைப் பிரிந்து கணமும் உயிர் வாழ நான் கருதவில்லை. என் குழந்தையுடன் நான் தீக்குளிக்க உடனே ஏற்பாடு செய்ய வேண்டும்!" என்று வேண்டினாள். அரசனும் அமைச்சனும் அது கேட்டு அதிர்ச்சியுற்று, "பெண்ணே! உனக்கும் உன் புத்திரனுக்கும் வேண்டிய சம்பத்து தருகிறோம். வாழ் நாள் முழுவதும் உங்களைக் காப்பாற்றுகிறோம்!" என்றார்கள்.

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அதில் ஏதோ மோசமிருப்பதாகத் தெரிகிறது. நாயகன் ஆதரவு ஒன்றையே நம்பி ஊர்விட்டு ஓடிவந்த நான் இனி உயிர் துறப்பதே உத்தமமாகும்!" என்று கூறி அந்தக் கணமே தீக்குழி வளர்க்கும்படி வற்புறுத்தினாள். அவள் வார்த்தைக்கு மறு வார்த்தை பேச இயலாமையால் அப்படியே தீ வளர்க்கப்பட்டது. மோகனாங்கியும் ஸ்நானபானம் செய்து குழந்தையை கையிலெடுத்துக் கொண்டு தீக்குழியைச் சுற்றி வலம் வந்தாள். அவள் தீக்குளிக்கும் அதிசயத்தைக் காண்பதற்காக அவ்வூர் அரசனும் மந்திரி பிரதானிகளும் அங்கு கூடியிருந்தார்கள். தாசி சுந்தரியும் எருமைக் கடாவாக இருந்த மதிவல்லபனை மனித உருவாக்கி அழைத்துக் கொண்டு அவனுடன் கைகோர்த்து உல்லாசமாக அந்தத் தீக்குளிக்கும் வைபவத்தை வேடிக்கை பார்க்க வந்தாள்.

தீயிலே மோகனாங்கி குழந்தையுடன் விழப்போகும் தருணத்தில் தான் மதிவல்லபனுக்கு பழைய நினைவு திரும்பி வந்தது. உடனே அவன், "ஆ! நம் மனைவியல்லவா, அவள்!" என்று பதறித் துடித்து அவளை எட்டிப் பிடிப்பதற்காக பாய்ந்தான். அதற்குள் மோகனாங்கி கண்ணிமை மூடி தன் நாதனை ஸ்மரித்துக் கொண்டே தன் குழந்தையுடன் நெருப்பிலே குதித்து விட்டாள். அவளுடைய சடலம் விதியின் வஞ்சனையால் எரிந்து சாம்பலாகும் அநியாயத்தைப் பொறுக்காத மதிவல்லபனும் மனமுடைந்து, "என்னை நம்பிவந்த என் மனைவி தீயில் எரிந்துபோன பின்பு எனக்கு மகிழ்வேது வாழ்வில்?" என்று எண்ணி அவனும் நெருப்பில் குதித்து விட்டான். தன் ஆசை நாயகன் போன பிறகு சாம்பிய வாழ்க்கையில் என்ன சாரம் இருக்கப் போகிறது என நினைத்த தாசி சுந்தரியும் அவன் மீதுள்ள

மோகத்தால் நெருப்பிலே குதித்தாள். இதைக் கண்ட மந்திரியோ, "இப்பெண்ணின் நாயகன் இந்நகரத்திலேயே தாசி வீட்டி லிருந்தும் நாம் கண்டு பிடிக்காமலிருந்து விட்டோமே? இந்தப் பழியெல்லாம் நம்மையல்லவா சூழும்!" என்று வருந்தி அவனும் தீயில் பாய்ந்து எரிந்து விட்டான்.

இவ்விதமாக அந்நால்வரும் உயிர் துறந்ததைக் கண்ட தர்மாங்கத மகாராஜன் இவர்கள் உயிரைக் காட்டிலும் நம் பிராணன் பெரிதோ என்று கத்தியை உருவிக் கையில் பிடித்துக் கொண்டு, பத்திரகாளியம்மன் கோவிலுக்குச் சென்று மூன்று முறை வலம் வந்து அம்மன் சந்நதியை அடைந்து, "தேவி! வீரமாகாளி! அண்டினவரைக் காக்கும் ஆதி பராசக்தியே! எனது நகரத்தில் அநியாயமாக நான்கு பேர்களும் ஒரு சிசுவும் அக்கினியில் விழுந்து இறந்து போனார்கள். அவர்களை நீ எழுப்பிக் கொடுக்காவிடில் எனது சிரசை வெட்டி உனது பலிபீடத்தில் பலியாக வைப்பேன்!" என்று கழுத்தை அறுத்துக் கொள்ளப் போகும் தருணத்தில், அம்மன் பிரசன்னமாகி வந்து அரசன் கையைப் பிடித்து தடுத்து, அக்னியில் விழுந்த நான்கு பேரையும் உயிரெழுப்பிக் கொடுத்தாள். அரசனும் அம்மனிடம் விடைபெற்றுக் கொண்டு, உயிர் பெற்ற அந்நான்கு பேரையும் கொலுவிற்கு அழைத்துப் போய் மந்திரிகுமாரனின் வரலாற்றைக் கேட்டு, அவனைத் தன் அரண்மனையிலேயே பொக்கிஷ அதிகாரியாய் வைத்துக் கொண்டான். அதற்குப் பின்னர் மதிவல்லபனும் மோகனாங்கியும் தங்கள் குழந்தையுடன் ஆனந்தமாக இல்லறம் நடத்தலானார்கள். தாசி சுந்தரியும் நல்லவளாகி தன் இல்லம் சென்று துறவினிபோல் வாழ்ந்து நல்லறம் புரிந்து வந்தாள்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த இரவிக்கை, எதிரே பஞ்சணையிலிருக்கும் விக்கிரமாதித்தனை நோக்கி, "கதை கேட்ட கட்டழகனே! இக்கதையில் வரும் இளவரசி மோகனாங்கி, மந்திரிகுமாரன் மதிவல்லபன், தாசி சுந்தரி, நீதிநெறி மந்திரி இந்நால்வரில் யார் தீப்பாய்ந்து உயிர் துறந்தது மிகவும் விசேஷமானது?" என்று கேட்டது. அதற்கு விக்கிரமாதித்தன் மீண்டும் பேசாமடந்தையைக் கிளறி விடவேண்டும் என்று எண்ணமிட்டவனாய், "கேளாய் ரவிக்கையே! அந்தத் தாசி சுந்தரி தீப்பாய்ந்து உயிர் துறக்க முற்பட்டதே மிகவும் விசேஷமாகும்" என்று மாறுபாடாய்ச் சொன்னான்.

அதைக் கேட்ட பேசாமடந்தை வெடுக்கென்று தன்னை மறந்தவளாய், "இல்லவே இல்லை, அந்தத் தாசி தனக்கு மோகம் தரக்கூடிய ஆசை நாயகன் போய் விட்டானே என்பதால்

தீப்பாய்ந்திறந்தாள். இளவரசி மோகனாங்கியோ தனக்கு மோகம் தரக்கூடிய கணவன் கதியும் ஆதரவும் தெரியாததால் தான் கைக் குழந்தையுடன் தீக்குளித்தாள். தன்னை நம்பிவந்த நாயகி தன் மதிமயக்கத்தால் நாசமானாளே என்று மந்திரிகுமாரன் பழைய உறவின் ஆசாபாசத்தால் தீப்பாய்ந்து இறந்தான். ஆனால் ஓர் உறவும் இல்லாது, ஓர் லாபமும் அறியாத அந்நாட்டின் மந்திரி தீப்பாய்ந்த செயலே மிகவும் விசேஷமாகும்! அவன் மதிவல்லபனைக் கண்டு பிடிக்காமலிருந்த செயல் கடமை தவறியதாகவும் ஆகாது! ஏனெனில் எருமைக் கடாவாக மாற்றப் பட்டிருந்த ஒருவனை எவராலுமே கண்டுபிடிக்க முடியா தல்லவா?" என்றாள்.

உடனே விக்கிரமாதித்தன், "ஆமாம், அது தான் சரியான விடை! அடாடா ஒரு பெண்ணிற்குத் தோன்றிய மதிநுட்பம் எனக்கு எட்டாமல் போயிற்றே! ம்! எப்படியிருந்தாலும் இன்றிரவு பேசாமடந்தை இரண்டாம் தரமும் வாய் திறந்து பேசி விட்டாள். அது என் அதிர்ஷ்டந்தான்!" என்று கலகலவென சிரித்தான்.

அதைக் கேட்டதும் பேசாமடந்தை வெட்கிப் போய் "இனி பொழுது விடியும் வரை வாயைத் திறக்கக்கூடாது" என்று மனதில் வைராக்கியம் செய்து கொண்டாள்.

மூன்றாவது தடவையும் பேசாமடந்தையைப் பேசவைக்க எண்ணமிட்ட விக்கிரமாதித்தன் தந்திரமாக வேதாளத்தை அழைத்துப் பேசாமடந்தை போர்த்தியிருந்த மேலாடையின் மீது பிரயோகித்து, "மேலாடையே! உன் எஜமானிதான் என்னிடம் பேசமாட்டாள். அவளை அலங்கரிக்கும் நீ என்னிடம் வாய் திறந்து பேசலாகாதா? விடியாப்பொழுதை விடியவைக்க நீயாவது வேடிக்கையான ஒரு கதை சொல்!" என்றான்.

அதற்கு மேலாடை, "ஐயா! நான் பஞ்சாகி நூலாகிப் பாவாகித் துணியாகிப் பட்ட கதை போதாதா? என்மீது விநோதமான சாயங்களேற்றி, பொற் சரட்டில் புனைந்த ஜரிகை செண்டுகளால் அலங்காரம் செய்து, உத்தரீயமென்றும், தாவணியென்றும், மேலாடையென்றும் பெரிதாகப் பெயர் வைத்து ஒரு பெண்ணல்லவா மூச்சு முட்டும்படி என்னை முக்காடாக இறுக்கிப் போர்த்திக் கொண்டிருக்கிறாள்! இந்த நிலையில் நான் எந்தக் கதையைத்தான் சொல்லமுடியும்?" என்று மேலாடை சொன்னதும், பேசாமடந்தைக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவளுடைய உடம்பெல்லாம் வெலவெலவென ஆடியது. மேனியெங்கும் வியர்த்துக் கொட்டியது. பாம்பைக் கண்டு பதறி விழுந்தவளுக்குக் கட்டிய புடவையே பாம்பாக மாறினால்

எவ்விதம் பொறி கலங்கித் துடிப்பாளோ, அவ்விதம் அஞ்சித் துடித்துச் சட்டென்று மேலாடையைத் தூக்கி விக்கிரமாதித்தனின் எதிரே இருவருடைய கட்டில்களுக்கும் மத்தியில் வீசினுள். பிறகு வெட்கிப் போய் இரு கைகளையும் கட்டிக் கொண்டு கூனிக் குறுகிக் கூச்சத்துடன் உட்கார்ந்திருந்தாள்.

விக்கிரமாதித்தன் புன்சிரிப்புடன் கீழே கிடக்கும் மேலாடையை நோக்கி, "உத்தரீயம் என்றும், மேலாடையென்றும் பெருமையான பெயர் பெற்று பெறுதற்கரிய பேசாமடந்தையின் பேரெழில் திருமேனியைத் தழுவும் பெருமை பெற்ற தாவணியே! உன் எஜமானி உனக்காக மனமிரங்கி உன்னை விடுதலை செய்து விட்டாள்! இனி மேலாவது மூச்சு வாங்கி சிரமமின்றி விநோதமான கதையொன்று சொல்!" என்ருன். அதன் மேல் மேலாடையும் கதை சொல்லத் தொடங்கியது.

## மேலாடை சொன்ன நான்கு திருடர்கள் கதை



குந்தள நகரத்தைக் கோயிலவர்மன் என்ற ஓர் அரசன், கோலாகலன் என்கிற தன் மந்திரியுடன் அரசாண்டு வந்த காலத்தில், தலைநகருக்கு இருகாத தூரத்தில் மாதகிபுரம் என்ற சிற்றூரில் கார்த்திகேயன் என்ற ஒரு பக்காத்திருடன் இருந்தான். அவனுக்கு முழுத்திருடன், முக்காத் திருடன், அரைத் திருடன், கால் திருடன் என நான்கு குமாரர்கள் இருந்தார்கள். ஒருநாள் பக்காத் திருடன் தனது நான்கு புத்திரர்களின் திறமையை சோதிக்க விரும்பி முதலில் கால் திருடனை தன் கடைசிக் குமாரனைக் கூப்பிட்டு, "மகனே! இன்றைய தினம் உன் திருட்டு சாமர்த்தியத்தைச் சோதித்துப் பார்க்கப் போகிறேன். நீ எந்த அளவில் தொழிலில் தேர்ச்சியடைந்திருக்கிருயென்பதை இதில் காட்ட வேண்டும். நீ குந்தள நகரத்திற்குச் சென்று பட்டப் பகலில் திருடிக் கொண்டு சூரியன் அஸ்தமிக்கும் முன்பாகத் திரும்பி வந்துவிட வேண்டும்!" என்ருன்.

## கால் திருடன் கதை

கடைசிப் புத்திரன் தன் சாமர்த்தியத்தைக் காட்டக் கிளம்பினுன். முதலில் ஓர் ஒட்டாஞ்சல்லியை ஒரு ரூபாய்

போல் வட்ட வடிவமாயுடைத்து, துணியில் முடித்து தோளில் போட்டுக் கொண்டு சென்றான்.

குந்தளபுரத்தை அடைந்ததும் அவன் ஒரு நாவிதனின் வீட்டிற்குள் நுழைந்தான். அப்போது நாவிதன் குடியானவனுக்கு முகக்ஷவரம் செய்து கொண்டிருந்தான். அதற்குக் கூலியாக அந்த நாவிதன் ஓரணா வாங்குவதுதான் வழக்கம். அவனிடம் கால் திருடன், "நான் அவசரமாய் போகவேண்டும். எனக்கு முதலில் கிருதா மீசை முதலானவைகளை வெட்டி சுத்தமாக முகக்ஷவரம் செய்துவிடு! உனக்குக் கால் ரூபாய் தருகிறேன்." என்றான். ஓரணா வேலைக்கு நாலணாக் கிடைப்பது கண்டு பேராசை கொண்ட நாவிதன், குடியானவனைக் கெஞ்சிக் கூத்தாடி, இன்னொரு மனையில் உட்காரும்படி ஒதுக்கி வைத்துவிட்டு வெகுபாடுபட்டு கால் திருடனின் கிருதா மீசையையெல்லாம் வெட்டிச் சுத்தமாக முகக்ஷவரம் செய்துவிட்டான். அப்போது கால் திருடன், தன் துணியில் முடித்து வைத்திருந்த ஓட்டாஞ்சல்லியைக் காட்டி, "என்னிடம் ஒரு ரூபாயாக இருக்கிறது. கூலிபோக மிச்சம் முக்கால் ரூபாயைக் கொடுப்பாயா?" என்றான். நாவிதன் சில்லறை கிடையாதென்று தெரிவிக்கவே, தன்னுடன் கடைக்கு வந்தால் மாற்றித் தருகிறேன் என்று அவனைக் கூப்பிட்டான். பாதி க்ஷவரத்தில் குடியானவனை விட்டுவிட்டு எவ்விதம் செல்வதென எண்ணிய நாவிதன், அங்கு விளையாடிக் கொண்டிருந்த தன்னுடைய ஐந்து வயது மகனை கால் திருடனுடன் அனுப்பி வைத்தான்.



கால் திருடன் அந்தப் பையனை அழைத்துக் கொண்டு ஒரு ஜவுளிக் கடைக்குச் சென்றான். அவனுடைய சுத்தமான முகக்ஷவரத்தைப் பார்த்த ஜவுளிக் கடைச் செட்டியார் அவனை யோக்கியன் என்றும், ஒரு பெரிய மனிதன் என்றும் மதிப்பிட்டுத் தம்முடைய விலையுயர்ந்த ஜவுளிகளையெல்லாம் எடுத்துப் பரப்பிக் காண்பித்தார்! கால் திருடனோ ஆயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள பட்டுச் சேலை முதலான ஜவுளிகளை எடுத்து மூட்டையாகக் கட்டிக் கொண்டு, "செட்டியாரே! இவ்வூரையடுத்த குளத்தங்கரையில் என் மனைவி, குடும்பத்தாரெல்லாம் வண்டியில் வந்து இறங்கியிருக்கிறார்கள். அவர்களுக்குப் பிடித்தமான சரக்குகளை எடுத்துக் கொண்டு, அவற்றிற்குரிய

பணத்தையும் பிடிக்காத சரக்குகளையும் தருகிறேன். நீராவது உமதாட்களாவது என்னுடன் வாரும்!" என்று சொல்ல, அத்தருணம் கடையில் ஆட்களில்லாததால் செட்டியார் யோசனை செய்தார். அதற்குள் கால் திருடன், "செட்டியாரே! தயக்கம் வேண்டாம். இந்தக் குழந்தை இங்கேயே உம் வசம் இருக்கட்டும்.. சிறிது நேரத்தில் பணத்துடனும் பிடிக்காத சரக்குகளுடனும் திரும்பி வந்துவிடுகிறேன்!" என்று சொன்னான். கடைக்காரரும் சரக்குகளுக்குப் பதில் அவனுடைய குழந்தை ஈடாயிருக்கிற தென்று எண்ணி, நாவிதனின் பிள்ளையைப் பிணையாக வைத்துக் கொண்டு ஜவுளிகளைக் கொடுத்துக் கால் திருடனை அனுப்பிவிட்டார். ஜவுளிகளுடன் கால் திருடன் ஓட்டமும், நடையுமாகக் கிளம்பி சூரிய அஸ்தமனத்திற்குள் தன் தகப்பனான பக்காத் திருடனிடம் சென்று ஜவுளி மூட்டையை காண்பித்தான். புத்திரன் திறமையைக் கண்டு தகப்பனும், "பலே, திருடா!" என்று புகழ்ந்தான்.

அந்தச் சமயம் ஜவுளிக் கடைச் செட்டியாரோ, வெகு நேரமாகியும் ஜவுளி மூட்டையுடன் சென்றவனைக் காணோமே என்று கலங்கி, தம்மிடம் ஈடாகவுள்ள குழந்தையை நோக்கி, "உன் தகப்பன் எங்கே?" என்று கேட்டார். அதற்கு அந்தக் குழந்தை, "என் தந்தை க்ஷவரம் செய்து கொண்டிருக்கிறார்!" என்று சொல்லியது. திருட்டுப் பயல் மகன் பரிகாசம் செய்கிறானேயென்று கோபங்கொண்ட செட்டியார் அந்தப் பிள்ளை ஓடினாலும் ஓடிவிடுமெனப் பயந்து அதைப் பிடித்துக் கயிற்றால் தூணில் கட்டிவைத்தார். அதனால் நாவிதனின் குழந்தை நாவறண்டு போகுமளவு வீர், வீரென்று கத்திக் கொண்டிருந்தது.

அச்சமயம் சில்லறை வாங்கச் சென்ற தன் மகனை இன்னும் காணவில்லையே என்று நாவிதன் தேடிக் கொண்டு கடைத்தெருவிற்கு வந்தான். ஜவுளிக் கடையிலே தன் பிள்ளை தூணில் கட்டிப் போடப்பட்டுத் துடித்துக் கொண்டிருப்பதைக் கண்டு ஆத்திரத்துடன் துள்ளி "யார் இந்தப் பிள்ளையைத் தூணில் கட்டிப்போட்ட கயவன்?" என்று செட்டியாரிடம் சண்டைக்குச் சென்றான். செட்டியாரும் தம் ஜவுளிகள் திருட்டுப்போன வயிற்றெரிச்சலில் வந்த சண்டையை விடாமல், "யாரடா நீ. இந்தக் களவாணிப் பயல் மகனுக்குப் பரிந்து பேசவந்த களவாணிப் பயல்?" என்று திட்டினார். இருவரும் ஒருவரையொருவர் ஏசிக்கொண்டு அடிதடி சண்டையிலி றங்கிவிடவே, தெருவெங்கும் கும்பல் கூடி குழப்பம் ஏற்பட்டு ஜாதிச் சண்டையாக மாறத் தொடங்கியது. அதனால் அரசாங்கச் சேவகர்கள் அங்கே பாய்ந்து வந்து ஜவுளிக் கடைச்

செட்டியாரையும் நாவிதனையும் கைது செய்து பிடித்துக் கொண்டு போய் அரசனிடம் விட்டனர். வழக்கை விசாரித்த நீதி நெறி மன்னனே, கடைக்காரன் ஏமாந்ததற்கு நாவிதனின் பிள்ளை காரணமல்ல என்று தீர்ப்பளித்தான். செட்டியார் தம்முடைய ஜவுளிகள் திருடுபோனதை நினைத்து அழுது கொண்டும், நாவிதன் தன் கூலி பறிபோனதையும் தன் பிள்ளை தூணிலே கட்டப்பட்டு அழுததையும் நினைத்து அழுது கொண்டும் போனார்கள்.

அவர்கள் போனதும் கோயிலவர்ம மகாராஜனும், கோலாகல மந்திரியும் வெகுநேரம் மந்திராலோசனை நடத்திவிட்டு ஊர்க்காவல் புரியும் தலையாரிகளின் தலைவனைக் கூப்பிட்டு, "பட்டப் பகலிலேயே இப்பேர்ப்பட்ட திருட்டுத்தனம் செய்தவன், இன்றிரவும் திருடுவான். அவனை நீ பிடித்துக் கொடுக்க வேண்டும். இல்லையெனில் உனக்குத் தண்டனை தப்பாது!" என்று கடுமையான கட்டளை பிறப்பித்தார்கள்.

அன்றிரவு பக்காத்திருடனை கார்த்திகேயன் தனது மூன்றாவது குமாரனை அரைத் திருடனை அழைப்பித்து, "என் வம்சம் தழைக்க வந்த மகனே! இன்றிரவு உன் தொழில் திறமையைப் பரிசோதிக்கப் போகிறேன்! இன்றிரவு நீ குந்தள நகரம் சென்று அபாரமான திருட்டு ஒன்றை நடத்திவிட்டு வரவேண்டும்!" என்றான்.

## அரைத் திருடன் கதை

தந்தை சொல் மிக்க மந்திரமில்லையென்று அரைத் திருடனும் சம்மதித்து, கையில் சிறிது திரவியம் எடுத்துக் கொண்டு, குந்தள நகரத்திற்கு வந்து அங்குள்ள நிலைமையை விசாரித்தான். அன்றைய பட்டப்பகலில் ஜவுளிக் கடையில் திருடிய கள்ளன் இரவிலும் வருவான் என்று எதிர்பார்த்திருப்ப தாகவும், அவனை எப்படியாவது பிடித்துவிடப் பெரிய தலையாரி தக்க ஏற்பாடுகளுடனிருப்பதாகவும் ஊர் ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். அந்தத் தலையாரியின் பூர்வோத்திரங்களை யெல்லாம் பற்றி அரைத் திருடன் விசாரித்தபோது தலையாரிக்கு ஒரே ஒரு பெண் உண்டென்றும் அவளுக்குப் பால்ய வயதில் திருமணமாகி மாப்பிள்ளை வியாபார விஷயமாகத் தொலைதேசம் சென்றவன் வெகுநாட்களாகத் திரும்பிவரவில்லையென்றும், தலையாரியின் குமாரி இப்போது புஷ்பவதியாகித் தன் புருஷனின் வரவை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருக்கிறாள் என்றும் தெரிந்தது. உடனே அரைத் திருடன் ஒரு ஜவுளிக்

கடைக்குச் சென்று, தான் கையில் கொண்டு வந்த பணத்தைக் கொடுத்து, தலைப்பாகை, ஜரிகை வேஷ்டி, நூதனமான சேலை ரவிக்கை துணிமணிகள் முதலானவைகளெல்லாம் வாங்கிக் கொண்டு, இன்னொரு கடையில் ஏலம், லவங்கம், கொட்டைப் பாக்கு, ஜாதிக்காய், ஜாதி ஊதுபத்தி முதலான சில்லறைச் சாமான்களையும் வாங்கிக் கொண்டு, அயல் நாடுகளுக்குக் கப்பலேறி பல தேசங்களில் பொருளீட்டித் திரும்பி வந்தவனைப் போன்று மாறு வேடம் பூண்டு, தன்னைத் தலையாரியின் மாப்பிள்ளையெனச் சொல்லிக் கொண்டு ஆடம்பரமாக தலையாரியின் வீட்டை அடைந்தான். அப்போது தலையாரி அன்றிரவு எப்படியாவது திருடனைப் பிடித்துவிட வேண்டுமென்று அவசரமாக சாப்பிட்டுவிட்டுக் கிளம்ப இலையின் முன் உட்கார்ந்திருந்தான். அப்போது அரைத் திருடன், "மாமா! மாமி!" என்று உற்சாகமாகக் கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்து தன்னுடன் கொண்டு வந்திருந்த சாமான் மூட்டைகளை அவிழ்த்துக் காட்டி, ஏலம், கொட்டைப் பாக்கு முதலான சில்லறைப் பொருள்களை மட்டும் தலையாரியிடம் கொடுத்து க்ஷேமலாபங்கள் வினவினான். அது அந்தி இருளானபடியாலும், பால்யத்தில் பிரிந்து சென்ற மாப்பிள்ளையைச் சரிவர நினைவில்லாதபடியாலும், தலையாரியின் குடும்பத்தினர் அனைவரும் தூர தேசம் சென்ற தங்கள் மாப்பிள்ளைதான் திரும்பி வந்துவிட்டதாகவே நம்பி மகிழ்ந்து உபசரித்தனர். அன்றிரவு விருந்து வருமென எதிர்பாராததால் வீட்டில் உள்ளவர்களுக்கு மட்டுந்தான் குறைவாகச் சமைத்திருந்தார்கள். அதனால் தலையாரி தன் மாப்பிள்ளையை வயிறாரச் சாப்பிடச் சொல்லிவிட்டு தான் அரைகுறையாகச் சாப்பிட்டுவிட்டுப் பாதிப் பட்டினியுடன் அவசரமாக வெளிக் கிளம்பினான். அதைக் கண்டதும் அரைத் திருடன், "ஏது மாமா, இவ்வளவு அவசரம்?" என்று கேட்டான்.

அதற்குத் தலையாரியும் அன்றிரவு திருடனைப் பிடிக்க வேண்டிய விஷயத்தை விளக்கமாகக் கூறிவிட்டு நகர் சோதனைக்குப் புறப்பட்டான். "மாமா! நானும் இந்த நகரத்தைப் பார்த்து வெகுநாட்களாகிவிட்டன. தங்களுடன் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன்!" என்று அரைத் திருடனும் அவனுடன் புறப்பட்டான். தலையாரியின் குமாரியோ தன் புருஷன் பல ஆண்டுகளுக்குப்பின் வந்திருக்கிற சந்தோஷத்தில் உள்ளம் பூரித்து, உடலெங்கும் வீட்டிலுள்ள ஆபரணங்களையெல்லாம் எடுத்து அணிந்து கொண்டு தன் கணவன் ஊர்சுற்றித் திரும்புவதை எதிர்நோக்கி அன்றிரவு தன் பள்ளியறையில் காத்திருக்கலானாள்.



தலையாரி நகர் சோதனைக்குச் செல்லும் வழியிலே. கடைவீதி முதலான வைகளையெல்லாம் மாப்பிள்ளைக்குக் காண்பித்துக்கொண்டு வரும்போது கோட்டை வாசலருகில் ஓரிடத்தில் தொழுமரம் ஒன்று நடப்பட்டிருந்தது. அதைக் கண்ட அரைத் திருடன் வியந்து. "இது என்ன மாமா? புதிதாக இருக்கிறதே?" என்று கேட்டான். அதற்குத் தலையாரி. "கேளும் மாப்பிள்ளை! இது கைகளை மாட்டி ஆப்படித்துப் பூட்டுகிற தொழுமரம்!" என்று தெரிவித்தான். "இதென்ன அதிசயமாயிருக்கிறது. இதில் ஒரு ஆள் ஆப்படித்துத் தொங்கினால் எப்படியிருக்கும்? என் கைகால்களை இந்தத் தொழுமரத்தில் மாட்டி நீர் ஆப்படித்துக் காட்டும்!" என்று அரைத் திருடன் கேட்டபோது. "ஊஹூம்! வெகு நாளைக்குப் பிறகு வீடு திரும்பிய மாப்பிள்ளையைத் தொழுமரத்தில் தொங்கவிட்டுக் காட்டுவதா? அதெல்லாம் நமக்கு வேண்டாம்!" என்றான் தலையாரி. அப்படியானால் நீராவது இதில் கையையும் காலையும் மாட்டிக் கொள்ளுங்கள். நான் ஆப்படித்துப் பூட்டிப் பார்க்கிறேன். இது எப்படி என்பது எனக்குத் தெரிந்தாலொழிய இந்த இடத்தைவிட்டு நகரமாட்டேன்!" என்று பிடிவாதமாகவே வற்புறுத்தவே தலையாரியும் மாப்பிள்ளை பேச்சுக்கு மதிப்புக் கொடுத்துத் தன் கைகளையும் கால்களையும் தொழுமரத்தில் மாட்டிக் காண்பித்தான். உடனே அரைத் திருடனும் விளையாட்டுப் போல ஆப்பை வலுவாகவே அடித்துப் பூட்டி விட்டு. பூட்டிய சாவியை எங்கேயோ இருட்டில் கைநழுவ விட்டதுபோல் பாசாங்கு செய்து சிறிதுநேரம் தேடிவிட்டு. "சாவி அகப்படவில்லையே? என்ன செய்வது மாமா?" என்று கைகளைப் பிசைந்தான். தலையாரி திடுக்கிட்டு. "அடாடா! திருடனைப் பிடிக்க வேண்டிய நேரத்திலே என்னைத் தொழுவத்தில் மாட்டித் தொங்க விட்டுவிட்டீர்களே. மாப்பிள்ளை! சரி, இந்த ஆப்பின் பூட்டை உடைக்க சிக்கிரமாக வீட்டுக்குச் சென்று உளியும் கொட்டாப்புளியும் எடுத்து வாருங்கள். மாப்பிள்ளை!" என்றான்.

இதுதான் சமயமென்றுணர்ந்த அரைத் திருடன் நேராகத் தலையாரியின் வீட்டிற்கு ஓடிவந்து. "அத்தே! அத்தே! இந்த அநியாயத்தைக் கேட்டீர்களா? மாமா ஏதோ குற்றம் செய்தாரென்று மகாராஜா தண்டித்துத் தொழுமரத்தில் மாட்டிவிட்டார். அபராதமாக உங்கள் பணம் நகைகளை யெல்லாம் பறிமுதல் செய்துபோக அரசாங்கச் சேவகர்கள்

திரண்டு வரப்போகிறார்கள். ஆகையால் வீட்டில் உங்கள் கையிருப்பிலுள்ள பணம், நகைகள் எல்லாவற்றையும் என்னிடம் கொடுத்து வேறிடத்திற்கு மாற்றிக் கொண்டு போய் பத்திரப்படுத்துமாறு மாமா சொல்லியனுப்பினார்" என்றான். அதை நம்பிய தலையாரியின் மனைவி கதிகலங்கிப் போய் ரொக்கப் பணத்தையும், ஆபரணங்களையும் ஒரு மூட்டையாகக் கட்டி அவனிடம் கொடுத்தாள்.

பிறகு தலையாரியின் பெண் துயிலும் படுக்கையறைக்கு வந்து, அவளுக்கு ஒரு முத்தம் கொடுத்து அவள் அணிந்திருந்த விலையுயர்ந்த ஆபரணங்கள், விலையுயர்ந்த ஆடைகள் அனைத்தையும் வாங்கி அவற்றையும் ஒரு மூட்டையாகக் கட்டிக் கொண்டு, "இவற்றை வேறொரு இடத்தில் பத்திரமாக வைத்துவிட்டு வருகிறேன்! ஜாக்கிரதை! தெருக்கதவை உட்புறம் தாளிட்டுக் கொள்ளுங்கள். யார் வந்து தட்டினாலும் கதவைத் திறக்காதீர்கள்! இந்த நேரத்தில் திருடர்கள் வேறு உள்ளே நுழைந்துவிட்டால், இழவு வீட்டில் ஓநாய் நுழைந்த கதையாக முடிந்துவிடும்!" என்று எச்சரித்துவிட்டு, அங்கிருந்து தன்னூருக்குக் கம்பி நீட்டினான். அன்றிரவே சொன்ன பிரகாரம் தகப்பனிடம் திரும்பிவந்து தான் திருடிவந்த மூட்டைகளை அவிழ்த்துக் காட்டினான். அதற்கு "பலே திருடா!" என்று பக்காத்திருடனின் பாராட்டுதலைப் பெற்றான்.

மறுநாள் பொழுது விடிந்ததும் தொழுமரத்தில் பெரிய தலையாரி தொங்குவதையும், அவனுடைய வீட்டில் கொள்ளை நடந்திருப்பதையும் கண்டு ஊர் மக்கள் அனைவரும் பரபரப்படைந்தார்கள். தலையாரியை மற்ற காவலர்கள் அரசன் முன் கொண்டு நிறுத்தி விசாரணை நடந்தபோது, "தலையாரியே! திருடனைப் பிடிக்கச் சென்றவன் திருடனுக்குரிய தொழுமரத்தில் ஏன் தொங்கினாய்?" என்று மந்திரி ஆத்திரத்தோடு கேட்டான். தலையாரி தலைகுனிந்து, "நான் என்ன செய்வது? அந்தத் திருடன் என் மாப்பிள்ளையாக வந்து, நான் சம்பாதித்த பொருள்களையெல்லாம் மூட்டைகட்டிக் கொண்டு, என் பெண்ணின் மனதையும் கெடுத்துவிட்டு, என்னையும் தொழுமரத்தில் பூட்டித் தொங்கச் செய்துவிட்டுப் போய் விட்டான். அவன் எவர் கண்ணிலும் மண்ணைத்தூவக் கூடிய அதிசாமர்த்தியகாரனாயிருக்கிறானே! அவனை எவரால்தான் பிடிக்கமுடியும்?" என்றான். அதைக்கேட்டதும் மந்திரிக்கு ரோஷமுண்டாகி, "நீ முட்டாளானபடியால்தான் அந்தத் திருடனைப் பிடிக்கவில்லை! நேற்று முன் இரவில் வந்த அதே திருடன் இன்று நடுநிசிக்குப் பிறகுதான் திருட வருவான். இன்றிரவு நானே முன்னின்று அவனைக் கைப்பிடியாய் பிடிக்கா விட்டால் நான் மந்திரியே அல்ல!" என்று சபதம் செய்தான்.

அன்றையதினம் பக்காத்திருடனுனவன் தன் இரண்டாவது புத்திரனுன முக்கால் திருடனே அழைத்து, "இன்று நள்ளிரவில் அதே ஊரில் காட்டு உன் கைவரிசையை!" என்று கட்டளையிட்டான்.

## முக்கால் திருடன் கதை

தந்தையின் சொற்படி தன் திருட்டுச் சாமர்த்தியத்தைக் காட்டுவதற்காகக் குந்தள நகரத்திற்கு வந்த முக்கால் திருடன் ஊர் நடப்புகளேப் பற்றி விசாரித்தான். அன்று நள்ளிரவில் வரப்போகும் திருடனேப் பிடிப்பதற்காக அரசவையில் மதி மந்திரியார் செய்திருக்கும் சபதத்தையும், அந்த மந்திரி கணிகையர் தெருவிலுள்ள மூன்றுங்கொத்துமீனுள் என்னும் தாசியின் வீட்டிற்கு நடுநிசியில் இரகசியமாக வந்துபோகும் வழக்கம் உண்டென்பதையும் அவன் அறிந்து கொண்டான். உடனே அவன் அரண்மனே வியாபாரிகளின் கடைக்குச் சென்று உயர்ந்த பட்டு வகைகளும், பீதாம்பரமும், தலைப்பாகையும், அணிகலன்களும் வாங்கி, தையற்காரர்களுக்கு அதிகக் கூலி கொடுத்துத் தகுந்தபடி சொக்காய், மேலங்கி முதலானவைகளேத் தைக்கச் செய்தான். மாறுவேடக்காரர்கள் உபயோகிக்கும் மெழுகினுல் தன் முகத்தோற்றத்தையும் மாற்றிக் கொண்டு மந்திரி போல் மாறு வேடம் பூண்டு அந்திப்பொழுது இருட்டியதும் தாசி மீனுளின் வீட்டில் நுழைந்தான். வழக்கமாக நள்ளிரவில் வரும் மந்திரியார் அன்றையத் தினம் முன் இரவிலே வந்திருப்பதைக் கண்டு வியப்புற்ற தாசி, வந்தனம் செய்து வரவேற்றுத் தன் பள்ளியறைக்கு அழைத்துச் சென்று கட்டிலில் உட்காரச் செய்து, தாம்பூலம் கொடுத்து உபசரித்துக் கொண்டே, "சுவாமி! ஏது இன்றைக்கு அரண்மனேயில் கொலு முடிவதற்கு முன் அடியாளே நாடி இவ்வளவு முன்னதாக வந்துவிட்டீர்களே?" என்று பாகுமொழியால் கேட்டாள். அதற்கு மந்திரி வேடமிட்டிருந்த முக்கால் திருடன் புன்முறுவல் செய்து, "கண்ணே! நம் நகரிலே நேற்றுப் பகலிலும் முன்னிரவிலும் ஒரு திருடன் அமர்க்களம் செய்த கதையெல்லாம் உனக்குத் தெரிந்திருக்குமே? இன்றைய தினம் அவனே நான் பிடித்து விடுவதாகச் சபதம் செய்திருக்கிறேன். அவனே என்னேப்போல் மாறுவேடமிட்டு இங்குவந்து உன்னிடமுள்ள நகை நட்டுகளே யெல்லாம் கவர்ந்துபோகத் திட்டமிட்டிருக்கிருனென ஒற்றர்கள் மூலமாக எனக்குச் செய்தி கிடைத்திருக்கிறது. அதனுல் நான் முன்னதாகவே இங்கே வந்தேன். வழக்கமாக நான் நள்ளிரவு நேரத்தில் வரும் அதே சமயத்தில் தான் அத்திருடனும் என்னேப்போல் வேடமிட்டு வருவான். அவனேப் பிடித்து நம்

வீட்டுப் பந்தற் காலில் கட்டிப் போடவேண்டும். அதற்கு முன்னதாகவே ஒரு பெரிய தடியும், கனமான கயிறும் கொண்டு வா!" என்முன். அவளும் அவ்வாறே கொண்டு வந்து பக்கத்தில் வைத்துக் கொண்டதும், முக்கால் திருடன் அந்த முன்னிரவிலே முழுமதியான மீனுளுடன் தாம்பூலம் தரித்து வாசனைத் திரவியங்கள் பூசி, சரச பேச்சுகளுடன் உல்லாசமாயிருந்தான்.

அப்போது அசல் மந்திரியோ, அரண்மனையில் மந்திராலோசனை சபை முடிந்ததும் தன் மாளிகைக்குச் சென்று, உணவருந்தி தாம்பூலம் தரித்து வாசனைத் திரவியங்கள் பூசிக்கொண்டு வெளிக்கிளம்பி, தெருக்களையெல்லாம் சுற்றிக் கண்காணிக்கும் காவலர்களையெல்லாம் பார்வையிட்டு மனம் பூரித்தவனுய், "எல்லோரும் குறிப்பிட்ட நேரத்தில் கோபுர வாசலில் எனக்காகக் காத்திருங்கள். நான் ஒரு முக்கியமான வேலையை முடித்துக் கொண்டு இன்னும் ஒரு நாழிகையில் அங்கு வருகிறேன். திருடனைப் பிடித்துவிடலாம்" என்று கூறிவிட்டு, தாசி வீட்டிற்கு வழக்கமாக வரும் நள்ளிரவு நேரத்திலே தன்னந்தனியாக மோகக்கிறக்கத்தோடு வந்து கொல்லைப் புறக்கதவை மெல்லத் தட்டினுன். கதவு ஓசைப்படாமல் திறந்தது. அசல் மந்திரி உள்ளே நுழைந்ததும் முக்கால் திருடன் குபீரென அவன்மீது பாய்ந்து, அவனுடைய வாய்க்குள் துணிப்பந்தை வைத்து, தயாராய் வைத்திருந்த கைத்தடியால் அவனை முழங்காலிலும் கணுக்காலிலும் முட்டிக்கு முட்டிக்கு அடித்துப் பயமுறுத்தி ஸ்மரணை தடுமாறச் செய்து, அவனை முன் வாசலுக்கு இழுத்துக் கொண்டு போய் பந்தற் காலிலே கிணற்றுக் கயிறு கொண்டு பின் கட்டாகக் கட்டிப் போட்டான. பின்னர் அந்த மந்திரியின் ஆடம்பரமான ஆடையாபரணங்கள், அரசியல் சின்னங்கள் அத்தனையும் பறித்துக்கொண்டு, சாயம்போன ஒரு சிறு கிழிசல் துணியை மட்டும் அவனுடைய இடுப்பில் உடுத்தச் செய்தான். இவ்வாறெல்லாம் மந்திரியை அலங்கோலப்படுத்தி அச்சுறுத்திவிட்டு, "அடியே ஆசை மீனுள்!" என்று கொஞ்சிக் குழைந்த வண்ணம் தாசியின் கையைக் கோர்த்துக் கொண்டு உல்லாசமாகக் கட்டிலறைக்குச் சென்று மஞ்சத்தில் அவளை அமர்த்தி, "ஆசைக்குரிய மீனுளே! நான், பயங்கரத் திருடனைக் கைப்பிடியாய் பிடித்துப் பந்தல் காலில் கட்டிப் போட்டு விட்டதால், பொழுது விடிந்ததும் எனக்கு மன்னர்பிரான் வீரப்பதக்கமும் ஏராளமான பரிசுகளும் கொடுப்பார்! உன் நகைகளெல்லாம் மிகவும் சிறிதாயிருக்கின்றனவே அவற்றையெல்லாம் பெரிதாகச் செய்து தருகிறேன்! எல்லாவற்றையும் எடுத்துத் தா!" என்முன். தாசியும் நகைகள் பெரிதாகுமென்ற

பேராசையில். தான் அணிந்திருந்த நகைகள் உட்பட எல்லாவற்றையும் எடுத்துக் கொடுத்தாள்.

அதன் பின்னர் அதிவல்லவனை திருடன் அந்தத் தாசியிடம் அதிருசியாய்க் கொஞ்சிப்பேசி மகிழ்ந்திருந்துவிட்டு அவளைச் சிறிது கண்ணயரச் செய்தான். பிறகு அவன் மெல்ல எழுந்து சென்று கொல்லைபுறத்தில் தயாராய் குடத்தில் இறைத்து வைத்திருந்த தண்ணீரையெல்லாம் வேண்டுமென்றே குடத்தோடு கவிழ்த்துக்கொட்டிவிட்டு திரும்பி வந்து, தாசியைத் தட்டி யெழுப்பி, "பொழுதுவிடியப் போகிறது! நான் குளித்துவிட்டுப் போவதற்குத் தண்ணீர் வேண்டுமே?" என்றான்.

அவள் அவசரமாகப் பின் கட்டில் போய் பார்த்துவிட்டு வந்து, "குடத்திலிருந்த ஜலமெல்லாம் திருடன் வந்த சந்தடியில் உங்கள் கால் தவறிப்பட்டுக் கொட்டிப்போயிற்று?" என்று கேட்டாள். "ஆமாம் அதற்கு என்ன செய்வது?" என்றான் மந்திரி உருவிலிருந்த முக்கால் திருடன். "கொல்லைப்புற ஏற்றக்கிணறு இருக்கிறது! வாருங்கள். கிணற்றில் ஏற்றத்தில் அடியாளே ஏறித் தண்ணீர் இறைத்துத் தருகிறேன்!" என்று அந்தத் தாசி பரிவுடன் முக்கால் திருடனை அழைத்துக் கொண்டு கொல்லைப்புறமுள்ள கிணற்றடிக்குச் சென்றாள். அப்போது அவள் ஒரு சேலையின் ஒரு பக்க முந்தானையை மட்டும் உடுத்திக் கொண்டு அவசரமாக எழுந்துவந்ததால், இன்னொரு பக்கமுந்தானையைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டிருந்தாள். அந்நிலையிலே அவசரமாகக் கிணற்றின் மீதுள்ள ஏற்றத்தில் ஏறினாள்.

அங்கே கிணற்றுக்கு மேலே துலாமரத்தில் தாசி ஏறிக் கொள்ள, கீழே முக்கால் திருடன் நின்று துலாக்கோலைப் பிடித்துக் கிணற்றுக்குள் விட்டு சால் நிரம்ப ஜலத்தை மொண்டதும் படீரென்று துலாக்கோலைவிட்டு விட்டான். துலாமரம் சமமாய் நின்று அதிலிருந்து இறங்கமுடியாதபடி தாசி நடுவாந்திரத்தில் திகைத்து நின்றுவிட்டாள். அந்நிலையில் கீழே தொங்கும் முந்தானையையும் பிடித்து இழுத்துவிட்டான். தாசியோ துலாக்கோலோடு ஒட்டிக்கொண்டு கூனிக்குறுகி என்ன செய்வதென்று புரியாமல் விழித்தாள். அவளை அந்த நிலையிலே விட்டு விட்டு முக்கால் திருடன் உள்ளே சென்று, இன்னுமிருந்த சொத்துக்களையும் தேடிப்பிடித்து எடுத்துக் கொண்டு மஞ்சத்தில் கிடந்த தாசியின் நகைகளையும் மற்றும் வீட்டிலுள்ள விலையுயர்ந்த பொருள்களையும் ஒன்றுவிடாமல் சுருட்டிக் கொண்டு அவற்றோடு மந்திரியாரின் ஆடையாபரணங்களையும் வைத்து ஒரு பெரிய மூட்டையாகக் கட்டிக் கொண்டு வெளிக்கிளம்பினான். பந்தக்காலில் அலங்கோலமாகக்

கட்டிப்போடப்பட்டிருக்கும் மந்திரியார் அந்தச் சமயம் மூர்ச்சை தெளிந்து முனகலானார். அவர் முன் முக்கால் திருடன் வந்து நின்று "அடா மூட மந்திரி! நீயா என்னைப் பிடித்து கட்டிப்போடுவதாய் பெருமையடித்துக் கொண்டாய் கொள்ளைவரி போட்டு ஊர் மக்களிடம் கொள்ளையடித்து கணிகை வீட்டில் கொட்டி வைத்திருந்ததையெல்லாம் நான் கொள்ளை கொண்டு போகிறேன்! பொழுது விடிந்தால் இந்த தாசி வீட்டைப் பார்த்து ஊர் சிரிக்கும்! முன் வாசலிலே ம மந்திரியாரின் மானமும், பின் வாசலிலே கள்ள நாயகியின் மானமும் பறிபோகும்!" என்று ஏசி காறி உமிழ்ந்து விட்டு சென்றான்.

பொழுது விடிவதற்குள் அவன் தன்னூரை அடைந்து தன் தகப்பனாரிடம் தன்னுடைய சாமர்த்தியக் கொள்ளையை விளக்கினான். அவனை "பலே திருடா!" என்று பக்காத் திருடனும் பாராட்டினான்.



குந்தள நகரத்திலோ பொழுது விடிந்ததும் துலா மரத்தைத் தழுவியபடி அலங்கோலமாக நிற்கும் கணிகையின் நிலைமையும், முன் வாசலிலே முழத் துண்டுடன் கட்டிப் போடப் பட்டு கிடக்கும் மந்திரி யாரின் நிலையையும் பார்த்து ஊர்முழுவதும் சிரித்து கூச்சலிட்டது. இவற்றை யெல்லாம் அறிந்த மகா ராஜனோ, "மந்திரியாரே! திருடனைப் பிடிப்பதாக வீரம் பேசிச் சென்றவர் தாசி வீட்டில் தலைகுனிந்து கிடக்கும் விதி பெற்றீரே!" என்றான். வெட்கித் தலை குனிந்த தாசியும், மந்திரியும் விபரம் யாவும் சொல் விசனமுற்று "எதற்கும் வல்லவனாய் விளங்கும் அந்த ஜகஜ்ஜா திருடனை எவரால்தான் பிடிக்க முடியும்?" என்றார்கள்.

அதனால் ரோஷங்கொண்ட மகாராஜன், "அந்தக் கயமையே உருவான கைதேர்ந்த கள்ளனை இன்றிரவு கையும் களவுமாகப் பிடித்துக் கட்டுகிறேன். அவ்வாறு நான் செய்யாமற் போவேனேயாகில் நான் வீர ரத்தத்தில் பிறந்த இராஜனாகமாட்டேன்!" என்று மக்கள் முன்னிலையில் சபதம் செய்தான்.

அன்றையத்தினம் மாதவிபுரத்தில் பக்காத்திருடன் தன் மூத்த குமாரனாகிய முழுத்திருடனை அழைத்து "மகனே! இன்று உன் திறமையைக் காட்டி முதல்வனாகத் திகழ வேண்டும்! உன் தம்பியர் மூவரும் திருடிவந்த அதே பட்டணத்திற்குப் போய் இன்றிரவு நீ திருடிவர வேண்டும்!" என்றான்.

## முழுத் திருடன் கதை

முழுத்திருடன் குந்தள நகரம் வந்து மாடுமேய்க்கும் இடைச் சிறுவர்களை அணுகி "இவ்வூரில் என்ன விசேஷம்?" என்று விசாரித்தான். அவர்கள், "இன்றிரவு ஜகஜ்ஜால திருடனை பிடிப்பதற்காக இராஜாதிராஜரே வருவதுதான் விசேஷம்!" என்று அறிவித்தார்கள்.

இதைக் கேட்ட முழுத்திருடன் மனதிற்குள் சிரித்துக் கொண்டே நகரத்திற்குள் சென்று, பாக்கு, புகையிலை, உப்பு, இனிப்பு பண்டங்கள் முதலிய சாமான்கள் வாங்கி ஒரு பெரிய கோணிப்பைக்குள் வைத்து மூட்டையாகக் கட்டிக் கொண்டு சிறிய கூண்டு விளக்கு ஒன்றும் கொஞ்சம் விளக்கெண்ணையும், ஓலைப்பாய்கள் இரண்டும் வாங்கிக் கொண்டு வடதிசை வியாபாரிபோல மாறுவேட மணிந்து தலைநகரின் எல்லைப் புறத்திலே ஊருக்குள் நுழைவதற்குரிய ஓர் ஒதுக்குப் புறமான பாதையிலே, அந்தி நேரத்திலே, விளக்கேற்றி வைத்து, ஓலைப்பாய்களை விரித்து, வியாபாரத்திறகு வெற்றிலை பாக்கு முதலான பண்டங்களைப் பரப்பிவைத்து தன்னந்தனியாக உட்கார்ந்திருந்தான்.



திருடனைப் பிடிப்பதற்காக கங்கணம் பூண்ட கோயிலவர்ம மகாராஜன் குதிரைமீதேறி முப்பது தலையாரிகளுடன் நகரம் முழுவதும் சுற்றிப் பார்த்துவிட்டு நகருக்குள் வெளியூர் திருடன் நுழைய முயலும் போதே

பிடித்துவிட வேண்டுமென்று எண்ணியவனும், எல்லைப்புறத்தை அடைந்தான். ஒருபுறம் தன்னந்தனியாக சிறு வெளிச்சம் ஒன்று தெரிவதைக்கண்டு முழுத் திருடனின் கடை இருக்குமிடத்தை வந்தடைந்தான். கடைக்காரனை நீ யாரென்று அரசன் கேட்கவே முழுத்திருடன் பயந்தவன்போல நடித்து "இந்த வழியாகத் திருடர்கள் வந்து இரவு நேரத்திலே நகரத்திற்குள் புகுந்து கொள்ளையடித்து விட்டுச் செல்வார்கள். அவர்களெல்லாம் என் கடையில்தான் வெற்றிலை பாக்கும், தின்பண்டங்களும் வாங்க இங்கு வருவார்கள். ஜகஜ்ஜாலனென ஒரு பயங்கரக் கள்வன் நேற்றிரவும் அதற்கு முந்திய இரவும் இங்கு வந்து ஏராளமாக என்னிடம் வாங்கித் தின்றுவிட்டுப் போனான். எனக்கு நல்ல வியாபாரம் நடந்தது!" என்றான்.

உடனே அரசன் அக்கடைக்காரன் உதவியால் சுலபமாக ஜகஜ்ஜாலத் திருடனைப் பிடித்துவிடலாம் என்றெண்ணி, "ஐயா கடைக்காரரே! உம்மால் ஒரு மாபெரும் காரியமாகவேண்டும். இரண்டு நாட்களாக ஏமாற்றி தப்பிச் சென்ற ஒரு மாயக் கள்ளனை இன்றிரவு நானே நேரில் பிடிக்கக் கிளம்பி யிருக்கிறேன். அதற்கு நீர் உதவி புரிந்தால் உமக்கு வேண்டிய பொன்னும் பொருளும் சில கிராமங்களும் இனாமாகத் தருகிறேன். திருடன் வந்ததும் தெரிவித்தால் பிடித்துக் கொள்கிறோம்!" என்றான்.

அதற்குக் கடைவியாபாரிபோல் நடித்த முழுத்திருடன், "அது சரி! ஆனால் இப்படி நீங்கள் இந்தக் கோலத்திலிருந்தால், வேற்றாள் இருக்கிறதென்று இங்கே அத்திருடன் வரமாட்டானே? அதனால் நான் சொல்கிற யோசனைப்படி நடந்தால்தான் அத்திருடனை நீங்கள் பிடிக்க முடியும்! தலையாரிகளையும் பரிவாரங்களையெல்லாம் மூன்றாகப் பிரித்து திருடன் வரும் வழியை விட்டுவிட்டு வேறுபக்கங்களில் தலைமறைவாகப் பதுக்கி வையுங்கள். நீங்கள் மாத்திரம் என்னிடம் தனியாக இருந்தால் போதும்!" என்றான்.

அவ்வாறே அரசனும் தன்னுடன் வந்த பரிவாரங்களை மூன்றாகப் பிரித்து மூன்று திக்குகளிலும் மறைந்திருக்கும்படி அனுப்பினான். சிறிது நேரமாயிற்று. "வியாபாரி முன்னும் பின்னும் விழித்தவனாக "நீர் அரசகோலத்திலிருக்கும்போது அந்தத் திருடன் வருவானா?" என்றான். அரசனும் தன் நவரத்னக் கிரீடம், ராஜஉடை, வைரவாள், நவமணி ஆபரணங்கள் முதலானவற்றைக் கழற்றி வியாபாரியிடம் மூட்டையாகக் கட்டிக் கொடுத்துவிட்டு சாதாரண உடையை மட்டும் அணிந்திருந்தான். இன்னும் சிறிது நேரம் சென்றது.

என் அருகில் வேற்றுள் இருப்பதைக்கண்டால் அந்தத் திருடன் சந்தேகப்பட்டு இங்கே தலைகாட்டாமல் திரும்பிப் போய்விடுவான். அதனால் நீங்களும் தலைமறைவாக இருக்கவேண்டும்; என் கையருகே தயாராகவுமிருக்க வேண்டும். அதற்கு ஒரே உபாயந்தான் உண்டு. சாமான்கள் கட்டிவைக்கும் இந்தக் கோணிப்பைக்குள் புகுந்து நீங்கள் ஒளிந்து கொண்டிருங்கள்! திருடன் வந்ததும் சரக்கெடுக்கும் பாவனையாக கோணிப்பையின் கட்டை அவிழ்த்துவிடுகிறேன். நீங்கள் உடனே வெளிப்பட்டு பாய்ந்து அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள். அந்தச் சப்தம் கேட்டு வெகு தொலைவில் பதுங்கியிருக்கும் உமதாட்கள் வந்து திருடனைப் பிடித்துக் கொண்டு போகலாம்" என்றான்.

அதுவே சிறந்த யுக்தியென்று மகாராஜனும் நம்பி அவ்வாறே கோணிப்பைக்குள் புகுந்து மறைந்து கொண்டான். உடனே வியாபாரியாக நடித்த முழுத்திருடன் கோணிப்பையின் வாயை கயிற்றால் இறுகக் கட்டிப்போட்டு அரசனுடைய ஆடையாபரணங்களையெல்லாம் மூட்டையாகக் கட்டிக்கொண்டு தண்ணீர் தொட்டியை எடுத்து கோணிப்பையின் மீது கவிழ்த்து மூடிவிட்டு, விளக்குத் திரியை அணைத்து எங்கும் இருட்டாக்கி விட்டு, அந்த இருளில் கம்பி நீட்டிவிட்டான். விளக்கு அணைந்து விட்டதைக் கண்டு திருடன் வந்துவிட்டானென்று அரசனின் பரிவாரங்களெல்லாம் ஓடிவந்து கும்மிருட்டில் ஒருவரை ஒருவர் திருடரென எண்ணி அடித்துத் தாக்கி உதைத்துப் புரண்டு அமர்க்களம் செய்தார்கள். அந்தக் கலாட்டாவில் தண்ணீர் ஜாடி இடம்புரண்டு அதனடியில் கிடந்த கோணிப்பையும் உருண்டு புரண்டு எல்லோர் காலடிகளிலும் மிதிபட்டது.

கடைசியாக காவற்படையினர் அமைதியுற்று மூட்டையாக உருளும் அந்தக் கோணிப்பையை அடித்து உதைத்து நசுக்கி சோதித்துப் பார்த்தார்கள். அதற்கு ஒரு மனித உருவம் நெளிவதாக நிச்சயித்து இறுதியில் அந்தக் கோணிப்பையின் கட்டை அவிழ்த்துப் பார்க்கையில் அதற்குள் தங்கள் மகாராஜா மூச்சுமுடங்கி கிடப்பதை கண்டு திடுக்கிட்டார்கள். மன்னவனோ உடம்பெங்கும் வலிவேதனை ஒருபுறம், அவமானம் ஒருபுறம் பிய்த்துப் பிடுங்க தலைகுனிந்து தன் அரண்மனை சென்றான். அப்போது முழுத்திருடனோ இரவோடு இரவாக தன்னூர் வந்து மகாராஜாவின் ஆடையாபரணங்கள் அடங்கியுள்ள கனமான மூட்டையை தன் தகப்பனிடம் அவிழ்த்துக் காட்டினான். அதைக் கண்டு பிரமித்த பக்காத்திருடன் "அட களவாணிப்பயல் மகனே!" என்று தன் புதல்வனைப் பாராட்டினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த மேலாடை விக்கிரமாதித்த பூபதியை நோக்கி "கதை கேட்ட பூமானே!

இக்கதையில் வரும் மாதவிபுரத்து பக்காத்திருடனின் நான்கு குமாராகளும் சமர்த்தர்களா? அல்லது குந்தள நகரத்து கோயிலவர்மராஜன், மந்திரி, தலையாரி, ஜவுளி வியாபாரி, நாவிதன் முதலானவர்கள் சமர்த்தர்களா?" என்று கேட்டது. அதற்கு விக்கிரமாதித்தன் சட்டென்று "குந்தள நகரத்து கோயிலவர்ம மகாராஜனைச் சேர்ந்தவர்கள்தான் சமர்த்தர்கள்" என்றான்.

அதைக் கேட்டதும் பேசாமடந்தை சட்டென்று "இல்லவே இல்லை" என்று தன்னை மறந்து கூவியவளாய் "கதையின் சாரம் தெரியாமல் விடைகூறுகிறீரே, நீரென்ன விழித்திருக்கிறீரா தூங்குகிறீரா? மகாராஜா முதலானவர்களை ஏமாற்றி அவமானப் படுத்திய பக்காத் திருடனின் குமாரர்களல்லவோ மிகுந்த சமர்த்தர்கள்!" என்றாள்.

"ஆமாம், நீ சொல்லிய விடைதான் சரி! அவசரக்காரருக்குப் புத்தி மட்டு என்று உணராமல் நான் வாயையே திறந்திருக்கக் கூடாது!" என்ற விக்கிரமாதித்தன் கலகலவென்று நகைத்து "பேசாமடந்தையே! மூன்றாவது தடவையும் நீ வாய்திறந்து பேசிவிட்டாய். பொழுதோ இன்னும் விடியவில்லை. இனியென்ன தடை? மிச்சமாயிருக்கும் இரவையாவது இன்பமாகக் கழிப்போம்!" என்றான்.

பேசாமடந்தைக்குத் தூக்கிவாரிப்போட்டது. தோற்றுப் போனோமே என்று வெட்கித் தலைகுனிந்து விம்மலானாள். அப்போது மேலாடை "பூமானே! நீர் பூவையாளையடைய இன்னு மென்ன தயக்கம்? நீர் புவி முழுதும் போற்றும் விக்கிரமாதித்த பூபதியாகையால் திரைச்சீலையும், ரவிக்கையும், நானும் புதிர் கதைகள் சொன்னோம். பொய்யான விடைகளை வேண்டுமென்றே நீரும் புகன்று, பொழுது விடிவதற்குள் பேசாமடந்தையை மூன்று தடவை பேச வைத்துவிட்டீர். பெண்புத்தி பின்புத்தி என்பதும் சரியாகப் போயிற்று. நிபந்தனைகள் அனைத்திலும் நீர் வென்றுவிட்டீராகையால் இனி நீர் பேசாமடந்தையைத் தடையின்றி அடைந்து ஆனந்தங்கொள்ளலாம்!" என்று சொல்லியது.

பட்டுப்போன பசுங்கொடிபோல பேசாமடந்தைக்கு ஒருபுறம் துக்கம் உண்டானாலும் தன்னை வெற்றிக்கொண்டவன் விக்கிரமாதித்த ராஜன் என்பதை உணர்ந்தபோது இன்னொரு புறம் குதூகலமும் துளிர்த்தது. அவளுடைய பஞ்சணையை நோக்கி விக்கிரமாதித்தன் எழுந்து அவளருகில் உரிமையுடன் அமர்ந்து, "பெண்ணோவியமே! நீ தோற்றுவிட்டதால் இப்பொழுதே எனக்கு அடிமையாகிவிட்டாய்!" என்று சொல்லிய வண்ணம் ஆசையுடன் அவளை அள்ளியணைக்க

முயன்றான். அவள் வெட்கி விலகி, "சக்கிரவர்த்திகளே! நான் தங்களுக்கு அடிமையாகிவிட்டாலும், முறைப்படி என்னை மணந்து தர்மபத்தினியாக்கிக்கொண்ட பிறகுதான் என்னைத் தீண்டவேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்!" என்றாள். அதன்மேல் ஒரு சுபமுகூர்த்தத்தில் விக்கிரமாதித்தனுக்கும், பேசாமடந்தைக்கும் முறைப்படி திருமணம் நடந்தது. சில இரவுகள் அவளுடைய அந்தப்புரத்தில் ஆனந்தமாகக் கழித்தார்கள்.

பின்னர் விக்கிரமாதித்தன் பேசாமடந்தையையும், பட்டியையும், வேதாளத்தையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டு வரும் வழியிலே அவன் தான் அணிந்திருந்த ஆடையாபரணங்களையெல்லாம் வேதாளத்திடம் கொடுத்துவிட்டு பண்டாரக் கிழவன்போல் வடிவெடுத்து முன்பு வீமாபுரிச் சத்திரத்தில் வைத்திருந்த காலாட்களையெல்லாம் அழைத்துக் கொண்டு அழகாபுரிக்கு அருகேயுள்ள ஓர் ஆலவிருக்ஷத்தினடியில் பல்லக்கை விட்டிறங்கி அரசு, அத்தி முதலான மரங்களின் கிளைகளையெல்லாம் பொறுக்கி வரச் செய்து அவற்றை ஒரு விறகுக் குவியலாகக் கட்டச் சொன்னான். பிறகு மந்திரியை மட்டும் பல்லக்கில் உட்கார வைத்து விறகுக் கட்டைத் தன் தோள்மீது சுமந்து கொண்டு பேசாமடந்தையைத் தன் பின்னால் நடந்துவரச் சொன்னான்.

"இதெல்லாம் என்ன, பிராணபதி?" என்று வியப்புடன் கேட்டாள் பேசாமடந்தை.

"பெண்ணே! உன்னையழைத்துக் கொண்டு இவ்வழகாபுரி நகரம் சேரும் போது ஓமம் வளர்த்து ஒரு யாகம் நடத்துவதாக எனக்கு வைராக்யம் உண்டு. அதற்குரிய சமித்துக்கள்தான் இந்த விறகுக் கட்டு!" என்றான்.

"இந்த யாகக் காரியங்களில் தர்மப் பத்தினியான எனக்கும் பங்குண்டல்லவா? அடியாள் சும்மா வரும்போது தாங்கள் விறகுக் கட்டு சுமந்து வரலாமா?" என்று பேசாமடந்தை அவனிடமிருந்து விறகுகட்டை வாங்கி தன் தலைமீது சுமந்து கொண்டு அவன் பின்னால் நடக்கலானாள்.

இந்தக் கோலத்துடன் அவர்கள் நடந்து அழகாபுரி நகரத்திற்குள் நுழைந்து, அவ்வூர் அரசனும் அரண்மனை தாசிகளான தனபதியும், குணபதியும் கொலுவீற்றிருக்கும் அரசவை நின்றதும், அங்கிருந்த அனைவரும் வியப்புற்றார்கள்.

பண்டாரக் கிழவனாக வேடம் புனைந்திருந்த விக்கிரமாதித்தனின் தீரத்தை அழகாபுரி அரசன் வெகுவாகப்

பாராட்டி விட்டு. தனிமையில் அரண்மனை தாசிகள் இருவரையும் கூப்பிட்டு, "தனபதி! நீ பந்தயத்தில் தோற்று விட்டாய்! குணபதி சொன்னபடி அவளுடைய நாயகனை ஆண்டி பண்டாரம் பேசாமடந்தையை அடிமைபடுத்தி அவள் தலையில் விறகுக் கட்டை சுமந்துவரச் செய்து விட்டான்! அதனால் குணபதிக்கு உன் சொத்தையெல்லாம் கொடுத்து அவளுக்கு நீ அடிமையாக வேண்டும்!" என்று கட்டளையிட்டான்.

"ஐயோ! ஆண்டிக் கிழவனை ஆசைநாயகனாக வைத்திருக்கும் அற்ப ஸ்திரீக்கு நான் அடிமையாகும்படி நேர்ந்து விட்டதே!" என்று தனபதி புலம்பலானாள்.

அப்போது குணபதி அவளைத் தேற்றி, "நான் ஜெயித்ததே போதும்! நீ எனக்கு அடிமையாக வேண்டாம்! உன் சொத்தும் எனக்கு வேண்டாம்! என் ஆஸ்தியெல்லாம் என் பண்டார ஞானி ஒருவராக இருந்தாலே போதும்!" என்றாள். பின்னர் அவள் தன் மாளிகைக்கு வந்து அரண்மனையில் நடந்தது அனைத்தையும் தன் நாயகனிடம் கூறினாள். பண்டாரக் கிழவன் கலகலவென்று நகைத்து தன் மந்திரியான பட்டியை நோக்கி, "என்னய்யா? இன்றோடு காடாறு மாதம் தீர்ந்து நாடாறு மாதம் புறப்படவேண்டிய நாளாகி விட்டதல்லவா?" என்று சொல்லிய வண்ணம் தன் ஆண்டி வேஷத்தைக் கலைத்துவிட்டு விக்கிரமாதித்த மகாராஜனாக நின்றான்.

அதைக் கண்டு குணபதி பிரமித்து அவன் அடி வணங்கி, "ஆஹா! இத்தகைய சுந்தரரூபத்தை அடியாளுக்குக் காட்டாமல் எப்படித்தான் இத்தனை நாளும் இருந்தீரோ?" என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள்.

பின்னர் அழகாபுரி மன்னர் முதலான எல்லோரிடமும் விக்கிரமாதித்தன் விடைபெற்றுக் கொண்டு பட்டி, குணபதி, பேசாமடந்தை ஆகியோருடன் வேதாளத்தின் மீது ஏறிக் கொண்டு உஜ்ஜயினி பட்டணத்தை நோக்கி ஆடம்பர பரிவாரங்களுடன் வந்து கொண்டிருந்தான். வரும் வழியில் இரண்டு வேதியர்கள் எதிர்ப்பட்டு, "இராஜாதி ராஜ ராஜாக்கள் நாயகரே! புராதன நெறிப்படி நாங்கள் துறவறம் புகும் முன் சிறிது காலம் இல்லறம் நடத்த வேண்டுவது எங்கள் தர்மமா யிருக்கிறது! அதற்கு தாங்கள் இரு மங்கையரையும் எங்களுக்குக் கொடுக்க வேண்டும்!" என்றார்கள்.

அது போலவே சட்டென்று விக்கிரமாதித்தன் கெண்டித் தீர்த்தம் தெளித்து தாரை வார்த்துக் கொடுத்து விட்டான். ஆனால் இரு மங்கையரும் வேதியர்களுடன் செல்ல மறுக்கவே,

தானம் கொடுத்த பொருளை மறுபடி கிரயம் கொடுத்து வாங்கலாம் என்ற தர்மப்படி வேதியர் இருவருக்கும் நபருக்கு பதினாயிரம் பொன்னும், கிராமம் ஒன்றையும் இனாமாகக் கொடுத்தும் மங்கையரை மீட்டுக் கொண்டு உஜ்ஜயினி பட்டணம் வந்து நாடாறு மாதம் அரசாளத் தொடங்கினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த மந்திர மனோன்மணிப் பதுமை, "கேட்டீரா, போஜ ராஜரே! இதுபோல் எங்கள் விக்கிர மாதித்த பூபதியின் வல்லமையும் வள்ளல் தன்மையும் உனக்கு இருந்தாலன்றோ, இந்த அதிசய சிம்மாசனத்திலேறி நீர் அரசாளத் தொடங்கலாம்!" என்றது.

அது சமயம் பொழுதும் இருட்டி விட்டதால் போஜராஜன் மௌனமாக சிம்மாசனப் படிகளிலிருந்து கீழிறங்கி தன் அந்தப்புரத்தை நோக்கிச் சென்று விட்டான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் 29-வது படிக்குக் காவலான சமுத்திரமுகி என்னும் பதுமை பின்வருமாறு கதையைக் கூறியதாகக் காணப்படுகிறது.)

## புலவனின் புகழ்ச்சி

ஒரு சமயம் விக்கிரமாதித்த மன்னன் சபையில் அமர்ந் திருக்கும் போது புலவன் ஒருவன் வந்து சேர்ந்தான்.

"மன்னர் மன்னவரே! தெய்வீகத் தன்மை பொருந்திய நதியான கங்கை சலசலக்கும் அலைகளோடு ஓடிக்கொண்டிருக்கும் வரையிலும், வைரம், நீலம் முதலிய விலையுயர்ந்த ஸ்படிக மணிகளால் நிறைந்த மகாமேரு பர்வதம் நிலைத்திருக்கும் வரையிலும், நீர் புத்திர பௌத்திரர்களுடன் ஆட்சி புரிந்து வாழ்வீராக!" என்று புலவன் ஆசிர்வதித்துப் புகழ்ந்தான்.

பிறகு, அவன் தொடர்ந்து, "அரசே! உஷ்ணத்தினால் வருத்தப்பட்ட மயில் மேகத்திடம் சென்று தாகத்தைத் தணிக்கத் தண்ணீரைக் கொட்டும்படி கேட்கிறது. அவ்விதமே நான் உம்மை நாடி வந்துள்ளேன். நான் வசிப்பது இமயமலைச் சாரலி லாகும். அவ்விடத்திலும் தம்முடைய புகழ் பரவியுள்ளது. அதைக் கேள்விப்பட்டே நான் புறப்பட்டு வந்தேன். ஏழு கடல்களோடு கூடிய இப்பூவுலகம் உம் கீர்த்தியால் அலங்கரிக்கப் பட்டிருக்கிறது. வெண்மையான கற்பூரச் செடி, வெள்ளைத் தாமரை, மல்லிகை அரும்பு, தெய்வத்தன்மை வாய்ந்த நதியின் அலைகள், தாழை மரம் அல்லது அழகிய மங்கையர்களின்

கள்ளப் பார்வை. தோஷங்களை அகற்றுபவரான சிவபெருமான் சூடியிருக்கும் சந்திரனின் குளிர்ந்த கிரணங்கள் ஆகியவற்றால் அடையும் ஒளியை விட உம் கீர்த்தியால் ஏழு கடல்களால் சூழப்பட்ட இப்பூவுலகம் அதிகப் பிரகாசமடைகிறது. அரசே! உம்மை அண்டியவர்களுக்கு நீர் கேட்பதை கொடுக்கும் கற்பக விருக்ஷம். இன்று நான் என் வறுமையிலிருந்து விடுபெற்றேன். இந்தச் சமயத்தில் மற்றொரு அரசனைப் பற்றி நான் சொல்லத்தான் வேண்டும். இந்த தேசத்திலே எவ்விதம் மக்களைத் தம்முடைய குடும்பத்தில் ஒருவராக எண்ணி பரிபாலித்து வருகிறீரோ அவ்விதமே வடநாட்டில் நம்பீரம் என்னும் நகரத்தை ஆண்டுவரும் அரசனும் தன் குடிகளைப் பரிபாலித்து வருகிறான். இமாலயத்தின் ஈசான்ய பாகத்திலே இருக்கும் அந்நகரத்தின் அரசன் பெயர் தனேச்வரன் என்பது. அவன் தன் குடிகளிடையேயிருந்த வறுமையை ஒழித்து அவர்களைச் செல்வந்தர்களாக்கினான். ஒரு சமயம் தனேச்வரன் மாசி மாதம் வளர்பிறை ஏழாம் நாள் வசந்த உற்சவத்தைக் கொண்டாடினான். அந்தச் சமயம் வெளிநாடுகளிலிருந்தெல்லாம் யாசகர்கள் வந்து கூடினர். அரசன் தன் பொக்கிஷத்திலிருந்து பதினெட்டு கோடி பொற் குவியலைத் தானமாகக் கொடுத்தான். கொடையில் அவ்வளவு தாராளமான மனது அவனுக்கு. அப்படியிருந்த போதிலும் எனக்கு உம்மிடம்தான் மதிப்பு அதிகம். உமக்கு அவன் ஒருபோதும் ஈடாக முடியாது!" என்றான்.

புலவருடைய வார்த்தைகளால் சந்தோஷமடைந்த விக்கிரமாதித்தன் தன் தளதிகாரியை அழைத்தான். "தளதிகாரி! இந்தப் புலவனை பொக்கிஷத்திற்கு அழைத்துச் செல். கதவைத் திறந்து தனித் தனியாக குவித்து வைத்திருக்கும் வைரம், வைடூரியம் போன்ற நவரத்தினங்களைக் காட்டு. இவனுக்கு வேண்டியவற்றை தூக்கிச் செல்லும் அளவு எடுத்துக் கொள்ளட்டும்" என்று உத்தரவிட்டான்.

தளதிகாரியும் புலவனை அழைத்துக் கொண்டு பொக்கிஷ அறைக்குச் சென்றான். அங்கு தனித்தனியே குவித்து வைக்கப்பட்டிருந்த நவரத்தினங்களைக் கண்ட புலவன் திகைத்து விட்டான். முன்பின் தெரியாத புலவன் ஒருவனைப் பொக்கிஷ அறைக்குள் அழைத்துச் சென்று, "இவைகளிலிருந்து உனக்குத் தேவைப்பட்ட அளவு எடுத்துக் கொள்" என்று சொல்லும் தாராள மனதுடைய அரசனும் இருக்கிறானே என்று வியந்தான். தனக்குத் தேவையானவற்றை எடுத்துக் கொண்டு புலவன் அரசனிடம் திரும்பி வந்தான்.

"அரசே! உம் கருணையினால் நான் குபேரனாகி விட்டேன். ஏனெனில் குபேரனுடைய நவநிதி செல்வங்களும் என்னிட மிருக்கின்றன. பிரம்மன் போன்ற தெய்வங்கூட உம்முடைய தாராள மனப்பான்மை பெற்று ஈடாகமாட்டார்கள். அவர்கள் களங்கமுடையவர்களாயிருக்கிறார்கள். ஆனால் நீரோ சிறிதும் அப்பழுக்கற்றவர். ஆகவே, அவர்கள் உம்முடன் ஒப்பிடத் தகுந்தவர்கள் அல்ல.

"எப்படியெனில், சிவனோ தலையில் களங்கமுடையவனா யிருக்கிறான்; (அதாவது அரைவட்ட வடிவமுள்ள சந்திரனை உடையவனாயிருக்கிறான்) கிருஷ்ணவதாரமெடுத்த மகா விஷ்ணுவோ மாவீரன் கம்சனுடைய பயத்தால் களங்க முடையவராயிருக்கிறார்; பிரம்மனோ ஈனமான பிறப்பை உடையவன். (மகாவிஷ்ணுவின் நாபிக் கமலத்தில் பிறந்தான்) இவர்களை உம்முடன் எப்படி ஒப்பிடுவது? மேலும், பிரம்மன் வலியினால் வேதனைப்படுகிறான். (அறிவு நிறைந்ததால்), மகாவிஷ்ணு வராக அவதாரமெடுத்து பூமியைக் குடைந்ததால் இரணமான உதட்டை உடையவராயிருக்கிறார்! சிவபெருமானோ ஆலகால விஷத்தை அருந்தி, கண்டத்திலே களங்கத்தை உடையவராயிருக்கிறான். இவர்களுடன் உம்மை எவ்விதம் ஒப்பிடுவது?... அரசே! நீரே சொல்லும்" என்று பலவாறாகப் புலவன் அரசனைப் புகழ்ந்தான். கடைசியில் "என்றும் சிரஞ்சீவியாக வாழ்ந்திரு" என்று ஆசிர்வதித்து விட்டு சென்றான்.

கதையை முடித்த சந்திரமுகி பதுமை, "போஜமகாராஜனே! எங்கள் விக்கிரமாதித்த மன்னனுக்கு ஈடாக யாரைக் குறிப்பிடுவீர்?" என்று கேட்டது.

அப்போது சூரியஸ்தனமாகிவிடவே போஜராஜன் பதில் சொல்லாமல் வந்தவழியே திரும்பிச் சென்றான்.

---

## 6-வது சிங்கார மோகனவல்லிப் பதுமை சொல்லிய தன அமராவதி கதை

---

ஆறாம்நாட் காலையில் போஜ மகாராஜன் மந்திரி பிரதானிகள் சூழ, பகைமன்னர் தாழ கொலுமண்டபத்திற்கு வந்து சிங்காதனத்தில் ஏறி வீற்றிருக்க விரும்பியவனாய் அதன் ஐந்து படிகளைக் கடந்து ஆறாவது படியில் காலெடுத்து வைக்க முயன்றான். அப்போது அதில் காவலிருந்த சிங்கார மோகன வல்லிப் பதுமை கைகொட்டி கலகலவெனச் சிரித்துத் தடுத்து

நிறுத்தி, விக்கிரமாதித்தனைப் பற்றிய புதிய கதையொன்று கூறத் தொடங்கியது.

விக்கிரமாதித்த பூபதி நீதி நெறி தவறாமல் அரசாட்சி செய்து வரும் நாளையில் காடாறு மாதம் புறப்பட்டுச் செல்லும் சமயம் வந்தது. நாட்டு நிர்வாகத்தை நல்லமைச்சர்களிடம் ஒப்படைத்துவிட்டு மதிமந்திரி பட்டியையும் வேதாளத்தையும் அழைத்துக் கொண்டு மாறுவேஷம் தரித்து விக்கிரமாதித்தன் புறப்பட்டான். பல தேசங்களையும் தீவாந்தரங்களையும் சுற்றிக் கொண்டு வருகையில், இருவரும் சோலைகளோடு கூடிய அழகிய தடாகமொன்றைக் கண்டார்கள். அதில் இறங்கி இருவரும் நீர் அருந்தி தாகத்தைத் தீர்த்துக் கொண்டு, தோப்பிலுள்ள ஒரு குளிர்ந்த மரநிழலுக்கு வந்தார்கள். விக்கிரமாதித்தன் களைப்பு நீங்க, பட்டியின் மடியில் தலைவைத்துப் படுத்துறங்க முயன்றான். அப்போது கன்னிகையொருத்தி அநேகம் தோழிகளுடன் பல்லக்கில் வந்திறங்கி அத்தடாகத்தில் நீராடினாள். பட்டியின் மடியில் சிரம் வைத்துப் படுத்திருக்கும் விக்கிரமாதித்தனைக் கண்ட அந்த மங்கை, அவனுடைய கட்டுடலின் பொலிவையும், பேரழகையும் உற்று நோக்கி மனதைப் பறிகொடுத்தவளாய் தன்னுணர்வை இழந்தாள். குளித்துவிட்டு அங்கிருந்து தோழியர்களோடு புறப்படும்போது ஆணழகன் மீது பதிந்திருந்த பார்வையை அகற்றமாட்டாதவளாய் அவனை எப்படியும் தன் ஊருக்கு வரவழைக்க வேண்டுமென்று விருப்பங்கொண்டு அவனை நோக்கி மோகப் புன்னகை செய்தாள். பிறகு ஏதோ ஜாடை காட்டும் விதமாக அங்குள்ள ஒரு வாடாமல்லிப் புஷ்பத்தைப் பறித்து தனது நெஞ்சோடு அழுத்திக் கொண்டு பிறகு அதை மேலே வானத்தை நோக்கி உயர்த்தி காட்டிவிட்டுத் தன் காலின் மேல் போட்டுக் கொண்டாள். பின்பு மணலைக் குவித்து அக்குவியலை நோக்கி அதன்மேல் ஓர் உடைந்த சட்டியின் ஓட்டைக் கவிழ்த்து வைத்து அதன்மேல் தன் கூந்தலி ருந்து கேசம் ஒன்றை அறுத்துச் சுருளாகச் சுருட்டி வைத்தாள். மன்னனை நோக்கி மீண்டும் புன்னகை வலைவீசிக் கண்ணால் சைகை காட்டிவிட்டுத் தன் தோழியர்கள் புடைசூழ புறப்பட்டுப் போய்விட்டாள்.

அக்கன்னிகையைக் கண்ட விக்கிரமாதித்தன் அவள் அழகில் மயங்கியவனாய் மையல் கொண்டு, ஆரம்பமுதல் அவள் பல்லக்கில் ஏறிச்சென்று பார்வையிலிருந்து மறையும் வரை அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவளும் தன்னிடம் மோகமுற்று பிறர் அறியாத வகையில் தனக்கு ஏதோ ஜாடை காண்பித்துச் செல்கிறாள் என்பதை உணர்ந்த விக்கிரமாதித்தன் மதிமந்திரியான பட்டியை நோக்கி, "அந்தக்

கன்னிகை என் நெஞ்சத்தைக் கவர்ந்து சென்று விட்டாள். அவள் யாரென்பதையும் அவளை அடையும் வழியும் வகையையும் நீர்தான் சொல்ல வேண்டும்!" என்றான். அவள் ஜாடையாக விட்டுச் சென்ற அடையாளப் பொருள்களை பட்டி சோதித்துப் பார்த்து விட்டு, "அரசே! அவள் அந்த மல்லிகைப் புஷ்பத்தை எடுத்துத் தன் நெஞ்சில் ஒத்தி மேலே வானை நோக்கி உயர்த்தியதிலிருந்து, புஷ்பவதியான தன்னுடைய பெயர் தன அமராவதியென குறிப்பாக உணர்த்தியிருக்கிறாள். அந்தப் புஷ்பத்தைத் தன் காலின் மீது போட்டதால் தான் காலூன்றி வசிப்பது காலிங்கபுரம் என்று உணர்த்தியிருக்கிறாள். பிறகு தன் கூந்தலிலுள்ள ஒரு கேசத்திற்குப் பதிலாக மயிலிறகு ஒன்றை எடுத்துக் காட்டினாள் என்றிருந்தால் தந்தையின் பெயர் மயூரநாத மாணிக்கஞ்செட்டியாராகும்; ஆனால் அவள் கேசம் ஒன்றை எடுத்துச் சுருட்டி மண்மீது வைத்ததால் இந்த மண்பூமியில் தன்னைப் பெற்ற தன் தந்தையின் பெயர் கேச (மயிர்) மாணிக்கஞ்செட்டியார் என்றும் தெரிவித்தாள். மணலைக்குவித்து அதன்மீது ஓட்டை வைத்ததன் மூலம் அவளுடைய மாளிகைக்கு எதிரே மண் சுவரின்மீது ஓடு போட்ட வீட்டின் அடையாளமிருக்கிறது என்பதைக் குறிப்பிட்டாள். தங்களைப் பார்த்து அவள் கண் ஜாடை காட்டிச் சென்றது தன் பின்னே தங்களை அங்கு வரும்படி அழைத்ததைக் குறிக்கும்!" என்றான்.

"பட்டி! என்னால் அவளை மறக்கவே முடியவில்லை. இப்போதே அவளைப் பின் தொடர்ந்து காலிங்கபுரம் செல்வோம்!" என்றான் விக்கிரமாதித்தன். உடனே இருவரும் தன அமராவதி சென்ற வழியைப் பின்பற்றி சென்று காலிங்க புரத்தை அடைந்ததும், தங்களின் ஆடையாபரணங்களைக் கழற்றி வேதாளத்திடம் அடக்கம் கொடுத்து விட்டு, இருவரும் கிழ அந்தண யாத்ரீகர்கள் போல மாறுவேடம் பூண்டு நகரின் கடைவீதிக்குள் நுழைந்து கேச மாணிக்கஞ்செட்டியாரின் கடைக்குள் வந்தார்கள். அவர்களைக் கண்ட செட்டியார், மகாப் பெரியவர்களாயிருக்கிறார்களே என பெருமதிப்புடன் வணங்கி, "ஐயா! தங்களுக்கு எந்தத் தேசம்? என்ன வேலையாக இங்கு வந்தீர்களோ?" என்று வினவினார். அதற்கு அவ்விருவரும் "வள்ளலே! நாங்கள் வடதேசத்து யாத்ரீகர்கள். புனிதமான தென்தேசத்தை தரிசித்து, கன்னியாகுமரியில் தீர்த்தமாடி, இராமேஸ்வரத்தில் வரசித்தி பெறவேண்டுமென நாங்கள் அனேகர் குடும்பத்தோடு புறப்பட்டு வந்தோம். வரும் வழியில் நாங்கள் குடும்பத்தோடு ஒரு குளத்திலிறங்கிக் குளித்துக் கொண்டிருந்தோம். அப்போது யாத்ரீகர் கூட்டம் அதிகமாக

இருந்ததால் எங்கள் பெண்கள் எதிர்பாராதவிதமாக எங்களைப் பிரிந்துவிட்டார்கள். எங்கள் குடும்பத்தினரில் மற்றவர் சென்ற வழியை எங்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. இவ்வூருக்கு வந்து மூன்று நாளாய் அன்ன ஆகாரமின்றி கவலையுடன் அலையும் எங்களை உபசரிக்கக்கூடிய தரும சிந்தையுள்ள புண்ணியவான் யாராவது இருக்கிறார்களாவென விசாரிக்கையில், அனைவரும் எங்களை தங்களிடம் செல்லும்படி சொன்னார்கள். இப்போது எங்களுக்கு அளவிலாத பசி மேலீட்டிருப்பதால் நாங்கள் சமைத்துண்பதற்குத் தேவையான அரிசி, பருப்பு முதலான பண்டங்களை உமது வீட்டிலிருந்து தரும்படி ஏற்பாடு செய்யவேண்டும்!'' என்றார்கள் வேஷதாரிகளான யாத்ரீகர்கள். அதைக்கேட்ட மாணிக்கஞ் செட்டியார் அகமகிழ்ந்து தம் கடை சிப்பந்தியைக் கூப்பிட்டு அந்தணர்களிருவரையும் தம் வீட்டிற்கு கூப்பிட்டுச் சென்று ஆகாரத்திற்குத் தேவையான அமுதுபடிகள் கொடுத்து உபசரிக்கும்படி உத்தரவிட்டார்.

மாணிக்கஞ்செட்டியாரின் வீட்டில் அவருடைய பெண் தன அமராவதியும், அவளுடைய தாயாரும், வேலைக்காரிகளும் வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். அப்போது வேலைக்காரன் அழைத்து வந்த இரு யாத்ரீகர்களையும் கண்ட தனஅமராவதி தடாகக் கரையில் தான் கண்டு மோகங்கொண்ட மன்மதனும், அவன் நண்பனும் தான் என்பதைப் புரிந்து கொண்டாள். தன் தந்தையாரின் உத்தரவுப்படி அவர்களுக்குச் சமையல் செய்து சாப்பிட உப்பு, புளி, அரிசி, பருப்பு முதலியவற்றை ஓர் ஓலைப் பெட்டியில் வைத்து, அதோடு கரும்புக்கிடையில் இரண்டு கருணை தரித்து அதற்குள் வைத்து அந்த அந்தணர்களுக்கு கொண்டுவந்து ஏதோ கண் ஜாடையுடன் கொடுத்தாள். அவற்றைப் பெற்றுக்கொண்ட இரு வேஷதாரிகளும் வெளியில் வந்து தங்கள் சுயரூபம் தரித்துக் கொண்டு அந்த ஓலைப் பெட்டியைச் சோதனை செய்து பார்த்தார்கள். அதில் இரு கரும்புக்கரணையிருப்பதைக் கண்ட விக்கிரமாதித்தன் வியப்புற்று பட்டியை நோக்கி "இதென்ன அதிசயம்? இதில் இரண்டு கரும்புக்கரணை வைத்திருப்பது எதைக்குறிக்கும்?" என்றான். அதற்கு பட்டி பலமாகச் சிந்தித்து சிலரிடம் ஏதேதோ விசாரித்தறிந்து கொண்டுவந்து, "அரசே! தனஅமராவதிக்கு கரும்பிலினியாள் என்னும் அரண்மனைக்காரியிடம் அந்தரங்கச் சிநேக முண்டு. அந்த கரும்பிலினியாள் இந்நகரில் கணிகையர் உறையும் மாடத் தெருவிலிருக்கிறாள். அவளின் வீட்டிற்கு நம்மைச் செல்லும்படி இதன் மூலம் தனஅமராவதி அறிவித்திருக்கிறாள். அங்கு சென்றால் ஏதாவது வழி பிறக்கும்" என்றான்.

பட்டி இவ்விதம் சொன்னதும் இருவரும் புறப்பட்டுச் சென்று கரும்பிலினியாளைக் கண்டு தாங்கள் தன அமராவதியின் எண்ணப்படி வந்திருப்பதாகத் தெரிவித்தார்கள். உடனே அந்த நாட்டியக்காரி அளவிலாத மகிழ்ச்சிகொண்டு அவர்களை வரவேற்று ஹம்ஸதூளிகா மஞ்சத்தில் அமர்த்தி. அறுசுவை உணவளித்துத் தாம்பூலங்கொடுத்து உபசரித்து நின்ருள். விக்கிரமாதித்தன் அவளை நோக்கி, "பெண்ணே! உன்னுடைய ஆருயிர் தோழியான தனஅமராவதியின் வரலாற்றை சிறிது சொல்வாயாக!" என்று வினவ அவளும் சொல்லலானுள். "கவனமாகக் கேளுங்கள்! தனஅமராவதியின் தகப்பஞரான கேச மாணிக்கஞ் செட்டியார் மிகவும் கண்டிப்பான பேர்வழி. தமது பெண்ணை தம்முடைய தங்கையின் புத்திரனுக்கு ஐந்து வயதில் அறியாப் பருவத்தில் மணம் செய்து வைப்பதாகத் தீர்மானித்து நிச்சயதார்த்தமும் நடத்திவிட்டார். உரிய வயது வந்ததும் தனஅமராவதியின் அத்தைமகன் குலவழக்கப்படி வர்த்தகம் செய்யக் கப்பலில் ஏறி பிரயாணப்பட்டான். அந்தச்சமயம் தனஅமராவதி புஷ்பவதியாகவில்லை. அவளுடைய அத்தான் புறப்பட்டுச் சென்று ஐந்தாண்டு காலமாகிறது. இன்னும் அவன் திரும்பி வரவில்லை. அவன் வரும் வரை பெண் கன்னியாகவே ஏங்கிக் கிடக்கட்டும் என்று செட்டியாரும் தீர்மானமாயிருக்கிருர்!" என்ருள் கரும்பிலினியாள்.

இதைக் கேட்ட உடனே இருவரும் அங்கிருந்து புறப்பட்டு வெளியே வந்து. பட்டி வயதான ஒரு செட்டியாரைப் போலவும், விக்கிரமாதித்தன் ஒரு பருவப் பெண்ணைப் போலவும் வேடம் பூண்டு கடைவீதிக்குச் சென்று மாணிக்கஞ் செட்டியாரின் கடைக்குப் பக்கத்தில் சென்று அங்கிருந்த ஓர் ஆளிடம் "ஐயா! எங்கள் தன வைசிய குலத்தார் யாராவது இவ்விடத்தில் இருக்கிருர்களா?" என்று விசாரித்தார்கள். அந்த ஆள் மாணிக்கஞ்செட்டியாரைச் சுட்டிக்காண்பித்தான். செட்டியாரும் இவர்கள் நம்மினத்தவர்கள் போலிருக்கிருர்களே என்று எண்ணமிட்டவராய், "வாருங்கள், வாருங்கள்" என்று இரு வேஷதாரிகளையும் அழைத்து விஷயம் என்னவென்று விசாரித்தார். அதற்கு கிழவன் வடிவிலிருக்கும் பட்டி "ஐயா, செட்டியாரே! நாங்கள் இருப்பது பரமபுரம்; நாங்களும் உங்கள் வைசிய குலத்தவர்தான். எங்களூரில் பட்டினத்துச் செட்டியார் என்று எனக்குப் பெருமையான பெயரும் உண்டு. எவ்வளவோ சொத்திருந்தும் என் மனதில் எள்ளளவும் நிம்மதியில்லை. இந்தப் பெண் என்னுடைய புத்திரி. இவளைச் சிறுவயதில் என்னுடைய உடன் பிறந்தாளின் பிள்ளைக்குத் திருமணம் செய்து வைத்தேன்.

மாப்பிள்ளை இவள் புஷ்பவதியாகும் முன் வர்த்தகம் செய்யும் பொருட்டு தேசாந்திரம் சென்ருர். சென்ற கணவன் இதுவரை திரும்பிவரவில்லை. போன இடமும் தெரியவில்லை. இந்தப் பெண்ணே புஷ்பவதியாகி இரண்டு வருடங்களாகின்றன. புருஷனைப் பற்றி தகவல் கிடைக்காததால் இந்தப் பெண் ஓயாமல் புலம்புகிருள். தன் கணவனிடத்தில் கொண்டு போய் விடவேண்டுமென்று தொந்திரவு செய்கிருள். இல்லாவிடில் ஆறு குளம் எதிலாவது விழுந்து தற்கொலை செய்து கொள்வதாக அடம் பிடிக்கிருள். நானும் ஒவ்வொரு ஊராகத் தேடி அலைந்து கொண்டுதான் வருகிறேன். மாப்பிள்ளையைப் பற்றிய விவரம் ஏதும் தெரியவில்லை!" என்ருன்.

அப்போது மாணிக்கஞ்செட்டியார் பட்டியை நோக்கி, "உம்மைப்போலத்தான் எனக்கும் ஒரு பெண்ணிருக்கிருள். அவளையும் என் சகோதரியின் பிள்ளைக்குத்தான் விவாகம் செய்து வைக்க வேண்டுமென்று ஐந்து வயதிலே நிச்சய தார்த்தமும் நடத்திவிட்டேன். வர்த்தகம் செய்துவரத்தான் என் மாப்பிள்ளையும் சென்ருர். அவருந்தான் இன்னும் திரும்பவில்லை. அதற்காகப் பெண்ணையும் கூட்டிக் கொண்டு ஊர் ஊராய் தேடி அலையமுடியுமா? அத்தான் தாளுகத் திரும்பி வரும்வரை என் பெண் காத்திருக்க வேண்டியதுதான் என்று சொல்லி விட்டேன். சரி; வருந்தாதீர்கள். என் வீட்டிற்கு விருந்து சாப்பிட வாருங்கள்!" என்று கேச மாணிக்கஞ்செட்டியார், வேடதாரிகள் இருவரையும் அழைத்துச் சென்ருர். தமது வீட்டில் அவர்களுக்கு அறுசுவை உணவோடு விருந்து வைத்தார். யாவரும் விருந்துண்டு தாம்பூலம் தரித்துக் கொண்டிருக்கும் போது பட்டியாகிய போலி செட்டியார், "ஐயா! என் மருமகனைத் தேடி நான் புறப்பட்டுச் செல்கிறேன். நான் திரும்பி வரும்வரை இந்தப் பெண் தங்களிடம் அடைக்கலமா யிருக்கட்டும். அதுவரை இவளுக்காக ஆகும் செலவை நான் தருகிறேன்" என்ருன்.

"நிரம்ப சந்தோஷம்! என் பெண்ணிற்கும் உற்ற துணையாகவும், தோழியாகவும் இருப்பாள்! உடனிருக்கட்டுமே தாராளமாக! நீங்கள் கவலையில்லாமல் போய் வாருங்கள். ஆனால் உங்கள் பெண்ணை ஆதரிக்கும் செலவிற்காக ஒரு காசுகூட வாங்க மாட்டேன்!" என்று மாணிக்கஞ்செட்டியார் தைரியம் சொன்னர்.

பட்டியும் மனதில் மகிழ்ந்து தன் பெண்ணுக்குப் புத்திமதிகள் சொல்லும் பாவனையில் அங்கு பெண்வேடத்தில் விக்கிர மாதித்தன் நடந்து கொள்ள வேண்டிய முறைகளை ஜாடையாகச்

சொல்லிவிட்டு. அவ்விடமிருந்து விடைபெற்றுத் தன் சுய ரூபத்துடன் நர்த்தகி கரும்பிலினியாளின் இல்லம் சென்று களித்திருக்கலானான்.

மாணிக்கஞ்செட்டியாரும் தன அமராவதியை அழைத்து. "மகளே! இப்பெண்ணின் கணவன் உன் கணவன் சென்ற வண்ணமேதான் தேசாந்திரம் சென்றிருக்கிறான். ஆகவே இவளின் தந்தை அவனைத் தேடி சென்றிருக்கிறார். அவர்கள் வரும்வரை நீதான் இப்பெண்ணுக்கு உற்ற துணையாக இருக்க வேண்டும். புருஷனைப்பற்றிய ஏக்கம் இவளுக்குத் தோன்றாதபடி. நீ இவளிடம் அன்னியோந்நியமாகப் பழகி இவளுடன் ஆனந்தமாகப் பொழுதைக் கழிக்கவேண்டும். கவனித்துக்கொள்!" என்று கூற தனஅமராவதி குதூகலம் அடைந்து தனது எண்ணம் பலித்ததென்று இன்முகத்தில் குறும்புப் புன்னகைத் தவழ விக்கிரமாதித்தனாகிய பெண்ணை இறுகத் தழுவி கரம்பற்றி. "வாராய். நான் விரும்பும் உயிர்த்தோழியே! உன் மனம் மகிழும்படி நான் நடக்கச் சித்தமாயிருக்கிறேன்!" என்று மொழிந்து அந்தப்புரம் அழைத்துச் சென்று இருவரும் ஒரு கலத்திலிருந்து அறுசுவை உணவுண்டார்கள். பின்னர் பகற்பொழுதில் சோழி சொக்கட்டான் ஆடி. இராக்காலம் வந்ததும் தாம்பூலம் தரித்து. களப கஸ்தூரி முதலான வாசனாதிகள் பூசி முல்லை. மல்லிகை. மருக்கொழுந்து மலர்கள் சூடி. பாங்கிமார்கள் நித்திரையில் ஆழ்ந்ததும் ஏகாந்தமாய் ஓர் அறையில் சென்று மரகதப்பட்டு விரித்த மாணிக்கக்கட்டிலில் பூக்கள் தூவி அதன்மீது அமர்ந்து தோழிகளிருவரும் குறுகுறுப்புடன் அந்தரங்கமாகச் சிரித்துப் பேசத் தொடங்கினார்கள். அப்போது விக்கிரமாதித்தனும் தன் பெண்ரூபத்தை போக்கி சுயரூபம் தரித்து நள்ளிருளில் காந்தர்வ முறைப்படி தன அமராவதியுடன் களித்திருந்தான். விடிகின்ற நேரத்தில் விக்கிரமாதித்தன் .மறுபடி தன் பெண்ரூபத்தைத் தரித்துக் கொண்டான். இவ்வாறு விக்கிரமாதித்தன் பகல் முழுவதும் பெண்ணாகவும் இரவிலே ஆணாகவும் மாறி ஆனந்தமாக இருக்கும் ரகசியம் யாருக்கும் தெரியாமலிருந்தது.

இப்படியிருக்கையிலே ஒருநாள் அந்நகரத்து அரசன் இராஜகேசரி வாரம் ஒருமுறை ஊர்வலம் வரும் வழக்கப்படி நால்வகைச் சேனைபுடைசூழ யானையின் மீதேறி பவனிவந்தான். யானையும் வீதியில் மாணிக்கஞ்செட்டியாரின் மாளிகை அருகில் வந்தது. அந்தச் சமயம் மேன்மாடத்தில் தனஅமராவதியும் அவளுடைய தோழியான விக்கிரமாதித்தப் பெண்ணும் தங்களுடைய வீதியில் நாடாளும் அரசன் கோலாகலமாய் பவனி வருவதைக்கூட கவனியாமல் ஒருவரையொருவர்

குறும்பாகப் பார்த்துக் கண்ஜாடை செய்வதும், கண்ணாடி எதிரில் அமர்ந்து பொட்டிடுவதும், பூ முடிப்பதும், சாந்திடுவதும் ஜவ்வாதணிவதும் விதவிதமாகச் சீவிச் சிங்காரித்துப் பார்ப்பதுமாக சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தனர்.

இதைக் கண்ட அரசன் தன் ஆடம்பரத்தைப் பார்த்து மயங்கித் திரும்பியும் பாராத அவர்களைக் கண்டு துணுக்குற்று, செல்லும் யானையை நிறுத்தி, இரண்டு பெண்களும் தன்னை ஏறிட்டு பார்ப்பார்களென்று அவர்களைப் பார்த்துக் கண் சிமிட்டாமல் அம்பாரியின் மீது வீற்றிருந்தான்.

இரண்டு பெண்களும் அரசனை சிறிதும் பொருட்படுத்தாமல் கீழ் மாளிகைக்கு குதித்தோடி விட்டார்கள். அதை பெரும் அவமதிப்பாக கருதி ஆத்திரமுற்ற மன்னன் தன் அரண்மனைக்குத் திரும்பியதும் அவ்விரு பெண்களைப்பற்றி விசாரித்தான். "தன் கணவனில்லாத காலத்தில் நாயகன் பக்கத்திலிருக்கும்பொழுது செய்யும் நல்லலங்காரங்கள் செய்யும் இவர்களுக்கு நிச்சயமாக சோரநாயகன் இருக்கத்தான் வேண்டும்" என்று யூகித்தான். அறிக்கைக்காரர்களை அனுப்பி மாணிக்கஞ்செட்டியாரை அழைத்து வர ஆணையிட்டான்.

செட்டியார் வந்ததும் அரசன் அவரை நோக்கி, "ஐயா செட்டியாரே! உமது புத்திரி தனஅமராவதிக்கு நிச்சயமாக்கப்பட்டட மருமகன் கடல் கடந்து சென்றவன். இன்னும் திரும்பவில்லை. பருவவயதில் உம்முடைய புத்திரியோ எத்தனை நாளைக்குத்தான் வாழாவெட்டியாக இருப்பது? தன அமராவதியை எனக்கு தாரைவார்த்துக் கொடும்! சகல சீர் சிறப்புடன் சிங்காரமாய் என் அரண்மனையில் அவளை வாழ வைக்கிறேன்!" என்றான்.

"அரசே! எங்கள் குலத்தில் வேறு கோத்திரத்தாருக்குப் பெண் கொடுப்பதில்லை. மேலும் என் சகோதரியின் குமாரனுக்கும் மணம் முடிப்பதாக நிச்சயதார்த்தமும் நடந்துவிட்டது. நீங்கள் அவளிடம் ஆசை வைப்பது அழகல்ல" என்றார் செட்டியார்.

இதைக் கேட்டு கோபங்கொண்ட அரசன், "செட்டியாரே! உமது பெண்ணுக்குச் சோர நாயகனிருப்பது உமக்குத் தெரியாதா? அது மட்டும் உங்கள் குலத்துக்கு அழகோ?" என்று கேட்டான்.

விசனமடைந்த செட்டியார் "அரசே! தாங்கள் அபாண்டம் பேசுகிறீர்கள். என் பெண் உத்தமி" என்று சொல்லவே, மன்னன்

வெகுண்டெழுந்து "இன்றிலிருந்து நாற்பது நாட்களுக்குள் உமது உத்தம புத்திரியின் சோர நாயகனைக் கையும் களவுமாய் பிடித்துத் தருகிறேன்!" என்று சபதம் செய்தான்.

மாண்புள்ள தன் குலமகளைப்பற்றி மன்னன் இழிவாகப் பேசி விட்டதையெண்ணி மனம் நொந்த செட்டியார். ஒருவேளை பருவப் பெண்ணை நம்பமுடியுமாவென ஐயுற்று கத்தியுடன் அன்றிரவு அவளின் அந்தப்புரம் நோக்கி நடந்தார். அப்பொழுது விக்கிரமாதித்தப் பெண்ணும் தனஅமராவதியும் தனித்தனி கட்டிலில் நித்திரைபோவது கண்டு நிம்மதிகொண்டு, மகளின் கட்டிலில் பெருமூச்சுவிட்டபடி அமர்ந்தார். அமர்ந்த அசைவில் விழித்த அமராவதி தன் தந்தையென அறிந்து வணங்கி வரவேற்று நின்றாள். செட்டியார் மகளை நோக்கி, "தூக்கம் வராததால் பேசிக்கொண்டிருக்கலாமென வந்தேன். நீயோ நன்றாகத் தூங்குகிறாய். சரி; நன்றாகத் தூங்கு" என்று தன் மகளின் கற்பு நிலைகண்டு தன் மனையாளிடம் சென்று மன்னன் மமதையாக பேசிய வார்த்தைகளை மொழிந்தான். அவளும் "நம் பெண்ணின் மானம் தவறினால் நாம் உயிரோடிருப்போமா?" என்று வருந்தினாள்.

அவ்வேளையில் அரசனோ தன் காவற்படையின் தலைவர்களை வரவழைத்து "நமது நகரத்தில் மாணிக்கம் செட்டியார் வீட்டில் தனஅமராவதி என்னும் பெயருள்ள பெண்ணிருக்கிறாள். அவளிடம் வந்துபோகும் கள்ளக் காதலனை இன்றிலிருந்து எண்ணி நாற்பது நாட்களுக்குள் நீங்கள் பிடித்துவிட்டால் பதினாயிரம் பொன்னும் மான்யமும் தருவேன். இல்லாவிட்டால் உங்கள் கண்களைப் பிடுங்கி காட்டிற்கு துரத்திவிடுவேன்" என்று கடுமையாகக் கட்டளையிட்டான். காவலர்களும் விரைந்து சென்று மாறுவேடம் புனைந்து யாருமறியாவண்ணம் தனஅமராவதியின் மாளிகையைச் சுற்றி இரகசியமாக காவல்புரிந்து வரலானார்கள். சோர நாயகன் வெளியிலிருந்து வீட்டிற்குள் வந்தாலல்லவா இவர்களின் கையில் சிக்குவான்? நாளும் முப்பத்தொன்பதாகிவிட்டது. இன்னும் இருப்பது ஒரு நாள்! சோர நாயகனை கையும் களவுமாய் பிடித்துக் காட்டா விட்டால் அரசன் தங்களின் கண்களைப் பறித்துவிடுவான் என்று மருண்ட காவலர்கள் பரபரப்புற்று அன்றைய இரவு அதிகக் கவனமாக அமராவதியின் மாளிகையை காவல் புரியலானார்கள்.

மாணிக்கஞ் செட்டியாருக்கும் ஊராளும் அரசருக்கும் நடந்த வாக்குவாதங்களையெல்லாம் அரண்மனை நாட்டியக் காரியான கரும்பிலினியாள் அறிந்துவந்து தன் மாளிகையில்

தங்கியிருக்கும் ஆசைக் காதலனை பட்டியிடம் தெரிவித்து விட்டாள்.

நடப்பது யாதுமறியாமல் உலகை மறந்து இன்புற்றிருந்த விக்கிரமாதித்தப் பெண்ணும் தனஅமராவதியும் தங்கள் பள்ளியறையில் அன்றையதினம் புழுக்கமாக இருந்ததால் சோலைக் கதவைத் திறந்து வாழைத் தோட்டத்திற்கருகில் ஒரு கட்டிலிட்டு அதிலிருவரும் அமர்ந்து சரச உல்லாசமாகப் பேசி மகிழ்ந்திருந்தார்கள். பெண் வடிவம் நீங்கிய விக்கிரமாதித்தன் தன் சுய உருவுடன் தனஅமராவதியை அன்புடன் அணைத்தபடியே நித்திரையில் ஆழ்ந்து விட்டான். அப்போது தனஅமராவதி அவன் சிரசை மஞ்சத்தில் வைத்து அவன் திருமேனியைத் தழுவியபடி போர்வையால் முழுதும் மூடிக் கொண்டு தூங்கிவிட்டாள்.

காவலாளர்களோ நாற்பதாவது நாளும் பயனற்று விடிந்துவிடுமோ என்ற விசனத்துடன் விழித்தபடி தெருக்களிலும், சந்துகளிலும், திண்ணைகளிலும், மாளிகையைச் சுற்றிலும் அங்குமிங்கும் உலவியபடி கண்ணுங் கருத்துமாய் காவல் புரிந்தார்கள். அவர்களில் சிலர் மாளிகையின் கொல்லைப் புறத்திலுள்ள வாழைத் தோட்டத்தருகே வந்தனர். அங்கே வெள்ளைப் போர்வை தெரிந்தது. அதைச் சோதிக்க எண்ணியவர்களாய் கொல்லைப்புறத்து வேலியை இரகசியமாய் பிரித்துக் கொண்டு உட்புகுந்து கட்டிலினருகே வந்து வெள்ளைப் போர்வையைத் தூக்கிப் பார்த்தனர். தனஅமராவதியும் விக்கிரமாதித்தனும் அயர்ந்து நித்திரையில் ஆழ்ந்திருப்பதைக் கண்டதும் இன்று சரியாக அகப்பட்டுக் கொண்டார்களென்று காவலாளர்கள் உற்சாகமுற்று காதலர்களின் தூக்கம் கலையாதபடி கட்டிலுடன் அப்படியே தூக்கிக் கொண்டு சென்றனர். விடிவதற்கு கொஞ்ச நேரமிருந்ததால் நன்றாக விடிந்ததும் மன்னனிடம் காட்டலாமென்று எண்ணிய காவலர்கள் கட்டிலை வழியிலுள்ள ஒரு பத்திரகாளி கோவிலினுள் கட்டிலில் உறங்கும் தம்பதிகளோடு வைத்துப் பூட்டிவிட்டு வெளியே காவலிருந்தனர்.

அப்போது கரும்பிலினியாளின் வீட்டில் பல பலவென்று பல்லி சப்தமிட்டது. கரும்பிலினியாளோடு களித்தபடியிருந்த பட்டி திடுக்கிட்டெழுந்து காலனைப் போல திகைத்து நின்று, தன் நண்பனுக்கும் தனஅமராவதிக்கும் விபரீதம் வந்துவிட்டது என்று சொன்னான். அதைக்கேட்ட கரும்பிலினியாள் தன் தோழிக்கு ஆபத்து வந்து விட்டதாவென்று பதறினாள். "அவளுக்கு அவமானம் ஏற்படாமல் மீட்பதற்கு வழியென்ன?" என்று கேட்டுத் துடித்தாள்.

"பத்ரகாளி கோவிலில் கொண்டு வைக்கப்பட்டிருக்கும் அவர்களை கொண்டுவர ஒரே ஒரு வழிதானிருக்கிறது. நீ சென்று கோயில் பூசாரியிடம் பத்துவராகன் கொடுத்து காவி வேட்டி, அங்கவஸ்திரம், மணி, தாம்பாளம், தீபக்கால், காவிச்சேலை, தேங்காய், பழம், மலர்மாலை முதலிய பூஜைப் பொருள்களை வாங்கி வா. சாமியார் போன்று வேடம் பூண்டு சென்றுதான் அவர்களை விடுவிக்க வேண்டும்" என்றான் பட்டி.

கரும்பிலினியாளும் விரைந்து சென்று பட்டி கூறிய சாமான்களைப் பூசாரியிடமிருந்து திட்டமாக வாங்கி வந்தாள்.

பிறகு அவர்களிருவரும் ஆண்டியும், ஆண்டிச்சியுமாய் வேடம் தரித்துக் கொண்டு கோயிலுக்குச் சென்றனர். வெளியே காவலிருந்த தலையாரிகள் அவர்களைத் தடுத்து நிறுத்தவே, "கேளுங்கள் தலையாரிகளே! நாங்கள் அறியாமல் அந்தரங்கமாய் பூஜை செய்து வரும்படி இந்த நள்ளிரவு நேரத்தில் எங்களை மகாராணியார் அனுப்பினார்கள். அவ்வாறு இன்றிரவு பூஜை செய்தால் ராணியம்மாளுக்கு ஆண் குழந்தை பிறக்குமாம். நீங்கள் இப்போது எங்களை உள்ளே போக அனுமதி தர மறுத்தால் நாங்கள் மன்னர்பிரானின் பட்டமகிஷியாரிடம் சென்று முறையிடுகிறோம்" என்றனர். அதில் சில தலையாரிகள் "நமக்கேனடா இந்தத் தொல்லை? மகாராணியாரின் கோபத்தை வீணாக ஏற்படுத்திக் கொள்வானேன்?" என்று அவர்களை உள்ளே நுழைந்து பூஜை செய்துவர அனுமதித்தார்கள்.

கோயிலுக்குள் சென்ற கரும்பிலினியாள் பூஜை செய்வது போலப் பாவனை செய்ய, பட்டி அங்கே கட்டிலில் தூங்கும் விக்கிரமாதித்தனையும் தன அமராவதியையும் எழுப்பி விவரத்தைத் தெரிவித்து, தங்களின் காவி உடைகளை அவர்களுக்குக் கொடுத்து அணிந்துகொண்டு வெளியேறும்படி செய்து, அவர்களின் நல்ல உடைகளைத் தாங்கள் தரித்துக் கொண்டு கட்டிலில் படுத்துறங்கினார்கள்.

விக்கிரமாதித்தனும், தனஅமராவதியும் ஆண்டியும் ஆண்டிச்சியுமாக கோவிலை விட்டுத் தந்திரமாக வெளியேறி காவலாளர்களுக்கு தேங்காய் மூடி பிரசாதம் கொடுத்து விட்டு, மாளிகையை அடைந்து வழக்கம் போல் மேன்மாடத்திலுள்ள பள்ளியறையில் படுத்துறங்கினார்கள்.

பொழுது விடிந்தது! தலையாரிகள் கோவிலைத் திறந்து போர்வையால் மூடிக் கிடக்கும் கட்டிலை தூக்கிக் கொண்டு சென்று அரசன் முன்னிலையில் வைத்து, "அந்த தன அமராவதியும் கள்ளக் காதலனும் போர்வையால் மூடிக்கொண்டு

இக்கட்டிலில் உறங்குகிறார்கள்!" என்று சொன்னார்கள். மன்னவனும் மமதையுடன் வெற்றிப் புன்னகை புரிந்து மாணிக்கஞ் செட்டியாரை வரவழைத்துக் கம்பீரமாக நின்று கொண்டு, "செட்டியாரே! நான் சொன்ன சொற்படி நாற்பது நாட்களுக்குள் உமது சொந்த மகளின் சோர நாயகனைக் கண்டுபிடித்து விட்டேன். பார்த்தீரா? கையும் களவுமாகப் பிடிபட்டிருக்கும் அவர்களை இப்போது கண்குளிரப் பாரும்!" என்றான் மமதையோடு.

அவன் கைகாட்டக் காவலர்கள் கட்டிலின் மீது மூடிக் கிடக்கும் போர்வையை அகற்றினார்கள். ஆனால் கட்டிலில் படுத்துறங்கும் இரு உருவங்களைப் பார்த்ததும் அனைவரும் திடுக்கிட்டனர். கட்டிலிலிருந்து சாவதானமாகப் பட்டியும் ராஜநர்த்தகியான கரும்பிலினியாளும் எழுந்தனர். தானும் பட்டியுமிருக்கும் சூழ்நிலை அரசவை என அறிந்ததும் ராஜநர்த்தகி நாணத்துடன் நழுவிச் சென்று தூண் மறைவில் ஒளிந்து கொண்டாள். பட்டி சபையை நோக்காமல் தலையைக் குனிந்து கொண்டிருந்தான். அரசனுந்தான்! செட்டியாரோ மானபங்கம் நேரிடவில்லையென்று பெருமூச்சு விட்டார்.

தூணோடு தூணாய் நின்ற கரும்பிலினியாள், மன்னனை நோக்கி "அரசே! ஆணும் பெண்ணும் அறையில் சயனித்திருக்கையில் அவர்களை உங்கள் காவலர் அம்பலத்திற்கு கொண்டு வருவதுதான் உங்கள் ஆட்சியின் தர்மமா? மற்றவர்களை தண்டிக்க வேண்டிய மன்னனே தவறு செய்தால் நாங்கள் யாரிடம் சென்று முறையிடுவோம்? எங்களைப் போன்றோர் இந்நகரில் இருக்கக் கூடாதென்றாவது தடை செய்யுங்கள்! வேறு நாடு சென்று பிழைத்துப் போகிறோம்!" என்றாள்.

அரசன் வெட்கி, தலையாரிகள் செய்த தவறையும், செட்டியாருக்கும் தமக்கும் நடந்த சச்சரவை விளக்கியும், கரும்பிலினியாளுக்கு சமாதானங்கள் பல கூறியும் ஆடை ஆபரணம் முதலிய செல்வங்கள் கொடுத்தும் அனுப்பிவிட்டு, செட்டியாருக்கும் வேண்டிய சமாதானம் சொல்லி அவரை இல்லத்திற்கு அனுப்பிவிட்டு, தலையாரிக்குத் தக்க தண்டனை கொடுத்தான்.

மாணிக்கஞ் செட்டியாரின் மாளிகையில் பெண் வடிவம் புனைந்த விக்கிரமாதித்தனும் தனஅமராவதியும் முன்போல் மகிழ்ந்திருக்கும் நாளில் திவாந்திரம் சென்றிருந்த தன அமராவதியின் அத்தை மகன் திரவியங்களைச் சேகரித்துக் கொண்டு திரும்பி வந்து சேர்ந்தான். அமராவதிக்கு திகிலுண்டாயிற்று. "என் அத்தான் வந்துவிட்ட பிறகு, நான்

எப்படி நடந்து கொள்ள வேண்டும்?" என்று விக்கிரமாதித்தப் பெண்ணிடம் தனஅமராவதி கேட்டாள். "நாம் இங்கிருந்து ஊருக்கு கிளம்பிப் போகும் வரை அவனை நீ மதித்துதான் நடந்து கொள்ள வேண்டும். இந்த வீட்டில் அதுவரை நாம் நெருங்கிப் பழகாமல் பிரிந்திருப்பதும், தனித்துறங்குவது மாயிருக்க வேண்டும்!" என்றாள் விக்கிரமாதித்தப் பெண். பின்னர் மூன்று நாட்கள் விக்கிரமாதித்தப் பெண்ணும் தன அமராவதியும் தனியாக வேறு அறையில் படுத்துறங்கினார்கள்.

ஆனாலும், தனஅமராவதியும் அவளுடைய அத்தானும் தனித்தனியாக தனித்துப் பேசிக் கொண்டிருக்கும் போதெல்லாம் விக்கிரமாதித்தப் பெண் அவர்களின் அறையில் குறும்புப் புன்னகையுடன் வந்து வாலிபனின் கண்களில் அடிக்கடி தென்பட்டு மோகச் சிரிப்பை சிந்தி அவனுடைய கண்ணையும் கருத்தையும் மயக்கி வரலானாள். முடிவில் அவள்மீது வாலிபனுக்கு மோகப் பித்தம் தலைக்கேறியது. தன அமராவதியிடம் "யார் இந்தப் பெண்?" என்று அவன் விசாரிக்கும் போதெல்லாம், அதற்கு தனஅமராவதி வெடுக்கென "அந்தப் பெண்ணைப் பற்றி நீங்கள் கனவிலும் கருதலாகாது! அவளுக்குத் திருமணமாகி விட்டது. ஆனால் புருஷன்தான் இல்லை. அதனால் அவளிடம் நீங்கள் நெருங்கிப் பேசவும் கூடாது. பஞ்சருகே நெருப்பு இருந்தால் விரைவில் பற்றிக் கொண்டுவிடும்!" என்று அவன் வாயை அடக்கி வரலானாள்.

ஒருமுறை தனஅமராவதியும் அவனும் தனித்திருந்தனர். கதவு மூடியும் மூடாமலுமிருந்தது. விக்கிரமாதித்தப் பெண் கதவைத் தள்ளி உள்ளே வந்து மோகினி மந்திரத்தை உச்சரித்துவிட்டு "அத்தான் இருக்கிறார்களா? நான் வருகிறேன்!" என்று கூறிவிட்டுப் போய்விட்டாள். மோகினி மந்திரத்தால் மோகந் தலைக்கேறிய தனஅமராவதியின் அத்தான் விக்கிரமாதித்தப் பெண்ணைப் பற்றி விவரங்கள் அறிய ஆவல் கொண்டு தனஅமராவதியைத் துளைத்து விட்டான்.

அவள் எப்படி சொல்லியும் கேளாமல் மோகம் பெருகிய அத்தான் ஒருநாள் இரவு தன் தாய் மாமன் வீட்டில் இல்லாதபோது தனஅமராவதி அயர்ந்து நித்திரை செய்யும் தருணம் பார்த்து, மெல்ல பூனைபோல ஓசைப்படாமல் விக்கிரமாதித்தப் பெண் படுத்துறங்கும் கட்டிலில் அமர்ந்து அவளை எழுப்பி, "பெண்ணே! உன்மீது நான் அளவிலாத மோகங் கொண்டு விட்டேன்! என்னை ஆட்கொள்ள வேண்டும்!" என்றான்.

அதுகேட்ட விக்கிரமப் பெண்ணும் நாணிக் கோணி, நளினமாக நடித்து ஆசைக் குறிப்புடன் நோக்கி, மோகப் புன்னகை தூவி, இன் முகங்காட்டி, "ஐயா! நான் கள்ளங் கபடமறியாத அபலை! என்னை நீங்கள் நாடி வந்து மோகத்தால் தத்தளிக்கிறீர்கள். உங்களுக்காக மனமிரங்கி சம்மதிக்கப்பட்டவள் தான் நான். ஆனால் ஒன்று வீட்டில் யாருக்கும் தெரியாமல் இன்றிரவு பத்து நாழிகைக்கு மேல் நான் குறிப்பிடும் இடத்திற்கு வருவீர்களானால் உங்கள் மனோரதம் நிறைவேறும்!" என்றாள்.

இது கேட்டு மகிழ்ந்த அத்தானும் அன்றிரவு பத்து நாழிகைக்கெல்லாம் பட்டுப் பீதாம்பர மணிந்து களப கஸ்தூரி வாசனைத் தைலங்கள் பூசி, தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு, விக்கிர மாதித்தப் பெண்ணின் பள்ளியறைக் குட் சென்று அவளை எழுப்பினான். அவள் முகம் மலர்ந்தவளாய் அவ னுடைய கையைப் பிடித்து பஞ்சணை யில் அமர்த்திவிட்டு, அடுத்த அறையி லிருந்து வெற்றிலை, சுண்ணாம்பு கொட்டைப் பாக்குடன் ஒரு பாக்கு வெட்டியும் எடுத்து வந்து சரசமாகத் தாம்பூலம் மடித்து வாயில் ஊட்டு வது போலப் பாசாங்கு செய்து கொண்டே, வெடுக்கென்று அவ னுடைய மூக்கை கெட்டியாகப் பிடித்துப் பாக்கு வெட்டியால் அறுத்து விட்டுத் தனஅமராவதியின் அறைக்குள் ஓடி விட்டாள்.

மூக்கறுக்கப்பட்ட வாலிபன் துடிதுடித்துப் போனான். துண்டுபட்ட மூக்கிலிருந்து இரத்தம் பீறிட்டு ஆடையிலெல்லாம் கொட்டிக் கொண்டிருந்தது. பொழுது விடிந்து வீட்டில் உள்ளவர்களுக்கெல்லாம் விஷயம் வெளிப்பட்டால் மானம்போய் விடுமே என்று பதறியெழுந்து, ஒரு போர்வையை எடுத்து முகத்தை மூடிக்கொண்டு அன்றிரவே கொல்லைப்புறமாக வீட்டைவிட்டு வெளியேறினான். "மானம் பெரிதே தவிர ஈனம் பெரிதல்ல" என்று தீர்மானித்து மனம் போன போக்காய் ஓடி ஊரெல்லைக்கு அப்பாலுள்ள ஒரு பாழடைந்த கிணற்றிலே விழுந்து உயிரை நீத்தான்.

தனஅமராவதியின் அறையிலே நுழைந்த விக்கிரமாதித்தப் பெண் அவளை எழுப்பி, நடந்ததை சொல்லிவிட்டுப் பெண் வேடங் கலைந்து அவளுடன் உல்லாசமாக இருந்தான். அவளும்

தன் அத்தான் அவமானம் தாங்காமல் ஓடி உயிரை விட்டிருப்பான் என்று நிம்மதி அடைந்தாள். பிறகு பொழுது விடியும் தருணத்தில் விக்கிரமாதித்தப் பெண், "அதிரூப அமராவதியே! இனி நாம் இங்கிருக்க வேண்டியதில்லை. இன்னும் ஐந்து நாட்களில் உன்னை உன் பெற்றோர் சம்மதத்தோடு என்னூருக்கு அழைத்துச் செல்கிறேன். இப்போது நான் இங்கிருந்து இரகசியமாக நழுவி, ராஜநர்த்தகியின் மாளிகையி லுள்ள என் நண்பனிடம் போய் விடுகிறேன். நீயோ பொழுது விடிந்ததும் அடைக்கலமாக விடப்பட்ட பெண்ணை என்னை உன் அத்தான் கூட்டிக் கொண்டு போய் விட்டானென ஒரு நாடகம் நடித்து வதந்தியைக் கிளப்பிவிடு. நான் கரும்பிலினியாளின் இல்லத்திலிருந்து சரியான தருணம் பார்த்து மாறு வேடத்தில் வருகிறேன்" என்று கூறி விடைபெற்று சென்றான்.

பொழுது விடிந்ததும் தனஅமராவதி தன்னுடன் அடைக்கலமாயிருந்த பெண்ணைத் தன் அத்தான் எங்கோ கூட்டிக் கொண்டு ஓடி விட்டதாகக் கூக்குரலிட்டாள். மாணிக்கஞ் செட்டியார் நாற்புறமும் ஆட்களை அனுப்பித் தேடச் செய்தார். ஒன்றும் பயனில்லாமற் போய் விட்டது.

நாட்கள் நாலைந்து நகர்ந்தன. மதியூகியான பட்டி பழைய செட்டியார் போலவும், விக்கிரமாதித்தனே அவருடைய மாப்பிள்ளையைப் போலவும் மாறு வேஷங்கள் பூண்டு மாணிக்கஞ்செட்டியாரின் கடைக்கு வந்து, பட்டி மாணிக்கனிடம், "ஐயா! செட்டியாரே! உங்கள் ஒத்தாசையினால் தான் நான் என் மருமகனைத் தேடியலைந்து இரவியெனும் தீவினிலே கண்டுபிடித்து வியாபாரம் செய்தது போதுமென அழைத்துக் கொண்டு வந்தேன். அவனும் தன் மனைவியின் முகத்தைக் காண ஆசையோடு வந்திருக்கிறான். நான் தங்களிடம் அடைக்கலமாய் ஒப்படைத்துச் சென்ற என் பெண்ணை என்னுடன் அனுப்புங்கள். இவ்வளவு நாள் பத்திரமாய் வைத்திருந்ததற்கு மிக்க நன்றி! உடனே நாங்கள் ஊர் புறப்பட வேண்டும்! என் பெண்ணையும் மருமகனையும் தனிக்குடித்தனம் வைத்து ஊர் பெருமைப்பட வாழச் செய்ய வேண்டும்" என்றான்.

மாணிக்கஞ்செட்டியார் ஏதும் பதில் சொல்லாது தலைகுனிந்து உட்கார்ந்திருந்தார். மற்றவர்களையும் பார்த்துக் கேட்க அவர்களும் அவ்வாறே இருந்தனர்.

"என்ன, எல்லோரும் மௌனமாக இருக்கிறீர்கள்? என் பெண் முகத்தைப் பார்த்து பல நாளாயிற்று" என்று துடிதுடித்த பட்டியாகிய செட்டியாரை மாணிக்கஞ்செட்டியார் அழைத்துச் சென்று, கண்களில் நீர் தளும்ப குரல் நடுநடுங்க, "நாலாவது

மாதத்தில் என் மாப்பிள்ளை திரும்பி வந்தான். அந்தக் களவாணிப்பயல் நாலைந்து நாட்களுக்குமுன் என் வீட்டிலிருந்து தங்களுடைய புத்திரியை கள்ளத்தனமாக அழைத்துக்கொண்டு ஓடிவிட்டான். எங்கு தேடியும் கிடைக்கவில்லை!" என்றார்.

அதைக் கேட்ட பட்டியாகிய செட்டியார் மிகுந்த கோபம் அடைந்தவர் போல, "என்னய்யா, ஊளையிடுகிறீர்? கேலி செய்ய ஆள் கிடைத்ததென்ற எண்ணமா? உம்மை நம்பித்தானே என் பெண்ணை உம் வீட்டில் வைத்து விட்டுச் சென்றேன்? இப்படி மோசம் வருமென்று கனவிலும் கருதவில்லையே? அடைக்கலப் பொருளுக்கு நீர் அளித்த மதிப்பு இதுதானோ? என்னுடைய பெண்ணை ஓட்டிவிட்டு உம்முடைய பெண்ணை மட்டும் வீட்டில் வைத்திருக்கிறீரா? உம்முடைய பெண் பிடிக்கவில்லையென்று தொலை தேசம் போன உம்மருமகப் பிள்ளையைக் கூட்டிவந்து, அவன் பின்னால் என் பெண்ணையும் கூட்டியனுப்பி விட்டீரா? ஏனையா இந்த நாடகமெல்லாம் ஆடுகிறீர்? உம் நேர்மையும், நியாயமும் இதுதானோ? இந்த அநியாயத்தை இந்நாட்டரசனுக்குத் தெரிவித்து குடியைக் கெடுத்து விடுவேன். ஐம்பத்தாறு தேசங்களிலும் உம் குடும்பத்தின் மானக்கேட்டைச் சொல்லி ஊரெங்கும் காறித்துப்பும்படி, உமக்கு எங்கேயும் ஒண்ட நிழலில்லாமல் செய்து விடுவேன்!" என்றான்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த பட்டியின் மருமகனை வேடமிட்டிருந்த விக்கிரமாதித்தன், தன் கைத் தடியைச் சுழற்றிக் கொண்டு மாணிக்கஞ்செட்டியார் மீது சீறிப் பாய்ந்து "என் பெண்டாட்டியை அனுப்பென்றால், உன் மாப்பிள்ளை கூட்டிக் கொண்டு ஓடிவிட்டானென்று கதையளக்கிறாய். என் பெண்சாதியை அவனிடம் விலைக்கு விற்று விட்டாய்?" என்று உறுமிவிட்டு தன் மாமனாரை நோக்கி விருட்டெனத் திரும்பி, "ஏ, மாமனாரே! இந்த மலைவிழுங்கி யினிடமா என்மனையாளை அடைக்கலம் வைத்தீர்? உம் மண்டையை பிளந்து அப்புறம் அந்த அயோக்கியனின் குடும்பத்தையே அடித்து நொறுக்கி என் உயிரையும் மாய்த்துக் கொள்கிறேன்" என்று செட்டியாரின் கூட்டத்தில் இடசாரி வலது சாரியாகப் புகுந்து பட்டியுடன் சண்டை செய்ய ஆரம்பித்தான். அப்போது அங்கிருந்த இனத்தவரெல்லாம் குறுக்கிட்டு அவர்களைச் சமாதானப்படுத்தி "ஐயா, இவ்வூர் அரசன் இராஜகேசரிக்கும் எங்கள் மாணிக்கஞ்செட்டியாருக்கும் ஏற்கனவே பகையிருப்பதால் இது விஷயம் தெரிந்தால் அரசன் பொல்லாத்தனமாக தண்டித்து செட்டியாரின் குடும்பத்தையே நாசமாக்கி விடுவான். இதை அரசனிடம் கூறி செட்டியாரைக் கெடுப்பதில் உமக்கென்ன லாபம்? நாங்கள் ஒரு நியாயம்

சொல்லுகிறோம். ஏதோ நடக்கக் கூடாதது நடந்து விட்டது. போனது போகட்டும். மாணிக்கஞ்செட்டியார் தம்முடைய ஒரே பெண்ணான தன அமராவதியை உங்கள் பெண்ணுக்குப் பதிலாக உங்கள் மாப்பிள்ளைக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விடுவார்!" என்று பட்டியிடம் கேட்டுக் கொண்டார்கள்.

மாணிக்கஞ்செட்டியாரும் எழுந்து சென்று தம் புத்திரியை அழைத்துவந்து விக்கிரமாதித்தனின் காலில் விழுந்து கெஞ்சினார். பட்டியாகிய செட்டியார் சம்மதிக்க, விக்கிர மாதித்தனும் சம்மதித்தும், சம்மதியாததுமாகிய பிகு செய்து கொண்டிருக்க, அவனை நோக்கி பட்டி, "மாப்பிள்ளை! நடந்தது நடந்து விட்டது. நாலு பேர் சொல்லுவதை கேட்கத்தானே வேண்டும்? இந்தப் பெண்ணை என்னுடைய பெண்ணாகக் கருதி உங்கள் மனைவியாக ஏற்கத்தான் வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டார். விக்கிரமாதித்தனும் ஒரு வழியாகச் சம்மதித்தான்.

அதன் மேல் மாணிக்கஞ்செட்டியாரும் தமது மாளிகையைக் கோலாகலமாக அலங்கரித்து, மிகவும் ஆர்ப்பாட்டமாக விருந்து வைத்து, ஒரு நல்ல சுப முகூர்த்தத்தில் விக்கிரமாதித்தனென்னும் செட்டியாருக்கும் தனஅமராவதிக்கும் மங்களகரமாகத் திருமணம் முடித்து வைத்து சீர்வரிசை சிறப்புகளுடன் தம் மகளை அனுப்பி வைத்தார்.

விக்கிரமாதித்தனும், பட்டியும் வேதாளமும் முன் செல்ல தனஅமராவதியும் ராஜநர்த்தகி கரும்பிலினியாளும் பின் செல்ல சீர் வரிசைகளுடன் அனைவரும் உஜ்ஜயினி மாகாளிப் பட்டணத்தை அடைந்தார்கள்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த பதுமை, "கேட்டீரா, போஜ மன்னரே! எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போல் இத்தகைய பராக்கிரமமும் புத்தி கூர்மையும் உம்மிடம் இருந்தாலன்றோ இந்த அதிசய சிங்காதனத்தில் ஏறி அமரலாம்!" என்றது."

அச்சமயம் செங்கதிர் செல்வனும் குணதிசைக் கடலில் மூழ்கி மறைந்து விடவே, போஜராஜன் மௌனமாக சிம்மாசனத்தின் படிகளிலிருந்து இறங்கி அம்சதூளிகா மஞ்சம் நோக்கி உறங்கச் சென்றான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில், இருபதாவது படிக்கு காவலான சித்திரரேகை எனும் பதுமை பின்வரும் கதையை கூறியதாகவுள்ளது.)



## திரிகால நாதர் கதை

விக்கிரமாதித்தன் ஒரு சமயம் காடாறு மாதம் புறப்பட்டுப் பிரயாணம் செய்து வருகையில், பத்மாலயம் என்னும் பெயருடைய நகரத்துக்கு வந்து சேர்ந்தான். நகருக்கு வெளியே பசுமையான சோலை ஒன்று இருந்தது. அங்கேயுள்ள பெரிய ஏரியில் தெளிந்த நீர் அலைமோதிக் கொண்டிருந்தது. ஏரியிலிறங்கி நீரை அள்ளி இரண்டு வாய் பருகிவிட்டு விச்ராந்தியாகக் கரையில் உட்கார்ந்தான். காற்று குளுமையாக வீசிக் கொண்டிருந்தது. அப்போது சில வழிப்போக்கர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் கூட்டத்தில் அயல் நாட்டினரும் இருந்தனர். அவர்கள் ஊர் ஊராகப் பிரயாணம் செய்து வந்தனர். ஏரியில் இறங்கி, கை கால்களை அலம்பி தாக சாந்தி செய்துகொண்டு, அவர்களும் தங்கள் சிரமந்தீர ஏரிக்கரையில் உட்கார்ந்தனர்.

அவர்களிடையே பலவித பேச்சுகள் நிகழ்ந்தன. ஒருவன் சொன்னான்: "நாமும் எத்தனையோ நாடுகளில் சுற்றினோம். கணக்கற்ற கிராமங்களைக் கண்டோம். எவருக்கும் சுலபத்தில் கிட்டாத இப்புனித யாத்திரையின் நடுவே, நாம் இதுவரை உண்மையாகப் போற்றக் கூடிய மகிமை வாய்ந்த மனிதனைப் பார்க்கவில்லை!"

அதற்கு மற்றொருவன் சொன்னான்: "அம்மாதிரி மகிமை வாய்ந்த மனிதனை எவ்விதம் ஒருவன் பார்க்க முடியும்? மிகவும் சக்தி வாய்ந்த யோகியிருக்குமிடத்திற்குச் செல்லுவது என்பது கஷ்டமான காரியம் அன்றோ? செல்லும் பாதை அளவில்லாத துன்பங்களை உடையது. கணக்கற்ற தடங்கல்கள் வழியே தோன்றக்கூடும். சில சமயம் ஒருவன் தன் உயிரையே இழக்க வேண்டி நேரிடும்; தான் எடுத்துக் கொண்ட முயற்சி முடிவடையும் முன்பே தானே அழிந்து போவதென்றால், அதனால் அவனுக்கு என்ன பயன் இருக்கிறது? ஆகவே, அறிவுள்ள மனிதன் முதலில் தன்னை பாதுகாத்துக் கொள்வான். தேகமே, புனித கர்மாக்களுக்கு அவசியமானது. மனைவி, அதிர்ஷ்டம், நிலங்கள், குமாரன், மேலும் நல்லது கெடுதலான காரியங்கள் திரும்பத் திரும்ப அடையக் கூடியவை; ஆனால் தேகமோ ஒரே ஒரு முறைதான் அடையக் கூடியது! ஆகவே

தான் புத்திசாலி மனிதன் ஆபத்தை விளைவிக்கக்கூடிய விவகாரங்களில் ஈடுபடக் கூடாது. பலனைக் கொடுக்க முடியாததும் அழிவைக் கொடுக்கக் கூடியதும், சாத்திய மற்றதுமான பலனற்ற காரியங்களைப் புத்திசாலி மனிதன் செய்யக் கூடாது! மிகவும் கஷ்டமான சங்கடத்தில் தான் அகப்பட்டுக் கொண்டாலும் அறிவுள்ள மனிதன், பயங்கரமான மிருகங்களைக் கொண்டதும் கரடு முரடானதும் கஷ்டங்களை அளிக்க வல்லதுமான மலையிலே ஒரு போதும் ஏறக்கூடாது... இன்னும், ஒருவன் தான் செய்யப் போகும் காரியத்தைத் திர ஆலோசித்த பிறகே அதைச் செய்ய வேண்டும். அன்றி மிகக் குறைந்த பலனை அளிக்கவல்ல காரியத்தில் இறங்கலாகாது"

பக்கத்தில் அமர்ந்திருந்த விக்கிரமாதித்தன் அவர்கள் வார்த்தைகளை கேட்டுக் கொண்டிருந்தான். அவர்களை நோக்கி சொல்லத் தொடங்கினன்: "வழிப்போக்கர்களே, நீங்கள் ஏன் அவ்விதம் பேசுகிறீர்கள்? தைரியத்துடனும் ஆண்மையுடனும் முயற்சிக்காத வரையில் எந்தக் காரியமும் மனிதனுக்குக் கடுமையானது தான். அடைவதற்குக் கடுமையான நல்ல பொருள்களை மனது வைத்தால் அடைந்து விடலாம். தைரியம் வாய்ந்த மனிதர்கள் தங்கள் உடலை, கிடைக்கக்கூடிய நல்ல சந்தர்ப்பங்களுக்கு ஈடாக ஒப்பிட்டு பார்க்கலாகாது. சில சமயங்களில் வானத்திலிருந்து தண்ணீர் பள்ளத்தில் விழுகிறது. பூமிக்கு அடியிலிருந்து கிடைக்கலாம், வினைப்பயன் தடுக்க முடியாதது; பலமுள்ளது; ஆனல், இந்த உலகத்தில் மனித முயற்சியும் பலமுள்ளதில்லையா? தேகத்துக்குத் துன்பத்தைக் கொடுக்காமல் சுலபமாக அடையக்கூடிய இன்பம் இவ்வுலகில் கிடையாது. மதுவென்னும் அரக்கனைக் கொன்ற மகாவிஷ்ணுவும், கடலைக் கடைந்ததால் தளர்ச்சியுற்ற கைகளால் அணைத்துக் கொண்டார் அன்றோ?.....

"நான்கு மாதங்கள் தண்ணீரில் சயனித்துத் தூங்குகின்ற விஷ்ணுவின் பத்தினி லக்ஷ்மி, அவர் நரசிம்மமாக இருந்தாலும், எவ்விதம் சஞ்சலம் அடையாமலிருக்க முடியும்?

"தைரியமாக நடந்து கொள்ளாத மனிதனல் ஒருபோதும் மிக்க இன்பத்தை அடைய முடியாது. துன்பத்துக்கு ஆளான போதுதான் (அதாவது துலா ராசியில் ஏறிய பிறகுதான்) சூரியனும் மேகக் கூட்டங்களை அடக்கி மழை பொழியச் செய்கிறன்"

இவ்வாறு கூறிய விக்கிரமாதித்தனின் வார்த்தைகளைக் கேட்ட வழிப்போக்கர்கள், "பெரியோய்! அப்படியானல் நாங்கள் செய்ய வேண்டியது என்ன என்பதை தெரிவியுங்கள்" என்றனர்.

"இங்கிருந்து பன்னிரண்டு காத தூரம் சென்றீர்களானால் காட்டின் நடுவே ஒரு கரடு முரடான மலையைக் காண்பீர்கள். அந்த மலையின் உச்சியில் திரிகாலநாதர் எனப் பெயருடைய சக்திவாய்ந்த யோகீச்வரர் இருக்கிறார். அவரை வந்து தரிசிப்பவர்களுக்கு, அவர்கள் விரும்புவதையெல்லாம் அவர் கொடுக்கிறார். இப்போது நான் அங்குதான் செல்கிறேன்" என்றான் விக்கிரமாதித்தன்.

"அப்படியானால் நாங்களும் உங்களுடன் வருகிறோம்" என்றனர் வழிப்போக்கர்.

"மிக்க மகிழ்ச்சி! புறப்படுங்கள். அழைத்துப் போகிறேன்" என்று எழுந்திருந்தான் விக்கிரமன். அனைவருமாக யோகியின் இருப்பிடத்தைக் குறித்துப் புறப்பட்டனர். அவர்கள் அடர்ந்த காட்டை அடைந்தனர். அந்தக் காட்டைக் கண்டதுமே அவர்கள் பயந்தனர். பாதை மிகவும் கரடு முரடாக நடப்பதற்கு முடியாமலிருந்தது. பிரயாணிகளால் அந்தப் பாதையில் நடக்க முடியவில்லை. கால்கள் வலியெடுத்தன. அவர்கள் விக்கிரமாதித்தனை நோக்கி, "பெரியோய்! இன்னும் மலையை அடைய எவ்வளவு தூரம் செல்ல வேண்டும்?" என்று கேட்டனர்.

"அதற்குள்ளாகவா நீங்கள் களைத்து விட்டீர்கள்? நாம் இதுவரை வந்துள்ள தூரம் நான்கு காத தூரமே. இன்னும் எட்டு காத தூரம் இருக்கிறது" என்றான் விக்கிரமாதித்தன்.

"பெரியோய்! எங்களால் முடியாது. நாங்கள் தளர்ந்து விட்டோம்! தூரம் அதிகமாக இருக்கிறது. பாதை சரியாக இல்லை. நாங்கள் திரும்பிச் செல்லுகிறோம்." என்றனர் வழிப்போக்கர்.

"பிரயாணிகளே! ஊக்கமுள்ளவர்களுக்குத் தூரம் ஒரு பிரமாதமா? உறுதியானவர்களுக்கு அதிகக் கனம் என்பது ஏது? அறிவாளிகளுக்கு எந்த நாடுதான் அயல்நாடு? அன்பாக பேசுபவர்களுக்கு யார்தான் எதிரி என்று நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? தைரியத்தை கைவிடாதீர்கள். உறுதியாக முன்னேறுங்கள்" என்று அவர்களை ஊக்குவித்தான் விக்கிரமாதித்தன்.

மீண்டும் அவர்கள் ஆறு காதம் சென்றதும் ஒரு பயங்கர நாகம் பிரும்மாண்டமான தன் வாயைத் திறந்து, விஷம் நிறைந்த நெருப்பைக் கக்கியபடி வழியை அடைத்துக் கொண்டிருப்பதைக் கண்டனர். அந்நாகத்தைக் கண்டதும் அவர்கள் வீரியமும் தைரியமும் இருக்குமிடம் தெரியாமல் பறந்து விட்டன. பயத்தினால் அவர்கள் நாற்புறமும் சிதறி ஓடி

விட்டனர். ஆனால் விக்கிரமனோ பயந்து ஓடவில்லை. தைரியமாகப் பாதையில் முன்னேறிச் சென்றான். நாகத்தை நெருங்கியதும் அரசன் சிறிதும் கலங்கவில்லை. நாகம் அவனை நெருங்கி அவன் உடலைத் தன் உடலால் சுற்றிக் கொண்டு விக்கிரமனைக் கடித்து விஷத்தைக் கக்கியது. பாம்பின் விஷத்தால் சக்தியிழந்திருந்தும், பாம்பு சுற்றிய உடலுடன் விக்கிரமன் அந்தக் கரடு முரடான மலைமீது ஏறி யோகி திரிகாலநாதரின் சமூகத்தை அடைந்தான்.

யோகியின் கண் பார்வை பட்ட மாத்திரத்திலேயே நாகமானது விக்கிரமாதித்தனை விட்டுவிட்டுச் சென்று விட்டது. அவன் உடலில் பாய்ந்திருந்த விஷமும் அகன்றது.

"மகிமை வாய்ந்த வீரனே! மனித சஞ்சாரமற்ற இந்தப் பிரதேசத்திற்கு, இவ்வளவு கஷ்டத்தோடு வந்த காரணமென்ன?" என்று கேட்டார் யோகீஸ்வரர்.

"ஸ்வாமி! தங்களை பார்க்க விரும்பியே இங்கு வந்தேன்" என்று பதிலளித்தான் விக்கிரமன்.

"மிகுந்த கஷ்டங்களை அனுபவித்தாயோ?" என்று வினவினார் யோகீஸ்வரர்.

"இல்லை, இல்லை! உங்கள் கடாக்ஷத்தைப் பெற்ற மாத்திரத்தி லேயே நான் செய்துள்ள பாப காரியங்கள் அனைத்தும் மறந்து விட்டன. அப்படியிருக்க கஷ்டங்கள் எம்மாத்திரம்? பெரியோர் களின் தரிசனம் கிடைப்பது துர்லபமாயிற்றே? இன்றைக்கு நான் தன்யன் ஆனேன். மேலும் தேகம் ஒரு குறைவுமின்றித் திடமாகவும் உறுதியாகவும் இருந்தால், தன்னுடைய முன்னேற்றத்திற்கு ஒருவன் கஷ்டப்பட்டாவது முயலவேண்டும்...

"தேகம் நல்ல நிலைமையில் ஆரோக்யத்துடன் இருந்து கிழத் தன்மை வருவதற்கு வெகு காலம் இருப்பினும் இந்திரியங்களின் சக்தி குறையாமலும், ஆயுள் குறையாமல் இருக்குமாயின் ஒருவன் புத்திசாலியாயிருக்கும் பட்சத்தில் தன்னுடைய ஆத்மாவின் நன்மைக்கு மிகுந்த பிரயாசை எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் வீடு தீப்பற்றி எரியும்போது அதை அணைக்க கிணறு வெட்டுவது என்பது முடியுமா என்று சொல்வதைத் தாங்கள் கேட்டதில்லையா?" என்றான் விக்கிரமாதித்தன்.

அவனுடைய சாதுரியமான வார்த்தைகள் திரிகாலநாதரைச் சந்தோஷத்தில் ஆழ்த்திவிட்டன. அவர் அரசனை ஆசிர்வதித்துவிட்டு சுண்ணும்புக் கட்டி, யோகதண்டம், துணி ஆகிய மூன்றையும் அளித்தார்.

"அரசே! இந்தச் சுண்ணும்புத் துண்டினுல் பூமியில் எத்தனை கோடுகள் கிழித்தாலும் அத்தனை காத தூரம் ஒருநாளில் பிரயாணம் செய்துவிட முடியும். யுத்தத்தில் இறந்து போன வீரர்களை மந்திரக்கோலை வலது கையில் வைத்துக் கொண்டு தொடுவதன் மூலம் அவர்களை உயிர்ப்பித்து விடலாம். இடது கையில் பிடித்துக்கொண்டு எதிரி ராணுவத்தைத் தொட்டால் கண்மூடி திறப்பதற்குள் அழிந்து விடும். இத்துணியோ நீங்கள் விரும்பியது அனைத்தையும் கொடுக்கும்" என்ருர் யோகீஸ்வரர்.

அவரிடம் விடை பெற்றுக் கொண்டு விக்கிரமன் புறப்பட்டான். உஜ்ஜயினி நோக்கிக் காட்டின் வழியே வந்து கொண்டிருக்கையிலே அவன் உள்ளம் கலங்கக் கூடிய காட்சி ஒன்று தென்பட்டது.

சர்வலக்ஷணங்களும் பொருந்திய இளைஞனை இராஜ குமாரன் ஒருவன் காட்டிலே சுள்ளிகளைப் பொறுக்கித் தீ மூட்டி அதில் விழுந்து உயிர் விடத் தயாராக இருந்தான். விக்கிரமன் ஓடிவந்து அவனைத் தடுத்து நிறுத்தினன்.

"நீ என்ன காரியம் செய்யப் போருய்? இந்த வயதிலே வாழ்க்கையை வெறுத்துத் தீயில் குதிக்க உனக்கு எவ்விதம் தான் மனம் துணிந்ததோ?" என்று கேட்டான் விக்கிரமன்.

"அரசே! நான் ஓர் அரசகுமாரன். தாயாதிகள் சதி செய்து விரட்டிவிட்டு ராஜ்யத்தை எடுத்துக்கொண்டுவிட்டார்கள். ஏழ்மையால் உயிரைக் காப்பாற்ற மாட்டாமல் கட்டைகளை பொறுக்கித் தீ மூட்டி அதில் விழுந்து விடத் தீர்மானித்தேன். என்னைத் தடுத்து விட்டீர்களே?" என்று பதிலளித்தான் அவன்.

"அன்புள்ள நண்பா! வருத்தப்படாதே! உனக்கு நான் உதவுகிறேன்" என்று அபயம் கொடுத்து, விக்கிரமாதித்தன் தான் யோகியிடமிருந்து பெற்றுவந்த மூன்று பொருள்களையும் அவனுக்கு அளித்துவிட்டான். அப்பொருள்களின் மகிமைகளை விளக்கி, "இந்த சுண்ணும்புக் கட்டி மூலம் உன் நாட்டை அடைந்து எதிரிகளை முறியடித்து அரசைத் திரும்பப் பெறு" என்று அன்பாகக் கூறினன்.

இராஜகுமாரன் அவைகளைப் பெற்றுக் கொண்டு விக்கிரமனைப் பன்முறை வணங்கித் தன் நன்றியை தெரிவித்துவிட்டுச் சென்ருன். விக்கிரமனும் உஜ்ஜயினி திரும்பினன்.

கதையை முடித்த சித்திரரேகை பதுமை, "அரசே இவ்வளவு தூரம் தியாகம் செய்யும் மனேபாவம் உமக்கிருக்கிறதா?" என்று

போஜராஜனை நோக்கிக் கேட்டது. போஜ ராஜனும் ஒன்றும் சொல்லாமல் சிம்மாசனத்தை விட்டிறங்கிச் சென்றான்.



## 7. ஏகபோகவல்லிப் பதுமை சொல்லிய ஏழரை நாட்டுச் சனீஸ்வரன் கதை

ஏழாம் நாட் காலையில் போஜராஜன் நவரத்தினச் சிம்மாசனத்தில் ஏறியமர முயன்றபோது ஏழாம்படிக்குக் காவலான ஏகபோகவல்லிப் பதுமை அவனை தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனின் வீரத்தைப் பற்றிப் புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்த பூபதி உஜ்ஜயினியில் அரசாண்டு வரும் நாளில் சகல தந்திர மதியூகியான பட்டியை அழைத்து, "பட்டி! இப்பொழுது நம் தலைநகரத்திலிருந்து நீ, அரசாட்சியை கவனித்துக் கொண்டிரு. நான் காடாறு மாதம் சென்று வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டுத் தன் குலதேவதையான மாகாளியம்மன் கோயிலுக்குச் சென்று வணங்கினான்.

தேவி பிரசன்னமாகி, "விக்கிரமாதித்தா! இன்றிலிருந்து ஏழரை வருஷங்கள் உனக்குச் சனி தசை ஆரம்பமாகிறது. உன்னை ஆட்கொள்ளச் சனீஸ்வரன் வந்துகொண்டே இருக்கிறான். அவன் உன்னருகில் வந்ததும் எங்கு வந்தீரெனக் கேள். உன்னிடம் ஏழரை ஆண்டுகள் அதிகாரம் செலுத்த வந்தேனென்று பதிலளிப்பான். அப்பொழுது நீ அவனை வணங்கி, "சுவாமி! ஒரே நேரத்தில் என்னை நெருங்கினால் சகிக்க முடியாது. தங்களின் கட்டளைப்படியே நடந்து கொள்கிறேன்" என்று கூறி அவன் தெரிவிக்கிறபடி நடந்து கொள்" என்று சொல்லித் திருநீறும், எலுமிச்சம் பழமும் கொடுத்துக் கரக தீர்த்தமும் தெளித்து அனுப்பினாள்.

அம்மனிடமிருந்து விக்கிரமாதித்தன் வந்து கொண்டிருந்த வழியில் சனீஸ்வரன் கரிய வடிவத்துடன் எதிர்ப்பட்டான். அந்தக் கலி புருஷனின் கால்களில், விழுந்து வணங்கிய விக்கிரமாதித்தன், "சுவாமி! தாங்கள் என் முன் எழுந்தருளும் காரணம் யாதோ?" என்று வினவினான்.

"விக்கிரமாதித்தா! உன்னிடம் ஏழரை வருஷம் என் அதிகாரத்தைச் செலுத்த வந்துள்ளேன்" என்றான் கலிபுருஷன்.

அதற்கு விக்கிரமாதித்தன், "சுவாமி! அடியேனை ஒரே நேரத்தில் அதிகமாய் நெருங்கினால் என்னால் தாளமுடியாது. தங்களின் கட்டளைப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்று வணக்கமாய் தெரிவித்தான்.

"விக்கிரமாதித்தா! நீ விரும்பும் விதமே நடக்கச் செய்கிறேன். ஆனால் ஒன்று நீ செய்யவேண்டும். ஐம்பத்தாறு தேசத்து அரசர்களையும் உன் ஆணைக்கு அடங்கி நடக்கச் செய்ததுபோல், நீயும் மதுராபுரியை அரசாளும் மதுரேந்திர ராஜனிடம் சென்று, ஏழரை வருஷம் வரை அவனுக்கு அடங்கி நடந்து, முடிவில் ஏழரை நாழிகை நேரம் அவனுக்கு வெற்றிலைப் பெட்டி தூக்கும் அடைப்பத் தொழிலும் செய்ய வேண்டும்!" என்று சனீஸ்வரன் தெரிவிக்க, விக்கிரமாதித்தனும் அதற்குச் சம்மதித்து தன் கையிலிருந்த மோதிரத்தைக் கழற்றி சனீஸ்வரன் கையில் கொடுத்து, "சுவாமி! இந்த ஏழரை வருடம் என் நாட்டு மக்களை ஒரு குறைவுமின்றித் தாங்கள் பரிபாலித்து வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு, பட்டியை அழைத்து, நடந்த தனைத்தையும் விளக்கி, ஆவனவற்றை திட்டப்படுத்திவிட்டு, பொழுது சாய்ந்ததும் வேதாளத்தோடு பிரயாணப்பட்டு, மனித சஞ்சாரமின்றிக் கொடிய காட்டு மிருகங்கள் நடமாடுகிற ஒரு மலையடிவாரத்தை அடைந்தான். அங்கு ஓர் ஆலவிருக்ஷத்தி னடியில் இறங்கி, வேதாளம் கொண்டுவந்த உணவு வகைகளை அருந்தி வேதாளத்தைக் காவல் வைத்துவிட்டு, அவ்விடத்திலேயே களைப்பாறப் படுத்திருந்தான்.

அப்போது அவலட்சணமான உருவமுள்ள ஒரு பெண் தன்னந்தனியாகத் தென்பட்டாள். அவளைக் கண்டு வியப்புற்ற விக்கிரமாதித்தன், வேதாளத்திடம் யாரென மெல்ல விசாரிக்கும்போது, அவள் தெய்வலோகத்திலிருந்து இறங்கி வந்த அப்சரஸ் என்று தெரிந்தது.

தேவலோகத்தில் இந்திரன் சபையில் வெண்சாமரம் வீசும் மங்கையர் இருவர் இருந்தனர். அவர்களுக்கு இரத்தினமாலை, முத்துமாலை என்ற பெயர்கள் விளங்கின. முன்னொரு சமயம் விக்கிரமாதித்தன் தேவலோகத்திற்கு அரம்பையரின் நடனத்தை ஆராய்ந்து தீர்ப்பளிக்கச் சென்றிருந்தபோது அவனைக் கண்டு இரத்தினமாலை மயங்கி மனப்பூர்வமாகக் காதலித்தாள். விக்கிரமாதித்தன் பூவுலகில் வந்த பின்பு, அவனையே எண்ணி ஏங்கி அவளது மோகம் அதிகரிக்க, இதயதாபம் தாங்கமாட்டாது, ஒருநாள் அவள் தேவேந்திரனிடம் தன் மனசின் தாபத்தைக் கூறி, ஒருமுறை பூவுலகம் சென்றுவர அனுமதி கேட்டாள்.

அதற்கு தேவேந்திரன், "இரத்தினமாலையே! இந்தச் சமயத்தில் நீ அவனிடம் சென்றால் அவன் உன்னை விரும்பமாட்டான். உன்னிலும் பன்மடங்கு பேரழகு வாய்ந்த பிரியநாயகியர் பலர் அவனுக்கிருக்கின்றனர். ஆகவே அவன் காடாறு மாதம் செல்லும்போது சென்றால், உன்னைக் காதலித்து உன் விரகதாபம் தீர்ப்பான். அந்தச் சமயம் பார்த்து நான் உன்னை அனுப்பி வைக்கிறேன்" என்று வாக்களித்திருந்தான். அதன்படி விக்கிரமாதித்தன் உஜ்ஜயினியை விட்டுப் புறப்பட்டதும் தேவேந்திரன் இரத்தினமாலையை அழைத்து, "இரத்தினமாலே! ஏழரை வருஷம் சனீஸ்வரன் ஆக்ஞையினால் மதுராபுரி மன்னனிடம் சேவகம் செய்யப் புறப்பட்டுச் செல்லுகிறான், விக்கிரமாதித்தன். நீ இப்போது சென்று உன் மனம் மகிழ அவனுக்குப் பணிவிடை செய்து, அவன் உஜ்ஜயினி திரும்பியதும் புறப்பட்டு வந்துவிடு. மேலும் நீ அப்சர ஸாகையால் பகற்பொழுதில் உன்னுடைய தெய்வீக ஒளியை யெல்லாம் மறைத்து விகாரரூபமாகவும், இரவு நேரத்தில் சுயவுருவுடனும் இரு!" என்று சொல்லி இரத்தினமாலையைப் பூவுலகம் அனுப்பினான். இரத்தினமாலையும் அவ்வாறே அவலட்சண உருவுடன் விக்கிரமாதித்தன் சயனித்திருக்கும் ஆலவிருக்ஷத்திற்கு நேராய் வந்தாள்.

அவளிடம் அனைத்தையும் விசாரித்துத் தெரிந்துக்கொண்ட விக்கிரமாதித்தன் "பெண்ணே! எங்கே உன் சுயரூபத்தைக் காட்டு!" என்று கேட்க, அவளும் தன் சுய உருவமெடுத்து நின்றாள். இரத்தினமாலையின் இயற்கையான பேரழகைக் கண்டு ஆனந்தங்கொண்ட விக்கிரமாதித்தன், வேதாளத்தை அழைத்து, "வேதாளமே! நானும் இரத்தினமாலையும் இந்த ஆலமரத்தி னடியில் உல்லாசமாக மகிழ்ந்திருந்து கண்ணுறங்கி விடுவோம், நீ கண் விழித்து காவலாயிரு!" என்று கூறி அவ்வாறே மகிழ்ந்திருந்தான்.

மறுநாள் பொழுது விடிந்ததும் விக்கிரமாதித்தன் சேவகனைப் போன்று மாறுவேடம் அணிந்து, கத்தி கேடயம் முதலான பதினெட்டுவிதமான ஆயுதங்களும் எடுத்தேகி, தன் குலதேவதையை வணங்கித் திருநீறணிந்து கொண்டு மதுராபுரி நகரை நோக்கிச் சேவகத்தொழில் செய்யப் புறப்பட்டான். பகல் நேரமானதால் அப்சரஸான இரத்தினமாலையும் தன் சொந்த உருவத்தை மறைத்து, அவலட்சண வடிவமெடுத்து அவனைப் பின் தொடர்ந்தாள். இருவரும் வேதாளத்துடன் பிரயாணத்தைத் தொடங்கி சோலைகளையும், சாலைகளையும் கடந்து சென்று கொண்டிருக்கும்போது, எதிரே ஒரு மடம் தென்படவே, அதிலிறங்கினார்கள். விக்கிரமாதித்தன் அங்குள்ள ஒரு

தடாகத்தில் குளிப்பதற்காகச் சென்று பல்விளக்கிக் கொண்டிருந்தான். அவ்வேளையில் அக்குளத்தில் அனந்தனென்கிற சர்ப்பமும், சலந்தரனென்கிற தவளையும் முற்பிறவியில் அரசர்களாயிருந்து நாரதரின் சாபத்தால், பாம்பாகவும், தவளையாகவும் மாறி வந்திருந்தன. அவற்றில் அனந்தனென்னும் பாம்பு, மீன்களையும், தவளைகளையும் பிடித்துத் தின்றுகொண்டிருக்கும். அன்றைய தினம் அதற்கு அதிகப்பசியாயிருந்ததால் அது சலந்திரன் என்னும் தவளையின் மீது பாய்ந்து கௌவிக் கொண்டது. அப்போது சலந்திரன், "அனந்தனே! நாமிருவரும் நாடாளும் மன்னர்களாய் பிறந்தும் மடமையால் மதியிழந்து நாரதமுனிவரின் சாபத்தால் இந்நிலையடைந்தோம். இப்போது உன் ஆறுப்பசிக்கு என்னையே பிடித்துத் தின்ன முயல்கிறாய்! இதை விக்கிரமாதித்தபூபதி கண்டால், உன்னைச் சும்மாவிடமாட்டார்!" என்றது. பாம்பு, தவளை முதலான பிராணிகளின் நயனபாஷையறிந்தவனாதலால், விக்கிரமாதித்தன், உடனே தனது தொடையைக் கிறித் தேங்காய் அளவு சதையை எடுத்து சர்ப்பத்தின் முன்னே வீசினான். சர்ப்பமும் சலந்திரனை விட்டு மனிதனின் சதையை ருசித்துப் பசியாறிற்று.

விக்கிரமாதித்தன் குளித்துவிட்டு மடம் சென்று, இரத்தினமாலையையும், வேதாளத்தையும் அழைத்துக் கொண்டு மீண்டும் அவ்வழி நடக்கையில், அனந்தனென்கிற பாம்புக்கும், சலந்திரனென்கிற தவளைக்கும் பூர்வஞானமுண்டாயிற்று. தங்களுக்காகத் துடைச் சதையைக் கிறிப்போட்டது விக்கிரமாதித்தனேயல்லாது, வேறு சாதாரண மனிதனாகயிருக்க இயலாது என உணர்ந்து, அவனால் தங்களின் சாபம் விமோசன மடையவேண்டுமென்றும், தடாகத்தைவிட்டு வெளிப்பட்டு, அவன் செல்லும் வழியிலே இரண்டும் குறுக்கிட்டு வணங்கின. விக்கிரமாதித்தனிடம் தங்களுடைய சாபவரலாறைக் கூறி, "மன்னர் மன்னவனே! நாங்களிருவரும் நாரதமுனிவரிடம் மனம் வருந்திச் சாபவிமோசனங் கேட்டபோது, விக்கிரமாதித்தருக்கு சனீஸ்வரன் பிடித்திருக்கும் ஏழரை வருஷகாலமும் அவருக்கு நாங்கள் தொண்டு புரிந்தால் சாபவிமோசனம் ஆகுமென்று நாரதர் சொன்னார். ஆகவே நாங்களும் ஏழரை வருஷம் தங்களுக்குத் தொண்டு புரிய வந்திருக்கிறோம்" என்று சொல்லின.

அதற்கு விக்கிரமாதித்தன், "நான் மதுராபுரி நகரை அடைய இன்னும் எட்டு நாட்கள் ஆகும். அங்கே சென்றதும் நகரின் வட பகுதியில் உள்ள மடத்திலே தங்கியிருப்பேன். அப்பொழுது அங்கே நீங்களும் வாருங்கள்" என்று கூறிவிட்டு,

அவ்வாறே மதுராபுரிச் சத்திரத்தை அடைந்ததும், இரத்தின மாலே, வேதாளம், அனந்தன், சலந்திரன் முதலானவர்களை சத்திரத்திலே தங்கியிருக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டு சேவகத்திற்குத் தக்க வேடம் பூண்டு மதுராபுரி மன்னனின் அரசவையை அடைந்து வணங்கி நின்றான்.

அவனுடைய பணிவையும், அவனுடைய முகத்திலிருந்த வீரப்பொலிவையும் கண்ட மதுராபுரி மன்னனும், "வீரனே! நீ யார்?" என்று கேட்டான். "அரசே! என் பெயர் ஆதித்தன்! தாங்கள் தர்மவான் என்றும், சுத்த வீரர்களுக்குத் தகுந்த கௌரவம் அளிக்கிறீர்கள் என்றும் கேள்விப்பட்டுத் தங்களிடம் சேவகனாய் சேவை செய்யவே வந்துள்ளேன்'' என்றான் விக்கிரமாதித்தன்.



அதைக் கேட்டு மகிழ்ந்த மதுராபுரி மன்னன் தன் மந்திரியை நோக்கி "அமைச்சரே! நம்மிடத்தே வேண்டிய சதுரங்க சேனைகளும், காலாட்களும் இருக்கிறார்களே, அவர்களுடைய ஆயுத அணிகலன்களின் பிரகாசமெல்லாம் இவனுடைய முகத்தின் வீர தேஜஸிற்கு இணையாகுமா? என்ன இருந்தாலும் சமயத்திற்கு நமக்கு இப்படி ஒரு வீரன் வேண்டியதுதான்!" என்று கூறிவிட்டு, "ஆதித்தா! இன்று முதல் உன்னைச் சேவகத்திற்கு வைத்துக் கொள்ளுகிறோம். என்ன சம்பளம் கேட்கிறாய்?" என்று கேட்க, விக்கிரமாதித்தனும், "நாளொன்றுக்கு ஆயிரம் பொன் சம்பளம் வேண்டும் அரசே!" என்றான். மன்னனும் அதற்கிசைந்து கணக்கர்களை அழைத்து இலாவணம் பதியச் சொல்லி, பொக்கிஷதாரர்களைத் தினம் ஆயிரம் பொன் கொடுக்கும்படி திட்டஞ்செய்து, சேவகனுக்கு வேண்டிய விடுதி வசதிகளும் ஏற்பாடுசெய்து, அன்றையச் சம்பளம் ஆயிரம் பொன்னையும் ஆள்வசம் கொடுத்துத் தூக்கிச் சென்று கொடுக்குமாறு கட்டளையிட்டு, விக்கிரமாதித்தனை அனுப்பி வைத்தான்.

மடத்திலே அனந்தனும் சலந்திரனும் மானிட உருக் கொண்டு விக்கிரமாதித்தனை வரவேற்க, அவனும் அவர்களிடம்

நடந்தவற்றையெல்லாங்கூறி, தனக்காக அமர்த்தப்பட்ட தன் மாளிகைக்கு அவர்களை அழைத்துச் சென்றான். அப்போது பகல் நேரமானதால் இரத்தினமாலையின் அவலட்சண உருவத்தை வீதியில் எவரும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அவள் தங்களுக்குரிய மாளிகையை அடைந்ததும், தினந்தோறும் சமைப்பதற்குத் தேவையான உணவுப் பண்டங்களை அனந்தன், சலந்திரன் இருவரும் கடைத்தெருவில் வாங்கி வரும்படி திட்டஞ்செய்தாள். அவர்களும் அவ்வாறே வாங்கிவர இரத்தின மாலை அறுசுவை உணவு சமைத்து யாவருக்கும் அமுது படைத்தாள். இரவும் வரவே இரத்தினமாலையும் தன்னுடைய பேரழகு வாய்ந்த சுய உருவமடைந்து விக்கிரமாதித்தனுடைய பள்ளியறைக்குப் படுத்துறங்கச் சென்றாள். அவ்வாறன இராக்காலங்களில் அனந்தன் பாம்பு உருவமெடுத்து, மாளிகையைச் சுற்றிக் கொண்டு வாயைத் திறந்து மேல்வாய்ப் பல் தலைவாசலின் மேற்படி நிலையிலும், கீழ் வாய்ப்பல் கீழ்ப்படி நிலையிலுமாக இருக்கும்படியும், சலந்திரன் தவளையுருவமெடுத்துக் கூடாரம் போலவும், பந்தலைப் போலவும், கவிழ்ந்து கொண்டும் காவல் புரிந்து வரலாயினர். வேதாளம், விக்கிரமாதித்தன் இரத்தினமாலை இருவருக்கும் அருகில் இருந்து காவல் புரியும். மீண்டும் பகற்பொழுதானதும் சலந்திரனும், அனந்தனும் மனித ரூபமாவார்கள். இரத்தினமாலை அவலட்சண ரூபம் தரிப்பாள்.

விக்கிரமாதித்தன் காலையும், மாலையும் மதுராபுரி மன்னனின் கொலுவிற்குச் சென்று சேவகம் செய்து தினம் ஆயிரம் பொன்பெற்றுக் கொண்டுவரும் பொழுது, மன்னவனின் கொலுவிலிருக்கும் கார்கோடகன், கோடிகன் என்னும் அண்ணன் தம்பியரான இரு சேவகர்களும் ஆதித்தனென்றும் விக்கிரமாதித்தனுக்கு நெருங்கிய நண்பர்களானார்கள். அவர்களிருவரும் அடிக்கடி விக்கிரமாதித்தனின் மாளிகைக்கு வந்து போக ஆரம்பித்தார்கள். ஆனால் அவர்கள், விக்கிரமாதித்தன் இல்லாமல் மாளிகைக்குத் தனியாக வர முடியாதபடி அனந்தன் கடுமையாகக் காவலிருந்தான். இது அவர்களுக்குச் சிரமமாய்த் தோன்றவே, விக்கிரமாதித்தனிடம் சொல்லி, தங்களை எந்த நேரமும் தங்கு தடையின்றி மாளிகையினுள் அனுமதிக்கும்படி ஏற்பாடு செய்து கொண்டார்கள். ஒருநாள் இரவு விக்கிரமாதித்தனின் மாளிகைக்குள் நுழைந்த அவ்விரு அரசாங்கச் சேவகர்களும் இரவுக் காலத்தில் சுய உருவிலிருந்த இரத்தினமாலையை எதிர் பாராதவிதமாகக் கண்டு அவளுடைய அதியற்புத அழகைப்பற்றி தங்களுக்குள் பேசி வியந்தனர்.

மன்னன் மதுரேந்திரனும், சேவகன் கார்கோடகனும் ஒரு சமயம் தனித்துப் பேசிக் கொண்டிருக்கையில் ஆதித்தன் மாளிகையிலே, தான் இரத்தினமாலையைக் கண்ட விபரத்தைக் கூறி, "மகாராஜா! உங்களிடம் ஊழியம் செய்யும் சேவகனை ஆதித்தன், உலகத்திலேயே மிகவும் பேரழகியான ஒருத்தியை எங்கிருந்தோ கொண்டு வந்து தன் மாளிகைக்குள் ஒளித்து வைத்திருக்கிறான்! அவளைப் பார்த்தால் தேவகன்னிகை போல் இருக்கிறது! ஆனால் அவளோ உங்கள் ஊழியனுக்கு அடிமைபோல் ஊழியம் செய்கிறாள். அந்தப் பாக்கியத்தை எண்ணினால், மற்ற சேவகர்களுக்கு மட்டுமல்ல, உலகத்திலுள்ள மன்னாதி மன்னர்களுக்குக் கூடப் பொறாமை உண்டாகும்!" என்றான்.

அதுகேட்டு மோகங் கொண்ட மன்னன், "கார்கோடகா! அந்தப் பெண்ணை நான் எப்படியும் ஒருமுறை இந்தக் கண்ணால் காணவேண்டுமே! அதற்கு வழி என்ன?" என்றான்.

மாளிகையின் தெருவாசலில் அனந்தனின் கட்டுக்காவல் அதிகக் கடுமையாயிருப்பதை உணர்ந்திருந்த கார்கோடகன், "மன்னர் பிரானே! அந்த மாளிகைக்குள் என்னையும் என் தம்பியையும் தவிர வேறு யாரும் நுழையமுடியாது. நீங்கள் ஆசைப்பட்டால் என் சகோதரன் கோடிகனின் வேடத்தில் உங்களைத் தந்திரமாக அழைத்துச் செல்லுகிறேன். அதைத் தவிர வேறு வழியில்லை!" என்றான்.

அரசனும் அதற்குச் சம்மதித்தான். அதன்பின் ஒருநாள் இரவு சேவகன் ஆதித்தனின் மாளிகையிலிருந்து கார்கோடகன் மட்டும் அவனைச் சந்தித்து விட்டு வெளியே வரும்போது, வெளியில் காவலிருக்கும் அனந்தனிடம், "நான் போனதும் வாசற் கதவை அடைத்து விடாதே. என் சகோதரனை அழைத்து வருமாறு உன் எஜமானன் சொல்லியிருக்கிறார்" என்று கூறிவிட்டு வெளியே சென்று, கோடிகனின் உருவிலிருந்த மதுரேந்திர மன்னனை விக்கிரமாதித்தனின் மாளிகைக்குள் அழைத்துப் போனான். அப்போது இரத்தினமாலை பேரெழில் வாய்ந்த தன் சுயஉருவம் பெற்று விக்கிரமாதித்தனுடன் களித்திருந்து இருவரும் தங்களையறியாமல் நித்திரை செய்து கொண்டிருந்தார்கள். தேவ கன்னியான இரத்தினமாலையின் புத்தம் புது அழகை மறைவில் நின்று கண்ட மன்னன் அங்கேயே சொக்கிச் சுழன்று மயங்கி வீழ்ந்துவிட்டான். இது ஏது ஆபத்து என்று கார்கோடகனும் பதறி அவனை மெதுவாகத் தூக்கி வேறிடம் சென்று பலவாறு தேற்றினான்.

பிறகு அனந்தனைக் கதவை மூடிக்கொள்ளச் சொல்லிவிட்டு இருவரும் அரண்மனை சென்றனர். மன்னன் அன்றிரவு முழுதும்

ரத்தினமாலையை அடையும் மார்க்கத்தைக் கேட்டான். அதற்கு மதியமைச்சன், "அரசே! ஆதித்தனே உங்களிடம் நாளொன்றுக்கு ஆயிரம் பொன் சம்பளம் வாங்கும் ஊழியன்! மேலும் யுத்தவீரன். அவனை வென்று அப்பெண்ணைக் கைக் கொள்வதென்பது முடியாத காரியம். அவனே உம்முடைய சேவகன். அவனை எதிர்த்தால், அதைக் கேள்விப்படும் பிரதேசத்து மன்னர்கள் நம்மை இகழ்ச்சியாகப் பேசுவார்கள்" என்றான்.

"மந்திரி! என்னால் அந்த மங்கையின் மீதுள்ள மோகத்தை மறக்க முடியவில்லை. எந்தவிதமாகிலும் நான் அவளை அடையாவிடில் என் உயிர் உடலில் நில்லாது" என்று கெஞ்சினான் மன்னன்.

மந்திரி சிறிது நேரம் ஆழ்ந்து சிந்தித்து, "மன்னவா! அந்த வல்லமை மிக்க ஆதித்தன் அருகிலிருக்கும்போது, அவனுடைய மாளிகையிலிருக்கும் கட்டழகியை யாரும் அடைய முடியாது. அவனை அவளருகிலிருந்து தந்திரமாகத்தான் கிளப்பி அழிக்கவேண்டும். அதற்கு ஓர் உபாயம் உண்டு! நமது மதுராபுரியிலிருந்து நூறு யோசனை தூரத்தில் வாழவந்தான் புரம் என்னும் நகரம் ஒன்று இருக்கிறது. அந்நகரத்து அரசன் வாரணகேசரிக்கு முத்துநகை என்றொரு பெண்ணிருக்கிறாள். அப்பெண் சிரிக்கும்போதெல்லாம் முத்துக்கள் சிந்தும். அம்முத்துக்களை முண்டக நகரி என்னும் நகரிலுள்ள கோரக்கனென்ற வணிகர் கடைக்கனுப்ப, அவன் ஒரு சுவடு முத்தை லட்சம் பொன் விலைக்கு விற்று அப்பொன்னைக் கோடி கோடியாகச் சேர்த்து அரசனுக்கு அனுப்புவான். இப்போது அந்த வணிகரின் கடையில் முத்துக்கள் கிடைப்பதில்லை. காரணம், அந்தப் பெண்ணின் மீது ஆசைப்பட்ட ஒரு முனிவன் தன் வல்லமையால் அப்பட்டணத்திலுள்ளவர்களையும், அரசனையும் சபித்து பிரக்ஞையற்ற சவங்கள் போல் கிடத்தி அவ்வூரை ஜன சஞ்சாரமில்லாதபடி செய்து, அந்த முத்து நகையை மட்டும் அவ்வூரிலே தன் வசமாக்கி வைத்துக் கொண்டிருக்கிறான். அப்பெண் தீராக் கவலை கொண்டிருப்பதால் சிரிப்பதே கிடையாது. முனிவன் வெளியே செல்லும் போதெல்லாம் முத்து நகையாளைப் பிணம்போல் பிரக்ஞை யிழக்கச் செய்து படுக்க வைத்து விட்டுத்தான் போகிறான். திரும்பி வந்ததும் மறுபடி பிரக்ஞை பெற்றெழச் செய்கிறான். உங்கள் சேவகனை ஆதித்தனை அந்நகருக்கு அனுப்பி குறிப்பிட்ட ஒரு கெடுவிற்குள் அம்முத்தைக் கொண்டுவரச் சொல்லி உத்தரவிட்டால், முத்தைக் காணாது அவன் முனிவனிடம் செல்ல நேரிடும்! அப்போது முனிவனால் சவமாகும்படி சபிக்கப் படுவான். அங்கே அவன் ஒழிந்துவிட்டால், குறிப்பிட்ட தவணை

கழிந்ததும், அவனுடைய நிர்க்கதியான நங்கையை நாம் கவர்ந்து விடலாம். இதைத் தவிர வேறு எந்தவித உபாயத்தாலும் தாங்கள் அப்பெண்ணை அடைய இயலாது!" என்றான்.

இதைக் கேட்டு மனம் மகிழ்ந்த மதுரேந்திர மன்னன் மறுநாள் கொலுமண்டபத்தில் தன்னை வணங்க வந்த ஆதித்தனை அருகில் அழைத்து, "ஆதித்தா! நமக்குச் சவுளிக்கடுக்கன் முடிக்க முத்து வேண்டியிருக்கிறது. முண்டக நகரில் கோரக்கனென்னும் செட்டியார் வசமிருக்கும் விநோத முத்தை வாங்கி வா!" என்றான்.

"தங்கள் உத்தரவுப்படியே செய்கிறேன்" என்றான் ஆதித்தன்.

"நீ சென்று திரும்ப எத்தனை நாட்கள் வேண்டும்?" என்றான் மன்னன்.

"நாற்பது நாட்கள் வேண்டும்!" என்றான் ஆதித்தன்.

"இதோ, நாற்பது நாட்களுக்குச் சம்பளம் நாற்பதினாயிரம் பொன்! அதோடு முத்தின் விலை லக்ஷம் பொன்!" என்று பொன்னையெல்லாம் கொல்லர் தலையில் ஏற்றுவித்து ஆதித்தனை அனுப்பினான் அரசன்.

விக்கிரமாதித்தன் தன் மாளிகைக்கு வந்து பொன்னைப் பெற்றுக்கொண்டு கொல்லர்களை அனுப்பிவிட்டு, இரத்தினமாலை, அனந்தன், சலந்திரன் மூவரிடமும் அரசனிட்ட கட்டளையைச் சொல்லி, நாற்பது நாளும் பாதுகாப்பாயிருக்கவேண்டுமே என்றான். அதற்கு அனந்தன், "சதுரங்கசேனை வந்தாலும் சரி, சின்னா பின்னாப்படுத்துவேன்!" என்று கூறினான். சலந்திரனோ, "ஐம்பத்தாறு தேசத்தரசர்கள் வந்தாலும் சரி, நொடிப்பொழுதில் பொடியாக்குவேன்!" என்றான். இரத்தினமாலையோ, "என் மனம் பொருந்தி ஒருவனிடம் ஆசை வைத்தாலுண்டு. இல்லையெனில் பலாத்கார எண்ணத்தோடு ஒருவன் பக்கத்தில் வருவானாகில் என் பார்வையிலேயே அவனைப் பஸ்பமாக்கி விடுவேன்!" என்று கூறினாள். அதன் பின்னர் நிம்மதியுற்ற விக்கிரமாதித்தன் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு மதுராபுரியைக் கடந்ததும், வேதாளத்தின் மீதேறிக்கொண்டு காடு, மலை வனாந்திரங்களைக் கடந்து சென்று, முண்டகநகரியென்னும் பட்டணத்தை அடைந்தான்.

அப்பட்டணத்தில் கோரக்கனென்ற செட்டியாரைப் பற்றி விசாரித்து, அவரிருக்குமிடம் சென்று பார்த்து, "செட்டியாரே! உம்மிடம் ஒரு சுவடு முத்து லக்ஷம் பொன் விலையாக யிருக்கிறதாமே. அதில் சுவடு ஒன்று கொடும்" என்று கேட்டான்.

அதற்குச் செட்டியார், "இப்போது அத்தகைய முத்து அகப்படாது!" என்று சொன்னார். "அம்முத்து விளைகிற தெவ்விடம்?" என்றான் விக்கிரமாதித்தன்.

"அம்முத்து விளைவதல்ல - உதிர்வது! வாழவந்தான்புரத்தில் பாரணகேசரி ராஜன் குமாரத்தி முத்துநகை என்பவள் சிரித்தால், அவள் வாயிலிருந்து முத்துக்கள் உதிரும். இப்போது அவள்மீது ஆசைகொண்ட ஒரு முனிவன் பட்டணத்தையே நிர்ஜீவனாகச் சபித்து விட்டு, அவளைத் தன் பாதுகாப்பில் வைத்துக் கொண்டிருக்கிறான். அவள் வாய்திறந்து சிரிக்காமல் துக்கத்தோடிருப்பதால் இப்போது வாயிலிருந்து முத்துகள் உதிர்வதில்லை!" என்றார் செட்டியார்.

உடனே அங்கிருந்து புறப்பட்ட விக்கிரமாதித்தன், வாழவந்தான்புரத்தின் எல்லையை அடைந்து, அரண்மனையை நோக்கிச் சென்றான். வேதாளத்திடம் முன்பு அடக்கம் செய்திருந்த ஆடையாபரணங்களையெல்லாம் வாங்கி அணிந்து கொண்டு வீதிவழியே செல்லும்போது, அந்தப்பட்டணமும், அரண்மனை வட்டாரமும் நிர்ஜீவனாய் பாழடைந்திருக்கும் பயங்கரத்தைக் கண்டு திடுக்கிட்டான். ஆங்காங்கே யானைகளும், குதிரைகளும், கணக்கர்களும், சேவகர்களும், நின்றது நின்றவாறு, இருந்தது, இருந்தவாறே பிணமாகியிருந்தனர். இவற்றையெல்லாம் கண்டு வியந்தபடி சென்ற விக்கிரமாதித்தன் அரண்மனையிலுள்ள அரசவை மண்டபத்தை அடைந்ததும், அங்கேயும் அரசன், அமைச்சன் முதலான அனைவரும் அவ்வவ்வாறே பிணங்கள் போல் விறைத்து நிர்ஜீவனாயிருப்பது கண்டான். மகாவல்லமைசாலியான முனிவனின் சாபத்தால் அல்லவோ இவ்வளவு கொடுமையும் நிகழ்ந்திருக்கிறது என்று நினைத்தவனாய், வேதாளத்தையனுப்பி அம்முனிவனிருக்கு மிடமும், அப்பெண்ணை அவன் வைத்திருக்குமிடமும் அறிந்து வரும்படி செய்தான்.

அவ்வாறே வேதாளம் சென்று பார்த்துவந்து, "அரசே! அந்த முனிவன் மிகவும் மந்திரம் வல்லவன். முன் ஆலோசனையு முள்ளவன். விக்கிரமாதித்த பூபதியான உமக்கு அந்தப் பெண் முத்து நகையிருப்பது தெரிந்தால் முனிவனில்லாத சமயத்தில் அவளை எடுத்துச்சென்று விடுவீர்களென நினைத்து, அம் முனிவன் வெளியில் செல்லும்போதெல்லாம் அரண்மனை அந்தப்புரப் பள்ளியறையிலுள்ள இளவரசியின் தலையை வெட்டி முன் வாசலில் வைத்துவிட்டுச் சென்று, திரும்பி வந்த பிறகு முறைபடி தலையை ஒட்டவைத்து உயிரூட்டி அவளுடன் சல்லாபமாகப் பேசிக் கொண்டிருப்பான். அம்முனிவன்

தற்பொழுது தீ வளர்த்து மாபெரும் ஒரு யாகம் செய்கிறான். அந்த யாகத்தைச் செய்து முடித்ததும் பதினான்கு உலகத்தையும் தன் வசப்படுத்தி, இப்பட்டணத்தின் அரசன் முதலானவர்களை எழுப்பி அவர்களின் சம்மதத்தின் பேரில் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்றிருக்கிறான்" என்று சொல்லியது.

அதைக்கேட்ட விக்கிரமாதித்தன் உடனே அப்பெண்ணிருக்கும் அரண்மனை அந்தப்புரம் சென்று முத்துநகையின் தலை அறுக்கப்பட்டு வாயிற்படியில் வைத்திருக்கும் காட்சியைக் கண்டு பெரிதும் வேதனைப்பட்டான். வேதாளத்தை நோக்கி, "இப்பெண்ணை உயிர்ப்பிக்கும் வழி யாது?" என்று கேட்டான்.

அதற்கு வேதாளம், "அரசே! அதோ இருக்கும் தூங்கு மஞ்சக் கட்டிலின் மேல் ஒரு பிரம்பு கிடக்கிறது. அதை எடுத்துப் பார்த்தால் ஒரு கணு தென்படும். அக் கணுவைத் திருகினால் அதன் வழியாகத் தைலம் வெளிப்படும். அத்தைலத்தை எடுத்துக் கழுத்தைச் சுற்றிலுந்தடவி, கட்டிலில் கிடக்கும் உடலோடு தலையை ஒட்டவைத்து அந்தப் பிரம்பால் தட்டி எழுப்பினால் உடனே முத்து நகை தூங்கி விழிப்பவள் போல் உயிர்பெற்று எழுந்திருப்பாள்" என்றது.

அவ்வாறே விக்கிரமாதித்தனும் செய்ய, முத்துநகையும் துயில் நீங்கி விழிப்பவள் போலக் கண் விழித்தெழுந்தாள். எதிரே கோரமான முனிவன் இருப்பான் என்ற பயத்துடன் எழுந்த முத்துநகை, தன்னை எழுப்பிய வீரன் இராஜதேஜஸுடன் விளங்குவதைக் கண்டதும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்து, முகம் மலர்ந்து புன்முறுவல் பூத்தாள். தன்னை எழுப்பியவனின் வரலாறு அறிய ஆவல் மிகுந்தவளாய், விக்கிரமாதித்தனை நோக்கி, "தாங்கள் யார்? எந்த தேசத்தைச் சேர்ந்தவர்?" என்று கேட்டாள்.

"என் பெயர் விக்கிரமாதித்தன்! உஜ்ஜயினி மாகாளிப் பட்டணத்து மன்னன்!" என்றான் விக்கிரமாதித்தன்.

இதைக் கேட்ட முத்து நகை, "முனிவன் இவருக்கஞ்சித்தான், என் தலையைத் தனியாக அறுத்து வைத்துவிட்டுப் போயிருக்கிறான். அப்படியிருக்க இவரே வந்து என்னைக் காப்பாற்றிவிட்டார். விதியின் சக்தியை முனிவனாலென்ன, அம்மூவர்க்கும் முதல்வனாலும் வெல்ல இயலுமோ?" என்று எண்ணி வாய்விட்டுக் கலகலவென்று சிரித்தாள். அப்போது அவள் வாயிலிருந்து சில முத்துக்கள் உதிர்ந்தன. அம்முத்தையெல்லாம் விக்கிரமாதித்தன் பொறுக்கித் தனது

கச்சைப் புரையில் வைத்துக்கொண்டு அம் முத்துநகையைப் பார்த்து, "பெண்ணே! நீ சிரித்த காரணம் யாது?" என்று வினவினுன். அதற்கு முத்துநகை புன்முறுவலுடன், "பூமானே! முனிவன் உம்மிடமிருந்து என்னைக் காக்க வேண்டுமென்று இவ்வாறு என் தலையை அறுத்து வைத்துப் போயிருக்கும் போது நீர் வந்து என்னை எழுப்பிவிட்டீரே, முனிவனின் எண்ணம் முறிந்துவிட்டதே என்று வயிற்றெரிச்சல் தீர வாய்விட்டுச் சிரித்தேன்! பிரபோ! நான் எத்தனை நாட்களுக்கு இந்தச் சிறைவாசத்தையனுபவிப்பது? இன்று எனக்கு விடிவுகாலம் பிறக்கிறதென நம்புகின்றேன். அந்தக் கோரமுனிவன் இங்கே திரும்பிவருவதற்குள் தங்களுடன் இப்பொழுதே வந்து விடுகிறேன்!" என்ருள்.

"பெண்ணே! உன்னை யாருமறியாமல் களவில் கொண்டு போவது சுத்த வீரனுக்கழகல்ல! இந்த முனிவனைக்கொன்று, இப்பட்டணத்தைப் பழையபடி ஜனசஞ்சாரமுள்ளதாக்கி உன் தாய் தந்தையரையும் உயிர்ப்பித்து, அவர்களின் சம்மதத்தோடு உனக்கு மணமாலையிட்டு அழைத்துச் செல்வதே முறையாகும்! அதற்காக நீ ஓர் உபாயம் செய்யவேண்டும். நான் மறுபடி உன் தலையை முன்போல அறுத்து வைத்துவிட்டுப் போய்விடுகிறேன். முனிவன் வழக்கம் போல் திரும்பி வந்து உன்னை உயிர்ப்பித்ததும், அவனுடன் ஊடல் செய்து, அவன் மோகாந்த காரமாயிருக்கும் பொழுது நீ சலித்துக் கொள்பவள்போல நடித்து, மந்திரம் வல்ல அந்த முனிவனின் உயிரைக் கொல்லக்கூடிய இரகசியத்தையும், உன் தாய் தந்தையர் உயிர் மீளக்கூடிய உபாயத்தையும் விசாரித்து அறிந்துகொள். மிகவும் தந்திரமாகச் சிறிதும் சந்தேகம் தோன்ருதவாறு நடந்துகொள். இல்லையெனில் முனிவனுகையால் சபித்துவிடுவான். சாபம் விமோசனமாக அநேக நாட்கள் ஆகும். நானும் நாளை உதயத்திற்கு வருகிறேன்!" என்று விக்கிரமாதித்தன் கூறி, முத்து நகையின் தலையை முன் போலவே தனியாக எடுத்து வைத்து விட்டு வேதாளத்தை அங்கேயே பல்லியுருவாகியிருந்து முனிவன் கூறும் பதிலை ஒட்டுக் கேட்டு வந்து சொல்லும்படி ஏற்பாடு செய்து விட்டு, நகருக்கு வடதிசையிலிருந்த ஒரு பத்திர காளியம்மன் கோயிலுக்குச் சென்று அம்மனை வணங்கி, அம்மனிடம் திருநீறு, தீர்த்தம் பெற்று அவ்வாலயத்திலேயே சயனித்திருந்தான்.



சூரியன் அஸ்தமித்து அந்தி இருள் படரத் தொடங்கியதும், அரண்மனைக்குத் திரும்பிய முனிவன், முத்து நகையை உயிர்ப்பித்தான். அவளோ சலித்துக்கொண்டு தூணோடு தூணாகச் சாய்ந்து நிற்க, முனிவன், "பெண்ணே! ஏன் சலித்துக் கொள்கிறாய்? உனக்கென்ன குறை?" என்று அன்போடு கேட்டான்.

"சுவாமி! நான் பெண்ணென்று பிறந்து கண்ட சுகந் தானென்ன? என் பொருட்டுத் தாய் தந்தையர் உயிரிழந்தனர், அதுதான் போகட்டும். நானாவது சுகமாகயிருக்கிறேனா? தினமும் செத்துச் செத்துப் பிழைக்கிறேன். இதுவும் ஒரு வாழ்க்கையா?" என்றாள் முத்துநகை.

அது கேட்ட முனிவன் அவளின் மேலுள்ள மோகாந்த காரத்தால், "பெண்ணே! நாம் ஆனந்தம் அடையுங்காலம் வந்துவிட்டது. நான் இப்பொழுது செய்யும் வேள்வி முடிந்ததும் இந்த ஈரேழு பதினான்கு உலகமும் எனக்குக் கட்டுபட்டுவிடும். அப்புறம் இந்த அவனியில் என்னை யாருமே வெற்றிகொள்ள முடியாது. இன்னும் மூன்று தினங்களில் அந்த வேள்வி முடிந்துவிடும். உன் தாய் தந்தை முதலானவர்களின் ஜீவனையெல்லாம் ஒரு செப்புக் குடத்திலிட்டு இந்நகரத்துப் பத்திரகாளியம்மனின் ஆலயத்திலுள்ள பலிபீடத்திற்குக் கீழே வைத்திருக்கிறேன். கரும்புத் தோட்டத்தில் உயிரோடு திரிகிற யானையைப் பிடித்துவந்து பலிகொடுத்து, பலிபீடத்தில் குடத்தை எடுத்துப்போட்டு உடைத்தால் உன்னைச் சேர்ந்த பந்துஜனங்கள் அனைவரும் உயிர் பிழைத்து விடுவார்கள். வேள்வி முடிந்ததும் அதைச் செய்கிறேன். இன்னும் மூன்று தினங்கள் பொறுத்திரு!" என்றான்.

"எல்லாம் சரி. ஸ்வாமி! தங்களை யுத்தம் செய்து நேரடியாக வெற்றிகொள்ள முடியாவிட்டாலும், தந்திரமாகக் கொல்ல யாராவது முயலக்கூடுமே?" என்றாள் முத்துநகை. அவள் மீதிருந்த ஆசைவெறியில் அறிவிழந்த முனிவன், "பெண்ணே! என்னை வெற்றிகொள்ள வேண்டுமானால் என் தலையை ஒரே வெட்டாக வெட்டி, ஒரு துளி ரத்தங்கூடக் கீழே சிந்தாமல் குடித்து, நான் வளர்த்திருக்கும் வேள்வியில் என் தலையைப் போட்டு, என் உடலைக் கீழே விழாமல் மூன்றேமுக்கால் நாழிகை நேரம் ஆகாயத்தில் எறிந்துகொண்டிருக்க வேண்டும். அதுவல்லாமல் என்னை வெட்டும்போது ஒரு துளி ரத்தம் கீழே சிந்தினாலும் என்னைப்போல ஆயிரம் முனிவர்கள் உண்டாவார்கள். அவர்களை வெல்லுவது அரிதினும் அரிது!" என்றான்.

இதையெல்லாம் கேட்டு மனதில் மகிழ்வுற்ற முத்துநகை உபசாரமாக, "முனிநாதரே! இவ்வளவு சக்திகளுள்ள தங்களை வெல்ல ஈரேழு பதினாலு உலகிலும் வீரனில்லை! இனி நான் துக்கப்படவும் மாட்டேன்!" என்றாள். பிறகு முத்துநகையை முண்டமாக்கிவிட்டு முனிவன் வேள்வி வளர்க்கச் சென்றான்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டு பல்லி உருவிலிருந்த வேதாளம் விரைந்து சென்று விக்கிரமாதித்தனிடம் விபரம் முழுதும் சொல்லி, "அரசே! மூர்க்கனான அந்த முனிவன் அந்தி சாயும் நேரத்தில் வழக்கம்போல் அரண்மனைக்குத் திரும்பிவருவான். அப்போது நீங்கள் இரண்டாம் கதவு மறைவில் உருவிய வாளுடன் மறைந்து நின்று முனிவனின் தலையை ஒரே வெட்டாக வெட்டுங்கள். நான் முதல் வாயில் கதவில் பல்லியாக இருந்துகொண்டு அவன் வருவதை அறிந்து பல, பலவென்று சப்திக்கிறேன். நீங்கள் அந்தச் சப்தம் கேட்டுத் தயாராயிருங்கள். முனிவன் முதல் வாசலைக் கடந்ததும் நான் கதவைப் படீரெனச் சாத்துகிறேன். சாத்தியது யாரென அவன் திரும்பிப் பார்ப்பான். அப்போது ஒரே வெட்டாக அவன் தலையை வெட்டுங்கள். நான் இரத்தத்தைக் குடித்துத் தலையை வேள்வியில் போட்டுவிடுகிறேன். நீங்கள் மூன்றேமுக்கால் நாழிகை நேரம் அவன் உடலைக் கீழே விழாதபடி ஆகாயத்தில் பந்துபோல் விட்டெறிந்து கொண்டிருங்கள்!" என்று தெரிவித்தது.

அவ்வாறே விக்கிரமாதித்தனும், வேதாளமும் கவனமாக இருந்து காரியத்தை நடத்தி முனிவனைக் கொன்றார்கள்.

பின்னர் விக்கிரமாதித்தன் வேதாளத்தையனுப்பிக் கருப்பஞ்சோலையில் நிற்கும் யானையை அவ்வூர்ப் பத்திரகாளியம்மன் கோவிலுக்குக் கொண்டு வரும்படி செய்து வெட்டிப் பலிகொடுத்துப் பலிபீடத்தைப் பேர்த்து யதாஸ்தானத்தில் வைத்து, அதற்குள்ளிருந்த செப்புக் குடத்தை வெளியே எடுத்து பலிபீடத்தின் மீது போட்டு உடைத்தான். பிறகு சரேலென்று திரும்பி அரண்மனைக் கோட்டைக்குள் சென்று முத்துநகையின் அறுப்புண்ட தலையை ஒட்டவைத்துப் பிரம்பால் தட்டியெழுப்பினான். "முத்துநகையே! முனிவனைக் கொன்று, யானையையும் பலிகொடுத்து ஜீவனிருக்கும் செப்புக் குடத்தை எடுத்து உடைத்து வந்தேன். ஆகையால் இன்னும் சில நாழிகையில் உன் தாய், தந்தையர், மந்திரிபிரதானிகள், சதுரங்க சேனைகள் யாவரும் உயிர்பெற்றெழுந்து உன்னிடம் வருவார்கள். நீ நடந்தவற்றையெல்லாம் அவர்களிடம் விவரமாகச் சொல். நான் அம்மன் கோவிலுக்குப் போய்

காத்திருக்கிறேன்" என்றான் விக்கிரமாதித்தன். அப்போது முத்துநகை ஆனந்தமிகுதியால் கல கலவெனச் சிரித்தாள். உடனே அவளுடைய வாயிலிருந்து முத்துக்கள் உதிர்ந்தன. அவைகளைப் பொறுக்கி விக்கிரமாதித்தன் கச்சைப்புரையில் வைத்துக் கொண்டு காளிகோவிலுக்குச் சென்றான்.

செப்புக் குடம் உடைபட்டதால் அவற்றில் அடைக்கப் பட்டிருந்த ஜீவன்கள் அனைத்தும் வெளிக்கிளம்பி பழையபடி அவையவற்றிற்குரிய உடற்கூடுகளில் புக, வாரணகேசரி மன்னன், மந்திரி, பிரஜைகள் யாவரும் உயிர்பெற்று எழ, மன்னனானவன் மந்திரியைப் பார்த்து, "நமக்குத் திடீரென மயக்கம் வரக் காரணமென்ன?" என்றான். "இது முத்துநகையால் விளைந்ததாயிருக்கும்" என்றான் மந்திரி. அனைவரும் அரண்மனை நோக்கி ஓடிவந்தனர். முத்துநகை தன் தாய்,தந்தையரைக் கண்டு வணங்கி நடந்த விவரம் அனைத்தும் சொன்னாள். அவர்களும் வெற்றி வீரனை விக்கிரமாதித்தனைக் காணத் துடித்தனர். முத்துநகையும் அவர்களை அழைத்துக் கொண்டு பத்திரகாளி கோவிலுக்கு வந்தாள். வாரணகேசரி ராஜனும் விக்கிரமாதித்தனை வரவேற்று யானையின்மீது ஊர்வலமாக அழைத்துச் சென்று, பட்டணத்தைத் தேவலோகம்போல அலங்கரித்துச் சுபமுகூர்த்தத்தில் தன் குமாரத்தி முத்துநகையை விக்கிரமாதித்தப் பேரரசனுக்கு மணம் செய்து கொடுத்தான்.

அன்றிரவு புதுமணத் தம்பதிகளிருவரும் அறுசுவை அமுதுண்டு, தாம்பூலந்தரித்து, வாசனைத் திரவியங்கள் பூசி, புஷ்ப மெத்தை விரிக்கப்பட்டிருந்த பஞ்சணையில் உல்லாசமாக அமர்ந்தார்கள். தீபங்கள் ஜோதிமயமாய் மின்னிப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. விக்கிரமாதித்தன் கதைகள் பேசி, காவியம் சொல்லி முத்துநகையை மெள்ள அணைத்தான். இந்த ஈடிணையற்ற வைபோகத்தால் சர்வாங்கமும் பூரித்து, அடங்கா மகிழ்ச்சியினால் முத்துநகை கலகலவென வாய்விட்டுச் சிரித்தாள். அப்போது சில முத்துக்கள் உதிர்ந்தன. அந்த முத்துக்களை எடுத்துத் தனது கச்சைப் புரையில் வைத்துக் கொண்டான் விக்கிரமாதித்தன். பிறகு இருவரும் புதுமணத்தின் இன்பத்தில் திளைத்திருந்தார்கள்.

பின்னர், விக்கிரமாதித்தன் தான் மதுராபுரி மன்னனிடம் கூறி வந்த நாற்பது நாட்கள் தவணையின் முடிவு நெருங்கியதும், தன் மாமனாரான வாரணகேசரியினிடம் விடைபெற்று, மனைவி முத்துநகையை அழைத்துக் கொண்டு மதுராபுரியை அடைந்தான்.

கெடு முடியுந்தருணம் நெருங்கியும் ஆதித்தனென்னும் விக்கிரமாதித்தன் வராததைக் கண்டு மனம் மகிழ்ந்த மதுரேந்திர மன்னனோ மோகாந்தகாரனாகி ஆதித்தனின் மாளிகையிலுள்ள பேரழகியான இரத்தினமாலையை உடனே தன் அந்தப்புரத்திற்குக் கொண்டுவந்துவிடவேண்டுமெனத் துடித்தான். மந்திரியோ, மன்னனை அவசரப்படக் கூடாதென ஆசுவாசப்படுத்திக் கொண்டேயிருந்தான். மதுராபுரி வந்த ஆதித்தனும் முத்துநகையைத் தன் மாளிகையில் இரத்தினமாலையோடு விட்டுவிட்டு, மதுராபுரி மன்னனிடம் சென்று குறிப்பிட்ட தவணை முடிவதற்குள் முத்துக்களைச் சமர்ப்பித்தான்.

ஆதித்தன் சமர்ப்பித்த முத்துக்களைப் பார்த்து ஆச்சரியப் பட்ட மதுரேந்திர மன்னன் தன் மந்திரியை நோக்கி, "அமைச்சரே! முத்துக்களில் நான்கு வகையிருக்கக் காரணமென்ன?" என்று வினவினான்.

அதைக் கேட்டு முத்துக்களைப் பரிசோதித்த மந்திரி, "அரசே! முத்துக்களில் கால் விளைவு, அரை விளைவு, முக்கால் விளைவு, முழு விளைவு என்றிருக்கிறது. இந்த விளைவு வித்தியாசத்திற்குக் காரணம், அற்பச் சிரிப்பால் கால் விளைவும், கொஞ்சம் மகிழ்ச்சியுடன் சிரித்ததால் அரை விளைவும், அதையும் விடச் சந்தோஷமாகச் சிரித்ததால் முக்கால் விளைவும், மனக்குறை நீங்கி அளவற்ற ஆனந்தத்தில் சிரித்ததால் முழு விளைவுமாக நான்கு முறை உதிர்ந்திருக்கின்றன!" என்றான். மந்திரியின் இந்த விளக்கத்தைக் கேட்ட விக்கிரமாதித்தனோ, அவனை மனதிற்குள் மெச்சி, "இவன் மதியூகத்தில் நமது மந்திரி பட்டிக்குச் சமமானவன்!" என்று எண்ணிக் கொண்டான். மன்னனும் முத்துக்களைப் பொக்கிஷத்திற்கனுப்பிவிட்டு அந்தப்புரம் சென்றான். விக்கிரமாதித்தனாகிய ஆதித்த சேவகனும் தன் மாளிகைக்குச் சென்று இரத்தினமாலையோடும், முத்து நகையாளோடும் இன்புற்றிருந்தான்.

மறுநாள், பொறாமையே உருவான சேவகர்களான மார்கோடகனும் கோடிகனும் ஆதித்த சேவகனின் மாளிகைக்கு வந்து பேசிக் கொண்டிருக்கையில் முத்துநகையைக் கண்டு தங்களுக்குள் அவளின் எழிலை வியந்து பேசிக் கொண்டனர். உடனே அரசனிடம் ஓடோடிச் சென்று, "அரசே! இதென்ன அநியாயம்! உங்கள் ஊழியனான ஆதித்த சேவகன் முத்துக்களைக் கொண்டு வந்ததோடு, அவற்றை உற்பத்தி செய்யும் முத்துநகையாளையும் கொண்டு வந்து தன் மாளிகையில் வைத்திருக்கிறான். அவள் இரத்தினமாலையைக் காட்டிலும் பன்மடங்கு அழகுவாய்ந்தவளாய் ஜொலிக்கிறாள். அவளின்

அழகை எப்படி எங்களின் வாயால் சொல்லுவோம்? சொல்ல முடியாத சொர்ணப் பதுமை! எழுத இயலாத இன்பக் கவிதை! வர்ணிக்க வராத வண்ண வடிவம்!" என்றெல்லாம் வானளாவ புகழ்ந்து, "ஆவி! அரசனின் அந்தப்புரத்தை அலங்கரிக்க வேண்டிய அவ்விரு அழகிகளும் ஊழியன் வீட்டில் ஊழியம் செய்துகொண்டிருப்பது அழகாமோ?" என்றனர்.

உடனே மன்னன் மதுரேந்திரன் தன் கண்களால் ஒருமுறை முத்துநகையாளைக் காணவேண்டுமென்று மோகங்கொண்டான். முன் செய்த விதமாய்க் கோடிகனின் வேடம் புனைந்து ஆதித்த சேவகனின் மாளிகைக்குள் தந்திரமாகப் புகுந்து மறைவிலிருந்து முத்துநகையையுங் கண்டான். கண்டதும் காதல் கொண்டான். அன்றிரவு முழுதும் முத்துநகையையே நினைந்து மோகத்தால் விநாடிக்கு விநாடி செத்துக் கொண்டிருந்தான். பொழுது விடிந்ததும் தன் மதியூகியான மந்திரியை அழைத்து முத்து நகையாளையும் இரத்தினமாலையையும் ஒருங்கே அடைய ஒரு யோசனை கேட்டான்.

அமைச்சன் சிறிது ஆலோசித்து விட்டு, "அரசே! இன்னுமொரு உபாயமிருக்கிறது! சப்த சமுத்திரத்திற்கு அப்பால் நாகலோகமென்ற ஒரு பெருந்தீவு இருக்கிறது. அத்தீவில் நாகபுரம் என்ற பட்டணத்தை அரசாளும் நாகேந்திரனின் குமாரியான நாககன்னிகை சிரித்தால் நாகரத்தினம் உதிரும். அந்த ரத்தினமணியைக் கொண்டு வரும்படி நம் சேவகனை ஆதித்தனை அனுப்புவோம். ஏழு கடல்களையும் தாண்டிச் செல்ல இவனால் முடியாது. அப்படியே கடந்து சென்றாலும், அந்த நாகபுரத்தைக் காதவழி தூரம் விஷம் பரவியிருக்கிறது. வழியில் கால் வைத்தவுடன் இவன் இறப்பானேயன்றித் திரும்ப போவதில்லை! குறிப்பிட்ட தவணைக்குள் அவன் திரும்பாவிடில் அவனுடைய கோமளாங்கிகளை நம் அரண்மனைக்கு கொண்டுவந்து விடலாம்!" என்றான்.

அதன்படி அரசன் கொலு மண்டபத்திற்கு வந்ததும் ஆதித்த சேவகனை நோக்கி, "ஆதித்தா! முத்தைக் காட்டிலும் சத்துள்ள பொருள் ஒன்று வேண்டும். மகரகண்டிகை செய்ய வேண்டியிருப்பதால் அதன் நடுவில் வைக்க நாகபுரத்திலுள்ள நாகரத்தினத்தைக் கொண்டுவா! அது அங்குள்ள நாககன்னிகை சிரித்தால்தான் உதிரும்!" என்று கட்டளையிட்டான்.

ஆதித்தனும் அறுபது நாட்கள் தவணையும், அறுபதினாயிரம் பொன் சம்பளமும், இரத்தின விலை இரண்டு லக்ஷம் பொன்னும் பெற்றுக் கொண்டு, தனது மாளிகை சென்று, அனந்தன், சலந்திரன், இரத்தினமாலை, முத்துநகை யாவரையும் அழைத்து

"அரசனிட்ட கட்டளையில் ஏதோ சூதிருக்கிறது. இல்லையானால் சோதனைபோல அடுத்தடுத்துக் கட்டளையிடக் காரணமென்ன? ஆனாலும் கட்டளைக்குக் கீழ்படிய வேண்டியது ஊழியனாகிய என் கடமையாகும். எப்படி அந்த ஏழு கடல்களையும் கடப்பது? அதற்கு உபாயமென்ன?" என்று கேட்டான்.

அப்போது அனந்தன் என்னும் பாம்பு, "நம் தவளையான சலந்திரனிருக்கும்போது கடல் கடக்கக் கவலையேன்? தாங்கள் கடலோரஞ் சென்று சலந்திரனை நினைத்தால், அக்கணமே அங்கு வந்து பெரும் தவளை வடிவெடுத்து, தங்களை தன் முதுகின் மீதேற்றிக் கொண்டு சப்த சமுத்திரத்தையுங் கடந்து நாகபுரத்தீவில் கொண்டு போய் விடுவான். பிறகு என்னை நினைத்தால் நான் வந்து வேண்டிய உதவிகளைச் செய்கிறேன்!" என்றான்.

இது கேட்டு மகிழ்ந்த விக்கிரமாதித்தனும் இரத்தின மாலையைப் பார்த்து "இரத்தினமாலை! நான் வரும் வரை முத்துநகை எவ்விதம் இருக்கப் போகிறாளோ?" என்றான். உடனே இரத்தினமாலை செம்பில் தண்ணீர் எடுத்து முத்துநகை முகத்தில் தெளிக்க, முத்துநகை மரப்பாச்சிப் பாவையானாள். அந்த மரப் பாச்சியை எடுத்து மூலையில் சாத்தி வைத்தாள் இரத்தினமாலை.

இதைக் கண்டு மகிழ்ந்த விக்கிரமாதித்தன், "பெண்ணே! இன்றிலிருந்து அறுபதாவது நாளில் திரும்பி வருவேன். அன்றையத் தினம் முத்துநகையைப் பெண்ணாக்கி வைத்திரு! நான் வருகிறேன்!" என்று கூறி விடைபெற்றுக் கொண்டு, சலந்திரனின் உதவியால் கடலைக் கடந்து நாகத்தீவின் எல்லையிலுள்ள அச்சுத நகரி என்னும் ஊரை அடைந்தான்.

விக்கிரமாதித்தன் அவ்வூரின் தெருக்களில் சென்று கொண்டிருக்கையில், ஒரு வீட்டில் முதியவள் ஒருத்தி அழுது கொண்டிருந்தாள். விக்கிரமாதித்தன் அருகில் சென்று விஷயமென்ன வென்று வினவ, அந்த முதியவள், "ஐயா! இந்நகரத்தை அரசாளும் அச்சுத வேந்தனுக்கு நான்கு புத்திரிகள் உண்டு. அவர்களில் மூத்தவளான அச்சுதமடந்தைக்குத் தினமும் திருமணம் நடப்பதும், அன்றிரவே மாப்பிள்ளை மரண மடைவதுமாக இருந்து வருகிறது. அதற்காக அரசன், வீட்டிற் கொரு ஆண் மகனைப் பிடித்து மாப்பிள்ளையாக்கித் தினம் ஒரு திருமணம் நடத்திக் கொண்டிருக்கிறான். இன்று என்னுடைய ஒரே செல்வப் புத்திரன் மாப்பிள்ளையாக வேண்டிய முறை! என் மகன் இன்று மன்னனின் மாப்பிள்ளையாகச் சென்றால், பள்ளியறையிலிருந்து நாளை பிணமாகத்தான் திரும்பி

வருவான். இதில் சந்தேகமில்லை. இப்படியிருக்க என் குமாரனைப் பிரிந்து எப்படி நான் உயிர் வாழ்வேன்?" என்றாள்.

"தாயே! என்னை உன் மூத்தமகனாகப் பாவித்து என்னையே உன் மூத்தமகனாக அனுப்பு. உன் குமாரனை அனுப்ப வேண்டாம்!" என்றான் விக்கிரமாதித்தன்.

அதற்கு முதியவள். "மகனே! உன்னைக் கொன்ற பாவம் என்னை வந்து சேரும்" என்றாள். அதற்கு விக்கிரமாதித்தன். "நீ என்னை வலிய அனுப்பினாலல்லவா உனக்குப் பாவம் வரும்? நான் போகிறேனென்கிற பொழுது உனக்கென்ன வந்தது? சீக்கிரமாகச் சமையல் செய்து சாப்பாடு போடு. பசிக்கிறது!" என்றான்.

அதற்கிசைந்த முதியவள் அவனுக்கு அன்புடன் அறுசுவையுண்டியளித்துத் தாம்பூலங் கொடுத்துக் கொண்டிருக்கையில், அரண்மனையிலிருந்து மணமகனுக்குரிய வரிசை உடமைகள், வஸ்திரங்கள் முதலானதெல்லாம் வந்தன. அவ்வாபரணங்களையெல்லாம் விக்கிரமாதித்தன் பூண்டுகொண்ட சிறிது நேரத்தில், யானையொன்று அலங்கரிக்கப்பட்டு, பதினெட்டு மேள வாத்தியத்துடனே சகல ஜனங்களும் சூழ முதியவள் வீட்டு வாசலில் வந்து நின்றது. விக்கிரமாதித்தன், வேதாளத்தைத் தன் அடப்பக்காரனாக்கி யானையின்மீது ஏறிக் கொண்டு பட்டணப் பிரவேசம் வந்து, அரண்மனை வாசலை அடைந்து மணவறைப் பந்தலில் உட்கார்ந்து, இராஜகுமாரியான அச்சுதமடந்தையின் கழுத்தில் தாலியைக் கட்டினான்.

அன்றிரவு புதுமணத் தம்பதிகளிருவருக்கும் ருசியான தின்பண்டங்களளித்து, களப கஸ்தூரி முதலிய வாசனாதிகள் பூசி, தாம்பூலம் கொடுத்துப் பள்ளியறைக்கு அனுப்பி வைத்தனர்.

விக்கிரமாதித்தனும், அச்சுதமடந்தையும் உல்லாசமாகச் சதுரங்கமும், சோழியும் விளையாட, சிறிது நேரம் ஆனவுடனே அச்சுதமடந்தை தனக்குத் தூக்கம் வருகிறதென்று சொல்லிப் பஞ்சணையில் படுத்துத் தூங்கி விட்டாள். விக்கிரமாதித்தன் வேதாளத்தை அழைத்து, "இப்பெண் சதுரங்கமும், சோழியும் விளையாடும் பொழுதே தூக்கம் வருகிறதென்று சயனித்துக் கொண்டாளே, அதன் மர்மம் என்ன? மேலும், ஓர் இரவுக்கொரு மாப்பிள்ளை பிணமாகும் மர்மம்தான் யாது?" என்று மெள்ளக் கேட்டான். வேதாளமும், "அரசே! நாம் நாடிச் செல்லும் நாகபுரத்தை அரசாளும் நாகேந்திரனின் குமாரனான ஆதிசேடன் என்பவன் தினந்தோறும் இந்தப் பள்ளியறைக்கு வந்து இப்பெண்ணிற்கு மயக்கமுண்டாக்கி, பாம்புருவமெடுத்து மாப்பிள்ளையைக் கொன்றுவிட்டு, இவளுடைய அழகை உற்றுப்

பார்த்துவிட்டு போகிறான். அவன், பட்டணத்தில் கோடியிலிருக்கும் பிள்ளையார் கோவிலில் நிலவறை உண்டாக்கி அதன் வழியாக வருகிறான். அவன் நிலவறைக் கல்லை தள்ளிவிட்டு வரும்போதே இந்தப் பெண்கொடி மயக்கமுற்றுவிடுவாள். இப்போது அவன் வந்துகொண்டேயிருக்கிறான். அச்சுத மடந்தையருகில் நான் மாப்பிள்ளை போல் படுத்து; உறங்குவதாக



நடிக்கிறேன்; அவன் என்னைக் கடித்தாலும் வேதாளமாகிய என்னை விஷம் ஒன்றும் செய்து விடாது! நீங்கள் அச்சமயம் மறைவில் தயாராகப் பதுங்கி மந்திரவாளால் அவன் வாலின் நுனியை மட்டும் வெட்டி விடுங்கள். நாம் வரும் விஷயம் தெரிந்து விட்டதென்று ஓடிவிடுவான். நாம் நாகரத்தினத்திற்காக நாடிச் செல்லும் நாககன்னிகை அவனுடைய தங்கையாகையால் அவனைக் கொன்றுவிடக் கூடாது!" என்று கூறியது.

அவ்வாறே விக்கிரமாதித்தன் ஒளிந்திருக்க, ஆதிசேடன் எனும் நாககுமாரன் ஓசைப்படாமல் வந்து, அச்சுதமடந்தையின் அருகில் உறங்குவது போல் பாசாங்கு செய்யும் வேதாளமாகிய மாப்பிள்ளையைக் கடிக்கப் போக, அதற்குள் விக்கிரமாதித்தன்

பாம்பின் வால்நுனி அறும்படி வெட்டினான். அவகேடு வந்ததென்று உணர்ந்த நாககுமாரனும் நிலவறைக்குள் ஓடிச் சுயரூபமெடுத்துத் தன் நகரம் வந்து சேர்ந்தான்.

விக்கிரமாதித்தனும் அச்சுதமடந்தையை எழுப்ப, அவளும் மனமகிழ்ந்து நிம்மதியுடன் அணைத்துக் கொண்டாள். இரவுப் பொழுது இனிமையாகக் கழிந்தது.

பொழுது விடிந்ததும் வழக்கம்போல் மாப்பிள்ளையின் சவமெடுக்கும் தோரணையில் பாடை கொட்டு முழக்குடன் வந்து பள்ளியறைக் கதவைத் தட்டினர். பறை மேளங் கொட்டிக் கூடினர். விக்கிரமாதித்தன், ஒரு வேடிக்கை செய்ய நினைத்து, வேதாளத்தை, திருநீறணிந்து, கைத்தடி ஒன்று பிடித்துச் சவமெடுக்க வந்தோரைப் பயமுறுத்தி விரட்டுமாறு அனுப்பினான். எல்லோரும் பாடை, மேளம், பறை முதலிய வற்றைப் போட்டுவிட்டு அச்சுதராஜனிடம் சென்று, "அரசே! மாப்பிள்ளையைக் கொல்ல வந்த பூதம் எங்களையும் துரத்துகிறது!" என்றனர். அச்சுதராஜனும் மந்திரி பிரதானிகளை அழைத்துக் கொண்டு, அளவற்ற சதுரங்க சேனைகளுடன் ஓடி வந்தான். வேதாளம் மறைவாயிருந்தது. அச்சுதமடந்தையும், விக்கிரமாதித்தனும் மகிழ்ந்திருந்தனர்.

அச்சுதராஜன் விக்கிரமாதித்தனை அறிந்து கொண்டு வணங்கி வரவேற்று நடந்ததை வினவினான். விக்கிரமாதித்தனும் அவனிடம் விவரம் யாவும்கூற, மனமகிழ்ந்த அச்சுதராஜனும் அச்சுதமடந்தைக்கு இளையவர்களாகிய தன் குமாரத்தி மூவர்களையும், விக்கிரமாதித்தனுக்குத் திருமணம் செய்து வைத்தான்.

விக்கிரமாதித்தனும், நான்கு நாயகிகளுடன் சிலநாட்களை நல்மணவாழ்வினை அனுபவிப்பதில் கழித்துவிட்டு, வந்த கடமையை எண்ணி அனந்தனென்னும் தன்னுடைய சர்ப்பத் தோழனை நினைத்தான். உடனே அனந்தன் வர, "அனந்தா! நாகலோகம் செல்லவேண்டும். வழி என்ன?" என்று கேட்டான். அதற்கு அனந்தன் "அரசே! நாகலோகத்தின் வழி முழுவதும் விஷமிருப்பதால் மனித உருவில் யாரும் அங்கு செல்ல முடியாது. நான் முதலில் சென்று, தாங்கள் வந்திருக்கிற செய்தி கூறி, நாககன்னிகையை உங்களுக்குப் பெண் கேட்கிறேன். தாங்கள் வர வழியும் அமைத்துத் தரச்சொல்கிறேன்!" என்றான்.

விக்கிரமாதித்தனும் அதற்கிசைந்து அவனை அனுப்ப அனந்தனும் நாகலோக எல்லை வரை மனித உருவில் வந்து, விஷ வழிக்கருகாமையில் வந்ததும் பாம்புருவாகிப் பாதையைக்

கடந்து, நாகராஜனின் முன்னால் போய் வணங்கி நின்று, "நாகேந்திர மன்னா! உலகம் போற்றும் விக்கிரமாதித்த பூபதி உஜ்ஜயினிப் பட்டணம் விட்டு அச்சுத நகரத்தில் வந்திருக்கிறார். அவருக்கு உமது நாககன்னியைத் திருமணம் முடித்துத் தருவீரா என்று கேட்கச் சொன்னார்!" என்றது. நாகராஜனும் அகமகிழ்வடைந்து அதற்குச் சம்மதித்தான். உடனே அனந்தன், "விக்கிரமாதித்தன் வர, விஷ வழியைச் செப்பனிட வேண்டுமே!" என்று கூற, நாகராஜனும் சில சர்ப்பங்களை அனுப்பி விஷத்தை விலக்கும்படி கட்டளையிட்டான்.

அதன் பின் விக்கிரமாதித்தன் சுலபமாக நாகபுரம் சென்று நாககன்னிகையை மணந்து கொண்டான். தம்பதிகளிருவரும் முதலிரவன்று பாரிஜாத புஷ்பமெத்தையில் சரச உல்லாசமாய்ப் பேசி மகிழ்ந்திருக்கும் பொழுது, உள்ளத்தில் ஏற்பட்ட உவகையாலும், உடலிலேற்பட்ட கூச்சத்தாலும் நாககன்னிகை நாணி நகைத்தாள். அப்போது சில நாகரத்தினங்கள் அவளுடைய ஒளிமிக்க வாயிலிருந்து உதிர்ந்தன. விக்கிரமாதித்தன் அவற்றைப் பொறுக்கித் தன்னுடைய பையில் வைத்துக் கட்டிக் கொண்டு, சிறிது நாளில் நாககன்னிகையுடன் அச்சுத நகரத்துக்கு வந்து நான்கு நாயகியரையும் அழைத்துக் கொண்டு மதுராபுரியை நோக்கிப் புறப்பட்டுத் தன் மாளிகையை அடைந்தான்.

மாளிகையில் இரத்தினமாலையும், முத்துநகையை மறுபடி பெண்ணாக்கித் தன் காதலனுக்காகக் காத்திருந்தாள். அவர்களுடன் விக்கிரமாதித்தன் தான் புதிதாக மணந்து வந்த ஐந்து நாயகியரையும் சேர்ப்பித்தான். இரத்தினமாலை விருந்து சமையல் செய்து இலைபோட்டு அனந்தன், சலந்திரன் முதலான அனைவரையும் பந்தியில் உட்கார வைத்து அன்னம் பரிமாறும்போது, அது பகற்பொழுதாகையால் அவலட்சண வடிவம் தரித்திருந்த இரத்தினமாலையைக் கண்டு அருவெறுப்பு கொண்ட நாககன்னிகை, அச்சுத மடந்தையையும் அவளின் சகோதரிகளையும் நோக்கி, "தமக்கைமார்களே! இந்தக் கோரரூபியின் கையால் எப்படிச் சாப்பிடுவது? நம்மிடம் சொன்னால் நல்ல சமையல்காரி ஒருத்தியை அழைத்துவர மாட்டோமா? செல்வமுஞ் சீரும் சிறப்புமுள்ள நமதரசர் இந்தச் சின்ன விஷயத்தில் மட்டமாயிருக்கிறாரே?" என்றாள்.

பெண்களெல்லாம் பந்தியிலிருந்து உண்ண, நாககன்னிகை அருவெறுப்புத் தாங்காது வாந்தியெடுத்தாள். இதைக் கண்ட விக்கிரமாதித்தன், "சாப்பிடாது வாந்தி செய்யும் காரணம் யாது?" என்று கேட்க, "பிராண நாதா! நாங்கள் வரும்

பொழுது ஒரு வெள்ளாட்டியா பெரிது? நீங்கள் முன்பே சொல்லியிருந்தால், காணச் சகிக்கக்கூடியவளாக ஒருத்தியை அழைத்து வந்திருக்க மாட்டோமா?" என்றுள் நாககன்னிகை. இதைக் கேட்டுப் புன்னகை பூத்த விக்கிரமாதித்தன் இரத்தின மாலையை அழைத்தான். அவளும் சுய உருவம் தரித்து சூரிய சந்திர ஒளி வீச, அழகுத் தெய்வமாய் வந்து பரிமாறினுள்.

இதைக் கண்ட மங்கையரெல்லோரும் வாய்விட்டுச் சிரித்தார்கள். அப்போது சிந்திய முத்துக்களேயும், நாக ரத்தினங்களேயும் விக்கிரமாதித்தன் பொறுக்கிக் கட்டிக் கொண்டான். பின்னர் தாம்பூலந்தரித்துச் சேவக வேடம் பூண்டு மதுராபுரி மன்னனின் அரசவையை அடைந்தான்.

ஆதித்தன் அழிந்தொழிந்திருப்பான் என்று அகமகிழ்ந்து கொண்டிருந்த மன்னன் திகைப்புண்டான். ஆதித்த சேவகன் வணங்கிச் சமர்ப்பித்த நாகரத்தினங்களே வாங்கிக் கொண்டு, அவனுக்கு ஒப்பிற்காக உபசார வார்த்தைகள் கூறினுன்.

பொருமையடைந்த சேவகர்களான கார்கோடகனும் கோடிகனும் மறுபடியும் ஆதித்த சேவகனின் மாளிகை வந்தனர். அங்கே அழகின் தேவதைகள் போல் சஞ்சரிக்கும் நாக கன்னிகையையும், அச்சுத மடந்தையையும், அவளின் சகோதரிகளேயுங் கண்டு வியப்புற்று மதுரேந்திர மன்னனிடம் ஓடிச்சென்று, "மன்னர் கோமானே! உங்கள் சேவகன் இப்போது புதிதாக ஐந்து பெண்களே கொண்டுவந்து தன் மாளிகையில் வைத்திருக்கிறுன். அழகின் ஏழு கடல்களும் திரண்டு வந்திருப்பதுபோல் அந்தச் சேவகனின் அந்தப்புரத்தில் ஏழு கட்டழகிகள் ஒருங்கே கூடி அவனுக்குப் பணிவிடை செய்கின்றுர்கள்!" என்றனர். அதைக் கேட்ட மாத்திரத்தில் மன்னன் மோகப்பித்தேறி, அப்பேரழகிகளே ஒருமுறை தன் கண்ணுல் காணவேண்டுமென ஆசைப்பட்டான். முன்போலவே அவன் ஆதித்தனின் நண்பனுன கோடிகனேப்போல் மாறுவேடம் தரித்துக் கார்கோடகனுடன் சேவகனின் மாளிகைக்கு வந்தான். அது இரவுநேரம். மாளிகையின் முன் வாசலில் காவலனு யிருந்த அனந்தன் சர்ப்ப உருவில் வாய்பிளந்தவாறிருந்தான். இருட்டுத் தெரியாமல் இருவரும் அனந்தனின் கீழ்வாய்ப் பல்லில் கால்வைக்க, விஷம் ஏறிவிட்டது. இருவரும் மயக்கமுற்று விழுந்தனர். அனந்தன் விக்கிரமாதித்தனிடம் ஓடிவந்து மதுரேந்திர மன்னனும், கார்கோடகனும் மயக்கமுற்ற விஷயத்தைச் சொல்ல, விக்கிரமாதித்தனும், "அனந்தா! அரசனே கார்கோடகனின் சொல்லேக் கேட்டு வந்தவன். இயற்கையாகக் கெட்டவனல்ல. கேட்பார் பேச்சுக் கேட்டுக்

கெட்டலையும் அவனுக்கு விஷத்தை முழங்காலில் இறக்கிவிடு. என்ன துரோகம் செய்தாலும் கார்கோடகன் எனது நண்பன். அவன் பிழைத்துப் போகட்டும்!" என்முன். அனந்தனும் ஓடிவந்து அரசனுக்கு விஷத்தை இறக்கிக் கணுக்காலுக்கும், முழங்காலுக்கும் மத்தியில் விட்டுக் காலை முடக்கிவிட்டு, கார்கோடகனை உயிர் பெற்றெழச் செய்தான்.

கார்கோடகனும் முடமான அரசனைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு அரண்மனை சென்முன்.

மதுரேந்திர மன்னன் அதன் பின்னரும் மோகம் திராதவனாய் தன் மந்திரியை அழைத்து, "ஆதித்த சேவகனை வெல்ல இன்னும் என்ன உபாயமிருக்கிறது?" என்று கேட்டான். அதற்கு அமைச்சனும் "அரசே! இரசக் கிணறு பார்க்கப் போகவேண்டுமென்று ஆதித்த சேவகனையும் உங்களுடன் அழைத்துப் போங்கள். சட்டென்று உங்கள் கையிலுள்ள மோதிரத்தைக் கழற்றிக் கிணற்றில் போட்டுவிட்டு, விழுந்து விட்டதென்று கூவி ஆதித்த சேவகனை அக் கிணற்றினுள் இறங்கி எடுக்கச் சொல்லிவிட்டு, நீங்கள் திரும்பியும் பாராமல் குதிரையில் பறந்து வந்து விடுங்கள். ஆதித்தன் இறங்கியவுடன் இரசக் கிணறு மூடிக்கொள்ளும். அவன் இறந்து விடுவான்!" என்முன்.

அரசன் உடனே ஆதித்த சேவகனை அழைத்து "நான் இரசக் கிணறு பார்க்கவேண்டும்! என்னுடன் நீ காவலாக வர வேண்டும்!" என்று கட்டளையிட்டான். அதற்கு ஆதித்த சேவகன், "அரசே! என் இல்லம் சென்று வந்துவிடுகிறேன். நீங்கள் புறப்படுங்கள்!" என்று கூறிவிட்டு, தன் மாளிகைக்கு வந்து வேதாளத்திடம் விஷயத்தைச் சொல்ல, அது அரசனின் சூழ்ச்சியை உணர்த்தியது. விக்கிரமாதித்தன் உடனே சலந்திரனை அழைத்து, "சலந்திரா! நீ தவளை உருவமெடுத்துக் கிணற்றில் போய் இருந்து மோதிரத்தைப் பிடித்து, அரசன் குதிரையின் மீதேறிக் கிளம்புவதற்குள் என்னிடம் கொண்டுவந்து தந்துவிடு!" என்முன். சலந்திரனும் அவ்வாறே புறப்பட்டுச் சென்று இரசக் கிணற்றில் தவளையாயிருந்தான்.

விக்கிரமாதித்தனும் மன்னனுடன் குதிரையில் சென்முன். கிணற்றருகில் சென்றதும் மதுரேந்திர மன்னன் மோதிரத்தை வீசிவிட்டு, "அடேடே! மோதிரம் விழுந்துவிட்டதே! ஆதித்தா! எடுத்து வா!" என்று கூறிவிட்டு வேகமாகத் தன் குதிரையை நோக்கித் திரும்பினுன்.

அதற்குள் சலந்திரனும் கிணற்றினுள்ளிருந்து மோதிரத்தை லபக்கெனப் பிடித்து விக்கிரமாதித்தனிடம் கொடுத்துவிட, அவனும் அரசனுடன் திரும்பிவிட்டான்.

வழியில் ஒரு மரத்தடியில் ஓய்வெடுத்துக்கொண்ட மதுரேந்திரனும், "இவன் நம்முடனேயே வந்துவிட்டானே!" என்று யோசித்து "ஆதித்தா! மோதிரம் எடுத்து வந்தாயா?" என்றான். "இதோ!" என்று ஆதித்தன் கொடுக்கவே மன்னன் திடுக்கிட்டுப் பார்த்தான். அதே மோதிரந்தான்! அவனுக்கு ஆச்சரியமாய்ப் போயிற்று. தன்னைவிட்டு ஒரு கணமும் நீங்காத ஆதித்த சேவகன் எப்படி இரசக்கிணற்றிலே எறிந்த மோதிரத்தைக் கொண்டு வந்தான் என்பதை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

இதைப் பற்றி அரசவையிலே வியந்தவாறு அமர்ந்திருக்கையில் ஒரு கிழ வேதியர் ஆதித்த சேவகனிடம் வந்து ஓர் எலுமிச்சம் பழத்தைக் கொடுத்து அவனைத் தனியே அழைத்துச் சென்றார். இருவரும் ஊருக்கு வெளியிலிருக்கும் ஒரு மடத்திற்குச் சென்றதும், விக்கிரமாதித்தன் சுயரூபமெடுத்துக் கொண்டான்.

மதுரேந்திர மன்னனும், அறிவாகர மந்திரியிடம் இரசக் கிணற்றில் ஆதித்த சேவகன் நடத்திய அதிசயத்தை சொல்லி, "இப்பொழுது வந்த கிழ வேதியன் யார்?" என வினவ, அவனுக்குத் தெரியாமற் போகவே, வியப்புற்று, விக்கிரமாதித்தனும் கிழ வேதியரும் சென்ற வழியே இருவரும் சென்று மடத்தின் பின்னால் ஒளிந்திருந்து உள்ளே இருவரும் என்ன பேசுகின்றனரென்று ஒற்றுக் கேட்டனர்.

கிழ வேதியராக வந்த சனீஸ்வரபகவான், "விக்கிரமாதித்தா! உன் வீரதீர பராக்கிரமத்தை உணராது, உன்னருமையும் புரியாது உன்னை இவ்வளவு கஷ்டத்துக்குள்ளாக்கிய அந்த மதுரேந்திர மன்னனைப் பிடித்துக் கொண்டு ஆட்டி வைக்கிறேன்!" என்றார்.

விக்கிரமாதித்தன் தெண்டனிட்டு, "வேண்டாம் சுவாமி! அவர்கள் எல்லோரையுங் காப்பாற்றவேண்டும். அந்த மன்னனிடம் தினம் ஆயிரம் பொன் கூலிக்குத்தான் நான் உழைத்தேன். அவனிடம் செய்த சேவகத்தில் எனக்கு லாபமே ஒழிய நஷ்டமில்லை!" என்றான்.

மதுரேந்திர மன்னனும், மந்திரியும் இதைக் கேட்டு வியப்புற்றார்கள். சேவகனாக வந்திருந்த ஆதித்தன் விக்கிரமாதித்த மகாராஜன் என்பதையும், அவனுடைய

பெருந்தன்மையையும் உணர்ந்ததும், மதுராபுரி மன்னன் ஓடோடிச் சென்று அவன் காலில் விழுந்து, "பூலோகம் போற்றும் புவிச் சக்கிரவர்த்திகளே! எங்கள் பிழை பொறுத் தருளுங்கள். என் முழங்கால் விஷத்தை இறக்குங்கள்!" என்று வேண்டினான். அவ்வாறே விக்கிரமாதித்தனும் அனந்தனை அழைத்து விஷமிறக்கி, மதுரேந்திரனிடம் தான் வந்த காரியத்தை விளக்கி, "நீர் விரும்பியதால், இரத்தினமாலை தவிர அனைவரையும் உமக்கே கன்னிகாதானம் செய்விக்கிறேன்!" என்று கூறினான். மதுராபுரி மன்னன் திகைத்து, உடலெல்லாம் வெட, வெடவென்று நடுங்க, விக்கிரமாதித்தனை நோக்கி, "மன்னர் மன்னவா! விக்கிரமாதித்த பூபதி கொண்டுவந்த மங்கையரென எனக்குத் தெரிந்திருந்தால் அவர்களை நான் கனவில் கூடக் கருதியிருக்கமாட்டேன்!" என்றான். அதற்கு விக்கிரமாதித்தனும், "இல்லை! விரும்பியவர்க்கு விரும்பியதைக் கொடாவிடில் விக்கிரமாதித்தனுக்குத்தான் என்ன பெருமை? ஆகவே நீர் விரும்பியதை உமக்குத் தந்தே தீர்வேன்" என்று கூறினான். அதன் பின்னர் இரத்தினமாலையை மட்டும் தன்னருகில் அமர்த்திக்கொண்டு, முத்துநகை, அச்சுதமடந்தை, மருங்குமாலை, வஞ்சிமடந்தை, மணிமேகலை, நாககன்னிகை ஆகிய ஆறு மங்கையரையும் மதுராபுரி மன்னனுக்குத் தாரை வார்த்துத் தானங்கொடுத்தான் விக்கிரமாதித்தன்.

பிறகு அறிவாகர மந்திரியைத் தன் பட்டிக்குச் சமமானவனென்று புகழ்ந்து தான் தினம் ஆயிரமாக வாங்கிய பொற்குவியலையெல்லாம், அறிவாகர மந்திரிக்கும், அங்குள்ள சிற்றரசர்கள், யாசகர் முதலியோருக்கும் நன்கொடையளித்து, "மதுரேந்திர மன்னவா! இன்றோடு என்னை விட்டுச் சனிபகவான் பிரிகிறார். நான் விடைப் பெற்றுக் கொள்ளுகிறேன்!" என்று கூறி, இரத்தினமாலையுடன் வேதாளத்திலேறிக் கொண்டு, அனந்தன், சலந்திரன் ஆகியோருடன் புறப்பட்டு வந்தான். மதுராபுரியைக் கடந்து அனந்தன், சலந்திரன் இருவருமிருந்த தடாகத்தை அடைந்ததும் இருவரும் சாப விமோசனமடைந்து இராஜகுமாரர்களாகி விக்கிரமாதித்தனை வணங்கிச் சென்றனர். அதன் பின்னர் விக்கிரமாதித்தன் தன் பிரிய நாயகியான இரத்தினமாலையுடன் வேதாளத்தின் மீதேறிப் புறப்பட்டு உஜ்ஜயினி மாகாளிப் பட்டணத்தை அடைந்து, தன் குல தெய்வமாகிய பத்திரகாளியம்மனை வணங்கிச் சென்று, இரத்தினமாலையை அனுப்பிவிட்டு, விக்கிரமாதித்தன் கொலு மண்டபத்திற்கு வந்து, தன் மந்திரியிடம், "பட்டி! நானும் இரத்தினமாலையும் ஊர்வலம் வரவேண்டும். பட்டத்து யானையை அலங்கரித்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்!" என்று கூறினான்.

பட்டியும் அவ்வாறே செய்து வந்து விக்கிரமாதித்தனிடம் சொல்ல, அவன் உடனே அந்தப்புரம் சென்று இரத்தினமாலையை அழைத்து வரும்படி உத்தரவிட்டான்.

ஆனால் அந்தப்புரத்தில் இரத்தினமாலையைக் காணவில்லை! அவள் சொல்லிக் கொள்ளாமல் தேவலோகம் தவிர வேறெங்கும் போயிருக்க மாட்டாளென்று யூகித்த விக்கிரமாதித்தன், உடனே வேதாளத்தின் மீதேறிக் கொண்டு தேவலோகத்திற்குச் செல்லலானான்.

அவனுக்கு முன்பாகவே தேவலோகம் சென்ற இரத்தின மாலை, தேவேந்திரனைக் கண்டு வணங்கினாள். தேவேந்திரனும், "இரத்தினமாலை! நீ ஏழுரை ஆண்டு விக்கிரமாதித்தனுடன் வாழ்க்கை நடத்திவிட்டு வந்திருக்கிறாய்! பழகிய பாசத்தால் உன் பின்னாலேயே அவன் உன்னைத் தேடிவருவான். அவனிடம் நான் வைத்திருக்கிற பிரியத்தினால் உன்னைத் தரமுடியாது என்று சொல்ல முடியாது. நமது ஆலயத்திலிருக்கும் ஆயிரம் இருளறைகளில் நீ ஒளிந்திரு!" என்றான். இரத்தினமாலையும் அவ்வாறே சென்று ஒளிந்து கொண்டாள்.

விக்கிரமாதித்தனும் வேதாளத்தில் இருந்திறங்கி தேவேந்திரனிடம் இரத்தினமாலையைப்பற்றி வினவ, அவன் "விக்கிரமாதித்தா! இரத்தினமாலை இங்கு வரவில்லையே! வந்திருந்தால் நீயே தேடிப் பார்த்து அழைத்துச் செல்!" என்றான். விக்கிரமாதித்தனும் வேதாளத்தை ஏவி, ஆயிரம் இருளறைகளில் இரத்தினமாலை ஒளிந்திருக்குமிடத்தைக் கண்டு பிடித்து அழைத்து வந்தான். அவனுடைய திறமையைப் பாராட்டிய தேவேந்திரன், இரத்தினமாலையுடன் அமுதவல்லி, குமுதவல்லியாகிய ஆறு பெண்களையும் கொடுத்து மகிழ்வுடன் வழியனுப்பி வைத்தான். விக்கிரமாதித்தனும் உஜ்ஜயினி மாகாளிப் பட்டணம் வந்து தேவகன்னிகையர் எழுவரையும் தன் பட்டத்து யானையில் தன்னுடன் அமரச் செய்து ஊர்வலம் வந்தான்.

தேவ கன்னிகையர் எழுவரும் விக்கிரமாதித்தனுடன் பூலோகத்திற்கு சென்று விட்டார்கள் என்பதை உணர்ந்த நாரதர், முதலிய ஆறு முனிவர்களும், தேவேந்திரனிடம் வந்து, "தேவேந்திரா! அமுதவல்லி, குமுதவல்லி ஆகியோரை அனுப்பி விட்டீரே! எங்களுக்கு அவர்களால் இருந்த நட்டுவப் பிழைப்புப் போயிற்றே!" என்க. தேவேந்திரன், "முனிவர்களே! கொடுத்த பெண்களைத் திரும்பப் பெற முடியாது. நீங்கள் வேண்டுமானால் பூவுலகம் சென்று விக்கிரமாதித்தனிடம் அவர்களை தானமாகப்

பெற்றுவாருங்கள்!" என்றான். அந்த எண்ணத்துடன் நாரதர் முதலான சப்த ரிஷிகளும் பூவுலகிற்கு வந்தார்கள். விக்கிரமாதித்தன் ஊர்வலம் முடிந்து தன் அரண்மனை வாயிலருகே வரும்போது, அவர்கள் பிராமண உருவெடுத்துச் சென்று அமுதவல்லி. குமுதவல்லி ஆகியோரை தானமாகப் பெற்றுக் கொண்டு தேவலோகம் வந்து விட்டனர்.

விக்கிரமாதித்தனைப் பூவுலகம் புகழ்ந்தது போலவே, தேவலோகமும் போற்றி மகிழ்ந்தது.

இவ்வாறு கதை சொல்லி முடித்த ஏகபோகவல்லிப் பதுமை, போஜராஜனை நோக்கி, "போஜராஜரே! எங்கள் விக்கிரமாதித்தனைப் போன்று வல்லமையும், வள்ளல் தன்மையும் உள்ளவரன்றோ, இந்த விநோத சிங்காசனத்திலேறி வீற்றிருக்க லாம்!" என்றது. அதைக் கேட்ட போஜமகாராஜன் சிந்தனை வசத்தவனாய் நிற்க, அந்திச் சூரியனும் மேற்கே ஓடி ஒளிந்தான். கொலு மண்டபத்திலுள்ள சபையும் அத்துடன் கலைந்தது.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் இருபத்தெட்டாவது படிக்குக் காவலான மதனமோகினி என்னும் பதுமை பின்வரும் கதையைக் கூறியதாக உள்ளது.)

## நரபலியை ஒழித்தல்

வெளி தேசங்களில் பிரயாணம் செய்து வந்த விக்கிரமாதித்தன் ஒரு நகரத்திற்கு வந்து சேர்ந்தான். அந்நகரத்தின் அருகே தெளிந்த நீரையுடைய நதி ஒன்று ஓடுகிறது. நதிக்கரையிலே, கனிவர்க்கங்களைக் கொடுக்கும் மரங்களும், மணம் கமழும் வாசனைப் புஷ்பங்களையுடைய செடி கொடிகளும் நிறைந்த வனம் இருந்தது. வனத்தின் மத்தியிலே, அழகிய ஆலயம் ஒன்று எழுப்பப்பெற்றிருந்தது. ஆலயத்தைக் கண்ணுற்ற அரசனுக்கு அக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தெய்வத்தை வழிபட விருப்பமுண்டாயிற்று. நதியிலே இறங்கி ஸ்நானம் செய்து, ஈரம் சொட்டும் துணிகளுடன் கோயிலுக்குச் சென்று பகவானை வழிபட்டான். பிறகு வெளியே வந்து மண்டபத்தில் சிரமம் தீர உட்கார்ந்தான். அப்போது நான்கு வழிப்போக்கர்கள் அங்கு வந்தனர். அவர்களும் கோவிலுக்குள் சென்று ஆண்டவனை தரிசித்துவிட்டு வெளியே வந்து மண்டபத்தில் உட்கார்ந்தனர். அவர்களைப் பார்த்த அரசன் அருகில் நெருங்கி விசாரித்தான்.

''ஐயா! நீங்கள் பிரயாணத்தினூடே எத்தனையோ ஊர்களையும் நகரங்களையும் கடந்து வந்திருக்க வேண்டும். வரும் வழியில் அனேக அதிசயங்களையும் கண்ணுற்றிருக்கலாம். அவைகளை எனக்கும் சொல்லுங்கள்; நான் கேட்டு ஆனந்திக்கிறேன்!" என்றான் விக்கிரமாதித்தன்.

"சுவாமி! நாங்கள் ஓரிடத்தில் அதிசயம் ஒன்று காண நேர்ந்தது. ஆனால் உயிர் தப்பினால் போதுமென்று நாங்கள் தலைதெறிக்க ஓடி வந்து விட்டோம்!"

"ஏன்? அது என்ன? சற்று விபரமாகத் தெரிவியுங்கள்?" என்று ஆவல் ததும்பக் கேட்டான் விக்கிரமாதித்தன்.

"வேதாளபுரி என்னும் நகரத்தில் சோணிதப் பிரியை என்னும் பெயருடைய தேவதை இருந்து வருகிறாள். அந்தப் பிரதேசத்து மக்களும், அரசனும் தேவதையின் உள்ளத்தைத் திருப்தி செய்து தங்கள் விருப்பம் நிறைவேறுவதற்காக ஒவ்வொரு வருஷமும் ஒரு மனிதனைப் பலி கொடுத்து வருகின்றனர். அன்றைய தினம் வேதாளபுரிக்கு யாராவது அன்னியன் வந்தால் அவனையும் பிடித்துச் சென்று மிருகங்களைப் பலி கொடுப்பது போல் தேவதைக்குப் பலியிட்டு விடுகிறார்கள். இது விஷயம் எங்களுக்குத் தெரியாது. ஒவ்வொரு ஊராக க்ஷேத்திராடனம் செய்து வந்த நாங்கள், வேதாளபுரிக்கும் சென்று, சோணிதப் பிரியை கோவிலுக்குச் சென்று தேவியை வழிபட்டோம். கோயிலை அடைந்தபோதுதான் எங்களுக்கு விஷயம் தெரிய வந்தது. மேலும் எங்கள் துரதிருஷ்டத்தைப் பாருங்கள். நாங்கள் சென்றிருந்த அத்தினமே தேவதையைத் திருப்திபடுத்த நரபலி கொடுக்கும் தினம். எங்களைக் கண்ட ஜனங்கள் "அன்னியர்கள்! அன்னியர்கள்!" என்று கத்திக்கொண்டு ஓடி வந்தனர். அவர்களிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் நாங்கள் தப்புவது பெரும் பாடாகி விட்டது. கல் முள் பாராமல் வாயுவேகமாய்த் தலைதெறிக்க ஓடினோம். இதுதான் நாங்கள் அனுபவித்த அதிசயம்!" என்றனர் அவர்கள்.

அவர்கள் விவரித்த சம்பவத்தைக் கேட்டதும் விக்கிரமாதித்தனுக்கு அங்கு சென்று காணவேண்டுமென்று விருப்பம் ஏற்பட்டது. மேலும், சோணிதப் பிரியைக்குப் பலி கொடுக்கும் தினமும் சமீபத்தில் நெருங்கிக் கொண்டிருந்தது. ஆகவே அவன் நேராகப் புறப்பட்டு வேதாளபுரியை நோக்கிச் சென்றான்.

வேதாளபுரியை அடைந்ததும், கோவிலின் எதிரில் அமைந்திருந்த குளத்திலிறங்கி நீராடி, தூய்மை நிறைந்த

மனத்துடன் கோவிலுக்குச் சென்றான். தேவியின் முன் நின்று பக்தி மேலிட்டவனாகப் பின்வருமாறு பிரார்த்தித்தான்.

"அழகிய சந்திரனைப் போன்ற முகலாவண்யத்தை உடைய தேவியே! லீலையின் உருவான மகேஸ்வரி! எதிரிகளின் அகம்பாவத்தை அழிக்கக் காரணமாக இருக்கும் கௌமாரி! சக்ராயுதத்தை தரித்திருக்கும் வைஷ்ணவி, கனகோரமான மறுமலையுடைய வராகி, வச்சிராயுதத்தை உடைய ஐந்த்ரீ, கணேசன், ருத்திரன் இவர்களுடன் இருக்கும் சாமுண்டி ஆகிய இந்த சப்த மாதர்களும் என்னைக் காப்பாற்றட்டும்!"

தேவியை வழிபட்ட பிறகு அரசன் வெளியே வந்தான். அப்போது ஜனக்கூட்டம் ஒன்று மிகுந்த வருத்தத்தோடு கூடிய மனிதன் ஒருவனை இழுத்துக்கொண்டு அங்கு வந்து கொண்டிருந்தது. பலவித வாத்தியங்கள் காதுக்கினிமையான கீதங்களை இசைத்தன. அம்மனிதனைப் பார்த்த விக்கிர மாதித்தனின் உள்ளம், அவனுடைய பரிதாபகரமான நிலைக்காக வருந்தியது.

"தேவிக்குப் பலியிடுவதற்காக அழைத்து வரப்படுகிறான் போல் தோன்றுகிறது! ஆகவேதான், அவன் முகம் வாட்ட மடைந்திருக்கிறது. இப்போது என் உடலை இவனுக்காகத் தியாகம் செய்து இவனை விடுதலை செய்யவேண்டும். இவ்வுடல் நூறு வருஷங்கள் வரை உயிரோடிருந்தாலும் கடைசியில் அழிவை அடைந்துதான் ஆகவேண்டும். ஆகவே, ஒருவன் தன்னுடைய தேகத்தைக் கொடுத்தாவது கீர்த்தியையும், புண்ணியத்தையும் அடையவேண்டும்.

"செல்வம் நிலையற்றது; உயிரும் நிலையற்றதே; யௌவனம், தேகம் இரண்டும் அவ்விதமே, இந்த சம்சார வாழ்க்கை முழுவதுமே நிலையற்றது. கீர்த்தியும், தர்மமும் மட்டுமே அழிவற்ற தன்மையுடையவை அன்றோ? இன்னும், நமது உடல் சீக்கிரம் மறையக்கூடியது; நாம் சேமிக்கும் செல்வம் அதிக நாட்கள் நிலையாக இருக்கக்கூடியது அல்ல; எந்தச் சமயத்திலும் மரணம் சம்பவிக்கலாம். ஆகவே, தர்மத்தைச் செய்து ஒருவன் சேமித்து வைத்துக் கொள்ள வேண்டும். செல்வமானது பாதத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் தூசி போன்றது; மலை ஓடையில் வரும் தண்ணீரின் வேகம் போன்றது யௌவனம்; மனிதர்களுடைய வியவகாரங்கள் நீர்த்திவலை போன்று நிச்சயமில்லாததும், உறுதியற்றதுமாகும். கடல்நுரை போன்றது நம் வாழ்க்கை. சுவர்க்கத்தின் தாழ்ப்பாளைத் திறக்கும் சக்திவாய்ந்த தர்மத்தைச் செய்து ஒருவன் புண்ணியத்தைச் சம்பாதிக்காவிடில், வயதாகிக் கிழத்தனத்தால் வளைந்து கூனும்

போது அவன் மனைவியாகூலத்தால் பீடிக்கப்பட்டு வேதனையாகிற நெருப்பிலே வெந்து சாவான்."

இவ்வாறு மனதிலே சிந்தித்த விக்கிரமாதித்தன் அந்த அப்பாவி மனிதனைக் காப்பாற்றுவதற்காகக் கூட்டத்தினிடம் சென்றான். "மகா ஜனங்களே! கவலையில் வாட்டமுற்றிருக்கும் முகத்தை உடைய இம்மனிதனை எங்கு கொண்டு செல்லுகிறீர்கள்? இவன் செய்த தவறு தான் என்ன?" என்று கேட்டான்.

"ஐயா! இவன் தவறு ஒன்றும் செய்யவில்லை. நாங்கள் தேவதைக்குப் பலி கொடுப்பதற்காக இவனை அழைத்துச் செல்லுகிறோம்" என்றனர் அவர்கள்.

"ஏன்? எதற்காக மனிதனைப் பலி கொடுக்கவேண்டும்?"

"நரபலியினால் திருப்தி அடையும் தேவி எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறாள்."

"மகா ஜனங்களே! இவனோ மிகவும் மெலிந்து சக்கை போன்றிருக்கிறான்; உடல் குன்றி பயத்தோடு இருக்கிறான். இவனைப் பலியிடுவதால் தேவி எப்படித் திருப்தி அடைவாள்? இவனை விட்டுவிடுங்கள். அவனுக்குப் பதிலாகப் பலியிட்டுக் கொள்ள நான் முன்வருகிறேன். என் உடலை நன்றாகக் கொழுக்கும்படி நான் வளர்த்திருக்கிறேன். என் மாமிசத்தைப் புசிப்பதால் தேவியும் திருப்தி அடைவாள். சதைப்பற்றே இல்லாத இவனைப் பலி கொடுத்து என்ன பலன்தான் உண்டாகப் போகிறது? ஆகவே அவனுக்குப் பதிலாக என்னைப் பலி கொடுங்கள்!" என்று விக்கிரமாதித்தன் சொல்லிக்கொண்டே அம் மனிதனை விடுவித்தான். மக்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை. விக்கிரமாதித்தனின் செயல் அவர்களைச் செயலற்று நிற்கச் செய்துவிட்டது. அரசன் தானே பலி பீடத்திற்குச் சென்று கத்தியை உருவி, கழுத்தைத் துணித்துக் கொள்ளப் போனான்.

அப்போது சோணிதப் பிரியை அரசனின் எதிரில் தோன்றி, அவன் கைகளைப் பிடித்துத் தடுத்தாள்; "ராஜபுத்திரா! பிறருக்காக உன் உடலைத் தியாகம் செய்ய வந்த உன் ஆற்றலை நான் மிகவும் மெச்சுகிறேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்!" என்றாள்.

"தேவி! இன்றிலிருந்து நரபலி கேட்பதை விட்டுவிட வேண்டும்!" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

தேவியும், "அவ்விதமே நடக்கும்!" என்று அருளிவிட்டு மறைந்தாள். அரசனின் சாமர்த்தியத்தையும் புத்தி

...ர்மையையும் கண்ட வேதாளபுரி ஜனங்கள் அவனைப் புகழ்ந்தனர்.

"அரசே! பிறருக்காக மரத்தைப் போன்று உன் சுகத்தைத் தியாகம் செய்து கஷ்டத்தை ஏற்றுக் கொள்கிறாய். உன்னுடைய சுகத்தை உதறித் தள்ளிவிட்டுப் பிறருக்காக நாள்தோறும் நீ கஷ்டத்தை அனுபவிக்கிறாய். இது உன்னுடைய கூடப்பிறந்த (இயற்கையான) குணம். மரங்கள் கடும் வெய்யிலைத் தாங்கிக் கொண்டு தன்னுடைய நிழலினால் அதனடியில் அண்டியவர்களுக்கு வெய்யிலிலிருந்து பாதுகாப்பைக் கொடுக்கிறது. அதைப்போன்று தான் நீயும்" இவ்வாறு பலவாறாகப் புகழ்ந்து போற்றினர். அரசனால் காப்பாற்றப்பட்ட மனிதன் அரசனின் பாதங்களில் விழுந்து கண்களில் ஒற்றிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடினான். அன்று முதல் அக்கோயிலில் உயிர்பலி கொடுக்கும் வழக்கம் நிறுத்தப்பட்டுவிட்டது. பிறகு அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு அரசன் ஊர் திரும்பினான்.

---

## 8-வது சௌந்தரவல்லிப் பதுமை சொல்லிய தாசி அபரஞ்சி கதையும், நீதிவாக்கியக் கிளியின் கதையும்

---



மறுநாள் காலையில் போஜராஜன் அற்புத சிம்மாசனத்தின் படிகளில் ஏறி வீற்றிருக்க முயன்றபோது, எட்டாவது படிக்குக் காவலாக நின்ற சௌந்திர வல்லிப் பதுமை கலகலவென்று சிரித்து, அவனைத் தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனைப் பற்றிய புதிய கதை ஒன்றைச் சொல்லத் தொடங்கியது.

இந்த அற்புத சிம்மாசனத்தில் விக்கிரமாதித்த மகாராஜன் வீற்றிருந்து, தன் மதியூகி மந்திரியான பட்டியுடன் நீதி நெறி வழுவாமல் அரசாண்டு வரும்போது, காடாறு மாதம் புறப்படும் சமயம் வந்தது. இராஜ்ய பாரத்தைப் பட்டியின் குமாரனை வியோகனிடம் ஒப்படைத்துவிட்டு, விக்கிரமாதித்தன், தன் குலதெய்வமான பத்திரகாளியம்மனை வணங்கித் திருநீறு தீர்த்தம் பெற்றுக் கொண்டு, பட்டியையும் வேதாளத்தையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

காடு மலைகளைக் கடந்து அவர்கள் ஒவ்வொரு ஊராகச் சுற்றுப் பிரயாணம் செய்துவரும் சமயத்தில், விந்தாடவி என்னும் மலைச்சாரிவில் ஓடும் சலரி ஆற்றின் கரையிலுள்ள இராஜபுரிபட்டணத்தை அடைந்தனர். அந்நகரில் அபரஞ்சி என்றொரு தாசி இருந்தாள். அவள் அப்பாசி என்ற அந்தணன் ஒருவன் மீது அளவிலாத மோகம்கொண்டு, அவனைவிட்டு ஒரு கணமும் நீங்காது இருந்து வந்தாள். அவ்வந்தணன் ஒருநாள் திடீரென்று மாரடைப்பினுல் மாண்டுவிட்டான்.

அளவிலாத துக்கத்திற்கு ஆளான அபரஞ்சி, தன் காதலன் செத்த பிறகும், அவன் மீதுள்ள ஆசை அடங்காதவளாய்த் துடித்து, அவனுடைய பிரேதத்தை எடுத்துச் சென்று அந் நகரிலுள்ள அம்மன் சந்நிதானத்தில் வைத்து, மாண்டுபோன தன் காதலனை உயிரெழுப்பித் தர வேண்டுமென்று தவம் செய்தாள். அம்மன் தோன்றி, "அபரஞ்சி! இன்னும் சிறிது நாளையில் விக்கிரமாதித்தன் பட்டி இருவரும் வணிகர்களைப் போல வேடம் பூண்டு இந்நகருக்கு வருவார்கள். அப்பொழுது நீ விக்கிரமாதித்தனின் மனம் மகிழும்படியாக நடப்பாயானுல், அவனுல் இவ்வந்தணன் உயிர்பெற்றெழ வழிபிறக்கும். உன்னை அவர்கள் தீக்குளிக்கச் சொல்வார்கள். நீ துணிந்து தீயில் விழவேண்டும். அவர்கள் உன்னை உயிரெழுப்புவார்கள். நீ எழுந்திருந்து "இந்தக் கும்பத்திர்த்தம் அங்கத்துக்காகுமோ?" என்று கேள். அப்போது அவர்கள் திர்த்தத்தையும், பிரம்பையும் கொடுப்பார்கள். நீ அந்தத் திர்த்தத்தைக் கொண்டுவந்து இவ்வந்தணனின் சவத்தின்மீது தெளித்துப் பிரம்பினுல் தட்டினுல் உடனே உடல்கூடு உயிர்பெற்றெழும்!" என்று சொல்லி விட்டு மறைந்தாள். அதன் பிரகாரம் தாசி அபரஞ்சியும் அந்தணனின் பிணம் கெட்டுவிடாதபடி அதற்குத் தைலமிட்டுப் பதனப்படுத்தி வைத்துவிட்டு, பட்டியோடு விக்கிரமாதித்தனின் வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கலானுள்.

விக்கிரமாதித்தனும் பட்டியும் அந்நகரத்தின் எல்லையை அடைந்ததும், வணிகர்களைப்போன்று மாறுவேடந்தரித்து முறையே பெரிய காந்தையரென்றும், சின்னக் காந்தைய ரென்றும் பெயர் வைத்துக்கொண்டு கடைத்தெருவில் இரத்தினக் கம்பளம் விரித்து, இரத்தின வியாபாரம் செய்தனர். வியாபாரம் முடிந்து மாலை நேரம் வந்ததும் இரவில் படுத்துறங்க ஒரு சத்திரத்தில் வந்து தங்கினுர்கள். இவ்வாறு ஐந்தாறு நாட்கள் சென்றன. ஒருநாள் அந்தி சாய்ந்து இருள் வானத்தில் நிலா பூக்கும் நேரத்தில், விக்கிரமாதித்தன் பட்டியை விட்டு விட்டுத் தனியாக நகரத்தைச் சுற்றிப் பார்க்கச்

சென்றான். அப்போது அவன் தாசிகளின் மாளிகைகள் நிறைந்த கணிகையரின் மாடத்தெருவில் நுழைந்தான். அங்கு அத்தெருவில் தாசி அபரஞ்சியின் சித்திரக்கூட மாளிகை மாறோங்கி நின்று சிங்காரத்துடன் மிகவும் சிறப்பாய் அமைந்திருப்பதையும், அவளுடைய நிலா உப்பரிகை மின்னிசையுடனும், அதி மோகனத்துடனும் காட்சியளிப்பதையும் கண்டு அம்மாளிகையினுள் நுழைந்தான்.

அவனை உற்று நோக்கிய தாசி அபரஞ்சி, அவனுடைய முக வசீகரத்தையும், இராஜகம்பீரமான தோற்றத்தையுங் கண்டு, அம்மன் அறிவித்த விக்கிரமாதித்தன் அவனே என்று உணர்ந்து, அவனைப் புன்முறுவலுடன் வரவேற்று, நிலா உப்பரிகையிலுள்ள பள்ளியறைக்கு அழைத்துச் சென்று நவமணிக்கட்டிலில், பூக்களால் புனைந்த புதுமெத்தை விரித்து, அதில் அமரச் சொல்லி, காதல்மொழிகள் பேசிச் சரசமாடினாள். பிறகு குளிப்பதற்காக அவனுக்கு வெந்நீர் வைத்துக் கொடுத்து, அவன் குளித்துவிட்டு வந்ததும், அறுசுவை உணவிட்டுக் களிப்பாக்குடன் தாம்பூலம் மடித்துத் தந்து, விக்கிரமாதித்தனை உள்ளம் பூரிக்கச் செய்தாள். அபரஞ்சியின் அளவற்ற நேசத்தையும் பணிவிடைகளையும் கண்ட விக்கிரமாதித்தன், "இவள் தாசியாயின் காசுக்கல்லவோ ஆசைப்படுவாள்? இவளோ காசைப் பற்றி கருதாமலே களிப்பூட்டுகிறாளே! இந்த அதிசயம் புவியெங்கணும் கண்டதில்லை!" என்று நினைத்து வியப்புற்றவனாய், அவள்மீது அதிகப் பிரியங்கொண்டு, பட்டியையும் மறந்து அன்றிரவு முழுதும் அபரஞ்சியின் மாளிகையிலே தங்கியிருக்க விரும்பினான். அபரஞ்சியும் அன்றிரவு முழுதும் கண்ணுறங்காமல் கருத்துடன் விக்கிரமாதித்தனைக் கவனித்து, அவனை விட்டு இடம் வலம் பிரியாமலும், கின்னரி, சரமண்டலி, ருத்திரவீணை முதலான வாத்தியங்களெல்லாம் வாசித்துப் பரவசப் பண்ணெழுப்பி, சம்பூர்ண ராகங்களெல்லாம் பாடிக் களிப்பூட்டி, அவனுடன் சோழி, அம்மானை முதலான விளையாட்டுகளெல்லாம் ஆடி, அவள் இதுவரை கற்றிருந்த வித்தைகளெல்லாங் காட்டி, பரவசம் தந்து விக்கிரமாதித்தனின் மனதை மகிழ்ந்து நெகிழச் செய்தாள். எந்த மோகனாங்கியின் மாளிகைக்குச் சென்றாலும் கருக்கலில் கண்விழித்துக் காலைக்கடன்களை முடித்துவிட்டுக் கிளம்பும் விக்கிரமாதித்தன், அன்றையத்தினம் அபரஞ்சியை விட்டு பிரிய மனமில்லாமல், அவள் காட்டிய அன்பிலும், அவள் ஊட்டிய இன்பத்திலும் மதிமயங்கி, சூரியன் உதயமாகி வெகு நேரமான பின்னும் அபரஞ்சியுடன் மகிழ்ந்திருந்தான். வெகு நேரஞ் சென்ற

பிறகுதான் உலக நினைவு வந்தவனாய் சத்திரத்தில் காத்திருக்கும் பட்டியைக் காணச் சென்றான்.



அவனைக் கண்டதும் பட்டி, "அரசே! கணிகையர் வீடு சென்றால் பொழுது விடிவதற்கு நான்கு நாழிகைக்கு முன்பே வர வேண்டியதுதானே முறையாகும்! வெயிலடிக்கும் பொழுதில் வந்தால், கணிகையின் மஞ்சட்குறி உங்கள் அங்கவஸ்திரத்தில் அப்பியிருப்பதைப் பார்த்துப் பிறர் நகைப் பார்களே! இது நம் கௌரவத்திற்கே பங்கமில்லையா?" என்றான்.

"பட்டி! இதுவரை எத்தனையோ இளம் பெண்களின் அன்பையெல்லாம் அனுபவித்திருக்கிறேன். ஆனால் அபரஞ்சியைப் போல இனிமையான பெண்ணை இவ்வுலகில் நான் கண்டதில்லை. கணிகையர் குலத்தில் பிறந்தவளாயிருந்தாலும் என்மீது அளவற்ற காதல் கொண்டிருக்கிறாள்!" என்று அபரஞ்சியைப் பற்றி அளவிலாது புகழ்ந்தான் விக்கிரமாதித்தன்.

பட்டி அவநம்பிக்கையுடன் நகைத்து, "அரசே! மீன் பிடிப்போருக்கு மிதப்பு மீதுதான் கண் இருக்கும்! அதுபோலக் கணிகையருக்குத் தங்கள் காரியத்தின் மீதுதான் கண் இருக்குமே தவிர, காதல் என்பதே இராது! அந்தத் தாசி அபரஞ்சி தங்களிடம் ஏதோ காரியம் ஆகவேண்டும் என்பதற்காகத்தான் அளவற்ற ஆசை கொண்டுள்ளவள்போல் பாசாங்கு செய்கிறாளே

விர, ஒருபோதும் உள்ளன்பு இராது! இதுதான் உலக அனுபவம்!" என்றான்.

"பட்டி! உன் உலக அனுபவம் கற்றுக் கொடுத்த யூகம் தவறு! தாசி அபரஞ்சியைப் போல அன்புள்ளவள் அகிலமெங்கும் தேடினும் கிடைப்பது அரிது!" என்றான் விக்கிரமாதித்தன்.

"அரசே! அவ்வாறானால் இன்றிரவு அவளிடம் சென்று திரும்பி வரும்போது அவளுடைய அழகான கூந்தலைக் கேளுங்கள். தந்தால் வாங்கி வாருங்கள். பிறகு சொல்லுகிறேன், அவளுடைய அளவற்ற அன்பைப் பற்றி!" என்றான் பட்டி.

அவ்வாறே அன்றிரவு அபரஞ்சியின் மாளிகைக்குச் சென்ற விக்கிரமாதித்தன் ஆனந்தமாக இரவு கழிந்தபின் பொழுது விடிந்ததும் விடைபெற்றுக் கொள்ளும்பொழுது, கூந்தலைக் கேட்க எண்ணி நாணியவனாய் நின்றான். அவனது முகக் குறிப்புணர்ந்த அபரஞ்சி, "அன்பரே! ஏன் கவலையுடன் தலை குனிந்து தயங்கி நிற்கிறீர்கள்? அடியாளிடமிருந்து தங்களுக்கு ஏதாவது வேண்டுமா? தயங்காமல் கேளுங்கள், தருகிறேன்!" என்றாள்.

"அபரஞ்சி! ஒரு காரியத்திற்காக உன்னுடைய குழல் முடித்த கொண்டை வேண்டும்!" என்று மனங்கூசியபடியே கேட்டான். அபரஞ்சியும் உடனே சிரித்த முகமாய், கத்தியெடுத்துத் தன்னுடைய அழகான கொண்டையை அறுத்து அவன் கையில் கொடுத்தாள்.

விக்கிரமாதித்தன் அதைக் கொண்டுவந்து சத்திரத்திலுள்ள பட்டியின் முன்போட்டு, "பட்டி! இப்பொழுது சொல்; கூந்தல் அழகி என்று பெயர் பெற்ற அபரஞ்சி தன் கூந்தல் முழுவதையும் அறுத்துத் தருவதென்றால் அவளுக்கு என்மீது எவ்வளவு அன்பு இருக்கவேண்டும்?" என்றான்.

"அரசே! இப்பொழுதும் அவளுடைய அன்பில் எனக்கு எள்ளளவும் நம்பிக்கையில்லை! இன்றிரவு சென்று அந்த அபரஞ்சியின் அழகான மூக்கு நுனியில் பாக்களவு வாங்கிவாரும்! பிறகு பேசுவோம்!" என்றான் பட்டி.

அவ்வாறே விக்கிரமாதித்தனும் அன்றிரவு அபரஞ்சியிடம் சென்று, அகம்மகிழ ஆனந்தங்கண்டு, ஆதவன் உதித்ததும் அவளிடம் விடைபெறும் பொழுது, "அபரஞ்சி! உன்னுடைய மூக்கு நுனியில் பாக்களவு வேண்டும்!" என்றான். உடனே அபரஞ்சி சிறிதும் தயங்காமல் தன் மூக்கை அறுத்துக்கொடுத்து, "பிராணகாந்தரே! என் ஜீவனைக் கேட்டாலும் அடியாள்

தங்களுக்குத் தரச் சித்தமாகவுள்ளவள்!" என்று கூறியனுப்பினுள். ஆச்சரியமடைந்த விக்கிரமாதித்தனும், மூக்கு நுனியைக் கொண்டுவந்து பட்டியின் முன் வீசி, "பட்டி! இப்போதென்ன சொல்லுகிருய்?" என்ருன்.

பட்டியோ அலட்சியப் புன்னகை செய்தபடி, "அரசே! இன்றிரவு அவளின் நெஞ்சகச் சதையை வாங்கிவாரும்!" என்ருன்.

அவ்வாறே விக்கிரமாதித்தன் அன்றிரவு அபரஞ்சியிடமிருந்து நெஞ்சகச் சதையை அறுத்து வாங்கி வந்து பட்டியின் முன் வீசி "பட்டி! இப்பொழுது சொல், அந்த அபரஞ்சி என்னிடம் உயிரையே வைத்திருக்கிருளென்பதை நம்புகிருயா?" என்ருன். பட்டியோ, "இப்போதும் நான் நம்பவில்லே!" என்ருன்.

இதைக் கேட்ட விக்கிரமாதித்தனின் கோபம் உச்ச நிலேயடைந்தது. அவனுடைய இரு கண்களும் நெருப்பை உமிழ்ந்தன. பட்டியை நோக்கி, "அடப்பாவி! என் மேல் உயிரையே வைத்திருக்கும் ஒரு பெண்ணேச் சோதிக்கிறேனென்று சொல்லி, அவளே மொட்டையடித்து மூக்கறுத்து அவமானப்படுத்தி விட்டாய்! நீ சொன்னபடி நான் கேட்டதையெல்லாம் அவள் சிறிதும் முகவாட்டமின்றி தந்தாள். இன்னும் அவளுக்கு என்மேல் உள்ளன்பு இல்லேயென்று கூறுகிருய்! வெறுமனே கூறினுல் விடமாட்டேன். நிரூபிக்க வேண்டும். இல்லேயானுல், அவளேச் செய்தது போலவே உன்னேயும் செய்வேன்!" என்ருன்.

"பிரபோ! இன்னும் எட்டு நாளில் நிரூபிக்கிறேன். அதுவரை நீங்கள் அபரஞ்சியின் இல்லத்தின் பக்கமே எட்டிப் பார்க்கக்கூடாது! அவளுடைய கண்களிலும் தட்டுப்படக்கூடாது!" என்ருன் பட்டி.

விக்கிரமாதித்தனும் அதற்குச் சம்மதித்து முன்பு போலப் பட்டியுடன் சேர்ந்து இரத்தின வியாபாரம் செய்ய, ஏழுநாட்கள் கழிந்தன. எட்டாம் நாள் பொழுது விடிந்ததும் பட்டி விக்கிரமாதித்தனிடம், "பிரபோ! இன்றையத்தினம் உங்கள் அபரஞ்சியின் ஆசை நாடகத்தை அம்பலப்படுத்த வேண்டுமல்லவா? வாருங்கள் போவோம்!" என்று கடையைக் கட்டிக் கொண்டு, அவ்வீதியிலுள்ள வணிகர்களுக்கெல்லாம் தங்கள் ஊருக்குப் போய் வருவதாகச் சொல்லிவிட்டு, விக்கிரமாதித்தனே அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

ஊருக்கு வெளியே, எல்லைப்புறத்திலுள்ள காட்டிற்குச் சென்று விக்கிரமாதித்தனை மறைவாகப் பதுக்கி வைத்து விட்டுப் பட்டி, ஊரை நோக்கிச் செல்லும் ரஸ்தாவிற்கு வந்து, அங்கு ஒருபுறம் சுள்ளிகளை அடுக்கிச் சிதை தயாரித்து, தீக்குழி வளர்த்துத் தலைவிரிகோலமாய் அழுது கொண்டிருந்தான். வழிப் போக்கர்கள் விஷயம் என்னவென்று வினவ, "கேளுங்கள்! நானும் என் தமையனுரான பெரிய காந்தையாரும் ஊருக்குப் போக இவ்வழியாக வந்தோம்! ஐயோ! என் தமையனுர் விஷந்தீண்டி மாண்டுபோனுர். அவருடைய ஆசைநாயகி அபரஞ்சியிடம் சென்று விஷயத்தைச் சொல்லுங்கள். பெரிய காந்தையாரின் சவத்தை இங்கே தகனம்செய்து விட்டு அவருடைய சொத்தையெல்லாம் தானதர்மஞ்செய்துவிட்டு நான் வேறு தேசத்திற்குப் போகப் போவதாகவும் சொல்லுங்கள்!" என்றான் பட்டி.

வழிப்போக்கர்கள் அவ்வாறே அபரஞ்சியிடம் வந்து சொன்னுர்கள். அபரஞ்சி துள்ளியெழுந்து, தலையில் எண்ணெய் தேய்த்து, களப கஸ்தூரிகள் பூசி, மங்கல ஆடையணிகள் பூண்டு, கையில் தீர்த்தச் செம்பும், எலுமிச்சம்பழமும் எடுத்துக்கொண்டு, அந்நகரையாளும் இராஜ சிங்க மன்னனிடம் சென்று, "அரசே! என் ஆசை நாயகரான செட்டியார் விஷம் தீண்டி மாண்டு போனுர். நானும் தீக்குளித்து உடன்கட்டை ஏறப்போகிறேன்!" என்று சொன்னுள்.

அரசன் ஏளனமாக நகைத்து, "பேதைப் பெண்ணே! நீயோ தாசி! தாசியின் தர்மம் சககமனமல்ல; சுகபோகமாய் வாழ்க்கை நடத்துதல்! ஆதலின் நீ உடன்கட்டை ஏறுவது அடாத செயல்! முன்னவனை மறந்து, வேறொரு பொருத்தமான நாயகனைத் தேடிக் கொள்!" என்று புத்திமதி கூறினுன். அபரஞ்சி அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், தன் இலட்சியமே குறியாகத் தீக்குழி நோக்கி நடந்தாள்.

அவள் வரும் ஆவேசத்தையும் மனேவுறுதியையுங் கண்ட விக்கிரமாதித்தன், தன் மறைவிடத்திலிருந்தவாறு, "பட்டி! பார் அந்த உத்தமியை! என் உடல் சிதையில் எரிகிறது என்று கேள்விப்பட்டதும் உடன்கட்டை ஏற ஓடோடி வருகிறுள்!" என்று பதறினுன்.

பட்டி அலட்சியமாக, "பூமானே! சற்று பொறுத்திருங்கள்! பத்தினித் தன்மைக்குப் பரிசோதனை அக்கினிக் குழிதான்! நான் கூப்பிடும்வரை நீங்கள் மறைவிடத்திலிருந்து தலைகாட்டாமல் கவனித்துக்கொண்டிருங்கள்!" என்று சமாதானப்படுத்தினுன்.

அபரஞ்சியும் தீக்குழி நோக்கிப் பாய்ந்து வந்து, முன்னொரு சமயம் அம்மன் சொன்ன வாக்கை நினைவிலிறுத்தி, தன்னுடைய ஆசை நாயகனை அந்தணனை மனதில் நினைத்து, அக்கினியை மும்முறை வலம்வந்து அதில் விழுந்தாள். விக்கிரமாதித்தன் மறைவிடத்திலிருந்து துள்ளியெழுந்து பட்டியைப் பார்த்துச் சீறலானான், "கெடுத்தாயே பாவி! அடுக்குமல்லி போன்றிருந்த என் அபரஞ்சியை அனலில் விழவைத்து விட்டாய். இப்பொழுதாவது சொல். அவள் உண்மையில் உத்தமிதானே? என்மீது வாஞ்சையுள்ள வனிதை தானே?" என்றான்.

"இம்மியளவும் இல்லை! நம் பத்திரகாளியம்மனை வரவழைத்து தீக்குழியிலிருந்து அபரஞ்சியை எழுப்புங்கள். பிறகு சொல்கிறேன்!" என்றான் பட்டி.

அதற்கிணங்க விக்கிரமாதித்தன், தன் பத்திரகாளியம்மனிட மிருந்து காகத் தீர்த்தமும், திருநீறும் பிரம்பும் பெற்று தீக்குழியில் திருநீற்றைத் தூவித் தீர்த்தமுந் தெளித்து, காளியைத் தியானம் செய்து, அந்த நெருப்பைப் பிரம்பாலடித்து. "அபரஞ்சியென்னும் ஆரணங்கே! உயிர் பெற்று எழுவாயாக!" என்றான்.

அபரஞ்சி முன்னிலும் பன்மடங்கு அழகான வடிவத்துடன் உயிரோவியமாய் எழுந்து, விக்கிரமாதித்தனின் முகத்தை ஏறிட்டுப் பாராமல் "இந்தக் கும்பத் தீர்த்தம் அங்கத்திற்காகுமோ?" என்றாள். பட்டி சட்டென்று, "ஆகும்!" என்றான். விக்கிரமாதித்தனோ திகைத்து நிற்க, "ஏன் திகைத்து நிற்கிறீர்கள்? தெளித்தது போக கும்பத்தோடு அந்தத் தீர்த்தத்தையும், பிரம்பையும் அந்தக் கோதை கொஞ்சு மொழியாளின் கையில் கொடுங்கள்!" என்றான். விக்கிரமாதித்தனும் அவ்வாறே கொடுக்க, பிரம்பையும், தீர்த்தத்தையும் தன் வசமாக்கிக் கொண்டுவிட்ட அபரஞ்சி அவர்களைத் திரும்பியும் பாராமல் வேகமாக நடந்தாள். தன் மாளிகையை அடைந்ததும் அபரஞ்சி அங்கு தன் பள்ளியறையில் கட்டிலுக்கு அடியிலுள்ள சவப்பெட்டியை இழுத்துத் திறந்து, அதனுள்ளிருந்த அந்தணனின் சிதைந்து கிடந்த எலும்புகளைச் சரிவர அடுக்கித் தீர்த்தந் தெளித்துத் திருநீறு தூவி, அம்மனை வணங்கி, பிரம்பால் தட்டி எழுப்ப, அந்தணனும் உயிர் பெற்றெழுந்தான். உடனே பழைய ஆசை நாயகனை அவனை அபரஞ்சி உள்ளன்புடன் வாரியணைத்து இணைபிரியாமல் இன்புற்றிருக்கலானாள்.

அது சமயம் காட்டில் பிரமித்து நின்ற விக்கிரமாதித்தனைப் பட்டி ஊருக்குள் அழைத்து வந்து வழக்கம்போல் சத்திரத்தில்

தூங்கியிருந்து, பொழுது இருட்டியதும், "பிரபோ! இப்போது உங்கள் அடியாளான அபரஞ்சியின் மாளிகைக்குச் சென்று, அவளுடைய உள்ளன்பை நீங்களே அறிந்து வாருங்கள்!" என்றான்.

விக்கிரமாதித்தன் துள்ளியெழுந்து அளப்பரும் ஆவலுடன் அபரஞ்சியின் மாளிகைக்கு வந்து தெருவாசற் கதவைத் தட்டினான்.

உள்ளே, தன் ஆசைநாயகனை அந்தணனுடன் கட்டிலில் அமர்ந்து கனிமொழி பேசிக் களிப்புற்றிருந்த அபரஞ்சி, ஆத்திரத்துடன், "யாரடா கதவை இடிப்பது?" என்றாள்.

உடனே விக்கிரமாதித்தன், "நான் தான் இரத்தின வணிகன் பெரிய காந்தையர்!" என்றான்.

"நீர் யாரோ; நான் யாரோ? இது நீர் வரக்கூடிய இடமுமன்று! வந்த வழியிலே விரைவில் திரும்பிச் செல்லும்!" என்று உள்ளிருந்தபடியே குரல் கொடுத்தாள் அபரஞ்சி.

அதைக் கேட்டதும் விக்கிரமாதித்தன் வெட்கித் தலைகுனிந்து, சத்திரத்திற்குத் திரும்பி வந்தான். அவன் அவ்வாறு வருவதைக் கண்ட பட்டி, "என்ன, அன்புமிக்க பூமானே! பூவையாளின் பூமணமில்லாமல் திரும்பிவந்தீரே! அன்புள்ள அபரஞ்சி அடைத்தத் தெருக்கதவை நீர் அறைகூவி அழைத்தும் அவள் திறக்கவேயில்லையோ?" என்று சிரித்தான்.

விக்கிரமாதித்தன் அங்கு நடந்ததையெல்லாம் தன் மந்திரியிடம் கூறி, "பட்டி! ஊழூழிகாலம் தவம் செய்தாலும் உன்னைப் போன்ற மந்திரி எனக்குக் கிடைக்கமாட்டான். அப்படியிருக்க, கேவலம் அந்த அற்ப அபரஞ்சிக்காக உன்னை அவதூறாகவெல்லாம் பேசிவிட்டேன். அவைகளையெல்லாம் மறந்துவிடு!" என்றான். ஆனாலும் அபரஞ்சியின் நடத்தையைப் பட்டி முன் கூட்டியே எவ்வாறு அறிந்திருந்தான் என்பது அவனுக்கு அதிசயமாகவே இருந்தது.

விக்கிரமாதித்தன் முதன் முதலாக அபரஞ்சியின் மாளிகைக்கு சென்றிருந்த சமயம் பட்டி அவ்வூர் அம்மனைத் தரிசிக்கச் சென்றிருந்தான். அப்போது தேவி அவனுக்குப் பிரசன்னமாகி, தாசியின் உள்ளக்கிடக்கையைக் கூறி, அவளுடைய மனோரதத்தை நிறைவேற்றி வைக்கவேண்டுமென்றும் கட்டளையிட்டிருந்தாள். அதனால் தான் பட்டி இவ்வாறு தந்திரமாக நடந்து கொண்டான்.

மறுநாள் அந்நகரத்திலிருந்து அவர்கள் புறப்பட்டுச் செல்லும் வழியில் விக்கிரமாதித்தன், "தாலி கட்டாத் தாசிகளை நம்பவே கூடாது என்பது உண்மைதான்!" என்று பட்டியிடம் சொன்னான். அந்த வார்த்தையைப் பொறுக்கமாட்டாத பூமிதேவி, அங்கு வழியில் இறந்துகிடந்த பாம்புச் சட்டையொன்றில் புகுந்து "கக்கக்க" வென்று சிரித்து விட்டு ஆகாய வீதியில் பறந்து போனாள். இதைக்கண்டு அதிசயித்த விக்கிரமாதித்தன், "பட்டி? இதன் காரணம் என்ன?" என்று வினவ, "பிரபோ! எனக்கும் இது புரியவில்லை! இன்னும் மூன்று நாட்களில் கண்டறிந்து சொல்லுகிறேன்!" என்றான்.

பின்னர் இருவரும் அவ்வனத்தைத் தாண்டி மற்றொரு நகரை அடைந்து அங்குள்ள ஒரு மடத்தில் தங்கினார்கள். பிரயாணக் களைப்பினால் விக்கிரமாதித்தன் அயர்ந்துறங்கினான். அப்போது, பட்டி வேதாளத்தின் மீதேறிக்கொண்டு உஜ்ஜயினியை அடைந்து பத்திரகாளியம்மனை வணங்கி, "தேவி! பாம்புச் சட்டை பறந்த விதமென்ன?" என்றான். "பட்டி! சிரித்துப் பறந்தது பாம்புச் சட்டையல்ல. பூமிதேவி! ஏனென்றால், விக்கிரமாதித்தன் தாலிகட்டிய தேவியர்களில் மூத்தவளான ஏலாகரம்பை என்பவள் ஒரு பஞ்சவர்ணக் கிளி வளர்த்து வருகிறாள். உண்மையில் அது கிளி அல்ல; அவளுடைய ஆசை நாயகனை ஓர் அரக்கனேயாவான். அவன் கழுத்தில் முத்து மாலையைப் போட்டவுடன் அந்த அரக்கன் கிளியாகிவிடுவான். முத்துமாலையைக் கிளியின் கழுத்திலிருந்து கழற்றினால் மறுபடி அரக்கனாகிவிடுவான். இவ்வாறு ஏலாகரம்பை அவனைப் பகலில் பஞ்சவர்ணக் கிளியாகவும், இரவில் பஞ்சேந்திரியங்களுக்கும் ஆசை நாயகனாகவும், தன் அந்தப்புரத்தில் வைத்துக்கொண்டு ஆனந்தமாக இருந்துவருகிறாள். ஆகவே, தாலி கட்டாத தாசிகளை நம்பக்கூடாதென்று சொன்ன உன் அரசன், தன் தாலி கட்டிய பத்தினி வேசியாயிருந்தும் அவளை நம்புகிறானே என்று பூமிதேவி சிரித்துப்போனாள்!" என்றாள் பத்திரகாளியம்மன்.

அதன் பின்னர் பட்டி அங்கிருந்து புறப்பட்டு விக்கிரமாதித்தனிடம் வந்து விவரம் யாவும் சொன்னான். விக்கிரமாதித்தன் சினந்தெழுந்து, சிங்கமெனச் சீறிப் பாய்ந்து அரக்கனைச் சிதைத்தெறியப் போருக்குப் புறப்பட்டான்.

அப்பொழுது அந்த அரக்கன் உஜ்ஜயினி புரத்திலுள்ள அரண்மனை அந்தப்புரத்தில் ஏலாகரம்பையுடன் சரசமாடிக் குதூகலித்துக் கிடந்தான். அப்போது வேதாளத்தின் மீது பட்டியுடன் ஏறிப் பறந்து வந்த விக்கிரமாதித்தன், தன்

அந்தப்புரத்தில் மோகபோதையில் ஆழ்ந்து கிடக்கும் அரக்கனைக் கண்டு ஆத்திரமுற்று, "யாரடா நீ" என்று கேட்டான். அரக்கன் பதில் சொல்லாமல் அலட்சியமாகப் பார்க்கவே, விக்கிரமாதித்தன் அடங்காக் கோபங்கொண்டு, தன் வீரவாளை வீசி அவனை வெட்டி இரு துண்டாக்கினான். ஆனால் அடுத்த கணமே அரக்கனின் வெட்டுண்ட இரு உடல் துண்டுகளும் ஒட்டிக் கொள்ள அரக்கன் மீண்டும் உயிர்பெற்றெழுந்தான். இவ்வாறு விக்கிரமாதித்தன் பலமுறை வெட்டி வெட்டிப் போட, துண்டுகள் மறுபடி ஒட்டிக்கொள்ள அரக்கன் மீண்டும் மீண்டும் உயிர் பெற்றெழுந்து கொண்டேயிருந்தான்.

இதற்கென்ன செய்யலாமென ஆலோசித்த மதியூகியான பட்டி, சட்டென விக்கிரமாதித்தன் அரக்கனை வெட்டும் பொழுது, வெட்டப்பட்ட துண்டுகளைக் கால்மாடு தலைமாடாக மாற்றிப் போட்டுவிட்டான். உடல் துண்டுகள் மாறுபாடாக ஒட்டிக் கொள்ளவே, அரக்கன் உயிர் பெற்றெழ முடியாமல் மடிந்துவிட்டான். அவனைப் புதைத்துவிட்டுக் காட்டிற்குச் சென்றார்கள். விக்கிரமாதித்தன் பட்டியை நோக்கி, "பட்டி! இன்னும் காடாறு மாதம் முடிவதற்குள்ள இந்த இருபத்தைந்து நாளையும் இக்காட்டில் தனியாகக் கழித்துவிட்டு வருகிறேன்" என்று விக்கிரமாதித்தன் அவனை அனுப்பிவிட்டான்.

## விக்கிரமாதித்தன் கிளியாகிய கதை



விக்கிரமாதித்தன் வனவாசத்திலிருக்கும் போது அவனுடைய உஜ்ஜயினிப் பட்டணத்தில் விசித்திரமான சம்பவம் ஒன்று நடந்தது.

அந்த நாளில் உஜ்ஜயினி நகரத்தில் விஜயன் என்ற ஒரு தச்சன் இருந்தான். அவன், அற்புத மரச் சாமான்களும் அழகான பதுமைகளும் செய்துகொடுத்து விக்கிரமாதித்தனுக்கு அந்தரங்க நேசனானான். அவன், தான் கற்றிருந்த இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம் முதலான வித்தைகளையெல்லாம் மன்னவனுக்குக் கற்றுக் கொடுத்தான். அதற்குப் பதிலாக விக்கிரமாதித்தனும், தான் கற்றுக் கொண்ட கூடுவிட்டுக் கூடு பாய்கிற வித்தையை அவனுக்குக் கற்றுக்

கொடுக்க ஆசைப்பட்டான். அப்பொழுதே, மதியூகியான பட்டி, "மன்னர் பெருமானே! தங்களுடைய அரச போகத்தை அனுபவிக்க ஆசைப்படுபவர்கள் இந்த அவனியில் பலர் உண்டு. அதனால் கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையை மட்டும் தாங்கள் எவருக்கும் கற்றுக் கொடுத்தலாகாது. அதிலும் அந்தத் தச்சனுக்கு அதைக் கற்பித்தலாகாது. கூடா நட்பால் தீமைதான் விளையும்!" என்று எச்சரித்தான். ஆனால் அப்பொழுது விக்கிரமாதித்தன் அதைப் பொருட்படுத்தவில்லை. மன்னவனிடமிருந்து கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையைக் கற்றுக்கொண்ட தச்சனோ, அரசனின் உடலுக்குள் புகுந்து அரசபோகத்தை அனுபவிக்கவும், அந்தப்புர பத்தினிகளின் அழகை ரசித்துக் கொண்டேயிருக்கவும் ஆசைப்பட்டு, சமயத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான்.

விக்கிரமாதித்தன் காடாறு மாதம் சென்றபின், மன்னவனைத் தனியே காட்டில் விட்டு பட்டி மட்டும் உஜ்ஜயினி திரும்பியதைக் கண்ட தச்சன், இதுதான் அரசனை மோசம் செய்யச் சரியான சமயம் என்று நினைத்து, விக்கிரமாதித்தனைத் தேடிக் கானகம் சென்று கண்டுபிடித்து அந்தரங்க விசுவாசிபோல் நலம் விசாரித்தான். விஜயனைக் கண்ட விக்கிரமாதித்தனும் மனமகிழ்ந்து அன்புடன் அணைத்து, "நல்ல சமயத்தில் வந்தாய்! பட்டியில்லாமல் இவ்வனத்தில் பொழுது போவது எனக்குக் கடினமாக இருந்தது. நண்பா, வா! வனவிலங்குகளை வேட்டையாடி பொழுது போக்கலாம்!" என்றான்.

இருவரும் மனமகிழ வேட்டையாடிக் களைத்து ஒரு தடாகத்தின் அருகிலே வந்து, தண்ணீர் அருந்திவிட்டு, அங்கிருந்த ஓர் ஆலமரத்தின் நிழலிலே அமர்ந்தனர். விக்கிரமாதித்தன் விஜயனின் மடியில் தலைவைத்து அரைத்தூக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

அப்போது அம்மரத்தின் கிளைகளில் சரசமாய் விளையாடிக்கொண்டிருந்த ஜோடிக் கிளிகளில் ஆண் கிளி திடீரென மாரடைப்பினால் இறந்து கீழே விழுந்தது. பெண்கிளி கலங்கித் துடித்து, இறந்து கிடக்கும் ஆண்கிளியின் உடல் கூட்டைத் தன் அலகால் தட்டி எழுப்ப முயல்வதும், அதையே சுற்றிச் சுற்றி வந்து பரிதாபமாகக் கிரீச்சிடுவதுமாகயிருந்தது. இந்தச் சோகக் காட்சியைக் கண்ட விக்கிரமாதித்தன் மனமிளகி, பெண் கிளிக்காக இரக்கப்பட்டு அதனுடைய சோகத்தை நீக்கிச் சுகம் தரவேண்டுமென்று விரும்பியவனாய் தச்சனின் மடியில் படுத்திருந்தபடியே மந்திரத்தியானம் உச்சரித்துக் கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையின் மூலம் தன்னுடைய ஜீவனை தன்னுடைய

உடற்கூட்டைவிட்டு எடுத்து அந்த ஆண் கிளியின் உடற்கூட்டில் புகுத்தினான். பின்னர் ஆண் கிளியாகிவிட்ட விக்கிரமாதித்தன் பெண் கிளியுடன் கொஞ்சி மகிழ்ந்து குதூகலம் தந்து கொண்டிருந்தான்.

அந்தச் சமயம் தச்சன் விஜயனோ, தன் மடியிலிருக்கும் விக்கிரமாதித்தனின் உடலில் ஜீவனில்லாதிருப்பதைக் கண்டதும், விக்கிரமாதித்தன் கிளியாகிவிட்ட விஷயத்தையும் புரிந்து கொண்டு, பலநாள் கண்ட கனவு நனவாகும் நாள் வந்ததென்று மனமகிழ்ந்து, சட்டென்று கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தையின் மூலம் தன் உடலை விட்டு விக்கிரமாதித்தனின் உடலில் உயிரைப் புகுத்திக் கொண்டான். தன்னுடைய உடலை அங்கே விட்டுவிட்டுச் சென்றால், விக்கிரமாதித்தனின் உயிர் திரும்பி வந்து அந்த உடலுக்குள் புகுந்து மீண்டும் மனித உருவமடைந்துவிடுமோ என்ற பயம் உண்டாயிற்று. அதனால் உடனடியாக தீயை மூட்டி அதில் தன்னுடைய சொந்த உடலைப் போட்டுப் பொசுக்கியும் விட்டான்.

அதன் பின்னர், போலி விக்கிரமாதித்தனாகிவிட்ட தச்சன் விஜயன், தானே அரசன் எனக் கூறிக்கொண்டு உஜ்ஜயினியின் எல்லைப்புறத்தை அடைந்து, அங்கு தென்பட்ட பிரஜைகளிடம், "என்னைத் தலைநகருக்குள் ஊர்வலமாய் அழைத்துச் செல்ல நவரத்தினப் பல்லக்குடன் அரச பரிவாரங்களும் ஆலவட்டங்களும் புடைசூழ மந்திரி பட்டியை வரச் சொல்லுங்கள்!" என்று அதட்டினான். அவர்கள் ஓடிவந்து அவ்வாறே மந்திரி பட்டியிடம் தெரிவித்தனர். பட்டி திடுக்கிட்டு, "நமதரசரானால் காடாறு மாதம் முடியும் முன் நாடு திரும்ப மாட்டாரே? இவ்வாறு ஆடம்பர ஊர்வலங்களை விரும்பி அதிகாரச் செருக்குடன் கட்டளையனுப்ப மாட்டாரே?" என்று குழம்பி, "இதில் ஏதோ சூதிருக்கிறது!" என்று எண்ணமிட்ட பட்டி விஜயதச்சன் ஊரிலிருக்கிறானா என்று விசாரித்து வரச் சொன்னான். "இல்லை!" என்ற பதில் வந்ததும் பட்டியின் சந்தேகம் ஊர்ஜிதமாகவே முள்ளின் மேல் போட்ட சேலையை மெள்ளத்தான் எடுக்கவேண்டுமென்று கருதிக்கொண்டு முத்துமணிப் பல்லக்குடனும் சதுரங்க சேனைகளுடனும் போலி விக்கிரமாதித்தனை வரவேற்கச் சென்றான். அங்கே "அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியிலும் குடைபிடிப்பான்!" என்பதுபோல் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்த அரசனைக் கண்டதும், தச்சன் விஜயன் தான் போலி விக்கிரமாதித்தனாக உருக்கொண்டு வந்திருக்கிறான் என்று அவனுடைய விசித்திரமான நடத்தைகளால் மதியூக மந்திரியான பட்டி வெகு

எளிதில் புரிந்துக் கொண்டுவிட்டான். பின்னர் அந்தப் போலி அரசனை வரவேற்று அழைத்து வந்து, "வாருங்கள் அரசே! அரசவைக்குச் சென்று தேச காரியங்களை விசாரித்து விவாதித்துப் பட்டி மன்றம் சென்று புலவர்கள் புனைந்திருக்கு பாமாலைகளை அலசி ஆராயலாம்!" என்று கூப்பிட்டான் பட்டி "இல்லை! நான் மிகவும களைத்துப்போயிருக்கிறேன். நாளை காலை கொலுவிருந்து தேசவிசாரணை செய்யலாம்! இப்போது அந்தப்புரம் சென்று என் பெண்சாதிகளைக் காணவேண்டும் என்று மோகக்கிறக்கத்துடன் போலி விக்கிரமாதித்த துடிதுடித்தான். "அப்படியானுல் அந்தப்புரத்திற் அரசர்பிரான் எழுந்தருளலாம்! இதைச் சம்பிரதாயப்ப முன்னதாகத் தாதியர்களின் மூலம் அந்தப்புரத் தோழியர்களுக் அறிவிக்கிறேன்!" என்ருன் பட்டி. போலி விக்கிரமாதித்த அகமகிழ்ந்தான்.

பட்டி அதன் பின்னர் நம்பகமான ஒரு தாதியிட இரகசியமாக அந்தப்பர தாதிமார்களுக்கெல்லாம் ஒரு தந்திர சொல்லியனுப்பிவிட்டு வந்து, போலி அரசனை அழைத்து சென்ருன்.

அரசகுலப் பெண்டிர் உறையும் வளாகத்தில் ஆசையோ நுழைய முயன்ற போலி அரசனை அங்கு காவல் புரியு தாதிகள் வழி மறித்து நிறுத்தி, "ஆளவந்த பூமானே! அர பத்தினிகள் அனைவரும் தாங்கள் சுமங்கலிகளாய் மாங்கல் பலத்துடன் நெடுநாள் இருக்க வேண்டுமென பன்னிரண் மாதம் கௌரி நோன்பு இருக்கிருர்கள். அது முடிவதற் இன்னும் பத்து மாதங்கள் பாக்கியிருக்கின்றனவே! அதுவ அரசன் பத்தினிகளின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாலு உம்முடைய ஆயுளுக்குக் கேடு என்பதை அறியீரோ? என்ருர்கள். "ஆமாம்! ஆமாம்!, அதை மறந்து விட்டேன் என்று கூறிபோன அரசன் முகம் வாடித் திரும்பிஞன்.

அவனைப் பட்டி கொலுப் பெண்கள் கூடியிருக்கும் கல மண்டபத்திற்கு அழைத்து வந்து, ஆடல் பாடல்களிலு கணிகையாின் கனி மொழிகளாலும் அவனை மெய்மறந் கிடக்கச் செய்து விட்டு "உண்மையான விக்கிரமாதித்தனை எந் உருவிலிருந்தாலும் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்!" என் அந்தரங்க ஆட்களை எட்டு திசைகளிலும் அனுப்பிஞன்.

அரசாங்கத்தில் இவ்வாறு போலி நாடகம் நடந் கொண்டிருக்கும் போது கிளியான விக்கிரமாதித்தன் தன்னை மறந்தவனுய் அக்கானகத்திலே சஞ்சரித்து ஆயிரங்கிளிகளை ஒன்று படுத்தி, அவைகளுக்கு தலைவனுகயிருந்து வந்தான்

யாவிதம் ஆயிரம் கிளிகளும் ஒன்ருகப் பறந்து திரிந்து ஒரே இடத்தில் ஒன்ருகக் கூடியிருப்பதைக் கண்ட ஒரு வேடன், கண்ணி வைத்தால் ஆயிரம் கிளிகளேயும் ஒன்ருகப் பிடித்து விற்றுக் கொள்ளே லாபமடிக்கலாம் என எண்ணி வலே விரித்து வைத்து விட்டு மறைவாயிருந்தான். அதையறியாத கிளிகள் ஆயிரமும் ஒன்ருகப் பறந்து வந்து அக்கண்ணியில் விழுந்து வலேயில் சிக்கிக் கொண்டு பரிதவித்தன. அப்போது விக்கிரமாதித்த கிளி மற்ற கிளிகளே நோக்கி, "அன்பார்ந்த தோழர்களே! ஒன்று பட்டால் உண்டு வாழ்வு என்பதை உணருங்கள்! பகுத்தறிவை உபயோகித்தால் இப்போது நாம் இந்த வலேயை விட்டு ஒன்ருகவே விடுதலே பெறமுடியும்! வேடன் வரும்போது நாம் அனேவரும் பட்டினியால் சோர்ந்து சுருண்டு இறந்தது போலத் தலேயை தொங்கப்போட்டுக்கொண்டு இருக்க வேண்டும். வேடனே கிளிகள் இறந்து விட்டதென ஒவ்வொன்ருக வலேயிலிருந்து எடுத்துக் கீழே போடுவான். முதலில் விழும் கிளி ஒன்று இரண்டு என எண்ணி வர வேண்டும். எண்ணிக்கை ஆயிரம் வந்ததும், சப்தமிட்டுச் சேரலென்று அனேவரும் ஒன்ருகக் கிளம்பி மேலே பறந்து ஓடிச் சென்று விடலாம்!" என்ருன்.

விக்கிரமாதித்தக் கிளி சொன்னபடியே கிளிகளனேத்தும் வலேயில் இறந்தது போலக் கிடக்க, அவைகளேப் பிடிக்க வந்த வேடன், கிளிகள் இறந்து விட்டனவே என வருந்தி வலேயை விட்டு ஒவ்வொன்ருக எடுத்து கீழே போட்டான். முதலில் விழுந்த கிளி முறை தவருமல் எண்ணிக் கொண்டே வந்தது. தொள்ளாயிரத்துத் தொண்ணூற்ருென்பது கிளிகளேயும் கண்ணியிலிருந்து எடுத்த வேடன் கீழே எறிந்து விட்டு, கடைசி கிளியான விக்கிரமாதித்தனேக் கையிலெடுத்தான். அப்போது அவன் இடுப்பிலிருந்து அறுவாள் தற்செயலாக கீழே விழுந்து சப்தமிட்டது. எண்ணி வந்த கிளி அதையுஞ் சேர்த்து ஆயிரமென எண்ணி சப்தமிட்டுப் பறக்க, எல்லாக் கிளிகளும் பறந்து சென்று விட்டன. அப்போது தான் வேடன் கிளிகள் செய்த தந்திரத்தை உணர்ந்து ஆத்திரமுற்ருன். தன் கைப் பிடியில் அகப்பட்டுக் கொண்டுவிட்ட விக்கிரமாதித்தக் கிளியின் கழுத்தை ஆத்திரத்துடன் திருக முயன்ருன்.

அப்போது விக்கிரமாதித்தக் கிளி அவனே நோக்கி, "வேடா! என்னே வீணுகக் கொல்லாதே! நான் அதிசயமான ராஜாக்கிளி! என்னே ஒரு கூண்டிலிட்டு அருகிலுள்ள நகருக்கு எடுத்துச் சென்று வர்த்தகர்களிடம் என்னேக் காண்பித்துப் பேசுங் கிளிக்கு ஆயிரம் பொன் விலேயென்று கூறு. அவர்களும்

கொடுப்பார்கள். நான் சொன்னபடி நடக்கவில்லையானால் அப்புறம் என் தலையைத் திருகிச் சாப்பிடலாம்" என்றது.

கிளி பேசியதைக் கேட்டவுடன் வியப்புற்ற வேடன் அது சொன்னபடியே அதை அடுத்துள்ள நகருக்குச் சென்று விலை கூறினான். ஒரு கிளிக்கா ஆயிரம் பொன் என்று எல்லோரும் அதிசயித்தனர்.

அந்நகரின் கடை வீதியிலே வணிகர் தலைவரான மாணிக்கஞ்செட்டியார் தன் குமாரனுக்கு பதினாறு வயது நிரம்பியதால், தனியாக ஒரு கடை வைத்துக் கொடுத்தார். அப்போது அவ்வூர் வணிகர்கள் அனைவரும் அந்தக் கடையில் கூடியிருந்தனர். அதற்காக சோமசுந்தரம் தம் வீட்டிலிருந்து வரும் வழியில், கிளியுடன் நிற்கும் வேடனைக் கண்டு, "கிளி விற்பதற்கா? விலை என்ன?" என்று கேட்க, வேடன் ஆயிரம் பொன் விலை கூறினான். அதைக் கேட்டு அதிசயித்த வணிக குமாரன் "சாதாரணக் கிளியின் விலை ஒரு காசு. அதிகமாகப் போனால் இரண்டு காசு கொடுக்கலாம். ஆயிரம் பொன் என்பது சுத்த ஏமாளித்தனம்!" என்றான். அப்போது கிளி உருவத்திலிருந்த விக்கிரமாதித்தன் கூண்டிலிருந்தவாறே, "செட்டியாரே! என்னை ஆயிரம் பொன் கொடுத்து விலைக்கு வாங்கிக் கொண்டு போய் உமது கடையில் 'தொங்கவிடும். உமது வியாபாரம் முழுவதையும் நான் கவனித்துக் கொள்ளுகிறேன். ஒரு மாதத்தில் உமக்குப் பன்மடங்கு பொன்னும், பன்மடங்கு லாபமும் சம்பாதித்துத் தருகிறேன்!" என்றது.

கிளி வாய் திறந்து பேசுவதைக் கண்டு வியந்த சோமசுந்தரம், ஆயிரம்பொன் கொடுத்து அக்கிளியை வாங்கிக் கொண்டு கடைக்குச் சென்று, அதை ஒரு தங்கக் கூண்டிலே அடைத்துத் தொங்க விட்டான். கடைக்கு வருவோரையும், போவோரையும் வரவேற்றுப் பொருள்களின் விலை கூறி வியாபாரம் செய்தது கிளி. கிளி வியாபாரம் செய்வதைக் கண்டு, ஜனங்கள் திரண்டு வந்து அதிசயித்து, சாமான்களின் விலையை அது ஒன்றுக்கு இரண்டாகச் சொன்னாலும் கொடுத்து வாங்கிக் கொண்டு சென்றனர். இத்துடன் இல்லாமல் ஊரிலுள்ள வம்பு வழக்குகளையெல்லாம் விசாரித்து ஒரு தரப்பினரும் நியாயமெனக் கூறும்படி தீர்ப்பளித்து, நீதிவாக்கிய கிளியென்றும் பெயர் பெற்று விளங்கியது.

அந்நாளில் அந்நகரத்தில், அதியற்புதமான அழகும் கலா வித்தைகளும் வாய்ந்த ரூபசௌந்தரி என்னும் தாசி இருந்தாள்.

அவளை அடைய ஆசைப்பட்டு வருவோரிடம் நாளொன்றிற்கு ஆயிரம் பொன் வாங்கிக் கொண்டு ஆடிப்பாடி ஆசை மொழிகள் பேசி ஆனந்தம் அளித்து வந்தாள். அவள் அழகைப்போல் மமதையும் படைத்தவள்; மிகவும் வம்புக்காரி. அவளை அந்நகரத்தில் யாராவது, கனவிலே கண்டு களித்தோமென்று சொன்னாலும் அவர்களைத் தேடிப்பிடித்து, "கனவிலே கண்டு களித்தாயே கைமேலே ஆயிரம் பொன் வைக்க வேண்டும்!" என்று வல்லடி வழக்கிட்டு, ஆயிரம் பொன்னை வாங்கினாலொழிய விடமாட்டாள். அவளுடைய மாளிகைக்கு அவ்வூர் அரசன், மந்திரி, சேனாதிபதி முதலான ஏழு காதலர்கள் முறையாக வந்து போய்க் கொண்டிருந்தனர். அந்த ஏழுவரில் கிளியின் எஜமான் சோமசுந்தரமும் ஒருவனாவன்.

இவ்வாறிருக்கையில், அதே நகரத்தில் அப்பா சாஸ்திரி, சுப்பா சாஸ்திரி என்று இரு நண்பர்களிருந்தனர். அவர்களிருவரும் ரூபசௌந்தரியிடம் மோகங்கொண்டு அலைந்தவர்கள். ஆனால் கையில் காசில்லாத ஏழைகள். ஒரு நாள் காலையில் குளத்தில் குளித்துக் கொண்டிருக்கையில் அப்பா சாஸ்திரி, தன் நண்பரான சுப்பா சாஸ்திரியிடம், "ஓய்! ஆயிரம் பொன் வாங்கும் ரூபசௌந்தரி நேற்றிரவு என் கனவிலே வந்தாள். நான் அரைக்காசுகூட கொடுக்காமல் கனவில் அவளோடு களித்திருந்தேன்! அந்தக் கனவின் சுகம் ஒன்றே எனக்குப் போதும்!" என்று பெருமூச்செறிந்தான். அங்கு துணி துவைக்க வந்த ரூபசௌந்தரியின் வேலைக்காரி இதைக் கேட்டுவிட்டு, ஓடிப்போய் தன் எஜமானியிடம் இச்செய்தியை அறிவித்தாள். உடனே ரூபசௌந்தரி அங்கு வந்து அப்பா சாஸ்திரியைப் பிடித்துக்கொண்டு "ஆயிரம் பொன்னை எண்ணி என் கையிலே வை!" என்று கேட்டாள்.

அப்பா சாஸ்திரிக்கும், ரூபசௌந்தரிக்கும் வாக்கு வாதம் அதிமாகி விடவே, வழக்கை அவ்வூர் அரசனிடம் சென்று முறையிட்டனர். அரசனாலும், மந்திரியாலும், பஞ்சாயத்தாராலும் தீர்க்க முடியாத இவ்வழக்கு இறுதியில் சோமசுந்தரம் செட்டியாரின் கடையிலுள்ள நீதிவாக்கியக் கிளியின் முன் விசாரணைக்கு வந்தது. அது என்ன தீர்ப்பாகப் போகிறதென வியந்த ஊர் மக்கள் அனைவரும் அங்கு கூடி விட்டனர். கிளி இருவருடைய வாதங்களையும் தனித்தனியே கேட்டது. பிறகு கணிகையை நோக்கி, "ரூபசௌந்தரி! அந்த ஏழை அந்தணனோ உன்னைக் கனவுதான் கண்டான்! அது உன்னை நேரில் கண்டு களித்ததாகுமா?" என்று கேட்டது.

"கிளியே! என்னைக் கனவில் கண்டபோதே, என்னைத் தத்ரூபமாகக் கண்டு அடையும் ஆனந்தத்தை அடைந்து விட்டான். நான் கனவில் தோன்றி அவனுக்கு அந்த ஆனந்தத்தை அளித்திருப்பதால், அதற்குப் பிரதியாச ஆயிரம் பொன் எண்ணி வைக்கத்தான் வேண்டும்!" என்று ரூபசௌந்தரி பலமாக வாதமிட்டாள்.

அவளுடைய கர்வத்தையும், கொட்டத்தையும் அடக்க வேண்டுமென்றெண்ணிய நீதிவாக்கியக்கிளி, தன் கடைச் சிப்பந்திகளை ஏவி, ஆயிரம் பொன்னை எண்ணி ஒரு பொன் முடிப்பாக கட்டச் செய்து, நடுத்தெருவில் ஒரு கம்பம் நாட்டி அதன் உச்சியிலே அந்தப் பொன் முடிப்பை வைத்து அதன் கீழே ஒரு கண்ணாடியில் அந்தப் பொன் முடிப்பின் பிரதிபிம்பம் விழும்படி செய்யச் சொல்லியது. அவர்களும் அவ்வாறே செய்தனர்.

பிறகு நீதிவாக்கியக் கிளி, "ரூபசௌந்தரியே! கனவிலே உன்னைக் கண்டு களித்ததால், அதற்குப் பிரதியாக பிரதிவாதி ஆயிரம் பொன் கொடுக்க வேண்டுமென்பது உன் வாதம்! அது சரியே! பிரதியாக இதோ, இந்தக் கண்ணாடியில் பிரதி பலிக்கும் ஆயிரம் பொன்னை உன்னால் முடிந்தால் இக் கண்ணாடிக்குள்ளிருந்து எடுத்துச் செல்!" என்றது.

அதைக் கேட்டதும் அங்கு கூடியிருந்தவர் அனைவரும் கொல்லென்று, சிரித்து, அதுவே நியாயமான தீர்ப்பு என்று ஆரவாரித்தனர். அனைவர் முன் தாசி ரூபசௌந்தரி தலை குனிய வேண்டியதாயிற்று. உடனே அவள், அளவிலாத ஆத்திரமும் ரோஷமும் கொண்டு, "அற்பக் கிளியே! என்னை இவ்விதம் பலரின் முன் தலையிறக்கம் செய்து அவமானப் படுத்தியதற்கு உன்னைப் பழி வாங்குகிறேன் பார்! என்னைத் தனியே அழைத்து வழக்குச் செல்லாது என்று இரகசியமாகச் சொல்லாமல், கர்வத்தினாலல்லவா என்னை இவ்வாறு அவமானப்படுத்தித் தீர்ப்புக் கூறினாய்? உன் வாயைக் கிழித்து, உன்னைத் துண்டு துண்டாக வெட்டி, உன் தலையைச் சமைத்துச் சாப்பிடுகிறேன் பார்! இந்தச் சபதத்தை இன்று முதல் எட்டு நாளைக்குள் நிறைவேற்றாவிட்டால் என் பெயர் ரூபசௌந்தரியில்லை!" என்று சபதம் செய்தாள்.

அப்போது கிளியும், "மமதை பிடித்த மங்கையே! நீ சபதம் செய்வதால் நானும் சபதம் செய்கிறேன். உன் தலையை மொட்டையடித்து, கரும்புள்ளி, செம்புள்ளி குத்தி, "கோவிந்தா! கோவிந்தா!" என்று உன்னைத் திருமாலின் கோவிலைச் சுற்றி

மும்முறை வலம் வரவைத்து, உன்னைப் பார்த்து ஊர் சிரிக்கும்படி செய்யாவிட்டால் நானும் இந்தச் சோமசுந்தர செட்டியாரின் கடைக்குப் பெருமை தரும் நீதிவாக்கியக் கிளியல்ல!" என்றது.

அந்தக் கிளியை எப்படியும் வஞ்சம் தீர்க்க வேண்டுமென்ற ஆத்திரத்துடன் சென்ற ரூபசௌந்தரி, தன் மாளிகைக்குச் சோமசுந்தரம் செட்டியார் முறைப்படி வரும் இரவன்று, பள்ளி வாசல் கதவை இழுத்துச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு ஊடல் செய்தாள். இரவின் போதையோடு வந்த இளஞ் செட்டியாருக்கு மோக போதை அதிகரிக்கும்படி செய்து, அவருடைய கடையிலுள்ள கிளியைக் கொண்டு வந்து கொடுத்தால்தான், கதவைத் திறந்து ஏற்றுக் கொள்ள முடியுமெனச் சொல்லி விட்டாள். மோகாவேசத்தின் வேகத்தால் வணிக குமாரனும் அர்த்த ராத்திரியில் தன் கடைக்குச் சென்று கிளியைக் கூண்டோடு தூக்கி வந்து ரூபசௌந்தரியின் கையில் கொடுத்து விட்டான்.

காலையில் தாசி கிளியைப் பார்த்து, "கிளியே உன் சபதம் என்னவாயிற்று? இன்று உன்னைச் சமைத்து உன் தலையைக் கடித்துத் தின்னப் போகிறேன்!" என்று கேலி பேசி வேலைக்காரியைக் கூப்பிட்டுக் கிளியைக் கொண்டுபோய் சமைக்கும்படி கூறிவிட்டு, வழக்கம் போல் பெருமாள் குளத்தில் குளித்துவரச் சென்றாள். வேலைக்காரி கூண்டைத் திறந்து கிளியைக் கையிலெடுத்தாள். அதுதான் தலைதப்பத் தகுந்த சமயமென்று நினைத்த கிளி, படபடவென்று தன் சிறகுகளை அடித்துக்கொண்டு, வேலைக்காரியின் முகத்திலும், கண்களிலும் தன் விரல் நகங்களால் பிராண்டித் தள்ளியது. அவள் பயந்து பிடியை விட்டு விட்டாள். உடனே கிளி ஜிவ்வென்று பறந்து தப்பிச் சென்று அவ்வூரிலுள்ள பெருமாள் கோயிலின் மாடத்தில் சஞ்சரித்த ஆயிரம் கிளிகளில் ஒன்றாக வசிக்கத் தொடங்கியது. சபதமிட்ட கிளி தப்பிவிட்டதைத் தன் எஜமானியிடம் சொல்லத் தைரியமில்லாத வேலைக்காரி ஒரு கௌதாரியை வாங்கிவந்து அதைக் கொன்று சமைத்து வைத்து விட்டாள். இதையறியாத தாசி தன் சபதம் நிறைவேறி விட்டதென்று கொக்கரித்தவளாய் அதன் தலையை ஆத்திரத்துடன் கடித்துச் சாப்பிட்டாள்.

அவள் தினந்தோறும் குளத்தில் குளித்து, அதன் கரையி லிருக்கும் பெருமாள் கோவிலில் ஸ்வாமி தரிசனம் செய்து விட்டுத் தான் வீடு திரும்புவது வழக்கம். அவளுக்குச் சில நாட்களாகவே உடல் கூண்டோடு வைகுந்தம் போக வேண்டு மென்ற ஆசை தோன்றியிருந்தது. ஆகவே தினமும் பெருமாளைத்



தியானித்து, "கோவிந்தா! என்னை இந்த வுடலோடு வைகுந்தம் சேர்த்து விடு!" என்று வேண்டிக்கொண்டு தான் வீட்டிற்கு வருவாள். இதை அவ்வாலயத்திலிருந்து கவனித்த ஆயிரங் கிளிகளில் ஒன்ருகிய விக்கிரமாதித்தக் கிளி, இதுதான் ரூபசௌந்தரியைப் பழிவாங்கித் தன் சபதத்தை நிறைவேற்றச் சரியான தந்திரம் என்று நினைத்து, ஒருநாள் இரவு அர்த்தஜாமமாகிக் கோவில் கட்டளை முடியுமுன் யாருக்குந் தெரியாமல் விக்கிரகத்துக்குப் பின்னல் ஒளிந்து கொண்டது. அர்ச்சகன் போன பின்பு, ரூபசௌந்தரி குளித்துவிட்டு வழக்கம் போல பெருமாள் சந்நிதிக்கு வந்து தன் கோரிக்கையை வெளியிட்டாள். உடனே விக்கிரகத்திற்குப் பின்னலிருந்த கிளி, தன் குரலை மாற்றிக் கொண்டு, "ரூபசௌந்தரியே! உன் சேவைக்கு மெச்சினேம்! இதுகாறும் உனக்கு முக்தியடையும் நேரம் வரவில்லை. இப்போதுதான் காலம் கைகூடுகிறது. இன்றிலிருந்து எட்டாவது நாள் வெள்ளிக்கிழமையன்று நீ உன் உடலோடு வைகுந்தம் செல்லலாம். அந்நன்னுளில் நீ உன் சொத்தையெல்லாம் ஏழை எளியோர்க்குத் தானம் வழங்கிவிட்டு, நெற்றியில் நாமமிட்டுக் காஷாய ஆடைபூண்டு, உன் தலையை மொட்டையடித்து, உன் கூந்தலையெல்லாம் எனக்குக் காணிக்கையாக வைத்துவிடு! நீ தேவலோகம் செல்லும்போது, வழியிலுள்ள பூதகணங்களெல்லாம் உன்மேனியழகைக் கண்டு உன்னைப் பிடித்து வைத்துக்கொண்டு விடுவார்களாகையால், உன் அழகையெல்லாம் அலங்கோலப் படுத்திக் கொள்ள வேண்டும். உடலெங்கும் சுண்ணும்பாலும், கரியாலும் புள்ளிகள் வைத்துக்கொள்! நான் சொன்ன பிரகாரம் அணுப் பிசகாமல் செய்து கொண்டு நீ, இன்றையிலிருந்து பதினெட்டாவது தினத்தன்று இக்கோவிலுக்கு, "கோவிந்தா! கோவிந்தா! என்று கன்னத்தில் போட்டுக்கொண்டு மும்முறை வலம் வந்து ஆகாயத்தை நோக்கி நில்! வானவீதியிலிருந்து புஷ்பக விமானம் இறங்கிவந்து உன்னை அழைத்துச் சென்று வைகுந்தத்தில் சேர்க்கும். அங்குள்ள தேவ மாதர்களெல்லாம் உன்னை உபசரித்து வரவேற்று, உன்னைத் தெய்வீகத் தடாகத்தில் குளிப்பாட்ட அழைத்துச் செல்வார்கள். அங்குள்ள புனித கங்கையில் நீராடினுல் மீண்டும் உன் கூந்தல் வளரும்! உன் மேனி அழகு முன்னைவிட பதின்மடங்கு

...பையுடன் பத்தரைமாற்றுப் பசும் பொன்னுக மின்னும்! நீ ...லுலகத்தின் அப்சரஸ்களுக்கெல்லாம் தலைவியாகி அமர நிலை அடைந்துவிடுவாய்!" என்று ஆண்டவன் கூறுவதுபோல் கிளி ...றியது.

அதை நம்பிவிட்ட தாசியும், அவ்வூர் அரசனிடம் சென்று, ...ன் மானிட தேகத்தோடு வைகுந்தம் போகப் போவதைச் ...ல்லி, அக்காட்சியைக் காண ஐம்பத்தாறு தேசத்தரசர் ...க்கும் திருமுக ஓலை அனுப்பச் சொன்னுள். உஜ்ஜயினியி ...க்கும் பட்டிக்கும் அதிசயமான அந்த அழைப்போலை வந்தது. ... அரசனின் இருப்பிடத்தைக் காணுது தவித்த பட்டி, ...திசயித்து ஐயமுற்று, ரூபசௌந்தரியின் சம்பந்தமாக ...க்கிரமாதித்த பூபதியின் அதிசய சாகஸம் நடைபெறலாமென ...ண்ணியவனுய், உடனே புறப்பட்டு ரூபசௌந்தரியின் ... டணத்திற்கு வந்தான்.

எட்டு நாளைக்குள் ரூபசௌந்தரி தன் ஆஸ்திகள் அனைத்தையும் தானதருமம் செய்து, நெற்றியில் நாமமிட்டுக் ...ஷாய ஆடைபூண்டு, தலையை மொட்டையடித்து, உடலெங்கும் ...ரும்புள்ளி, செம்புள்ளி குத்திக்கொண்டு குறிப்பிட்ட ...னத்தன்று, பெருமாள் கோவிலுக்கு வந்து, "ஹா! நாராயணு! ...காவிந்தா! கோவிந்தா!" என்று பஜனை செய்தபடி கோவிலை ...ம்முறை வலம் வந்து பெருமாளின் எதிரில் நின்று, "ஸ்வாமி! ...ங்களின் சித்தப்படி அடியாள் வந்திருக்கிறேன். தாமதமின்றி ...ஷ்பக விமானத்தை அனுப்பி இந்த உடலோடு என்னை ...வைகுந்தம் சேர்த்துவிடுங்கள்!" என்று கூறி நீலவானத்தை ...நாக்கிஞள். அங்கு கூடியிருந்த ஜனசமுத்திரம் முழுதும் ...ானத்தை நோக்கி வாய்பிளந்தபடி நின்றது.

அந்த வைபவத்திற்கு ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் ...ழுமியிருந்தனர். உஜ்ஜயினி தேசத்திலிருந்து மதிமந்திரி ...டியும் வந்திருந்தான். அரசர்கள் யாவரும் அவனை வரவேற்று ...சரித்தனர்.

வெகு நேரமாயிற்று. ரூபசௌந்தரிக்குப் புஷ்பக விமானம் ...ான வீதியிலிருந்து இறங்கி வரவேயில்லை.

"கோவிந்தா! கோவிந்தா! அடியாள் இன்னும் எவ்வளவு நேரம் காத்திருப்பது ஸ்வாமி" என்று ரூபசௌந்தரி ...ம்பலானுள்.

அப்போது கோபுரத்திலுள்ள கிளிக் கூட்டத்திலிருந்து, விக்கிரமாதித்தக் கிளி பறந்துவந்து ஒரு கம்பத்தில் அமர்ந்து, கணிகையை நோக்கி, "அடியே ரூபசௌந்தரி! என்னைச் சமைத்துச் சாப்பிடுவதாக நீ சபதம் செய்தாய். உன்னை இந்நிலைக்கு ஆளாக்குவதாக நான் சபதம் செய்தேன். பேதைப் பெண்ணே! யார் சபதம் நிறைவேறியது? மானிட தேகத்தோடு வைகுந்தம் செல்ல முடியுமா? நான் சிலையின் பின்னிருந்து பேசியதை நம்பிவிட்டாயே?" என்று கூறி, ஐம்பத்தாறு தேசத்தரசர்களிடமும், பொது மக்களிடமும் சபதத்தின் விருத்தாந்தத்தைக் கூறிவிட்டு, பட்டியின் தோளில் பறந்து வந்தமர்ந்தது. இதைக் கேட்ட மன்னர்கள், மக்கள் யாவரும் விழுந்து, விழுந்து சிரிக்க, அவமானந் தாங்க முடியாத ரூபசௌந்தரி அவ்விடத்திலேயே விழுந்து உயிரை விட்டாள்.

பட்டி தன் அரசன் விக்கிரமாதித்தனே கிளியுருவாயிருப்ப தறிந்து, அதை அன்புடன் எடுத்து, "பிரபோ! எங்களையெல்லாம் மறந்துவிட்டீர்களே?" எனத் தன் வருத்தத்தைத் தெரிவிக்க, விக்கிரமாதித்தன், தான் கிளியாக மாறியதற்குரிய காரணத்தையும் மாறியதிலிருந்து அதுவரை நிகழ்ந்தவற்றையும் ஒன்றுவிடாமல் தெரிவித்தான்.

பிறகு விக்கிரமாதித்தக் கிளியை, பட்டி எடுத்துக்கொண்டு உஜ்ஜயினிப்பட்டணம் திரும்பி, கிளியை அரண்மனைக்குள் ஒரு மறைவிடத்தில் வைத்தான்.

அங்கு போலி விக்கிரமாதித்தனின் உருவிலிருந்த தச்சன் விஜயனோ, அந்தப்புரப் பத்தினிகளின் கௌரி விரதம் முடியப் போகிறது என்றும், அவர்களின் அழகையெல்லாம் கண்டு களித்து தன் ஆசை நாயகிகளாக அடைந்துவிடலாமென்றும் மோகாவேசத்தால் தடுமாறிக் கொண்டிருந்தான். அவ்வேளையில் மதியூகியான பட்டி அந்தப்புர ராணிகளின் விரதம் முடிந்ததென்று போலி அரசனிடம் கூறி, அதையொட்டி விழாவொன்றிற்கு ஏற்பாடு செய்தான். நடன மாதர்கள் நடனம் ஆடினர். மல்லர்கள் தங்களின் கைவரிசையைக் காட்டி மகிழ்வித்தனர். அரண்மனையெங்கும் ஆட்டமும், கூட்டமும் வீரவிளையாட்டுப் பந்தயங்களுமாக ஒரே கொண்டாட்டமாக யிருந்தது. கடைசிப் பந்தயமாக ஆட்டுச் சண்டை அறிவிக்கப்பட்டது! அப்போது அந்தப்புர ராணிகள் தங்கள் கட்சியென்று ஒரு கொழுத்த ஆட்டுக்கிடாவை அனுப்பி வைத்தனர். அரசர்பிரானின் கட்சியென்று ஒரு பலஹீனமான ஆட்டுக்கிடாவை பட்டி கொண்டுவந்து பந்தயத்திடலில் விட்டான். உடனே பட்டி போலி மன்னனைப் பார்த்து,

"அந்தப்புரம் செல்ல விரும்பும் பூமானே! இந்தப் பந்தயத்தில் உமது ஆட்டுக்கடா ஜெயித்தால் உடனே அந்தப்புரம் போய்விடலாம். தோற்றுவிட்டால் வேறு பந்தயம் வைத்து நீர் ஜெயித்தால்தான் அரச பத்தினிகளிடம் செல்லமுடியும். இதுதான் அரச நாயகிகளின் சம்பிரதாயம்!" என்றான். போலி அரசனும் தலையாட்டிவிட்டு இரு ஆடுகளின் சண்டையைக் கூர்ந்து கவனித்தான்.

மன்னனின் ஆட்டுக்கடா மண்டை உடைபட்டு இறந்து விடவே, அந்தப்புர மாதர்கள் கைகொட்டிச் சிரித்து ஆர்பரித்தனர். அதைக் கண்டு ரோஷங்கொண்ட மன்னன் தன்னுடைய கடா எப்படியாவது ஆட்டுக்கிடாப் பந்தயத்தில் ஜெயிக்க வேண்டுமெனத் துள்ளியெழுந்து உடனே தன் உயிரை, தன் உடலைவிட்டுக் கிளம்பி தன் கடாவின் உடலில் செலுத்திக் கூடுவிட்டுக் கூடுபாய்ந்து, அந்தப்புர மாதர்களின் கடாவோடு உக்கிரமாகச் சண்டை செய்ய ஆரம்பித்தான்.

இதுதான் தருணமென எதிர்பார்த்திருந்த பட்டி கிளியை விக்கிரமாதித்தனின் உடலருகில் கொண்டு சென்று விட்டான். உடனே விக்கிரமாதித்தனும் கிளியின் உடல்கூட்டிலிருந்து தன் உயிரைக்கிளப்பித் தன்னுடைய சொந்த உடற்கூட்டில் புகுந்து கொண்டான்.

உடனே விக்கிரமாதித்தனும், பட்டியும் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டனர். பிறகு போலி அரசனின் ஜீவன் புகுந்துள்ள ஆட்டுக்கடாவை அறுக்கும்படி விக்கிரமாதித்தன் உத்தரவிட, கபட எண்ணங்கொண்ட கயவனும் கதியற்று மடிந்தான். அதன் பின்னர் விக்கிரமாதித்தனும் பட்டியுடன் பத்திரகாளியம்மனை வணங்கி, தேசவிசாரணை செய்து, நீதி நெறி தவறாமல் நாடாறுமாதம் அரசாளத் தொடங்கினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த செளந்தரவல்லிப் பதுமை, "கேட்டீரா போஜமகாராஜரே! எங்கள் விக்கிரமாதித்த பூபதி எறும்பு முதல் எண்பத்து நான்கு ஜீவாத்மாக்களின் எந்த ஜீவஜந்துவின் கூட்டிற் புகுந்தாலும் அறிவு, குணம், தயவு, தாட்சண்யம், நீதி முதலானவை தப்பி நடப்பதில்லை. அத்தகைய வல்லமையுள்ள வேந்தரன்றோ இந்த அதிசய சிம்மாசனத்தில் ஏறி அமரவேண்டும்?" என்றது. அப்போது பொழுது அஸ்தமித்துவிடவே, போஜராஜன் மெளனமாய்ச் சிம்மாசனப்படிகளிலிருந்து இறங்கிச் சென்றான்.

## பஞ்சத்தைப் போக்குதல்

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பின்வரும் கதை. 25-வதுபடிக்குக் காவலான ஹம்ஸப் பிரபோதினை என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

விக்கிரமாதித்தன் நீதிநெறி வழுவாமல் ஆட்சி புரிந்துவரும் நாளையில், ஒருசமயம் ஜோதிட சாஸ்திரத்தில் வல்லமை பொருந்தியவன் ஒருவன் அரச சபைக்கு வந்தான்.

"சூரியன் உமக்கு வீரத்தைக் கொடுக்கட்டும்; இந்திர பதவியைச் சந்திரன் கொடுக்கட்டும்; அங்காரகன் உமக்கு மங்கலத்தை அளிக்கட்டும்; அறிவைப் புதன் கொடுக்கட்டும். வியாழன் பெருமையை அளிக்கட்டும்; சுக்கிரன் சுபத்தைக் கொடுக்கட்டும்; சாந்தியை சனிபகவான் அளிக்கட்டும்; ராகு புஜபலத்தையும்; கேது உமது வம்ச விருத்தியையும் அளிக்கட்டும். உமக்கு எப்போதும் அன்பும், ஆதரவும் எல்லாக் கிரகங்களும் கொடுக்கட்டும்"

இவ்வாறு அரசனை வாழ்த்திவிட்டு ஜோதிடன் தன் பஞ்சாங்கத்தை எடுத்து வைத்துக்கொண்டு வியாக்கியானம் செய்ய ஆரம்பித்தான்.

பஞ்சாங்க சிரவணம் செய்த விக்கிரமாதித்தன், "ஜோஸ்யத்தில் வல்லமையுடையவரே! இந்த வருஷத்தின் பலன் எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

ஜோதிடனும் பலன்களை விவரிக்கத் தொடங்கினான்.

"அரசே! இந்த வருஷத்தின் அரசன் சூரியன்; செவ்வாய் மந்திரி. தானியாதிபதி சனி; மேகங்களுக்கு அதிபதி செவ்வாய்; மேலும் சனி, செவ்வாய், சுக்கிரன் இம்மூன்றும் ரோகிணி சக்கரத்தின் பாதையில் குறுக்காகத் துண்டித்துச் செல்லுகின்றன. ஆகவே, மழையின்மையால் கடுமையான வறட்சி ஏற்படும். வராகமிஹிரரால் சொல்லப்பட்டிருப்பதையும் கேளுங்கள். "எப்பொழுது சனி, செவ்வாய், சுக்கிரன் மூன்றும் ரோகிணி சக்கரத்தின் பாதையில் குறுக்காகத் துண்டித்துச் செல்லுகிறதோ, அப்போது பன்னிரண்டு வருஷங்களுக்கு மேகம் மழை பொழியாது. மேலும், ரோகிணிச் சக்கரத்தின் பாதையில் சனி குறுக்காகச் சென்றால், நீருக்குப் பதிலாக சூரியனுடைய பயங்கரமான உஷ்ணக் கிரணங்கள் பூமியின் மீது விழும். அப்போது என்ன ஆகுமென்று சொல்ல வேண்டியதில்லை. நீர் நிறைந்த சமுத்திரத்திற்குப் பதிலாக நெருப்பிலே விழுந்து

..கம் அழிந்து விடும். இன்னொரு விதமாகச் சொல்லுவதாகில், ..கிணிச் சக்கரத்தின் பாதையில் சனி குறுக்கிட்டால் ..ன்னிரண்டு வருஷங்களுக்கு பூமியில் மேகங்களிலிருந்து ..ழைபொழியாது."

ஜோதிடன் இவ்விதம் கூறியவுடன், "ஜோஸ்யரே! இதைத் ..ர்ப்பதற்குப் பரிகாரம் ஏதும் கிடையாதா?" என்று மிக்க ..வருத்தத்தோடு கேட்டான், விக்கிரமாதித்தன்.

"அரசே! ஒன்பது கிரகங்களுக்கும் ஹோமம் செய்தால் ..ழை பொழியக்கூடும்; அதைத் தவிர வேறு வழி ..றுமிருப்பதாகத் தெரியவில்லை." என்றான் ஜோதிடன்.

அவ்விதமே அரசன் அறிவிற் சிறந்த பண்டிதர்களை ..ரவழைத்து நடந்த விஷயம் அனைத்தும் தெரிவித்தான். "..ாஸ்திரங்களில் தெரிவித்துள்ள பிரகாரம் ஒன்பது ..கங்களையும் திருப்தி செய்ய ஹோமம் தொடங்குங்கள்" என்று ..த்தரவிட்டான்.

ஹோமத்திற்கு வேண்டிய சகல சாமான்களும் சேகரிக்கப் ..டு. ஹோமம் தொடங்கப்பட்டது. பண்டிதர்கள் உதவியுடன் ..ல்லும், பகலுமாக அகண்ட ஹோமத்தைச் செய்தான். ..றாமத்தின் முழுப்பலனும் கிட்டுவதற்காகக் கற்ப சூத்திரத்தில் ..ண்டபடி பூர்ணாகுதியும் முடிந்தது. ஹோமம் செய்தவர்களுக்கு ..க்கிரமாதித்தன் பணம், உணவு, உடை, ஆபரணங்கள் ..கியவற்றைச் சன்மானமாக அளித்துக் கௌரவித்தான். பிறகு ..ங்கு குழுமியிருந்த ஏழைகளுக்கும், நொண்டி, குருடு ..தலிய அங்கஹீனர்களுக்கும் வேண்டிய செல்வத்தைத் தானம் செய்தான். அறிஞர்களுக்குத் தசதானம் செய்தான்.

என்ன செய்துதான் என்ன? மழையைக் காணவில்லை. ..ழையின்மையால் மக்கள் பெரிதும் கஷ்டப்பட்டனர். குளம் ..ட்டைகளில் இருந்த நீர் வற்றிவிட்டது. மாடு கன்றுகள் ..ண்ணீரில்லாமல் தவித்தன. பயிர் பச்சைகள் வாடிவதங்கின.

மக்களின் துன்பத்தைக் கண்டு விக்கிரமாதித்தன் ..ருந்தினான். அதை நிவர்த்திக்கும் வழி தெரியாமல் தவித்தான். ..டைசியில், ஒருநாள் அரசன் கவலை நிறைந்த மனத்தினனாக ..ாகசாலையில் நுழைந்தான். அப்போது அசரீரி ஒன்று பேசியது. "அரசே! முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய யுவன் ..ருவன் உனக்கு எதிரே உள்ள கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேவிக்குத் தன்னைப் பலிகொடுப்பானாகில், மழை பெய்யும்!" ..ன்று சொல்லி மறைந்தது. உடனே விக்கிரமாதித்தன்

தியானத்திலிருந்து எழுந்தான். உடைவாளை உருவிக் கழுத்தைத் துண்டித்துக் கொள்ளப்போனான். அப்போது தேவி அவன் எதிரில் பிரசன்னமாகி, அவன் கைகளைப் பிடித்து நிறுத்தினாள். "அரசே! உனக்கு வேண்டியதைக் கேள். உன் தீரம் என்னை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்திவிட்டது!" என்றாள்.

"தேவி! நாட்டிலே மழையின்மையால் மக்களும், பிராணிகளும் படும் துயரம் சொல்லி முடியாது. தேசத்தின் பிதாவாகிய அரசன் இதைக் கண்டு பேசாமலிருப்பது தர்மம் அல்ல. ஆகவே, நான் உன்னைக் குறித்து இக்கடும் தியானத்தைக் கொண்டேன். தயவு செய்து நாட்டிலே நடமாடும் இக்கொடிய வறட்சியைப் போக்க வேண்டும்!" என்று வேண்டினான்.

"ராஜன்! உன்னுடைய வரம் என்னை ஆச்சரியத்தி லாழ்த்திவிட்டது! உனக்குத் தேவையான வரத்தைக் கேட்குமாறு சொன்னால், மக்களுக்காகக் கேட்கிறாய். சுயநலமின்றி மக்களுக்காகவே வாழும் நீ கேட்ட வரத்தைத் தட்டாமல் தருகிறேன். பெற்றுக்கொள்!" என்று அருளி மறைந்தாள். உடனே வானத்திலே நீருண்ட மேகங்கள் வந்து குவிந்தன. மழை அந்தகாரமாகப் பெய்யத் தொடங்கியது. மழையைக் கண்ட மக்கள் குதூகலத்துடன் விக்கிரமாதித்தனை வாழ்த்தினர்.

மக்களின் மகிழ்ச்சியைக் கண்ட மன்னனின் உள்ளம் பெரிதும் உவகை கொண்டது.

இவ்விதம் கதையை முடித்த பதுமை, போஜராஜனைப் பார்த்து, "அரசே! எங்கள் அரசனுக்கு ஈடு இணை உள்ளவர் யார்?" என்று கேட்டது.

போஜராஜன் ஏதும் பேசாமல் படிகளில் இறங்கிச் சென்றான்.



## 9-வது நவரத்தினவல்லிப் பதுமை சொல்லிய பவளக் கொடியாள் கதை



மறுநாட்காலையில் போஜராஜன் அதிசயச் சிம்மாசனத்தின்மீது ஏறி அமர முயன்றபோது, சிம்மாசனத்தின் ஒன்பதாவது படிக்குக் காவலாக இருந்த நவரத்தின வல்லிப் பதுமை அவனைத் தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனைப் பற்றிய புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.

காடாறு மாதம் வாசம் செய்யப் புறப்பட்ட விக்கிரமாதித்தன் வேதாளத்தையும், மந்திரி பட்டியையும் உடன் அழைத்துக்கொண்டு சென்றான். காடுமலைகளைக் கடந்து அவர்கள் தேச சஞ்சாரம் செய்து வரும் வழியில் துங்கபத்திரி என்னும் நதிக்கரையிலிருக்கும் அம்பாள்புரியென்னும் பட்டணத்தை அடைந்தார்கள். பட்டணத்தின் எல்லையிலிருந்த குளத்திலே இறங்கி கைகால்களைக் கழுவிக்கொண்டு கரையிலேறினார்கள். அப்போது அந்நகரில் கள்ளப் புருஷனை விரும்பி விபசாரம் செய்துவந்த ஒரு பெண்ணை, அந்த நகரத்து மக்கள் கையும் களவுமாய்ப் பிடித்து, அடித்துக் கொன்று, அவள் உடலைத் தூக்கி கொண்டு வந்து அக்குளக் கரையில் போட்டுவிட்டுச் சென்றனர். தண்ணீர் கொண்டு செல்லுவதற்காக வரும் மற்ற பெண்களும் அவள் பிரேதத்தைப் பார்த்துக் கற்பு நெறி தவறாது வாழட்டும், என்று அவர்கள் அங்கு கொண்டுவந்து போட்டுவிட்டுச் சென்றனர்.

அந்தச் சமயத்தில், சகோதரிகள் இருவர் தண்ணீர் கொண்டு செல்ல, இடுப்பிலே குடத்துடன் அங்கு வந்தார்கள். மூத்தவளான முத்துநாயகி என்பவள் மணமாகி உலகமறிந்தவளாயிருந்தாள். இளையவளான பவளக்கொடியோ, பருவமடையாத சிறுமியாயிருந்தாள். மூத்தவள் அங்கு கிடந்த பெண்ணின்

பிரேதத்தைக்கண்டு மனம் வருந்தி விம்மி விம்மி அழுதாள். இளையவளான பவளக்கொடியாள் என்னும் பெண்ணோ "அக்கா! இவள் ஏன் இறந்தாள்? எதற்காக இங்கு கொண்டு வந்து போட்டிருக்கிறார்கள்?" என்று தன் சகோதரியிடம் கேட்டாள்.

"இதெல்லாம் உலகமறியாப் பெண்ணான உனக்கு விளங்காதடி! இவள் தன் மனதுக்குகந்த கள்ளக் காதலனுடன் தொடர்புகொண்டு கற்பிழந்தாள். இவளைக் கொன்று, பிறர் அறியும் பொருட்டு இங்கே போட்டிருக்கிறார்கள்!" என்றாள் மூத்தவள்.

உடனே இளையவள் இடியிடியெனச் சிரித்து, "அக்கா! இந்தப் பைத்தியக்காரி பிறரறியாதபடி சோரம் போகப் புத்தியில்லாமல் அகப்பட்டுக் கொண்டு உயிரைவிட்டாள்! இதற்குத்தானா நீ பிரமாதமாக அழுகிறாய்? வாக்கா போகலாம்!" என்றாள்.

சிறுமியாயிருந்தும் அவளுடைய இந்தப் பதிலைக்கேட்ட விக்கிரமாதித்தன் வியந்தான். "இந்த வயதிலேயே இவ்வளவு துடுக்குப் புத்தியென்றால் இவள் பெரியவளானபின் எவ்வளவு கள்ளத்தனம் செய்வாள்?" என்று எண்ணிய மன்னவனுக்கு, அவளையே மணந்து, புருஷனறியாமல் அவள் எப்படிச் சோரத்தனம் புரியமுடியும்?" என்பதைச் சோதித்தறிய வேண்டுமென்ற விருப்பம் ஏற்பட்டது. உடனே பக்கத்திலிருக்கும் தன் அந்தரங்க மந்திரியிடம் தெரிவித்தான். உடனே பட்டி அவ்வழி வந்த உள்ளூர்வாசிகளிடம் விசாரித்து, அவர்கள் இருவரும் அந்த நகரத்திலே உள்ள முத்து மாணிக்கம் என்னும் இரத்தின வியாபாரியின் புத்திரிகள் என்பதைத் தெரிந்து கொண்டான்.

அதன் பின்னர் விக்கிரமாதித்தனும் பட்டியும் இரு இரத்தின வியாபாரிகளைப் போல் மாறுவேடம் பூண்டு நகரத்திற்குள் சென்றனர். கடைவீதிக்குச் சென்று தாங்கள் கொண்டு வந்திருந்த இரத்தினங்களைக் கம்பிளி விரித்துப் பரப்பினர். வெளியூர் இரத்தினங்களைப் பார்வையிட அங்குவந்த வணிகர் தலைவரான முத்துமாணிக்கம் அவர்களின் விருத்தாந்தத்தை விசாரித்தார்.

"ஐயா! நாங்கள் இருப்பது காஞ்சிபுரம், எங்கள் தகப்பனார் பெயர் தனபாலர்!" என்று சொன்ன பட்டி தன் அருகில் நின்ற விக்கிரமாதித்தனைச் சுட்டிக் காண்பித்து, "இவர் என் தமையனார் ஆதித்தர்! இவருக்கென்றே பெண் தேடி ஒவ்வொரு பட்டணமாகப் பார்த்து வருகிறோம். தகுந்த பெண் கிடைக்கவில்லை" என்றான்.

"நீங்கள் இருவரும் இரண்டு நாட்கள் என் வீட்டில் விருந்தினராய் தங்கவேண்டும். தட்டக்கூடாது" என்று அவர்களை அழைத்துச் சென்றார் முத்துமாணிக்கம்.

வீடு சென்றதும் தன் இளையகுமாரியான பவளக் கொடியாளைக் கூப்பிட்டுக் காண்பித்து, அவளை மணக்க விக்கிரமாதித்தனுக்கு சம்மதமாயென்று கேட்டார். அவனும் சம்மதிக்கவே, உடனே முத்து மாணிக்க வியாபாரி தம் உற்றார் உறவினரையெல்லாம் அழைப்பித்து அவர்கள் முன்னிலையில் பவளக்கொடியாளை ஆதித்தனுக்குக் கோலாகலமாகத் திருமணம் செய்து கொடுத்தான். திருமணம் முடிந்த பத்தாவது நாள் பவளக்கொடியாள் புஷ்பவதியானாள்.

ஒருமாத காலம் விக்கிரமாதித்தன் அந்நகரில் தங்கியிருந்த பின், தன்னிடமுள்ள இரத்தினங்கள் அனைத்தையும் முத்து மாணிக்கத்திடம் கொடுத்துவிட்டு, தன் ஊர் செல்வதாகக் கூறிப் பவளக்கொடியாளை அழைத்துக்கொண்டு பட்டியுடன் புறப்பட்டான். நகரைக்கடந்ததும் அவர்கள் மூவரும் வேதாளத்தின் மீது ஏறிச் சென்றார்கள்.

வெகுதூரம் கடந்து வந்ததும் அங்கு ஒரு பாழடைந்த நகரம் தோன்றியது. அந்நகரத்தருகில் ஒரு கோட்டை இருந்தது. வேதாளத்திலிருந்து மூவரும் இறங்கிக் கோட்டைக்குச் சென்றனர். கோட்டை வாயில் பூட்டப்பட்டு, ஜன சஞ்சாரமற்றுக் காணப் பட்டது. அவ்வழியே சென்ற வழிப்போக்கன் ஒருவனை அழைத்து நகரின் கோட்டைக் கதவு பூட்டப்பட்டிருக்கும் அதிசயத்தைப் பற்றிக் கேட்டனர்.

"ஐயா! காளகண்டபுரம் எனும் இந்தக் கோட்டையைக் கார்த்திகை வர்மன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். அவனுக்குப் புத்திர பாக்கியம் கிடையாது. ஆகவே, தான் இறக்கும் போது, இங்கிருந்த மனிதர்களை வெளியேற்றிக் கோட்டையைப் பூட்டி மந்திரித்து, விக்கிரமாதித்தன் ஒருவனைத் தவிர வேறு எவரும் இதைத் திறக்க முடியாதென்று சொல்லி விட்டுச் சென்றான்!" என்றான் அம்மனிதன்.

அதைக்கேட்ட அரசன் ஆச்சரியமடைந்து பூட்டைத் தொட பூட்டுத் திறந்து கொண்டது. வேதாளத்தைக் கோட்டைக்குக் காவலாக வாயிலில் வைத்துவிட்டு மூவரும் கோட்டையினுள் நுழைந்தனர். உள்ளே வேண்டிய வசதிகள் யாவுமிருந்தன. விக்கிரமாதித்தன் காடாறுமாத கால வாசத்தை அங்கேயே கழித்துவிட விரும்பினான். அதற்குள் பவளக்கொடியாளின் சோரபுத்தியையும், தந்திரம் செய்யக்கூடிய சக்தியையும்

சோதித்துவிட வேண்டுமென்று மணாளன் விரும்பினான். அதனால் புத்திளம் மனையாளைத் தொடாமல், அவளைக் கள்ளப்புருஷனுக்காக ஏங்கவைத்து வரவேண்டுமெனவும் விக்கிரமாதித்தனும், பட்டியும் தீர்மானித்தார்கள். அதி காலையில் எழுந்து நித்திய கடன்களை முடித்துக்கொண்டு பவளக் கொடியாளை மட்டும் கோட்டையில் வைத்துப் பூட்டிக் கொண்டு வேதாளத்தோடு அவர்கள் காட்டிலே வேட்டையாடச் செல்வார்கள். மாலை வந்ததும் கோட்டை வாசலில் வேதாளத்தைக் காவலாக வைத்துவிட்டுச் சாப்பிட்டு விட்டுப் படுத்துத் தூங்குவார்கள். பவளக்கொடியாள் படுத்துறங்கும் போது, அவளுக்கு இருபுறமும் விக்கிரமாதித்தனும், பட்டியும் சயனித்துக் கொண்டு கண்மூடியவாறு காவல்புரிந்து வந்தார்கள்.

இப்படியாக நாட்கள் சென்று கொண்டிருந்தன. அந்தக் கோட்டைக்குள், அவர்களுக்கு துணிகளை எடுத்துச்சென்று துவைத்துக் கொடுக்கும் ஒரு கிழவியைத் தவிர வேறுயாரும் நுழையாதபடியும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

ஒருசமயம் அந்தக்கிழவி எடுத்து வந்த துணிகளைத் துவைப்பதற்காக அவளுடைய வாலிப மைந்தன் மூட்டையைப் பிரித்துப் புடவையை வெளியே எடுத்தான். அது பவளக் கொடியாள் உடுத்தியிருந்த சேலை. அதில் பவளக்கொடியாளின் தேக வாசனை ஒருவித மயக்கவாடையாக ஊறியிருந்தது. புடவையிலிருந்து கிளம்பிய அதன் நறுமணம், அவன் நினைவை மயக்கியது. இந்தப் புடவையே இவ்வளவு நறுமணம் கமழுமானால், இதை உடுத்திக்கொண்டிருந்த பெண் எவ்வளவு தேகவாசனையுள்ள அழகியாயிருக்க வேண்டுமென்று எண்ணமிட்டான். அன்றையிலிருந்து சதா அவள் நினைவுதான். சரியாக ஆகாரம் உட்கொள்ளாமல் அவன் நாளுக்குநாள் எலும்பும் தோலுமாகிக்கொண்டு வந்தான்.

அவனுடைய பித்துப் பிடித்த நிலையைக் கண்டு பரிதாபங் கொண்ட கிழவி தன் ஒரே மகனின் உள்ளத்தை வாட்டும் விஷயத்தைக் கேட்டாள். அவனும் ஒளிவு மறைவின்றித் தெரிவித்து விட்டான்.

"ஐயோ மகனே! நீ ஏன் அந்தப் பெண்ணைப் பற்றி நினைத்து உருகுகிறாய்? அவள் ஏதோ ராஜ பத்தினிபோல் இருக்கிறாள்! அவளை ஒரு நொடிப் பொழுது கூட வெளியே செல்ல விடுவதில்லை. போகும் போது கோட்டையைப் பூட்டிக் கொண்டும் போய்விடுகிறார்கள். அவளை நீ மறந்து விடு! என்றாள் கிழவி.

"ஒரு முறையாவது அவளைப் பார்த்தாக வேண்டும். அவளுடைய வாயால், 'அடே, ஆசைப்பிடித்த பயலே' என்று ஒரு வார்த்தை திட்டுவதைக் கேட்டாலும் போதும்! இல்லையேல் என் உயிர் போய்விடும்!" என்றான் கிழவியின் குமாரன்.

மறுநாள் கிழவி துணியைக் கொண்டுபோய்க் கொடுக்கும்போது பவளக் கொடியாளிடம், "அம்மா! உங்களிடம் ஒரு வார்த்தை பேசவேண்டும். வாய் திறந்து பேசவும் பயமாயிருக்கிறது!" என்றாள். "தைரியமாகச் சொல்!" என்று பவளக்கொடி அனுமதிக்கவே, கிழவி உடல் நடுங்க, வாய் குழற தன் மகனின் மோக தாபத்தை தெரிவித்தாள். அதைக் கேட்ட பவளக்கொடியாள், "வாயுள்ள பிள்ளை பிழைக்கும்!" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டாள். வீடு திரும்பிய கிழவி, அதைத் தன் புத்திரனிடம் சொல்லி, "அந்தப் பெண் பதிலே சொல்லாமல் போய் விட்டாளடா, மகனே! நீ அவளை மறந்துவிடு!" என்று கெஞ்சினாள்.

"அம்மா! வாயுள்ள பிள்ளை பிழைக்கும் என்று அவள் சொல்லியது என்னைக் குறித்துத்தான். திறமையைக் காட்டினால் அவள் திருஷ்டிக் கிடைக்கும்" என்று சொல்லிவிட்டுக் கிழவியின் புத்திரன் துணிச்சல் வரப் பெற்றவனாய், அன்று நள்ளிரவில், கஸ்தூரி, சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டு புறப்பட்டான். கோட்டை வாசலில் வந்து பார்த்த போது கதவு பூட்டியிருந்தது தெரிந்தது. நாற்புறமும் சுற்றிப் பார்த்ததில், ஓரிடத்தில் ஆலம் விழுது ஒன்று மதில் சுவர் ஓரமாகத் தொங்கிக் கொண்டிருக்கக் கண்டான். அதைப் பிடித்து ஏறி, கோட்டைக்குள் சென்றான்.

கோட்டையின் உள்ளே விக்கிரமாதித்தனும், பட்டியும் இருபுறமும் காவலர் போல படுத்துறங்க, நடுவிலே படுத்துறங்கும் அந்தப் பெண்ணைக் கண்டதும் வாலிபன் அவளுடைய கால் சிலம்பைத் தன் பெருவிரலால் ஓசைப்படாமல் மிதித்து எழுப்பினான். கண் விழித்துப் பார்த்த பவளக்கொடியாள், காலையில் கிழவி தெரிவித்த இளைஞன் அவனாகவே இருக்க வேண்டுமென்பதையுணர்ந்து, அப்போதே, அந்த இடத்திலேயே அவனுடைய மனோரதம் நிறைவேறும் என்பதைச் சைகை மூலம் தெரிவித்தாள். அவனும் அவ்விதமே அனுசரித்து நடக்கலானான்.

இருவரும் குதூகலமாயிருக்கும் போது ஒருசமயம் பவளக் கொடியாள் வலது முழங்கையால் விக்கிரமாதித்தன் விலாவில் இடித்தாள். கண்விழித்துப் பார்த்த விக்கிரமாதித்தன், இவர்களைக் கண்டு பட்டிதான் அவளை நெருங்கியிருக்கிறான்

என நினைத்துக் கொண்டு கோபமடைந்தான். "இந்தப் பெண்ணின் சோரத்தனத்தைச் சோதிப்பதற்காக நான் தூரத்தள்ளிப் படுத்தால், அந்தரங்க நண்பனே மோசம் செய்கிறானே!" என்று மனம் புழுங்கி வேறுபுறம் திரும்பிப் படுத்துக் கொண்டான். சிறிது நேரங்கழித்துப் பவளக் கொடியாள் மறுபுறம் திரும்பிப் பட்டியை இடது முழங்கையால் இடித்தாள். அதைப் பற்றிச் சிந்தித்த பட்டி, "இந்தப் பெண் தான் சொன்ன சோரபுத்தியை எவ்விதம் நிறைவேற்றுகிறாள் என்பதைப் பார்க்காமல், நான் அருகில் காவலிருப்பதையும் பொருட்படுத்தாமல் நம் மன்னர் இந்தப் பெண்ணின்மீது திடீரென்று மோகமுற்று நெருங்கியிருக்கிறாரே!" என்று மனம் வருந்தி வேறுபுறம் திரும்பிப் படுத்துக் கொண்டான். இவ்விதம் இருவருடைய தடங்கலையும் நிவர்த்தித்துக் கொண்டு பவளக்கொடியாள் தன் காதலனுடன் குதூகலமாயிருந்தாள். பொழுது விடியும் சமயத்தில் அந்த இளைஞனை ஒரு அறையிலே மறைத்து வைத்தாள்.

அதிகாலையில் எழுந்த பட்டியும், விக்கிரமாதித்தனும் ஒருவருக்கொருவர் பேசாமல் மனத்தாங்கலுற்றவர்களாய் குளக்கரையில் ஆளுக்கொரு திசையைப் பார்த்துக் கொண்டு பல் விளக்கிக் கொண்டிருந்தனர். அப்போது விக்கிரமாதித்தன் ஜாடை பேசுவதுபோல, தனக்குத்தானே, "ஆகா! அந்தப் பெண் தன் சோரபுத்தியை எவ்விதம் நிறைவேற்றுகிறாள் எனப் பார்க்கவே காத்திருந்தேன்! அவள்மீது பிரியம் கொண்டேன் என்று அந்தரங்க நண்பன் வாய்விட்டு என்னிடம் கேட்டிருக்கக் கூடாது! நான் விலகியிருப்பேனே!" என்று தனக்குத்தானே பேசிக் கொண்டான்.

அதைக் கேட்ட பட்டி திடுக்கிட்டு, "நாம் நினைத்தது மிகவும் தப்பு. நேற்று இரவு பவளக்கொடியாளிடம் எவனோ ஒரு நாயகன் கள்ளத்தனமாக வந்து போயிருக்கிறான். அவள் தன் வார்த்தைப்படி நடந்துவிட்டாள். அவள் வைத்திருக்கும் சோர நாயகனைக் கண்டுபிடிக்கும் வழி ஏது?" என்று வருந்தினான். நேராகக் கோட்டைக்குச் சென்று உப்பரிகையில் ஏறி உட்கார்ந்து கொண்டு யோசனையிலாழ்ந்தான்.

அப்போது ஆகாயமார்க்கமாய் இரண்டு கிழ ரிஷிகளும் கோட்டைக்குப் பின்புறமிருந்த கானகத்துக் குளத்தங்கரையருகே இறங்கினார்கள். உடனே அவ்விருவரும் தங்கள் ஜடாமகுடங்களில் இரகசியமாய் மறைத்து வைத்திருந்த இரண்டு யௌவனப் பெண்களை வெளியே எடுத்துத் தரையில் வைத்து விட்டு நீராடச் சென்றார்கள் அவர்கள் போனதும் இரண்டு இளம்

பெண்களும் இரகசியமாகத் தங்கள் சேலைத்தலைப்பின் முடிச்சுகளில் மறைத்து வைத்திருந்த இரண்டு சுந்தர வாலி பர்களை வெளியே எடுத்து வைத்துவிட்டு வேறுபுறம் நீராடச் சென்றார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்கள் குளித்துவிட்டு வந்ததும் தங்கள் சோர நாயகர்களை மறுபடி புடவைத் தலைப்பின் முடிச்சுகளுக்குள் மறைத்து வைத்துக்கொள்ள, அதன் பின்வந்த இரண்டு கிழ ரிஷிகளும் தங்கள் நாயகிகளை மறுபடி தங்கள் ஜடாமகுடத்தில் சடையில் மறைத்துக் கட்டிக் கொண்டனர். இதைக் கண்ணுற்ற பட்டி இவர்களைக் கொண்டு தான் பவளக்கொடியாளின் சோர நாயகனை வெளிப்படுத்த முடியும் என்று கீழே இறங்கிச் சென்றான். நேராக ரிஷிகளிடம் சென்று, "முனி சிரேஷ்டர்களே! இன்று நீங்கள் இருவரும் எங்கள் அரண்மனைக்கு எழுந்தருளி பிக்ஷை பெறவேண்டும்!" என்று விருந்து சாப்பிட அழைத்தான். இரு ரிஷிகளும் அதை மறுக்காது ஏற்றுக்கொண்டார்கள். கோட்டையிலே பத்துப் பேர்களுக்குச் சமையல் ஏற்பாடாயிற்று. பத்து நுனி இலைகளைக் கூடத்தில் போட்டான் பட்டி. ரிஷிகள் இருவரும் பவளக்கொடியாள், மன்னன் பட்டி ஆகியோரும் ஐந்து இலைகளில் அமர்ந்தனர். மீதி ஐந்து இலைகள் இருந்தன. அப்போது பட்டி இரண்டு கிழ ரிஷிகளையும் நோக்கி, "ஐயன்மீர்! தாங்கள் சாப்பிடும் போது தங்கள் நாயகிகள் மட்டும் ஏன் பட்டினி கிடக்கவேண்டும்? ஒருவரைப் பட்டினி கிடக்கச் செய்து விட்டு மற்றவர் சாப்பிடுவது மகாபாபம் அன்றோ? ஆதலால் தங்களுடைய ஜடாமகுடங்களில் வைத்திருக்கும் இரண்டு பெண்களையும் கீழே இறக்கிவிடுங்கள்!" என்றான்.

தங்கள் இரகசியம் அம்பலமாகி அகப் பட்டுக் கொண்டுவிட்டதை அறிந்த அவர்கள் வாய்திறவாமல் ஜடாமுடிகளில் மறைத்திருந்த இரண்டு நாயகிகளைக் கீழே இறக்கிவிட்டனர்.



அவ்விருவரையும் பட்டி நோக்கி, "ரிஷிபத்தினிகளே! நீங்களிருவரும் இரண்டு இலைகள் முன்னால் அமர்ந்து விருந்து சாப்பிடுங்கள். ஆனால், நீங்கள் மட்டும் புசிப்பதால் என்ன பயன்? உங்கள் புடவைத் தலைப்பின் முடிச்சுகளில் மறைத்து வைத்திருக்கும் ஆசை நாயகர்கள் இருவரையும் வெளிப்படுத்தி இலைகளில் அமரச் சொல்லுங்கள்!" என்றான் பட்டி.

தங்கள் யௌவன நாயகிகளின் சோர நாயகர்களைக் கண்டு திடுக்கிட்டனர் கிழ ரிஷிகள். இவ்வளவையும் வியப்புடன் பார்த்துப் பிரமித்து நின்ற பவளக்கொடியாளை பட்டி நோக்கி, "அம்மா! நீ மட்டும் விதி விலக்கா? உன் சோர நாயகனையும் அழைத்து வந்து பாக்கியிருக்கும் பத்தாவது இலையில் அமரச் செய்!" என்றான். பவளக்கொடியாள் வேறு வழியின்றி எழுந்து சென்று பக்கத்தறையில் மறைத்து வைத்திருந்த கிழவியின் புத்திரனை அழைத்து வந்தாள்.

விக்கிரமாதித்தனுக்கு உண்மை விளங்கிவிட்டது. பட்டியைச் சந்தேகித்ததற்காக வருந்தினான். சாப்பிட்டு எழுந்ததும் இரண்டு கிழட்டு ரிஷிகளும் தங்கள் நாயகிகளை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டனர். அதன்படி பட்டி அரசனை நோக்க, அப்போது விக்கிரமாதித்தன், "நண்பா! அப்பெண்கள் தங்கள் வயதிற்கும் மனதிற்கும் உகந்த சோர நாயகர்களையே தங்கள் பிராணநாதராக ஏற்றுக்கொள்ளட்டும். பவளக்கொடியாள் தன் வார்த்தையை நிறைவேற்றிவிட்டாள். அவள்மீது அதிக அன்பு பூண்டிருக்கும் கிழவியின் குமாரனையே இனித் தன் நாயகனாக அடைந்து ஆனந்தமாக இருக்கட்டும்!" என்றான்.

பிறகு, அந்த ராஜ்ஜியத்துக்குக் கிழவியின் மகனையே அரசனாக்கி, ரிஷிபத்தினிகளின் சோர நாயகர்கள் இருவரையும் அவனுக்கு மந்திரியாக்கிப் பட்டம் கட்டி வைத்து, பாழடைந்த அவ்வூரை ஜன சஞ்சாரமுள்ளதாக்கி அதற்கு விமோசனமளித்து விட்டுக் கிளம்பினான். இதற்குள்ளாகக் காடாறு மாதகாலம் முடிவடையும் சமயம் நெருங்கிவிட்டதால், விக்கிரமாதித்தன் பட்டியுடன் வேதாளத்தின் மீதேறி உஜ்ஜயினிப் பட்டணம் வந்து சேர்ந்தான்.

கதை சொல்லி முடித்த நவரத்தினவல்லிப் பதுமை, "போஜராஜரே! எங்கள் விக்கிரமாதித்த மன்னரைப்போல் பெருந்தன்மையுள்ள பார்த்திபரன்றோ இந்த அதிசய சிம்மாசனத்தில் ஏறி அமரலாம்?" என்றது.

அப்போது சூரியாஸ்தமனமாகிவிட்டதால், போஜராஜன் மௌனமாகத் தன் அந்தப்புரத்திற்குத் திரும்பினான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பத்தாவது படியினுள்ள சந்திரிகையென்னும் பதுமை சொன்னதாகப் பின்வரும் கதையுள்ளது.)

## யோகியின் சக்தி கதை



ஒருசமயம் உஜ்ஜயினி நகரத்திற்கு யோகி ஒருவர் வந்தார். அவர் சகல கலைகளிலும், வேதம், நீதி சாஸ்திரம், வைத்தியம், ஜோதிஷம், கணிதம், பரத நாட்டியம், மற்றும் அனேக சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். சுருங்கச் சொல்லப் போனால் அவருக்கு இணைவேறு யாரும் இல்லையெனலாம். ஸர்வக்ஞன் ஆக அவர் இருந்தார். அவருடைய கீர்த்தியைக் கேள்வியுற்ற விக்கிரமாதித்தன், ஒரு சமயம் தன் புரோகிதரை அனுப்பி அவரை அரண்மனைக்கு அழைக்கச் செய்தான்.

புரோகிதரும் அந்த யோகியின் இருப்பிடத்திற்குச் சென்று அவரை வணங்கினார். "ஸ்வாமி! உங்களைக்காண அரசர் விரும்புகிறார். தயவுசெய்து அரண்மனைக்குப் புறப்பட்டு வாருங்கள்" என்றார்.

"அறிஞரே! அரசனைப் பார்த்து எனக்கு ஆக வேண்டிய காரியம் என்ன இருக்கிறது? பிச்சையெடுத்து உண்டு வாழ்வோம்; வானத்தையே ஆடையாக உடுப்போம்; பூமியிலே படுத்து உறங்குவோம்; அரசனால் எங்களுக்கு என்ன ஆகும்? ஆசையில்லாதவன் அதிகாரியாக இருக்கமாட்டான்; இன்பத்தில் (காமம்) ஆசையில்லாதவன் ஆபரணங்களில் இச்சை கொள்ளமாட்டான்: எவன் கபடமற்றவனோ, அவன் முகஸ்துதியைச் செய்யமாட்டான்: எவனுடைய வார்த்தைகள் நேர்மையாக இருக்கின்றனவோ, அவன் பித்தலாட்டக்காரன் அல்ல. ஆகவே, எனக்கு அரசனிடம் சென்று நிறைவேற வேண்டிய காரியம் ஏதும் இல்லை. என்னால் வரமுடியாது என்று போய்த் தெரிவியுங்கள்!" என்று மறுத்துவிட்டார் யோகி.

புரோகிதர் அரண்மனை திரும்பி அரசனிடம் நடந்ததைத் தெரிவித்தார். "அரசே! அவரோ சிறந்த மகான் என்று தோன்றுகிறது. தன் இருப்பிடத்தைவிட்டுக் கிளம்ப மறுத்துவிட்டார். மேலும், இம்மாதிரி மகான்களின் இருப்பிடத்தைத் தேடி நாம் செல்லுவது தான் சிலாக்கியம்" என்றார்.

அதன்மீது அரசனே நேரில் புறப்பட்டு யோகியின் இருப்பிடத்திற்குச் சென்றான். அரசனைக் கண்டதும் யோகி அவனை வரவேற்று அமருவதற்கு ஆசனம் அளித்தார். அரசன் முறைப்படி அவருக்குத் தன் வணக்கத்தைச் செலுத்திவிட்டு, அருகில் அமர்ந்து பேசினான். உரையாடலின் போது அரசன் கேட்ட எல்லாவற்றுக்கும் யோகி ஒளிவு மறைவு இன்றிப் பதில் அளித்தார். அதைக் கண்டு அரசன் பன்மடங்கு வியப்படைந்தான்.

அன்றிலிருந்து தினமும் அவருடைய இருப்பிடத்திற்கு வந்து சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுச் செல்வது அரசனின் நித்தியக்கர்மாக்களில் ஒன்றாக ஆகிவிட்டது. அவர்களுடைய பேச்சிலே பரமாத்மாவைப் பற்றிய விஷயமே மேலோங்கி இருந்தது.

ஒருநாள் அரசன் யோகியிடம் கேட்டான், "பிரபோ! உங்கள் வயது என்ன இருக்கும்?"

"ராஜன்! எதற்காக அதை நீ கேட்கிறாய்? நீதியறிந்தவர்கள் தங்களுடைய வயதைச் சொல்லக்கூடாது அன்றோ! வயது, செல்வம், வீட்டுச் சுவரிலே ஏற்பட்டுள்ள பிளவு, மந்திரம், மருந்து, பெண்களுடன் சகவாசம், தானம், மானம், அவமானம் ஆகிய இந்த ஒன்பது விஷயங்களையும் ஒருவன் இரகசியமாகப் பாதுகாக்கவேண்டும். மேலும், யோகத்தை மேற்கொண்டிருக்கும் ஒருவன், யமனை வஞ்சித்து வெகுகாலம் ஜீவித்திருக்கிறான். ஏ, ராஜன்! தங்களுக்கு அதனைச் சாதனம் செய்யும் சக்தி இருக்குமானால் தெரிவியுங்கள். நான் ஒரு மந்திரோபதேசம் செய்கிறேன்." என்றார்.

"மந்திரோபதேசத்தின் மூலம் என்ன பிரயோசனம் கிட்டும்?" என்று விக்கிரமாதித்தன் கேட்டான்.

"அரசே! நான் சொல்லும் வழியை நீ கடைப்பிடித்தா யானால், மரணத்திலிருந்தும் கிழட்டுத் தன்மையிலிருந்தும் விடுதலை பெறலாம்!"

"அப்படியானால் எனக்கு அச்சக்தியை அடையும் மந்திரத்தை உபதேசியுங்கள். அதை நான் சாதனை செய்கிறேன்" என்று வேண்டினான் அரசன்.

யோகி அரசனை அருகில் அழைத்து அவனுக்கு மந்திரோபதேசம் செய்தார். "ராஜன்! இச்சையை அடக்கி பிரம்மசரியம் பூண்டு, ஒரு வருடகாலம் விடாமல் இம்மந்திரத்தை உச்சாடனம் செய்து வாருங்கள். கடைசியில்

அருகம்புல்லைக் கொண்டு பத்துவித ஹவனம்(ஹோமம்) செய்யுங்கள். ஹோமம் பூர்ணாகுதியாகும் சமயத்தில் கையில் பழத்துடன் ஒருவன் அக்கினிக் குண்டத்திலிருந்து வெளிப்படுவான். அவன் உனக்கு அப்பழத்தை அளிப்பான். அதைப் புசிப்பதன் மூலம் நீ நரை திரையை வென்று வெகு காலம் யௌவனத்துடன் வாழலாம். உன் மேனி காயம் கூடப் படக்கூடாததாக ஆகிவிடும்!" என்றார்.

அரசனுக்கு மந்திரோபதேசத்தைச் செய்துவிட்டு யோகி தேசாந்திரம் கிளம்பிவிட்டார். அரசன் ஒரு வருடகாலம் நகரத்தைவிட்டு ஆரண்யத்தில் தன் ஆசைகளை அடக்கி இடைவிடாமல் மந்திரத்தை உச்சாடனம் செய்துவந்தான். அவ்வருஷத்தின் முடிவில் அருகம்புல்லைக் கொண்டு ஹோமம் செய்தான். ஹோமம் முடிவடையும் தருணத்தில் அக்கினிக்குண்டத்திலிருந்து சர்வ லக்ஷணங்களும் பொருந்திய யௌவன புருஷன் ஒருவன் வெளிப்பட்டான். அரசனை ஆசிர்வதித்துத் தன் கையில் வைத்திருந்த பழத்தை அளித்து மறைந்தான். பழத்தைப் பெற்றுக்கொண்டு, அரசன் அரண்மனை திரும்பினான்.

நடுவழியிலே குஷ்டரோகத்தால் பீடிக்கப்பட்டு வருந்தும் ஒருவனைச் சந்தித்தான். அவனுடைய அங்கங்கள் அனைத்தும் நோயினால் குறைந்துவிட்டன. அவன் அரசனை நோக்கி, "அரசே! குடிகளுக்கு அரசன் தாய் தந்தை போன்றவன். உற்றார் உறவினர் இல்லாதவர்களுக்கு அரசனே உறவினன்; கண் இல்லாதவர்களுக்குக் கண் போன்றவன்; கஷ்டங்களிலிருந்து காப்பாற்றுபவன். இப்போது என்னுடைய தேகம் இக்கொடிய நோயினால் வீணாகிக் கொண்டிருக்கிறது. உடல் க்ஷீணித்திருப்பதால், என்னால் செய்யவேண்டிய கர்மாக்கள் தடைப்பட்டுவிட்டன. ஏனெனில் கர்மாக்களுக்கு முதலில் தேவைப்படுவதும் தேகம்! ஹோமத்திற்கு வேண்டிய சமித்தும், தர்ப்பைப் புல்லும், சுலபத்தில் கிடைக்கக்கூடியவை; புனிதஸ்நானத்திற்குத் தேவையான தண்ணீரும் கிடைத்துவிடும்; உன்னுடைய சக்தியின் மூலம் நீ சுலபத்தில் யோக சக்திகளை அடைந்துவிடலாம்; ஆனால் தர்மசாதனமான தர்மச் சடங்குகளுக்கு முதலில் தேவையானது மேனியன்றோ? ஆகவே, அரசே! நீ தயவு செய்து, தெய்வத்துக்குச் சேவைசெய்ய உதவும்படியாக என்னை நோயிலிருந்து விடுபடச் செய்!" என்று வேண்டினான்.

அவனுடைய வார்த்தைகளைக் கேட்ட விக்கிரமாதித்தன் மிகுந்த வியாகூலம் அடைந்தான். அவன் நோயைத் தீர்ப்பதற்கு

வேண்டிய மருந்து கைவசம் இல்லை. "என்னிடமோ மருந்து கிடையாது. இந்த மனிதனோ நகரத்துக்கு வரக்கூடிய நிலையில் இல்லை. இவன் தேகம் மிகவும் க்ஷீணித்துக் கிடக்கிறது. இப்போது என்ன செய்வது?" என்று யோசித்தான். பிறருக்காகத் தங்கள் உயிரைக் கொடுத்து மாபெரும் தியாகம் செய்துள்ள முன்னோர்கள் இல்லையா? இவனோ அரசனின் உயிரைக் கொடுத்து உதவுமாறு கேட்கவில்லை. அல்லது பணத்தையும் கேட்கவில்லை. நோயைத் தீர்க்கும் மருந்தையே கேட்கிறான்.

அப்போது அக்கினி குண்டத்திலிருந்து வெளிப்பட்ட தேவன் கொடுத்த பழம் இருப்பது விக்கிரமாதித்தனுக்கு நினைவு வந்தது. "ஆஹா! எவ்வளவு அரிய சந்தர்ப்பம். இந்தப் பழத்தைக் கொடுத்து, அதன்மூலம் இவனுடைய நோயையும், கிழத்தனத்தையும் தீர்க்கலாம் அன்றோ!" இவ்விதம் நினைத்த விக்கிரமாதித்தன் உடனே பழத்தை எடுத்து அவனிடம் கொடுத்துச் சாப்பிடச் செய்தான். பழத்தைப் புசித்த மாத்திரத்திலேயே அவனுடைய நோயும் நீங்கியது; உடலும் யௌவனத்தை அடைந்தது. அவன் அரசனை வணங்கிப் பலவாறு வாழ்த்திவிட்டுச் சென்றான்.

## 10-வது கனகாபிஷேகவல்லிப் பதுமை சொல்லிய தங்கமாபுரியின் கதை

மறுநாட் காலையில் போஜராஜன் சிம்மாசனத்தின் படிகளில் ஏறிக் கொலுவிருக்க முயன்றான். அப்போது சிம்மாசனத்தின் பத்தாவது படியில் காவலிருந்த கனகாபிஷேகவல்லிப் பதுமை அவனைத் தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனைப் பற்றிய புதிய கதையொன்றை சொல்லத் தொடங்கியது.

"மந்தரகிரி மலைச்சாரலில் சரயு நதிக்கரையில் உமாபுரி என்ற ஒரு நகரம் இருந்தது. அதை அரசாண்டு வந்த சக்கரவர்த்தி என்பவன் நூறு புத்திரர்களையும், விபுதன் என்னும் மந்திரியையும் அழைத்துக்கொண்டு சதுரங்க சேனைகளோடு காட்டிற்குச் சென்றான். உச்சிமாபர்வதமென்கிற மலையைச் சுற்றியுள்ள வனத்தில் வேட்டை முடிந்து தலைநகருக்குத் திரும்பும் வழியில் அனைவருக்கும் தாகம் ஏற்பட்டது. தண்ணீர் கிடைக்காமல் யாவரும் நாவறட்சியினால் தவித்தார்கள். அரசன் அமைச்சரை அழைத்து அந்த ஆரண்யத்தில் எங்காவது

தண்ணீர் கிடைக்குமாவென்று சுற்றிப் பார்த்து வருமாறு அனுப்பினான்.

மந்திரி சில வீரர்களுடன் அக்கானகம் முழுமையும் சுற்றிப் பார்த்துக் கானல் நீரைத்தவிர வேறு நீர் சுனை இருக்கும் இடமே தென்படாததினால் மனம் சோர்ந்து திரும்பி வரும்போது அந்த ஆரண்யத்தின் ஒரு மூலையில் அமைதியான ஒரு குடிசை தென்பட்டது. அதில் வசிஷ்ட முனிவர் தவம் செய்து கொண்டிருப்பதை மந்திரி கண்டான். அவரருகில் சென்று, "முனிவரே! வனவேட்டைக்கு வந்த நாங்கள் தண்ணீர் அகப்படாமல் சதுரங்க சேனைகளோடு திண்டாடுகிறோம். தாங்கள் தங்களின் தவ மகிமையால் தண்ணீர் வரவழைத்துக் கொடுக்க வேண்டும்" என்று வேண்டினான். வசிஷ்ட முனிவரும் மனமிளகித் தவமகிமையால் கங்கை நதியை வரவழைத்தார். மந்திரி தன் அரசனிடம் சென்று அறிவித்து, அனைவரும் அந்நதியில் இறங்கித் தண்ணீர் தாகத்தைத் தீர்த்துக் கொண்டார்கள்.

அதன் பின்னர் பசி உண்டாயிற்று. உடனே மந்திரியைப் பார்த்து "அமைச்சரே! நீ அந்த முனிவரிடம் சென்று களைத்துப் போயிருக்கும் நமது படைகளுக்கு ஆகாரம் கேட்டு வாங்கிவா" என்றான். அமைச்சனும் அவ்விதமே முனிவரிடம் சென்று கேட்டான். முனிவர் தேவலோகத்திலிருந்து காமதேனு என்னும் பசுவை வரவழைத்து, "அரசனுக்கும், அவனது படைக்கும் அறுசுவை உணவளித்துவா!" என்று கட்டளையிட்டார். காமதேனுவும் அவ்வாறே அரசன் படையிலுள்ள யாவருக்கும் அமுது படைத்தது.

இதைக் கண்ட மன்னன், "ஆகா! இந்தப் பசுவை நம்முடன் அழைத்துச் சென்றால், வானம் பார்த்த பூமியான நம் தேசத்தில் எந்தக் காலத்திலும் பஞ்சமும், பசியும், பட்டினியுமிராது!" என்று எண்ணங் கொண்டவனாய் அதைப் பிடிக்க முயன்றான். தன்னைப் பிடிக்கப் படைவீரர்கள் நெருங்கியதும் பசு ஆர்பரித்து எழுந்து, படைவீரர்களில் சிலரைச் சின்னாபின்னம் செய்துவிட்டு, வசிஷ்ட முனிவரிடம் வந்து "சுவாமி! என்னை பிடித்துச் செல்லுமாறு உங்கள் விருந்தாளிகளுக்குச் சொன்னீர்களா?" என்று கேட்டது.

"இல்லை! அன்னமிட்ட இடத்தில் கன்னமிட நினைக்கிறான் அந்த அரசன்?" என்றார் வசிஷ்ட முனிவர். இதைக் கேட்டதும் காமதேனு ஆக்ரோஷத்தோடு அரச பரிவாரத்தினரை நோக்கி பெருமூச்செறிந்துவிட்டு, ஆகாயமார்க்கமாய்த் தேவலோகம்

செல்லவே, அதன் மூச்சிலிருந்து ஆயுதங்கள் பறந்து வந்து சதுரங்க சேனைகளையும் சிதறடித்தது.

இதைக் கண்ட சக்கரவர்த்தி ராஜன் பெருங்கோபங் கொண்டான். இந்த முனிவனாலல்லவோ இவ்வளவு காரியமும் நடந்தது என்று அவர் மேல் ஆத்திரங்கொண்டு, எஞ்சியிருந்த தனது நூறு குமாரர்களுடனும் சேனையுடனும் சென்று முனிவர்மீது பாணங்களைத் தொடுத்தான். இதைக் கண்ட முனிவர் சிந்தை கலங்காது புன்னகை பூத்தபடி தண்டாயுதத்தை எடுத்து எதிரில் வைத்து விட்டுத் தியானத்தில் ஆழ்ந்தார். அரசனும், சேனு வீரர்களும், ஆயுதங்களைச் சரமாரியாகப் பொழிந்தனர். ஆனால், அந்த ஆயுதங்களெல்லாம் அந்த தண்டாயுதத்தின் முன்பாகவே பஸ்மீகரம் ஆகிவிட்டன. ஆயுதங்களால் ஒன்றும் செய்ய முடியவில்லையென்றதும் அனைவரும் முனிவரைச் சூழ்ந்துகொண்டனர். முனிவர் விழித்து நிமிர்ந்து பார்த்ததும் அரசனைத் தவிர அனைவரும் சாம்பலாயினர். அப்போது அரசன் மிகவும் வருந்தினான். தன் உற்றார் உறவினர், அமைச்சர், சேனைகள் யாவும் அழிந்து தான் தன்னந்தனியனாய் நிற்கும் சூழ்நிலை அவனுக்கு அளவில்லாத ஆத்திரத்தை மட்டுமல்லாது, புதியதொரு ஞானத்தையும் ஊட்டியது. சிந்தித்தான். எல்லாம் துறந்த துறவியின் தவவலிமையின் முன் அரச வலிமை செல்லாது! இந்த உலகத்தில் எதுவும் நிலையற்றது. அரசுரிமை, உற்றார் உறவினர், மனைவி மக்கள் யாவும் நிலையற்றதுதான். தவமும், தவத்தின் வலிமையும்தான் எல்லையற்றது; உண்மையான ஞானத்தையும், சக்தியையும் போதிக்கக்கூடியது. இறைவனை அடையும் வழியும் அதுவே.

அரசனின் கண்கள் திறந்தன. வசிஷ்டரைப் போலத் தானும் தவமிருந்து வல்லமை பெற்று விளங்க எண்ணங் கொண்டான். மனைவியர் மாளிகை முதலானவற்றை மறந்தான். செல்வம், சுகபோகம், மன்னன் என்ற பட்டம் முதலியவற்றைத் துறந்தான். கந்த மூலங்களருந்தி, சடை முடிகளுடன் காவியுடுத்திக் கமண்டலமேந்தி, கானகம் முழுதும் சுற்றித் திரிந்து, இறுதியாக ஜன சஞ்சாரமற்ற நரசிம்மகிரி மலைச் சாரலிலுள்ள ஒரு சுனையின் கரையில் அமர்ந்து அகோரத் தவஞ்செய்தான். அதன் பயனால் முப்பத்து முக்கோடி தேவர்களும் அம்முனிவனிடம் வந்து வேண்டிய வரப்பிரசாதமும், சக்திகளும் அருளி, அவனுக்கு ராஜரிஷி யென்றும், "கௌசிகன்" என்றும், விஸ்வாமித்திரனென்றும் பட்டம் கொடுத்துச் சென்றனர்.



பிறகு விஸ்வாமித்திர முனிவன் சத்திய லோகம் வரை சென்று அங்குள்ள ரிஷிகளுடன் சஞ்சரித்து, சகல வஸ்துக்களையும் சிருஷ்டிக்கவும், அழிக்கவும் வல்ல வரங்கள் பெற்றுத் திரும்பிவந்தான். எந்த நேரமும் கோபாக்கினியுடனே சப்தசாகரங்கள் தீவு தீவாந்திரங்கள் முதலானவற்றின் மீதெல்லாம் ஆகாயமார்க்கமாய்ப் பறந்து சஞ்சரித்து வரலானான்.

அவன் ஒருநாள், வானவீதியில் பறந்து வரும் வழியில் கீழே பூமியில் கோடி சூரிய லாவண்யத்துடனே பள, பளவென்று ஜொலிக்கும் தங்கமயமான ஒரு பட்டணத்தைக் கண்டான். உடனே அந்தப்பட்டணத்தில் இறங்கி, அந் நகரத்தின் எழிலையெல்லாங் கண்டு இன்புற்று, சோலை, சாலைகளைக் கடந்து மடம் ஒன்றில் போய், புலித்தோல் ஆசனம் விரித்துத் தண்டு கமண்டலத்துடன் அமர்ந்துகொண்டு அம்மடத்திலுள்ள சன்னியாசியை அழைத்து, "இந்நகரத்தின் பெயர் என்ன? இராஜன் யார்?" என்று கேட்டான். அச் சன்னியாசியும், இவன் பெரிய யோகீஸ்வரனாயிருப்பானென்று யூகித்து, "சுவாமி! இந் நகரத்தின் பெயர் தங்கமாபுரி பட்டணம்.

இதை ஆட்சி செய்பவனின் பெயர் தங்கேஸ்வரன். அவன் மனைவி சொர்ணகாந்தரூபி என்பவள். இவ்வரசனின் மந்திரியோ கடம்துரந்தான் என்பவன்" என்றான்.

இதைக் கேட்ட விஸ்வாமித்திரர், "பக்தனே! நீ உடனே அரசனிடம் சென்று விஸ்வாமித்திர ரிஷி வெகு தொலைவிலிருந்து வந்திருப்பதாகவும், உடனே அரசனை என்னை வந்து காணும்படியும் அழைத்துவா!" என்று அனுப்பினான்.

அவ்வாறே அச்சன்னியாசியும் அரசனிடம் சென்று, "அரசே! இந்நகரத்தின் மடத்தில் பரமசிவ வேடம் பூண்டு விஸ்வாமித்திர முனிவர் வந்திருக்கிறார். அவர் அதிக ஆங்காரத்துடனே தங்களைச் சீக்கிரத்தில் அழைத்து வரும்படி சொன்னார்" என்று கூற, அரசனும் அவ்வாறே மந்திரி பிரதானிகள், சதுரங்க சேனைகள், பட்டமகிஷி முதலானவர் களுடன் புறப்படுவதற்குச் சகல விருதுகளையுந் தயார் செய்தான்.

இவர்களெல்லாம் தயாராகிப் புறப்படுவதற்குச் சிறிது கால தாமதமாயிற்று. அதனால் விஸ்வாமித்திரன் அதிகக் கோபங் கொண்டு, பற்களை நறநறவெனக் கடித்து, கண்களிரண்டிலும் கனல் பறக்கத் தன் தபோவலிமையால் அந்நகரிலுள்ள சகல ஜீவராசிகளும் சடலமழியாமல் செத்த பிரேதம் போலிருக்கச் சபித்து, அவர்களுடைய உயிர்களை ஒவ்வொன்றாகச் சுண்டியெடுத்துத் தன் கமண்டலத்திற்குள் அடைத்துக் கொள்ளலானான்.

அப்போது அவ்வரசனின் மனைவி சொர்ணகாந்தரூபி கற்பு நெறியும், கூர்மையான அறிவும் உள்ள பத்தினியானதால், ஒவ்வொருவராக ஜீவன் பிரிந்து பிரேதமாவதைக் கண்டு திடுக்கிட்டு, விஸ்வாமித்திர முனிவரே சபித்தவரென்றெண்ணி, அவரிடம் ஓடிவந்து பாதத்தில் விழுந்து வணங்கி, "மகானே! நாங்கள் செய்த அபசாரத்தைப் பொறுக்கவேண்டும். தங்களை வந்து தரிசிப்பதற்கு முன் இவ்வாறு அவசரப்பட்டுச் சாபமிடலாமா?" என்று கேட்டாள்.

"பெண்ணே! இனிமேல் நீ எந்த வரங்கேட்டாலுந் தருகிறேன், ஆனால் ஒன்று; சபித்தது சபித்தது தான்!" என்றான் விஸ்வாமித்திரன்.

சொர்ணகாந்தரூபியும், "சுவாமி! எனக்கொரு வரமருளுங்கள். அடுத்த பிறவியிலும் என் கணவர் இந் நகரத்தின் அரசராகவே பிறந்து இந்த மக்களை ஆளவேண்டும். நான் அவரையே அடுத்த பிறவியிலும் என் கணவராக

அடையவேண்டும். மேலும், என் பத்தாவது வயதில் நான் புஷ்பவதியாக, பதினோராவது வயதிற்குள் என் கணவர் என்னைக் கல்யாணம் செய்து கூட வேண்டும். மேலும், பத்து வயது முதல், பதினாறு வயதிற்குள் என் கணவரைக் காணும் வரையில் அந்நகரத்திலிருக்கும் சுந்தரேஸ்வரரின் ஆலயத்திற்கு மூன்றுகாலங்களில் வந்து பூசை செய்து முடித்து, நான் பிறந்த நகருக்குப் போக வேண்டும். இந்தவிதம் எந்த நாளும் நடைபெறுதிருக்கவேண்டும். நான் நினைத்தபோதெல்லாம் தெய்வலோகப் புரவியைக் கொண்டுவரும்படியாகவும் தாங்கள் திருவுளம் பற்றவேண்டும்" என்று வேண்டி நின்றாள்.

விஸ்வாமித்திரனும் அவ்வாறே வரம் கொடுத்துச் சென்றான். அதன் பின்னர் முனிவனின் சாபப்படி தங்கமாபுரியிலுள்ள சகல ஜீவன்களும் காந்தரூபி உட்பட உயிரற்ற கல்லானார்கள். நகரம் முழுவதும் நிர்மானுஷ்யமாகி விட்டது.

சில காலத்திற்குப் பிறகு நாகலோகப் பெருந்தீவில், சுவேத பர்வத மலைச்சாரலில் தாம்பிரபரணி ஆற்றுக்கருகிலுள்ள பிரதிட்டைபுரி என்னும் இராஜ்யத்தை அரசாளும் சற்குண ராஜனின் பத்தினியான சாயச்சியவதி வயிற்றில் சொர்ணகாந்தரூபி புகுந்து பெண் குழந்தையாகப் பிறந்து, "சஞ்சீவி மடந்தை" என்ற பெயருடன் வளர்ந்து வந்தாள். சற்குண ராஜனின் புரோகிதனான காலகண்டய்யனுக்கும், அனேகாம்பிகைக்கும் தங்கேஸ்வரன் பிறந்து "ஆதிமூலம்" என்ற பெயருடன் வளர்ந்து வந்தான்.

சஞ்சீவி மடந்தை தன் பத்தாவது வயதில் புஷ்பவதியானாள். அப்போது முனிவனின் வரத்தினால் தன்னையும், முன்ஜென்மத்தில் நடந்தவற்றையும் உணர்ந்து தெய்வலோகக் குதிரையை வரவழைத்து அதன் மேலேறிப் பறந்து சென்று நிர்மானுஷ்யமான தங்கமாபுரிப்பட்டணத்தை அடைந்தாள். அங்குள்ள சுந்தரமூர்த்தியின் தேவலோகத்தைத் தரிசித்து, அந்நகரையும், அரண்மனை முதலானவற்றையும் சுற்றிப்பார்த்துப் பெருமூச்சுவிட்டுத் திரும்பி வந்தாள்.

இவ்வாறு அவள் இருந்துவரும் நாளில் சற்குணராஜன் தன் புத்திரிக்குப் பருவம் வந்துவிட்டதால் அவளை ஓர் இளவரசனுக்குத் திருமணம் முடிக்கவேண்டுமென்று தன் பத்தினியிடம் சொல்ல, அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு மாதி சஞ்சீவிமடந்தையிடம் ஓடிவந்து விஷயத்தைச் சொன்னாள்.

சஞ்சீவி மடந்தை ஏதோ சிந்தித்துவிட்டுத் தன் பிதாவிடம் சென்று "தந்தையே! தங்களிஷ்டப்படி நான் திருமணம் செய்து கொள்வதற்குத் தடையில்லை. ஆனால் ஒரு நிபந்தனை. தங்கமாபுரிப்பட்டணம் சென்று அங்குள்ள விவரம் எல்லாவற்றையும் கண்டுவந்து சொல்பவரையே என் கணவராக ஏற்றுக்கொள்ள நிச்சயித்திருக்கிறேன்" என்றாள்.

அரசனும் அதுகேட்டு மகிழ்ந்து, "தங்கமாபுரிப்பட்டணம் சென்று விவரம் கண்டுவந்து சொல்லும் ஆற்றல்படைத்த ஆடவன் எவனாயிருந்தாலும் அவனுக்கே இந்நகரின் இளவரசி திருமணம் செய்து கொடுக்கப்படுவாள்!" என்று அறிவித்து, அதை நான்கு செப்புப் பட்டயங்களில் எழுதி, தன்னுடைய நகர் கோட்டையின் நான்கு புறத்திலுங்கட்டி விளம்பரப்படுத்தி, தன் அரண்மனை ஆசார வாசலின் முன்னால் ஆராய்ச்சி மணி ஒன்று கட்டி, தங்கமாபுரிப்பட்டணத்தின் விவரங்கண்டவர்கள் அம்மணியை அடிக்கலாமென்றும் ஏற்பாடு செய்தான். பின்னர் இவற்றைத் தேச தேசங்களுக்கெல்லாம் தூதர்களின் மூலம் திருமுகங் கொடுத்தனுப்பித் தெரியப்படுத்தினான். அதைக் கேட்ட அரசகுமாரர்களும், இளைஞர்களும், ராஜாதிராஜாக்களும் தங்கமாபுரிப்பட்டணத்தைக் காணத் தேச தேசாந்திரங்கள், தீவு தீவாந்திரங்களெல்லாம் அலைந்து காணமுடியாமல் அலுத்துப் போய்த் திரும்பினர்.

அந்தச் சமயத்தில் புரோகிதனின் புத்திரனான ஆதிமூலவையன் பதினாறு வயதாகியும் அறநூல்களைக் கற்காமலும், கல்வி ஞானமற்றவனாகவும், அசட்டுப் பிள்ளையாகப் பைத்தியக்காரனைப் போலத் திரிந்து கொண்டிருந்தான். ஒருநாள் அவன் வீதியில் நடந்து செல்லும்போது, அரண்மனையின் மேன் மாடத்திலுள்ள நிலா உப்பரிகையில் நிற்கும் இளவரசி சஞ்சீவி மடந்தையைக் கண்டதும் அவளை மணந்து கொள்ள வேண்டுமென்று விரும்பி ஆசாரவாசலில் கட்டியிருந்த மணியை அடித்தான். உடனே காவலர்கள் அவனை இளவரசியின் கன்னிமாடத்திற்கு அழைத்துச்சென்று சஞ்சீவி மடந்தையின் முன் நிறுத்தினார்கள்.

பைத்தியக்காரனைப்போல அவன் வந்திருக்கும் கோலத்தைக் கண்ட அவள், "நீ எதற்கு ஆராய்ச்சி மணியடித்தாய்?" என்று வெறுப்போடு கேட்டாள். "பெண்ணே! உன்னைக் கண்டதும் மோகம் கொண்டேன்! கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்பட்டு வந்தேன்!" என்றான் ஆதிமூலவையன். அதைக் கேட்ட சஞ்சீவி மடந்தை, "தங்கமாபுரிப்பட்டணம் கண்டு வந்தாயா?" என்று கேட்டாள். "கண்டேன், தங்கமாபுரிப்

...ணத்தை! அங்கே நிறையத் தெருக்களும், தெருக்களில் ...டகளுமிருக்கின்றன!'' என்றான். இதைக் கேட்ட ...ஞ்சீவிமடந்தை அவன் ஒரு பொய்யனெனத் தெரிந்துகொண்டு, "...வனை இந்த ஊருக்கப்பால் துரத்தி விடுங்கள்" என்றாள்.

அவர்களும் அவ்வாறே துரத்தி விட்டனர். அதுமுதல் ...காலம் வரை ஆதிமூலவையன் அந்த அசையாமணியை அடிக்கிறதும், காவலர்களால் விரட்டப்படுவதுமாகவே ...ருந்தான். இந்தத் தொந்தரவு அதிகமாகவே, ஆதிமூலத்தைக் ...வலர்கள் அரசனிடம் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அரசன் ... இளவரசியிடம் அனுப்பிவிட்டான். ஆதிமூலத்திற்கு ...ஷம் வரவேண்டுமென்பதற்காக சஞ்சீவிமடந்தை அவனை, ...வலர்களை விட்டு நையப்புடைத்துக் காலில் பிரிசுற்றிக் ...ாட்டைக்கு வெளியே இழுத்துப்போட உத்தரவிட்டாள். ...ாட்டைக்கு வெளியே தள்ளப்பட்ட ஆதிமூலத்திற்கு ...மையிலேயே ரோஷம் உதித்தது. "கேவலம், ஒரு பெண் ...மை இவ்வாறு செய்துவிட்டாளே, என்ன ஆனாலும் சரி, அவளைக் கல்யாணம் செய்தே தீர்வது! அதற்கு முதலாவதாகத் ...ங்கமாபுரிப்பட்டணத்தைக் காணவேண்டும்!'' என்று ... சங்கல்பங்கொண்டு ஆறுமாத காலம் எங்கெங்கோ வீணாக அலைந்து திரிந்துவிட்டுத் திரும்பிவந்தான்.

இதையறிந்த ஊராரிற் சிலர், "அட பைத்தியக்காரா! ...ங்கமாபுரிப்பட்டணத்தைக் காணமுடியாமல் ராஜாதி ...ஜாக்களெல்லாம் தோல்வியடைந்து பின்வாங்கிவிட்டனர். நீ ...தாரணம்! இதில் வெற்றியடைய முடியுமா? இருந்தாலும் ...ன்னுமொரு உபாயமிருக்கிறது. உஜ்ஜயினிப்பட்டணத்தை அரசாளும் விக்கிரமாதித்த பூபதி ஒருவரால் தான் ...ங்கமாபுரியின் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க முடியும். அவர் ...டாறு மாதத்தில் சுற்றாத இடமில்லை; காணாத ஊரில்லை. நீ அவரிடம் சென்று உன் குறையைச் சொன்னால், அவர் ஒரு ...வேளை உனக்கு உதவி செய்து இளவரசியை உனக்குத் திருமணம் முடித்து வைக்கலாம். இல்லையானால் நீ இளவரசியை அடைவது ...வெறுங்கனவு!" என்றார்கள்.

ஆதிமூலனும் அவ்வாறே புறப்பட்டு உஜ்ஜயினிப் பட்டணம் ...ன்று விக்கிரமாதித்தனைக் கண்டு தன் விருப்பத்தைச் சொன்னான். "மகாப்பிரபு! தாங்கள் ஒருவரால்தான் என் ...ண்ணத்தை ஈடேற்றி வைக்க இயலும். சஞ்சீவிமடந்தையை ...க்கு மணம்முடித்து வைக்காவிடில் நான் தங்களின் ...தங்களிலேயே உயிரை மாய்த்துக் கொள்ளுவேன். அந்தப் ...ம்மஹத்தி தோஷம் உம்மைச் சேரும்!" என்றான் ஆதிமூலன்.

விக்கிரமாதித்தன் மனமிளகி, "ஆதிமூலா! வருந்தாதே! நாடாறு மாதம் முடிந்து காடாறு மாதம் புறப்படப்போகிறேன். நல்ல சமயத்தில்தான் நீயும் வந்திருக்கிறாய். உன் எண்ணத்தை ஈடேற்றி வைக்கிறேன்!" என்று வாக்குத்தத்தஞ் செய்துவிட்டுப் பட்டியிடம் ராஜ்யபாரத்தை ஒப்படைத்துவிட்டு, ஆதிமூலனுடன் வேதாளத்தில் ஏறிக்கொண்டு காடாறுமாதம் புறப்பட்டான். இருவரும் பிரதிட்டைபுரி வந்து, ஆதிமூலனின் வீட்டிலேயே நான்கு நாட்கள் தங்கியிருந்தார்கள். சஞ்சீவி மடந்தையைப் பற்றி விக்கிரமாதித்தன் விசாரித்து விட்டு, "ஆதிமூலா! நான் தங்கமாபுரிப்பட்டணங்காணப் புறப்படுகிறேன். நான் திரும்பிவரும் வரையில் நீ வீட்டைவிட்டே வெளியே வரக்கூடாது. நீதான் தங்கமாபுரிப்பட்டணம் கண்டு வரப் போயிருப்பதாகவே ஊரார் கருதவேண்டும்" என்று கூறிவிட்டு வேதாளத்தின் மீதேறிக் கொண்டு புறப்பட்டான்.

அப்பொழுது விக்கிரமாதித்தன், "என் அன்புக்குரிய வேதாளமே! தங்கமாபுரிப்பட்டணத்தின் இருப்பிடம் உனக்குத் தெரியுமா!" என்று கேட்டான். அதற்கு வேதாளம், "அரசே! நான் போகாத திசையில்லை. ஆனாலும் இப்பெயரைக் கேட்டதேயில்லை!" என்று சொன்னது.

விக்கிரமாதித்தன் மனவருத்தமுற்றபடி வேதாளத்தின் தோளிலேறியபடி சென்று கொண்டிருக்கையில் ஒரு கானகம் மனித சஞ்சாரமில்லாமலிருப்பதைக் கண்டான்.

நிர்மானுஷ்யமான அக்கானகத்தை விக்கிரமாதித்தன் சுற்றிப் பார்க்கையில், அதன் நடுவே ஒரு வெட்ட மைதான வெளியும், தாமரைப் பொய்கையும் தென்பட்டன. அந்த வெட்டவெளியின் நடுவே ஒரு அக்கினிகுண்டத்தில் ஒரு இரும்புக் கொப்பரையில் நெய் தளதளவென்று கொதித்துக் கொண்டிருந்தது.

"இதென்ன விநோதம்?" என்று விக்கிரமாதித்தன் கேட்டான். வேதாளம் தன் கூர்மையான கண்களால் ஊடுருவி நோக்கி, "பூமானே! இந்தக் கானகத்தில் ஏழு ரிஷிகள் இருக்கிறார்கள். அவர்கள் இவ்விடம் வந்து தினம் ஒருவர் முறைப்படி இந்தக் கொப்பரை நெய்யை அக்கினிமூட்டி அதைக் கொதிக்கும்படி செய்து அதற்குச் சமீபமாய் இருக்கிற தாமரைப் பொய்கையில் குளித்துவிட்டு அக்கினிக் குண்டத்தருகில் வந்து மூன்றுதரஞ் சுற்றி அந்நெய்க் கொப்பரையில் பாய்வார். மற்ற ஆறு முனிவர்களும் அந்தத் தாமரைப் பொய்கையில் குளித்துவிட்டு, ஏழு தாமரை இலைகளைப் பறித்துக் கொண்டு அக்கினிக்

குண்டத்தருகில் வந்து, அக்குண்டத்தைச் சுற்றி ஏழு இலைகளையும் விரித்து, முன் நெய்யில் விழுந்த ரிஷிபேரைச் சொல்லி அழைப்பார்கள். உடனே அந்த ரிஷி உயிர்பெற்றெழுந்து புதுத்தேகம் பெற்றுவந்து ஏழு இலையிலும் ஏழு ரிஷிகள் உட்கார்ந்து கொண்டு, கொப்பரையில் ரிஷியின் பழைய தேகம் வெந்ததும் சதை முதலான நெய்கள் யாவையும் இலைகளில் வடித்து எழுவர்களும் அருந்தின பிறகு, தங்களிருப்பிடத்திற்குக் கடும் தவம் புரியச் செல்வார்கள். இவ்வாறாக ஏழு ரிஷிகளும் தினமொருவர் நெய்யில் விழுவதும், எழுப்புவதும் தங்கள் தசையைத் தாங்களே தின்று மற்ற வேளைகளில் தவத்திலி ருக்கிறதுமாக வெகு காலம் நடந்து வருகிறது. இப்போது இன்றைக்கு முறையாகிய ரிஷி அப்பொய்கையில் குளித்து விட்டு வருகிறார்" என்று வேதாளம் சொல்லியது. விக்கிரமாதித்தனுக்கு உடனே ஓர் யோசனை உதித்தது. நாம் தங்கமாபுரிப்பட்டணம் காண நமது தசையை இந்த ரிஷிகளுக்குக் கொடுத்து, அவர்களால் தெரிந்துகொண்டு விடவேண்டுமென்று வேதாளத்திடம் சொல்லிவிட்டு ஓமகுண்டத்தருகே சென்றான். ரிஷியும் குளித்துவிட்டு ஓமகுண்டத்தருகே வந்து மூன்று முறை சுற்றி நெய்க் கொப்பரையில் விழுஞ் சமயத்தில், அவர் கரத்தைப்பற்றி அப்புறத்திலிழுத்துவிட்டு அந்நெய்க் கொப்பரையில் விக்கிரமாதித்தனே பாய்ந்தான்.

அரசன் விழுந்ததைக் கண்டு அதிசயித்த முனிவர் மற்ற முனிவர்களிடம் அதைச் சொல்ல வேண்டுமென்றெண்ணிக் கொண்டிருந்தார். அந்தச்சமயம் மற்றுமுள்ள ஆறு முனிவர்களும் குளித்துவிட்டு ஏழு தாமரை இலைகளைப் பறித்துக் கொண்டு அந்த நெய்க் கொப்பரையருகில் வரும்போது, அங்கே முன் வந்த முனிவர் நெய்க் கொப்பரையில் குதிக்காமல் நிற்பதைக் கண்டு ஆத்திரமுற்றுப் பிடி சாபமென்றார்கள். அப்போது அம்முனிவர் பதறி ஆறு தோழர்களையும் நோக்கி, "எனக்குச் சாபமிட வேண்டியதில்லை. நான் இக்குண்டத்தைச் சுற்றிக் கொப்பரையில் விழப்போகும் சமயம், முப்பத்திரண்டு இலக்ஷணமும் பொருந்திய ஒரு மன்னன் என் கரத்தைப் பின்னுக்கிழுத்துவிட்டு அவன் குதித்துவிட்டான். அதைத் தங்களுக்கெல்லாம் தெரிவிக்கவே நான் நின்றேன்!" என்றார்.

உடனே மகரிஷிகளெல்லாம் கோபம் தெளிந்து, விழுந்தவன் விக்கிரமாதித்தனென யூகித்தறிந்து, அந்த முதல் முனிவனை அழைத்து குளித்துவிட்டு மற்றுமொரு தாமரை இலை கொண்டு வரும்படி செய்தார்கள்.

அதன் பின்னர் ஏழு முனிவர்களும். எட்டு இலைகளையும் அக்கினிக் குண்டத்தைச் சுற்றிப் போட்டுவிட்டு, "விக்கிரமாதித்தனே! நீயும் எங்களுடன் விருந்துண்ண புது உடல் பெற்று வருக! வருக!" என அழைத்தார்கள். உடனே விக்கிரமாதித்தன் உயிர்பெற்று வந்து, விருந்து அருந்தியதும், "மகா முனிவர்களே! நான் தங்கமாபுரிப் பட்டணம் காண வந்தேன். அது எத்திசையிலிருக்கிறதென எனக்குத் தெரியவில்லை. நெய்க் கொப்பரையில் விழுந்து என் தசையைத் தங்களுக்குத் தந்து, தங்கமாபுரிப் பட்டணமிருக்குமிடத்தை உங்களின் மூலம் அறியலாமென்று தான் இக்காரியம் செய்தேன்!" என்றான்.

மாமுனிவர்கள் சிறிது யோசித்துவிட்டு, "மாமன்னா! தங்கமாபுரிப்பட்டணமென்ற பெயரை நீ சொல்லத்தான் நாங்கள் கேட்கிறோம். அது பற்றி உன்னைப் போலவே எங்களுக்கும் ஒன்றும் தெரியாது. ஆனால் இங்கிருந்து முந்நூறு யோசனை தூரத்திற்கு அப்பால் ஒரு சித்தர் தவம் புரிகிறார். அவரிடம் சென்றால் இதற்கு வழி சொல்லுவார்!" என்றார்கள்.

விக்கிரமாதித்தன் வேதாளத்தின் மீதேறி அவ்வாறே சித்தரிடம் சென்று வணங்கி, தங்கமாபுரிப் பட்டணமென்று காதால் கேள்விப் பட்டிருக்கிறேனேயல்லாது, கண்ணால் கண்டதில்லை. ஆனால், நான் சொல்லும் உபாயப்படி நடந்தால் அத்திவைக் காணலாம். இங்கிருந்து வடக்கே நூறு யோசனை தூரத்தில் "விஞ்சைத் தீவு" என்றொரு தீவிருக்கிறது. அத்தீவில் ஒரு விருக்ஷம் சூரிய மண்டலத்தை அளாவியிருக்கும். அதில் சில அண்டரண்டப் பக்ஷிகள், சொர்ணமயப் பக்ஷிகள், ஆனையுராஞ்சிப் பக்ஷிகள் குடியிருக்கும். அவைகள் நான்கு திசைகளிலும் நாள் ஒன்றுக்கு ஐநூறு, ஆயிரம் யோசனை தூரம் வரை பறந்து சென்று வரும். ஆகையால் நீ அந்த ஆலவிருக்ஷத்திற்குச் சென்று, உன்னுடைய மனித உருவத்தை மாற்றிக்கொண்டு நான்கைந்து நாட்கள் இருந்தால், அப்பொழுது அந்தப் பக்ஷிகள் உதயகிரி முதல், அஸ்தகிரிவரையில் இருக்கிற பட்டணத்தைப் பற்றியெல்லாம் பக்ஷிகளின் பாஷையில் பலவாறாகப் பேசிக் கொள்ளும். அதிலிருந்து உனக்கு வழியும் பிறக்கும்!" என்றார் சித்தர்.

விக்கிரமாதித்தன் அவ்வாறே, வேதாளத்துடன் விஞ்சைத் தீவையடைந்து, அந்தத் திட்டிலிருக்கும் ஆலவிருக்ஷத்தில் போய் இறங்கினான். அப்போது கதிரவனும் மேற்குத் திசையில் மேகங்களினூடே மறைந்தான்.

கொஞ்சங் கொஞ்சமாக இருள் படர்ந்து கொண்டு வந்தது. பக்ஷிகள் வருவதற்குள்ளாக விக்கிரமாதித்தன் ஒரு வண்டைப் பிடித்து அதன் உயிரைப் போக்கிவிட்டு, அதனுடலில் தன் ஜீவனைப் புகுத்திக் கொண்டு தன்னுடைய மனித உடலை வேதாளத்திடம் கொடுத்து மறைவாக வைத்திருக்கும்படி கூறிவிட்டு, மரத்தில் இலைகளின் இடையே வண்டு ரூபமாய் மறைவாயிருந்தான். எல்லாப் பக்ஷிகளும் காட்டில் வந்து சேர்ந்தன.

அப்போது ஒரு ஜோடி சொர்ண நிறப் பக்ஷிகள், மற்றொரு ஜோடியான அண்டரண்டப் பக்ஷிகளை நோக்கி, "அண்டரண்டப் பக்ஷிகளே! நீங்கள் இன்று எந்தத் திசையில் சென்று இரையெடுத்து வந்தீர்கள்?" என்று கேட்டன.

"நாங்கள் இன்று தினம் சப்த சமுத்திரத்தையுந் தாண்டி முந்நூறு யோசனை தூரத்திற்கப்பாலுள்ள தங்கமாபுரிப் பட்டணம் சென்று இரையெடுத்து வந்தோம்!" என்றன.

"தங்கமாபுரிப் பட்டணத்திலுள்ள அதிசயமென்ன?" என்றன சொர்ண நிறப் பக்ஷிகள்.

"தங்கமாபுரிப் பட்டணத்தில் ஏராளமான விநோதங்க ளெல்லாமிருக்கின்றன. ஆனால் ஜீவசஞ்சாரம் ஒன்றுமில்லை!" என்று அண்டரண்டப் பக்ஷிகள் கூறின. உடனே சொர்ண நிறப் பக்ஷிகள், மறுநாட்காலை தாங்களும் தங்கமாபுரிப் பட்டணம் காண வருவதாகவும், தங்களையும் உடன் அழைத்துச் செல்லும்படியும் கோரின. அண்டரண்டப் பக்ஷிகளும் அதற்குச் சம்மதித்தன. இதைக் கேட்டபடி வண்டு வடிவமாயிருந்த விக்கிரமாதித்தன் எண்ணிய காரியம் இனி எளிதில் ஈடேறுமென மகிழ்ந்து, அண்டரண்டப் பக்ஷிகளின் சிறகில் சென்று ஒட்டிக் கொண்டான்.

இருள் சென்று பொழுது புலர்ந்தது! அண்டரண்டப் பக்ஷிகளும், சொர்ண நிறப் பக்ஷிகளும் சப்த சமுத்திரத்தையும் கடந்து தங்கமாபுரிப் பட்டணம் நோக்கிப் பறந்தன. பக்ஷியில் ஒட்டிக் கொண்டிருந்த விக்கிரமாதித்த வண்டும் உடன் செல்ல, வேதாளமும் விக்கிரமாதித்தனின் உடலுடன் சென்றது.

முந்நூறு யோசனை தூரமுங் கடந்து தங்கமாபுரிப் பட்டணத்தின் எல்லையை அடைந்ததும் பக்ஷிகள், மரங்களிலுள்ள கனிகளைப் புசிக்கத் தொடங்கின. வேதாளமும், விக்கிரமாதித்தனின் உடல் கூட்டை அருகில் கொண்டு வர, வண்டின் உடலை விட்டு விக்கிரமாதித்தன் தன் ஜீவனைத் தன் உடலில் புகுத்திக் கொண்டு ஊருக்குள் சென்றான்.

அங்குள்ள வேடிக்கை விநோதங்களையும் மாடமாளிகை, கூட கோபுரங்களையும், இராஜ வீதியையும், பட்டணம் முழுவதும் வீசும் ஜோதியையுங் கண்டு பிரமித்துப் போனான். இதற்குத் தேவலோகமும் ஈடிணையில்லையென்றெண்ணினான். ஆனால் அங்குள்ள ஜீவராசிகளின் உடல்களெல்லாம் கற்சிலைகளாக அசைவற்று நிற்பதைக் கண்டு வருந்தினான். அரண்மனை யெல்லாங் கண்டு வியப்புற்று, கோவிலெல்லாம் பார்த்துக் குதூகலமுற்று வரும் வழியில், நகரத்தின் மத்தியில் சொர்ணமயமான கோபுரம் ஒன்று ஆகாயத்தை அளாவி நிற்பதைக் கண்டு உள்ளே சென்றான். அங்கு மாணிக்கங்களால் தீபமேற்றி எக்காலத்திலும் அணையாமல் ஒளிபரப்பிக் கொண்டிருந்தன. அது சுந்தரேஸ்வரன் கோவிலென உணர்ந்த விக்கிரமாதித்தன், சுவாமி தரிசனம் செய்து கொண்டு குளக்கரையில் வந்தமர்ந்து, வேதாளத்தின் மூலம் உணவு வரவழைத்து விருந்தருந்திச் சிந்தனையுடன் இருந்தான். பொழுதும் இருட்டியது. அப்பொழுது ஆகாயத்திலே அப்சரஸ் போன்ற மங்கை ஒருத்தி வெண் குதிரை மீதேறிப் பறந்து வருவதைக் கண்டான்.

சஞ்சீவிமடந்தை வழக்கம்போல சுந்தரேஸ்வரரின் தேவாலயத்திற்கு வந்து, புரவியைக் கொடி ஸ்தம்பத்தில் கட்டிவிட்டுப் பொய்கையில் நீராடி, மலரெடுத்துக்கொண்டு, சுந்தரமூர்த்தியை வணங்கிவிட்டு, நகர்வலம் வந்து அரண்மனை முதலியவற்றை சுற்றிப்பார்த்து நீண்டதொரு பெருமூச்சுவிட்டு மறுபடியும் புரவியிலேறி ஆகாசத்தில் பறந்து போய்விட்டாள்.

அவள் போனபின்பு, ''இவள் தேவலோகத்துக் கன்னிகையோ? அல்லது பூவுலகத்துப் பொற்கொடியோ? இவளை அணுகி இந்தப் பட்டணத்தின் வரலாற்றையும், இங்கு யாவரும் ஜீவனற்றிருக்கும் மர்மத்தையும் கேட்டு அறியாமல் போனோமே!" என்று எண்ணினான் விக்கிரமாதித்தன்.

பிறகு யாவரும் நிர்ஜீவியாயிருப்பதற்குக் காரணம், முனி சாபமாகத்தான் இருக்கவேண்டுமென உணர்ந்துகொண்டு, வேதாளத்தின் மீதேறி வந்த வழியே பயணப்பட்டு பிரதிட்டைபுரத்தை அடைந்தான். புரோகித குமாரனை ஆதிமூலனைச் சந்தித்து, "ஆதிமூலா! நாளைய தினம் நீ சென்று அரண்மனை ஆசாரவாசலின் ஆராய்ச்சி மணியை அடி. உன்னை இளவரசி சஞ்சீவிமடந்தையிடம் அழைத்துச் செல்வார்கள். அவளிடம் நீ, தங்கமாபுரிப்பட்டணம் கண்டுவந்தேனென்று கூறு!" என்று சொல்லி, அன்றிரவு முழுதும், ஆதிமூலனுக்குத்

தங்கமாபுரிப்பட்டணத்தில் தான் கண்ட அதிசயங்களையெல்லாம் கூறித் தயார் செய்தான் விக்கிரமாதித்தன்.

மறுநாட் காலை ஆதிமூலன் உள்ளப் பூரிப்போடு, ஸ்நானவுண்டு அழகான உடையணிந்து, வாசனைத் திரவியங்கள் பூசி, ஆசாரவாசலில் சென்று ஆராய்ச்சி மணியை அடித்தான்.

காவலர்கள், இந்தப் பைத்தியக்காரன் வெகு நாட்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் வந்திருக்கிறானெனப் பிடித்துக் கட்டித் தூக்கியெறிய முயலும் சமயம், ஊராரில் சிலர், "ஐயா! இவன் வெகு நாட்களாக ஊரிலில்லை. ஒருவேளை தங்கமாபுரிப் பட்டணங் காணச் சென்றாலும் சென்றிருக்கலாம்!" என்றனர். இதைக் கேட்ட உடனே காவலர்கள் ஆதிமூலனைக் கட்டவிழ்த்து விட்டு, மரியாதையோடு சஞ்சீவி மடந்தையிடம் அழைத்துச் சென்றனர். ஆதிமூலத்தைக் கண்ட சஞ்சீவி மடந்தை பரிகாசமாகச் சிரித்து, "அந்தணனே! முன்புபோலத்தான் இப்பொழுதும் தங்கமாபுரிப்பட்டணம் கண்டு வந்தாயா? அங்கு கடையும் கடைத்தெருவும் இருக்கிறதல்லவா?" என்று கேட்டாள். "பெண்ணே! பேதையென்று எண்ணாதே என்னை! நான் ஓர் ஆண்டு காலமாக கடல் தீவு தீவாந்திரங்கள் யாவும் கடந்து சென்று, நகரங்களையெல்லாம் சுற்றி, இறுதியாகத் தங்கமாபுரிப் பட்டணத்தைக் கண்டுவிட்டுத்தான் வந்திருக்கிறேன்!" என்றான், ரோஷத்தோடு ஆதிமூலன்.

உடனே அவள் அவனுக்கு இருக்கை கொடுத்து, அமரும் படிகூறி மகிழ்வுடனே, "அப்படியானால் அடையாளங்கூறு!" என்றாள்.

"கேள் பெண்ணே! தங்கமாபுரிப் பட்டணமெல்லாம் தங்கப் பிரகாசமன்றி வேறில்லை! அந்நகரத்தில் கூடகோபுரம், மாடமாளிகை, உப்பரிகை, சபாமண்டபம், விசித்திர மண்டப மாளிகை இவைகளிலெல்லாம் ஒன்பது வகை நவரத்தினங்கள் பதித்திருக்கின்றன. நகரில் தேவாலயம், விஷ்ணு ஆலயம், பிரமாலயம் முதலிய ஆலயங்களும், நகரின் நடுமையத்தில் மகா உன்னதம் வாய்ந்த சுந்தரேஸ்வரர் ஆலயமும் இருக்கின்றன. இரவிற் பத்து நாழிகைக்கு மேல் மோகன அழகு படைத்த பெண்ணொருத்தி தெய்வலோகப் புரவியேறி வந்து சுந்தரேஸ்வரர் ஆலயத்தைத் தரிசித்துவிட்டு, பூஜை முடிந்தபின் அரண்மனை உப்பரிகையில் அமர்ந்து உருத்திர வீணை, சுரமண்டலி, தம்புரு முதலிய வாத்தியங்களை வாசித்து நாதங்கள் எழுப்பிக் கீதங்கள் பாடிவிட்டு முன்வந்தவிதமாகச் சென்று விடுகிறாள். இன்னும் கேள் பெண்ணே! அங்குள்ள மரமெல்லாந்

தங்கநிறம். இலையெல்லாம் பச்சைநிறம். பழமெல்லா மாணிக்கநிறம். மலரெல்லாம் வெள்ளை நிறம். காயெல்லா நீலோற்பல நிறம். இந்த விநோதங்களையும், இதிலிருந்துவரு பிரகாசத்தையுங் காணக் கண்ணொளிமங்கிப் போகிறது இதெல்லாமிருக்கத் தங்கமாபுரிப்பட்டணத்திற்குப் பெருங்குறை யொன்றுமிருக்கிறது. அதுயாதெனில், அங்குள் ஜீவராசிகளெல்லாம் ஜீவனற்றுச் சவமாகக் கிடப்பதுதான அடையாளம் சரிதானா இளவரசி!" என்று ஆணவத்தோ கேட்டான் ஆதிமூலன்.

இதெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சஞ்சீவிமடந்தை உள்ளம் மகிழ, உணர்ச்சி பெருக பொற்செம்பில் வைத்திருக்கு முத்து மாலையை எடுத்து ஆதிமூலனின் கழுத்தில் போட்டு "பிரபோ! தாங்கள் கூறியதெல்லாம் உண்மைதான். தாங்க தான் பூர்வஜென்மத்தில் என் பிராணநாதரான தங்கமாபு மன்னர். தங்கமாபுரியில் சுந்தரேஸ்வரரின் ஆலயத்திற்கு வரு மோகன அழகுபடைத்த மங்கை அடியாள் தான். தாங்க இன்றிலிருந்து ஆறுமாதத்திற்குள் தங்கமாபுரிப்பட்டணம் வந்து சுந்தரேஸ்வரர் ஆலயத்தில் என்னைச் சந்தியுங்கள். பிறகு அந்நகரிலுள்ள ஜீவராசிகளையெல்லாம் உயிர் பெற்றெழு செய்து, என்னை விவாகஞ்செய்து கொள்ளுங்கள்!" என்று கூறிவிட்டு தன் தாய் தந்தையரை வரவழைத்து, பூர்வ ஜென்மத்தில் விஸ்வாமித்திர முனிவரின் சாபத்தால் நிகழ்ந்ததனைத்தையும் கூறினாள். "தந்தையே! என் வேண்டு கோளின்படி முனிவர் தந்த சாபவிமோசனம் பெறும் நாள் நெருங்கி விட்டது. பிராமணோத்தமரைத் தங்கமாபுரிப்பட்டண செல்லும்படி சொல்லியிருக்கிறேன். நானும் அங்கு தினமு பூஜை செய்யப் போவேன். அவர் என்னை அங்கு எப்பொழுது காணுகின்றாரோ, அப்பொழுதிலிருந்து நான் இங்கு வரமாட்டேன்" என்று சொன்னாள், சஞ்சீவிமடந்தை.

பிறகு ஆதிமூலன் அவர்களிடமெல்லாம் விடைபெற்றுக் கொண்டு விக்கிரமாதித்தனிடம் வந்து, அரண்மனையில் நடந்த விபரங்களையெல்லாம் கூறி, "மன்னர் மன்னா! அந்த இளவரசி என்னைத் தங்கமாபுரிப்பட்டணம் வந்து அவளைக் கண்டு அந்நகரிலுள்ள ஜீவன்களையெல்லாம் உயிரெழுப்பி, மன்னனாகி தன்னை மணந்து கொள்ளும்படியும் சொன்னாள்! இதற்கும் தாங்கள் தான் துணை செய்யவேண்டும். எனக்கு முடி சூட்டிவைத்து, அவளைத் திருமணமும் செய்துவையுங்கள். முதலில் என்னைத் தங்கமாபுரிப் பட்டணத்திற்கு அழைத்துச் செல்லுங்கள்!" என்றான் ஆதிமூலன்.

இதைக்கேட்ட விக்கிரமாதித்தனும், சம்மதித்து, ஆதிமூலனின் தாய் தந்தையரிடம் விடைபெற்றுக் கொண்டு, ஆதிமூலனையும் அழைத்துக் கொண்டு நகரைக் கடந்த பின் வேதாளத்தின் மீதேறிக் காடு, மலை, வனங்களைக் கடந்து செல்லுகையில் எதிரே இமயபர்வதம் குறுக்கிட்டது. அங்கு விஸ்வாமித்ர மகரிஷி தபம் செய்து கொண்டிருப்பதைக் கண்ட விக்கிரமாதித்தன், அவரை வணங்கி நிற்க, அவரும் விக்கிரமாதித்தனை உணர்ந்து கொண்டு, "விக்கிரமாதித்தா! ஏது இவ்வளவு தூரம்?" என்று கேட்டார். "சுவாமி! தங்கமாபுரிப்பட்டணம் மங்காது முன்போல ஒளிவிட வேண்டும். யாவருக்கும் உயிர் வர வேண்டும். ஆதிமூலனும், சஞ்சீவி மடந்தையும் அரசன் அரசியாக வேண்டும். அதற்குத் தாங்கள் அருள் புரிய வேண்டும்!" என்றான் விக்கிரமாதித்தன்.

"அவ்வண்ணமே வரந்தந்தோம், நீங்கள் அங்கு சென்றதுமே, சஞ்சீவிமடந்தை வருவாள். சகல ஜீவனும் உயிர் பெற்றெழும்!" ஆதிமூலனும், விக்கிரமாதித்தனும் அவரை வணங்கி விட்டு வேதாளத்தில் ஏறித் தங்கமாபுரிப் பட்டணத்தை யடைந்தார்கள். அங்குள்ள அதிசயம் யாவும் கண்டு களித்தார்கள். பிறகு வேதாளத்தின் மூலம் உணவு வரவழைத்து உட்கொண்டு உப்பரிகையில் காத்திருந்தார்கள்.

இருளும் வந்தது. ஆதிமூலன் என்னும் பிராமணன் பூர்வஜென்மத்திலிருந்த தங்கேஸ்வர மகாராஜாவாக மாறி, முன்பிருந்த வலிவு, வனப்பு, அறிவு, அழகு, ஆகிய பொலிவுடன் காட்சியளித்தான். அதைக் கண்டு மகிழ்ந்த விக்கிரமாதித்தன் அவனை அழைத்துக் கொண்டு சுந்தரேஸ்வரரின் ஆலயத்திற்குச் சென்று சுவாமியை வணங்கி நின்றான். இரவு பத்து நாழிகையும் ஆயிற்று. சஞ்சீவி மடந்தையும் தேவலோகப் புரவியிலேறி வந்து இறங்கினாள். தன் கணவன் தங்கேஸ்வரனைக் கண்டு மகிழ்ந்து காலில் விழுந்து வணங்கினாள். தேவலோகப் புரவி தேவலோகம் சென்றது. சஞ்சீவி மடந்தைக்கும், பழைய சொர்ண காந்தரூபியின் உருவம் வந்தது. பிறகு மூவரும் சுந்தரேஸ்வர சுவாமியை வணங்கிவிட்டு கொலு மண்டபம் சென்று அமர்ந்தனர். மந்திரிப் பிரதானிகள் யாவரும் உயிர்பெற்றெழுந்து வந்து தங்களின் மன்னனை வணங்கி நின்றனர்.

பிறகு, விக்கிரமாதித்தன் தங்கேஸ்வர மகாராஜனுக்கு முடி சூட்டி அவனுக்கும் சொர்ண காந்தரூபிக்கும் மங்கலதாரணம் செய்ய, அவர்கள் முன்னிலும் பன்மடங்கு மகிழ்ந்திருந்தனர்.

விக்கிரமாதித்தன் அங்கு எட்டு நாட்கள் விருந்தாளியாகத் தங்கி, அரசன் அரசியாரிடமும் விடைபெற்றுக் கொண்டு காடாறு மாதம் முடிந்த காரணத்தால் வேதாளத்தின் மீதேறி உஜ்ஜயினி மாநகர் வந்து, குல தெய்வத்தை வணங்கிவிட்டுக் கொலு மண்டபம் வந்து முப்பத்திரண்டு படிகளுள்ள இச்சிங்காசனத்தில் கொலுவிருந்து தேச விசாரணை செய்து காடாறு மாதத்தில் நடந்த களிப்பூட்டும் செய்திகளை காதெல்லாம் குளிரக் கதை கதையாய்ச் சொல்லி, அந்தப்புரம் சென்று அக மகிழ்ந்தான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த கனகாபிஷேகவல்லிப் பதுமை, "கேட்டீரா போஜராஜனே! எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற வீரதீரம் உம்மிடமிருந்தால் இச்சிங்காசனமேறிக் கொலுவிரும். இல்லையேல் நழுவிவிடும்!" என்றது. அப்போது சூரியனும் அஸ்தமித்தான். போஜ மகாராஜனும் மௌனமாகச் சிங்காதனத்தின் பத்தாம்படியை விட்டிறங்கி அந்தப்புரத்தில் உணவருந்தி உறங்கச் சென்றான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் இருபத்து மூன்றாவது படிக்குக் காவலான காமோனமாதினி என்னும் பதுமை பின்வரும் கதையைக் கூறியுள்ளது.)



## விக்கிரமன் கண்ட கனவின் கதை

ஒரு சமயம் தூர தேசங்களில் தன் பிரயாணத்தை முடித்துக் கொண்டு விக்கிரமாதித்தன் உஜ்ஜயினி திரும்பினான். அவனைக் கண்டதும் நகரத்திலுள்ள அனைவரும் அளவில்லா ஆனந்தம் கொண்டனர். அரசன் நடுப்பகலில், சந்தனம், அத்தர் முதலிய வாசனைத் திரவியங்களினால் உடல் ஆயாசம் தீர நீராடினான். பிறகு அழகிய விலையுயர்ந்த பட்டாடைகளை அணிந்து கொண்டு பகவான் நாராயணனைக் குறித்துப் பூசையில் அமர்ந்தான்.

"தேவாதி தேவா! அம்மையும் அப்பனும் நீயே! நீ ஒருவனே, நண்பனும், உறவினனும் ஆவாய். எனக்குச் சர்வமும் நீதான்! வாமன ரூபனே! எல்லையற்ற வல்லமை உடைய நாராயணனே! சக்கரம், வில், கதை, கத்தி முதலியவற்றை ஆயுதங்களாகத் தரித்திருப்பவனே! தேவர்களுக்கும் மேலான தேவனே. உன்னை வணங்குகிறேன்!" என்று பிரார்த்தித்தான். பூஜையின் முடிவில்

அறிஞர்களுக்கும், ஏழைகளுக்கும் கபிலைப் பசு, நிலம், தானியம் ஆகிய நித்திய தானங்களை அளித்துக் கௌரவித்தான். பிறகு குடன், குருடு, நொண்டி, யாருமற்ற அனாதைகள் ஆகியோர்களுக்குப் பணத்தை வாரி வழங்கினான்.

சாப்பிடுவதற்காக அறையில் நுழைந்த போது, அரண்மனையில் உள்ள குழந்தைகள், பெண்கள், வயதான பெரியோர்கள் ஆகியவர்களை முதலில் உணவருந்தச் செய்து, பிறகே தான் மற்றவர்களுடன் உணவருந்தினான்.

ஏனெனில், குழந்தைகள், வீட்டிலே வசிக்கும் பெண்கள், வியாதியஸ்தர்கள், கன்னிப் பெண்கள், விருந்தாளிகள், வேலைக்காரர்கள் ஆகியவர்களை உணவருந்த செய்த பிறகு, மீதமிருக்கும் உணவையே இல்லறம் நடத்தும் தம்பதிகள் அருந்த வேண்டும். தன் சுகத்தை விரும்பும் ஒரு மனிதன் தான் மட்டுமே தனியாகச் சாப்பிடக்கூடாது. இரண்டு அல்லது மூன்று உறவினர்களுடனாவது உணவருந்த வேண்டும்.

இரண்டோ அல்லது மேற்பட்டோ மனிதர்களுடன் உணவருந்தும் மனிதன் தன்னுடைய விருப்பங்களில் வெற்றியை அடைகிறான். அவனுக்கு விரும்பிய செல்வம் கிடைக்கும். சந்தோஷம் அடைவான். இவ்வாறு சாஸ்திரங்களில் விளக்கப் பட்டிருக்கிறது.

சாப்பாட்டிற்குப் பிறகு அரசன் இளைப்பாற எண்ணி உட்கார்ந்திருந்தான். சாப்பாட்டிற்குப் பிறகு சிறிது நேரம் உட்கார்ந்து இளைப்பாறுபவன் தொந்தி வயிற்றை அடைகிறான். சாப்பாட்டிற்குப் பிறகு தூங்குபவன் சுகத்தை அடைகிறான். சிறிது நேரம் நடப்பவனோ நீண்ட ஆயுளை அடைகிறான். ஓடுகிறவனையோ மரணம் துரத்திச் சென்று ஆட்கொண்டு விடுகிறது, என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும், நோய் ஆறு விதங்களில் ஏற்படுகிறது. அதிகமாகத் தண்ணீர் அருந்துவதன் மூலமும், நேரம் அளவு இன்றி வேளை கெட்ட வேளை சாப்பிடுவதின் மூலமும், பகலில் தூங்குவதன் மூலமும், இரவு முழுவதும் விழித்திருப்பதின் மூலமும், மலஜலம் சரிவர கழிக்காததன் மூலமும் வியாதி உண்டாகிறது.

மாலை வேளையில் விக்கிரமாதித்தன் சந்தியா பூஜைகளைச் சரிவரச் செய்து முடித்தான். உணவு அருந்தியதும் தூங்குவதற்காகப் படுக்கை அறைக்குச் சென்றான். மல்லிகை, குந்தம் முதலிய வாசனை நிறைந்த பூக்களின் இதழ்கள் தூவப்பட்டிருந்த மிருதுவான மெத்தையில் ஏறிப் படுத்துத் தூங்கத் தொடங்கினான்.

விடியற்காலை நேரத்தில் அரசன் கனவு ஒன்று கண்டான். எருமை மாட்டின் மீது ஏறிக் கொண்டு தென் திசையை நோக்கித் தான் பிரயாணமாவது போலக் கனவு கண்டான். விழித்துக் கொண்டதும், மகாவிஷ்ணுவைத் தியானித்துக் கொண்டு எழுந்திருந்தான். நீராடிப் பூசைகளை முடித்துக் கொண்டதும், ராஜ சபையை அடைந்தான். அங்கு கூடியிருந்த அறிஞர்களின் முன்னிலையில், தான் இரவு கண்ட கனவைத் தெரிவித்தான்.

"அறிஞர்களே! விடியற்காலை நேரத்தில் நான் ஒரு கனவு கண்டேன். எருமை மாட்டின் மீது ஏறிக்கொண்டு தென் திசை நோக்கிச் செல்வது போலக் கனவு கண்டேன். அது முதல் என் மனம் நிம்மதியடையவில்லை. நான் கண்ட கனவு ஏதாகிலும் கெட்ட காலத்துக்கு அறிகுறியோவென்று சம்சயப்படுகிறேன். நீங்கள் அதைத் தெளிவுபடுத்தவேண்டும்!"

அப்போது சபையிலிருந்த ஸர்வக்ஞபட்டர் என்னும் பண்டிதர் எழுந்திருந்தார். "அரசே! கனவுகள் இரண்டு விதமானது. சில கனவுகள் நன்மையை பயக்கக்கூடியவை. மற்ற சில தீமையை அளிக்கவல்லவை. பசுக்கள், எருதுகள், யானைகள், கோவில்கள், மலைச்சிகரங்கள் அல்லது மரங்கள் ஆகியவற்றின்மீது ஏறுவது போலக் காணும் கனவுகள் நன்மைபயக்கக் கூடியவை. சாணத்தால் தெளிக்கப்படுதல், இரத்தம், மரணம் தகாத பெண்டிர்களுடன் சேர்க்கை ஆகியவற்றைக் காணுவதும் நல்லதே. எருமை, கழுதை, முட்கள் நிரம்பிய மரம் ஆகியவற்றின் மீது ஏறுவது, பஸ்பம், (சாம்பல்) பருத்தியால் நெய்யப்பட்ட துணி, ஒட்டகம், புலி, பாம்பு, பன்றி, குரங்கு போன்றவற்றைக் காணுவது தீமைபயக்கூடிய கனவுகள், கழுதை, ஒட்டகம், எருமை அல்லது புலி ஆகியவற்றின்மீது ஏறுவது போல யாராவது கனவு காண்பார்களேயானால், ஆறுமாத காலத்தில் மரணம் காத்திருக்கிறது என்று சொல்வார்கள். இரவின் முதல் ஜாமத்தில் காணப்படும் கனவு ஒரு வருஷத்திற்குள் பலிதமாகும். இரண்டாவது ஜாமத்தில் கண்ட கனவு எட்டு மாதங்களுக்குள் பலிக்கும். மூன்றாவது ஜாமத்தில் காணப்படும் கனவோ மூன்றே மாதங்களில் பலித்துவிடும். இன்னும், விடியற்காலையான அருணோதய நேரத்தில் காணும் கனவு பத்தே நாட்களுக்குள் பலிக்கும். பசுக்கள் அவிழ்த்து விடப்படும் நேரத்தில் காணும் கனவோ அந்த க்ஷணமே பலித்து விடும். அரசே! சுருங்கச் சொல்லப் போனால் தாங்கள் கண்டது தீமையை அளிக்கவல்ல கனவே! உங்களுக்குக் கெடுதல் ஏதோ நேரப்போகிறது" என்றார் பண்டிதர்.

"சுவாமி! நான் கண்ட கனவின் பலன் அற்றுப் போகும்படி செய்ய நான் என்ன பரிகாரம் செய்ய வேண்டும்? அதற்கான வழியையும் தெரிவியுங்கள்'' என்று வேண்டினன் விக்கிரமாதித்தன்.

ஸர்வக்ஞபட்டரும், ''அரசே! நீ விலையுயர்ந்த பட்டாடைகளையும் ஆயுதங்களையும் அணிந்து கொண்டு பகவானை ஆராதனை செய். ஆராதனையின் முடிவில் நெய்யிலே உன் பிரதிபிம்பத்தைப் பார். பிறகு நீ அணிந்திருக்கும் ஆடைகளையும், ஆபரணங்களையும் அறிஞர்களுக்குத் தானமாக அளித்துவிடு. மறுபடியும் புதிய ஆடையாபரணங்களை அணிந்து கொண்டு ஆராதனையைத் தொடங்கு. ஒன்பது வைரங்களால் பகவானை அபிஷேக ஆராதனை செய். சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட தசவித தானங்களையும் செய். கூன், குருடு, நொண்டி ஆகிய ஏழை பிச்சைக்காரர்களுக்குத் தனத்தை அள்ளிக் கொடு. தானம் பெற்றோர்களுடைய உள்ளங்களிலிருந்து எழும் உண்மையான வாழ்த்துக்கள் நீ கண்ட கனவின் துர்ப்பலனை அழித்து விடும்!" என்றார்.

அவ்விதமே விக்கிரமாதித்தனும் பகவானை ஆராதித்தான். பண்டிதர்களுக்கும், கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்ற அறிஞர்களுக்கும் நிறைய பரிசுகளைக் கொடுத்துக் கௌரவித்தான். ஏழைகளுக்கும் உழைத்துச் சாப்பிட முடியாதவர்களுக்கும் பொக்கிஷத்திலிருந்து பணத்தை வாரி வழங்கினன். இப்புனித காரியத்துக்காக அரசாங்கத்துக் கஜானா மூன்று நாட்கள் திறந்து கிடந்தது. அரசனிடம் சன்மானம் பெற்றவர்கள் ஒவ்வொருவரும் திருப்தி அடைந்து அரசரைப் பலவாறு வாழ்த்தினர். அவர்களுடைய நிறைந்த உள்ளங்களிலிருந்து எழுந்த உண்மையான வாழ்த்துக்கள் அரசன் கண்ட கனவின் துர்பலனை அழித்து, அவனுக்குக் கெடுதல் ஏதும் நேராதபடி செய்து விட்டன.



## 11-வது வித்வசிரோமணிப் பதுமை சொல்லிய நிர்ஜீவப்பட்டணத்து சற்குணவதி கதை



மறுநாட் காலையில் போஜராஜன் அதிசய சிம்மாசனத்தின் மீது ஏறி அமர முயன்றபோது, பதினோராவது படிக்குக் காவலான வித்வ சிரோமணி என்னும் பதுமை, அவனைத் தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனைப் பற்றிய சுவையான கதையொன்று சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்தச் சக்கரவர்த்தி நீதி நெறி தவறாமல் ஆட்சி புரிந்து வரும் நாளில் நாடாறு மாதம் முடிந்து காடாறு மாதம் புறப்படச் சில நாட்களிருந்தன. அப்பொழுது வேதாளத்தையழைத்து, மற்ற நாடுகளின் நிலவரத்தை அறிந்து வரச் சொன்னான். வேதாளமும் அவ்வாறே சென்று திரும்பி வந்து, வாரணபுரி என்னும் நகரிலுள்ள விநோதத்தைக் கூறலாயிற்று.

வாரணபுரி என்னும் இராஜ்ஜியத்தை அரசாளும் கோயிற் சொரூபனுக்கு முதுமைப் பிராயத்தில் அருந்தவத்தின் பயனாய் ஒரே ஒரு பெண் குழந்தை மட்டும் பிறந்தது. அந்தப் பெண்ணுக்கு "சற்குணவதி" யென்னும் பெயர் சூட்டிச் செல்லமாக வளர்த்துப் பெரியவளானதும், அறநூல்கள், இலக்கியம், புராணம், தர்க்கம், உபநிடதம், கைவல்யம் முதலான சகல கலைகளையும் கற்பித்துத் தன் புத்திரியை விவேகத்திற் சிறந்தவளாக்கினான். பருவம் சற்குணவதிக்குப் புத்தமுது போன்ற பேரழகையும் அள்ளிக் கொடுத்தது. புது மெருகுடன் விளங்கினாள் இளவரசி. இதைக் கண்ட மன்னன் சற்குணவதியை பெண்டிரின் காவலுடன் கன்னி மாடத்தில் வைத்துப் பாதுகாத்து வந்தான்.

ஒரு சமயம் கோயிற் சொரூபன் வேட்டைக்குச் சென்றான். வனவிலங்குகளை வேட்டையாடிய வெற்றியுடன், திராட்சை மதுவையும் அருந்தி அரசன் போதையில் தள்ளாடிக் கொண்டிருந்தான். அப்போது அவ்வனத்திலே, ரிஷி பத்தினி ஒருத்தி தன்னந்தனியாகக் குளித்துக் கொண்டிருந்தாள். அவளைக் கண்டதும் மன்னனுக்கு மோக போதையும் தலைக்கேறியது. உடனே அரசியல் அதிகாரவர்க்கத்தினருகில் இயல்பாக அமைந்திருக்கும் ஆக்கிரமிப்பு வெறியுடன் அவளை நெருங்கிக் கையைப் பிடித்திழுத்தான். கற்பின் சக்தியுள்ள அப்பத்தினி கோபங்கொண்டு, "மூர்க்கனே! நீ அதிகாரத் திமிரோடு அரசாளும் உன் இராஜ்ஜியம் பகற் காலத்தில் நிர்ஜீவியாய்ப் போகக் கடவது" என்று சாபமிட்டு விட்டுப் போய் விட்டாள். அவ்வுத்தமியின் சாபப்படி பகல் முழுவதும் வாரணபுரி நகரிலுள்ள அரண்மனை வாசிகள், குடிபடைகள், உயிர்ப் பிராணிகள் அனைத்தும் இறந்து பிரேதம் போலக் கிடந்து, இரவு காலத்தில் மட்டும் உயிர் பெற்றெழுந்து உலாவி வந்தார்கள். அந்நகர் முழுவதும் இரவில் மட்டும் களியாட்டங்கள் பெருகி பகற்காலம் போல் காட்சியளிக்கும். இளவரசியின் கன்னி மாடத்தில் சற்குணவதியும் இரவு நேரத்தில் உயிர் ஸ்மரணை பெற்றெழுந்து, தன்னை அலங்கரித்துக் கொண்டு தனக்குரிய நாயகனைக் கற்பனையில் எழுதி எழுதிப் பார்த்துப் பெருமூச்சுடன் நிலா உப்பரிகையில் உலாவிக் கொண்டிருப்பாள்.

இவ்வாறிருக்கும் நாளில் இமய பர்வதத்தில் வாசஞ் செய்யும் அரக்கன் ஒருவன் சாகா வரம்பெற்று கோர உருவுடன் எதிர்ப்பட்டோரைத் துவம்சம் செய்து, அட்டகாசத்துடன் வந்து கொண்டிருந்தான். அவன் துறவிகளின் அருந்தவத்தைப் பங்கப்படுத்தியும், தேவர்களைத் திக்குமுக்காடச் செய்தும், கடல் நீரைக் காட்டிலிறைத்தும் தன் கைவரிசையைக் காட்டியபடி ஆகாயமார்க்கமாய் வந்தான். அப்பொழுது இரவு நேரமாகையால் வாரணபுரியில் ஜோதிமயமாய் வண்ண விளக்குகள் மின்னி, அரக்கனின் கண்ணைப் பறித்தன. "இரவு நேரத்தில் இந்த ஒளிவரக் காரணம் என்ன?" என்று அரக்கன் கீழே பூமியை உற்றுப் பார்த்தான்.

அப்போது கன்னிமாடத்தின் உப்பரிகையில் உலாவிய சற்குணவதி அவனுடைய பசிபிடித்த கண்களுக்குத் தென்பட்டாள். இளவரசியின் புத்தம் புது அழகு அவனை மயக்கிக் காந்தம்போலக் கவர்ந்து இழுத்தது. இறங்கினான் இராக்ஷதன்; நுழைந்தான் உப்பரிகையில்; தூக்கினான் சற்குணவதியை; கொண்டு சென்றான் தன் குகைக்கு!

அழகுப் பொக்கிஷத்தை அரக்கன் வெகு தொலைவிலுள்ள தன்னுடைய இமயமலைக் குகைக்குள் சிறை வைத்து அவளிடம், "வம்பு செய்யாதே மாதே! மாரன் அம்பினால் மயங்கிக் கிடக்கும் எனக்கு மணமாலை சூடு!" என்றெல்லாம் கொஞ்சு மொழி பேசினான். அனைத்தும் நஞ்சாயிருந்தது அழகிக்கு! மிஞ்சினால் அரக்கனிடமிருந்து தப்பமுடியாது என்று யூகித்த சற்குணவதி, "வலிமைமிக்க நீர் என்னை என்று தூக்கி வந்தீரோ, அன்றே நான் தங்களுடையவளாகி விட்டேன். ஆனாலொன்று! நான் மூன்றாண்டு காலமாக, மாங்கல்ய சுகத்தைக் கோரிக் கன்னிவிரதமொன்றை மேற்கொண்டிருக்கிறேன். விரத காலத்தில் ஆண் சகவாசமே ஆகாது. அது முடிய இன்னும் மூன்று மாதங்களிருக்கிறது. அதுவரை பொறுங்கள்! கிணற்று நீரை வெள்ளமா கொண்டு போகப்போகிறது?" என்று கெஞ்சினாள். அரக்கனும் அதற்குச் சம்மதித்து அவளுடைய பள்ளியறையை நெருங்காமல் விலகியேயிருந்தான்.

மறுநாள் பகற்பொழுது முடிந்து இராக்காலமானதும், சற்குணவதியின் சொந்தவூரில் அவளுடைய பெற்றோர்கள் உயிர் பெற்றெழுந்து புத்திரியைக் காணாமல் புலம்பி, உண்ணாமல் உறங்காமலிருந்து, பொழுது விடிந்ததும் உயிர் நீத்த சவமாகிவிடுகிறார்கள்." இவ்வாறு வாரணபுரி இராஜ்யத்தின் விநோதத்தை வேதாளம் சொன்னதும் வியப்படைந்த விக்கிரமாதித்தன், தன் மந்திரியான பட்டியை அழைத்து இராஜ்ய நிர்வாகத்தை நலமுடன் ஒப்புவித்துவிட்டு, காடாறு மாதம் புறப்பட்டான். சிரமுடி, புயக்கவசம், தேகபந்து, மந்திரவாள் முதலியவற்றுடன் திருநீற்றுக் காப்புமணிந்து வேதாளத்தின் மீதேறி வாரணபுரிப்பட்டணம் வந்தடைந்து நகர் முழுதும் சுற்றிப்பார்த்து, அரண்மனையையுங் கண்டு அங்கு பட்டணம் முழுதும் பகற்காலத்தில் உயிரற்ற ஜீவன்களாயிருப்பது கண்டு பரிதாபப்பட்டு, பத்மாசனம் போட்டு நிஷ்டையில் ஆழ்ந்து தனதிஷ்ட தெய்வமாகிய உஜ்ஜயினி மாகாளியை வணங்க, அம்மன் பிரசன்னமானாள்.

"தேவி! தயாபரி! எனக்கு யாதொரு குறைவுமில்லை. இருந்தாலும் இந்தப் பட்டணம் இவ்வாறிருக்கிறதே. இதற்குச் சாப விமோசனமளிக்கத் தயைபுரியவேண்டும்" என்றான் விக்கிரமாதித்தன்.

"மகனே! உனக்கு நிகர் உலகிலில்லை! ஆனாலும் என்ன செய்வது? ஒரு ரிஷிபத்தினியால் வந்த சாபமிது. விமோசனமும் அவளால்தான் நேரவேண்டும். விரைவில் விமோசனமில்லை னால் இந்த ஊருக்கே இதைவிடப் பெரும் தீங்குவரும்" என்று றி நிலைவிட்டு நீங்கித் தன்னிலையடைந்தாள் பராசக்தி.

இதைக் கேட்ட விக்கிரமாதித்தன் நூற்றியிருபது வயது ...ற கிழ வேதியனைப்போல வடிவெடுத்து, அந்த ...பத்தினியிருக்கும் ஆரண்யத்திற்குச் சென்று அவளுடைய ...மத்தின் அருகில் வேதாளத்தின் உதவியால் பெரிய சிதை ...ரித்துத் தீக்குழி மூட்டி, "அரகரா சம்போ, மகாதேவா!" ...று முணுமுணுத்தபடி ஒரு அடிக்கு ஒரு நாழிகையாகும்படித் ...ாடித் தள்ளாடி அடியெடுத்து வைத்து அத்தீக்குழியைச் ...றிச் சுற்றிவந்து அதில் விழப்போனான். அதைக் கண்ட ...பத்தினி மனம்பதறி அக்கிழ வேதியன் அருகில்வந்து, ...ஸ்திரிகளே! தங்களுக்கென்ன குறை? தாங்களேன் ...ளிக்கப் போகிறீர்கள்? இந்தத் தள்ளாத வயதில் வந்த ...ல்லாத துன்பமென்ன?" என்று பரிவோடு வினவினாள். ...மையே! இனிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது? என் ...று தீர்க்க யாரால் இயலும்? சொன்னால் மட்டும் உன்னால் ...மா?" என்று சலிப்போடு பேசினான் விக்கிரமாதித்தனை ...வேதியன்.

"பெரியவரே! தங்கள் குறையைச் சொன்னால், என்னால் ...மானவரை நிச்சயமாகத் தீர்த்து வைப்பேன். ஆகவே ...ங்கள் தீக்குளிக்காது என்னிடம் உள்ளதைச் சொல்லுங்கள்" ...று உறுதிகூறி வற்புறுத்தினாள் ரிஷிபத்தினி.

"ரிஷிபத்தினியே, கேள்! என் சொந்தவூர் சரஸ்வதிப் ...ணம். என் பெயர் கெங்குப்பட்டர். எனக்கு வெகுகாலம் ...ர புத்திரனில்லாமலிருந்து நூறு வருஷங்களுக்குப் பிறகு, ...விஸ்வேஸ்வரனுடைய அருளால் ஒரு ஆண் குழந்தை ...ந்தது. அதை நாளொரு மேனியும், பொழுதொரு ...ணமுமாய் வளர்த்துச் சகல கலைகளையும் கற்பித்துத் தகுந்த ...தில் நிர்ஜீவிப்பட்டணத்து வேதசாஸ்திரப்பட்டருடைய ...ரத்தியான கீதசரஸ்வதிக்கு இரவு முகூர்த்தத்தில் கல்யாணம் ...து மருமகளோடு என் ஊருக்கு அழைத்து வந்தேன். சில ...களுக்குப் பிறகு என் மருமகளோடு என் மகன் தன் ...மியார் வீட்டுக்குச் சென்றான். அப்போது சம்சாரத்தின் ...ர விநோதமாய் மாறிப் போயிருப்பதைக் கண்டான். அங்கே ...றும்பு உள்பட சகல உயிர் பிராணிகளும் பகற்பொழுதில் ...ற்று பிரேதம் போல் விறைத்துக்கிடப்பதையும், ...க்காலத்தில் உயிர் பெற்றெழுந்து உற்சாகமாய் ...ாடுவதையும் அறிந்து வியந்தான். அவனுடைய மனைவி ... உறவினர் படும் துயரத்தைக் கண்டு மனம் வருந்தி ...ர்களை விட்டுப் பிரிய விரும்பாமல் பிறந்தகத்திலே ...யிருந்ததால் என் மகனும் அவர்களோடு இருந்து வந்தான்.

"ஒருநாள் என் மகனையும், மருமகளையும் எங்களுருக்கு அழைத்துவரச் சென்ற நான், வாரணபுரியிலுள்ள அருவெறுப்பான நிலையைக் கண்டு, அதன் மர்மம் என்னவென்று காரணம் கேட்டபோது, என் சம்பந்தியான சாஸ்திரப்பட்டருடன் இருந்த மற்றவர்கள், "அடபாவி! எந்த வேளையில் உன் மகன் எங்கள் நகரத்துப் பெண்ணைக் கைப்பிடித்தானோ. அதிலிருந்து இம்மாதிரி நிகழுகிறது!"என்று திட்டி அடிக்க வந்தனர். அதைக் கேட்டுத் தன்மீது பழிவந்ததால் வெகுண்ட என் செல்லக்குமாரன், காளிகாதேவி கோயிலுக்குச் சென்று கழுத்தை அறுத்துக்கொண்டு மடிந்தான். உடனே அவன் மனைவியும் உயிரை மாய்த்துக் கொண்டாள். குமாரத்தி இறந்ததைக் கண்ட அவளுடைய தாய் தகப்பனுர் தாங்களும் உயிரை மாய்த்துக் கொண்டார்கள். இப்படி ஒருவர் பின் ஒருவராக இறந்த பின் எனக்குத்தான் இந்த உலகில் என்ன இருக்கிறது? நான் யாருக்காக வாழ்ந்து எதைச் சாதிக்கப் போகிறேன்?" என்று கண்ணீர் விட்டுப் பிரலாபித்தான் கிழவேதியன்.

அதைக் கேட்ட ரிஷி பத்தினி துக்கந்தாங்காதவளாய் கண்ணீர் வடித்து, "சாஸ்திரிகளே! அந்த வாரணபுரிப்பட்டணம் நிர்ஜீவனுகப் போனதற்குக் காரணம் உங்கள் புத்திரனல்ல. நான் குளித்துக் கொண்டிருக்கையில் அப்பட்டணத்து அரசன் காமத்தால் கருத்திழந்து என் கையைப் பிடித்திழுத்தான்! அதனுல் நானிட்ட சாபந்தான் இவ்வளவிற்குங் காரணம். வருந்தாதீர்கள். சாபத்தை நீக்கிவிட்டேன். உங்கள் குமாரனும் குடும்பத்தினரும், வாரணபுரிப் பட்டணத்திலுள்ள ஜீவராசிகளும் சாபம் நீங்கி பகற்காலத்திலும் உயிர் பெற்றுச் சஞ்சரிப்பார்கள்!" என்றுள்.

"தாயே! கற்பரசிகளின் சக்திக்கு ஈடாக எதைச் சொல்வது? உங்களுக்கு மும்மூர்த்திகளுமே இணையில்லை!" என்று விக்கிரமாதித்தன் கூறி விடைபெற்றுக்கொண்டு வாரணபுரி வந்து பார்க்க, அங்குள்ளவர்களெல்லாம் உயிர் பெற்றிருக்கக் கண்டான். ஆனுல் அப்பட்டணத்து அரசனும், அரசியும் தங்களின் குமாரத்தியைக் காணுது புலம்பிக் கொண்டிருந்தனர். அதைக் கண்ட விக்கிரமாதித்தன் மனதில் தேவியை நினைத்தவனுய், வேதாளத்தின் மீதேறிக் கொண்டு, சற்குணவதி சிறையிருக்கும் இமயபர்வதக் குகைக்குச் சென்றுன்.

அப்போது அவ்வரக்கன் வெளியே சென்றிருந்தான். விக்கிரமாதித்தனைக் கண்ட சற்குணவதி இதுவும் அரக்கனின் தூதோ என ஐயுற்று, அரக்கனே மாயவேடம் பூண்டு

...திருக்கிறானென வெகுண்டாள். அவளின் பயத்தை உணர்ந்து ...ண்ட விக்கிரமாதித்தன், "பெண்ணே! அஞ்சாதே! நான் ...ஜயினியை ஆளும் விக்கிரமாதித்த மன்னன். உன்னைக் ...பாற்றவே இங்கு வந்தேன்!" என்றான்.

உடனே சற்குணவதி சம்சயம் நீங்கிச் சந்தோஷம் பொங்க, ...ன்னை வாழ்விக்க வந்த தெய்வமே! என்னைத் தூக்கிவந்த ...க்கன் மிகவும் கொடியவன்! கன்னி விரதம் என்று கூறி ...மூன்று மாதகாலமும் அவன் மோகத்திற்கு வசப்படாது ...ருந்து வந்தேன். நாளையோடு விரத நாளும் முடிகிறது. ...ளையே எனக்கு மணமாலையிட்டு என் அழகைச் சூறையிடவும் ...வேளை நிச்சயித்திருக்கிறான். இரைதேடப்போன இரக்கமற்ற அந்த அரக்கன் வந்துவிடுவான். அதற்குள் என்னை இங்கிருந்து அழைத்துச் சென்று விடுங்கள். அவன் வந்தால் என்னால் ...ங்களுக்கும் ஆபத்து. சாகாவரம் பெற்ற அவனை யாரும் ...ளிதில் கொல்லவே முடியாதாம்" என்றாள்.

அதைக்கேட்ட விக்கிரமாதித்தன் கலகலவென நகைத்து, ...பெண்ணே! நான் சுத்தவீரன். சத்தமின்றித் திருட்டுத்தனமாய் ...ன்னைத் தூக்கிச் செல்வது கோழைகளின் செயலாகும்! அது ...ன் வீரத்திற்கே இழுக்கு. நேரிடையாக அந்த அரக்கனைக் ...கொன்றே உன்னை அழைத்துச் செல்லுகிறேன். ஆனால் ஒன்று! நீ மட்டும் அவனிடம் சாகஸமாகப் பேசி, அவனுடைய பிராண ...லையின் இரகசியத்தைத் தெரிந்து கொள். உன் தாய் தந்தையரைக் காத்து, உங்கள் பட்டணத்தையும் எப்பொழுதும் ...ால நல்ல நிலைக்குக் கொண்டு வந்துவிட்டேன். அரக்கனைக்கொன்று உன்னை மீட்பது ஒன்றுதான் இப்போது ...ஞ்சியுள்ள என் கடமை!" என்றான் விக்கிரமாதித்தன்.

இவ்வாறு இருவரும் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, ...ன்னர் மன்னவரே! அந்த அரக்கன் திரும்பிவரும் ...நேரமாயிற்று. சக்கரவாகம் போல் வந்தீர்கள். கொத்திப்போக ...ருந்து விடாதீர்கள்!" என்று கூறினாள் சற்குணவதி. ...க்கிரமாதித்தனும் அங்கிருந்து புறப்பட்டு ஒரு வனத்தில் ...ன்று பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தான்.

விக்கிரமாதித்தன் புறப்பட்டுச் சென்ற சிறிது ...த்திற்கெல்லாம் அரக்கன் குகைக்குத் திரும்பிவந்தான். ...குணவதியிடம் கனி, தேன், மலர் யாவும் கொண்டு வந்து ...டுத்துக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசினான். அவளோ ...றுமொழி பேசாது மாறுபட்ட முகத்தோடும், வேறுபட்ட ...னத்தோடுமிருந்தாள்.

அதைக்கண்ட அரக்கன், "அடியே! இதென்ன இன்று உ முகம் மாறுபட்டிருக்கிறது. உன் கன்னி விரதம் இன்னமும முடியவில்லை? நானை என்னை மணக்கப்போகும் மலர்ச்சி உ முகத்தில் ஏன் இல்லை?" என்று கேட்டான்.

"விரதமெல்லாம் முடிந்துவிட்டது. ஆனால் ஒன்று! நீ என்மேல் அன்பாயிருக்கிறீர் என்பதற்கும், என்னை மனப்பூர்வமா நம்புவீர் என்பதற்கும் என்ன ஆதாரம்? அரக்கர்களின் குண அடிக்கடி மாறுமாமே?" என்றாள் சற்குணவதி.

"போடி பைத்தியக்காரி! நான் உன்மேல் உயிரையே வைத்திருக்கிறேன். நீ தான் என் வாழ்வென்று கரு யிருக்கிறேன். உன்னைப் பரிபூரணமாக நம்புகிறேன். என்னை நீயும் நம்பு!" என்றான் அரக்கன்.

"என் மேல் உயிரை வைத்திருப்பதும், என்னை நம்புவது உண்மையானால் சாகாவரம் பெற்ற உம்முடைய பிராண நிலையின் மர்ம இரகசியத்தைச் சொல்லும்!" என்றாள் சாகஸமா சற்குணவதி.

"கேள் பெண்ணே! மல்லிகார்ச்சுன மலையடிவாரத்தில் ஒ விநயகர் கோவிலுண்டு. அக்கோவிலிலே ஒரு சுரங்கம் உண்டு விநயகரைத் தள்ளிவிட்டு அப்புறம் போனால் ஈசான்யக் குகை என்றொரு பிலத்துவாரமுண்டு. அந்தப் பிலத்துவாரத்தி கூர்மதி என்றொரு ஆமையுண்டு. அந்த ஆமை வயிற்றி பொய்யாக்கை என்ற ஒரு புழு வாசம் செய்கிறது. அந்த புழுவின் தலையில் என்னுடைய பிராணனிருக்கிறது. அந்த புழுவின் தலையை அறுத்து என் முன் போட்டால், உடனே என் உயிர் பிரியும். எப்பேர்ப்பட்டவர்களானாலும் இவ்வள இரகசியத்தையுங் கண்டு பிடித்து என்னைக் கொல்ல முடியாது நானை மணமாகப் போகிற மணப்பெண் தன் மாங்கல்யத்தை கட்டிக் காக்க விரும்புவாள் என்பதினால்தான் இப்போது இந்த இரகசியத்தைச் சொன்னேன்!" என்றான் அரக்கன். சற்குணவதி மனம் பூரித்துப் புன்னகை செய்தாள்.

மறுநாள் அதிகாலையில் அரக்கன் உணவு சேகரிக்க வெளியில் சென்றிருந்த சமயம் பார்த்து விக்கிரமாதித்தன் அவனுடைய குகைக்கு வந்து, சற்குணவதி வாயிலாகச் சகல இரகசியங்களையும் சரியாகக் கேட்டுத் தெரிந்துகொண்டு வேதாளத்தின் மீதேறி மல்லிகார்ச்சுன மலைக்குச் சென்று தேவியை வணங்கிவிட்டு, மந்திரவாளை உருவிக் கொண்டு பாதாளத்திலிறங்கி அங்கிருந்த சுனையைச் சுற்றித்தேடிப் பார்த்து

அங்கிருந்த பிள்ளையார் கோவிலேக்கண்டு, விக்கினமில்லாமல் வெற்றியாகக் காரியம் முடிய அவரை வணங்கினுன்.

விக்கிரமாதித்தன் துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனுகையால் விநயகப் பெருமானும் அவனுக்கு வழிவிட்டார். அந்த வழியே விக்கிரமாதித்தன் சென்று பிலத்துவாரத்திற்குள் புகுந்து தேடிப் பார்க்க, கரும்மலேபோன்று ஒரு ஆமையானது படுத்திருப்பதைக் கண்டான். உடனே தன் மந்திரவாளால் அதை ஒரே வெட்டாய் வெட்டி, அதனுடைய வயிற்றைக் கிழித்துக் குடல்களே எடுத்துப் பார்க்கும்போது, அதனுள் கொம்பேரிமூக்கனேப் போன்ற நீலப்புழு ஒன்று இருந்தது. உடனே அதை இரண்டாய் வெட்டி எடுத்துக்கொண்டு, பிலத்துவாரத்தை விட்டு வெளியே வந்து, வேதாளத்தின் மீதேறி மல்லிகார்ச்சுன மலேயைச் சார்ந்த ராட்சதனிருக்கும் குகைக்கு வந்தான் விக்கிரமாதித்தன்.

அரக்கனும் அப்பொழுது குகையிலிருக்கவே விக்கிரமாதித்தன் தான் கொண்டு வந்த புழுவை அவனெதிரில் இரண்டாய்த் துண்டித்துப்போட, அந்தப் புழு துடிதுடித்தது. அதைப் போலவே அரக்கனும் துடிதுடித்து இடி முழக்கம்போலச் சாவுக் கூச்சலிட்டு மண்ணில் விழுந்து மடிந்தான்.

அதன் பின்னர் விக்கிரமாதித்தன் உற்சாகத்தோடு சற்குணவதியை அழைத்துக்கொண்டு வேதாளத்திலேறி காரணபுரி நோக்கி வரும் வழியில் ஒரு குளக்கரையில் இறங்கித் தாகந்தீர்த்துக் கொண்டு அருகிருந்த சோலேயில் அமர்ந்து களேப்பாறினுன். அப்போது அவ்வழியே வந்த கந்தல் துணி உடுத்திய ஏழை அந்தணவாலிபன் ஒருவன் சற்குணவதியைக் கண்டதும் மையல் கொண்டு, மோகந் தலேக்கேற மூர்ச்சையாகி விழுந்தான். அவனே விக்கிரமாதித்தன் தூக்கிக் களேப்பாற்றி விபரத்தை வினவினுன். அதற்கு அந்த வறியவாலிபன், "பெருமானே! இந்தப் பூசுரன் பருவம் வந்த நாள் முதலாய் வறுமை வந்த காரணத்தால் மன்மதவிகாரம் தீராமல் வாழத் தவித்து வீணுக அலேகிறேன். இப்பொழுது நீர் கொண்டு வந்திருக்கும் இந்த வனிதையைக் கண்டதும், இவள்மீது மட்டற்ற காதல் கொண்டுவிட்டேன். வறியவனுக்கு இந்த அழகுப் பொக்கிஷம் கிடைக்குமாவென்று ஏங்கி உயிர்விடப் போகிறேன்!" என்ருன்.

அதைக்கேட்ட விக்கிரமாதித்தன் புன்னகை புரிந்து, "வறியவனே! உனக்கு இந்தப் பெண்ணேக் கன்னிகாதானம் செய்கிறேன். வாரும்!" என்று அவனேயும் சற்குணவதியையும் அழைத்துச் சென்று அரண்மனேயில்விட, சற்குணவதியின்

தந்தையான கோயிற்சொரூபனும், அவன் மனைவியும் அளவிலாத ஆனந்தமடைந்தனர். விக்கிரமாதித்தனின் வேண்டுகோளுக்கிணங்கி இளவரசி சற்குணவதியை அந்த ஏழைப் பண்டிதனுக்கே திருமணம் செய்து வைத்து, வாரணபுரிக்கும் அவனையே அரசனாக்கி, முடியும் சூட்டி வைத்தார்கள்.

விககிரமாதித்தன் அங்கிருந்து விடைபெற்றுக்கொண்டு வேதாளத்தின் மீதேறி உஜ்ஜயினியை அடைந்து நாடாறு மாதம் அரசாளத் தொடங்கினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த பதுமை, "கேட்டீரா போஜ மகாராஜரே! இதற்குச் சரிசமமான திறமையும், உதாரணமும் உம்மிடமிருக்குமானால் இச்சிம்மாசனத்தில் ஏறும். இல்லையேல் வந்த வழியைப் பாரும்!" என்று சொல்லியது. அப்பொழுது சூரியாஸ்தமனம் ஆகிவிடவே, போஜ மகாராஜன், மௌனமாகத் தன் அந்தப்புரத்தை நோக்கித் திரும்பினான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பதினெட்டாவது படிக்குக் காவலான ரதிலீலா என்னும் பதுமை பின்வரும் கதையைக் கூறியதாக உள்ளது).

## சூரிய மண்டலப் பிரயாணக் கதை



மணிபுரம் என்னும் நகரத்தில் கோவிந்தசர்மன் என்னும் பண்டிதன் ஒருவன் இருந்தான். அவன் நீதி சாஸ்திரத்தை நன்கு கற்றறிந்தவன். அவனுக்கு ஒரு மகன் இருந்தான். தினந்தோறும் அவனைத் தன் அருகில் உட்காரவைத்துக் கொண்டு நீதி சாஸ்திரங்களைச் சொல்லி வருவான். அந்தச் சமயத்தில் நானும் அதைக் கேட்டிருக்கிறேன்.

அறிவுள்ள மனிதன் துஷ்டர்களுடன் ஒரு போதும் சகவாசம் கொள்ளக்கூடாது. ஏனெனில் பயங்கரமான விளைவுகளுக்கு முக்கிய காரணம் அதுதான்.

நல்லவர்களுக்கு ஏற்படும் பயங்கரமான கெடுதல்களுக்குக் காரணம் அவர்கள் கெட்டவர்களுடன் சகவாசம் கொள்ளுவதே. நான் அறிந்ததை இங்கே கூறுகிறேன். ஸ்ரீராமன் மனைவியான சீதாதேவியை, இலங்கையின் அதிபதி ராவணேசுவரன்

தூக்கிக்கொண்டு சென்ருன். ஆகவே, தென்கடல் அணையினுல் இறுக்கிக் கட்டப்பட்டது.

அதனுல், நல்ல மனிதர்களுடன் எப்போதும் பழகு. நல்லவர்களின் சகவாசத்தைத் தவிர, இவ்வுலகத்தில் பயன் தரக்கூடியது ஒன்றுமில்லை.

நல்லவர்களுடன் சகவாசம் அளவில்லாப் பேரின்பத்தை மலரச் செய்கிறது. சந்திரன், சந்தனத்தின் நறுமணம் இவற்றிலிருந்து கிளம்பும் மெல்லிய தென்றலின் மனேகரத்தை அது தலைகுனியச் செய்கிறது. மேலும், ஒருவரையும் பகைத்துக் கொள்ளாதே. பிறருக்கு வருத்தத்தை உண்டாக்காதே. குற்றம் செய்யாமலிருக்கும் போது வேலைக்காரர்களைத் தண்டிக்காதே. மிகவும் கொடிய பாபத்தைத் தவிர மற்ற எவ்வித காரணங்களுக்காகவும் உன் மனைவியைப் பிரித்து வைக்காதே. அவ்விதம் செய்வதால் ஒருவன் முடிவற்ற நரகத்துக்கே போகிருன்.

அடங்கி நடக்கும் தன்மையுள்ளவளும், சுறு சுறுப்பு உடையவளும், குழந்தைகளையுடையவளும், சந்தோஷமாகப் பேசுந்தன்மை வாய்ந்தவளுமாகிய தன் மனைவியை நிரூபிக்க முடியாத ஒரு குற்றத்துக்காக ஒருவன் பிரித்து வைப்பாஞகில் அவன் முடிவில்லா நரகத்துக்கே போய்ச் சேருகிருன்.

திருமகள் நிலைத்திருப்பாள் என்று ஒருபோதும் நினைக்காதே. தண்ணீரைப் போன்று செல்வமும் நிலையற்றதே.

செல்வத்தை நன்ருக அனுபவி; உன்னிடம் இருப்பவற்றை வாரி வழங்கு; கௌரவிக்கத் தக்கவர்களைக் கௌரவி; நல்லவர்களைப் பாராட்டு; பெருங்காற்றிலே அலைபாயும் விளக்கின் சுடர் போன்று செல்வமும் நிலையற்றதே, என்று சொல்லியிருக்கிருர்கள்.

பெண்களிடம் இரகசியத்தைச் சொல்லாதே; வருங்காலத்தைப் பற்றிய கவலைகளை எண்ணுதே; உன் எதிரிகளைப் பற்றியும்கூட நல்ல தனமாகவே நினை; தானமோ, படிப்போ அல்லது மற்றதோ இல்லாமல் ஒரு நாளையும் வீணுக்காதே; உன் பெற்ருேர்களைப் போற்று; திருடர்களுடன் பேச்சு வார்த்தை கொள்ளாதே, ஒருபோதும் நிஷ்டூரமான பதிலைக் கொடுக்காதே; சில்லறைக் காரியங்களுக்காகப் பெரும் பொருள்களை ஆபத்தில் வைக்காதே.

புத்திசாலி மனிதன் அல்பத்துக்காகப் பெரியதை நஷ்டப்படுத்த மாட்டான். ஏனெனில் இவ்வுலகத்தில்

முக்கியமற்றதை இழப்பதன் மூலம் முக்கியமானது காப்பாற்றப்படுகிறது.

ஏழைகளுக்குத் தானம் கொடு; தர்மத்தில் உறுதிகொண்டு, எண்ணம், செயல், வார்த்தை ஆகியவற்றால் பிறருக்குச் சேவைபுரிவதைப் பழக்கப்படுத்திக்கொள். சாதாரண மனிதர்களுக்காக விதிக்கப்பட்ட நீதி சாஸ்திர விதிகள் இதுதான். ஆனால் அரசன் விக்கிரமாதித்தனோ இயற்கையிலேயே இந்த விதிகளை நன்கு உணர்ந்திருந்தான்.

ஒருசமயம் அரச சபைக்கு வேற்று நாட்டிலிருந்து ஒரு யாத்ரீகன் வந்தான். அரசனை வணங்கி ஆசனத்தில் அமர்ந்தான்.

"ஐயா! நீ யார்? உன் வீடு எந்த ஊரிலிருக்கிறது? நீ எங்கு வந்தாய்?" என்று அவனைப் பார்த்துக் கேட்டான் விக்கிரமாதித்தன்.

"அரசே! என் பெயர் தேவதத்தன் என்பது. நான் அயல் நாட்டைச் சேர்ந்தவன். எனக்கு நிலையான இடம் கிடையாது; ஆகவே, எந்நேரமும் ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டே யிருப்பவன்" என்று பதிலளித்தான் யாத்ரீகன்.

"தேவதத்தா! மிக்க சந்தோஷம். அப்படியானால் நீ பல நாடுகளில் பிரயாணம் செய்து வந்திருப்பாய். அங்கங்கே எவ்வளவோ அற்புதங்களைக் கண்டு களித்திருப்பாயே?".

"அவ்விதம் ஓரிடத்தில் நான் ஒன்றைக் கண்டேன்...".

"அது என்ன? எனக்குத் தெரிவி. நானும் அதைக் கேட்டு ஆனந்தமடைகிறேன்.

"அரசே! உதயாசலம் என்றொரு மலை இருக்கிறது. அம்மலையில் சூரியபகவானுக்குப் பெரிய கோவில் ஒன்று உண்டு. பக்கத்திலே கங்கை ஓடிவருகிறாள். கங்கைக் கரையிலே பாபங்களிலிருந்து விடுதலை அளிக்கும் பாபவிநாசம் என்ற பெயர் உடைய சிவபெருமானுக்குக் கோவில் இருக்கிறது. சூரியோதய நேரத்தில் கங்கை நதியிலிருந்து ஒரு பெரிய ஸ்தம்பம் கிளம்பி வெளியே வருகிறது. அதன்மீது நவரத்தினங்களும் இழைக்கப் பெற்ற சிங்காதனம் ஒன்றிருக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாகச் சூரியன் மேலெழும்பும் போது, அந்த ஸ்தம்பமும் மேலே வளர்ந்து கொண்டே போய், நடுப்பகல் நேரத்தில் சூரிய மண்டலத்தை அடைகிறது. மாலையில் சூரியன் தாழத் தாழ, ஸ்தம்பமும் இறங்கி வந்து, சூரியாஸ்தமன

மாகியதும் தண்ணீரில் மறைந்துவிடுகிறது. தினம் தவறுமல் இந்நிகழ்ச்சி நடைபெற்று வருகிறது. இதுதான் நான் கண்ட அற்புதம். அரசே!" என்றுன் யாத்ரீகன்.

விக்கிரமனுக்கு அந்த அதிசயத்தை நேரில் காண வேண்டுமென்ற விருப்பம் ஏற்பட்டது. உடனே அந்த யாத்ரீகனை அழைத்துக் கொண்டு உதயாசலத்திற்குப் புறப்பட்டுவிட்டான். இரவு கோவிலில் தங்கினுர்கள். காலையில் சூரியோதய சமயத்தில் கங்கையிலிருந்து ஸ்தம்பம் வெளியே கிளம்பியது.அரசன் கங்கையில் நீராடிப் புனித தேகத்தை உடையவனுய் அந்த ஸ்தம்பத்தில் ஏறிச் சிங்காதனத்தில் அமர்ந்து கொண்டான். சூரியன் உயர ஏற ஏற ஸ்தம்பமும் மேலே சென்றது.

சூரியன் நெருங்க, நெருங்க நெருப்புப் போன்ற அதன் கிரணங்களால் அரசனின் உடல் வெந்து மாமிசப் பிண்டமாக மாறிவிட்டது. அரசனே சிறிதும் கலங்கவில்லை. சூரிய மண்டலத்தை அடைந்ததும் அவரைப் பலவிதமாகத் தோத்திரங்களைச் சொல்லி வணங்கினுன்.

"உலகத்தின் ஒரே கண்ணைப் போன்றவரும், உயிர்ப் பிராணிகளின் பிறப்பு, வளர்ப்பு, அழிவு ஆகியவற்றுக்குக் காரணமானவரும், மூன்று வேதங்களுக்கு ஒப்புவரும் மூன்று குணங்களை உடையவரும், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய திருமூர்த்திகளின் அம்சங்களையும் உடையவரும், சவித்துரு ஆகியவருமான சூரியபகவானுக்கு என் நமஸ்காரம்".

இப்படிப் பலவிதமாகத் தோத்திரம் செய்தான் விக்கிரமாதித்தன். அவனுடைய தைரியத்தையும், உறுதியையும் கண்டு மகிழ்ச்சியடைந்த சூரியன் அமிருதத்தை அவன் உடல்மீது தெளித்தான். அது பட்டதும் அரசனுடைய விகார உருவம் நீங்கி, அவன் உடல் பன்மடங்கு காந்தியைப் பெற்றது.

"தன்யன் ஆனேன்!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினுன் விக்கிரமாதித்தன்.

"அரசே! நீ ஒரு வீரனைவிடப் பன்மடங்கு புகழத் தக்கவன். ஒருவராலும் அடையப்படாத என் சமீபத்தை நீ அடைந்து விட்டாய். உன் செய்கையால் நான் அளவிலாத சந்தோஷம் அடைந்துள்ளேன். உனக்கு வேண்டிய வரத்தினைக் கேள்" என்றுர் சூரியபகவான்.

"பிரபோ! இதை விடப் பெரிய வரம் என்ன இருக்கிறது? மகா சாதுக்களாலும் அடைய முடியாத உங்கள் சமீபத்தை

நான் அடைந்து விட்டேன். இது ஒன்றே மகத்தான வரத்தைப் பெற்றது போலன்றோ! உங்கள் ஆசிர்வாதத்தால் எனக்குத் தேவையான பொருள்களில் குறைவொன்றுமின்றி இருக்கிறேன்" என்று விக்கிரமாதித்தன் தாழ்மையுடன் தெரிவித்தான்.

விநயம் நிறைந்த அரசனுடைய வார்த்தைகளைக் கேட்ட பகவான் பரவசமடைந்தவராய் நவரத்தினங்கள் பதிக்கப் பெற்ற தன்னுடைய மோதிரங்களில் இரண்டை அரசனிடம் கொடுத்தார். "இவைகளைப் பெற்றுக்கொண்டு சந்தோஷமாகப் போய்வா. தினந்தோறும் ஒரு சுமை தங்கத்தை இம் மோதிரங்கள் உனக்களிக்கும்" என்று அதன் பெருமைகளை எடுத்துரைத்தார்.

விக்கிரமாதித்தனும் அம் மோதிரங்களைப் பெற்றுக் கொண்டு, பின்னும் பலவாறாகப் பிரார்த்தித்தான்.

மாலை நேரத்தில் ஸ்தம்பம் கீழே இறங்கியதும், அரசன் அங்கிருந்து புறப்பட்டு உஜ்ஜயினி திரும்பினான். வழியிலே அரசனை ஏழைப் பண்டிதன் ஒருவன் சந்தித்தான்.

"யார் வேதாந்தமான உபநிஷதங்களிலே ஏகபுருஷர் என்று புகழப்படுகிறாரோ, ஆகாயம் பூமி எங்கும் வியாபித்து இருப்பவரும், வேறு யாருக்கும் அல்லாமல் யார் ஒருவருக்கே ஈசுவரன் என்னும் சொல் எழுத்துக்கு எழுத்துப் பொருத்தமோ, வீடு பேற்றை விரும்புபவர்கள் அடக்குவது முதலான (யோக) சாதனங்களால் யாரைத் தங்கள் உள்ளத்தில் தேடி வழிபடுகிறார்களோ, ஸ்திர புத்தியாலும், யோகத்தாலும் காணக்கூடிய அந்த ஸ்தாணு (அசைவற்றவர்) ஆன சிவபெருமான் உனக்கு எல்லா மங்களத்தையும் சிறப்பையும் அளிக்கட்டும்."

பண்டிதன் அரசனை வணங்கி வாழ்த்துக் கூறியதும், அவனை விக்கிரமாதித்தன் அருகில் அழைத்து, "ஐயா! உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"பிரபோ! கேட்போருக்கு இல்லையெனாது வழங்கும் வள்ளலே! என் குடும்பம் மிகப் பெரியது. ஆனால், நான் பரம ஏழை. தினமும் பிச்சையெடுத்து வயிறு வளர்க்கிறோம். என் வறுமையை நிவர்த்தி செய்யுமாறு கோருகிறேன்"

அரசன் சிறிதும் யோசனை செய்யவில்லை. சூரிய பகவானிடமிருந்து தான் பெற்றுவந்த இரண்டு மோதிரங்களையும் எடுத்து அவனிடம் கொடுத்தான்.

"ஐயா! இவ்விரண்டு மோதிரங்களும் அற்புத சக்தி வாய்ந்தவை. தினமும் ஒரு சுமை தங்கத்தைக் கொடுக்கும். இதைக் கொண்டு சென்று உன் வறுமையைப் போக்கிக்கொள்"

பண்டிதனும் அரசனைப் போற்றிப் புகழ்ந்தான்.

## 12-வது சாந்தகுணவல்லிப் பதுமை சொல்லிய அமிர்தகிரணகலை கதை

மறுநாட் காலையில் போஜ ராஜன் அதிசயச் சிம்மாசனத்தின் மீது ஏறி அமர முயன்றபோது, சிம்மாசனத்தின் பனிரெண்டாம் படிக்குக் காவலான சாந்தகுண வல்லிப் பதுமை அவனைத் தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனைப்பற்றிய கதையொன்று „ சொல்லத் தொடங்கியது.



விக்கிரமாதித்த பூபதியும் நீதிநெறி தவறாமல் ஆட்சி செய்து வருங் காலத்தில் நான்கு திசையிலும் தூதர்களை அனுப்பி ஆங்காங்கே உள்ள அதிசயங்களைக் கண்டுவந்து கூறக் கட்டளையிட்டார். அவ்வாறே சென்று வந்த தூதர்களில் ஒருவன் தான் கண்ட அதிசயத்தைக் கூறலானான்:

திருமால்புரி என்னும் பட்டணத்தைத் தருமராயனென்னும் அரசன் ஆண்டு வந்தான். சமுத்திராதேவி என்பது அவன் மனைவியின் பெயர். அவர்களுக்கு வீமாசூரன், இலக்குமிசூரன், மகாசூரன் என்று மூன்று பிள்ளைகளும், அமிர்தகிரணகலை யென்ற பெண்ணும் பிறந்தனர். அரசன் தன் குமாரர்கள் மூவருக்கும் தகுந்த பெண்களைத் தேடி மணம் செய்து, தன் புத்திரியையும் மேன்மையான இடத்தில் திருமணம் செய்து கொடுத்தான். இவ்விதமாக, பேரன் பேத்திகளையெல்லாம் கண்ணுற கண்டுகளித்து மகிழ்ந்து, பத்தரை ஆண்டு பாங்குடனிருந்து பிறகு இயற்கையெய்தினான்.

பட்டத்திற்கு வந்த மூன்று குமாரர்களும் தங்களின் நாட்டைச் சுற்றிப் பார்க்கவும், குடிமக்களின் இதயத்தை அறியவும் பஞ்சகல்யாணிக் குதிரைகள் மீதேறிக்கொண்டு நான்கு திசைகளிலும் தேச சஞ்சாரம் புறப்பட்டனர்.

வனாந்திரத்தில் அவர்கள் செல்லும்போது ஓரிடத்தில் மூன்று மண்டபங்களும், மூன்று குளங்களும், மூன்று சோலைகளும் இருப்பதைக் கண்டு வியப்புற்று அன்று இரவு அவ்விடத்தில் தங்கிப்போக விரும்பினர். அம்மூன்று மண்டபங்களும் மூன்று தேவகன்னியர்களைச் சார்ந்தவை. அவர்கள் பகற்பொழுதில் தேவசபையில் நடனம் புரிந்துவிட்டு, இராப்பொழுதில் இம்மண்டபத்தில் வந்து உல்லாசமாகப் பொழுதைப் போக்கிவிட்டுச் செல்வார்கள்.

அன்றையத்தினம் இரவு வந்தபோது தேவ கன்னிகைகள் பூலோகத்திற்கு இறங்கி வந்தார்கள். அங்கே மூன்று சகோதரர்களும், வலிவும், வனப்புமுள்ள வாலிபர்களாக இருக்கக் கண்ட தேவகன்னிகைகள் மூவரும் அவர்களின் அழகில் மயங்கி மோகங்கொண்டு, மூத்தவள் மூத்த சகோதரனையும், இளையவள் இளைய சகோதரனையும், நடுவிற் பிறந்தவள் நடுச் சகோதரனையும் அடைந்து களித்து மகிழ்ந்து, விடிந்ததும் மூவரையுங் கல்லாக்கிவிட்டுத் தேவலோகம் சென்று விட்டனர்.

மறுநாள் மாலை அந்திப் பொழுது இருட்டியதும் தேவகன்னிகையர் மூவரும் பூலோகத்திற்கு இறங்கி வந்து, மூன்று ராஜகுமாரர்களின் கற்சிலைக்கும் உயிர்கொடுத்துக் காதலர்களை எழுப்பிக் கனிவான மொழி பேசி, தாமரைத் தடாகத்தில் நீராடி, அறுசுவையருந்தி, தாம்பூலந்தரித்து சுகந்த பரிமளமாலை அணிந்து உல்லாசமாயிருந்தார்கள். பொழுது விடிந்ததும் அவர்களை மறுபடி கல்லாக்கி விட்டுத் தேவலோகம் சென்று விட்டார்கள். இவ்வாறு தேவகன்னிகள் தினமும் இரவில் வருவதும், இராஜகுமாரர்களோடு களித்திருப்பதும், பொழுது விடியும் தருணத்தில் கல்லாக்கிவிட்டு விரைந்து செல்லுவதுமாக வழக்கப்படுத்திக் கொண்டார்கள்.

ஒரு நாளிரவு இளையவனான மகாசூரன் மண்டபத்தைவிட்டுக் குளத்திற்கு வந்துவிட்டுப் போகும்போது "ராஜகுமாரா!" என்று யாரோ கூப்பிடும் விநோதமான குரலைக் கேட்டுத் திரும்பினான். அங்கு ஒருவரையும் காணாது வியப்புடன் நிற்கையில், "வாலிபர்களே! நீங்கள் யார் பெற்ற பிள்ளைகளோ? இந்தத் தேவகன்னியர் உங்களை மயக்கி, இரவில் உல்லாசம் தந்து அதிகாலையில் உங்களைக் கல்லாக்கிவிட்டுச்

செல்லுகின்றனரே! உங்களின் அவல நிலை கண்டு மனம்பொறாது அழைத்தேன்!" என்று மண்டபத் தூணிலேயிருந்த பதுமை ஒன்று சொல்லியது.

அதைக் கேட்டு வருந்திய மகாசூரன், "பதுமையே! நாங்கள் தப்பிச்செல்ல ஏதாவது வழியிருக்கிறதா?" என்று கெஞ்சினான். அதனால் மனம் மகிழ்ந்த பதுமை "நான் உனக்கு ஏழு குளிகைகளைத் தருகிறேன். அவற்றைக் கையில் வைத்துக்கொள். தேவகன்னிகைகள் களைப்பால் அயர்ந்து நித்திரையில் ஆழ்ந்திருக்கும் சமயம், நீங்கள் மூவரும் ஓசைப்படாமல் எழுந்து, குதிரை மீதேறிக் குறுக்கு வழியாக உங்களின் நகரத்தை நோக்கி நழுவிவிடுங்கள். அவர்கள் உங்களைப் பின் தொடர்ந்து வந்தால் இந்தக் குளிகைகளில் ஒன்றைக் கீழே போடு. உங்களுக்கும், அவர்களுக்குமிடையே பெருந்தடங்கல் ஏற்படும். அப்படியில்லாமல், நின்று அவர்களுடன் பேசினால் என்றென்றும் உங்களைக் கல்லாகிப் போகும்படி சபித்துவிடுவார்கள்" என்று எச்சரித்து, மகாசூரனிடம் ஏழு குளிகைகளையும் கொடுத்தது.

மகாசூரன் அதைப் பெற்றுக் கொண்டு, "பதுமையே! எங்களைக் காப்பாற்றிய தேவதையே! உன் உதவியை என்றும் மறவோம்!" என்று வணங்கி விடைபெற்றுக்கொண்டு, மண்டபத்திற்குச் சென்று தேவகன்னிகையருடனும், சகோதரர்களுடனும் சேர்ந்து கொண்டான்.

அந்த இரவில் தேவகன்னியர்கள் மூவரும் உல்லாசமாகயிருந்து விட்டு அயர்ந்து உறங்கும்போது மகாசூரன் மெல்ல எழுந்து தன் இரு சகோதரர்களையும் எழுப்ப, மூவரும் குதிரை மீதேறிப் பறக்கலானார்கள்.

தேவகன்னியர் மூவரும் சட்டென விழித்துப் பார்த்துத் தங்களருகில் காதலர்களைக் காணாததால், மானசீகமாக அவர்கள் சென்ற வழியைக் கண்டு வேகமாகப் பின் தொடர்ந்தார்கள்.

தேவகன்னியர் தங்களை நெருங்கியதும் மகாசூரன் சட்டென ஒரு குளிகையை எடுத்து அவர்களின் முன் விட்டெறிந்தான். உடனே அவர்களிடையே காடும், செடியும், கல்லும், மலையும், ஆறும், சேறும் அத்தனையும் இடையூறாக உண்டாகி, தேவகன்னிகையரைப் பின் தங்கச் செய்துவிட்டன. அவற்றையெல்லாம் கடந்து வருவதற்குள் மூன்று சகோதரர்களும் நெடுந்தூரம் சென்று விட்டார்கள்.

தேவகன்னிகையர் மீண்டும் அருகில் வந்தனர். மகாசூரன் மறுபடியும் ஒரு குளிகையை எடுத்து வீசினுன். அந்தக் குளிகையானது, கருங்கடல், செங்கடல், வெண்கடல், பெருங்கடலென்று நான்கு கடலாயிற்று. அவற்றையெல்லாம் கடந்து தேவகன்னிகையர் நெருங்கலானுர்கள். அப்போது மகாசூரன் மீண்டுமொரு குளிகையைத் தூக்கி விட்டெறிந்தான். அது கரடி, புலி, சிங்கங்களாய் வடிவெடுத்து மிரட்டின. அவற்றையும் கடந்து தேவகன்னிகையர் வருவதற்குள் மூன்றரசர்களும் கொஞ்சத் தூரம் சென்றனர். மீண்டும் தேவகன்னியர் பின் தொடரவே, மகாசூரன் மற்றுமொரு குளிகையை வீசினுன். உடனே தேவகன்னிகையரின் கண்கள் இருளுற்று, கால்கள் சக்தியற்றுப் போயின. பொழுதும் விடிந்துவிட்டது. தேவமாதர்கள் மூவரும் சரஸ்வதியைத் தியானித்துக் கண் பார்வை பெற்றுர்கள். ஆனுல் அவர்களுக்கு இந்திரலோகத்திற்குத் திரும்ப வேண்டிய நிலே ஏற்பட்டுவிட்டது.

மகாசூரன் கையில் மட்டுங் குளிகையிருந்ததால், அவன் காதலியாகிய ரூபகன்னிகைதான் மண்டபத்தின் மாடக் குழியிலிருந்த குளிகைக் கற்களே எடுத்து அவனிடம் கொடுத்திருக்க வேண்டுமென்றெண்ணிய, மூத்தவரிருவரும் இளேயவளாகிய ரூப கன்னிகையை அடித்துக்கொன்று போட்டுவிட்டுக் காலந் தப்பாமல் தேவசபை சென்று, தாளம் தப்பாமலும் நடனமாடினுர்கள்.

இதைக் கண்ட மகாசூரன் தன் ஆசைக்குரிய ரூபகன்னிகை இறந்ததை எண்ணி அதிக வருத்தமுற்றுன். தானும் அவளுடனேயே இறந்துவிட எண்ணங்கொண்டு திரும்பி வழி நடந்தான். தம்பி திரும்புவதைக் கண்ட தமையன் மார்களிருவரும், "தம்பி! நீ செய்வது தகாத காரியம். எங்களுடனேயே வா!" என்று எவ்வளவோ சொல்லியுங் கேட்காது, ரூபகன்னிகையிடம் வந்து, ஆறுய்க் கண்ணீர் பெருக அவளேத் தூக்கிக்கொண்டு போய், தானும் விழுந்திறப்பதாக எண்ணிக்கொண்டு நெருப்பை மூட்டினுன்.

அப்போது கைலாசவாசன் ரிஷப ரூடவாகனராகவும், பார்வதி சமேதராகவும் எழுந்தருளி, "பக்தா! ஏனப்பா விசனப்படுகிறுய்?" என்று வினவ, மகாசூரனும் தன்னே மறந்து, பொய் ஆணவம் ஒழிய அழுது அடிவணங்கி, "சுவாமி! என் ரூபகன்னிகை இறந்துபோனுள். இனிமேல் எனக்கு என்ன வாழ்வு வேண்டியிருக்கிறது? ரூபகன்னிகையில்லாத உலகமே எனக்கு வேண்டாம்!" என்றுன்.

"பக்தா! இதற்காகவா இத்தனை துன்பம்? இதோ பார், உன் ரூபகன்னிகை!'' என்று சிவபெருமான் சொல்லவே, ரூபகன்னிகையும் தூக்கத்திலிருந்து எழுந்தவளைப்போல எழுந்து, கர்த்தரையும் கமலக் கன்னியையும் கண்டு களித்து வணங்கி நிற்க, அவர்களும் வாழ்த்துக் கூறிவிட்டு வானவீதியில் சென்றனர்.

அதன் பின்னர் ரூபகன்னி மகாசூரனை நோக்கி, "காதலரே! ஏதோ சில நாட்கள் இருவரும் இணங்கியிருந்து இன்பங் கண்டோமென்று போய் விடாமல், நான் பிணமானதும், உடன் கட்டை ஏறவும் துணிந்த உமக்கு நான் இன்றையிலிருந்து அடிமை. நீரே என் கணவர். ஆனால் ஒன்று. நான் தேவகன்னிகை என்பதை மறந்து விடவேண்டாம்! பகற்பொழுதில் தேவலோகத்திலிருப்பேன். இரவில் இங்கு வந்து உம்மோடு உல்லாசமாக இருந்து போகிறேன். என்னுடைய வீணை ஒன்றையும் தேவலோகத்திலிருந்து வரவழைத்துத் தருகிறேன்! நான் எப்பொழுது அருகிலிருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறீரோ, அப்போது அந்தத் தெய்வீக வீணையை மீட்டும் அந்த வீணையின் ஒலியிலே நான் வலிய வருவேன்!" என்று கூறி, தேவலோகத்திலிருந்து வீணையொன்றையும் வரவழைத்துக் கொடுத்து, "காதலரே! வீணை பத்திரமாக யிருக்கட்டும். இது உம்மைத் தவிர வேறு யாரிடமும் கைமாற வேண்டாம்! அப்படி மாறினால் நம் காதலும் அதோடு முறிந்து போகும். நானும் உம்மை மறந்து விடுவேன்!" என்று கூறி எச்சரித்து விட்டு, தேவேந்திர சபைக்கு நடனம் புரியச் சென்றாள்.

ரூபகன்னிகை நடனமாடுவதைக் கண்ட சகோதரிகளிருவரும் திகைத்து, தங்கள் சகோதரியிடம் பேச வெட்கப்பட்டு விலகி யிருந்தனர். ரூபகன்னிகை மற்றையோரிடம் மகிழ்வுடன் பேசியிருந்தாள்.

ரூபகன்னிகையைப் பிரிந்து சென்ற மகாசூரனோ தன் நாட்டை நோக்கி வனாந்தரத்தில் சிறிது தூரம் நடந்தான். அவனுக்கு ரூபகன்னிகையின் ஆசை மேலிட்டது. தடாகமும், நீண்ட மரச்சோலைகளும், பளிங்கு மண்டபங்களும் அமைந்த ஓரிடத்தில் அமர்ந்து வீணையை மீட்டினான். உடனே வேல்விழியாள் ரூபகன்னிகையும், தேவலோகத்திலிருந்து வீணையொலியினால் எழுபட்டு ஓடிவந்தாள். தன் காதலனுக்குக் களிப்பும் தரலானாள்

அச்சமயம் அருகாமையில் ஒரு ஆலமரத்தடியினில் தவம் செய்து கொண்டிருந்த முனிவன் ஒருவன், அப்சரஸான

ரூபகன்னிகையின் தெய்வீக அழகைக் கண்டு மையல் கொண்டான். காமத்தால் கருத்திழந்து தவத்தையும் கைவிட்டு மகாசூரனிடம் வந்து, "பூமானே! உனக்கு விசித்திரமான ஒரு வஜ்ஜிர வாள் தருகிறேன். அதைக் கையில் வைத்துக்கொண்டு, யாரைக் கொல்ல வேண்டுமென்று நினைத்துப் பிரயோகித் தோமோ, அவர்களை இரண்டு துண்டாக வெட்டிவிடும். அதற்குப் பிரதியாக இந்த இச்சைக்குகந்த பச்சைக் கிளியை எனக்குக் காணிக்கையாக்கிவிடு!" என்று வேண்டினான். "யோகியாரே! எங்கே வஜ்ஜிர வாளைக் கொடும், பரிசோதித்துப் பார்க்கலாம்!" என்று கேட்ட மகாசூரன், அந்த வஜ்ஜிர வாளைத் தன் கையில் வாங்கியதும் காமத்தால் கருத்திழந்து கசடனாகிய முனிவரை இரு துண்டாக வெட்டி வீழ்த்தினான்.

அந்த இரவு மகாசூரனுக்கும், ரூபகன்னிகைக்கும் இன்ப இரவாகக் கழிந்தது. விடிந்ததும் ரூபகன்னிகை விடைபெற்றுத் தேவலோகம் சென்றாள்.

மறுநாள் மஞ்சள் நிற மாலைக் கதிரவன் மலைவாயிலில் விழுந்ததும், மகாசூரனும் சோலையொன்று பார்த்தமர்ந்து வீணையை மீட்டினான். ரூபகன்னிகையும், ஆகாரப் பொருள், அலங்காரப் பொருள் ஆகியவைகளுடன் வந்து, தன் காதலனை அலங்கரித்துப் பார்த்து அகமகிழ்ந்தாள். அதன் பின்னர் முழு நிலவில், இருவரும் முழு இன்பந்துய்த்திருக்கும் நேரத்தில் அங்கு ஒரு புறம் யோகம் செய்து கொண்டிருந்த தவசிரேஷ்டர் ரூபகன்னிகையின் உல்லாசத்தையும், சல்லாபத்தையும் முகக்காந்தியையும், வளத்தையும் கண்டு, அடங்காத ஆசை கொண்டு மகாசூரனிடம் வந்து, "ராஜபுத்திரனே! எடுக்க எடுக்கக் குறையாத செல்வத்தை வழங்கும் சோளிப்பை ஒன்று தருகிறேன். காதல் கணை தொடுப்பதில் வல்லவளான இந்தத் தோகை மயிலைத் தந்துவிடு!" என்று கெஞ்சினான்.

சோளிப்பையை பார்க்க வேண்டுமென்று கேட்ட மகாசூரன் அதை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டதும், வஜ்ஜிராயுதத்தை ஏவி அவனை இரு துண்டாக்கிவிட்டு, மறுபடியும் ரூப கன்னிகையோடு களித்திருந்தான்.

இவ்விதமே மறுநாள் வனாந்திரத்தில் செல்லும்போது வீணை மீட்டி ரூபகன்னிகையை வரவழைத்து மகாசூரன் மகிழ்ந்திருக்கும் பொழுது, ரூபகன்னிகையை கண்டு மயங்கிய ஒரு ரிஷியிடம், நினைத்த இடத்திற்குத் தூக்கிக் கொண்டு பறக்கக்கூடிய அதிசய மிதியடி ஒன்றையும், அதற்கடுத்த நாள் வந்த சித்து புருஷனிடம், அங்கமங்கமாய் சிதறி செத்தவர்களின்



உடம்பை ஒன்று கூட்டி எழுப்பும் சக்தி வாய்ந்த பிரம்பு ஒன்றையும் பெற்றுக் கொண்டு மகாசூரன் தன் நகருக்குத் திரும்பினான். சிங்கார வனத்திலிருக்கும் தன் மாளிகையில் அந்த அருமைப் பொருள் களைப் பத்திரப்படுத்தி வைத்தான்.

வேண்டும் பொழுது வீணையை ...த்து வாசிப்பான். வேல் விழியாள் வருவாள். பால் மொழி ...சுவாள். பரவசமாவான். பிறகு, பாவை பறந்து சென்று ...வாள்.

இவ்வாறு சில நாட்கள் சென்றன. மகாசூரன் அந்த ...மைப் பொருள்களிருக்கும் அறையை அக்கறையோடு ...னிக்காமல் விட்டுவிட்டான். சில சமயங்களில் அது திறந்தே ...க்கும்.

ஒருநாள் மகாசூரனின் தங்கையான அமிர்தகிரணகலை ...ணனைத் தேடிக்கொண்டு வந்தாள். அவன் தோட்டத்திற்குச் ...ன்றிருந்தான். அதிசயப் பொருள்களின் அறை ...ந்திருப்பதைக் கண்டாள். அமிர்தகிரணகலை உடனே அதனுள் ...ழைந்தாள். "அடே! நம் அண்ணா அருமைப் பொருள்கள் ...நகம் வைத்திருக்கிறாரே!" என்று அதிசயித்து, அவைகளை

ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தாள். முதலில் ஒருபுறம் தொங்கும் சோளிப்பையைப் பார்த்து, ''இதற்குள் பொன்னும் மணிகளுமிருக்குமோ?" என்று நினைத்துக் கொண்டே, பையினுள் கையை விட்டுத் துழாவினுள். அவள் நினைத்தபடியே பொன்னும் மணியும் அதே அளவில் இருந்தன. உடனே அவள் திருக்கிட்டுக் கன்னிமாடம் திரும்பிவிட வேண்டுமென்று நினைத்தவளாய் அவசரத்தில் அங்கு ஒருபுறம் கிடந்த அதிசய மிதியடியில் காலை வைத்தாள். உடனே அந்த மிதியடி அவளைக் கன்னிமாடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தது. மிதியடியை அண்ணன் அறையிலே வைத்துவிட நினைத்தபோது, அடுத்த கணமே அவள் அந்த அறையிலே இருப்பதைக் கண்டாள். அப்போது ஒரு புறம் ஓடிய எலியைக் கண்டு பயந்து, அவ்வறையிலிருந்த வஜ்ஜிரவாளையெடுத்து அதைக் கொல்ல நினைத்தாள். உடனே எலி இரண்டு துண்டாகி விட்டது. அதனுல் தடயம் ஏற்படுமே என்று நினைத்து, அங்கு ஒரு புறமிருந்த அதிசயப் பிரம்பை எடுத்து, எலியின் துண்டுகளைச் சேர்த்து வெளியே தள்ளினுள். உடனே எலி உயிர் பெற்றெழுந்து ஓடியது. அங்கு அண்ணன் வைத்திருப்பது அனைத்தும் அதிசயப் பொருள்கள் என்று விளங்கியது. கடைசியாக அமிர்தகிரணகலை அங்கு ஒருபுறமிருந்த தெய்வீக வீணையை எடுத்தாள், கானம் வாசித்தாள்.

வீணை கானம் விண்ணை முட்டி, தேவலோகத்திற்கு எட்டியது. ரூபகன்னிகை வந்தாள். வீணை தன் காதலன் கையை விட்டு மாறி ஒரு பெண்ணின் கையில் பிடிபட்டிருப்பதைக் கண்டாள்.

"யார் நீ?" என்ற ரூபகன்னிகையின் குரலில் கடுமை தொனித்தது.

இதையெல்லாம் எதிர்பாராத அமிர்தகிரணகலை அதிர்ச்சியுற்றுள். தட்டுத் தடுமாறியபடி "நான் மகாசூரனின் தங்கை!" என்றுள்.

"அவர், இந்த வீணையை உன்னை வாசிக்கச் சொன்னுரா?" என்றுள் தேவகன்னிகை.

"இல்லை" என்றுள் அரசிளங்குமரி.

"நீ இங்கு வந்ததை அவர் அறிவாரா?"

"அறியமாட்டார்!"

உடனே ரூபகன்னிகை, வெடுக்கென்று அமிர்த
ரணகலையின் கையிலிருந்த தேவ வீணையை வாங்கினாள்.
வற்றில் மோதி நொறுக்கினாள். அந்த வீணை சுக்கல்
க்கலாயிற்று. இதைக் கண்டு ஊமையாக நின்றாள்
ழமிர்தகிரணகலை....

"இன்று முதல் உன் தலைவனார் தெய்வீக இன்பத்தை
ழந்து விட்டாரென்று அவரிடம் சொல்!" என்று ரூபகன்னிகை
வடுக்கென்று சொல்லிவிட்டு, விர்ரென்று தேவலோகம்
நாக்கிச் சென்று விட்டாள்.

அமிர்தகிரணகலைக்கு அழுகை அழுகையாக வந்தது. தேள்
காட்டப்பட்ட திருடனைப்போல் தவித்தாள். தன்னுடைய
றியாமையால் தன் அண்ணனுக்கு வந்த அவகேட்டை நினைத்து
டித்தாள். ஆயினும் என்ன செய்வது? யாரிடம் எதுவும்
பசாமல் அரண்மனைக்குச் சென்று விட்டாள்.

சோலையிலிருந்து திரும்பிய மகாசூரன் தன் அறையினுள்
ழைந்தான். உடனே வீணையைக் கண்டான். அவனின்
ள்ளமும் உடைந்தது. மனம் குழம்பியது. மயக்கம் வந்தது.
ந்தி பேதலித்தது. முக்தி தரவல்ல மோகன வீணை சக்தியற்றுப்
பாய் விட்டதே என்று எண்ணும் பொழுது அவன் இதயமே
வடித்துவிடும் போலிருந்தது. தவித்தான்; துடித்தான்;
கறினான்.

அவனுடைய நிலையறிந்த சகோதரர்கள் ஓடிவந்து தங்களுக்கு
தும் தெரியாதென்று கூறி, அவனைத் தேற்ற முற்பட்டனர்.
மிர்தகிரணகலை ஓடி வந்து நடந்ததைத் தெரிவித்துத் தன்னை
ன்னிக்கும்படி வேண்டினாள்.

மகாசூரனோ ரூபகன்னிகையை மறக்கச் சக்தியற்றவனாய்,
ன் காதலியை எப்படியும் தேவலோகத்திலிருந்து மீண்டு
டைவது என்ற முடிவுடன், சோளி, வாள், பிரம்பு முதலி
பற்றுடன், பாத குறட்டின் மேலேறி எல்லோரிடமும், "வந்தால்
பகன்னிகையுடன் வருவேன். இல்லையேல் வரமாட்டேன்!"
ன்று கூறி விடைபெற்றான். யாவரும், "மகாசூரா! தேவ
ன்னிகைக்கும் பூலோகத்தாருக்கும் பொருந்தி வராது. நீ
தவலோகம் போக இயலுமா? நமது இனத்தில் தேவ
ன்னிகையையும் வெல்லும் பேரழகு வாய்ந்த பெண்கள்
நக்கிறார்கள். அவர்களில் ஒருத்தியை மணந்து கொண்டு
வாழ்வுடனிரு!" என்று எவ்வளவோ வேண்டினர். கேட்கவில்லை
காசூரன்! பறக்கும் மிதியடிகளை அணிந்து கொண்டு தான்
னத்தபடி நேராகத் தேவலோகம் சென்றான்.

தேவ சபையில் தேவகன்னிகைகள் திருநடனம் புரிந்து கொண்டிருப்பதை மகாசூரன் கண்டான். அப்போது தேவசபையில், மானிடன் நிற்பதை அறிந்த தேவதூதர்கள், "யாரப்பா நீ? மானிடன் தேவசபைக்கு வந்திருக்கிறாய்? போ! போ!" என்று அலட்சியமாக அதட்டினார்கள். அதைக் கேட்ட மகாசூரன், "இந்திரனுக்கு வந்த தொந்திரவெல்லாம் தேவர்களால் தீர்ந்ததா? மானிடரின் மகிமையால் தீர்ந்ததா?" என்று துடுக்காகக் கேட்டான்.

இதைக்கேட்ட தேவர்கள் இந்திரனிடம் சென்று, "தேவேந்திரா! நமது சபையில் நரன் ஒருவன் வந்திருக்கிறான். அவன் தங்களைச் சற்றும் மதியாமல் பேசுகிறான்" என்று கூற, கோபம் கொண்ட தேவேந்திரன் கோடானு கோடி சுந்தரவரக்கர்களை அனுப்பி "அந்த நரனை நசுக்குங்கள்!" என்று கட்டளையிட்டான்.

அரக்கர்கள் புறப்படுவதைக் கண்டு அஞ்சினாள் ரூபகன்னிகை. ஆனால் அடுத்த கணமே "நம் காதலனிடம் வஜ்ஜிராயுதமிருக்கிறதே!" என்று எண்ணி ஆறுதலுடன் அகமகிழ்ந்திருந்தாள்.

அரக்கர்கள் யாவரும் மகாசூரனை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்தனர். மகாசூரன் அவர்களுக்கு எவ்வளவோ கூறியும் கேட்காததால், வஜ்ஜிரவாளை ஏவினான். அது அவர்களைச் சின்ன பின்னமாக்கிச் சிரமறுத்து வந்தது.

இதையறிந்த தேவேந்திரன், மகாசூரனின் வல்லமையில் மதிப்பு வைத்து அவனை நேரில் காண வந்தான். "மானிடனே! நீ யார்? இங்கு நாடிவந்த காரியம் என்ன?" என்று விசாரித்தான்.

"தேவ தேவா! தர்மபுரியை ஆண்ட தர்மேந்திர மன்னனின் மூன்றாவது குமாரன் நான். என் பெயர் மகாசூரன். இங்கு நடனமாடும் ரூபகன்னிகை, என் இதயம் கவர்ந்தவள். அவளுக்கும் எனக்கும் வெகு நாளாகவே காதலின் தொடர்புண்டு. அவளைப் பூவுலகிற்கு அழைத்துப் போகவே அவசரமாக வந்தேன்" என்றான் மகாசூரன்.

"வீரனே! என்னுடைய சபையில் நடனமாடும் நாரீமணிகள், ஒன்று, இரண்டல்ல! ஐம்பது லக்ஷம் ஆரணங்குகள்! அவர்களில் ரூபகன்னிகை யாரென்று நீ தேடுவாய்?" என்று கூறியபடி தேவேந்திரன் மகாசூரனை அழைத்துச் சென்று தன் சபையின் நடன நிகழ்ச்சியைக் காண்பித்தான்.

சட்டென்று மகாசூரன், "அதோ! அவளேதான்!" என்று, அங்கே ஒன்றாக ஆடிய மூன்று சகோதரிகளில் இளையவளைக் காண்பித்தான். தேவேந்திரன் அவர்களை அழைத்து, "நடன ராணிகளே! நரனைக் காதலித்த பின்பு தேவலோகம் வரலாமா? நீங்கள் அளவிற்கு மீறி ஆசை கொள்ளும் ஆரணங்குகள். ஆகவே இன்று முதல் நீங்கள் மூவரும் மகாசூரனின் அடிமைகள்! அவன் சொற்படி கேட்டு பூலோகத்தில் வாழுங்கள். போங்கள்!" என்று உத்தரவிட்டான். பிறகு மகாசூரனை நோக்கி "மகாசூரா! நீ யாரென்று அறியாமல் அரக்கர்களை ஏவினேன். அவ்வளவு பேரையும் கொன்று குவித்து விட்டாய். என் படையில் பாதிபலம் போயிற்று. நீயாவது, தன்னை யாரென்று தெரிவித்திருக்கக் கூடாதா?" என்று வருந்தினான்.

இது கேட்ட மகாசூரன், "கவலை வேண்டாம் தேவ தேவா! கணத்தில் அவ்வரக்கர்களை உயிர்ப்பிக்கிறேன்!" என்று கூறி, அதிசயப் பிரம்பால் அவர்களைத் தட்டி எழுப்பினான். இறந்த அரக்கர்களும், உறக்கத்திலிருந்தவர்களைப் போல விழித் தெழுந்தார்கள்.

இதைக் கண்டு மகிழ்ந்த இந்திரன், மகாசூரனுக்கு வஜ்ஜிரக்கொழுந்து, கச்சிதமணி, உற்சிதப்பனைகள், உச்சிதசாஸ்த்திரம் முதலானவற்றைக் கொடுத்து, மூன்று தேவகன்னிகையரையும் அவனிடம் ஒப்புவித்து வழியனுப்பி வைத்தான்.

காடு, மலை, மேடு, பள்ளமெல்லாங்கடந்து மகாசூரன் பூவுலகில் வந்து கொண்டிருக்கும்போது தேவ கன்னிகையர் மூவரும் கவலையுடன் அவனைப் பின்பற்றி வந்தார்கள். ரூபகன்னிகையானவள் "வீணையை உடைத்த செயலுக்காக நம்மை இந்த மகாசூரர் தண்டிப்பாரோ?" என்று கலங்கியபடி வர, மற்ற இரு கன்னிகையரும், "ஐயோ! முன்னொரு சமயம், அவருடைய காதலியாகிய ரூபகன்னிகையை நையப்புடைத்துக் கொன்றதற்காக நம்மைத் தண்டிப்பாரோ?" என்று அஞ்சியபடியே மகாசூரனுடன் வழி நடந்தார்கள்.

தேவர்களும், தேவமாதர்களும் அரக்கர்களின் அட்டகாசத்தால் பாதிக்கப்பட்ட காலத்தில், பூர்வத்திலிருந்த தேவேந்திரன், "தேவ மாதர்களையாவது, தேவலோகத்துப் பொருள்களையாவது அரக்கர்களோ, அன்றி மானிடர்களோ கவர்ந்து சென்றால் அவர்களை அக்கினி விளைக்கக்கடவது" என்று சாபமிட்டிருந்தான். இது யாருக்குந் தெரியாது. அப்படி யாருக்காவது தெரிந்திருந்தால் பிரசித்தியில்லாமலிருக்கக் கூடும்.

அந்தப் பழைய சாபப்படி, மகாசூரன் தேவ கன்னிகைகளை அழைத்துவந்த வழியில் அக்கினி மூண்டு வளைத்துக் கொண்டது.

மகாசூரன் இவ்வாறு திண்டாடி நிற்க, அவன் மாதா பிதாவும் உடன்பிறந்தோரும் மகாசூரனைக் காணாமல் பரிதவித்து மகிமை வாய்ந்த ஜோதிடரை வரவழைத்து, மர்மம் என்னவென்று வினவ, அவரும், "மகாசூரன் எடுத்த காரியம் வெற்றிதான்! ஆனால் வழியில் வந்திருக்கிறது ஆபத்து. மூன்று தேவ கன்னிகையரையும் மகாசூரனையுஞ் சுற்றி மூண்டிருக்கிறது தேவாக்கினி! இன்னும் சில விநாடிகளில் ஆபத்து வரலாம்!" என்று கூறவே, அனைவரும் பதறியெழுந்து வாகனமேறி, அக்கினி சூழ்ந்த இடத்திற்கு அவசரமாக வந்து சேர்ந்தனர்.

மகாசூரன் நிற்குமிடத்திற்கு வந்த அனைவரும் அங்கு இரத்தின மயமான ஒரு கோவில் இருப்பதைக்கண்டு, சதுரங்க சேனைகளை வெளியே நிறுத்திவிட்டு உள்ளே சென்றனர், கோயிலின் கிழக்கே சமுத்திரத்தைப் போன்ற ஒரு திருக்குளமிருந்தது. அந்தக் குளம் நெருப்பு மயமாய் எரிந்து கொண்டிருந்தது. அங்கே ஒரு கல்லிருந்தது. அதில், "அக்கோவிலின் மேலேறி, அக்கினிக் குளத்தில் குதித்தால், குதித்தவர்களைப் பாதாள லோகத்திற்குக் கொண்டு போகும். அங்கே ஜெகதீஸ்வரரிருக்கிறார். அவரைத் தரிசித்தால், எந்த ஆபத்தும் நீங்கி, வேண்டிய வரமும் பெறலாம். இவையெல்லாம் ஒரு ஜாமத்திற்குள் நிகழ வேண்டும்!" என்று எழுதியிருந்தது.

இதைக்கண்ட தமையன்மாரும், தாய் தந்தையரும், ஒவ்வொருவரும் தங்களின் உயிரை வெல்லக் கட்டியெனக்கருதி, தியாகம் செய்யத் தயங்கி, "நீ போ! நான் மாட்டேன்!" என்று சச்சரவு செய்து கொண்டிருந்தார்கள்.

இவ்வாறு தூதன் கூறிய வரலாற்றைக் கேட்ட விக்கிரமாதித்தன், தன் தியாகத்தைக் காண்பிக்க ஒரு சந்தர்ப்பங் கிடைத்ததை எண்ணிச் சந்தோஷங்கொண்டான். அந்தச் சமயம் காடாறு மாதம் புறப்படும் சமயமானபடியால் மந்திரி பட்டியிடம் இராஜ்ய நிர்வாகத்தை ஒப்புவித்துவிட்டு, உஜ்ஜயினி ஓம் காளியை உள்ளத்தில் துதித்து, வேதாளத்தின் மீதேறி வெகு விரைவாகச் சென்று இரத்தினமயமான கோவிலை அடைந்தான்.

அந்தக் கோவிலின் மேலேறி அனல் கக்கும் குளத்தில் குதித்து, உள்ளே மூழ்கிப் பாதாள பரமேஸ்வரரைப் பார்த்து

வணங்கி, மந்திரவாளைக் கைக்கொண்டு, "நான் வந்த காரியம் சித்தியாக வேண்டும்" என்று வணங்கினான்.

மங்கைபாகனும் விடைமேல் எழுந்தருளி நாலு குளிகைகளைக் கொடுத்து, "விக்கிரமாதித்தா! இதில் ஒரு குளிகையைப் போட்டாலே எண்ணிய எண்ணம் ஈடேறும்!" என்று அருள்பாலித்து மறைந்தார்.

வெளியே வந்த விக்கிரமாதித்தன் மகாசூரனை வளைத்துக் கொண்ட அனலை நோக்கி ஒரு குளிகையை வீசினான். உடனே தண்ணீர் சொரிந்து தேவாக்கினி அணைந்து போயிற்று.

மகாசூரன் மூன்று தேவ கன்னிகையர்களுடன் வெளியே வந்தான். விக்கிரமாதித்தனைக் கண்டு வணங்கினான்.

ரூபகன்னிகையின் மேல் மோகங்கொண்டு உயிரிழந்த சந்நியாசிகளை உயிர்பெற்றெழச் செய்து, அவர்களுடைய வஜ்ஜிராயுதம், பிரம்பு, மிதியடி, சோளிப்பை ஆகியவற்றை மகாசூரனிடமிருந்து வாங்கி சந்நியாசிகளிடமே கொடுத்தான் விக்கிரமாதித்தன்.

அந்தச் சந்நியாசிகளும், தாங்கள் செய்த தவறை உணர்ந்து, தங்களுக்கு இனிமேல் இந்த ஆயுதமெல்லாம் வேண்டாமென்று கூறி, அவைகளைத் திருப்பி விக்கிரமாதித்தனிடமே கொடுத்தனர்.

விக்கிரமாதித்தனும் அவைகளை மகாசூரனிடமே கொடுத்து, ரூபகன்னிகையுடன் இன்புற்று வாழும்படி கூறி, மற்ற இரு தேவகன்னிகையரையும், மற்ற இரு சகோதரர்களிடம் ஒப்படைத்துவிட்டு மீதியிருந்த குளிகை மூன்றையும் மூன்று சகோதரர்களுக்கும் கொடுத்து யாவரிடமும் விடைபெற்றுக் கொண்டு வேதாளத்தின் மீதேறி உஜ்ஜயினிப்பட்டணத்தை வந்தடைந்து, சிம்மாசனத்தில் அமர்ந்து நாடாறுமாதம் அரசாண்டான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த பதுமை, "கேட்டீரா போஜ மகாராஜரே! எங்கள் விக்கிரமாதித்த மன்னனைப் போன்ற வீரம் தியாகத்திறமை உம்மிடமிருந்தாலன்றோ இச்சிம்மாசனத்தில் ஏறி அமரலாம்!" என்றது. அச்சமயம் சூரியாஸ்தமனமும் ஆகிவிட்டது!

(மேற்கூறிய கதைக்குப் பதில் வடமொழி மூலத்தில் பிரபோதவதி என்னும் பதுமை பின்வரும் கதையைக் கூறியதாக உள்ளது.)

## இரவிலே கேட்ட அழுகுரலின் கதை



விக்கிரமாதித்தன் ராஜ்ஜிய பரிபாலனம் செய்துவரும் நாளையில் உஜ்ஜயினி நகரத்தில் பத்ரசேனன் என்னும் பணக்கார வியாபாரிக்குப் புரந்தரன் என்ற ஒரு மைந்தன் இருந்தான். காலப் போக்கில் தகப்பனார் இறந்ததும் அவருடைய அளவற்ற ஐசுவரியங்களுக்கு வாரிசான புரந்தரன் ஊதாரி நண்பர்களோடு சேர்ந்து கொண்டு பணத்தைக் கண்டபடி செலவழிக்கத் தொடங்கினான்.

புரந்தரனின் போக்கு அவன் நண்பர்களில் ஒருவனான தனதன் என்பானுக்குப் பிடிக்கவில்லை. அவன் நண்பனை அழைத்துச் சொன்னான். "புரந்தரா! புத்திசாலியான மனிதன் எதிர்காலத்தில் ஏதாவது கஷ்டம் நேரிடுமோ என்று செல்வத்தைச் சேமித்து வைப்பானே தவிர வீணாக்கமாட்டான். இதை நீ மறந்து விட்டாயா?" என்றான்.

"இல்லை. தனதா! ஒருவன் தான் சேர்த்து வைத்துள்ள செல்வம் எதிர்பாராத கஷ்டங்கள் நேரிடும்போது உபயோகப் படுமென்று எவனொருவன் சொல்லுகிறானோ, அவனைச் சிந்தனா சக்தியற்றவன் (விசார சூன்யம்) என்றே அழைக்கலாம். கஷ்டங்கள் நேரும்போது, நாம் சேர்த்து வைத்திருக்கும் செல்வமும் போய்விடும். ஆகவே, புத்திசாலியான மனிதன் சென்ற காலத்தைப் பற்றி வருத்தப்படவோ வருங்காலத்தைக் குறித்துக் கவலைப்படவோ மாட்டான்; நிகழ் காலத்திலேயே தன் கவனத்தைச் செலுத்துவான்.

செல்வமெல்லாம் போகவேண்டிய விதியிருந்தால் பொருளை நம் உள்ளங்கையில் வைத்து மூடிக்கொண்டிருந்தாலும் அது நம்மை விட்டு எவ்விதத்திலாகிலும் போய்விடும். அப்படியிருக்க நாம் ஏன் வருங்காலத்தைப் பற்றி வருத்தப்பட வேண்டும்?" என்று சொல்லிவிட்டான் புரந்தரன். அதன்பின் அவரவர் விதிப்படி நடக்கட்டும் என்று தனதனும் பேசாமலிருந்து விட்டான்.

புரந்தரனே, மனம் போனபடி ஊதாரி நண்பர்களுடன் சேர்ந்து கொண்டு பணத்தை வாரியிறைத்தான். கொஞ்சம் கொஞ்சமாகச் செல்வம் கரைந்து வந்தது. கடைசியில் ஒரு நாள் புரந்தரன் ஏழையாக நின்றான். அவனிடத்தில் பணமில்லை என்று தெரிந்ததும் நண்பர்கள் மெதுவாக நழுவி விட்டனர். அப்போதுதான் புரந்தரனுக்கு நண்பர்களின் உண்மை உருவம் தெளிவாகத் தெரிந்தது.

"ஹா! எவனிடம் பணம் இருக்கிறதோ அவனுக்குத்தான் நண்பர்களும், உறவினர்களும் இருப்பார்கள்; அவன் தான் உலகத்தில் சிறந்த மனிதனாகவும் அறிவாளியாகவும் விளங்குகிறான் என்பார்கள். ஒருவனுடைய செல்வம் போய்விட்டால் அவன் மனைவி கூட அவனுக்குச் சரியாக மதிப்புக் கொடுத்து நடத்தமாட்டாள். ஆகவே, ஏழ்மையை விடச் சாவே மேலானது! இன்னும், ஏழை இறந்தவனாக ஆகிறான். பிள்ளைப் பேற்றை அடைய முடியாத இல்லற சுகமும் உயிரற்றது. அற நூலைப் படிக்காத ஒருவனுக்கு அளிக்கும் தானம் ஜீவன் இல்லாதது. தக்ஷிணை வழங்காமல் செய்யும் வேள்வியும் உயிரற்றதே!"

இப்படியாகப் பற்பல எண்ணங்கள் புரந்தரனின் உள்ளத்தில் தோன்றின. அவன் உஜ்ஜயினியை விட்டுவிட்டு வெளியேறி, ஊர் ஊராகச் சுற்றி வருகையில் இமாலய மலைச்சாரலில் உள்ள ஒரு நகரத்திற்கு வந்து சேர்ந்தான். அப்போது மாலை மறைந்து இருள் நன்கு பரவி விட்டது. அனேகமாக எல்லோருடைய வீடுகளிலும் இரவுப் படுக்கை ஆகிவிட்டதெனலாம். ஆகவே, இரவைக் கழிக்க அவன் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்துறங்கினான். நடு இரவிலே அழுகுரல் ஒன்று கேட்டுப் புரந்தரன் திடுக்கிட்டு விழித்தான்.

"ஐயோ! என்னைக் காப்பாற்றுங்கள். இந்த ராக்ஷஸன் என்னைக் கொல்லுகிறானே!" என்று பெண் ஒருத்தி அலறி அழுதது கேட்டது. குரல் வந்த திக்கிலிருந்து அச்சப்தம் நகருக்கு வெளியேயுள்ள மூங்கில் புதர் அருகிலிருந்து வருகிறதென உணர்ந்தான். அச்சப்தத்தைக் கேட்டு அவன் இரவு முழுதும் தூங்கவில்லை. பொழுது விடிந்ததும் அவ்வழியே வந்த மனிதர்களை நிறுத்தி, முன்னிரவில் மூங்கில் புதரில் பெண்ணின் அழுகுரல் கேட்ட விசித்திரத்தைப் பற்றி விசாரித்தான். அதற்கு அவர்கள் "ஐயா! அந்தப் புதரிலிருந்து ஒவ்வொரு நாள் நடு இரவிலும் இம்மாதிரிக் கூக்குரல் கேட்கிறது. ஆனால் அந்த இருட்டு நேரத்தில் அங்கு சென்று

பார்க்க யாருக்கும் தைரியமில்லை. மறுநாட்காலையில் போய்ப் பார்த்தாலோ அங்கே புதரில் எதுவும் தென்படுவதில்லை. நடு இரவிலே மட்டும் இவ்விசித்திரம் நடைபெறுகிறது" என்று பதிலளித்தார்கள். பரிதாபமாக அலறிய அந்தப் பெண்ணைக் காப்பாற்ற புரந்தரன் விரும்பினாலும், நகரத்து மக்களே பயப்படும் போது அவன் ஒருவனால் மட்டும் என்ன செய்ய முடியும்? ஆகவே, பேசாமல் சொந்த ஊர் திரும்பியதும் அந்த விசித்திரத்தைப் பற்றி விக்கிரமாதித்த மன்னனிடம் தெரிவித்தான்.

''புரந்தரா! என்னுடன் உடனே கிளம்பு. அந்தப் பெண்ணின் அபயக் குரலுக்கான காரணத்தை நான் அறிய விரும்புகிறேன். அவளைக் காப்பாற்ற வேண்டும்" என்றான் விக்கிரமாதித்தன்.

இருவரும் அன்றைய தினமே புறப்பட்டனர். அந்த ஊரை அடைந்ததும் இருவரும் ஒரு வீட்டுத் திண்ணையில் இரவை எதிர்நோக்கிக் காத்திருந்தனர். நடு இரவிலே பெண்ணின் அபயக் குரல் எழுந்தது. அதைக் கேட்டதும் விக்கிரமன், புரந்தரனை அழைத்துக் கொண்டு மூங்கில் புதர் இருக்கு மிடத்திற்குச் சென்றான். அங்கு அவர்கள் கண்ட காட்சி மயிர்க் கூச்செல் எடுக்கும்படியாக இருந்தது. பயங்கரமான உருவத்தையுடைய இராக்ஷஸன் ஒருவன் இளம் பெண்ணைக் கொல்ல முயன்று கொண்டிருந்தான்.

அதைக் கண்டதும் விக்கிரமாதித்தன் கோபம் அடைந்தான். "அடே பாபி! ஏன் அனாதரவான இந்தப் பெண்ணை இப்படி வருத்துகிறாய்?" என்று கேட்டான்.

"அடே! அதைப் பற்றி உனக்கென்ன? உன் வழியே நீ போ. அனாவசியமாகத் தலையிட்டால் என் கைகளால் மரணத்தை அடைவாய்" என்று கடிந்து கொண்டான் இராக்ஷஸன்.

"முடியாது, நாயே! உன்னால் முடிந்ததைச் செய். இந்தப் பெண்ணைக் காப்பாற்றவே நான் இங்கு வந்துள்ளேன்" என்று அலட்சியமாகப் பதில் அளித்தான் விக்கிரமாதித்தன்.

இராக்ஷஸன் கடுங்கோபத்தோடு விக்கிரமாதித்தன் மீது பாய்ந்தான். விக்கிரமாதித்தனும் தைரியத்தை விடாமல் அவனை எதிர்த்துப் போரிட்டான். மன்னவனின் வீரத்திற்கு முன்பு இராக்ஷஸனால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. கடைசியில் உயிரிழந்து கீழே விழுந்தான். இராக்ஷஸன் இறந்து விட்டதைக்

கண்ட அப்பெண் ஓடோடி வந்து அரசனின் கால்களில் விழுந்து வணங்கினாள். "பிரபோ! உங்கள் கருணையினால் இன்று என்னுடைய சாபம் நிவர்த்தி அடைந்தது. துன்பம் நிறைந்த பயங்கர சமுத்திரமான இவ்விபத்திலிருந்து தாங்கள் என்னைக் காப்பாற்றிக் கரையேற்றினீர்கள்." என்று கண்ணீர் ஆறாய்ப் பெருகச் சொன்னாள்.

"பெண்ணே, நீ யார்? எவ்விதம் இந்தக் கொடிய இராக்ஷஸனிடம் வந்து சிக்கிக் கொண்டாய்?" என்று விக்கிரமாதித்தன் கேட்டான்.

"பிரபோ! இந்நகரத்தில் பணக்கார அந்தணர் ஒருவர் இருந்தார். அவருடைய மனைவி நான். அவருக்கு என்மீது மட்டில்லா அன்பு. நானோ அவரை மதிக்காமல் சுயேச்சையாகத் திரிந்து வந்தேன். என் அழகிலும், யௌவனத்திலும் பெருமை கொண்ட நான், அவர் இச்சைக்கு இணங்குவதில்லை. ஆகவே, என்னிடம் தன் இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியாமல் போய்விட்ட அவர் தமது அந்திய காலத்தில் வெறுப்புக் கொண்டு என்னை நோக்கி "நடத்தை கெட்டு பாபத்தின் உருவானவளே! என்னுடைய வாழ்நாள் முழுவதும் உனக்காக ஏங்கி ஏங்கி வீணாகிவிட்டது. இதற்குப் பழியாக ஊருக்கு வெளியே இருக்கும் மூங்கில் புதரில் வாசம் செய்யும் இராக்ஷஸன் உன்னை அடையட்டும். உன் விருப்பத்துக்கு மாறாக அவன் உன்னை அடைந்து, ஒவ்வொரு இரவும் கொடுமைப்படுத்தி உன்னைக் கொன்று விடட்டும்" என்று சபித்துவிட்டார். சாபத்தைக் கேட்ட பிறகுதான் என் கண்கள் திறந்தன. நான் செய்த பிழைகள் நினைவுக்கு வந்தன. அவர் காலில் விழுந்து, என்னை மன்னிக்கும்படி வேண்டினேன். "நாதா! என் பிழையைப் பொறுத்தருளுங்கள். இந்தச் சாபத்திலிருந்து எனக்கு விமோசனத்தை அளியுங்கள்" என்று கதறினேன். அதற்கு அவர் "எப்போது வீரமும், மகாதைரியமும், உதார குணமும் நிறைந்தவனும், பிறருக்காகத் தன் வாழ்க்கையை அர்ப்பணிப்பவனுமான விக்கிரமாதித்தன் வந்து இராக்ஷஸனைக் கொன்று உன்னை மீட்கிறானோ, அன்று உன் சாபம் விமோசனமடையும்" என்று சொல்லிவிட்டு அவர் உயிர் நீத்தார். அன்றிலிருந்து நான் இக்கொடிய இராக்ஷஸனின் கொடுமைக்கு ஆளாகி வருகிறேன். இப்போது தாங்கள் என்னைக் காப்பாற்றினீர்கள். இருந்த போதிலும் என்னால் அதிக நேரம் உயிர் தரித்திருக்க முடியாது. மரணத்தின் வாயிலில் நிற்கிறேன். என்னிடம் ஒன்பது ஜாடி நிறையத் தங்கம் இருக்கிறது. அவற்றைத் தாங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்.

இதுதான் என்னால் செய்யக் கூடியது" என்று சொல்லி தங்கம் இருக்குமிடத்தைக் கூறிவிட்டு உயிர் நீத்தாள்.

அவளால் கொடுக்கப்பட்ட தங்கத்தை விக்கிரமாதித்தன் தான் எடுத்துக்கொள்ளவில்லை. அனைத்தையும் வறியவனான புரந்தரனுக்கே கொடுத்து விட்டு உஜ்ஜயினி திரும்பினான்.

## 13-வது சூரியப் பிரகாசவல்லிப் பதுமை சொல்லிய விசித்திரக்கலையின் கதை

மறுநாள் போஜராஜன் அதிசயச் சிம்மாசனத்தின் மீது ஏற முயன்ற போது, பதின்மூன்றாவது படிக்குக் காவலாக விளங்கிய சூரியப்பிரகாச வல்லிப் பதுமை விக்கிரமாதித்தனைப் பற்றிய புதிய கதையொன்றைக் கூறத் தொடங்கியது.



தங்கபுரி என்னும் பட்டணத்தை ஆண்டு வந்த அரசனுக்குச் சகல சம்பத்துமிருந்தும், குலம் வாழ ஒரு குழந்தையில்லாமலிருந்தது பெருங் குறையாகயிருந்தது. வெகு காலம் தவமிருந்த பின் பராசக்தியின் அருளினால் அவனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

அந்தக் குழந்தைக்கு விசித்திர கலையென்று பெயர் வைத்துச் சகல கலைகளும் கற்பிக்கச் செய்தான். விசித்திரகலையும் வளர்பிறைச் சந்திரனைப்போல் வளர்ந்து பூரணப் பொலிவுடன் மணப் பருவத்தையடைந்தாள். அவள் அழகிற்கும், அறிவிற்கும் ஏற்ற மணமகனை அகிலமெங்கும் தேடிக்கொண்டிருந்தான் மன்னன்.

அச்சமயம், மல்லிகார்ஜுனம் என்ற பெயருள்ள மலையிலே மிருகாங்கிதன் என்னும் மந்திரவாதி ஒருவனிருந்தான். அவன் ஆண்டவனைக் குறித்து அனேகமாண்டுகள் தவம் செய்து,

எவருக்கும் வல்லவனாய் விளங்கி அகிலமெங்கும் அட்டகாசங்கள் பல செய்து வந்தான்.

ஒருநாள் ஆகாய வீதியில் சஞ்சரிக்கும்போது அரண்மனை உப்பரிகையொன்றில் தோழிகளுடன் உல்லாசமாக விளையாடிக் கொண்டிருந்த விசித்திரகலையைப் பார்த்தான்! அவளுடைய ஒப்பற்ற அழகில் மயங்கி அவள்மீது அளவிலாத மோகம் கொண்டான்.

"நாளை நம் பிரமச்சரிய விரதம் முடிந்ததும் இந்த நங்கையை நாம் எடுத்துச் செல்லலாம்" என்று மந்திரவாதி மிருகாங்கிதன் உறுமிவிட்டு உலகின் முகட்டிலே ஊர்ந்து சென்று விட்டான்.

மிருகாங்கிதன் தன் அழகில் மயங்கித் தவிப்பதைக் கண்டு கொண்டதும் விசித்திரகலை விளை வந்ததென்று முடிவு செய்தாள். எப்படியும் அந்த மந்திரவாதியின் கரங்களில் சிக்காமல் தப்பவேண்டுமென்று நினைந்து தந்தையிடம் ஓடினாள்.

விசித்திரகலை தன் தந்தையிடம், "அப்பா! அரக்கன் என்னைக் கண்டு மோகங் கொண்டு போகிறான். என்ன மோசம் விளையுமோ?" என்றாள்.

நாடாளும் மன்னவனோ, "என் செல்வமே! அக்கொடிய மந்திரவாதியை வெல்ல நம்மாலெல்லாம் முடியாது! நம் குலதெய்வமாகிய எல்லம்மனிடம் சென்று முறையிடு வழிபிறக்கும்!" என்றான்.

அவ்விதமே விசித்திரகலை, இரவு பதினைந்து நாழிகை வேளையில் புறப்பட்டு எல்லம்மன் கோவிலுக்குச் சென்றாள். அப்போது தேவி வெளியே சென்றிருந்ததால், விசித்திரகலை கோவிலுக்குள் நுழைந்து கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு விட்டாள். திரும்பி வந்த எல்லம்மன் ஆலயக்கதவு உட்புறந் தாளிட்டிருப்பதைக் கண்டு, "என் கோவிலுக்குள் நுழைந்து கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டது யார்?" என்று அதட்டினாள்.

அதற்கு விசித்திரகலை, "தாயே! எனக்கு அடைக்கலம் தா. அப்போதுதான் கதவைத் திறப்பேன்!" என்று கூவிப் புலம்பித்தான் வந்த காரியத்தைச் சொன்னாள்.

எல்லம்மன் திகைத்து, "குழந்தாய்! அந்த அரக்க மனம் படைத்த மந்திரவாதி எவராலும் சாகான்! எந்த ஆயுதத்தாலும்

இந்த உலகம் விட்டுப் போகான்! அக்கினியில் போட்டாலும் வேகான்! அவனை வெல்லும் சக்திபடைத்தவன் உஜ்ஜயினிப் பட்டணத்தை ஆளும் விக்கிரமாதித்த மன்னன் தான்! இப்போதே இங்கிருந்து புறப்பட்டுச் சென்று அந்த மகாபுருஷனிடம் அடைக்கலம் புகுந்து கொள். இல்லையேல் உனக்கிடம் கொடுத்த என்னையும் இக்கோவிலையும் அந்தக் கல்நெஞ்சன் சின்னாபின்னப்படுத்திவிடுவான்!" என்றாள்.

அதன் பின்னர் விசித்திரகலை தற்காப்பிற்காகத் தன் வயது மாறாமல், ஆனால் பார்வைக்கு மட்டுங் கிழத்தோற்றத்தைப் பெற்றுக் கொண்டு உஜ்ஜயினிக்கு வந்தாள். அங்கு அன்னமிடும் நங்கையென்பவளின் வீட்டில் பணங்கொடுத்துத் தங்கினாள்.

ஒருநாள் இரவு! நல்ல நிலவு! உல்லாசமாக வீணையை மீட்டிப் பாடிக்கொண்டிருந்தாள் விசித்திரகலை. நாற்புறமுங் குடிகொண்டிருந்த ஆழ்ந்த அமைதியினூடே காற்றில் மிதந்துவரும் காதுக்கினிமையான அவளுடைய வீணா கானத்தை, அப்போது நகர் சோதனைக்காக வந்த விக்கிரமாதித்தன் கேட்டு மதிமயங்கி நின்றுவிட்டான். இரவு கழிந்ததையும், பொழுது புலர்ந்ததையுங்கூட அவன் உணராதவனாகப் போனான்.

காலையில் அரண்மனைக்குச் சென்று, "நேற்றிரவு அன்னமிடும் நங்கை வீட்டிலிருந்து, வீணாகானத்தால் என் இருதயத்தைக் கன்னமிட்ட கன்னிகை யாரென்று கண்டு அழைத்துவாரும்" என்று அமைச்சருக்கு உத்தரவிட்டான்.

அமைச்சரும் அக்கட்டளையைக் காரியசித்தியென்னுங் காரியக்காரனுக்கு அனுப்பினார். அவன் அன்னமிடும், நங்கையிடம் சென்று வாதாடி, விசித்திரகலையை அழைத்து வந்து விக்கிரமாதித்தனின் அரசவையில் நிறுத்தினான்.

அரசனும் அவளை இன்னிசை மண்டபத்தில் அமர்ந்து பாடச் சொன்னான். விசித்திரகலையும் ஈடிணையில்லாத மோகன கீதமிசைத்துப் பாடி மகிழ்வித்து மன்னவனைப் பரவசப்படுத்தினாள்.

அதைக் கேட்டு ஆனந்தம் கொண்ட விக்கிரமாதித்தன் "சத்துள்ள சங்கீதக் கலையையும், சாரீரத்தையும், புத்தியையும் அளித்த இயற்கை, இவளுக்குச் சரீரத்தை மட்டுந் தளரச் செய்துவிட்டதே. அதிகமாகப் போனால் பதினாறு வயதிருக்கலாம். ஆனால் முகத்தில் முதுமைத் தோற்றம் படர்ந்து உடல் கிழத்தன்மை பொருந்தியிருக்கிறதே?" என்று விக்கிரமாதித்தன்

வியந்தவனாய், விசித்திரகலையைத் தனியே அழைத்து, "இன்னிசைக் கோகிலமே! நீ யார்? இளமையிலேயே நீ முதுமையடையவேண்டிய காரணமென்ன?" என்று பரிவுடன் கேட்டான்.

விசித்திரகலை தன் கதையைக் கூறி, "அரசர்க்கெல்லாம் அரசே! அரும்பெரும் சக்திகள் பெற்ற தாங்கள் தான் என்னை அந்தக் கொடிய மந்திரவாதியிடமிருந்து காத்தருளவேண்டும்!" என்று வேண்டி நின்றாள்.

விக்கிரமாதித்தன் மனம் மகிழ்ந்து, "விசித்திரகலை! நானிருக்கப் பயமேன்? இப்போதே உன் கிழத்தோற்றத்தை விட்டுவிடு! இப்போது தக்ஷிணாயனமாகையால் உத்தராயனம் பிறந்தவுடன் உன்னை மணந்து கொள்ளுகிறேன். அந்த அரக்கனைப்பற்றிய நினைவை அடியோடு மறந்துவிடு!" என்று ஆறுதல் கூறினான்.

உடனே விசித்திரகலை காளிதேவியைச் சிந்திக்க கிழத்தனம் மறைந்து, வலிவும் வனப்புமுள்ள இளமையைப் பெற்று எழிலரசியாகத் திகழ்ந்தாள். அவளுக்கு விக்கிரமாதித்தன் தனியாக ஒரு கன்னிமாடம் எழுப்பி, எந்த நேரத்திலுங் குறைவில்லாத ராஜ போகத்தில் அவளைத் திளைக்கும்படி செய்து, அடிக்கடி வீணைகானங்கேட்டு விருப்புற்றிருந்தான்.

நாடாறு மாதம் முடிந்து காடாறு மாதமுந் துவங்கியது. அப்பொழுது விக்கிரமாதித்தன் தன் மந்திரி பட்டியிடம் இராஜ்யத்தை ஒப்படைத்து, "பட்டி! நம்மிடம் அடைக்கலம் புகுந்த விசித்திரகலையைக் கண்ணின் மணிபோல் பாதுகாத்து வா. அந்த அரக்கன் மாய்மாலங்கள் கற்றவன். கவனமிருக்கட்டும்!" என்று எச்சரித்துவிட்டு, விசித்திரகலையிடமும் விடைபெற்றுக் கொண்டு, வேதாளத்தின் மீதேறிக் காடாறு மாதஞ் சென்று விட்டான்.

மந்திரவாதி மிருகாங்கிதன் தன் தவம் முடிந்ததும் தங்கபுரிக்குப் பறந்து வந்தான். அங்கே விசித்திரகலையைக் காணாமல் உலகமெங்கும் தேடினான்.

உஜ்ஜயினிப் பட்டணத்தை நோக்கியும் மந்திரவாதி வந்தான். விக்கிரமாதித்தனின் கோட்டைக்குள் வளையற்காரனைப் போல மாறுவேடம் தரித்து நுழைந்து, "வளையல் ஒன்று லக்ஷம் பொன் பெறும். இரு ஜதை இருக்கின்றன. வாங்கலையோ?" என்று நகரின் தெருக்களிலெல்லாம் கூவினான்.

நகரத்துப் பெண்களனைவரும், "அடேயப்பா! இவ்வளவு விலை கொடுத்து யார் இந்த வளையல்களை வாங்கமுடியும்? ஒரு வேளை

விக்கிரமாதித்த மகாராஜா புதிதாக மணக்கப்போகும் விசித்திரகலையென்னும் மங்கை வாங்கி அணியலாம்!" என்று பேசிக் கொண்டனர்.

அதைக்கேட்ட மந்திரவாதி அகமகிழ்ந்து, அரண்மனைக்கு வந்து வளையல் விஷயத்தை மந்திரி பட்டிக்கு அறிவித்தான். பட்டியும் விலையுயர்ந்த வளையலை அந்தப்புரம் அனுப்ப, பட்டமகிஷி பாக்கியரேகை தனக்கு வேண்டாமென்றாள். விசித்திரகலையோ அவ்வளையல்களை விரும்பினாள்.

பட்டியும் வளையல்காரனிடம் நான்கு லக்ஷம் வராகனைக் கொடுத்து அவற்றைக் கேட்டான். அதற்கு வளையல்காரனான மந்திரவாதி தந்திரமாக, "ஐயா அமைச்சரே! இது உயர்ந்த வளையல். இதனருமையை நானே அறிவேன். இதைக் கைகளில் அழகுபட அணிவிக்கும் திறமையும் தகுதியும் எனக்கே உண்டு! வேறொருவர் இதை அவ்வளவு லாவகமாகச் செய்யமாட்டார்கள்!" என்றான்.

இவ்வார்த்தைகளை கூர்ந்து நோக்கியப் பட்டி, அவற்றில் ஏதோ சூதிருப்பதை உணர்ந்து, "ஐயா வளையல்காரரே! உமது பெயரென்ன?" என்றான்.

"என் பெயர் வளையல்காரப் போரங்கன்!" என்றான் மந்திரவாதி.

"நல்லது போரங்கரே! உமது வளையல்கள் உயர்ந்தவைதான்! ஆனால் எங்கள் மன்னரின் அனுமதியின்றி கன்னிமாடத்தில் ஆண்வாடை நுழையலாகாது! எங்கள் மன்னரின் மனமறியாது இவ்வளவு விலை கொடுத்து இவற்றை நான் வாங்கவும் கூடாது. அவர் வரட்டும். பிறகு வாரும்!" என்று பட்டி கூறினான்.

மந்திரவாதி சற்றுச் சிந்தித்துவிட்டுப் பட்டியிடம், "அமைச்சரே! நான் தங்கள் மன்னரின் அனுமதி ஓலைபெற்று வரலாமா?" என்று கேட்க, பட்டியும் அதற்குச் சம்மதித்தான்.

பட்டியிடம் தனது சூழ்ச்சி நடக்காததால் வருத்தமுற்ற மந்திரவாதி உடனே காட்டிற்குச் சென்று விக்கிரமாதித்தனைக் கண்டு பிடித்து, நாட்டில் நடந்தவற்றை விவரமாகக் கூறி, "அரசே! அந்தப்புர மகளிர் விரும்பி வாங்கிய வளையலைத் தங்கள் அமைச்சர் திருப்பித் தந்துவிட்டார். இது தகுமா?" என்று கேட்டான்.

சகல சுதந்திரமுள்ள பட்டி வாங்கிய வளையல்களைத் திருப்பிக் கொடுத்துத் தன்னிடம் அனுப்பவேண்டிய

ரணமென்னவென்று புரியாத விக்கிரமாதித்தன், ரயல்காரனை ஐயுற்று, திரிகால ஞானியாகிய வேதாளத்தை, ழைத்து, "யாரிந்த வளையல்காரன்?" என்று இரகசியமாகக் டான். அதற்கு வேதாளமும், "பூமானே! இவனேதான் காங்கிதனென்னும் மந்திரவாதி!" என்று கூற, திரங்கொண்ட விக்கிரமாதித்தன் சட்டென்று தன் திரவாளை உருவி, உஜ்ஜயினி ஓம்காளியை மனதில் ரத்தபடி, எதிரில் வளையல்காரனின் வடிவில் வணங்கி நம் மிருகாங்கித அரக்கனை ஒரே வெட்டாக வெட்டினான். திரவாதியும் மடிந்து மண்ணில் சாய்ந்தான்.

பிறகு விக்கிரமாதித்தன் காடாறு மாதத்தை முடித்துக் ண்டு நாட்டிற்கு வந்து நங்கை விசித்திரகலையை நல்ல றையில் மணம் புரிந்து நாடாளத் தொடங்கினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த பதுமை, "கேட்டீரா ஜமகாராஜரே! அத்தகைய வல்லமை உமக்கிருந்தால் ிங்காதனத்தில் ஏறி அமரும்! இல்லையெனில் இறங்கிவிடும்!" றது.

அச்சமயம் பொழுது அஸ்தமித்துவிடவே போஜராஜன் மூன்றாவது படியிலிருந்து மௌனமாக இறங்கிச் சென்றான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் நான்காவது ஹரிமத்யா பதுமை கூறியதாகப் பின்வரும் 5 உள்ளது)

## ராஜசேகரன் கதை

துறவி வேடத்தில் விக்கிரமாதித்தன் ஒவ்வொரு ஊராகப் பாணம் செய்து அங்கங்கே உள்ள அதிசயங்களைக் கண்டு ந்தவனாய் ஓர் ஊரை அடைந்தான். அவ்வூரிலே தபஸ்விகள் யிருந்த ஆசிரமங்களுக்கு அருகே நதி ஒன்று ஓடியது. ன் கரையில் ஜகன் மாதா பரமேச்வரிக்குப் பெரிய ஆலயம் று எழுப்பப்பட்டிருந்தது.

நதியிலே விக்கிரமாதித்தன் இறங்கி நீராடி, கோவிலில் ழைந்து தேவியை வணங்கினான். அங்கிருந்து வெளியே போது, அவதூதவாசர் என்னும் பெயருடைய துறவி ஒருவர் ப்பட்டார். விக்கிரமாதித்தன் அவரை வணங்கி, "ஸ்வாமி! ர ஒரு யாத்ரீகன். என்னை ஆசிர்வதியுங்கள்!" என்று கேட்ட

வண்ணம் அவருடன் கோவில் வெளிமண்டபத்திலே வந்து உட்கார்ந்தான்.

"நீ யாரென்பது எனக்குத் தெரியும்! நீ உஜ்ஜயினி நகரத்து வேந்தன் விக்கிரமாதித்தன் அல்லவா? உன்னை ஒரு முறை உஜ்ஜயினியில் பார்த்திருக்கிறேன். நீ என்ன காரணத்துக்காக அரசியலைத் துறந்து இங்கு வந்துள்ளாய்?" என்று துறவி கேட்டார்.

"சுவாமி! உலகம் முழுவதும் சுற்றிப்பார்த்து அதிசயப் பொருள்களைக் காணவும், தங்களைப் போன்ற பெரியோர்களைச் சந்தித்து ஆசிபெறவும் விரும்பியே ஊர் ஊராக வந்து கொண்டிருக்கிறேன்!"

"விக்கிரமாதித்தா! நீ என்ன காரியம் செய்துவிட்டாய்? உன் ராஜ்யத்தை விட்டு நீ பைத்தியகாரனைப் போன்று எப்படித்தான் வெகுதூரத்தில் பிரயாணம் செய்கிறாய்? நீ ஊரிலில்லாத சமயத்தில் உன் ராஜ்யத்தில் கலகம் ஏதாவது நிகழ்ந்ததானால் உன்னால் என்ன செய்ய முடியும்?" என்று அன்புடன் கடிந்தவாறு கேட்டார் துறவி.

"அரசாங்கத்தின் பொறுப்பு முழுவதும் என் மந்திரிகளிடம் ஒப்புவித்த பிறகே நான் நகரத்தை விட்டுக் கிளம்பினேன்!"

"வேந்தே! அப்படியானால் நீயே அரசாங்க நிர்வாகத்தின் நெறியிலிருந்து வழுவிவிட்டாய். அதிகாரிகளிடம் அரசாங்கத்தை ஒப்புவித்து விட்டு, தன்னிஷ்டப்படி திரிந்து நேரத்தைச் சுகமாகப் போக்கும் அரசியல் தலைவர்கள் ஒரு பூனைக் கூட்டத்தின் முன்பாகப் பால் நிறைந்த பாத்திரங்களை வைத்து விட்டுத் தூங்கப் போகிறவன் அடையும் கதியைத்தான் அடைவார்கள்! ஆட்சியாளன் அரசு தன்வசம் இருக்கிறதே என்ற எண்ணத்தில் கவலையற்றுக் கவனிக்காமலிருக்கக்கூடாது. ஏனெனில் அரசு அவனுடையதாக இருந்தாலும், அவன் அதில் உள்ள தன் உரிமையை இன்னும் பலமாக ஸ்தாபிதமாக்க முயலவேண்டும். மேலும், ஒரு நீதிவாக்கியம் உண்டு! உங்களுடைய பயிர்த் தொழில் அறிவு (வித்தை), வியாபாரம், மனைவி, செல்வம், அரசுப் பேறு, ஆகியவற்றில் நாக சர்ப்பத்தின் தலையை மிதித்துக் கொண்டிருப்பது போல் மிகுந்த கவனத்துடன் திடமாக ஊன்றி நிற்க வேண்டுமன்றோ?" என்பதுதான் அந்த வாக்கியம்! இவ்விதம் நீ நாட்டைவிட்டு வெகு தூரத்தில் இருப்பது மிகுந்த அபாயகரமானது!" என்றார் துறவி.

விக்கிரமாதித்தன் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. ஈவாமி! இம்மாதிரி விஷயங்களில் விதிப்படியே காரியங்கள் டைபெறும். மிகவும் பலத்தால் ஒருவன் தன்னுடைய அரசை பதாபிதம் செய்து, அதை எக்காலத்தும் நிலைபெறச் செய்யத் குந்த காரியங்களைச் செய்தாலும், அவனுக்கு அதிக சக்தி ாய்ந்த வீரனின் துணை இருந்தாலும் கூட விதி வேறுவிதமாக )ருந்தால் அவன் அழிவை அடைவான் அன்றோ? இந்திரனுக்குப் ிரகஸ்பதியின் ஆலோசனை இருந்தது; தேவர்களும் வீரர்களாக ்தவினர். சுவர்க்கம் அவனுக்குக் கோட்டையாக யமைந்திருந்தது. அவனைக் காப்பாற்ற மகாவிஷ்ணுவும் )ருந்தார்; போர் யானையாக ஐராவதம் இருந்தது. இவ்வளவு )கரற்ற பலம் பொருந்தியவனாக இருந்தும், சண்டையில் 'திரிகளால் அவன் தோற்கடிக்கப்படவில்லையா? அப்போது ிதி ஒன்றையே நாம் நம்பவேண்டியதாகிறது. பௌருஷம் 'ன்பது வீண்தான்! மேலும் ஒரு நீதிவாக்கியம் உண்டு. "நல்ல தாற்றத்தினால் பலன் ஒன்றுமில்லை. அவ்விதமே, உயர் ுடும்பத்தில் பிறப்பு, சீலம், அறிவு, மிகுந்த உற்சாகத்தோடு )தய்வங்களுக்குச் செய்யும் வழிபாடுகள் ஆகிய அனைத்தும் யனற்றவையே. தான் செய்த தவத்தின் மூலம் ஒருவன் சமிக்கும் ஈடு இணையற்ற பாக்கியமே மரத்தைப் போன்று அவனுக்குச் சரியான சமயத்தில் பலனை அளிக்கிறது." எதுவும் ிதிப்படியே நடந்துதான் ஆகவேண்டும். அந்தச் சமயத்தில் )று புல்லும் கூடக் கூர்மைவாய்ந்த வஜ்ராயுதமாகத் தன் டமையைச் செய்யும்!" என்று விக்கிரமாதித்தன் மேலும் )சால்லலானான். "ஆலமரமும், அதன் மீது இருந்த ஐந்து தவதைகளும் கொடுக்கவும் செய்யும், எடுத்துக் கொள்ளவும் )சய்யும். காய் உருளட்டும்! எது நடக்க வேண்டுமோ அது டந்துதான் ஆகும் இல்லையா?" என்றான் விக்கிரமாதித்தன்.

"வேந்தே! அது என்ன புதிர். விளக்கமாகத் தெரிவி!" 'ன்று துறவி கேட்கவே விக்கிரமனும் சொல்ல ஆரம்பித்தான்.

• • •

"வட தேசத்திலே நந்திவர்த்தனம் என்னும் நகரம் ஒன்று )ருந்தது. அந்நகரத்திலே ராஜசேகரன் என்னும் அரசன் ஆட்சி ரிந்து வந்தான். அவன் மிகுந்த தெய்வபக்தி யுடையவனாய், )தய்வங்களுக்கும் அறிஞர்களுக்கும் சேவை செய்து கொண்டு ந்தான். ஒரு சமயம் அவனுடைய உறவினர்கள் அனைவரும் ாஜ்யத்தை அபகரித்து கொள்ளத் தீர்மானித்து அனைவரும் ன்று சேர்ந்து அவன்மீது போர் தொடுத்தனர். போரிலே

தோற்றுவிட்ட ராஜசேகரன், பட்ட மகிஷியையும் அரசிளங்குமரனையும் அழைத்துக் கொண்டு உயிர்தப்ப நாட்டைவிட்டு ஓடினான். அவ்விதம் ஓடிவரும்போது வழியிலே ஒரு நகரத்தை அடுத்த காட்டை அடைந்தான். அப்போது அந்திச் சூரியன் மேற்கே மறைந்து விட்டான். மேலே அவ்வழியில் செல்வது யுக்தமல்ல என்பதைக் கண்ட அரசன், இரவைக் காட்டிலே கழிப்பது என்று தீர்மானித்தான். அங்கே ஒரு பெரிய ஆலமரம் இருந்தது. அதனடியில் துணியை விரித்து அவர்கள் படுத்துக் கொண்டனர். அரசனின் பத்தினியும் புதல்வனும் அயர்ச்சியால் தூங்கிவிட்டனர். அரசனோ தூங்கவில்லை!

"அம்மரத்தின் மேலே ஐந்து தேவதைகள் போல் ஐந்து பறவைகளும் இருந்தன. அவைகள் ஒன்றுக்கொன்று பேசிக் கொண்டன. "இப்போது நகரத்திலே அரசன் இறந்து விட்டான். அடுத்தபடியாக பட்டத்துக்கு வர வாரிசு கிடையாது. இப்போது என்ன செய்வது? யார் பட்டத்துக்கு வருவது?" என்று கேட்டது பறவைகளில் ஒன்று. அதற்கு மற்றொன்று, "ஏன்? இந்த மரத்தடியில் படுத்திருக்கும் அரசனுக்குத்தான் அந்தப் பாக்கியம் கிட்டட்டுமே!" என்றது. அதை மற்ற பறவைகளும் ஆமோதித்தன.

"பறவைகள் பேசிக் கொண்டதை அரசன் கேட்டு வந்தான். அவைகளின் வார்த்தையைக் கேட்டு அவனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. அவனோ போரிலே தோல்வியுற்று உயிர்தப்ப நாட்டைவிட்டு ஓடி வந்துள்ளான். அவனுக்கு எவ்விதம் மற்றொரு நாட்டை அரசாளும் அதிர்ஷ்டம் கிட்டும்? காலையில் சூரியோதயமானதும் ஜனங்கள் அவரவர் வேலையைக் கவனிக்கத் தொடங்கினர். ராஜசேகரனும் எழுந்து நித்திய கடன்களைச் செய்தான். "தகதக"வென்று ஜொலித்துக்கொண்டு புறப்படும் சூரியனை வணங்கி வாழ்த்தினான்.

"பிறகு அரசன் தன் மனைவியையும் புதல்வனையும் அழைத்துக் கொண்டு நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். அப்போது நகரத்திலிருந்து ஒரு கூட்டம் காட்டை நோக்கி வந்து கொண்டிருந்தது. கூட்டத்தின் முன்பாகப் பெண் யானை துதிக்கையில் மாலையுடன் வந்து கொண்டிருந்தது. அரசன் திடீரென்று இறந்து விட்டதால், பட்டத்துக்கு வேறு ஒருவனைத் தேர்ந்தெடுக்க, மந்திரிகள் யானையை அலங்கரித்து. அதன் துதிக்கையில் மாலை ஒன்றைக் கொடுத்து அனுப்பினர். ராஜசேகரனை வழியிலே கண்டதும் யானை மேலே செல்லாமல் நின்று மாலையை அவன் கழுத்திலே போட்டு அவனைத் தூக்கித்

தன் முதுகின் மீது உட்காரவைத்துக் கொண்டு அரண்மனை நோக்கித் திரும்பியது. மக்களும் குதூகலமாக அரசனை வாழ்த்தினர். மந்திரிமார்கள் அரண்மனை வாசலில் ராஜசேகரனை மகிழ்ச்சியுடன் வரவேற்றுப் பட்டாபிஷேகம் செய்து வைத்தனர். சிறிது காலம் சென்றது. ஒருநாள் அரசனுடைய எதிரிகள் ஒன்று சேர்ந்து படையெடுத்து வந்தனர். ராஜசேகரனை ஒழித்துவிடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு நகரத்தைச் சூழ்ந்துகொண்டனர். அவ்வேளையில் அரசன் சிறிதும் சலனமின்றித் தன் தேவியுடன் அந்தப்புரத்தில் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தான். எதிரிப் படைகள் நகரை வளைத்துக் கொண்டிருக்கின்றனவே என்ற கவலை சிறிதும் அவனிடம் காணப்படவில்லை.

"தேவியோ நிம்மதியில்லாமல் தவித்தாள். தன் நாயகனைப் பார்த்து, "பிரபோ! நீங்கள் ஏன் பேசாமலிருக்கிறீர்கள்? எதிரிகளால் நகரம் சூழ்ந்து கொள்ளப்பட்டிருக்கிறது. நாளைக் காலையில் அவர்கள் வசம் நம் தலைநகரம் விழுந்துவிடும். நம்மையும் கைது செய்து விடுவார்கள். இவைகளைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல் சதுரங்கக் காய்களை உருட்டுகிறீர்களே. ஏதாவது வழி செய்யக் கூடாதா? என்று கேட்டாள். அதற்கு மன்னவன், "நாயகியே! நான் ஏன் முயற்சிக்க வேண்டும்? விதி எனக்கு அனுகூலமாகயிருந்தால் எல்லாக் காரியங்களும் அனுகூலமாக நிறைவேறும்! நாமே தான் அனுபவித்திருக்கிறோமே? மேலும் ஒரு உபமானக் கதை சொல்லுகிறேன் கேள். பெட்டியில் வைத்து மூடி அடைக்கப் பட்டிருந்தது பாம்பு. அதற்கோ பிரமாதமான பசி; வெளியே வரவும் முடியவில்லை. தான் வெளியே சென்று பசியைப் போக்கிக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கையும் போய்விட்டது. இந்தச் சமயத்திலே இரவிலே இரைதேடப் புறப்பட்ட எலி ஒன்று பெட்டியைக் கண்டு, அதைக் கடித்து துளை செய்து தானகப் பாம்பின் வாயிலே போய் விழுந்தது. எலியைச் சாப்பிட்டுப் பசியைப் போக்கிக் கொண்டதுமல்லாமல், வெளியே செல்லவும் பாம்புக்கு வழி ஏற்பட்டது. அவ்வழியே வெளியே சென்று பாம்பு உயிர்தப்பியது. இதிலிருந்து விதி ஒன்றே வெற்றி தோல்விக்குக் காரணம் என்பது தெரிகிறதல்லவா? அனாதையாகக் காட்டிலே திண்டாடும் ஆதரவற்ற மனிதன் உயிர் வாழ்கிறான். மிகுந்த முன் எச்சரிக்கையுடன் வீட்டிலிருக்கும் மற்றவனே இறந்து போகிறான்! ஆலமரத்தடியில் உட்கார்ந்திருக்கும் போது நமக்கு ராஜ்யத்தை அளித்த ஐந்து தேவதைகளும் இதைக் காப்பாற்றும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா? அதனால் கவலையின்றி காய் உருளட்டும்!" என்றான்.

"இவ்விதம் ராஜசேகரன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட ஐந்து தேவதைகளின் சொரூபமான பகவான் "இந்த அரசன் என்மீது நம்பிக்கை வைத்து, நாட்டின் பாதுகாப்பை என்னிடம் ஒப்புவித்திருக்கிறான். இவனுக்கு நான் உதவி செய்யாவிடில் அதைப் போன்ற மாபெரும் தவறு கிடையாது!" என்று நினைத்தார். உடனே அவர் பெரும் படையுடன் புறப்பட்டு வந்து, ஓர் இரவிலே எதிரிகளை நிர்மூலமாக்கிவிட்டார். அதற்குப் பிறகு ராஜசேகரன் எந்தவிதமான கஷ்டமுமின்றி ராஜ்யபாரத்தை நடத்தி வந்தான்."

இவ்வாறு கதை கூறிய விக்கிரமாதித்தன், "சுவாமி! அவ்விதமிருக்க நான் ஏன் கவலைப்படவேண்டும்? கலகம் நிகழ வேண்டுமென்றிருந்தால் நான் நாட்டிலே இருந்தாலும் நடந்தே தீரும்" என்றான்.

அரசனுடைய கதையைக் கேட்ட துறவி பெரும் மகிழ்ச்சி கொண்டார். தன் வசமிருந்த காஷ்மீரத்து லிங்கம் ஒன்றை எடுத்து அரசனிடம் கொடுத்தார். "விக்கிரமா! இந்தக் காஷ்மீர லிங்கமானது சிந்தாமணி போல் விரும்பியதெல்லாம் கொடுக்க வல்லது. நீ விரும்பும் எந்த நல்ல காரியத்தையும் இது நிறைவேற்றி வைக்கும், இதை நன்கு பூசை செய்" என்று சொல்லிவிட்டுச் சென்றார். அரசனும் அதைப் பெற்றுக் கொண்டு ஊருக்குத் திரும்பினான்.

அப்போது ஏழைப் பண்டிதன் ஒருவன் விக்கிரமன் செல்லும் வழியிலே எதிர்ப்பட்டான். அரசனைக் கண்டதும் அவன், "மலை மகளான பார்வதிதேவி உம்மைக் காப்பாற்றட்டும். பன்னிரு கண்களையுடைய அவளுடைய மகனான ஸ்கந்தனும், ஹிமகிரியின் மாப்பிள்ளையான முக்கண்ணனும் உம்மை அவ்விதமே காப்பாற்றுவார்களாக!" என்று ஆசிர்வதித்தான். பிறகு அரசனை நோக்கி, "வேந்தே! நான் சிவலிங்க பூஜை நியமம் உள்ளவன். நான் வைத்திருந்த சிவலிங்கம் வழியில் தொலைந்து விட்டது. மூன்று நாட்கள் அன்ன ஆகாரமில்லாமல் கழிந்து விட்டது. சிவலிங்கம் கிடைக்கும் வரையில் உபவாசத்தை நிறுத்த முடியாது. உன்னிடம் உள்ள சிவலிங்கத்தை எனக்குக் கொடு. அதைப் பூசித்து என் உபவாசத்தை முடித்துக் கொள்கிறேன்!" என்று வேண்டினான்.

விக்கிரமனும் மறுபேச்சின்றி அதிக சக்திவாய்ந்த அந்தச் சிவலிங்கத்தைப் பண்டிதனிடம் கொடுத்தனுப்பினான்.

## 14-வது பூரணச் சந்திரவல்லிப் பதுமை சொல்லிய தருமசீலன் கதை



மறுநாள் சிம்மாசனத்தின் மீது போஜ ராஜன் ஏறியமர முயன்ற போது பதினான்காம் படிக்குக் காவலான பூரணச் சந்திரவல்லிப் பதுமை புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்தன் இராஜ்ஜிய பரிபாலனம் செய்து வரும் நாளையில் ஒற்றர் வாய்மூலமாக உலகிலே நடக்கும் அபூர்வ நிகழ்ச்சிகளையும் விசித்திர சம்பவங்களையும் அறிந்து வந்தான்.

"பசுக்கள் முகர்ந்து பார்ப்பதால் அறிகின்றன; அந்தணர்கள் அறநூல்களினாலும். அரசர்கள் ஒற்றர்களினாலும் அறிகின்றனர். மற்றவர்களோ தங்களுடைய இரு கண்களினால் அறிந்து கொள்ளுகின்றனர்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. யார் அரசனாக இருந்தாலும் அவன் தன்னுடைய குடிமக்களின் நிலைமையை அறிந்து கொள்ள வேண்டும். அவன் ஒவ்வொருவருடைய எண்ணங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். அயோக்கியர்களைத் தண்டித்து நல்லவர்களைக் காப்பாற்றி தன் குடிகளை நேர்மையாகப் பாதுகாக்க வேண்டும். சரியான வழிகளில் செல்வத்தைச் சேர்க்கவேண்டும். கேட்போருக்கு நிலைக்குத் தக்கபடி சமத்துவமாகக் கொடுக்க வேண்டும். இவை ஐந்தும் அரசனுடைய புனித கடமைகள் (ஐந்து கேள்விகள்). இன்னும் ஓர் அரசன் தன் குடிகளைக் கொடுமைப்படுத்துவானாகில், அவன் தெய்வத்திற்கு செய்யும் சேவை என்ன பயன் தரக்கூடும்? அவன் செய்யும் ஹோமம், ஜபம், பிரார்த்தனை, தானம் அனைத்தும் குடிமக்களின் சந்தோஷத்தில் அடங்கியுள்ளன. தேசத்திலே மக்கள் கண்ணீர் விடுவது கூடாது என்று சொல்லுவார்கள்!

இப்படியாக விக்கிரமன் ஆட்சி புரிந்து வருகையில் காஷ்மீர தேசத்துக்குச் சென்று திரும்பிய ஒற்றன் ஒருவன் தான் கண்ட அதிசயத்தை அரசனுக்கு விளக்கிக் கூறினான்.

"வேந்தே! காஷ்மீர தேசத்தில் பெரிய பணக்காரனான வியாபாரி ஒருவன் இருக்கிறான். அவன் தருமசீலனெனப் போற்றப்படுகிறான். அவன் ஐந்து குரோசம் நீளமுள்ள பெரிய ஏரி ஒன்றை வெட்டுவித்தான். இரவு பகல் பாராமல் ஆயிரக்கணக்கான ஆட்கள் ஏரி வெட்டுவதில் முனைந்தனர். ஏரியின் நடுவே நீரில் சயனித்திருக்கும் நாராயணனுக்குப் பெரிய ஆலயம் ஒன்றை எடுப்பித்தான். வேலைகள் முடிவடைந்தன. ஆனால் ஏரியில் சொட்டு தண்ணீர்கூட வரவில்லை. அத்தனை கஷ்டப்பட்டும் ஏரியில் தண்ணீர் வரவில்லை என்பதைக் கண்ட வியாபாரி பெரிதும் விசனமடை ,தான். தான் இறங்கியுள்ள காரியத்தில் ஏதோ தவறு ஏற்பட்டுள்ளதென்றும் அதன் காரணமாகவே தண்ணீர் வரவில்லை என்றும் அவனுக்குத் தோன்றியது. உடனே அறிஞர்களை வரவழைத்து வருண பகவானை உத்தேசித்து அபிஷேகம் முதலிய நான்குவித ஹபன ஹோமங்களை நடப்பித்தான். தண்ணீர் ஏரியில் பாய்ந்தாலும் அது நிற்பதில்லை. வறண்டு மறைந்துவிடும், இதனால் அளவில்லாத விசனமடைந்த அவன் தினமும் ஏரிக்கரையில் உட்கார்ந்து "ஆ! என்ன கஷ்டம்? எவ்வளவோ கடுமையாக செலவையும் பாராமல் நான் செய்தது வீணாகப் போய்விட்டதே. எந்தவிதத்தில் ஏரியில் தண்ணீர் வரப்போகிறது?" என்று பிரலாபிப்பான்.

"ஒருநாள் வழக்கம்போல் ஏரிக்கரையில் அமர்ந்து வருத்தத்தோடு அவன் பிரலாபித்துக் கொண்டிருக்கையில் வானிலே அசரீரி வாக்கு கேட்டது. "வியாபாரியே! ஏன் வருத்தப்படுகிறாய்? முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய யுவன் ஒருவனுடைய கழுத்திலிருந்து பெருகும் இரத்தமானது ஏரியில் விழுந்தால் புனிதமான நீர் ஊற்றெடுக்கும், அதல்லாமல் வேறு எதைச் செய்தாலும் பலன் இல்லை" இதைக் கேட்ட வியாபாரி மனம் தளர்ந்துவிட்டான். முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய இளைஞன் உயிரைத் தியாகம் செய்ய முன்வருவானா? இருந்தாலும் பரிகாரத்தைத் தெரிவித்த தெய்வம் அதற்கு வேண்டிய ஆளையும் கொண்டு வந்து சேர்ப்பிக்கும் என்ற நம்பிக்கையின் பேரில், ஏரிக்கரையிலேயே பெரிய சத்திரம் ஒன்று கட்டுவித்தான். சுற்று வட்டாரப் பிரதேசங்களிலிருக்கும் ஜனங்கள் அங்கு சாப்பிட வந்து குவிந்தனர். தினமும் நூற்றுக்கணக்கான மக்கள் உணவருந்தி சென்றனர். அச்சத்திரத்திற்கு நியமிக்கப் பட்டிருந்த அதிகாரிகள் அவர்கள் முன்னிலையில் வியாபாரியின் செய்தியைப் பிரகடனம் செய்வார்கள்.

"எவனொருவன் தன் கழுத்திலிருந்து பெருகும் இரத்தத்தினால் ஏரியை நனைத்து, புனித நீரை வரவழைக்கிறானோ அவனுக்கு நூறு பாரம் நிறையுள்ள தங்கம் அளிக்கப்படும்" என்ற வியாபாரியின் செய்தியை அவர்கள் கேட்டனரே அன்றி, ஒருவராவது, அந்த வீரத்தியாகம் செய்ய முன் வரவில்லை. "வேந்தே! இதுதான் நான் காஷ்மீர தேசத்தில் கண்ட அதிசயம். கவலையே உருவாக உட்கார்ந்திருக்கும் வியாபாரியைக் கண்டால் எப்பேர்ப்பட்ட கல் நெஞ்சனும் இளகிவிடுவான்" என்றான் ஒற்றன்.

அரசன் அந்தக் கணமே ஒற்றனை அழைத்துக்கொண்டு காஷ்மீரத்துக்குச் சென்றான். தண்ணீரில்லாது பரந்து கிடக்கும் ஏரியையும், அதனடுவே ஜலசயனப் பெருமாளான நாராயணனின் அழகிய ஆலயத்தையும் கண்ட அரசன் மெய்மறந்து போனான்.

"என்னுடைய கழுத்திலிருந்து பெருகும் இரத்தத்தினால் ஏரியை நனைத்தால், ஏரி நிரம்ப தண்ணீர் உண்டாகும். எல்லா ஜனங்களுக்கும் உபயோகமாகக் கூடிய காரியம் இது. என் உடல் நூறு வருஷங்கள் வரை வாழ்ந்தாலும் கடைசியில் அழிந்து போகக்கூடியது அன்றோ? ஆகவே, பெரும் அறிவாளி தன்னுடைய நலத்துக்காக வாழமாட்டான். பிறருடைய நலத்துக்காகவே தன் உடலையும் தியாகம் செய்வான்.

"ஒருவன் நூறு சரத்காலம்வரை வாழ்ந்தாலும் கடைசியில் படுக்கையில் படுத்திருந்தாவது சாவை அடையவேண்டும். சீக்கிரத்தில் அழிவை அடையக்கூடிய தங்களுடைய தேக விஷயத்தில் சுய நலத்தைக் கொள்ளாதவர்களே உலகத்தின் விளக்கு என்று சொல்லலாம்.

"சதைப் பிண்டத்தாலான இத்தேகக்கூடு எப்போது பார்த்தாலும் வியாதிக்கும் வருத்தத்திற்கும் இருப்பிடம்தான். எப்போதும் சாவின் சமீபத்திலேயே இருக்கிறது.

"இன்னும் தர்மத்தைக் கடைபிடிக்கும் எந்த மனிதர்கள் சுயநலத்தைத் துறந்து தங்களுடைய தேகத்தை மதிப்பற்றதாக ஆக்கிக்கொள்ளுகிறார்களோ, அவர்களே உண்மையான வாழ்க்கையின் பலனை அடைந்தவர்கள் ஆவார்கள்."

இவ்விதம் தன் மனத்தில் நினைத்தவனாய் கோவிலுக்குச் சென்று, நாராயணனை விக்கிரமாதித்தன் வணங்கிப்

பிரார்த்தித்தான். "ஹே! நீரின் தெய்வமே! முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய மனிதனின் கழுத்திலிருந்து பெருகும் இரத்தத்தினால் நீ திருப்தியடையும் பட்சத்தில், இதோ என் கழுத்திலிருந்து பெருகும் இரத்தத்தை ஏற்றுக் கொள், இந்த ஏரியில் நீர் நிரம்பட்டும்."

கத்தியை உருவி கழுத்தருகில் கொண்டு சென்றான் மன்னன். அப்போது தேவன் அரசனுடைய கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தினார். "வீரனே உன் செய்கையால் நான் திருப்தி அடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்." என்றார்.

"பிரபோ! நீங்கள் சொல்வது உண்மையானால் இந்த ஏரியில் நீர் நிரம்பட்டும்" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"மன்னவா, இவ்விடத்தைவிட்டுச் சீக்கிரம் கரையேறு. நீ திரும்பிப் பார்க்கும் அளவில் ஏரி நீர் நிறைந்ததாகக் காட்சி அளிக்கும்" என்று அருளி மறைந்தார் நாராயணமூர்த்தி.

விக்கிரமனும் வெகு வேகமாகக் கரையில் ஏறித் திரும்பிப் பார்த்தான். சுகமாக வீசும் தென்றலினால் சிற்றலைகள் கரையில் மோத ஏரி நீர் நிரம்பியதாகக் காட்சியளித்தது. வியாபாரி கொண்ட மகிழ்ச்சிக்கோர் அளவில்லை. அவன் அரசனைப் பலவாறாகத் துதித்தான். அவன் கொடுத்த பொற்குவியலை யெல்லாம் ஏழை எளியவருக்குத் தானமாகக் கொடுத்துவிட்டு அவனிடம் பிரியா விடை பெற்றுக் கொண்ட விக்கிரமாதித்தன் தன்னுடைய உஜ்ஜயினி திரும்பினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த பதுமை. "கேட்டீரா. போஜராஜரே! இந்தத் தியாகத்தன்மை உம்மிடம் இருக்கிறதா?" என்றது. அப்பொழுது அந்தி சாய்ந்துவிட்டதால் போஜராஜன் மௌனமாக சிம்மாசனப்படிகளை விட்டிறங்கி தன் அந்தப்புரம் நோக்கிச் சென்றுவிட்டான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் எட்டாவது லாவண்யவதிப் பதுமை கூறியதாகக் காணப்படுகிறது.)



## 15-வது அமிர்த சஞ்சீவிவல்லிப் பதுமை சொல்லிய ஆற்றில் விழுந்த அந்தணன் கதை



மறுநாட் காலையில் போஜ ராஜன் ஆவலோடு சிங்காதனத்தின் மீது ஏறி அமர முயன்றபோது, பதினைந்தாம் படிக்கட்டுக் காவலான அமிர்த சஞ்சீவிவல்லிப் பதுமை அவனைத் தடுத்து நிறுத்தி, விக்கிரமாதித்தனைப் பற்றி புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்தன் காடாறு மாதம் புறப்படவேண்டிய சமயம் வந்தபோது ஒருநாள் அவனுக்குத் தான் மட்டும் தனியாக மாறு வேடம் பூண்டு நாட்டைச் சுற்றிப் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் தோன்றியது. உடனே அரசாங்கத்தை மந்திரிகளிடம் ஒப்புவித்து விட்டுத் துறவி வேடமணிந்து புறப்பட்டான். ஒரு கிராமத்தில் ஓர் இரவு; நகரத்தில் ஐந்து நாட்கள்; இப்படியாகச் சென்றான்.

சுற்றுப் பிரயாணத்தின் நடுவே, ஒருநாள் விக்கிரமன் கங்கைக் கரையில் அமைந்துள்ள ஓர் ஊருக்கு வந்து சேர்ந்தான். நதிக்கரையோரமாகக் கோவில் ஒன்று அமைந்திருந்தது. அரசன் கோவிலை அடைந்தபொழுது அங்கு ஊர் மக்கள் கூடியிருந்தனர். புராணிகர் ஒருவர் புராணப் பிரவசனம் செய்து கொண்டிருந்தார். விக்கிரமாதித்தனும் அங்கு கூடியிருந்த கும்பலோடு கூட உட்கார்ந்து கொண்டு கதை கேட்கத் தொடங்கினான். அப்போது புராணிகர் பின்வரும் கருத்துக்களடங்கிய சுலோகங்களைப் படித்து விவரித்துக் கொண்டிருந்தார்.

"நம்முடைய உடல் அநித்தியமானது; நாம் சேமித்துள்ள செல்வம் எப்போதும் நம்மோடு இருக்கப்போவதில்லை; யமன் எப்போதும் பக்கத்திலேயே இருக்கிறான்; ஆகவே, தர்மத்தைச் செய்து புண்ணியத்தைச் சம்பாதித்துக்கொள். கோடி சாத்திரங்களில் கூறப்பட்டிருக்கும் தர்மத்தைப் பற்றிய சாரங்கள்

அனைத்தையும் கேள். பரோபகாரம் செய்வதே புண்ணியத்தை அளிக்கும். பிறரைத் துன்புறுத்துவதே பாபமாகும். எவனொருவன் பிறர் படும் வருத்தத்தைக் கண்டு தானும் வருத்தப்படுகிறானோ, அதேபோல் பிறர் சந்தோஷத்தைக் கண்டு தானும் மகிழ்ச்சி கொள்ளுகிறானோ. அவனே வேதத்தின் முடிவை நன்கு உணர்ந்தவன். ஆபத்து நேரிடும் என்ற பயத்தால் கஷ்டப்படும் ஓர் உயிரை எவன் காப்பாற்றி அபயம் அளிக்கிறானோ அதைவிட இவ்வுலகிலே சிறந்த தர்மம் வேறு எதுவுமில்லை. தினந்தோறும் ஆயிரம் பிராமணர்களுக்கு ஆயிரம் பசுக்களைத் தானம் செய்வதால் ஏற்படும் பலனைக் காட்டிலும் ஒரு உயிருக்காகத் தன் உயிரைக் கொடுப்பவனுக்கு பெரும் புண்ணியம் காத்திருக்கிறது.

"பெரிய யாகங்கள் செய்வதினால் ஏற்படும் பலன்கள் கூடச் சமயத்தில் தீர்ந்துவிடலாம். பிறருக்கு அபயம் அளிப்பவனுக்கு, அவன் செய்கையின் பலன் ஒருபோதும் தீர்ந்துவிடுவதில்லை. வெள்ளாண்மை, வழிபாடுகள், துறவறம் மேற்கொள்ளுதல், புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை, சத் விஷயங்களைக் கேட்டல் ஆகியவைகள் அனைத்தும் அபயம் அளிப்பது என்பதான புண்ணியத்தில் பதினாறுக்கு ஒரு பங்குகூட நிகராகாது. ஒரு மனிதன் பிறருக்கு உதவுவதையே இவ்வுலகில் தன்னுடைய முக்கிய கடமையாகக் கொள்வானாகில், அவன் இவ்வுலகில் நல்ல செல்வத்தை அடைவான். மேலும் பரத்திலும் கிடைத்தற் கரியதான பிறவா பேற்றை அடைவான்!"

இவ்வாறு பௌராணிகர் உபதேசிக்கும்போது, கோவிந்தனைப் பூஜிக்கும் ஒரு கிழ வேதியரும், அவருடைய மனையாளும் குளிப்பதற்காகக் கங்கையில் இறங்கினர்., நதியிலே நீரோட்டத்தின் வேகம் அதிகமாக இருந்தது. அதைக் கவனியாது சற்று ஆழத்திற்கு இறங்கிய அவர்களை நீரோட்டம் அடித்துச் செல்லத் தொடங்கியது. வேதியருக்கோ வயதாகிவிட்டது. அவரால் நீரோட்டத்தின் சக்தியை எதிர்த்து மனைவியுடன் கரைக்கு வரமுடியவில்லை. "குய்யோமுறையோ" வென்று கத்தத் தொடங்கினார். அவருடன் மனைவியும் அலறினாள்.

"ஏ மகாஜனங்களே! சீக்கிரம் ஓடிவாருங்கள். வயதானவனான என்னையும் என் மனைவியையும் ஆற்று நீர் அடித்துக் கொண்டு போகிறது. உங்களில் தீரமானவர்கள் இல்லையா? தார்மிகர்கள் இல்லையா? எங்களைக் காப்பாற்றுங்கள்" என்று கதறி அழுதார் வேதியர்.

புராணம் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் எழுந்து ஓடினார்கள். அவர்களுடன் விக்கிரமாதித்தனும் ஓடினான்.

ஆற்றின் வேகத்தைக் கண்ட அவர்கள் நீரில் இறங்கப் பயப்பட்டனர். ஒருவராவது தண்ணீரில் இறங்கி அவர்களைக் காப்பாற்ற முடியவில்லை. கரையில் நின்றபடி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். கிழவருடைய மனைவியும் "உபதேசம் கேட்ட பெருமக்களே! எனக்கு மாங்கல்ய பிச்சை தாருங்கள்" என்று கெஞ்சினாள்.

ஒருவரும் இறங்காததைக் கண்ட விக்கிரமாதித்தன், "பயப்படாதீர்கள். உங்களை நான் காப்பாற்றுகிறேன்" என்று தண்ணீரில் குதித்தான். ஆற்றின் வேகம் அவனையே பலவாறு புரட்டித் தள்ளியது. விக்கிரமன் சிறிதும் மனம் தளராமல் திரத்துடன் முன்னேறி இருவரையும் பிடித்து வெகு சிரமத்துடன் கரைக்குத் தூக்கிவந்தான்.

பயம் நீங்கித் தன் உணர்வு வருவதற்குக் கிழவருக்குச் சிறிது நேரம் சென்றது. பிறகு எழுந்து நின்று விக்கிரமனைப் பார்த்துச் சொன்னார். "பெரியோய்! இந்த உடல் பல வருடங்களுக்கு முன்பு என் தாய் தந்தையர்களால் உருவாக்கப் பட்டது. இன்று உன் மூலம் நான் இரண்டாவது பிறப்பை அடைந்தேன். நீ தைரியத்துடன் வந்து எங்களைக் காப்பாற்றி யிருக்காவிடில் நாங்கள் ஆற்றுக்கு இரையாகியிருப்போம். எங்களுக்கு உயிரைக் கொடுத்த உனக்கு நான் பதிலுக்கு ஏதாவது செய்யாவிட்டால், என் வாழ்க்கை பயனற்றதாகிவிடும்" என்றார்.

விக்கிரமன் குறுக்கிட்டு, "இல்லை, இல்லை; எனக்கு எந்தப் பிரதிபலனும் தேவையில்லை. நான் அரச குடும்பத்தைச் சேர்ந்தவன். எல்லா குடிகளும் எனக்குச் சமமே. அவர்கள் ஆபத்தில் சிக்கிக்கொண்டால் அவர்களைக் காப்பாற்றவேண்டியது என் கடமை. உங்களைக் காப்பாற்றியது என்னுடைய கடமையே அன்றி பிரதி பலன் எதிர்பார்த்துச் செய்யவில்லை" என்றான்.

அரசனின் வார்த்தைகளைக் கேட்டதும், கிழவருக்கு அவன்தான் விக்கிரமாதித்தன் என்பது விளங்கிவிட்டது. "அரசே! உன்னை யாரென்பதைக் கண்டுகொண்டு விட்டேன். நீ தான் உலகம் புகழும் விக்கிரமாதித்தராஜன்! இதில் சந்தேகமில்லை. க்ஷத்திரியர்களும் அந்தணர்களும் ஒருவரால் ஒருவர் காப்பாற்றப்படுகின்றனர். ஆகவே, நான் தருவதைப் பெற்றுக் கொள்ளுவதில் ஆக்ஷேபனை ஏதும் இருக்காது. பனிரெண்டு வருஷங்கள் கோதாவரி நதியின் மத்தியில் நின்று மும்மூர்த்திகளைத் தியானித்து நான் அடைந்த வரத்தை உனக்கு அளித்துவிடுகிறேன். அந்த வர சக்தியினால் நீ நினைத்தவுடன்

தேவ விமானம் வந்து நீ நினைத்த இடத்திற்கெல்லாம் உன்னை ஏற்றிச் செல்லும்! மேலும், சாந்திராயனம் முதலிய சடங்குகளால் நான் பெற்றுள்ள நன்மை அனைத்தையும் உனக்குத் தத்தம் செய்து விடுகிறேன்" என்று தெரிவித்தார் கிழவர். மறுக்க முடியாததால் அரசன் அவைகளை வினயமாக ஏற்றுக் கொண்டான். அரசனைப் பலவாறு வாழ்த்திவிட்டுக் கிழவர் மனைவியுடன் தன் இருப்பிடத்திற்குச் சென்றார்.

அங்கிருந்து புறப்பட்ட விக்கிரமாதித்தன் மீண்டும் தன் பிரயாணத்தைத் துவங்கினான். விந்திய மலைச் சாரலிலுள்ள ஒரு வனத்தில் நுழைய வேண்டி வந்தது. அந்த வனம் மற்ற வனங்களைக் காட்டிலும் மாறுபட்டிருந்தது. குளுமையும் நிழலும் கிடையாது. உஷ்ணம் சகிக்கமுடியவில்லை. கிளிகளுடையவும், குயில்களுடையவும் இனிமையான குரல்களுக்குப் பதிலாகக் குகைகளின் உள்ளே தன் குட்டிகளுடன் விளையாடும் ஓநாய்களின் கூக்குரல்தான் கேட்டது. தேனுண்ட வண்டுகளின் காதுக்கினிமையான ரீங்காரத்திற்குப் பதிலாக வெட்டுக் கிளிகளின் கோர சப்தம் காதைத் துளைத்தது. அழகிய கலைமான் கூட்டங்களுக்கு மாறாக காட்டெருமைகளின் கும்பலே தென்பட்டது. வனத்திலிருந்த குளங்கள் வற்றிவிட்டன. அந்த வனத்தினூடே சிதிலமாகிக் கிடந்த கோயில் ஒன்றிருந்தது. சூரிய வெளிச்சம் புகமுடியாதபடி நாற்புறமும் கள்ளி சப்பாத்திகள் கோயிலை அடைத்துக் கொண்டிருந்தன. அருகிலே நாற்புறமும் பரந்த கிளைகளோடு கூடிய ஆலமரம் ஒன்றிருந்தது. அதில் கோர உருவமுடைய பிரும்ம ராக்ஷஸன் ஒன்று இருந்து வந்தது. கோரப் பற்களும், ஆகாயத்தைத் தொடுமளவுக்குப் பெரிய ஆகிருதியுடன் நீண்ட கால்களும், கைகளுமுடைய அந்தப் பிரும்மராக்ஷஸைப் பார்த்த உடனேயே பயத்தினால் உயிரை விட்டுவிடுவார்கள்.

விக்கிரமாதித்தனைக் கண்டதும் பிரும்மராக்ஷஸன் அவனெதிரில் வந்து நின்றான். அவனைப் பார்த்து, "நீ யார்?" என்று கேட்டான் அரசன்.

"அரசே! நான் இந்தக் கோர உருவத்தை அடையும் முன்பாகப் பிராமணனாக இருந்து வந்தேன். மந்திரசேனன் என்று பிரபலமும் பெற்று வந்தேன். துஷ்டர்களுடன் கூடாத நட்புகொண்டு அவர்களைச் சதா திருப்தி செய்வதும், வாங்கக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டுள்ள பொருள்களைத் தானம் பெற்றுக் கொண்டும், வாழ்க்கையை நடத்தி வந்தேன். என்னுடைய அறிவின் கர்வத்தினால், படித்த அறிஞர்களைப் பழித்து வந்தேன். அதன் பலனாக நான் பிரும்மராக்ஷஸாக

உருமாறி இந்த மரத்தில் வசிக்க நேரிட்டது. பத்தாயிரம் வருஷங்கள் இந்தக் கஷ்டத்துடன் கழிந்துவிட்டன. இப்போது உன் எதிரில் நிற்கிறேன். நீயோ அரசன். குடிமக்கள் கஷ்டத்திலிருப்பதைப் பார்த்துக்கொண்டு இருப்பது உன் வழக்கமல்ல" என்றான்.

"என்னுல் ஆகவேண்டியது தான் என்ன? அதைத் தெரிவி" என்றான் விக்கிரமாதித்தன்.

"கங்கைக் கரையிலே ஓர் அந்தணனையும் அவன் மனைவியையும் காப்பாற்றியதற்கு அவர் தான் அடைந்த வரங்களை உனக்குக் கொடுத்து விட்டிருப்பதை அறிவேன். அந்த வரங்களை எனக்களித்து விடு. இந்தக் கோர உருவம் நீங்கி நான் முக்தி அடைவேன்" என்றான்.

"அப்படியா, மிக்க சந்தோஷம். என்னுல் உனக்குப் பலன் ஏற்படும் என்றால் நீ கேட்டதைத் தாராளமாகப் பெற்றுக்கொள்" என்று கிழவரால் தனக்களிக்கப்பட்ட வரங்களை சிறிதும் யோசியாமல் விக்கிரமாதித்தன் அந்தப் பிரும்மராக்ஷஸனுக்குத் தத்தம் செய்து விட்டான். உடனே அவனுடைய கோர உருவம் மறைந்து மனித உருவம் வந்தது. அதே சமயம் ஆகாயத்திலிருந்து அவனை அழைத்துச் செல்ல அழகிய விமானம் வந்தது. அதில் ஏற்றி அவனை அனுப்பிவிட்டுத் தன் நகரம் திரும்பினான் விக்கிரமாதித்தன்.

இவ்வாறு கதையை முடித்த பதுமை, "போஜராஜரே! தனக்குக் கிடைத்த அரிய வரங்களையும் பிரும்மராக்ஷஸனின் சாபம் நீங்குவதற்காக எங்கள் விக்கிரமாதித்த பூபதி தியாகம் செய்து விட்டார். அவ்விதம் தியாகம் செய்யக்கூடிய மனோ தைரியம் உனக்கிருக்கிறதா?" என்று கேட்டது.

அப்பொழுது சூரியாஸ்தமனமாகி விட்டதால் போஜராஜன் மௌனமாகச் சிம்மாசனப் படிகளிலிருந்து கீழிறங்கிச் சென்று விட்டான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் 13-வது படிக்குக் காவலான நிருபமா என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

## 16-வது கிருபா பரிபூரணவல்லிப் பதுமை சொல்லிய கணிகை கமலரேகையின் கதை



மறுநாள் போஜராஜன் அதிசய சிம்மாசனம் ஏற முயன்றபோது பதினாறுவது படிக்கு காவலான கிருபா பரிபூரணவல்லிப் பதுமை புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்த சக்கரவர்த்தி உஜ்ஜயினியை அரசாண்டு வரும் நாளில் வடநாட்டிலிருந்து ஒரு தூதுவன் வந்து மிகவும் விநோதமான ஒரு செய்தியைச் சொன்னான்.

ஆரிய தேசத்தில் கமலரேகை என்ற நடனக் கன்னிகை ஒருத்தி இருந்தாள். அவள் ஆடல் பாடலில் வல்லவள். அவளுடைய அழகைக் கண்டால் ஆண்மையற்றவருக்கும் சபலம் தட்டும். ஆனால் அவளிடம் இரவில் செல்லும் மனிதன். விடியற்காலத்தில் படுத்த பிணமாய் இறந்து கிடப்பான். அவள் அழகைக் கண்டு மோகித்த ஆடவர் ஆயிரம் பேர்வழிகள் அவளை அடைய வேண்டுமென்ற ஆசையால் விளக்கில் விழும் விட்டில் பூச்சிபோன்று சென்று மடிந்தனர். ஆனால் அதன் மர்மத்தைக் கண்டறிந்தவர் எவருமில்லை. இதை ஒற்றன் மூலமாக அறிந்த விக்கிரமாதித்தன். அந்த அதிசயத்தைக் காண வேண்டுமென்று புறப்பட்டுச் சென்றான்.

அத்தேசத்தை அடைந்ததும் ஆயிரம் பொன்கொடுத்து அன்றிரவு கமலரேகையின் இல்லத்திற்கு வருவதாக விக்கிரமாதித்தன் செய்தியனுப்பினான். அதுபோல் அவன் வந்ததும் கமலரேகை எதிர்கொண்டு வந்து வணங்கி வரவேற்றாள். அரசனைப் பள்ளியறைக்கு அழைத்துச் சென்றுபோய் பால் பழத்தோடு தாம்பூலம் மடித்துக் கொடுத்து, பன்னீர் தெளித்து, பஞ்சணையின் நான்கு மூலைகளிலும் தூண்டா விளக்குகள் ஏற்றிவைத்தாள். பிறகு மஞ்சத்தில் மலர் தூவி அதில் உட்காரும்படி சொன்னாள்.

"பெண்ணே! நான் மஞ்சத்தில் படுத்து அறியாதவன்.. என் படுக்கையைக் கீழே தரையிலே போட்டு விடு. வழக்கமின்றி மஞ்சத்தில் படுத்தால் மயக்கம் தலைக்கேறி கீழே விழுந்து இறந்து விடுவேன்" என்று மறுத்துவிட்டான். தலையணைக்கு மஞ்சத்தின் திண்டை எடுத்துத் தந்தாள். அதையும் தீண்டாமல் தள்ளி வைத்து விட்டான் மன்னன். கமலரேகை "இடி இடி" யென்று சிரித்தாள். ஏன் சிரித்தாள்? பலி பீடத்திற்கு அழைத்துச் செல்லப்படும் ஆடு, தன்னை வெட்டப் போகும் பூசாரியின் கையிலிருக்கும் தழையைத் தின்றால் வாழ்ந்து விடலாமென்று ஆசையோடு சாப்பிடுவதைப்போல், "மஞ்சத்தில் படுத்தால் மாண்டு விடுவோமென்றெண்ணி மண் தரையில் படுத்தானே, அதில் மட்டும் மாளமாட்டானா?" என்று எண்ணித்தான் ஏளனமாகச் சிரித்தாள். அரசனோ அதை லக்ஷியம் செய்யாமல் மௌனமாயிருந்தான்.

பிறகு கமலரேகை குளித்து, வாசனைத் திரவியங்களால் தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு அரசனிருக்கும் பள்ளியறைக்கு வந்து படுத்தாள். விக்கிரமாதித்தன் அவளுக்குச் சேரவேண்டிய ஆயிரம் பொன்னையும் முடிச்சோடு கொடுத்தான். ஆனால் தன்னை நெருங்க அவளை அனுமதிக்க வில்லை. இரவு முழுதும் கண்ணயரவுமில்லை. கமலரேகையின் கைவிரல் நுனிகூடத் தன்மீது படவும் விடவில்லை.

கமலரேகை வீணை கானமெழுப்பினாள். விடியும்வரை மன்னன் தூங்கமாட்டான் போலிருந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் கமலரேகை சொல்ல முடியாத ஒருவித மயக்கத்தால் மயங்கிப் படுக்கையில் சாய்ந்துவிட்டாள். உடனே விக்கிரமாதித்தன் ஒரு தலையணையை எடுத்து அவளருகில் வைத்துவிட்டுத் தூரத்தில் போய் அமர்ந்து உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தான். அப்போது கண்ணுறங்கும் கமலரேகையின் மூக்கிலிருந்து பொன்னிறம் கொண்ட சிறு பாம்பு ஒன்று வெளிப்பட்டுப் படமெடுத்தபடி, தலையணையை மனிதனென்று நினைத்து ஓங்கி அடித்துக் கடித்தது. உடனே விக்கிரமாதித்தன் ஒரே தாவாகத் தாவி, உடைவாளால் அந்தப் பாம்பை இருதுண்டாக்கினான்.

காலையில் கண் திறந்த கமலரேகை தன் அருகில் உயிருடன் படுத்திருக்கும் விக்கிரமனைக் கண்டு திடுக்கிட்டாள். இதற்குள்ளாக அவன் இறந்து போயிருப்பான் என்று, சுடுகாட்டிற்குப் பிணத்தை எடுத்துச் செல்ல சகல பொருள்களுடன் ஆட்கள் தயாராகக் காத்திருந்தனர். கதவைத்

திறந்து கொண்டு விக்கிரமாதித்தன் வந்ததைக் கண்டு வியப்படைந்த அவர்கள் அரசனை நெருங்கி. அவன் மட்டும் பிழைத்த விதத்தைத் தெரிவிக்க வேண்டுமாய் கேட்டனர்.

அரசனும் நடந்ததைத் தெரிவித்து. தான் துண்டித்த தங்க நிறப் பாம்பையும் எடுத்துக் காட்டினான். கமலரேகை அரசனின் பாதங்களில் விழுந்து வணங்கி, "ஐயா! என் பேரில் இருந்த அபாண்டத்தைப் போக்கிய தங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்!" என்று கண்ணீர் விட்டாள். அரசன் அந்தக் கணிகைக்கு அனேக வெகுமதிகளை அளித்து, ஊராரிடம் விடைபெற்றுக்கொண்டு உஜ்ஜயினி திரும்பினான்.

இவ்வாறு கதை சொல்லி முடித்த பதுமை, "கதை கேட்டீரா போஜராஜரே! உயர்ந்தோர் தாழ்ந்தோரெனப் பாராமல் எக்குலத்தவருக்கும் உதவிபுரியும் எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற விசால உள்ளம் உமக்கு இருந்தாலன்றோ இச்சிம்மாசனம் ஏறலாம்!" என்றது. அச்சமயம் அந்திப்பொழுது இருளத் தொடங்கியதால் போஜராஜன் மௌனமாகச் சிம்மாசனப் படிகளை விட்டிறங்கிச் சென்றான்.

(மேற்கூறிய கதைக்குப் பதிலாக வடமொழி மூலத்தில் பதினொருவது படிக்குக் காவலான விலாஸரஸிகை என்னும் பதுமை பின்வரும் கதையைக் கூறியதாக உள்ளது.)

## வஸந்தோற்சவக் கதை



ஒரு சமயம் விக்கிரமாதித்தன் உலகத் திக்விஜயத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு உஜ்ஜயினி நோக்கித் திரும்பி, படைகளுடன் நகர வாயிலை அடைந்தான். அப்போது ஜோஸ்யத்தில் தேர்ச்சியுள்ள ஒருவன் வந்து சக்கிரவர்த்தியிடம் பின்வருமாறு தெரிவித்தான்.

"அரசே! இன்று தாங்கள் திக்விஜயம் முடிந்து நகர் திரும்புகிறீர்கள். ஆனால் இன்று நகரத்துக்குள் நுழைவதற்கு

ஏற்றநாள் அல்ல. இன்னும் நான்கு தினங்களுக்கு நாள் சரியாக இல்லே! இதை கூறவே வந்தேன்!"

ஜோஸ்யனின் வார்த்தைகளில் நம்பிக்கை கண்ட விக்கிர மாதித்தன் தன் தலைநகருக்குள் நுழைவதை நான்கு நாட்களுக்கு ஒத்திப்போட்டான். தானும், தன்படைகளும், நகருக்கு வெளியே இருந்த உத்தியாவனத்தில் கூடாரங்களை அமைத்துக்கொண்டு தங்க ஏற்பாடு செய்ய உத்தரவிட்டான். அவ்விதமே கூடாரங்கள் தயாராகின.

இந்தச் சமயத்தில் பருவங்களுக்கெல்லாம் அரசனான வஸந்தம் வந்தது. அந்தக் காலத்தில் பகுள புஷ்பங்கள் திடீரென்று அவற்றின் இதழ்களை மலரச்செய்து நாலுதிசைகளிலி ருந்தும் தேனீக்களைக் கூட்டம் கூட்டமாக வரவழைக்கின்றன. அவைகள் பார்ப்பதற்கு தேவ கன்னிகையர்கள் தங்கள் கரங்களில் அமிர்தத்தை ஏந்திக் கொண்டு அதைக் குடிக்க மக்களை அழைப்பது போன்றிருக்குமாம். மாமரங்களில் வழியும், மந்தத்தை அளிக்கக்கூடிய, ரசத்தைப் பருகியதால் ஏற்பட்ட மயக்கத்திலே அவை ஒன்றோடொன்றுகட்டி அணைத்துக் கொள்ளுகின்றன. அப்போது, அவைகளின் ரீங்காரத்தினுல், அழகுள்ள மங்கையரின் முகத்திலிருந்து சுகந்தத்தைத் திருடிச்செல்லும் சக்தி வாய்ந்த மெல்லிய தென்றல் அங்கு தோன்றுகிறது.

வஸந்தகாலத்தின் கேளிக்கைகளைக் கண்ட மந்திரி சுமந்தரர் அரசனிடம் வந்தார். "அரசே! வஸந்தோத்ஸவத்தை நாம் இன்று கொண்டாடுவோம். வஸந்தனை கௌரவித்தோமானுல், மற்ற பருவங்களும் நமக்குச் சாதகமான பலன்களை அளிக்கும்; எல்லா ஜனங்களுக்கும் நல்ல காலம் ஏற்படும்!" என்றுர்.

விக்கிரமாதித்தனும் அதற்கிணங்கி, "சுமந்தரரே! வஸந்தனைப் பூசிக்க, செய்யவேண்டிய காரியங்கள் அனைத்தும் உமது பொறுப்பிலேயே விடுகிறேன். சாமான்களும், மற்றும் பண்டிதர்களும் அறிஞர்களும் வரவழைக்க ஏற்பாடு செய்யவேண்டும்" என்றுன்.

அரசன் தங்கியிருந்த இடத்திற்கு எதிரிலேயே பெரும் பந்தல் போடப்பட்டது. அது முழுவதும், தோரணங்களாலும், பூக்களாலும் அலங்கரிக்கப்பட்டது. உத்ஸவத்தில் கலந்து கொள்ள அறிஞர்களும், பண்டிதர்களும் நன்முகப் பாடக்கூடிய நடன மாதர்களும் நகரத்திலிருந்து வரவழைக்கப்பட்டனர். தவிர, அரசன் வஸந்தோத்ஸவம் கொண்டாடுகிருன் என்று

கேள்விப்பட்டதும் கூன், குருடு, செவிடு, நொண்டி, முடவன், மற்றும் அனுதரவற்ற பிச்சைக்காரர்கள் வந்து குவிந்தனர். பிரும்மாண்டமான அப்பந்தலின் நடுவே நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஜோதிமயமான சிம்மாசனம் ஒன்று போடப்பட்டது. அதன்மீது லக்ஷ்மி, நாராயணன் இருவருடைய விக்கிரகங்களும் வைக்கப்பட்டன. பூசைக்கு வேண்டிய குங்குமம், கர்ப்பூரம், கஸ்தூரி, சந்தனம், அகிற்கட்டை முதலிய வாசனை திரவியங்கள் கொண்டு வரப்பட்டன. மல்லிகை, மா, நவமல்லிகை, குண்டு மல்லிகை, சம்பகம், கேதகி (தாழை) முதலிய புஷ்பவர்க்கங்கள் கொண்டுவந்தனர். பூசைக்கு வேண்டிய திரவியங்கள் சேகரிக்கப்பட்டதும், அரசன் ஷோடசோபசார பூசையைத் தொடங்கினான். அறிஞர்களுக்கும், கலைகளில் தேர்ச்சி பெற்றவர்களுக்கும், ஆடையாபரணங்களும், பரிசுகளும் வழங்கப்பட்டன. நடன கலா வல்லுனர்கள் வஸந்தன் மீது பாடல்களைப் பாடியும், நடனம் ஆடியும் அங்கு கூடியிருந்தோரை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தினர். அவர்களுக்கு வெற்றிலை பாக்கு கொடுத்து மரியாதை செய்து அனுப்பினான் விக்கிரமன். கடைசியாக அங்கு காத்திருந்த பிச்சைக்காரர்களுக்கும், நொண்டி, முடம் முதலிய அங்கஹீனர்களுக்கும் தங்க நாணயங்களை வழங்கினான்.

இவ்வளவு கோலாகலமாக இருக்கையில், ஒரு ஏழை அந்தணன் அங்கு வந்து சேர்ந்தான். அவனுடன் சிறு பெண் ஒருத்தியும் வந்தாள். அரசனை அந்தணன் வாழ்த்திவிட்டுப் பின்வருமாறு சொன்னான்:

“அரசே! நந்திவர்த்தனம் என்னும் நகரத்தில் வசிப்பவன் நான். எனக்கு எட்டு குமாரர்கள் பிறந்தனர். ஆனால், பெண் குழந்தை பிறக்கவே இல்லை. ஆகவே, நானும் என் மனைவியுமாக ஜகதாம்பிகையைத் துதித்து, ”ஜகன்மாதா! ஆசைக்கு ஒரு பெண் கூட பிறக்கவில்லை எங்களுக்குப் பெண் குழந்தை பிறக்க அருள்புரி. அக்குழந்தைக்கு உன் பெயரை வைத்து அழைக்கிறோம். மேலும் அவளை வேதங்கள் கற்ற அறிஞனுக்கு மணம் செய்து கொடுக்கிறோம். திருமணத்தன்று அவள் நிறைக்குச் சரியான தங்கத்தை ஏழைகளுக்குத் தானம் செய்கிறோம்.” என்று நாங்கள் சங்கற்பம் செய்து கொண்டோம். தேவியின் அருளால் எங்களுக்குப் பெண் குழந்தை பிறந்தது. இதோ நிற்கும் பெண்ணே அக்குழந்தை. குரு பதினொரும் இடத்தில் இருக்கிறான். இதுவே கல்யாணம் செய்யும் தருணம். அடுத்த வருஷம் இம்மாதிரி சமயம் நேராது. இவ்வுலகில் உம்மைத் தவிர எனக்குத் தயைபுரியக் கூடியவர் யாருமில்லை.

இப்பெண்ணினுடைய நிறைக்குச் சரியாகத் தங்கம் கொடுப்பவர் எவருமில்லை. நீர் ஒருவர்தான் என் சங்கற்பத்தை நிறைவேற்றக் கூடியவர். என்னைக் கஷ்டத்திலிருந்து கரையேறச் செய்வது உங்கள் பொறுப்பு."

அந்த ஏழை அந்தணனின் நிலையைக் கண்டு விக்கிரமாதித்தன் பச்சாதாபப்பட்டான். "ஐயா! நீங்கள் கவலைப்படாதீர்கள். உங்கள் சங்கற்பத்தை நான் நிறைவேற்றி வைக்கிறேன். இப்பெண்ணுக்குச் சரியான தங்கத்தைப் பொக்கிஷத்திலிருந்து கொடுக்கும்படி உத்தரவு செய்கிறேன்" என்ற அரசன் உடனே தனாதிகாரியை வரவழைத்து, "திரவிய தத்தா! இதோ நிற்கும் ஏழைப் பண்டிதருக்கு நம் பொக்கிஷத்திலிருந்து இப்பெண்ணின் நிறைக்குச் சரியாகத் தங்கம் கொடு. இன்னும் எட்டு கோடி மதிப்புள்ள தங்கத்தையும் கொடுத்தனுப்பு" என்று சொன்னான்.

அந்தணன் அளவிலாத ஆனந்தமடைந்தான். அரசன் தந்த பொருளுதவியினால் தன் குமாரத்திக்கு ஒரு யௌவன புருஷனை மணம் முடித்து மனக்குறை தீர்ந்தான்.

## 17-வது கருணாகரவல்லிப் பதுமை சொல்லிய நவமோகினி மஞ்சரி கதை

மறுநாள் போஜ மகாராஜன் சிம்மாசனம் ஏற முயன்ற போது பதினேழாம் படிக்குக் காவலான கருணாகரவல்லிப் பதுமை புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது.



உஜ்ஜயினியை விக்கிரமாதித்தன் அரசாண்டு வரும் நாளில் வட திசைக்குச் சென்றிருந்த ஒற்றன் திரும்பி வந்து அரசனை வணங்கி தான் கண்டு வந்த அதிசயம் ஒன்றைப் பின் வருமாறு சொன்னான்.

"அரசே! மகரபுரி என்னும் பட்டணத்தை சோமப்பிரதாபன் என்னும் ராஜன் ஆண்டு வருகிறான். அவன்

தினமும் தான தருமம், பரோபகாரம் முதலிய பூஜைகளை யெல்லாம் செய்து, சதுரங்க சேனையுடன் யானைமேல் பவனிவந்து அரண்மனையிலிறங்குகிறான். அப்போது தேவகன்னியர்களுக் கொப்பான அழகை உடைய அனேக பெண்கள் முத்து, பவளம், அன்னம் முதலிய ஆலாத்திகளெடுத்து அரசனைச் சுற்றி, ஊருக்கு ஈசானிய மூலையில் கொட்டிவிட்டுப் போனார்கள். அவ்விடத்தில் என்ன அதிசயமென்று பார்க்கப் போனேன். அங்கே அனேக பூதங்கள் வந்து சாதங்களைத் தின்று கொழுத்து, மற்ற இரத்தினங்களைக் கைப்பற்றிக் கொண்டு, ஓர் ஆலமரத்திலேறிப் போய்விட்டன. அப்பால் எனக்கொன்றும் தோன்றவில்லை" என்று தெரிவித்தான் அந்த ஒற்றன்.

அதைக் கேட்ட விக்கிரமனுக்கு உடனே அந்தப் பட்டணத்தை அடைந்து அவ்வதிசயத்தைக் காண வேண்டு மென்ற விருப்பம் ஏற்பட்டது. உடனே நிர்வாகத்தை பட்டியிடம் ஒப்புவித்துவிட்டுப் புறப்பட்டான். வேதாளத்தின் மீது ஏறிக்கொண்டு மகரபுரியை அடைந்தான். அன்றையத் தினம் சோமப்பிரதாபனுக்கு நடந்த வைபவங்களைக் கண்டு களித்தான். பூதங்கள் சாதங்களைத் தின்று, முத்து முதலிய மணிகளைக் கொண்டு போகும்போது அவைகளைத் தொடர்ந்து சென்றான். பூதங்கள் ஓர் ஆலமரத்தில் ஏறி உயரே சென்று மறைந்தன.

விக்கிரமாதித்தன் மனம் தளராமல் மரத்தின் மீதேறிச் சென்று பார்க்கையில் அங்கே தேவலோகத்துக்கொப்பான மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும், மணம் கமழும் மலர் வனங்களும், தெளிந்த நீரையுடைய தடாகங்களும் கூடிய பட்டணம் ஒன்றைக் கண்டான். அங்குள்ள கட்டிடங்களில் பெரிதான அரண்மனை போன்ற மாளிகையில் நுழைந்தான். செப்புத் தொட்டியில் வெந்நீர் காய்ந்து கொண்டிருந்தது. சுகமாகக் குளித்து, தாம்பூலந் தரித்து, அருகிலிருந்த மஞ்சத்தில் ஏறிப் படுத்து இளைப்பாறி, நித்திரையிலாழ்ந்தான்.

அந்தச் சமயத்தில் அம் மாளிகையின் சொந்தக்காரியாகிய நவமோகினி மஞ்சரி அங்குவந்து பார்த்தபோது, வெந்நீரிலே குளித்து சுகமாக நித்திரை செய்யும் விக்கிரமனைக் கண்டாள். அவன்மீது கோபமடைந்த அவள் தன் ஏவல் பூதத்தை அழைத்து அவனைக் கொண்டுபோய் ஆலமரத்துக்கப்பால் எறிந்து விடும்படி உத்தரவிட்டாள். பூதம் தூக்கிச் செல்லும்போது கண்விழித்த அரசன், விஷயமுணர்ந்து, கோபமடைந்தவனாய் தன் உடைவாளினால் அந்தப் பூதத்தை வெட்டித் தள்ளினான் பிறகு நேராக அரண்மனை வந்து அங்கு இருக்கும் பூதங்களையும் உடைவாளினால் கொன்றான். பிறகு வேதாளத்தை அழைத்து

முடித்துக் கொண்டதும். பிரார்த்தனை செய்து கொண்டு, தசவித அம்சம் கொண்ட ஹோமம் ஆரம்பி. ஹோமத்தின் முடிவில் யோகினிகளுக்குக் காணிக்கையாக உன் உடலையே அர்ப்பணித்து விடு. அப்போது யோகினிகள் திருப்தி அடைந்து நீ கேட்கும் வரத்தினை அளிப்பார்கள்" என்றார்.

யோகி தெரிவித்துச் சென்றபடியே அரசன் அமரபக்ஷத்துச் சதுர்த்தசி அன்று யோகினிகளைக் குறித்து பூஜைகளைத் தொடங்கினான். பூஜைகள் முடிந்ததும் ஹோமத்தை ஆரம்பித்தான். முறைப்படி ஒன்றையும் விடாமல் ஹோமத்தை முடித்து யோகினிகளுக்காக தன் உடலை அர்ப்பணிக்கத் தானே ஹோம குண்டத்தில் குதித்து விட்டான். அவன் உறுதியால் திருப்தியடைந்த யோகினிகளும் அரசனை உடனே அக்னி குண்டத்திலிருந்து வெளியே கொண்டு வந்தனர். அவன் தேகம் முன்னிலும் அழகாய் காட்சியளித்தது. "அரசே உன் உறுதியைக் கண்டு நாங்கள் சந்தோஷமடைகிறோம். உனக்கு வேண்டியதைக் கேள்" என்றனர்.

"என் அரண்மனையிலிருக்கும் ஏழுபெரிய குடங்களில் தினமும் நிறைய தங்கம் நிரம்பும்படி அருளவேண்டும். இது ஒன்றுதான் நான் விரும்புவது. இதைத் தாங்கள் மறுக்கக் கூடாது" என்று வேண்டினான் அரசன்.

"அரசே! உன் வேண்டுகோளை நாங்கள் நிறைவேற்ற வேண்டுமானால் ஒரு நிபந்தனை உண்டு! மூன்று மாதங்கள் தவறாமல் தினமும் நீ இவ்விதமே ஹோமகுண்டத்தில் உன் உடலை அர்ப்பணித்து வர வேண்டும். அப்போது நாங்கள் உன் விருப்பத்தை நிறைவேற்றி வைப்போம்" என்று சொல்லி விட்டு யோகினிகள் அறுபத்து நான்கு பேர்களும் மறைந்தனர்.

அன்றிலிருந்து அரசனும் தினம் தவறாமல் யோகினிகளைக் குறித்து பூஜையை நடத்தி வந்தான். ஒவ்வொரு நாளும் பூஜையின் முடிவில் தன்னை அர்ப்பணித்து வந்தான். யோகினிகளும் அவனை உயிர்ப்பித்து வந்தனர்.

இந்தச் செய்தி உஜ்ஜயினி நகரத்திலிருந்து அரசாண்டுவந்த விக்கிரமனின் செவிகளுக்கு எட்டியது. தன்னைப் போன்று பெரும் புகழடைவதற்காகத் தினமும் உடலை அக்னியில் சமர்ப்பிக்கிறான் என்ற செய்தி அரசனுக்கு மிகுந்த மன வருத்தத்தைக் கொடுத்தது. அவன் எடுத்துக் கொண்டிருக்கும் காரியம் எவ்வளவு சிரமமானது? மறுநாளே அவனுடைய இருப்பிடத்திற்குப் புறப்பட்டுச் சென்றான் விக்கிரமாதித்தன்.

கொழுந்து விட்டெரியும் அக்கினியின் முன்பாக அமர்ந்து கொண்டு பூசை செய்து கொண்டிருந்தான் அந்நாட்டு மன்னன். விக்கிரமன் வந்திருப்பதை அவன் கவனிக்கவில்லை. அவன் கவனம் முழுவதும் பூசையிலேயே இருந்தது. ஹோமம் முடிவடைந்த சமயம் விக்கிரமன் தன் இடத்திலிருந்து பாய்ந்து அவனுக்கு முன்னதாக அக்கினிக் குண்டத்தில் இறங்கி விட்டான். திடுக்கிட்ட அரசனே செய்வதென்றறியாமல் பின்னடைந்து விட்டான்.

"இன்றைய தினம் நரமாமிசம் வழக்கம்போல் இருக்கவில்லை. மிகவும் ருசியாக இருக்கிறதே. மேலும், இம்மனிதனுடைய உள்ளம் பரிசுத்தமாக இருக்கிறது" என்று யோகினிகள் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர். பிறகு விக்கிரமனைப் பன்மடங்கு பிரகாசம் பொருந்தியவனாக அக்கினியிலிருந்து வெளியே கொண்டு வந்து விட்டனர்.

வெளியே வந்ததும் வழக்கமாக அக்கினியில் இறங்கும் அரசன் திகைத்து நிற்பதும், தாங்கள் வெளியே கொணர்ந்தவன் வேற்று மனிதனாக இருப்பதையும் யோகினிகள் கண்டனர். "வீரனே! நீ யார்? நீ என்ன காரணத்திற்காக இக்குண்டத்தில் இறங்கினாய்?" என்று கேட்டனர்.

"அம்மையே! அடியேன் உஜ்ஜயினியின் அரசன் விக்கிரமன். பிறருக்கு உதவுவதையே வழக்கமாகக் கொண்டவன். இதோ இருக்கும் அரசர் தினமும் தன் உடலை அக்கினியிலிட்டு வருத்திக் கொள்ளுகிறார் என அறிந்து இவருக்கு உதவும் நோக்கத்துடனேயே இங்கு வந்தேன்" என்றான் விக்கிரமன்.

"விக்கிரமா உன் செய்கையால் நாங்கள் திருப்தி அடைந்தோம். உனக்கு வேண்டிய வரத்தினைக் கேள்" என்றனர் அவர்கள்.

"நீங்கள் என்மீது கருணை கொண்டு, நான் கேட்கும் வரத்தினை அளிக்க முன் வந்திருப்பது உண்மையானால், இந்த அரசரின் எண்ணத்தை நிறைவேறச் செய்யுங்கள். அவர் அரண்மனையிலிருக்கும். ஏழு பெரிய குடங்கள் நிறைய தினமும் தங்கம் நிரம்பும்படி அருள வேண்டும். தினந்தோறும் அக்கினியிலே இவ்விதம் தன் உடலை அர்ப்பணித்துக் கொண்டு தன்னைத்தானே வருத்திக் கொள்வதினின்றும் இவருக்கு விடுதலையளியுங்கள்" என்று வேண்டினான் விக்கிரமன்.

"விக்கிரமா! நாங்கள் கேட்கச் சொன்னது உனக்கு வேண்டிய வரத்தினை. ஆனால், உன் கீர்த்தியைக் கண்டு பொறாமை கொண்ட இவ்வரசனுக்கு அவன் எண்ணத்தை நிறைவேற்றும்படி நீ கேட்கிறாய். இது தான் பெரியோர்களுக்கு அழகு. நீ விரும்பியபடியே நடக்கட்டும்" என்று யோகினிகள் மறைந்தனர்.

அந்நாட்டு அரசனுக்கு என்ன பதில் சொல்வதென்று தோன்றவில்லை. கண்களில் நீர்வழிய விக்கிரமனைக் கட்டியணைத்துக் கொண்டான். விக்கிரமாதித்தனும் அவனைத் தேற்றி, அனுப்பினான்.

## 18-வது பரிமளமோகினிவல்லிப் பதுமை சொல்லிய நான்கு சகோதரர்களின் பாகப்பிரிவினைக் கதை

மறுநாட் காலையில் போஜ ராஜன் மறுபடி சிம்மாசனத்தில் ஏறி அமர முயன்றபோது பதினெட்டாம் படிக்குக் காவலான பரிமள மோகினிவல்லி என்னும் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.



புரந்தரபுரி என்னும் நகரம் ஒன்று இருந்தது. அங்கே செல்வந்தனான வியாபாரி ஒருவன் வசித்து வந்தான். அவனுடைய அந்திய காலத்தில் உயிர் பிரியப்போகும் தருணத்தில் அவன் தன் நான்கு குமாரர்களையும் அருகில் அழைத்தான்.

"மைந்தர்களே! என்னுடைய மரணத்திற்குப் பிறகு நீங்கள் நால்வரும் ஒன்றாக ஒரே இடத்தில் வசிப்பீர்களோ அல்லது பிரிந்து செல்வீர்களோ நான் அறியேன். ஆனால் உங்களிடையே விரோதம் ஏற்படக்கூடும். ஆகவே, என் உயிர் பிரிந்து விடுவதற்கு முன்பு, உங்கள் வயதுக்குத் தகுந்தபடி, என்னுடைய சொத்துக்களை நான்கு

பங்குகளாகப் பிரித்து வைத்திருக்கிறேன். என்னுடைய கட்டிலின் கீழே நான்கு அடி ஆழத்தில் நான்கு பகுதிகளாக நான் சம்பாதித்த செல்வத்தைப் புதைத்து வைத்திருக்கிறேன். பெரியவனிலிருந்து சிறியவன் வரை முறைப்படி அவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்" என்று வியாபாரி சொல்லிவிட்டு நிம்மதியாக உயிர் நீத்தான்.

வியாபாரி இறந்த பிறகு குடும்பம் ஒரு மாதகாலம் அமைதியாக நடந்தது. சகோதரர்கள் நால்வரும் அன்யோன்யமாக இருந்து வந்தனர். ஆனால் அவர்களின் மனைவிமார்களிடையே தகராறுகள் எழத் தொடங்கின. அவைகளைத் தடுக்க வழியின்றி அவர்கள், "நம் குடும்பத்தில் ஏன் தகராறு உண்டாகவேண்டும்? நம் தகப்பனார் இறப்பதற்கு முன்பு நமக்குச் சொத்துக்களைப் பிரித்து வைத்திருப்பதாகச் சொல்லவில்லையா? கட்டிலின் கீழ் புதைத்து வைத்திருக்கும் பொருளைப் பிரித்து எடுத்துக்கொண்டு அமைதியாக வாழ்வோம்" என்றனர்.

அவ்விதமே பூமியிலே அவர்கள் தோண்டிப் பார்த்தபோது நான்கு செப்புத் தவலைகள் இருப்பதைக் கண்டனர். அவைகள் நிறைய தங்கம் வைத்திருப்பார் என்று ஆவலுடன் அவர்கள் தவலைகளை வெளியே எடுத்தனர். என்ன ஏமாற்றம்? தவலைகளில் நாணயங்களோ தங்கமோ இல்லை. ஒரு தவலையில் கரியும், இரண்டாவது தவலையில் மண்ணும், மூன்றாவதில் வைக்கோலும், நான்காவது தவலையில் எலும்புத் துண்டுகளும் காணப்பட்டன.

"ஆஹா! நம் தகப்பனார் சரியாகத்தான் பிரித்து வைத்துவிட்டுப் போயிருக்கிறார். ஆனால் அவருடைய முறைதான் நமக்கு விளங்கவில்லையே" என்று தவித்தனர் சகோதரர்கள் நால்வரும்.

அவர்கள் ஊர் பஞ்சாயத்தார்களிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தார்கள். "ஐயா! இவைகளை அடிப்படையாகக் கொண்டு எங்கள் சொத்துக்களைப் பிரித்துக் கொடுங்கள்" என்றனர். அவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"சகோதரர்களே! உங்கள் தகப்பனார் மனதில் எதை நினைத்துக் கொண்டு இம்மாதிரி செய்திருக்கிறார் என்பதை எங்களால் அனுமானிக்க முடியவில்லை. வேறு எங்கேயாவது கொண்டு சென்று பாருங்கள்" என்று கையை விரித்துவிட்டனர்.

பார்த்தார்கள் சகோதரர்கள், எவ்விதத்திலாகிலும் பிரித்துக் கொள்ளவேண்டுமே? ஊர் ஊராகச் சென்று நிபுணர்களிடம்

எடுத்துக் கூறி நியாயம் தீர்க்குமாறு வேண்டினர். ஒருவராலும் அவர்களிடையே சொத்துக்களை பிரித்துவைக்க முடியவில்லை. கடைசியாக சகோதரர்கள் நால்வரும் விக்கிரமாதித்தனின் சபைக்கு வந்து சேர்ந்து பாகப் பிரிவினை செய்து வைக்கும்படி கேட்டனர்.

கரி, மண், வைக்கோல், எலும்புத் துண்டு இவைகளின் தாத்பரியம் விக்கிரமாதித்தனுக்கும் விளங்கவில்லை. சபையிலுள்ள அறிஞர்களும் கைவிரித்து விட்டனர்.

சகோதரர்கள் நால்வரும் மிகவும் விசனமுற்றவர்களாய் ஊர் திரும்பினர். வரும் வழியிலே பிரதிஷ்டானம் என்னும் நகரம் இருந்தது. அந் நகரத்திலே ஏழைக் குயவன் ஒருவனுடைய வீட்டிலே சாலிவாகனன் என்பவன் இருந்தான். அவன் சிறந்த அறிவாளி. அவன் நான்கு சகோதரர்களையும் கண்டு பின்வருமாறு சொன்னான்.

"இவர்கள் நால்வரும் பணக்கார வியாபாரிகள் குமாரர்கள். வியாபாரி உயிருடனிருக்கையில் தன்னுடைய சொத்துக்களை நால்வருக்கும் அவரவர்களுக்குத் தக்கவாறு பிரித்து, அவற்றைக் குறிக்கும் பொருள்களை இத் தவலைகளில் வைத்துப் புதைத்து விட்டார். தான் இறக்கும்போது, தகராறு ஏதும் செய்யாமல் அந்தப் பொருள்களை முறைப்படி பிரித்துக் கொள்ளுமாறு சொல்லிவிட்டுச் சென்றார்.

"வயதில் மூத்தவன் மண் நிறைந்த தவலையும், இரண்டாமவன் வைக்கோல் நிறைந்த தவலையையும், மூன்றாவது மகன் எலும்புத் துண்டுகள் நிறைந்த தவலையையும், நான்காவது பையன் கரி வைக்கப்பட்டிருக்கும் தவலையையும் எடுத்துக் கொள்ளவேண்டும். இப்போது கேளுங்கள். ஒவ்வொன்றும் எதைக் குறிக்கிறதென்பதைச் சொல்லுகிறேன். மண் என்பது நிலத்தையும், வைக்கோல் தானியத்தையும், எலும்புத் துண்டு கால் நடைகளையும், கரித்துண்டு தங்கம் வெள்ளி முதலியவற்றையும் குறிக்கிறது. ஆகவே, மூத்த குமாரன் வியாபாரியின் நிலங்களை அடையவேண்டும். இரண்டாமவன் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் தானியங்கள் அனைத்தையும் அடையவேண்டும். மூன்றாவது மகன் வியாபாரிக்குச் சொந்தமான கால் நடைகளை அடைகிறான். இளைய குமாரன் தங்கம் வெள்ளி ஆபரணங்களையும் பாத்திரங்களையும் அடைகிறான். இதில் பிரித்து வைக்க என்ன கஷ்டமிருக்கிறது?" என்றான் சாலிவாகனன். நான்கு சகோதரர்களும் அவ்விதமே சொத்துக்களைப் பிரித்துக் கொண்டு தங்கள் ஊர் திரும்பினர்.

வியாபாரியின் மைந்தர்களிடையே உகந்த முறையில் சொத்துக்களைச் சாலிவாகனன் பங்கிட்டு செய்துவைத்த விஷயம் உஜ்ஜயினியிலிருக்கும் விக்கிரமாதித்த சக்கரவர்த்திக்குத் தெரியவந்தது. அதைக் கேட்டு அரசன் பெரிதும் வியப்படைந்தான். உடனே பிரதிஷ்டான நகரத்திற்கு சேவகன் ஒருவன் மூலம் லிகிதம் அனுப்பினான்.

"ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்டுவித்தல், ஈதல், இரங்கல் ஆகிய ஆறு கடமைகளைச் சரிவர செய்துவருபவர்களும், எல்லாவித நற்குணங்களை உடையவர்களுமாகிய பிரதிஷ்டான நகரத்து பிரஜைகளுக்கு அனேக வாழ்த்துக்கள். அரசன் விக்கிரமாதித்தன் உங்கள் சுகத்தைப் பற்றி அறிய விரும்புகிறான். உங்கள் நகரத்திலே வசிக்கும் யௌவன வாலிபன் ஒருவன் எவராலும் தீர்க்க முடியாத புரந்தரபுரி வியாபாரியின் குமாரர்களுடைய பாகப்பிரிவினையைத் தீர்த்துவைத்ததாகக் கேள்விப் பட்டேன். அவனை உடனே என்னுடைய சமூகத்திற்கு அனுப்பி வைக்கவும்" என்று அந்த லிகிதத்தில் எழுதப் பட்டிருந்தது.

விக்கிரமனின் லிகிதத்தைப் படித்த நகரத் தலைவரும் சாலி வாகனனை அழைத்து விக்கிரமனின் விருப்பத்தைத் தெரிவித்தார்.

"விக்கிரமாதித்தன் யார்? அவன் பேரரசனாக இருந்தாலும் மனிதன்தானே? நான் அங்கு போகமுடியாது. என்னிடம் ஏதாவது வேலையிருந்தால் இங்கு வரட்டுமே. அவனிடம் ஆகவேண்டியது எனக்கொன்றும் இல்லை" என்று அழைப்பை நிராகரித்துவிட்டான் சாலிவாகனன்.

தான் விடுத்த அழைப்பைச் சாலிவாகனன் நிராகரித்து விட்டதைக் கேட்ட விக்கிரமாதித்தன் சொல்லொணாக் கோபம் அடைந்தான். அவன் கண்கள் கோவைப்பழம்போல் சிவந்தன. உடல் கோபத்தால் தகித்தது. விக்கிரமன் அழைக்கிறான் என்றால் எவ்வளவு தூரத்திலிருந்தாலும் ஓடோடி வரமாட்டார்களா? அவன் சபைக்குச் செல்லும் பாக்கியம் தனக்குக் கிட்டாதா என்று தவம் கிடப்பார்களே!

அரசனால் கோபத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. தன்னை அவமானப்படுத்திய சாலிவாகனனைத் தண்டிக்க வேண்டும் என்று பதினெட்டு அக்ஷௌகிணி பலம் கொண்ட தன் படைகளுடன் பிரதிஷ்டான நகரம் நோக்கிப் புறப்பட்டான்.

நகரத்தைச் சமீபித்ததும் சாலிவாகனனிடம் மீண்டும் தூதுவர்களை அனுப்பி வைத்தான். அவர்கள் சாலிவாகனனைக் கண்டு, "ஓ! சாலிவாகனா! அரசர் தன் படைகளுடன் நகரத்துக்கு வெளியே காத்திருக்கிறார். இப்போது கூட உன்னை மகிழ்ச்சியுடன் சந்திக்க விரும்புகிறார். உடனே புறப்படு" என்றார்கள்.

"தூதுவர்களே! நால்வகைப் படைகளுடன் சூழ்ந்திருக்கும் அரசனை நான்மட்டும் தனியாக எப்படிச் சந்திப்பது? நானும் படைகளுடன் வந்து யுத்தகளத்தில் சந்திப்பதாகத் தெரிவிக்கவும்!" என்று சாலிவாகனன் சொல்லி அனுப்பிவிட்டான். தூதுவர்கள் திரும்பி வந்து அரசனிடம் நடந்ததைக் கூறினர். அரசன் கடுங்கோபத்துடன் சாலிவாகனனின் படைகளை எதிர்நோக்கி யுத்தகளத்தில் காத்திருந்தான்.

சாலிவாகனனோ குயவனின் வீட்டிலிருந்து மண்ணை எடுத்துப் பிசைந்தான். அதைக் கொண்டு யானை, குதிரை, இரதம், வீரர் ஆகிய பொம்மைகளை ஏராளமாகச் செய்தான். தான் பெற்றிருந்த அதிசய சக்தியினால் அப்பொம்மைகளுக்கு உயிர் அளித்தான். இப்போது அவன் வீட்டு வாசலில் நால்வகைப் படைகளுடன் கூடிய சேனை தயாராக இருந்தது. அதைத் தலைமை தாங்கி நடத்திக்கொண்டு சாலிவாகனன் யுத்தகளத்துக்குச் சென்றான்.

இருபுறத்து சேனைகளும் ஆக்ரோஷத்துடன் ஒன்றையொன்று நெருங்கும்போது திக்குகளெல்லாம் பயத்தால் நடுங்கிக் குழப்பத்தில் ஆழ்ந்தது. கடல் வியாகூலம் அடைந்து கொந்தளித்தது; பாதாள உலகத்தில் நாகராஜன் நடுங்கினான். பூமண்டலத்திலிருந்த மலைகளெல்லாம் கிடுகிடுத்தன; பூமி தலைசுற்றியது; பெரிய சர்ப்பங்கள் அளவுக்கு மீறி விஷத்தைக் கக்கின. விக்கிரமாதித்தன் படை சாலிவாகனனை நோக்கி நெருங்கியபோது இவ்வாறு இப்பூமண்டலமே பலவகையாகக் குழப்பமடைந்தது.

வாயுவேகமாகப் பறக்கும் எண்ணற்ற குதிரைகள், மத்தகஜங்கள் ஆகியவற்றால் நிறைந்த படைச் செல்வம் பிரகாசித்தது. வானம் முழுவதும் கொடிகள், குடைகள் சாரங்கள் ஆகியவற்றினால் மறைக்கப்பட்டுவிட்டது. மூவுலகங்களும் பயங்கரமான முரசம், சங்கம், துந்துபி ஆகியவற்றின் ஒலிகளால் நிறைந்திருந்தன. குதிரைகளின் குளம்படிகளால் கிளப்பப்பட்ட தூசிகள் வானம் முழுமையும் பரந்திருந்தன. வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள வாயு மண்டலம் அரசர்களின் பூ சக்கிரக் குடைகளால் மறைக்கப்பட்டு விட்டது.

பூமி முழுவதும் வீரர்கள் நிறைந்திருந்தனர். வீரர்கள் ஒருவரையொருவர் நெருங்கும்போது உள்ளத்தில் பயங்கரத்தைக் கிளப்பும் இரதங்களினால் உண்டாக்கப்படும் சப்தமானது ஓங்கி முரசொலிகள் காதில் விழாமல் தடுத்தது. அப்போது இரண்டு சேனைகளும் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொண்டன. அந்தச் சமயத்தில், தண்டம், அம்பு, கத்தி, வாள், மழு, கூரிய தண்டம், அர்த்த சந்திர சூலம், இரும்பு அம்பு, ஈட்டி, கலப்பை போன்ற உலக்கை, வேல், கோடலி, மூன்று முனைகளுடைய சூலாயுதம், மற்றும் மகாவிஷ்ணுவின் சக்கரம் போன்றதும், இந்திரனுடைய வஜ்ரம் போன்றதுமாகிய அனேக ஆயுதங்கள் உபயோகிக்கப் பட்டன. இவ்விதமாக இருதரப்பு வீரர்களும் ஒருவரையொருவர் பயங்கரமாகத் தாக்கினர். சண்டையின் போது, நல்ல வீரர்கள் சிலர் போரில் அடிபட்டு உயிரிழந்து களத்தில் விழுந்தனர்; மற்றும் சிலர் அடிபட்டு மயக்கமுற்று விழுந்தபோதிலும், சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்து தாங்களாகவே எழுந்தனர். வேறு சிலர் கீர்த்தியே இணையில்லா கௌரவம் என்று நினைத்து தங்கள் தேகத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல், அட்டகாசம் செய்தபடியே யுத்த களத்தின் முன்னணிக்கு வந்து தைரியமாகப் போரிட்டனர்.

எதிரிகளிடம் போரிட வேண்டுமேயென்ற பயத்தால் சிலருக்கு நடுக்கம் எடுத்தது; உடல் முழுவதும் ஆயுதங்களால் துளைக்கப்பட்டு இரணகாயம் அடைந்த சிலர் தேவ கன்னிகைகளுக்குப் பிரியமானவர்கள் ஆனார்கள். (அதாவது அவர்கள் வீர சொர்க்கம் அடைந்தனர்.) மற்றும் சிலர் உடல் சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டும் எதிரிகளால் வயிற்றிலே அடிக்கப்பட்டவர்களாய் குடல் வெளியே சரிந்து தொங்குவதையும் லட்சியம் செய்யாமல் தைரியத்துடன் போரிட்டனர். அப்போது வீரர்கள் வைத்திருந்த கத்தி முதலிய ஆயுதங்கள் சமுத்திரம் போன்று பிரகாசித்தன. யுத்தத்திலே அறுத்தெறியப்பட்ட தலைகள், குடல், தலைமயிர், நரம்பு, ஆகியவை அனைத்தும் சைவால மலைபோன்று குவிந்து கிடந்தன; போரில் இறந்த கீர்த்தி வாய்ந்த யானைகளின் உடல்கள் மனிதர்கள் நிறைந்த அந்தப் பெருங்கடலில் மிதந்தன. அவைகளின் எலும்புகள் சமுத்திரத்திலே தென்படும் சங்கு கிளிஞ்சல்களாகப் பிரகாசித்தன. இம்மாதிரியான கோரயுத்தம் இரு சேனைகளுக்குமிடையே நடந்தது. விக்கிரமாதித்தன் தன் எதிரியான சாலிவாகனனுடைய சைனியத்தை நிர்மூல மாக்கினான். சேனைகள் அழிந்து விட்டதைக் கண்டதும் சாலி வாகனன் மிகுந்த வருத்தம் அடைந்தான். ஆனால் அந்த வருத்தம் உடனே மாறிவிட்டது. "பெருங்கஷ்டத்தில் சிக்கிய

கொள்ளும் போது என்னை நினைத்துக் கொள்" என்று அவன் தகப்பனாரான ஆதிசேஷன் தெரிவித்திருந்தது நினைவுக்கு வந்தது. அவ்விதமே சேனைகளை இழந்து யுத்தகளத்தில் தவிக்கும் அவன் தன் தகப்பனாரான ஆதிசேஷனை நினைத்தான். அவ்வளவு தான் உலகிலே உள்ள ஸர்ப்பங்கள் அனைத்தும் யுத்தகளத்தின் மீது படையெடுத்தன. அவை விக்கிரமனின் படைகள் மீது பாய்ந்து வீரர்களைக் கடித்துக் கொன்றன.

விக்கிரமன் தான் மட்டும் உஜ்ஜயினி திரும்பினான். யுத்த களத்திலே இறந்த தன் வீரர்களை உயிர்ப்பிக்க வாசுகியைக் குறித்து, இடுப்பளவு தண்ணீரில் இறங்கி ஒரு வருஷம் தவம் கிடந்தான்.

வாசுகியும் அரசனுடைய தவத்தினால் ப்ரீதி அடைந்தவராய், அவன் முன்னிலையில் தோன்றினார். "விக்கிரமா, உனக்கு என்ன வேண்டும்? வேண்டுவதைத் தயங்காமல் கேள்" என்றார்.

"ஸர்ப்ப ராஜனே! என்னுடைய தவத்தால் தாங்கள் சந்தோஷம் அடைந்தவரானால், யுத்தத்திலே ஸர்ப்பங்களால் கடிக்கப்பட்டு உயிரிழந்த என் வீரர்களை உயிர்ப்பிக்க வேண்டும். அவர்கள் உயிரிலே பாய்ந்துள்ள விஷத்தை இறக்கி, பிழைக்க வைக்கும் சக்தியை எனக்கருளுவீர்களாக!" என்று விக்கிரமாதித்தன் பிரார்த்தித்தான்.

வாசுகியும் அதற்கிணங்கி, அமுதம் நிறைந்த ஒரு குடத்தை விக்கிரமாதித்தனிடம் கொடுத்து வழியனுப்பினார்.

அமுதம் நிறைந்த குடத்தைப் பெற்றுக்கொண்ட விக்கிரமாதித்தன் நேராக பிரதிஷ்டான நகரத்தை நோக்கிச் சென்றான். வழியிலே ஒருவன் அரசனைச் சந்தித்தான்.

"வராக அவதாரம் எடுத்து விளையாட்டாகப் பூமியைத் தூக்கித் தன் தந்தத்தால் தாங்கி நின்றபோது அந்தத் தந்தமே பிடியாகவும், பூமியே பொற்கலசமாகவும் அமைந்து குடை பிடித்தாற்போல் விளங்கிய மகாவிஷ்ணு உங்களைக் காப்பாற்றட்டும்!" என்று அரசனை வாழ்த்தினான்.

"ஐயா நீ எங்கிருந்து வருகிறாய்? என்ன விஷயம்" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"அரசே! நான் பிரதிஷ்டான நகரத்திலிருந்து தங்களைக் கண்டு போக வந்துள்ளேன்" என்று பதிலளித்தான் அவன்.

"எந்த விஷயமாக? என்னிடம் ஏதாவது பெற்றுச் செல்லலாமென்ரு?"

"ஆம். அரசே!"

"அப்போது ஏன் தயங்குகிருய்? உனக்கு வேண்டியதைத் தாராளமாகக் கேட்டுப் பெற்றுக் கொள்"

"அரசே! உங்களை நம்பி வருபவர்களுக்குத் தாங்கள் இல்லையென்று சொல்லாமல் கொடுக்கும் கற்பக விருக்ஷம். நீங்கள் தருவதாக வாக்களித்தால் நான் பெற வந்ததைத் தெரிவிக்கிறேன்"

"நீ எதைக் கேட்டாலும். அதைத் தட்டாது தருகிறேன். உனக்கு வேண்டியதைக் கேள்" என்று மீண்டும் உறுதி கூறினன் விக்கிரமன்.

"அரசே! வாசுகியிடமிருந்து தாங்கள் பெற்ற அமுதகலசத்தை எனக்குத் தாருங்கள்" என்று கேட்டான் அவன்.

அப்போதுதான் அரசனுக்குச் சந்தேகம் எழுந்தது. தான் மோசம் போய்விட்டதை உணர்ந்தான்.

"ஐயா நீ யாரால் அனுப்பப்பட்டு வந்திருக்கிருய்?" என்று கேட்டான்.

"சாலிவாகனனுல் அனுப்பப்பட்டு இங்கு வந்திருக்கிறேன். அரசே" என்ருன் வந்தவன்.

"முதலில் எதைக் கேட்டாலும் தட்டாது தருவதாக அவனுக்கு வாக்களித்து விட்டேன். இப்போது அதை நிறைவேற்ற வேண்டியது என் கடமை. இல்லையேல் வாக்கு தவறியவனுவேன். அது எனக்குப் பெரும் அகௌரவத்தோடு பாபத்தையும் அளிக்கும்" என்று மனதிலே நினைத்த விக்கிரமாதித்தன் ஏதும் சொல்லாமல் யோசித்தான். அதைக் கண்ட அவன், அரசன் ஒருவேளை கொடுக்க விருப்பமில்லாமல் தட்டிக் கழிக்க வழியை யோசிக்கிருனே என்று நினைத்து, "அரசே! ஏன் யோசிக்கிறீர்கள்? நீங்களோ நேர்மையுடைய மனிதர். நேர்மையான மனிதர்கள் ஒருபோதும் வாக்குத் தவறமாட்டார்கள். சூரியன் மேற்கே உதித்தாலும், மேருமலை இடம் பெயர்ந்தாலும், நெருப்பு குளிர்ச்சியடைந்தாலும், தாமரை மலையின் உச்சியில் பாறையில் மலர்ந்தாலும், நேர்மையான மனிதர்கள் கொடுத்த வாக்கை மீறமாட்டார்கள் என்று சொல்லியிருப்பதைத் தாங்கள்

அறிந்திருப்பீர்களே? இன்னும், கடலைக் கடைந்தபோது உற்பத்தியான காலகூட விஷத்தை அருந்திய சிவன் இன்றும் அதைத் திருப்பித் தராமல் தன்னுடைய கண்டத்திலே வைத்திருக்கிறார். உலகத்தைத் தன் முதுகின்மீது ஆமை இன்னும் தாங்கிக் கொண்டுதான் இருக்கிறது. பாதாளலோகத்து வடவாக்கினியைத் தாங்குவது மிகவும் கஷ்டமானாலும் சமுத்திரம் அதன் உஷ்ணத்தை இன்னமும் தாங்கிக் கொள்ளுகிறது. நேர்மையான மனிதர்கள் தங்கள் வார்த்தையில் உறுதியாக இருப்பார்கள். ஒப்புக் கொண்டதை நிறைவேற்றுங்கள்" என்றான் அவன்.

"ஐயா, நீங்கள் உண்மையையே சொன்னீர்கள். இந்த அமுதம் நிறைந்த குடத்தை எடுத்துச் செல்லுங்கள்!" என்று சொல்லி குடத்தை அவனிடம் கொடுத்துவிட்டு உஜ்ஜயினி நகரம் திரும்பினான் விக்கிரமாதித்தன்.

• • •

கதையை முடித்ததும் பதுமை போஜராஜனை நோக்கி, "போஜமகாராஜரே! தன் எதிரியிடமிருந்து வந்திருக்கிறான் என்பதை அறிந்தும், அவன் யாசித்ததைக் கொடுக்க விக்கிரமாதித்த பூபதி பின் வாங்கவில்லை! இவ்விதம் உதாரகுணம் உமக்கிருந்தாலன்றோ இச்சிங்காசனத்திலேறலாம்?" என்றது.

அப்பொழுது நாழிகைக் கணக்கர்களால் குறிக்கப்பட்டிருந்த சுபமுகூர்த்தம் தவறி விட்டதால் போஜராஜன் மௌனமாகக் கீழிறங்கிச் சென்றான்.

(மேற்கூறிய கதை முழுதும் வடமொழி மூலத்தில் 24-வது படிக்குக் காவலான சந்திரரேகை என்னும் பதுமை கூறியதாக உள்ளது. தமிழ்ப் பாடத்தில், நான்கு சகோதரர்களின் பாகப் பிரிவினைக்கு விக்கிரமாதித்தனே உபாயம் சொன்னான் என்பதோடு கதை முடிந்து விடுகிறது; எதிரியான சாலி வாகனனுக்கு அமுத கலசம் கொடுத்த கதை இல்லை.)

## 19-வது சற்குணவல்லிப் பதுமை சொல்லிய அமிர்தசஞ்சீவினி கதை



மறுநாள் சிம்மாசனம் ஏற வந்த போஜராஜனுக்கு பத்தொன்பதாம் படிக்கட்டுக்குக் காவலான சற்குணவல்லிப் பதுமை புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது.

ஃ ஃ ஃ

விக்கிரமாதித்தன் ஆட்சி புரிந்துவரும் நாளையில் ஒரு சமயம் வசுமித்திரர் சூரசேனர் என்பவர் புரோகிதராக இருந்தார். அவர் நல்ல அழகு வாய்ந்தவர். அரசனிடம் மிகுந்த அன்பு பூண்டிருந்தார். மேலும் அவர் மற்றவர்களுக்குப் பரோபகாரியாகவும், எல்லோராலும் போற்றப்படுபவராகவுமிருந்தார். அவரிடம் பெரும் செல்வம் குவிந்திருந்தது.

ஒருசமயம் அவர் பின்வருமாறு எண்ணினார். "ஒரு மனிதன் சேமித்து வைத்துள்ள பாவங்களைக் கங்கையில் நீராடிப் போக்கடிப்பதைத் தவிர வேறு வழிகள் ஏதுமில்லை. நூறு யாகங்களைச் செய்தும் அடைய முடியாத பலனை, நற்குணமுள்ள ஒருவன் கங்கையின் நீரில் நியமத்துடன் ஸ்நானம் செய்வானாகில் அடைவான். சூரியனுடைய கிரணங்களினால் வெப்பமடையப்பட்ட கங்கை நீரை எவன் ஒருவன் பஞ்சகவ்யத்துடன் கலந்து அருந்துகிறானோ அவன் பாவத்திலிருந்து விடுபட்டவனாகிறான். இவ்விதமாகச் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, ஒருமுறை கங்கைக்குச் சென்று நீராடிவிட்டு வரவேண்டும்."

அவ்விதமே வசுமித்திரர் கங்கைக்குச் சென்று நீராடி காசிவிசுவநாதரை தரிசித்தார். பிறகு பிரயாகைக்கு வந்து மாக (மாசி) மாதத்தில் நீராடினார். கயை நகரத்தில் பித்ருக்களுக்கு சிரார்த்தாதி கர்மாக்களைச் செய்வித்தார். எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு உஜ்ஜயினி திரும்பினார்.

வரும் வழியில் ஒரு நகரத்தை அடைந்தார் வசுமித்திரர். சாபத்தால் உருமாறிய தேவலோக கன்னிகை ஒருத்தி வீரலக்ஷ்மியாய் அந்நகரத்தின் அரண்மனைக் கன்னிமாடத்தில்

இருந்து வந்தாள். அரச புத்திரியாய் பிறந்தும் அவளுக்குத் திருமணம் ஆகவில்லை. அவள் சுயம்வரத்தில் எவருக்கும் மணமாலை சூடவில்லை. எவனையும் மனதால் நாடவுமில்லை. கன்னிகையாகவே இருந்து வந்தாள். அந்நகரத்திலே லக்ஷ்மிநாராயணருக்குப் பெரிய கோவில் ஒன்று எழுப்பியிருந்தனர். அதன் வாசலில் பிரும்மாண்டமான திருமண்டபம் ஒன்று போடப்பட்டிருந்தது. கோவில் வாசலில் கொப்பரை ஒன்றில் எண்ணெய் கொதித்துக் கொண்டிருந்தது. அதனருகில் நின்று கொண்டிருந்த அதிகாரிகள் வெளி நாடுகளிலிருந்து வரும் ஜனங்களுக்குப் பின்வருமாறு முரசறிவித்துக் கொண்டிருந்தனர்.

"எவனொருவன் இந்தக் கொப்பரையில் கொதிக்கும் எண்ணெயில் தீரமாகக் குதித்து எழுந்திருக்கிறானோ அவனைத் தேவகன்னிகையான மன்மதஸஞ்சீவினி என்னும் பெயருடைய இந்நாட்டு அரசி மாலையிட்டு மணிமகுடமும் அளிப்பாள்!"

இவற்றையெல்லாம் பார்வையிட்ட வசுமித்திரர் ஆச்சரியத்துடன் உஜ்ஜயினி நகருக்குத் திரும்பினார்.

மறுநாள் அவர் அரண்மனைக்குச் சென்று விக்கிரமாதித்தனைச் சந்தித்தார். கங்கை நீரில் சிறிதளவு அரசனுக்குக் கொடுத்து விஸ்வேஸ்வரரின் கருணைக்குப் பாத்திரமாகச் செய்தார். பிறகு தாம் தீர்த்த யாத்திரையின் போது கண்ட அதிசயத்தைச் சொன்னார்.

"விக்கிரமா! காசியிலிருந்து வரும்போது, சாபத்தால் மனித உருவம் பெற்ற மன்மதஸஞ்சீவினி என்னும் தேவ கன்னிகையால் ஆளப்படும் நகரம் ஒன்று உண்டு. அந்நகரத்தில் லக்ஷ்மிநாராயணனுக்குக் கோவில் ஒன்று எழுப்பியிருக்கிறார்கள். கோவில் வாசலில் பெரிய கொப்பரையில் எண்ணெய் கொதித்துக் கொண்டிருக்கிறது. அதில் தீரத்துடன் இறங்கி எழுந்திருக்கும் வீரனை மன்மதஸஞ்சீவினியென்னும் அமிர்தசஞ்சீவினி மாலையிடுவாளாம். ஆனால், யார்தான் தைரியமாகக் கொதிக்கும் எண்ணெயில் இறங்குவார்கள்? இது நிறைவேறாத காரியமே!" என்றார் வசுமித்திரர்.

ஒருவராலும் முடியாத காரியத்தைத் தான் முயற்சித்துப் பார்க்க விரும்பினான் விக்கிரமாதித்தன். உடனே தன்னுடன் வசுமித்திரரையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டான்.

நகரத்தை அடைந்ததும் குளத்திலே இறங்கி நீராடி, கோவிலுக்குச் சென்று லக்ஷ்மிநாராயணனைத் தரிசித்தான்.

பிறகு மனத்திலே தன் குலதெய்வத்தை நினைத்தவனாய் எண்ணெய்க் கொப்பரையில் குதித்தான். அரசன் தைரியமாக இறங்குவதைக் கண்ட மக்கள் கண்ணீர் விட்டுக் கதறினர். அவர்களை விக்கிரமன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. காரியத்திலேயே கண்ணாக இருந்தான். கொதிக்கும் எண்ணெய் அவன் உடலை மாமிசப் பிண்டமாக ஆக்கிவிட்டது. கூடியிருந்த மக்கள் கூக்குரலிட்டனர்.

விக்கிரமனின் நிலையைக் கேள்விப்பட்ட மன்மதஸஞ்சீவினி அமிர்தத்தை எடுத்துக்கொண்டு ஓடோடி வந்தாள். அவனின் உடல்மீது அமிர்தத்தைத் தடவியவுடன், அவன் உடல் முன்னிலும் பன்மடங்கு பிரகாசம் பொருந்தியதாக மாறி விட்டது. அரசன் குதூகலத்தால் ஆரவாரம் செய்யும் மக்களைப் புன்முறுவலால் வணங்கியபடி வெளிவந்தான். தோழிகள் கொண்டுவந்த தட்டிலிருந்து அமிர்தசஞ்சீவினி மாலையை எடுத்து அரசனின் கழுத்தில் போட வந்தாள்.

"அரசே! என் எண்ணத்தை ஈடேற்ற இதுவரை யாரும் வரவில்லை. இன்று தாங்கள் மிகவும் துணிவுடன் என் விருப்பத்தை நிறைவேற்றினீர்கள். வாக்களித்திருந்தபடி நான் தங்கள் அடிமை. என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று வேண்டினாள் கன்னிகை.

அரசன் அவளைத் தடுத்து நிறுத்தி, "நான் சொல்வதை முதலில் கேள். என் வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டவளானால் என் விருப்பத்தைத் தட்டாமல் நிறைவேற்ற வேண்டும்! இதோ நிற்கும் வசுமித்திரர் உன்னிடம் அபார பிரேமையுடனிருக்கிறார். எனக்குப் பதில் அவரை மணாளனாக வரித்துக்கொள்" என்றான் விக்கிரமாதித்தன்.

"அரசே! அவ்விதமே ஏற்றுக்கொள்கிறேன்" என்று மாலையை வசுமித்திரரின் கழுத்திலே அணிவித்தாள். அரசன் ஆனந்தத்தோடு வசுமித்திரரை அந்நகரத்திற்கு அரசனாக முடிசூட்டி வைத்துவிட்டு தன் நகரம் திரும்பினான்.

இவ்வாறு பொற்பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்றான்.

(வட மொழி மூலத்தில் இக்கதையை பதினைந்தாவது மதனசுந்தரிப் பதுமை கூறியதாக உள்ளது)

## 20-வது சுந்தரவிநோதைப் பதுமை சொல்லிய சூதாடிக் கதை



மறுநாட் காலையில் போஜராஜன் சிம்மாசனம் ஏற முயன்றபோது இருபதாவது படிக்குக் காவலாக நின்ற சுந்தரவிநோதைப் பதுமை புதியதொரு கதை சொல்லத் தொடங்கியது!

விக்கிரமாதித்த சக்கிரவர்த்தி அரசாண்டு வரும் காலத்தில், சகரபுரி யென்னும் நாட்டை ஆண்டு வந்த சாதுரியவானென்னும் மன்னன் காலகதியால் மடிந்து விட்டான். அவனுடைய பட்டமகிஷி கணவனைப் பிரிந்த கலக்கத்தில் தீவளர்த்து உயிர்த் தியாகம் செய்ய முயன்றாள்.

இந்தச் செய்தியைக் காடாறு மாதம் புறப்பட்டுக் கொண்டிருந்த விக்கிரமாதித்தன் வேதாளத்தின் மூலம் அறிந்ததும் விரைந்து அந்நகருக்குச் சென்று, அந்த நல்ல பெண்மணியைக் கண்டு, "அம்மா! கொஞ்சம் பொறு! உன் கணவனை உயிரோடு எழுப்பித் தருகிறேன்" என்று கூறி, தன் குலதெய்வமாகிய பத்திரகாளியம்மன் கொடுத்த மந்திரக்கோலை எடுத்து இறந்து கிடந்த மன்னனின் சடலத்தில் தட்டியெழுப்ப, அந்த அரசனும், தூங்கி விழித்தவனைப் போல எழுந்து, மனைவியைக் கைப்பிடித்து மகிழச் செய்து, மன்னன் விக்கிரமாதித்தனை வணங்கி நின்றான்.

பிறகு சகரபுரி நகரம் அரசுரிமை ஆகியவற்றையும் அவர்கள் விக்கிரமாதித்தனுக்கே தத்தஞ் செய்தார்கள். மன்னனும் அவற்றைத் திருப்பி அரசன் சாதுரியவானின் பத்தினிக்கு ஸ்திரீதனமாகக் கொடுத்து, அவ்வரசனுக்குப் பட்டமுங்கட்டி வைத்துவிட்டு உஜ்ஜயினிக்குத் திரும்பினான்.

வரும் வழியிலிருந்த சம்புசூரியென்னும் நகரத்தைக் கண்டு அங்கு சென்று சுற்றிப் பார்த்தான்.

நகர்ப் புறத்திலே அமைந்திருந்த அழகிய கோயிலுக்குச் சென்று பகவானை வழிபட்டான். பிறகு வெளியே இருந்த

ரங்க மண்டபத்தில் வந்து அமர்ந்தான். அந்தச் சமயத்தில் ஒருவன் அங்கு வந்தான். அரசகுமாரனைப் போன்ற அழகும், தேஜஸும் ஒருங்கே அமையப்பெற்ற அவன் அழகிய ஆபரணங்களையும், விலையுயர்ந்த ஆடைகளையும் அணிந்திருந்தான். மேலும், அவன் உடலில் சந்தனம், கற்பூரம், குங்குமப்பூ, கஸ்தூரி போன்ற வாசனைத் திரவியங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவனைச் சுற்றிப் பரத்தையர்கள் சூழ்ந்திருந்தனர். அவர்களுடன் குதித்துக் கும்மாளமடித்தும், மனதுக்கு இன்பத்தைக் கொடுக்கும் காதற் கதைகளைப் பேசிக்கொண்டும் நேரத்தைக் கழித்துவிட்டுச் சென்றான் அவன். அவனைப் பார்த்த அரசன், அவன் யாராக இருக்கலாமென்று யோசனையில் ஆழ்ந்தான்.

மறுநாளும் அதே மனிதன் கோவிலுக்கு வந்தான். ஆனால் முதல் நாளையைப் போன்று ஆடம்பரமாக வரவில்லை. தனியாக முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு இடுப்புத் துணியுடன் மட்டும் வந்து சேர்ந்தான். மண்டபத்தில் வந்து சோர்ந்து படுத்துவிட்டான்.

அவனைப் பார்த்து விக்கிரமாதித்தன் "ஐயா! நீங்கள் யார்? நேற்று விலையுயர்ந்த ஆடை, அணிகளுடன் தாசிகள் புடைசூழ அரசகுமாரனைப் போன்று வந்தீர்கள். இன்று கஷ்டதசையில் அனாதையாக வந்திருக்கிறீர்கள். ஏன்? இது எப்படி நேர்ந்தது?" என்று அன்புடன் கேட்டான்.

"ஸ்வாமி, ஏன் இவ்விதம் பேசுகிறீர்கள்? நேற்று நான், நீங்கள் சொல்லியது போல, ஆடை ஆபரணங்களுடன் இருந்தேன். இன்றோ விதியின் வசத்தால் இம்மாதிரியாகிவிட்டேன்! மத்தகஜங்களின் தாடைகளில் வழியும் நீரில் வளர்ந்தவைகளும், நன்றாக மலர்ந்த தாமரைப் பூக்களில் உள்ள மகரந்தத்தினால் வாசனை அடைந்த உடல்களை உடையதுமான வண்டுகள்கூட விதியின் வசத்தால், கசக்கக்கூடிய வேம்பு, அருகம்புல் போன்ற மலர்களிலேயே நாள் முழுவதையும் கழிக்க நேரிடுகிறது. இவ்வுலகத்துப் பானையில் குயவனைப் போன்று பிரும்மாவைப் பிடித்துக் கொண்டிருப்பதும் மகாவிஷ்ணுவை தப்பித்துக்கொள்ள முடியாமல் பத்து அவதாரங்களை எடுக்கக் கட்டாயப்படுத்தியதும், மண்டையோட்டைக் கையில் ஏந்தி சிவபெருமானைப் பிச்சை யெடுக்கச் செய்ததும், சூரியனை சதா வானத்திலே சஞ்சரிக்கச் செய்வதுமான கர்மாவுக்கு வணக்கம் செலுத்துகிறேன்" என்றான் அந்த மனிதன்.

"ஐயா! தாங்கள் யார் என்று நான் கேட்டதற்குப் பதில் சொல்லவில்லையே?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"ஸ்வாமி! நான் ஒரு சூதாடி. சதுரங்க ஆட்டத்தில் நான் மிகுந்த தேர்ச்சியுடையவன். எனக்கு ஸாரிக்ரீடா என்னும் ஆட்டமும் தெரியும். ஆனால், விதி அல்லவோ என்னைக் கட்டுப்படுத்துகிறது. யானை, பாம்பு, பறவை, ஆகியவை பிடிபடுவதையும், சூரியனும் சந்திரனும் கிரகணத்தால் பீடிக்கப்படுவதையும், அறிவாளிகள் ஏழைகளாக இருப்பதையும் காணும்போது, 'விதி எவ்வளவு வலிமையுடையதாய் இருக்கிறது? என்று நான் நினைப்பதுண்டு. அழகிய உருவத்தால் பிரயோசனம் இல்லை. நல்ல குலத்தில் பிறப்பும், சீலமும் அறிவும், மிகவும் கோலாகலமாகத் தெய்வங்களுக்குச் செய்யும் ஆராதனைகளும் பிரயோசனம் அன்று. அவன் முற்பிறப்பில் செய்த காரியங்களின் மூலம் அடையும் பாக்கியமே, மரங்களைப் போன்று அவனுக்குச் சரியான நேரத்திலே பலன் அளிக்கும். இவ்விதம் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். விதியின் வசத்தால் இன்று ஏழையாக நான் நிற்கிறேன்" என்றான் அந்தச் சூதாடி.

அவன் அறிவு, விக்கிரமனை மகிழச் செய்தது. "ஐயா! நீங்கள் யாராக இருந்தாலும் நல்ல அறிவுடையவராய் இருக்கிறீர்கள். இவ்வளவு புத்திசாலியான நீங்கள் எதற்காக இச் சூதாட்டத்தில் இறங்கினீர்கள்?" என்றான்.

"எத்தனையோ புத்திசாலிகளும் விதியினால் செலுத்தப் பட்டவர்களாய் எக் காரியத்தையும் செய்து விடுகிறார்கள். அதில் நான்மட்டும் எப்படி விதிவிலக்காக இருக்க முடியும்? என்னதான் அறிவாளியாக இருந்தாலும் விதியின் பயனால் துரத்தப் பெறும்போது என்னதான் செய்ய முடியும்? அவர்களுடைய புத்தி அவரவர் முற்பிறப்பில் செய்த வினைகளுக்கேற்ப மாறுகிறது அன்றோ!"

அதற்கு விக்கிரமாதித்தன் பின்வருமாறு சொன்னான்: "நல்லது ஐயா! சூதாட்டம் என்பது மிகப் பெரிய பாபங்களுக்கே மூலதனமானது. எல்லா விசனங்களும் சூதாட்டத்தைச் சார்ந்திருப்பனவே. சூதாட்டம் நடக்கும் வீடு, இழிவான இடம்; திருடர்களின் இருப்பிடம்; விசனங்களுக்கு உறைவிடம். அந்த ஆட்டம் எல்லாப் பாபங்களுக்கும் தலைமையானது. பெரிய கஷ்டங்களின் பொக்கிஷம்; கேடு காலத்தின் விதை; நரகத்துக்குச் செல்லும் பயங்கரப் பாதையில் முதலானது; இதை அறிந்த எந்த புத்திசாலிதான் இதில் ஈடுபடுவான்? அபகீர்த்தி,

வறுமை, கேடுகாலம், கோபம், கஞ்சத்தனம், திருட்டு மற்றும் இதர கஷ்டங்களைப் பற்றிச் சூதாட்டக்காரனுக்கு என்ன அக்கறை? இறந்த மனிதர்கள் நரகத்தில் படும் அவஸ்தைகளைப் பற்றி அவனுக்கு என்ன கவலை? கோரமாக அவன் அறிவை மயக்கிய, சூதாட்டத்தையே ஓய்ச்சல் ஒழிவு இல்லாமல் தன் உயிர்நாடியாகக் கொண்டுள்ளவனுக்கு இதைப் பற்றிய கவலை ஏது? இப்படியும் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்களே! அதைத் தாங்கள் அறியவில்லையா? மேலும், சூதாட்டத்தில் ஈடுபடும் புத்திசாலிகள் உலகம் முழுவதிலும் 'துஷ்டர்களாகவும், ஒதுக்கித் தள்ளப்படும் மனிதர்களாகவும் சொல்லப்படுகிறார்கள். ஆகவே, புத்திசாலியான மனிதன் ஏழு காரியங்களை பெரும் பாவமென்று ஒதுக்கித் தள்ளவேண்டும். அவையாவன: சூதாடுதல், மாமிசம் புசித்தல், மது அருந்தல், பரத்தையர் வீடு செல்லுதல், வேட்டையாடுதல், திருடுதல், விபசாரம் செய்தல் ஆகிய ஏழு காரியங்களும் பெரும் பாதகங்கள். அறிவாளியான மனிதன் இவைகளைத் தவிர்க்கவேண்டும்.

“மேலும், ஏதாகிலும் ஒரு பாவத்தில் ஈடுபட்டிருந்தாலும் அவன் அழிவை அடையக் கூடியவனே. அப்படியிருக்க ஏழு காரியங்களிலும் ஈடுபட்டவனின் நிலை என்னவென்பதை நினைத்துப் பாருங்கள். யுதிஷ்டிரர் சூதாட்டத்தாலும், பகாசூரன் மாமிசம் புசித்ததாலும், யது குமாரர்கள் மதுவருந்துவதினாலும், இந்திரன் பெண்களிடம் கொண்ட மோகத்தாலும், பிரம்மதத்தன் என்னும் அரசன் பிராணிகளை வதைத்ததாலும், யயாதி திருட்டினாலும், ராவணேசுவரன் காமத்தினாலும் அழிந்தது போல, மனிதர்கள், ஒரு பாதகத்தில் ஈடுபட்டாலும் அழிந்துவிடுவார்கள். அவ்விதம் அழிவிலிருந்து யார்தான் தப்பமுடியும்? ஆகவே, நீ இத் தரும விரோதமான செயல்களிலிருந்து விடுபட வேண்டும்” என்றான் விக்கிரமாதித்தன்.

“சுவாமி! நீங்கள் சுலபத்தில் சொல்லிவிட்டீர்கள். சூதாட்டமே என் ஜீவனத்துக்குள்ள ஒரேவழி. அதை எவ்விதம் விட்டொழிவது? என்னிடம் தயை கொண்டுள்ளவராக இருக்கும் பட்சத்திலே பணம் சம்பாதிக்கும் வழி ஏதாகிலும் தெரிவியுங்கள். சூதாடுவதை விட்டுவிடுகிறேன்” என்று வேண்டினான் அவன்.

அப்போது இரண்டு யாத்ரீகர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் இருவரும் பிரகாரத்தில் அமர்ந்து பேசிக்கொண்டனர். அவர்களில் ஒருவன் சொன்னான், “நான் பைசாச மொழியில் எழுதப்பட்ட புத்தகத்தைப் படித்துள்ளேன். இந்தக் கோவிலில் ஈசானிய மூலையில் மூன்று தவலை நிறைய தங்க நாணயங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அதன் அருகில் பைரவரின் சிலை

இருக்கிறது. எவன் ஒருவன் தன்னுடைய கழுத்திலிருந்து பெருகும் இரத்தத்தை எடுத்து சிலைமீது தெளிக்கிறானோ அவனுக்கு அந்தப் பொக்கிஷம் கிடைக்கும் என்று எழுதப்பட்டிருக்கிறது."

அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த அரசன் எழுந்து சென்றான். பைரவரின் சிலையருகில் சென்று உடைவாளை உருவித் தன் கழுத்தைத் துணித்துக்கொள்ள முயன்றான். அப்போது பைரவர் அவன் முன் தோன்றி அவ்விதம் செய்யாது தடுத்து நிறுத்தினார்.

"விக்கிரமா! நான் சந்தோஷமடைந்தேன். உன் போன்ற தைரியசாலியும், பரோபகாரியும் இவ்வுலகில் காணமுடியாது. உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்!" என்று அருளினார்.

"பிரபோ! இதோ நிற்கும் சூதாட்டப் பிரியனுக்குத் தாங்கள் இங்கு புதைக்கப்பட்டிருக்கும் பொக்கிஷத்தைக் கொடுக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். அதைப் பெற்றுக்கொண்டதும் அவன் சூதாட்டத்தையே மறந்து விடுவதாக வாக்குறுதி அளித்திருக்கிறான். இப் பாப காரியத்துக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டு நல்வழியில் திரும்ப நினைக்கும் இவனுக்குக் கருணை காட்டுங்கள்" என்று வேண்டினான் விக்கிரமன்.

"அவ்விதமே நடக்கட்டும்" என்று அருளிவிட்டுப் பைரவரும் மறைந்தார். மூன்று தவலை நிறைய தங்க நாணயங்களைப் பெற்றுக் கொண்ட சூதாடி, விக்கிரமனை வாயார வாழ்த்திவிட்டுச் சென்றான்.

இவ்வாறு பொற் பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்றான்.

(மேற்கூறிய கதையின் பிற்பகுதி வடமொழி மூலத்தில் இருபத்தியேழாவது சுகஸாகரி என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)



## 21-வது கனகரஞ்சிதவல்லிப் பதுமை சொல்லிய இந்திரஜாலம் கற்ற சூரன் கதை



மறுநாட் காலையில் போஜராஜன் சிம்மாசனத்தின் மீது ஏறி அமர முயன்ற போது இருபத்தொன்றாம் படிக்குக் காவலான கனகரஞ்சிதவல்லிப் பதுமை பின் வரும் கதையைச் சொல்லத் தொடங்கியது:

ஒரு சமயம் விக்கிரமாதித்தன் மந்திரி பிரதானிகளுடன் சபையில் அமர்ந்திருந்தான். அந்தச் சமயத்தில் இந்திரஜாலம் கற்ற ஒரு சூரன் அங்கு வந்தான். "சிரஞ்சீவியாக வாழவேண்டும்" என்று அரசனை வாழ்த்திவிட்டு. "அரசே! தாங்கள் சகல கலைகளிலும் தேர்ச்சியுள்ளவர். உங்கள் சமூகத்திற்கு அனேக மந்திரவாதிகள் வந்திருந்து தங்கள் திறமைகளை வெளிப்படுத்தியிருப்பார்கள். இன்று என் சாமர்த்தியத்தைக் கண்டு களியுங்கள்" என்று வேண்டினான்.

"இப்போது எனக்கு நேரமில்லை. நீராடி சாப்பிட நேரமாகி விட்டது. நாளை உன் திறமையைக் கண்டு களிக்கலாம்" என்றான் அரசன்.

"தங்கள் சித்தம்" என்று மந்திரவாதி போய்விட்டான்.

மறுநாள் அரசன் சபையில் அமர்ந்திருந்தபோது கையில் கத்தியுடன், உயர்ந்து பருத்த உருவத்துடனும், நன்கு வளர்ந்த தாடியுடனும், வீரம் ததும்பும் முகச்சாந்தியுடைய வீரன் ஒருவன் கம்பீரமாக வந்தான். அவனுடன் அழகிய பெண் ஒருத்தி வந்தாள். வீரன் அரசனை நெருங்கி தலை தாழ்த்தி

வணங்கினான். சபையில் அமர்ந்திருந்தவர்கள் அவனுடைய கம்பீரத்தையும், அஞ்சாநெஞ்சத்தையும் கண்டு வியந்தனர்.

"வீரனே! நீ யார்? எங்கிருந்து வந்துள்ளாய்?" என்று அவனை நோக்கிக் கேட்டனர்.

"ஐயன்மீர்! நான் தேவேந்திரனின் அடிமை. ஒரு சமயம் எஜமானரால் சபிக்கப்பட்டு இம் மானிட உருவத்தை அடைந்தேன். இப்போது நான் பூமியிலேயே வசித்து வருகிறேன். இவள் என் மனைவி. இன்று, தேவர்களுக்கும் அசுரர்களுக்கு மிடையே மாபெரும் யுத்தம் தொடங்குகிறது. ஆகவே, நான் தேவலோகம் புறப்பட்டுச் செல்லுகிறேன். உங்கள் அரசர் விக்கிரமாதித்தன் பிற ஸ்திரீகளையும் தன் சகோதரிகளாகக் கருதி நடத்துவதாகக் கேள்விப்பட்டேன். ஆகவே, யுத்தத்துக்குப் புறப்படும் முன்பு என் மனைவியை இவர் பாதுகாப்பில் விட்டுவிட்டுச் செல்லலாமென வந்துள்ளேன். என் எண்ணம் நிறைவேறுமா?" என்று வணக்கத்துடன் சபையோரை நோக்கிக் கேட்டான்.

வீரனின் வார்த்தைகளால் விக்கிரமாதித்தனும் மற்றவர்களும் ஆச்சரியம் அடைந்தார்கள். "வீரனே! கவலைப்படாதே! நீ புறப்பட்டுச் செல்லும் காரியத்தில் வெற்றியுடன் திரும்பு. நீ திரும்பி வரும்வரையில் உன் மனைவியைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து உன்னிடம் ஒப்படைக்கிறேன். இதில் சந்தேகமே வேண்டாம்" என்றான் விக்கிரமாதித்தன்.

வீரனும் மகிழ்ச்சியுற்று தன் மனைவியை அரசனிடம் ஒப்படைத்தான். பிறகு உருவிய கத்தியுடன் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு வானிலே எழும்பி மறைந்தான்.

அப்போது வானத்திலே இடி இடிப்பது போன்ற பெரும் முழக்கம் கேட்டது. கத்திகள் கேடயங்கள் ஒன்றுடன் ஒன்று மோதும் சப்தமும், இரதங்கள் "கடகட" வென்று ஓடும் சப்தமும் கேட்டன. யானைகள் பிளிறின; குதிரைகள் கனைத்தன; அவைகளைத் தொடர்ந்து "கொல்லு, கொல்லு, வெட்டு, வெட்டு" என்று வீரர்கள் ஒருவரையொருவர் கோஷமிட்டபடி மோதிக் கொண்ட சப்தமும் கேட்டது. அரச சபையிலிருந்தவர்கள் ஆச்சரியத்தால் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தனர்.

ஒருவராவது இருக்குமிடத்தைவிட்டு நகரவில்லை. தேவலோகத்தில் நடக்கும் பயங்கர யுத்தத்தின் எதிரொலிகள் அவர்களைப் பிரமிக்க வைத்தன. அவர்கள் முகங்களிலே பீதி

படர்ந்தது. அனைவருடைய நினைவுகளும் தேவாசுர யுத்தத்தைப் பற்றியே இருந்தன. அந்தச் சமயம் உருவிய கத்தியுடன் கூடிய கை ஒன்று அரச சபையின் நடுவில் வந்து விழுந்தது. அதைக் கண்ட சபையோர்கள் திகைத்துப் போய்விட்டனர்.

"ஆ! அவ்விளம் வீரனுடைய கை அன்றோ இது. யுத்தத்தில் எதிரிகளால் கொல்லப்பட்டுவிட்டானோ?" என்று வருத்தப் பட்டனர். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவ்வீரனின் தலையும் உடலும் தனித் தனியாக வந்து விழுந்தன. வீரனின் மரணத்தைக் கண்ணுற்ற அனைவரும் விசனமடைந்தனர்.

அரசனின் அருகிலே அமர்ந்திருந்த வீரனின் மனைவி ஓடோடி வந்து தரையிலே கிடந்த தன் கணவனின் உடல்மீது விழுந்து கதறினாள், கண்ணீர் உகுத்தாள்: "ஐயா! இந்தக் கோரக் காட்சியை நான் காண வேண்டுமென்றோ என்னைவிட்டு யுத்தத்திற்குப் போனீர்கள்?" என்று அழுதாள்.

வீரனின் வீரமரணத்திற்காக ஒருபுறம் சந்தோஷம் அடைந்தாலும், அவனுடைய இளம் மனைவியைக் குறித்து வருத்தப்பட்டவனாய் விக்கிரமாதித்தன் எழுந்து அவளருகில் வந்தான். அவளைத் தூக்கி கண்களிலிருந்து பெருகும் நீரைத் துடைத்தவனாய், "குழந்தாய்! நீ இப்படித் துக்கிப்பதால் பயன் என்ன? உன் கணவன் இந்திரனுக்காக அசுரர்களுடன் போரிட்டு வீர சுவர்க்கம் அடைந்துவிட்டான். அவன் கீர்த்தி மூவுலகங்களிலும் பிரகாசிக்கும். தன்னை மனிதனாகப் போகுமாறு சபித்த இந்திரனின் கஷ்டகாலத்தில், அவன் வஞ்சத்தினால் வாளாயிருந்துவிடவில்லை. தனக்கு அவன் இழைத்த கொடுமையைச் சிறிதும் சிந்திக்காமல், அவனுக்காகப் போரிட்டு வீரசுவர்க்கம் எய்திய உன் கணவனன்றோ உண்மை ஊழியன். வருந்தியது போதும் அம்மா, எழுந்திரு!" என்று தேற்றினான்.

"அரசே! என் கணவர் யுத்தத்திலே எதிரிகளால் கொல்லப்பட்டு வீரசுவர்க்கம் அடைந்துவிட்டார். அவரைத் தேவகன்னிகைகள் அடைவதை நான் விரும்பவில்லை. அரசே! அக்கினியை மூட்ட உத்திரவிடுங்கள். நெருப்பிலே என் உடலை அர்ப்பணித்து நானும் அவருடன் சுவர்க்கத்தை அடைகிறேன்" என்று கண்ணீர் உகுத்தாள் அவள்.

அவள் வார்த்தைகள் அரசனின் உள்ளத்தை மேலும் வருத்தியது. "குழந்தாய்! நீ ஏன் அக்கினிப் பிரவேசம் செய்து உயிரை மாய்த்துக் கொள்ளவேண்டும்? என்னுடைய பெண்ணைப் போன்று உன்னைப் பாதுகாத்து வருகிறேன்.

எல்லோரிடமும் முகமலர்ச்சியுடன் விடைபெற்றுக் கொண்டு அவள் தன் நாதன் உடலுடன் சந்தோஷமாக அக்கினியில் பிரவேசித்தாள். அக்காட்சியைக் கண்டு சகிக்காதவன்போல் ஆதவனும் மேற்கே மறைந்தான்.

மறுநாள் காலையில் அரசன் தன் பூஜைகளை முடித்துக் கொண்டு சபைக்கு வந்தான். அப்போது அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் திகைக்கக் கூடிய சம்பவம் ஒன்று நடந்தது. முதல் நாள் அரசனிடம் விடைபெற்றுத் தன் மனைவியை அவன் பாதுகாப்பில்விட்டு விட்டு தேவலோகம் சென்ற வீரன் கையில் உருவிய கத்தியுடன் முன்னிலும் பிரகாசம் பொருந்திய முகத்தையுடையவனாய் வந்தான். அரசன் அருகில் நெருங்கி வணங்கினான்.

பிரதானிகளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தாங்கள் காண்பது கனவோ என்ற ஐயம் அவர்களுக்கு ஏற்பட்டது. முதல் நாள் தலைவேறு உடல் வேறாக வெட்டுண்டு வீழ்ந்து தீயிலே எரிந்து சாம்பலான அவன் எவ்விதம் பிழைத்து வந்தான் என்பதை அவர்களால் அறிய முடியவில்லை.

தேவலோகத்துக் கற்பக விருக்ஷ மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையைக் கையில் கொண்டு வந்திருந்தான் அவன். மாலையை அரசனின் கழுத்திலே அணிவித்து, அரசனைக் கௌரவித்தான். மாலையில் தொடுக்கப்பட்ட புஷ்பங்களிலிருந்து எழுந்த நறுமணம் சபை முழுவதையும் மோனத்திலாழ்த்தியது.

"அரசே! நீங்கள் நீடுழி வாழ வேண்டும்" என்று வாழ்த்தி விட்டு, இந்திரனுடைய பாராட்டுதல்களைத் தெரிவித்தான்.

விக்கிரமாதித்தனோ ஒன்றும் பேசவில்லை. பிரமை பிடித்து உட்கார்ந்து விட்டான். அவன் முகத்தில் ஈயாடவில்லை. அவன் நினைவெல்லாம் தன் பாதுகாப்பில் விட்டுச் சென்ற பெண்ணைக் கேட்டால் என்ன பதில் சொல்லுவது என்ற யோசனையிலேயே இருந்தது.

அரசனும் மற்றும் சபையோரும் மௌனமாக இருப்பதைக் கண்ட வீரன், "அரசே! தங்களிடமிருந்து விடைபெற்றுச் சென்ற நான், தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையே யுத்தம் நடக்கும் ரணகளத்திற்குச் சென்றேன். கோரமாகப் போரிடும் படைகளினூடே புகுந்து என்னால் முடிந்தவரை அசுரர்களைக் கொன்றேன். யுத்தம் இந்திரனுக்கு வெற்றியைக் கொடுத்தது. அனேக அசுரர்கள் உயிரிழந்தனர். எஞ்சியோர் பிழைத்தால்

போதுமென்று ஓடி விட்டனர். யுத்தம் முடிந்ததும் இந்திரன் என்னை அழைத்து. "வீரனே! உன்னைப் பார்த்து வெகு நாட்களாகி விட்டனவே, இத்தனை காலம் நீ எங்கு சென்றிருந்தாய்?" என்று கேட்கவே, "பிரபோ! தங்கள் சாபத்தால் பல வருஷங்களாக நான் பூமியில் வசித்து வருகிறேன். இன்று தங்களுக்கும் அசுரர்களுக்கும் நடக்கப்போகும் யுத்தத்தைப் பற்றிய செய்தி கிடைத்ததும், தங்களுக்கு என்னாலான சிறு உதவியைச் செய்யப் புறப்பட்டு வந்தேன்" என்று பதில் அளித்தேன். அதன்மீது இந்திரனின் உள்ளம் குளிர்ந்தது. "வீரனே! இன்று முதல் நீ பூவுலகத்திற்குப் போக வேண்டியதில்லை. என்னுடைய சாபம் நீங்கிவிட்டது. உன் செய்கையால் நான் மிகவும் ஆனந்தமடைந்துள்ளேன். நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற பொன் கங்கணத்தைப் பெற்றுக் கொள்" என்று சொல்லிக் கொண்டே தன் கையிலிருந்த கங்கணத்தைக் கழற்றித் தன் கையாலேயே எனக்கு அணிவித்தான். அப்போது நான் சொன்னேன், "பிரபோ! நான் புறப்பட்டு வருகையில் என் மனைவியை விக்கிரமாதித்த பூபதியின் பாதுகாப்பில் விட்டு விட்டு வந்தேன். ஆகவே, திரும்பிச் சென்று அவளையும் அழைத்துக் கொண்டு வருகிறேன்" என்றேன். இந்திரனும் அனுமதித்தான். அரசே! என் மனைவியை என்னிடம் ஒப்படையுங்கள். நான் மீண்டும் இந்திரலோகம் செல்ல வேண்டும்" என்று கேட்டான்.

அவன் வார்த்தைகளுக்கு அரசன் விக்கிரமன் என்ன பதில் அளிப்பான்? அந்தப் பெண் உயிருடன் இருந்தாலல்லவா அவளை அழைத்து வந்து அவ்வீரனிடம் ஒப்புவிக்க முடியும்? தலையைக் குனிந்தபடியே உட்கார்ந்திருந்தான். விசனத்துடன் பதில் பேசாமல் உட்கார்ந்திருந்த அரசனைக் கண்டதும், "அரசே! ஏன் மௌனமாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"உன் மனைவி அக்கினிப் பிரவேசம் செய்து விட்டாள்" என்று பதிலளித்தனர் சபையோர்.

"என்ன? என்ன?" என்று திகைத்துப் போய்க் கேட்டான் அவ்வீரன்.

"ஆம். நேற்று இங்கிருந்து நீ வான வீதிவழியே சென்ற பிறகு, மேலுலகில் நடக்கும் பயங்கர யுத்தத்தின் எதிரொலியை நாங்களும் கேட்டோம். அப்போது உன்னுடைய கத்தி பிடித்த கையும், அதைத் தொடர்ந்து தலைவேறு உடல் வேறாகத் துண்டிக்கப்பட்ட உன் தேகமும் கீழே விழுந்தன. அதைக் கண்ட உன் மனைவி அளவில்லாத சோகம் அடைந்தவளாய், அரசன் எத்தனையோ முறை தடுத்தும் கேளாமல், உன்

உடலுடன் அக்கினிப் பிரவேசம் செய்து விட்டாள். இப்போதோ நீ உயிருடன் வந்திருக்கிறாய். அரசன் என்ன பதில் சொல்வான்?" என்று தெரிவித்தனர் சபையோர்.

அதைக் கேட்டு வீரன் "இடி இடி" யென்று சிரித்தான். "அரசே! கவலைப்படாதீர்கள் பிற ஸ்திரீகளை தன் சகோதரியாகக் கருதுவதில் தங்களுக்கு இணை யாரும் இல்லை. நேற்று முன் தினம் தங்கள் சபைக்கு வந்து திரும்பிச் சென்ற மந்திரவாதி நான்தான். இவை அனைத்தும் என் வேடிக்கையே!" என்றான்.

"என்ன? உண்மையாகத்தானா?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"அரசே! தங்களுக்கு என் திறமையைக் காட்டவே இத் தந்திரம் கையாண்டேன்" என்று வணங்கினான் மந்திரவாதி.

அப்போதுதான் அரசனின் மனது நிம்மதி பெற்றது. அச்சமயத்தில் காவலாள் ஒருவன் பாண்டிய மன்னனிடமிருந்து கப்பம் வந்திருப்பதை அறிவித்தான்.

"என்னென்ன அனுப்பி வைத்திருக்கிறான்?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"அரசே! எட்டுக் கோடி பொன், தொண்ணூற்று மூன்று துலாம் முத்துக்கள், தாடைகளில் ஒழுகும் மதநீரை விரும்பி சதா வண்டுகள் சுற்றிவரும் ஐம்பது யானைகள், முன்னூறு குதிரைகள், சகல கலைகளிலும் தேர்ச்சி பெற்ற நூறு நடன மாதர்கள்; இவை அனைத்தையும் பாண்டிய மன்னன் தங்கள் சமூகத்திற்குக் கப்பமாக அனுப்பி வைத்திருக்கிறான்" என்றான் அவன்.

"மந்திரி, அவ்வளவு பரிசுகளையும் இந்திர ஜாலங்கற்ற இந்தச் சூரனுக்குக் கொடுத்து விடுங்கள். அப்போதுதான் நாம் இவனை சரிவர கௌரவித்ததாகும். இதுவரை அனேகர் நம் சபைக்கு வந்து தங்கள் திறமையை வெளிப்படுத்தியிருக்கின்றனர். ஆனால் இவனைப் போன்ற திறமையுள்ளவனை நான் கண்டதில்லை" என்று விக்கிரமாதித்தன் அந்தச் சூரனைப் புகழ்ந்தான்.

பரிசுகளைப் பெற்றுக்கொண்ட சூரனும் அரசனை வணங்கி விடைபெற்றான்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்றான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் 30-வது லாவண்யவதி என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

## 22-வது பங்கஜவல்லிப் பதுமை சொல்லிய தனபதி கதை



மறுநாள் காலையில் போஜராஜன் சுப முகூர்த்தத்தில் சிம்மாசனத்தில் ஏறத் தொடங்கினான். இருபத்திரண்டாம் படிக்குக் காவலாக இருந்த பங்கஜ வல்லி என்னும் பதுமை அரசனைத் தடுத்து நிறுத்தி, புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.

விக்கிரமாதித்தன் அரசாண்டு வரும் நாளில் உஜ்ஜயினி நகரத்திலே தனதன் என்னும் வியாபாரி ஒருவன் இருந்தான். அவனுடைய செல்வத்திற்கு ஓர் அளவு கிடையாது. ஆகையால் அவன் தனபதி என்று போற்றப்பட்டான். அளவிட முடியாத செல்வத்தை அடைந்திருந்த போதிலும். உள்ளத்திலோ, அவை அநித்தியமானதே என்ற எண்ணம் தோன்றியது.

"ஆ! இந்த உலக வாழ்வு எத்தனை பயனற்றது? நம்மைச் சுற்றிலும் பறந்து கிடக்கும் பொருள்கள் அழிந்துபோகக் கூடியவையே! "ஆசைக்கினியாளுடன் கூடுவது வானவெளியில் தோன்றும் நகரத்தைப் போன்ற கானல் நீரே, யௌவனமும் செல்வமும் மேகக் கூட்டங்கள் போன்றதே. இந்த உடல், உற்றார், குழந்தைகள். மற்றும் பொருள்கள் அனைத்தும் மின்னலைப் போன்று கண நேரத்தில் மறைந்து போகக் கூடியனவே. இச் சம்சாரத்தில் அனைத்தும் அழிந்து போகக் கூடியனவே. மேலும், (சரணாகதம்) அடைக்கலம் புகுதல் என்பது ஒரு போதும்

உண்மையான அடைக்கலம் புகுவது அன்று. கண நேரத்தில் அடையக் கூடிய மனைவியானவள் கணக்கற்ற இடுக்கண்களுக்கு வழியானவள். பிள்ளைகளோ எதிரிகள்! எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். களங்கமற்ற உண்மையான சரணாகதத்தை விரும்பினால் தர்மத்தைச் செய்! இவ்விதம் பெரியோர்கள் சொல்வதுண்டு. ஆகவே, தர்மமே ஒருவனுக்கு இவ்வுலகிலுள்ள வற்றில் அடைக்கலம் அளிக்கக் கூடியது.

“மேகத்திலிருந்து வெளிப்பட்ட ஒரு நீர்த் துளி முத்துச் சிப்பியில் விழுந்து எவ்விதம், நல்முத்தாக மாறுதலடைகிறதோ அவ்விதம். தகுந்த மனிதர்களுக்குக் கொடுக்கும் செல்வம் பாத்திர விசேஷத்தால் அதிக மதிப்பு அடைகிறது. இன்னும், அணுபோன்ற ஆலம் விதை பலன் தரக்கூடிய நல்ல பூமியில் விழுந்து பெருங்கிளையுடன் மரமாகப் பரந்து வளர்கிறது. அதைப் போன்று தான் மனிதர்களுக்குக் கொடுக்கும் தானங்களும்!”

இந்தவிதமாக மனதில் சிந்தித்த தனதன் தன்னிடம் குவிந்து கிடக்கும் செல்வத்தை அறிவாளர்களுக்கு வாரி வழங்க விரும்பினான். உடனே சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த அறிவாளிகளை வரவழைத்து ஹோமாத்திரி என்பவரால் எழுதப்பட்ட தான சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் கோதானம் (பசு), பூதானம் (நிலம்), கன்னிகா தானம் (பெண்), வித்தியாதானம் (கல்வி), தீர்த்ததானம் (தண்ணீர்) ஆகிய தானங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் விவரங்களையும், அவற்றுக்கான பலன்களையும் சொல்லக் கேட்டுத் தெரிந்து கொண்டான். அவ்விதமே தனதன் அறிவாளிகளை வரவழைத்து தான் சேமித்து வைத்திருந்த செல்வத்தை அவரவர் தகுதிக்கேற்ப அளித்துவிட்டு துவாரகைக் கண்ணபெருமானைத் தரிசிக்கப் புறப்பட்டான்.

தனதன் தான் மட்டும் துவாரகை செல்ல விரும்பவில்லை. துறவிகள், ஏழைகள், அன்னியர்கள் இவ்விதமாகத் துவாரகை செல்ல விரும்பும் பலதரப்பட்ட மனிதர்களையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு படகிலேறி சமுத்திரப் பிரயாணம் சென்றான்.

ஆழ் கடலில் படகு சென்று கொண்டிருந்தது. ஊரை விட்டுக் கிளம்பிப் பல நாட்களாகி விட்டன. அந்தச் சமயத்தில் நாற்புறமும் தண்ணீரால் சூழப்பட்டு நிற்கும் சிறிய மலை ஒன்று அவர்களுக்குத் தென்பட்டது. அம்மலையின் உச்சியிலே ஒரு பெரிய கோவில் ஒன்று இருந்தது.

கோவிலைக் கண்டதும் வியாபாரியான தனதனுக்கு கோவிலில் குடிகொண்டிருக்கும் தேவியைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆசை தோன்றியது. "ஐயா! படகை கரையோரத்தில் நிறுத்துங்கள். குன்றின் மீது சென்று தேவியை தரிசித்து விட்டு வருகிறேன்" என்று படகுக்காரனிடம் வேண்டினான் தனதன்.

படகு கரை சேர்ந்து கட்டப்பட்டது. தனதன் குளித்துப் புத்தாடை அணிந்துகொண்டு மலைமீது ஏறினான் கந்த புஷ்பங்களால் சோடசோபசாரங்களைச் செய்து புவனேச்வரியைப் பிரார்த்தித்தான். தேவியின் வலது புறம் அவனது பார்வை விழுந்த போது அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அங்கே ஆணும் பெண்ணுமாக ஒரு ஜோடி கிடந்தனர். ஆனால் அவர்களுடைய தலைகள் துண்டிக்கப்பட்டுக் கிடந்தன. அவர்களுக்கு அருகில் சுவரிலே சில வார்த்தைகள் பொறிக்கப்பட்டிருந்தன.

தனதன் மிகுந்த வியப்புடன் அருகிற் சென்று சுவரிலே பொறிக்கப்பட்டிருந்ததைப் படித்தான். "பிறரிடம் தயாளத்தன்மை கொண்ட யாராவது பரோபகாரனொருவன் மகா தைரியத்துடன் தன் கழுத்திலிருந்து கொட்டும் இரத்தத்தால் தேவியைப் பூசிக்கிறானோ, அப்போது இந்தப் பெண்ணும் ஆணும் உயிர் பெற்றெழுவர்."

தேவியை வழிபட்ட பிறகு, தனதன் படகுக்குத் திரும்பினான். மீண்டும் பல நாட்கள் அவர்கள் கடலில் பிரயாணம் செய்த பின்பு, துவாரகையை அடைந்தனர். துவாரகாதிபதியான கிருஷ்ண பகவானைச் சேவித்துக் குதூகலம் அடைந்தான் தனதன். மூன்று நாட்கள் துவாரகையில் தங்கிய பிறகு தனதன் சொந்த ஊரான உஜ்ஜயினிக்குத் திரும்பி வந்தான்.

மறுநாள் விக்கிரமாதித்த மன்னனைக் காண கையில் சில அபூர்வ வஸ்துக்களுடன் தனதன் சென்றான். அரசன், தெய்வம், ஆசாரியன், ஜோஸ்யன், ஆகியோரைக் காணச் செல்பவன் வெறுங்கையுடன் செல்லக் கூடாது. பழத்துடன் சென்றால் அவன் நினைத்துச் செல்லும் காரியமும் பழமாகும் அன்றோ? மேலும், ஒருவன் வெறுங்கையுடன் அன்புடைய மனைவி, நெருங்கிய நண்பன், மகன் ஆகியோரைக் காணச் செல்லுதல் கூடாது. அவ்விதமே ஜோஸ்யனும், அரசனும் என்பார்கள் பெரியோர்கள்.

ஆகவே, தனதனும் துவாரகையிலிருந்து கொண்டு வந்த பிரசாதத்தைச் சிறிதளவு எடுத்துக் கொண்டு சென்றான்.

அரசனிடம் அதைக் கொடுத்து வணங்கி விட்டுத் தான் யாத்திரையின் போது கண்ட அதிசயத்தைச் சொன்னான்.

"அரசே! கடலிலே சென்று கொண்டிருக்கும்போது. நடுக்கடலிலே சிறிய மலை ஒன்று தென்பட்டது. அதன் உச்சியில் புவனேச்வரியின் ஆலயம் கட்டப்பட்டிருக்கிறது. அந்தக் கோவிலிலே விசேஷம் ஒன்று உண்டு. தேவியின் சிலைக்குப் பக்கத்தில் தலைகள் துண்டிக்கப்பட்டு ஒரு ஆணும் பெண்ணும் கிடக்கின்றனர். பிறருக்கு உதவும் குணமுடைய ஒருவன் தன் கண்டத்திலிருந்து பெருகும் உதிரத்தால் அம்பிகையை ஆராதித்தால், அவர்கள் உயிர்பெற்றெழுவார்களென்று பக்கத்திலே பொறிக்கப்பட்டிருக்கிறது. அரசே, இதுதான் பிரயாணத்தின் போது நான் கண்ட அதிசயம்" என்றான் தனதன்.

வியாபாரியின் வார்த்தையைக் கேட்ட அரசன் அளவில்லா மகிழ்ச்சி கொண்டான். அவனால் விவரிக்கப்பட்ட காட்சியை நேரில் கண்டு களிக்க விரும்பியவனாய் தனதனுடைய படகிலேறி அந்த விசித்திரக் குன்றை நோக்கிப் புறப்பட்டான்.

அங்குள்ள ஆலயத்திலே, தலை துண்டிக்கப்பட்டுக் கிடக்கும் அந்த ஜோடிகளைக் கண்டதும் அரசனின் உடல் புல்லரித்தது. கண்களை மூடி தேவியைத் தியானித்தான். பிறகு உடைவாளை உருவி கழுத்திலே சொருக முற்பட்டான்.

அப்போது தேவி பிரத்யக்ஷமாகி அவன் கைகளை கெட்டியாகப் பிடித்துத் தடுத்தாள். அதே சமயம் கீழே கிடந்தவர்களும் தலைகளைப் பெற்று உயிருடன் எழுந்தார்கள்.

"ஏ, ராஜன்! உன் செய்கையினால் நான் குதூகல மடைந்தேன். உனக்கு வேண்டியதைக் கேள்!" என்று அம்பிகை அரசனுக்கு அருளினாள்.

"தேவி, நீ பூரண திருப்தி அடைந்தவளானால் இவர்களுக்கு சகல ஐசுவரியங்களும், ராஜ்யத்தையும் அளிக்க வேண்டும்" என்று விக்கிரமாதித்தன் பிரார்த்தித்தான். அவ்வாறே தேவி அவர்களுக்கு அருள் புரிந்து மறைந்தாள். அரசனும் வியாபாரியுடன் உஜ்ஜயினி திரும்பினான்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்றான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் ஏழாவது குரங்கநயனா என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

## 23-வது அபரஞ்சிவல்லிப் பதுமை சொல்லிய சிரஞ்சீவிக் கதை



மறுநாட் காலையில் போஜ ராஜன் சிம்மாசனத்தில் ஏற முயன்ற போது. இருபத்து மூன்றாம் படிக்குக் காவலான அபரஞ்சிவல்லிப் பதுமை புதிய கதையொன்று கூறத் தொடங்கியது.

ஒரு சமயம் விக்கிரமாதித்தன் காடாறு மாதம் புறப்பட நினைத்து ஒரு யோகியின் வேஷத்தில் தூரதேசத்திற்குச் சென்றான். எங்கெங்கும் அதிசயமான பொருள்களைக் கண்டானே. அங்கு சில காலம் தங்கினான். இம் மாதிரியாக அரசன் சஞ்சாரம் செய்து வருகையில், ஒருநாள் காட்டுப் பிரதேசம் ஒன்றின் வழியாகச் செல்ல நேர்ந்தது. அப்போது சூரியன் அஸ்தமித்து இருள் பரவும் நேரம். சுற்றுப் பக்கத்தில் அருகே கிராமம் ஏதும் கிடையாது. அதனால், விக்கிரமாதித்தன் ஓர் அடர்ந்த மரத்தை அடைந்து. அதனடியில் இரவைக் கழிக்கத் தீர்மானித்தான்.

அம்மரத்தின் உச்சியிலே சிரஞ்சீவி என்னும் பெயருள்ள பறவைகளின் அரசன் வசித்து வந்தது. அதனுடைய குழந்தைகளும், அவைகளின் குழந்தைகளும் காலையில் புறப்பட்டு நாட்டின் பல பாகங்களுக்கும் பறந்து செல்லும். தங்கள் வயிறு நிரம்ப ஆகாரம் கிடைத்ததும், அவைகள் வயது சென்ற சிரஞ்சீவிக்கு ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பழத்தைக் கொண்டு வந்து கொடுக்கும்! "வயது சென்ற பெற்றோர்கள், நன்றியுடைய மனைவி, குழந்தையான மகன் ஆகியோர் காப்பாற்றப்பட வேண்டும். அவர்கள் ஆயிரம் குற்றங்கள் செய்தாலும் பொருட்படுத்தாமல் காப்பாற்றப்படவேண்டும்" என்று மனு கூறியிருக்கிறானன்றோ?

சுகமாகச் சாய்ந்துகொண்டு அன்றிரவு சிரஞ்சீவி தன் குழந்தைகளைப் பார்த்துக் கேட்டது. "குழந்தைகளே! பல

நாடுகளின் வழியாகச் சஞ்சாரம் செய்யும் நீங்கள் என்ன அதிசயத்தைக் கண்டீர்கள்?" மரத்தினடியில் அமர்ந்திருந்த விக்கிரமன் இந்த வார்த்தைகளைக் கவனிக்கலானான்.

சிரஞ்சீவியின் கேள்விக்கு ஒரு பறவை பதில் சொல்லியது. "நான் ஒன்றும் அதிசயத்தைப் பார்க்கவில்லை. ஆனால் என் உள்ளத்தில் பெரும் சோகம் ஏற்பட்டுள்ளது."

"அதன் காரணத்தைத் தெரிவி" என்று சிரஞ்சீவி கேட்டது.

"அதைச் சொல்லுவதால் என்ன வந்துவிடப் போகிறது..." என்று வருத்தத்தோடு சொல்லிற்று அது.

"குழந்தாய்! எவனொருவன் மிகுந்த மனத்துயரிலிருக்கிறானோ அவன் தன் வருத்தத்தை நண்பனிடம் தெரிவிப்பானாகில், அதிலிருந்து விடுபட்டவனாக நிம்மதியடைவான். உண்மையான நண்பனிடத்திலும், நற்குணமுள்ள வேலைக்காரனிடத்திலும்; தன்னை அனுசரித்துச் செல்லும் மனைவியிடத்திலும் ஒருவன் தன் துயரைச் சொல்லுவானேயாகில் அவன் தன் வருத்தத்திலிருந்து விடுபட்டவனாகிறான் என்பார்கள்! ஆகவே, தயவு செய்து, உன் உள்ளத்தைக் குடைந்து கொண்டிருக்கும் துயரை வெளியிட்டுச் சொல்" என்றது சிரஞ்சீவி.

அந்தப் பறவையும் தன் வருத்தத்திற்கான காரணத்தைச் சொல்லியது "அப்பா! வடநாட்டிலே சைவால கோஷம் என்ற மலை ஒன்று உண்டு. அதன் அருகிலே பூத நகரம் ஒன்றிருக்கிறது. மலையின் மீது வாசம் செய்யும் இராக்ஷஸன் ஒருவன் தினமும் அந்நகரத்துக்கு வருகிறான். வழியிலே யார் அவனுக்கு எதிர்ப்படுகிறானோ அவனைப் பிடித்து மலைக்குத் தூக்கிச் சென்று விடுகிறான். அங்கே அவனைக் கொன்று புசித்துவிடுகிறான். இதனால் நடுங்கிப் போன நகரத்து ஜனங்கள் ஒன்றுகூடி ஒருநாள் இராக்ஷஸனிடம் முறையிட்டனர். "ஓ! பகாஸுரா! யாரைச் சந்திக்க நேரிடுகிறதோ அவர்களைத் தூக்கிப்போய் சாப்பிடும் வழக்கம் வேண்டாம். நாங்களே தினத்திற்கு ஒரு மனிதனை உனக்கு ஆகாரத்திற்கு அனுப்பிவிடுகிறோம். இல்லையேல் எங்களால் நடமாடமுடியாது" என்றனர். அவனும் அவர்களுடைய வார்த்தையை ஏற்றுக் கொண்டான். அன்று முதல் தினமும் வீட்டிற்கு ஒருவர் வீதம் அந்த இராக்ஷஸனுக்கு ஆகாரமாகச் சென்று வருகின்றனர். நீண்ட காலமாக இப்படி நடந்து வருகிறது. இன்றையதினம் ஒரு ஏழையின் முறை வந்திருக்கிறது. அவனோ சிறு வயது முதலாக எனக்குப் பரம நண்பன். அவனுக்கு ஒரே ஒரு

குமாரன்தான். அந்தப் பையனை அனுப்பினால் அவனுடைய வமிசம் பெருகுவதற்கு வழியின்றி முடிவடைய வேண்டியது தான்; மகனை அனுப்பாமல் தானே போகலாமென்றால், அவன் மனைவி விதவையாகி விடுவாள். விதவைக்கோலம் பெரும் கஷ்டத்தைக் கொடுக்கக் கூடியது. ஆகவே, அவர்கள்படும் இக் கஷ்டத்தைக் கண்டு நானும் மிகுந்த வருத்தமடைகிறேன். இதுதான் என் துயரத்திற்குக் காரணம்" என்றது.

அதன் வார்த்தைகளைக் கேட்ட மற்ற பறவைகள், அதைப் பெரிதும் புகழ்ந்தன. "ஆ! இவனல்லவா உண்மையான நண்பன். நண்பனின் கஷ்டத்தைக் கண்டு தானும் துயரப் படுகிறான். இது அல்லவா நட்பு. தன் நண்பன் சந்தோஷமாக இருக்கையில் தானும் சந்தோஷப்பட்டு, அவன் வருத்தப்படும் போது தானும் வருத்தப்படுகிறவனே நண்பன். சந்திரன் உயர வரும்போது சமுத்திரமும் அலைகளை உயரக் கிளப்பி சந்தோஷப்படுகிறது; சந்திரன் அஸ்தமிக்கும் போது சமுத்திரத்தின் சந்தோஷமும் அடங்கி அலைகள் குறைந்து விடவில்லையா? தண்ணீருடன் கலக்கப்பட்ட பாலும் கலந்த பிறகு தன்னுடைய எல்லா நற்குணங்களையும் தண்ணீருக்குக் கொடுக்கிறது. கொதிக்கும் போது பால் அடையும் வேதனையைக் கண்ட தண்ணீர் தன்னைத் தியாகம் செய்து ஆவியாகமாறிக் குறைந்துவிடுகிறது. ஆனால் நண்பனுடைய அழிவைக் கண்ட பால் கொதித்தெழுந்து தானும் நெருப்பிலே விழத் தயாராகிறது. தன்னிடமிருந்து பிரிந்துபோன தண்ணீரை மீண்டும் அடைந்தாலன்றி அதன் கொதிப்பு அடங்குவதில்லை. உண்மையில், மேன்மையானவர்களின் நட்பு இதுதான்."

இம்மாதிரிப் பலவிதத்தில் அவைகள் அந்தப் பறவையைக் கொண்டாடின.

மரத்தினடியில் உட்கார்ந்திருந்த விக்கிரமாதித்தன் இவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் கேட்டு வந்தான். அந்த ஏழையின் சங்கடமான நிலையை எண்ணி வருத்தப்பட்டான். அவன் சங்கடத்தை நீக்கி அவனைக் காப்பாற்ற வேண்டுமென்ற விருப்பம் ஏற்பட்டது. உடனே, அந்த நகரத்துக்குப் புறப்பட்டுச் சென்றான். மலையின் உச்சியில் மனிதர்களைக் கொண்டு புசிப்பதற்காக வைக்கப்பட்டிருந்த பெரிய கொலைப்பாறையைக் கண்டான். அருகிலிருந்த ஏரியில் குளித்துவிட்டு அதன்மீது தயாராக இராக்ஷஸனை எதிர் நோக்கி உட்கார்ந்திருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் இராக்ஷஸன் அங்கு வந்து சேர்ந்தான். பாறைமீது உட்கார்ந்திருக்கும் மனிதன் முகத்தில்

புன்முறுவல் தவழ அமர்ந்திருப்பதைக் கண்டதும் அவன் மிக்க ஆச்சரியம் கொண்டான். "ஏ வீரனே! நீ எங்கிருந்து வருகிறாய்! இந்தப் பாறையின் மீது தினமும் அமர்ந்திருப்பவர்கள், என்னுடைய வருகைக்கு முன்னதாகவே பயத்தினால் இறந்து போயிருப்பார்கள். ஆனால் நீயோ, மிகுந்த தீரத்துடன் இருக்கிறாய்; என்னைப் பார்த்து சிரித்த முகத்துடனிருக்கிறாய். மேலும், ஒருவனுடைய மரணம் கிட்ட நெருங்கிவிட்ட போது அவனுடைய மனோ சக்திகளெல்லாம் பலவீனமடைந்து நோய் வாய்ப்பட்டுவிடுவான். நீயோ அசாதாரணமான அழகை உடையவனாக விளங்குகிறாய். ஆகவே நீ யாரென்பதை எனக்குத் தெரிவி" என்றான்.

"ஏ இராக்ஷஸா! அதனால் உனக்குப் பயன் என்ன? மற்றவர்களுக்காக நான் என் உடலைக் கொடுக்கிறேன். உனக்கு இஷ்டமானது நரமாமிசம். ஆகவே, நீ என்னைப் புசிக்கலாம்" என்றான் விக்கிரமாதித்தன்.

"ஆம்! இவன் ஒரு சாதுவாக இருக்கவேண்டும். மற்றவர்கள் சந்தோஷம் அடைவதற்காகத் தன்னுடைய இச்சைகளைத் தியாகம் செய்கிறான். மற்றவர்களின் கஷ்டங்களைக் கண்டு தானும் துயர் அடைகிறான். பிறருக்குச் சந்தோஷம் உண்டாவதற்காகத் தன் இச்சைகளைத் தியாகம் செய்து எல்லா பிராணிகளிடத்தும் மகிழ்ச்சியைக் காணும் சாதுக்கள், பிறருக்கு ஏற்படும் துயரங்களைக் கண்டு தாங்களும் மனத்துயரம் அடைவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவனைச் சாதாரண மனிதனென்று நினைத்தது தவறு."

இந்தப்படியாக மனத்திற்குள் நினைத்துக்கொண்டு இராக்ஷஸன், அரசனை நோக்கி, "தீரம் மிகுந்த மகாபுருஷனே! உன் வாழ்க்கை உண்மையாகவே புகழப்படவேண்டியது. ஏனெனில், பிறருக்காக நீ உன் உடலைத் தருகிறாய். மிருகங்கள் தங்களுடைய வயிற்றை வளர்ப்பதற்காக மட்டுமே ஜீவிக்கின்றன. ஆனால், மனிதனுடைய வாழ்வு, அவன் பிறருக்காக உயிர் வாழும்போதே புகழப்படுகிறதாக ஆகிறது. மேலும் உன்னைப் போன்ற பிறருக்கு உபகாரம் செய்யும் மனிதர்களைக் காண்பது அரிது. மற்றவர்களின் சேவைக்காகத் தங்கள் வாழ்க்கையைப் பெரியோர்கள் தியாகம் செய்வதில் என்ன அதிசயம் இருக்கிறது? சந்தன மரங்கள் தங்கள் உடலைக் குளிர்ச்சி செய்து கொள்ளுவதற்காகப் பிறக்கவில்லையே! இன்னும், இந்தப் பரோபகாரச் செய்கை மூலம், நீ எல்லா நற்குணங்களையும் அடைந்து விட்டாய். பிறருக்கு உதவுவதையே மேலான

காரியமாக இவ்வுலகில் கொண்டுள்ள மனிதன் எல்லா நற்குணங்களையும் அடைகிறான். எல்லாவற்றுக்கும் மேலான இடத்தை அவன் அடைகிறான். பிறருக்கு உதவுவதாக முயலும் பெரிய மனிதர்கள் உலகத்திற்காகவே தோன்றுகிறார்கள். அவர்கள் எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டவர்கள். சுவர்க்கத்தின் ஆசையையும் கூட அவர்கள் அடைவதில்லை. உன் செய்கையினால் நான் பரம சந்தோஷமடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்றான்.

"இராக்ஷஸனே! என்னிடம் நீ பூரண திருப்தி உடையவனாக இருப்பதாகத் தெரிவிக்கிறாய். அது உண்மையானால் இன்றிலிருந்து மனிதர்களைப் புசிப்பதை நிறுத்திவிடு. நான் சொல்வதைக் கவனமாகக் கேள். எவ்விதம் உன் உயிரை நீ மிகவும் விரும்புகிறாயோ அவ்விதமே மற்றவர்களும் தங்கள் தங்கள் உயிர்மீது அதிக ஆசை கொண்டிருக்கின்றனர். ஆகவே, நேர்மையான அறிவு உடையவன், இந்த உயிர்களை மரணத்தின் பயத்திலிருந்து காப்பாற்றவேண்டும். இந்தச் சம்சார சாகரத்தில் உழலும் மானிடர்கள் பிறப்பு, கிழத்தன்மை, மரணம் ஆகியவைகளால் வேதனைப்படுகின்றனர். ஏனெனில் அவர்கள் மரணத்தின் முன்பு நடுங்குகின்றனர். "நான் இறக்கத்தான் வேண்டும்" என்ற எண்ணம் ஒருவனுக்கு உண்டாகும்போது அவனுக்கு ஏற்படும் துக்கத்தின் அளவை நீ அறிவாயானால், அவன் எதிரியேயாயினும் நீ விட்டுவிடவேண்டியவனே. உன் உயிரில் உனக்கு ஆசை இருப்பதுபோலவே மற்றவர்களுக்கும் அவர்கள் உயிரின் மீது ஆசை இருக்கிறது. உன் உயிரை நீ காப்பாற்றுவது போல, அவர்களும் தங்கள் உயிரைக் காப்பாற்றுகிறார்கள். ஆகவே, இன்று முதல் இக்கொடிய பழக்கத்தை விட்டொழித்து நல்லவனாக மாறிவிடு.

விக்கிரமாதித்தனின் அறிவுரைகளைக் கேட்ட இராக்ஷஸன் அவ்விதமே, அன்று முதல் உயிர் வதையை விட்டுவிட்டான். அரக்கனிடமிருந்த பயத்தை நீக்கி, நகரத்து மக்களுக்கு க்ஷேமத்தைக் கொடுத்துவிட்டு விக்கிரமாதித்தன் தன் நகரம் திரும்பினான்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜன் திரும்பிச் சென்றான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் பதினோராவது வித்தியாகரிப் பதுமை கூறியதாக உள்ளது.)

## 24-வது மனோரஞ்சிதவல்லிப் பதுமை சொல்லிய பிரம்மச்சாரியின் கதை



மறுநாட் காலையில் போஜராஜன் சிம்மாசனத்தில் ஏறி அமர முயன்ற போது இருபத்துநான்காவது படிக்கு காவலாக இருந்த மனோரஞ்சிதவல்லி என்னும் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.

நீதிநெறி வழுவாது விக்கிரமாதித்தன் அரசாட்சி நடத்தி வந்தான். வழக்கம் போலவே அந்த வருடமும் சித்திரை மாதத்தில் வசந்த காலம் வந்தது.

அந்த விழாவைக் கொண்டாட அரசன் பிரமாதமான ஏற்பாடுகளைச் செய்தான். அரச குடும்பத்தினர் உல்லாசமாகப் பொழுதைக் கழிப்பதற்காக உத்தியானவனம் ஒன்று உண்டு. அந்த வனத்திற்குத் தன் அந்தப்புர மாதர்களை அழைத்துக் கொண்டு சென்றான். அந்த வனத்தில் மாமரங்கள் மகரந்தம் நிறைந்த பூங்கொத்துக்களை இடைவிடாமல் (புங்கானுபுங்கமாய்) சொரிந்து கொண்டிருந்தன. அவை அசைந்து ஆடும் போது உண்டாகும் ஓசை, அவைகளைச் சுற்றித் திரியும் தேனீக்களின் பேடுகள் இசைக்கும் ரீங்காரத்துக்குப் பதில் கூறுவது போலத் தோன்றியது. தேனினுமினிய குரலில் குயில்கள் கூவி அழைப்பதற்குக் கட்டியம் கூறுவது போலத் தோன்றியது. இவைகள் சித்திரை (வசந்தம்) பிறந்து விட்டதை எல்லா திக்குகளுக்கும் தெரியும்படி செய்தன.

இன்னும், சந்தன மரங்கள் நிறைந்த வனங்களிலிருந்து வீசும் தென்றல் அந்த மகரந்தப் பொடிகளைக் கவர்ந்து வாரி இறைத்து வனம் முழுவதும் நிரப்பிவிட்டது. மாமரங்களின் மெல்லிய கொம்புகள் மதம் பிடித்து அலையும் தேனீக்களின் இறக்கைகளால் அசைப்புண்டு ஆடி எங்கும் இன்பத்தைப் பரப்பின.

இவ்வளவு கோலாகலமாக இருக்கும் அந்தச் சிங்கார வனத்திலே கணக்கற்றவிதமான மரங்கள் வளர்ந்திருந்தன. பழ

மரங்களில் இலைகளினூடே கொத்துக் கொத்தாகப் பழங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அவைகளின் பாரத்தைத் தாங்கமாட்டாமல் கிளைகள் வளைந்து கொடுத்தன. புஷ்பச் செடிகள் ஒருபுறம் பூத்துக் குலுங்கி வனம் முழுவதிலும் நறுமணத்தை வீசின. கண்ணைக் கவரும் பசுமையான கொடிகள் வித விதமான நிறங்களில் சிறியதும் பெரியதுமான பூக்களுடன் அழகாகப் படர்ந்திருந்தன.

இவைகளின் நடுவே, சந்திரகாந்த கற்களால் கட்டப்பட்ட அழகிய மாளிகை ஒன்று இருந்தது. மாளிகையின் சுவர்களில் பச்சை, மரகதம் முதலிய கற்கள் புதைக்கப்பட்டிருந்தது. அதன் அழகைப் பன்மடங்கு அதிகரித்துக் காட்டியது. மாளிகை முழுவதும் ஒரே சுகந்தம். வாசனைத் திரவியங்களின் மணம் மாளிகை முழுவதும் "கமகம"வென்று பரவிக்கிடந்தது. மாளிகையைச் சுற்றிலும் உள்ளத்தைக் கவரும் அழகிய பூச் செடிகள் கொத்துக் கொத்தாகப் புஷ்பங்களுடன் காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன. விக்கிரமன் தன்னுடைய சௌந்தரியவதிகளான மனைவியர்களுடன் இந்த மாளிகையிலே வசந்த விழாவைக் கொண்டாடினான். அரசனே கலந்துவிட்டால் கேளிக்கைகளுக்குக் கேட்கவேண்டுமா?

அந்த வனத்திற்கு அடுத்தாற்போல் சண்டிகையின் கோவில் ஒன்று இருந்தது. அக் கோவிலிலே வெகு காலமாகப் பிரம்மச்சாரி ஒருவன் தேவியை வழிபட்டு வந்தான். நாள் முழுவதும் அவளுக்குச் சேவை செய்வதிலேயே கழித்து வந்தான்.

வசந்த விழாவைக் கொண்டாட விக்கிரமாதித்தன் சிங்கார வனத்திற்கு வந்திருக்கும் செய்தி அவன் காதுகளுக்கு எட்டியது. அப்போது அவன் உள்ளத்தில் பின்வருமாறு தோன்றிற்று:

"ஒருவிதப் பயனுமின்றி நாம் தவத்தை மேற்கொண்டு நம்முடைய வாழ்க்கையை வீணடித்து வருகிறோம். சுகம் என்பதையே கனவிலும் ருசி பார்த்ததில்லை. இறந்த பிறகு தவத்தின் பலனை அனுபவிப்பதற்காக உயிரோடிருக்கும் வரையில் ஒருவனுடைய வாழ்க்கையை ஒரு சுகமுமின்றி வருத்திக் கொள்வதில் என்ன இருக்கிறது? உலக வாழ்க்கையின் இன்பத்தில் துன்பமும் கலந்து கிடப்பதாகவும், ஆகவேதான் உலக வாழ்க்கையை அறிவாளிகள் வெறுக்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். இது ஒரு முட்டாளின் கருத்தேயாகும்! போகங்களை அனுபவிப்பதால் ஆடவனுக்கு ஏற்படும் இன்பத்தோடு துன்பமும் கலந்திருப்பதால் அந்தப் போகானுபவத்தை அவன் துறக்க வேண்டும்! இவ்விதம்

சொல்வது முட்டாளின் வார்த்தையே! யார் தான் தன்னுடைய நன்மைக்காக என்று, சுவை நிரம்பிய அரிசியை அதனுடன் உமி போன்ற கஷ்டங்கள் கலந்திருக்கின்றன என்று ஒதுக்கித் தள்ளுவார்கள்? ஆகவே, பெண்களுடன் கூடிக்களித்து இவ்வுலகில் உத்தமமான இல்வாழ்க்கையின் இன்பத்தை அளிப்பதான சந்தோஷமாகிய பெண்களை எப்பாடு பட்டாகிலும் ஒருவன் அடையவேண்டும். இந்த சாரமற்ற உலகிலே எல்லாப் பொருள்களையும் விட மான்விழியாளான பெண்ணே மேலானவள் அன்றோ! அவளுக்காகத்தான் மனிதர்கள் செல்வத்தைத் தேடுகிறார்கள். அவள் இல்லாமல் செல்வத்தினால் யாது பிரயோசனம்?

"அழிவுறக் கூடிய இவ்வுலகிலே அழகிய சிறுத்த இடையுடைய பெண்ணே மேலானவள். அதனால் தான் சம்புவும் (பரமசிவனும்) தன்னுடைய அன்புக்குரியாளை மடியில் வைத்துக் கொண்டிருக்கிறார் போலும்!"

"இப்போது விக்கிரமாதித்த ராஜன் இங்கே வந்திருக்கிறான். அவனிடம் சென்று ஓர் ஊரை யாசித்து, யாராவது ஒரு பெண்ணைப் பார்த்து மணந்து கொண்டு இவ்வுலக வாழ்க்கையின் இன்பத்தை அனுபவிக்க வேண்டும். அப்போது தான் நமது வாழ்க்கையும் பயனற்றதாகப் போகாது."

இவ்விதமாக மனத்தில் தோன்றியதும் பிரம்மச்சாரியானவன் எழுந்திருந்து, அரசனைக் காண அவன் தங்கியிருந்த சிங்கார வனத்திற்குச் சென்றான்.

அவனைக் கண்டதும் அரசனும் ஆச்சரியத்துடன் "தாங்கள் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று விநயமாகக் கேட்டான்.

"துர்க்கையின் கடைக்கண் பார்வை உங்களை எப்போதும் காப்பாற்றட்டும். வில்லின் நாண்கயிற்றைப் பிடித்து இழுப்பதற்காகக் கைவிரல்களைத் தயாராக வைத்திருக்கும்போது அந்த விரல் நகங்களிலிருந்து வீசும் ஒளி அவள் காதில் அணிந்திருக்கும் இலைதளிர்களோடு கூடிய மலர் மாலையை வண்டுகள் சுற்றி வருவது போன்ற ஒரு பிரமையைக் கொடுக்கும் கடைக் கண் பார்வை உங்களைக் காப்பாற்றட்டும்!" என்று அரசனை ஆசிர்வதித்தான் பிரம்மச்சாரி.

"ஐயா! தாங்கள் இந்தப் பீடத்தில் அமருங்கள். தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? அடியேன் என்ன செய்ய வேண்டும்?" என்று அவனை வரவேற்று உபசரித்தான் விக்கிரமாதித்தன்.

"வேந்தே! இந்தப் பிரதேசத்திலேயே உன் சிங்காரவனத்திற்கு அருகிலேயே தன் இருப்பிடத்தைக் கொண்டிருக்கும் உலக மாதா சண்டிகையை வழிபட்டு வருகிறேன். தேவியின் வழிபாட்டைத் தொடங்கி அனேக ஆண்டுகள் சென்றுவிட்டன. நானோ ஒரு பிரம்மச்சாரி. நேற்று பின் இரவிலே தேவி சண்டிகை என் கனவிலே தோன்றினாள். "ஏ பிரம்மச்சாரி! இத்தனை காலமாக எத்தனையோ கடுங்கஷ்டத்துள்ளாகியும் நீ என் வழிபாட்டை தடங்கலின்றி நிறைவேற்றி வருகிறாய். உன் சேவையினால் நான் மிக்க மகிழ்ச்சியடைந்தவளாய் இருக்கிறேன். நீ இனி பிரம்மச்சரியத்தை விட்டொழித்துவிடு. இல்லறத்தில் ஈடுபட்டு ஒரு மகனை அடைவாயாக. அதற்குப் பிறகுதான், நீ வீடுபேற்றை (மோக்ஷத்தை) அடையும் மார்க்கத்தில் ஈடுபடலாம். இல்லையேல், உனக்குப் பரத்தில் இடம் இல்லை. ஒருவன் மூன்று கடன்களைத் தீர்த்துக் கொண்ட பிறகே வீடு பேற்றில் மனதை ஈடுபடுத்த வேண்டும். அன்றி அவைகளை நிறைவேற்றாமல் வீடுபேற்றில் மனதை ஈடுபடுத்துவானேயாகில் அவன் நரகத்துக்கே போவான். அந்தணனாகப் பிறந்தவன் தேவர், ரிஷி, பிதிர் ஆகியோர்களுக்குப் பட்டுள்ள கடன்களே மூன்று கடன்கள். வேதங்களை அத்தியயனம் செய்வது ரிஷிகளிடம் பட்டுள்ள கடன்; யாகம் செய்வது தேவர்களிடம் பெற்றுள்ள கடன்; மூன்றாவதாகப் பிதிர்களாகிய முன்னோர்களிடம் பட்டுள்ள கடனே பிள்ளைப் பேற்றை அடைவது.

இவ்விதம், சொல்லப்பட்டிருக்கிறது உனக்குத் தெரியாதா? ஏன் இவ்விதம் உன் தவத்தையும் காலத்தையும் வீணடித்துக் கொள்கிறாய்? பிரம்மச்சாரியாக இருப்பவன் இல்லறத்தில் புகவேண்டும். இல்லறத்தில் இறங்கிய சிறிது காலத்துக்குப் பிறகே வானப்பிரஸ்தாச்ரமத்தில் புகவேண்டும். அப்புறமே துறவியாதல். மேலும் விக்கிரமனிடம் நான் கனவிலே சொல்லியிருக்கிறேன். உன்னுடைய மனோரதத்தை அவன் நிறைவேற்றி வைப்பான். அவனைப் போய்ப் பார் என்று தேவி எனக்கு உத்தரவிட்டாள். அரசே! அதன் மீதுதான் நான் உங்களைக் காண இங்கு வந்துள்ளேன்" என்றான்.

பிரம்மச்சாரியினுடைய வார்த்தைகளைக் கேட்ட விக்கிரமாதித்தனின் ஆச்சர்யம் பன்மடங்கு அதிகரித்தது. அவனுடைய கனவில் தேவி தோன்றி அம்மாதிரி ஏதும் உத்தரவிடவில்லை. பிரம்மச்சாரி பொய் சொல்லுகிறான் என்பது தெளிவாக விளங்கியது.

"தேவியோ நம் கனவில் தோன்றவில்லை. இந்த மனிதன் பொய் சொல்லுகிறான் என்பதில் சந்தேகமேயில்லை. சொல்லி

விட்டுத்தான் போகட்டும். அதனால் நமக்கென்ன குறை நேர்ந்துவிடப் போகிறது? தற்சமயம் அவனுக்கு தேவை ஏற்பட்டிருக்கிறது. நம்மிடம் நேரில் யாசிப்பதற்கு வெட்கப்பட்டுக்கொண்டு இவ்விதம் பொய் சொல்லுகிறான் போலும்! என் குடிமக்களில் இவனும் ஒருவனே! எல்லோரையும் திருப்தி செய்வது போல இவனுடைய மனோரதத்தையும் நிறைவேற்றி வைக்கவேண்டியதுதான் என் கடமை. யாசிப்பவனுக்குப் பொருளைக் கொடுத்து உதவுவதும், யாரும் கவனிப்பாரன்றி அனாதரவாகக் கிடக்கும் சிலைக்கு உரிய பூசைகளைச் செய்வதும், தன்னை அண்டியவர்களை எப்போதும் காப்பாற்றுவதும் ஆகிய காரியங்களை எந்த அரசன் செய்து வருகிறானோ அவனுக்கு அசுவமேத யாகம் செய்த பலன் கிடைக்கும் என்று சொல்லியிருக்கிறது"

இந்த மாதிரியாக விக்கிரமாதித்தன் மனத்திற்குள்ளாகச் சிந்தித்து பிரம்மச்சாரியினுடைய இச்சையைப் பூர்த்தி செய்வதே தன் கடமை என்ற முடிவுக்கு வந்தான்.

உடனே புதிய நகரம் ஒன்றை நிர்மாணித்தான். சண்டிகாபுரம் என்று பெயரிடப்பட்ட அந்த நகரத்திற்குப் பிரம்மச்சாரியை அரசனாக முடிசூட்டினான். அத்துடன் நின்றுவிடவில்லை. அவனுடைய சேவைக்காக, நூறு அழகிய பெண்களையும், ஐம்பது யானைகளையும், ஐம்பது குதிரைகளையும், நாற்பது இரதங்களையும், ஐயாயிரம் வேலைக்காரர்களையும் பரிசாக அளித்துக் கௌரவித்தான்.

அந்தப் பிரம்மச்சாரியும் தன்னுடைய மனோரதம் நிறைவேறிய மகிழ்ச்சியுடன் அரசனைப் பலவாறு வாழ்த்தினான்.

இவ்வாறாக பதுமை கதை சொல்லி முடித்ததும் பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்றான்.

## 25-வது சுவர்ணகாந்தவல்லிப் பதுமை சொல்லிய கமலாகரன் கதை

இருபத்தைந்தாவது நாட் காலையில் போஜராஜன் மறுபடியும் சிம்மாசனத்தில் ஏறி அமரமுயன்றபோது, இருபத்தைந்தாம் படிக்குக் காவலாக இருந்த சுவர்ணகாந்தவல்லி என்னும் பதுமை புதிய கதையொன்று கூறத் தொடங்கியது.

• • •

விக்கிரமாதித்தன் அரசு பீடத்தில் அமர்ந்து பரிபாலனம் செய்து வருகையில் பட்டி அவனுக்கு மந்திரியாக இருந்து வந்தான். கோவிந்தன் என்பவர் அடுத்தபடியாக அதிகாரங்களைக் கொண்டிருந்தார். சேனாதிபதியாக சந்திரனும், புரோகிதராக திரிவிக்கிரமனும் இருந்து வந்தார்கள். திரிவிக்கிரமனுக்கு கமலாகரன் என்ற பெயருடைய மகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு தகப்பனாரிடம் செல்லம் அதிகம். சாப்பாட்டில் அதிகமாக நெய் சேர்த்துக்கொண்டும், ஆபரணங்கள், வெற்றிலை பாக்கு முதலியவற்றால் சதா உடலை அலங்கரித்துக் கொண்டும் எப்பொழுதும் காமாந்தகாரமான கேளிக்கைகளில் ஈடுபட்டும் காலத்தைக் கழித்து வந்தான்.



ஒருநாள் அவன் தகப்பனுர் அவனை அழைத்துச் சொன்னுர்: "கமலாகரா! உனக்கு வெட்கமாக இல்லையா? பிறப்பின் மூலம் உயர் ஜாதியை அடைந்துவிட்ட நீ எவ்விதம் இந்த ஆத்மா பலவிதங்களில் அனேகமுறை பிறப்பை அடைந்து, கடைசியாகத் தான் செய்த நற்கருமங்களின் பயனுக மனித உடலில் வந்து பிறக்கிறது. அந்த விஷயத்திலும் அறிஞர்களின் குடும்பத்தில் வந்து பிறப்பதென்பது மிகவும் துர்லபம். இவை எல்லாவற்றையும் அடைந்தும்கூட நீ கெட்ட வழிகளில் திரும்பிவிட்டாய். நீ ஒருபோதும் வீட்டில் தங்குவதே இல்லை. சாப்பாட்டு வேளையில் மட்டும் வீடு திரும்புகிருய். உன்னுடைய நடத்தை முறையற்றது. இது உண்மை. மேலும் படிக்கவும், அறிவின் விருத்தியை அடையவும் இதுதான் உனக்குச் சரியான நேரம். இந்தக் காலத்தில் உன் அறிவை நீ விருத்தி செய்து கொள்ளாவிட்டில், பிற்காலத்தில் நீ பெரிதும் கஷ்டத்திற்குள்ளாக நேரிடும்.

"எவர் பாலபருவத்தில் வித்தையைப் படிக்காமலும், காமசேஷ்டைகளினுல் தங்களுடைய நல்ல புத்தியை வீணடித்து யௌவனத்தைக் கழிக்கிருர்களோ, அவர்கள் முதுமைப் பருவத்தில் குளிர்காலத்தில் தாமரையைப் போன்று அசட்டை செய்யப்பட்டு மிக்க அவமானமும், துன்பத்தையும் அடைகிருர்கள்! வித்தை இல்லாதவன், தவம் இல்லாதவன், தானம் செய்யாதவன், சீலம் அற்றவன், குணம் இல்லாதவன், தர்ம வழி நில்லாதவன், இவர்கள் பூலோகத்தில் மனித உருவில் உள்ள மிருகங்களே ஆவர்.

"இவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும், சம்சார பந்தத்தில் வித்தையைத் தவிர வேறு உயர்ந்த ஆபரணம் மனிதனுக்குக் கிடையாது. இன்னும் சொல்லுவார்கள்.

"வித்தையே மனிதனுக்கு உயர்ந்த அழகு; இரகசியமாகச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் பொக்கிஷம் அது; வித்தையே இன்பத்தை அளிப்பது; புகழ், சுகம் ஆகியவற்றைக் கொடுப்பது அதுவே; குருவின் குரு வித்தை. அயல்நாடு செல்பவர்களுக்கு அறிவுதான் உற்ற நண்பன்; உன்னதமான தெய்வமும் அதுவே. அரசர்களிடையே தனத்தைவிட வித்தையே கௌரவமாக விளங்குகிறது. இன்னும், உயர்ந்த குலத்தில் பிறந்தவனுயினும், வித்தை இல்லாதவனுயின் குலப்பிறப்பு என்ன செய்யும்? கீழ்த்தரமான குடும்பத்தில் பிறந்தவனுக இருந்தாலும், ஒருவனுக்கு வித்தை இருக்கும் பட்சத்தில் அவன் மூன்று உலகங்களிலும் கொண்டாடப்படுகிருன்.

"மகனே! உனக்கு வெட்கமாயில்லையா? நான் ஜீவித்திருக்கும் வரையில் நீ சாஸ்திரங்களை படிப்பதிலேயே உன் கவனத்தைத் திருப்பவேண்டும். நீ அடையும் அறிவு விருத்தி, உனக்கு எல்லாவிதமான சேவைகளையும் அளிக்கும். ஏனெனில், அறிவானது நம்மைத் தாயைப்போல காப்பாற்றுகிறது; தந்தையைப் போன்று நேர்மையான வழியில் செல்லக் கட்டளையிடுகிறது; தாரத்தைப் போன்று நம்முடைய வருத்தம் அனைத்தையும் அகற்றி சந்தோஷப்படுத்துகிறது; நாற்புறமும் நம் புகழைப் பரப்புகிறது; செல்வத்தை விருத்தி அடையச் செய்கிறது. அறிவு நமக்கு வேண்டிய எல்லா வேலைகளையும் செய்து முடிக்கிறது என்பார்கள். இவையெல்லாம் உனக்குத் தெரியாதது அல்லவே?"

தந்தையின் வார்த்தைகளைக் கேட்ட கமலாகரன் அளவில்லாத வியாகூலம் அடைந்தான். "கல்வி அறிவு பெறாமல் இனி என் தகப்பனார் முகத்தில் விழிப்பதில்லை" என்று கடுமையான உறுதி கொண்டான். நகரத்தைவிட்டுப் புறப்பட்டுக் காஷ்மீரத்திற்குப் பிரயாணமானான்.

அங்கே சந்திரமௌலிபட்டர் என்னும் ஆசிரியரைச் சந்தித்தான். அவர் முன்னிலையில் தாழ்மையுடன் வணங்கி, "குருவே! நான் ஒரு மந்த புத்தியுள்ள இளைஞன். தங்களுடைய சக்தியைக் கேள்விப்பட்டுத் தங்களிடம் பாடம் கேட்டு அறிவை விருத்திசெய்து கொள்ள வந்திருக்கிறேன். என்னிடம் கருணைகாட்டுங்கள். பிரபோ! என்னை அறிவின் இருப்பிடமாக ஆக்குங்கள்" என்றான்.

அவன் மறுபடியும் அவர் முன்னிலையில் தாழ்ந்து வணங்கினான். அவனுடைய ஆர்வத்தைக் கண்ட ஆசிரியரும் கமலாகரனைத் தன்னுடைய சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தார். பகலிலும் இரவிலும் அவரிடம் பாடம் கேட்டு, அவருக்கு சிருட்ஷைகளைச் செய்து வந்தான். குரு சிருட்ஷை மூலமாகவும், அதிக பணத்தின் மூலமாகவும், மற்றைய ஏதாவது வித்தையின் மூலமாகவும் அறிவை அடையலாம். நான்காவது முறை ஏதும் காணப்படவில்லை என்பார்கள்.

இந்தவிதமாகக் குருவிடம் கமலாகரன் சிருட்ஷை செய்து பாடம் கேட்டு வருகையில் வெகு நாட்கள் சென்றுவிட்டன. ஒருசமயம் அவர் அவன்மீது அன்பு கொண்டு, ஸித்த சாரஸ்வத மந்திரோபதேசம் செய்தார். அதை அறிந்ததன் மூலம் கமலாகரன் அறிவாளியானான். குருவிடம் விடைபெற்றுக் கொண்டு தன்னுடைய நகரத்துக்குத் திரும்பினான்.

"நரமோகினி என் உதவிக்கு கைம்மாறு செய்ய நீ விரும்பினால், என் வார்த்தையைத் தட்டாது ஏற்கக் கூடியவளானால், இதோ நிற்கும் கமலாகரனை உன் மணாளனாக ஏற்றுக் கொள். உன்னிடம் அவன் அதிக அன்பு கொண்டிருக்கிறான்" என்றான் விக்கிரமாதித்தன்.

"பிரபோ! அவ்விதமே நடக்கிறேன்" என்று நரமோகினி கமலாகரனை வணங்கினாள்.

அரசனும் மகிழ்ச்சியுடன் தன் தேசம் திரும்பினான்.

கதையைச் சொல்லி முடித்த பதுமை, "போஜராஜரே! தனக்குக் கிடைத்த அழகிய பெண்ணையும் தன் நண்பனுக்குத் தியாகம் செய்த நற்குணம் உமக்கிருந்தாலன்றோ, சிம்மாசனத்தில் ஏறியமரலாம்?" என்றது.

அப்பொழுது சூரியாஸ்தமனமாகிவிட்டதால் போஜராஜன் பதில் பேசாமல் படிகளில் இறங்கிச் சென்று விட்டான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் ஒன்பதாவது காமகாரிகையென்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

---

## 26-வது சகலகலாவல்லிப் பதுமை சொல்லிய தபஸ்வியின் கதை

---

மறுநாள் சிம்மாசனத்தில் போஜராஜன் ஏறி அமர முயன்றபோது இருபத்தாறும் படிக்குக் காவலாக இருந்த. சகலகலாவல்லி என்னும் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.

ஃ ஃ ஃ



விக்கிரமாதித்தன் அரசாண்டு வரும் காலத்தில், வெளி நாட்டில் திரிந்துவிட்டு ஒற்றன் ஒருவன் திரும்பி வந்தான். அவன் அரசனை அடைந்து தான் கண்ட அதிசயத்தைச் சொல்லத் தொடங்கினான்.

"மன்னவா, சித்திரக்கூடம் என்றொரு மலை இருக்கிறது. அதன் சாரலிலே தபோவனம் ஒன்று இருக்கிறது. அங்கு

மனோஹரமான கோவில் தேவிக்காக எழுப்பப்பட்டுள்ளது. மலை உச்சியிலிருந்து விழும் நீர்வீழ்ச்சி, கோவில் பக்கத்தில் செல்லுகிறது. அதிலே ஒருவன் இறங்கிக் குளித்து வெளியே வந்தால், அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டு விடுகிறான். பஞ்சமா பாதகம் செய்தவன் உடலிலிருந்து கீழே விழும் தண்ணீர் கருமை நிறத்தை அடைந்துவிடுகிறது. எப்போர்ப்பட்ட பெரும் பாதகத்தைச் செய்தவனாக இருந்தாலும், அத்தண்ணீரில் குளித்து வருவதன் மூலம் அவன் சகல பாவத்தையும் விட்டுப் புனிதமானவனாகி விடுகிறான். இன்னும், அந்தணன் ஒருவன் அங்கு ஹோமகுண்டம் வளர்த்து, அதில் ஹோமம் செய்து வருகிறான். அவன் எத்தனை காலமாக அவ்விதம் ஹோமம் செய்து வருகிறான் என்பது தெரியவில்லை. அங்கு இருப்பவர்களுக்கும்கூட தெரியாது. ஏனென்றால், ஹோமக் குண்டத்திலிருந்து அப்புறப்படுத்தப்படும் சாம்பல் தினமும் பக்கத்திலே கொட்டப்படுகிறது. அவ்விதம் கொட்டப்பட்ட சாம்பல் மலைபோன்று குவிந்திருக்கிறதென்றால் நீங்கள் நினைத்துப் பாருங்கள், அரசே! தபஸ்வி எவருடனும் பேசுவதில்லை. இதுவே நான் கண்டவைகளில் அதிசயம் வாய்ந்தது."

ஒற்றன் சொன்னவற்றைக் கேட்ட விக்கிரமாதித்தனுக்குத் தான் அந்தப் பிரதேசத்திற்குச் சென்று பார்க்க வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. ஆகவே, அந்த ஒற்றனையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு அவன் சித்திரகூட மலைக்குச் சென்றான். அந்தப் பிரதேசத்திற்குள் நுழைந்த உடனேயே அரசன் இயற்கை எழிலில் மெய்மறந்து போய்விட்டான். "ஆஹா! எவ்வளவு மனோரம்மியம் வாய்ந்த பிரதேசம்! உண்மையில் இது தூய்மை வாய்ந்த இடமே! சாக்ஷாத் ஜகதாம்பிகை இங்குதான் வாசம் செய்கிறாளோ?" என்ற வார்த்தைகள் வியப்படைந்த அரசனின் வாயிலிருந்து தானாகவே வெளிப்பட்டன.

பிறகு அருவி நீரில் குளித்தான். தண்ணீரில் இறங்கிக் குளிக்கும் அவசியம் அரசனுக்கு ஏற்படவில்லை. நீர் வீழ்ச்சியிலிருந்து தெறித்த நீர்த்துளிகளே அவன் உடலை நனைத்துவிட்டன. ஸ்நானம் முடிந்ததும் கோவிலில் நுழைந்து தேவியை வழிப்பட்டான். பிறகு அந்தத் தபஸ்வியிடம் சென்றான்.

"தவச் சிரேஷ்டரே, தாங்கள் எத்தனை காலமாக ஹோமம் செய்து வருகிறீர்கள்? பக்கத்திலிருக்கும் மலைபோன்ற சாம்பல் குவியலைக் கண்டால் மலைத்துப் போகிறது. இத்தனை காலமாக ஹோமம் செய்து வரும் காரணம் என்ன?" என்று வினவினான் விக்கிரமன்.

"மன்னவா, நான் ஹோமம் செய்ய ஆரம்பித்து நூறு வருஷங்கள் ஆகிவிட்டன..."

"நூறு வருஷங்களா? .....இத்தனை காலமும் தேவி திருப்தி அடையவில்லையா?"

"ஆம். அரசே! ஸப்தரிஷி மண்டலம் ரேவதி நக்ஷத்திரத்தின் முதற்பாதத்தில் இருந்தபோது இந்த ஹோமத்தை ஆரம்பித்தேன். இப்போது அசுவதி நக்ஷத்திரத்திற்கு அது வந்துவிட்டது. தேவியின் அருள் எனக்கு இன்னும் கிட்டவில்லை."

தபஸ்வியின் வார்த்தைகளைக் கேட்ட அரசன் மிகவும் மனம் வருந்தினான்.

"ஐயா! தங்களுக்குத் தேவியின் அருள் கிட்ட நான் முயற்சி செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு ஹோமகுண்டத்தினருகே சென்றான். மனதை ஒருப்படுத்தி ஹோமம் செய்தான். அப்போது தேவி பிரத்தியக்ஷமாகவில்லை. அதன்மீது விக்கிரமன் உடைவாளை உருவி, "தேவி, அடியேன் செய்த இச்சிறு ஹோமம் உன்னைத் திருப்திபடுத்த போதவில்லை போலிருக்கிறது. இதோ என் சிரத்தை அறுத்து உனக்கு ஹோமம் செய்கிறேன்" என்று ஓங்கினான்.

சட்டென்று தேவி பிரத்தியக்ஷமாகி அவன் கையைப் பிடித்துக் கொண்டுவிட்டாள். அரசனின் கை தானகக் கீழே இறங்கியது. அம்பிகையைக் கண்டதும் கத்தியை உறையிலிட்டு வணங்கினான்.



"ராஜனே, உன் முயற்சியால் நான் திருப்தி அடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்றாள் அம்பிகை.

"தாயே, நூறு வருஷ காலம் இடைவிடாமல் உன்னையே தியானித்து ஹோமம் செய்துவரும் இத் தபஸ்விக்குத் தோற்றம் அளிக்காதிருந்துவிட்டாய். தலையை அறுத்து ஹோமத் தீயில் இடுகிறேன் என்றதும் உடனே ஓடிவந்துவிட்டாயே. ஏன்?"

"விக்கிரமா! இத் தபஸ்வி நூறு வருஷங்களாக என்னைத் தியானித்து ஹோமம் செய்து வருவது உண்மையே! நூறு வருஷங்கள் மட்டுமல்ல; ஆயிரம் வருஷங்கள் இத்தபஸ்வி ஹோமம் செய்தாலும் என்னைத் திருப்திபடுத்துவது முடியாது. இவன் ஏகாக்ரசித்தம் உடையவனாய் ஹோமத்தில் ஈடுபடவில்லை. என்னைத் தியானிக்கும் அதே சமயம் இவன் உள்ளத்தில் பல யோசனைகள் அலைபாயும். விரல்களை எண்ணியும், மடித்தும், பலவித நினைவுகளோடு அலையுண்டு கிடக்கும் மனத்தாலும் செய்யப்படும் இம்மூன்று பிரார்த்தனைகளும் பலிக்காது போய்விடும்! எவ்விதமெனில், கட்டையிலோ அல்லது கருங்கல், செங்கலிலோ தெய்வத்தைக் காணமுடியாது. உள்ளத்திலே தான் தெய்வத்தைப் பார்க்கலாம். ஆகவே, இருதயமே முக்கியக்காரணம்! இருதய சுத்தமே காரியத்தில் வெற்றி அளிக்கவல்லது! மேலும், மந்திரம், தீர்த்தம், (புண்ணிய ஸ்தலம்), அந்தணன், தெய்வம், ஜோஸ்யன், வைத்தியன், ஆசாரியன்(குரு) இவர்களிடம் வைக்கும் நம்பிக்கையைப் பொறுத்தே அவரவர் பெறும் வெற்றி இருக்கிறது! ஒரே உறுதியுடன் இவன் காரியத்தை மேற்கொள்ளவில்லை. மனதைப் பலவிஷயங்களில் செலுத்திக்கொண்டே ஹோமத்தில் ஈடுபட்டதால் என் அருள் இவனுக்குக் கிட்டவில்லை."

இவ்வாறு தேவி சொல்லி முடித்ததும் விக்கிரமாதித்தன் அவளை வணங்கி மேலும் சொன்னான்; "தேவி! என் விஷயத்தில் நீ முழு திருப்தி அடைந்தே தோன்றியிருக்கிறாய். இன்னும் எனக்கு வேண்டிய வரத்தைக் கேட்குமாறு அனுமதிக்கிறாய். தேவி, இது உண்மையானால், இவ்வந்தணன் எக் காரணம் கொண்டு மிகுந்த கஷ்டத்துடன் இத்தனை காலம் ஹோமம் செய்து வந்தானோ அதைப் பூர்த்தி செய்ய வேண்டும். இதுவே நான் விரும்பும் வரம்."

அவன் வரத்தைக் கேட்ட தேவி, அளவில்லா ஆனந்தம் கொண்டவளாய், "விக்கிரமா! நீ பெரிய மரத்தைப் போன்ற

பரோபகாரி. உன்னைச் சேர்ந்தோர்களுடைய கஷ்டத்தைக் கண்டு மனமிரங்கி அவைகளைத் தாங்குகிறாய். அக் கஷ்டங்களிலிருந்து அவர்களை விடுவிக்க அல்லும் பகலும் பாடுபடுகிறாய். பெரிய மரங்கள் மற்றவர்களுக்கு நிழல் கொடுக்கின்றன; ஆனால் அவைகளோ கடும் வெய்யிலில் நிற்கின்றன. அவை மற்றவர்களுக்கே பழங்களைக் கொடுக்கின்றன. தங்களுக்காக அல்ல! இன்னும் கேள்: மற்றவர்களுக்காகவே ஆறுகள் ஓடுகின்றன. பசுக்கள் பால் கொடுக்கின்றன; மரங்கள் பழங்களை அளிக்கின்றன; அவ்விதமே உயர் குணமுள்ள பெரியோர்கள் தங்கள் சக்தியை மற்றவர்களுடைய நன்மைக்காகவே உபயோகிக்கின்றனர். இது உன் விஷயத்தில் வாஸ்தவமே! எப்படியெனில் உனக்கு வேண்டிய வரத்தைக் கேளென்று சொன்னபோது, தபஸ்வியின் கஷ்டத்தைக்கண்டு அவன் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்படி கேட்கிறாய். நீ விரும்பியபடியே அவனுக்கு வேண்டியவற்றைப் பூர்த்தி செய்கிறேன்."

இவ்வாறு திருப்தியடைந்த தேவி தெரிவித்து, விக்கிரமன் விரும்பியவாறு தபஸ்வியின் வேண்டுகோளைப் பூர்த்தி செய்தாள். விக்கிரமனும் மனமகிழ்ந்து தன் நகரம் திரும்பினான்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்றான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் 2-வது படிக்குக் காவலான பிரபாவதி என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

---

## 27-வது மாணிக்கவல்லிப் பதுமை சொல்லிய இரத்தின வியாபாரி கதை

---

மறுநாட் காலையில் போஜராஜன் சிம்மாசனமேற முயன்ற போது இருபத்தேழாவது படிக்குக் காவலான மாணிக்கவல்லி என்னும் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது:

• • •



ஒருநாள் விக்கிரமாதித்தனின் அரச சபைக்கு இரத்தின வியாபாரி ஒருவன் வந்தான். அரசனின் முன்பு விலையுயர்ந்த இரத்தினம் ஒன்றை எடுத்து வைத்தான். அதைக் கையிலெடுத்துப் பார்த்த அரசன் அளவற்ற மகிழ்ச்சி கொண்டான். அதைப் போன்ற இரத்தினத்தை அவன் இதற்கு முன்பு கண்டதில்லை. உடனே இரத்தினப் பரீக்ஷையில் தேர்ந்தவர்களை வரவழைத்தான்.

"அறிஞர்களே! இந்த இரத்தினத்தைப் பாருங்கள். இது உண்மையானதுதானா அல்லது போலியா என்பதைப் பரீக்ஷித்துச் சொல்லுங்கள். உண்மையான இரத்தினமானால் இதற்கு மதிப்பு என்ன?" என்று அவர்களிடம் கேட்டான். அவர்களும் இரத்தினத்தை வாங்கி பரிசோதனை செய்து பார்த்தார்கள். பிறகு அரசனிடம், "அரசே! இந்த இரத்தினம் விலை மதிப்பற்றது. இதற்கு என்ன மதிப்பிடுவதென்பதே யோசிக்க முடியாது" என்றனர். அரசன் வியாபாரியைப் பார்த்து "இதன் மதிப்பு என்ன?" என்று கேட்டான்.

"அரசே! இது விற்பதற்காகக் கொண்டுவரப்பட்டதல்ல. உங்களுக்குப் பரிசாகக் கொடுக்கவே வந்தேன்..."

"இதுபோன்று இன்னும் இரத்தினங்கள் இருக்கின்றனவா?"

"இங்கு கைவசம் கொண்டுவரவில்லை. ஊரிலே பத்து இரத்தினங்கள் இருக்கின்றன. உங்களுக்குத் தேவையென்றால் ஏதோ ஒரு மதிப்பு வைத்து எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

அரசனும் பரீக்ஷகர்களுடன் கலந்து ஆலோசித்து ஒரு இரத்தினத்திற்கு ஆறு கோடி பொன் என்று மதிப்பு போட்டான். அவ்விதமே வியாபாரிக்குப் பத்து இரத்தினங்களுக்கும் பணம் கொடுத்து, மேலும் தனக்கு இரத்தினம் பரிசளித்ததற்காக நிறையப் பொன்னும் மணியும் பரிசாகக் கொடுத்தான். நம்பிக்கைக்குப் பாத்திரமான ஊழியன் ஒருவனை அழைத்து, "இந்த வியாபாரியுடன் நீயும் புறப்பட்டுச் செல். இவனுடைய வீட்டிலிருந்து பத்து இரத்தினங்கள் எடுத்துக் கொடுப்பான்.

அவற்றுடன் எட்டு நாட்களுக்குள் நீ திரும்பி விட்டாயானால் உனக்கு அனேகப் பரிசுகளைக் கொடுப்பேன்" என்று சொன்னான்.

"அரசே, தங்கள் விருப்பப்படியே எட்டு தினங்களுக்குள் இரத்தினங்களுடன் வந்து சேருகிறேன். இல்லையேல் உங்கள் இஷ்டப்படி என்னைத் தண்டியுங்கள்" என்று சொல்லிவிட்டு அவனும் வியாபாரியுடன் புறப்பட்டுச் சென்றான்.

இரத்தின வியாபாரியின் ஊரை அடைந்து அவனிடமிருந்து பத்து இரத்தினங்களைப் பெற்றுக்கொண்டு உஜ்ஜயினி நகரத்துக்குத் திரும்பினான். ஊர் திரும்பும்போது எதிர்பாராதவிதமாகப் பெரு மழை பிடித்துக்கொண்டுவிட்டது. வானமே பொத்துக்கொண்டு ஊற்றுவது போல் மழை தாரை தாரையாகப் பெய்தது. எங்கு பார்த்தாலும் ஒரே வெள்ளக்காடு இருந்தும், ஓரிடத்திலும் அவன் தங்கவில்லை. பெரு மழையையும் பொருட்படுத்தாமல் புறப்பட்டு வந்தான்.

வழியிலேயே ஆறு ஒன்று குறுக்கிட்டது. மழையினால் ஆற்றின் இருகரையையும் தொட்டுக் கொண்டு வெள்ளம் சென்றது. சுழியிட்டுக்கொண்டு செல்லும் வேகத்தில் ஆற்றில் இறங்கிக் கடந்து செல்வது முடியாத காரியம். ஆகவே, அங்கிருந்த படகோட்டியைக் கூப்பிட்டான்.

"ஐயா, அவசர வேலை நிமித்தம் அக்கரைக்குப் போக வேண்டும். வெள்ளம் வடியும்வரை காத்திருப்பதென்பது முடியாது. தயவு செய்து ஓடத்தில் ஏற்றி அக்கரைக்குக் கொண்டு போய் விட்டுவிடு" என்றான்.

"வெள்ளம் கரைபுரண்டு ஓடுகையில் ஓடத்தைவிடுவது முடியாது" என்றான் படகோட்டி.

"அவ்விதம் சொல்லக்கூடாது. அவசரமான காரியம். கால தாமதமாகக் கூடாது."

"ஐயா, வெள்ளத்தின் வேகத்தைப் பார்? எவ்விதம் படகைக் கொண்டு செல்ல முடியும்? கரைபுரண்டு ஓடும் ஆற்றைக்கடக்க புத்திசாலி ஒருபோதும் முயற்சிக்கமாட்டான். இதை நீ அறியவில்லையா? பெரிய ஆற்றைக் கடக்காமலிருப்பது, பலவான்களிடத்தில் சண்டையைத் தவிர்ப்பது, பெருங் கூட்டத்தோடு விரோதம் கொள்ளாமலிருப்பது ஆகியவை மிகவும் நல்லது, என்பார்களே? தவிரவும், எந்தக் காரணத்தாலும், பெண்களுடைய நடத்தை, கரைபுரண்டு ஓடும் நதி, அரசனின் ஆதரவு, பாம்பின் நட்பு, வியாபாரியின் விசுவாசம் இவைகளில் நம்பிக்கை வைக்கக்கூடாது என்பதை

மறந்து விட்டாயா? என்றால் இந்த வெள்ளத்தில் படகைச் செலுத்த முடியாது" என்றான் அவன்.

"ஐயா, நீ சொல்வது உண்மையான வார்த்தையே. இருந்தாலும் என் விவகாரம் மிகவும் முக்கியமானது. நீ சொல்லும் இவ்விதியைத் தளர்த்த வேண்டிய சமயங்களும் உள்ளனவே. பொது விதிக்கு எப்போதுமே ஒரு விலக்கு (புறனடை) உண்டு. அந்தச் சமயங்களிலே விதியைக் காட்டிலும் விலக்குகளே (புறனடைகளே) முக்கியமாய் விளங்கும். எனவே, என்னுடைய விவகாரம் அதிமுக்கியத்துவம் வாய்ந்தது."

"அதுதான் என்ன?"

"ஐயா, அரசர் எனக்குக் கொடுத்த கெடுவான எட்டு நாள் தவணை நாளைக் காலையில் முடிந்துவிடுகிறது. அரசர் சார்பிலே நான் பத்து இரத்தினங்களைப் பெற்றுவருகிறேன். நாளைக் காலையில் அரசனை அடைந்து இரத்தினங்களைக் கொடுத்து விடவேண்டும். இல்லாவிட்டால் நான் ராஜ தண்டனைக்கு ஆளாக நேரிடும்."

"அப்படியா விஷயம்? ஒரு நிபந்தனை மீது படகு விடச் சம்மதிக்கிறேன். இப்போது ஓடம் விடுவதென்பது உயிரைப் பணயம் வைப்பது போன்றதே. நான் உயிரிழந்து விட்டேனானால் என் மனைவி மக்கள் போகும் கதி என்ன? ஆகவே, நீ கொண்டு செல்லும் பத்து இரத்தினங்களில் ஐந்து இரத்தினங்களை எனக்குக் கொடுத்துவிடு. இதற்குச் சம்மதமானால் ஓடம் விடுகிறேன்."

என்ன செய்வது? குறித்த கெடுவுக்குள் அவன் போய்ச் சேரவேண்டுமே! வேறு வழியின்றி ஐந்து இரத்தினங்களை ஓடக்காரனிடம் கொடுத்துவிட்டான். அவனும் படகை அவிழ்த்து அதில் ஏற்றி அக்கரை கொண்டு சேர்த்தான். கரையிலி றங்கியதும் அவன் எங்கும் தங்கவில்லை. ஓட்டமும் நடையுமாக உஜ்ஜயினியை அடைந்து அரசனிடம் சென்றான். ஐந்து இரத்தினங்களை அவனிடம் கொடுத்தான்.

"என்ன இது? உன்னைப் பத்து இரத்தினங்களை வாங்கி வரும்படி அனுப்பினேன். ஐந்து இரத்தினங்கள் எங்கே?" என்று விக்கிரமாதித்தன் கடுமையாகக் கேட்டான்.

"அரசே! உங்களிடமிருந்து புறப்பட்ட நான் நேராக வியாபாரியின் ஊரை அடைந்தேன். அவனிடமிருந்து பத்து

இரத்தினங்களைப் பெற்றுத் திரும்பினேன். வழியிலே மழையினுல் ஆற்றிலே வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. படகோட்டி படகு செலுத்த மறுத்துவிட்டான். வெள்ளம் வடிந்து வருவதென்பதற்கு நீண்டநாள் பிடிக்கலாம். குறிப்பிட்ட கெடு தீர்ந்துவிடுவதற்குள் வந்துவிட வேண்டுமென்று ஓடக்காரனுக்கு ஐந்து இரத்தினங்களைக் கொடுத்துவிட்டேன். கொடுத்த வாக்கைக் காப்பாற்றாவிட்டால் உங்கள் உத்தரவை உதாசீனப்படுத்தியவனுகை ஆகிவிடுவேன். அரசரின் ஆணைகளை மீறுவது, அறிஞர்களுக்குரிய கௌரவத்தை அளிக்காமலிருப்பது, பெண்களைத் தனியே தூங்கவிடுவது ஆகியவை ஆயுதமின்றியே கொன்று விடுவதாகும்! ஆதலால் நான் ஓடக்காரன் கேட்ட ஐந்து இரத்தினங்களையும் கொடுத்துவிட்டேன்" என்று பணிவுடன் தெரிவித்தான். அவன் வார்த்தைகளைக் கேட்டு கடுங்கோபம் கொள்வதற்கு மாருக விக்கிரமாதித்தன் மிகுந்த சந்தோஷம் கொண்டவனுய், மீதமிருந்த ஐந்து இரத்தினங்களையும் அவனுக்கே கொடுத்துவிட்டான்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது. போஜராஜனும் திரும்பிச் சென்ருன்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் ஐந்தாவது படிக்குக் காவலான அனங்கஜயா என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

---

## 28-வது மனுநீதிவல்லிப் பதுமை சொல்லிய அபகாரத்திற்கு உபகாரம் செய்த கதை

---

மறுநாட்காலை போஜராஜன் மறுபடி சிம்மாசனத்தின் மீது ஏறி அமர முயன்றபோது இருபத்தெட்டாம்படிக்குக் காவலாக இருந்த மனுநீதிவல்லிப்பதுமை புதிய கதை ஒன்று சொல்லத் தொடங்கியது.

• • •

விக்கிரமாதித்தன் சகல சௌபாக்கியங்களுடன் நாட்டைப் பரிபாலித்து வந்தான். அந்த நாளையிலே உஜ்ஜயினி பட்டணத்தில் அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் எல்லா சாஸ்திரங்களையும் வேதங்களையும் பரிபூரணமாகக் கற்றுத் தேர்ந்தவன். அவனிடம் எல்லா நற்குணங்களும் குடி



கொண்டிருந்தன. ஆனால், அவனுக்குக் குலத்தை விளங்க வைக்க குழந்தை மட்டும் பிறக்கவில்லை. ஒரு நாள் அவன் மனைவி வருத்தத்தோடு சொன்னாள்: "பிரபோ! பிள்ளையில்லாதவர்கள் நற்கதி அடைய முடியாது என்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். பிள்ளையில்லாதவன் நற்கதி அடைய மாட்டான். அவனுக்குச் சுவர்க்கம் இல்லவே இல்லை. அதனால் பிள்ளையின் முகத்தைப் பார்த்த பிறகே ஒருவன் துறவறம் மேற்கொள்ளுவது முறை. சந்திரன் இரவில் வெளிச்சம் கொடுக்கிறான். சூரியன் பகலில் பிரகாசத்தைக் கொடுக்கிறான். மூவுலகங்களிலும் மதமே பிரகாசமானது. அவ்விதமே, குலத்தில் நல்ல பிள்ளையே ஒளி பொருந்தியவன். இன்னும், யானைக்கு மதம் பிரசித்தமானது; தண்ணீருக்குத் தாமரை: இரவிலே சந்திரன்; பெண்ணுக்கோ அவர்களுடைய சீலம்; (நன்னடத்தை): குதிரைக்கு அதன் வேகம்; வீட்டிற்கு வருடம் பூராவும் தினசரி விழா (நித்தியோற்சவம்); பேச்சுக்கு இலக்கணம்; நதிகளுக்கோ ஜோடி அன்னப் பறவைகள்; சபைகளுக்கு அறிவாளிகள்; குலத்திற்கு நல்ல மகன்; பூமிக்கு ஒரு அரசன்; மூவுலகுக்கும் சூரியன். இவ்விதம் பெரியோர்களால் நிச்சயிக்கப் பட்டிருக்கிறதைத் தாங்கள் அறியாதவரா? நமக்குச் சந்தான பாக்கியமே கிடையாமல் போய்விடுமா?" என்று கேட்டாள்.

அதற்கு அந்தணன் சொன்னான்: "அன்பே, நீ சொல்லியது அனைத்தும் உண்மையே. ஆனால், பெரும் முயற்சியால் செல்வத்தை அடைவதும் உபாத்தியாயரிடம் வணக்கத்தோடு நடந்து கொள்ளுவதன் மூலம் அறிவை அடைவதும் போலப் புகழும் சந்தான பாக்கியமும் அடைய முடியாது. பரமேசுவரனை பூசித்து அவன் அருளால் தான் அடைய முடியும்! நிரந்தரமான சுகத்தை அடையவேண்டும் என்ற ஆசை ஒருவன் உள்ளத்தில் இருக்குமானால், உறுதியான சித்தத்துடன் பவானியின் நாயகனை பரமசிவனை தினந்தோறும் பூசித்து வரவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அப்போதுதான் நம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியும்."

"சுவாமி, தாங்களோ சகல சாஸ்திரங்களையும் அறிந்தவர். நீங்கள் அறியாத விஷயங்கள் கிடையாது. ஆகவே, பகவானின் கடாக்ஷத்தைப் பெற முறைப்படி விரதங்களை அனுஷ்டிக்க ஆரம்பியுங்கள்" என்றாள் பத்தினி.

"நீ சொல்வது சரிதான். உன் யோசனையை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். சின்னஞ்சிறு குழந்தையேயானாலும், அதனிடமிருந்து நியாய வார்த்தைகள் வந்தால் ஏற்றுக் கொள்ளவே வேண்டும். நேர்மையாக நடப்பவனை வயது முதிர்ந்த கிழவனிடமிருந்து வந்தாலும் கெடுதலான யோசனைகளை ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பார்கள்!" என்றான் அந்தணன்.

அவ்விதமே அவனும் பரமேசுவரனின் அருளைப் பெறுவதற்காக ருத்திர பூஜையை மேற்கொண்டான். ஒருநாள் இரவு பகவான் அவனுடைய கனவில் தோன்றினார். சடை முடியும் பிறையும் தரித்து இடது துடையில் பார்வதியுடன் ரிஷபத்தின்மீது ஆரோகணித்தவராய் அவனை நோக்கிச் சொன்னார்: "அந்தணனே, பகலும் இரவும் கூடும் சந்தியா காலத்தில் பிரதோஷ விரதத்தைத் தவறாது செய்து வா. அதன் மூலம் உனக்கு ஒரு மகன் பிறப்பான்."

காலையில் எழுந்ததும் இரவிலே தான் கண்ட கனவைப் பற்றி அவன் முதியவர்களிடம் தெரிவித்தான். அதைக் கேட்டு அவர்கள், "இது அவசியம் பலிதமாகும். ஏனெனில் தெய்வம், அந்தணன், ஆசாரியன், பசு, மூதாதையோர் மற்றும் லிங்க உருவம் தரித்தவர்கள் ஆகியோர் கனவிலே தோன்றினால் அவர்கள் சொல்லிய பிரகாரமே ஒருவன் நடந்து கொள்ள வேண்டும். இவ்வாறு கனவுகளைப் பற்றிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, நீ அவ்விதமே செய்து மகனை அடைந்து சுகமாக வாழ்ந்து வா" என்று தெரிவித்தனர். அவனும் அவர்கள் சொன்னவற்றை ஏற்றுக்கொண்டு, மார்கழி மாதத்தின் வளர் பிறையில் திரயோதசியான சனிக்கிழமை அன்று பிரதோஷ விரதத்தை அனுஷ்டித்தான். அவனுடைய விரதத்தினால் ஈசுவரனும் மகிழ்ச்சியடைந்தார். அவனுக்குப் பிரசன்னமாகி பிள்ளை வரம் அருளினார்.

சிறிது காலத்துக்கெல்லாம் அவன் மனைவி கருத்தரித்து அழகிய ஆண் மகனைப் பெற்றெடுத்தாள். அந்தணனும் அளவில்லா மகிழ்ச்சியடைந்து பன்னிரெண்டாவது நாளன்று குழந்தைக்கு தேவதத்தன் எனப் பெயரிட்டான். பிறகு அன்னப் பிராசனம் முதல் உபநயனம் வரை அந்தந்தக் காலங்களில்

விதிப்படி காரியங்களை விடாமல் செய்து வந்தான். உபநயனம் ஆனபிறகு அவனுக்கு வேதங்கள், சாஸ்திரங்கள் ஆகியவற்றைச் சொல்லிக் கொடுத்தான். அவனுடைய பதினாறாவது வயதில் நல்ல குடும்பத்துப் பெண்ணைப் பார்த்து மணம் செய்து வைத்தான். பிறகு அவன் தீர்த்த யாத்திரை செய்ய விரும்பி, மகனுக்கு அனேக புத்திமதிகளைச் சொல்லிப் புறப்பட்டான். புறப்படும்போது, "குழந்தாய், இப்போது இகத்திலும் பரத்திலும் நன்மை பயக்கும் உபதேசத்தைச் சொல்லப் போகிறேன்" என்று அழைத்தான்.

தேவதத்தனும் தகப்பனின் அருகில் வந்து நின்றான். "குழந்தாய், நீ எந்தக் கஷ்டம் வந்த போதிலும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட வழியே நடந்து வா. மற்றவர்களிடம் விவாதம் வேண்டாம். எல்லாப் பிராணிகளிடத்தும் கருணை கொள். தெய்வ வழிப்பாட்டை விட்டுவிடாதே. அயலார் மனைவிகளை கண்ணெடுத்துப் பார்க்காதே. பலவான்களிடத்தில் விரோதம் கூடாது. நுண்ணறிவு வாய்ந்தவர்களைக் கௌரவித்து நடத்து. சூழ்நிலைக்குத் தகுந்தபடி உன் பேச்சு இருக்க வேண்டும். உன்னிடம் இருக்கும் பணத்திற்கு ஏற்ப செலவழி. நல்ல குணமுள்ளவர்களுடன் பழகு. துர்த்தர்களை விலக்கி விடு. பெண்களிடம் இரகசியத்தைச் சொல்லாதே" இவ்விதம் திரும்பத் திரும்ப அந்தப் பிராமணன் தன் மகனுக்கு உபதேசம் செய்து விட்டுக் காசி யாத்திரை சென்றான். தேவதத்தன் தகப்பனாரின் உபதேசங்களை மறவாது அதன்படி நகரத்திலேயே வாழ்ந்து வந்தான்.

• • •

ஒருநாள் தேவதத்தன் ஹோமத்திற்காக ஸமித்துகள் (சுள்ளிகள்) கொண்டுவர காட்டிற்குச் சென்றான். அவற்றைப் பொறுக்கிக் கொண்டு வீடு திரும்புகையில் விக்கிரமாதித்தனைச் சந்திக்க நேர்ந்தது.

காட்டிற்கு வேட்டையாட வந்த அரசன் காட்டுப்பன்றி ஒன்றைத் துரத்திக் கொண்டு ஓடுகையில் வழி தவறிவிட்டான். நகரத்துக்குத் திரும்பும் வழி தெரியாது அலைந்து கொண்டிருக்கையில் தேவதத்தனைக் கண்டான்.

அவனைக் கண்டதும் அருகே அழைத்து, "ஐயா, காட்டிற்கு வேட்டையாட வந்த நான் காட்டுப்பன்றியைத் துரத்திக் கொண்டு ஓடுகையில் பரிவாரங்களிடமிருந்து பிரிந்து விட்டேன். நகரத்துக்குத் திரும்பும் வழி தெரியவில்லை. தயவு செய்து அவ்வழியைக் காட்டுகிறீர்களா?" என்று கேட்டான்.

"நானும் நகரத்துக்குத்தான் திரும்பிக் கொண்டிருக்கிறேன். அரசே! என்னோடு வாருங்கள். வழி காட்டுகிறேன்" என்று புறப்பட்டான் தேவதத்தன்.

காட்டை விட்டு நகரத்தை அடைந்ததும் அரசன் தேவதத்தனை அப்படியே செல்ல அனுமதிக்கவில்லை. அரண்மனைக்கு அழைத்துச் சென்று அவனுக்கு அனேகப் பொன்னும் மணியும் கொடுத்து ஒரு சிறு உத்தியோகமும் (பதவியும்) அளித்து கௌரவித்தான்.

இதற்குப் பிறகு பல நாட்கள் சென்று விட்டன. ஒரு சமயம் அரசன், "காட்டிலே திரும்பும் வழியறியாமல் திண்டாடிய எனக்குப் பெரும் உபகாரம் செய்த தேவதத்தனுக்கு என்ன கைமாறு செய்யப் போகிறேன்?" என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான்.

இதை அருகிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தவனோ, "இதுதான் நற்குணமுடையவர்களுக்கு அடையாளம். தனக்குச் செய்த உதவியை அரசனால் மறக்க முடியவில்லை. தென்னை மரம் பிள்ளைப் பருவத்தில் தனக்கு ஊற்றிய தண்ணீரை மறவாமல் அது தன் உயிர் உள்ள வரையில் அமிர்தம் போல இனிமையான இளநீரைத் தாங்க முடியாத பாரத்துடன் கூடிய குலைகள் மூலமாகக் கொடுக்கிறது. அது போல நல்லவர்கள் தங்களுக்கு ஒருவன் செய்யும் நன்மையை மறக்க மாட்டார்கள். இவ்விதம் பெரியோர்கள் சொல்வதற்கு இது ஒரு எடுத்துக் காட்டு" என்று வியந்தான்.

இதைக் கேள்விப்பட்ட தேவதத்தன் நினைத்தான். "அரசன் நான் செய்த உபகாரத்தை மறக்கவில்லை. அதற்குக் கைமாறு செய்யவில்லையே என்று ஏங்குகிறான். இது எவ்வளவு தூரம் உண்மை என்பதைப் பரிசோதித்து அறியவேண்டும்."

இவ்வாறு நினைத்த தேவதத்தன் ஒருநாள் இளவரசனை ஒருவருக்கும் தெரியாமல் அரண்மனையிலிருந்து அழைத்து வந்து விட்டான். அவனை யாருக்கும் தெரியாமல் தன் வீட்டிலேயே ஒளித்து வைத்து விட்டான். பிறகு இளவரசனின் ஆபரணங்களில் ஒன்றை வேலைக்காரனிடம் கொடுத்து, நகரின் மத்தியிலே உள்ள கடைத் தெருவிற்குக் கொண்டு போய் விற்று விட்டு வருமாறு அனுப்பினான்.

இதற்கிடையில் அரண்மனையில் பெரிய களேபரம் நிகழ்ந்து விட்டது. இளவரசனைக் காணாமல் எல்லோரும் பரிதவித்தனர். மூலை முடுக்குகளிலெல்லாம் ஆட்கள் தேடினர். "யாரோ திருடன்

இளவரசனைக் கொலை செய்து ஆபரணங்களைத் திருடிச் சென்று விட்டான்" என்ற செய்தி நகரம் முழுவதும் பரவியது. மகனைக் காணமல் விக்கிரமாதித்தன் துடித்தான். நாலு பக்கங்களிலும் ஆட்கள் பறந்தனர்.

அவர்களில் சிலர் ஜன சந்தடி நிறைந்த கடைத் தெருவில் வரும் போது, கையில் இளவரசனுடைய ஆபரணத்துடன் தேவதத்தன் அனுப்பி வைத்த வேலைக்காரன் வந்து கொண்டிருந்ததைக் கண்டனர். இளவரசனின் ஆபரணங்களில் அது ஒன்று என்பதை உணர்ந்த அவர்கள் அவனைப் பிடித்து அரசனிடம் கொண்டு போய் நிறுத்தினர்.

"அடே துர்த்தா, இந்த ஆபரணம் உனக்கு எங்கு கிடைத்தது?" என்று அரசன் கடுமையாகக் கேட்டான்.

"தேவதத்தன் வீட்டில் வேலை செய்கிறேன். அவர் இதைக் கொடுத்து விற்றுவிட்டு வருமாறு அனுப்பினர். இதைத் தவிர வேறு எதுவும் எனக்குத் தெரியாது" என்றான் வேலைக்காரன்.

உடனே தேவதத்தனை அழைத்து வருமாறு ஆட்கள் அனுப்பப்பட்டனர். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் தேவதத்தன் அரசன் முன்னிலையில் அழைத்து வரப்பட்டான்.

"தேவதத்தா, உனக்கு இவ்வாபரணத்தை யார் கொடுத்தார்கள்?" என்று மகனை இழந்து பரிதவிக்கும் விக்கிர மாதித்தன் கேட்டான்.

"யாரும் கொடுக்கவில்லை, அரசே!"

"என்ன? பின் உனக்கு எப்படிக் கிடைத்தது?"

"பொருளாசையினால் இளவரசனைக் கடத்திச் சென்று, கொன்று, நகைகளை அபகரித்து விட்டேன். அவைகளுள் ஒன்றையே வேலைக்காரன் வசம் கொடுத்தனுப்பினேன். என்னுடைய கர்மவசத்தால் இவ்விதம் நடந்து விட்டது. உங்களுக்கு எது உசிதம் என்று படுகிறதோ அதன்படி செய்யுங்கள்" என்று தலைகுனிந்து நின்றான் தேவதத்தன்.

தேவதத்தனின் வார்த்தைகளைக் கேட்ட அரசன் ஸ்தம்பித்துப் போய் விட்டான். சபையிலே இருந்த ஒருவன், "இந்த அந்தணனே எல்லா சாஸ்திரங்களையும் கற்றவன். தர்மத்தை நன்கு அறிந்தவன். அரசகுமாரனைக் கொன்று ஆபரணத்தைத் திருட எப்படித்தான் புத்தி போயிற்றோ?" என்றான்.



"இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது? வினைப்பயன் அவனை இம்மாதிரி செய்யத் தூண்டுகிறது. வினைப்பயனால் தூண்டப்பட்டவர்கள் அறிஞர்களாயினும் என்ன செய்ய முடியும்? மனிதர்களின் சித்தம் அவரவர் வினைப்பயனுக்கேற்ப அமைகிறது என்பதை மறந்து விட்டாயா?" என்று மற்றொருவன் கேட்டான்.

பிறகு சபையிலிருந்தவர்கள் விக்கிரமாதித்தனிடம் சொன்னார்கள்: "அரசே! இவனே குழந்தையைக் கொன்ற கொலையாளி. மேலும் திருடனும் கூட. ஆகவே. இவனைக் கழுவேற்றுவது தான் சரியான தண்டனை அளிப்பதாகும்" என்றனர்.

அப்போது விக்கிரமாதித்தன் தலை நிமிர்ந்து சொன்னான்: "மந்திரிகளே! சபையோர்களே! இவனே என்னை அண்டியவன். (ஆச்ரயித்தவன்.) இவன் எனக்கு உபகாரி கூட. ஏனென்றால். ஒருசமயம் நகருக்குத் திரும்பும் வழி தெரியாமல் காட்டிலே திரியும்போது இவனே எனக்கு வழி காட்டியவன். இவ்விதம் என்னைச் சார்ந்திருக்கும் ஒருவனுடைய நற்குணங்களையோ இழி குணங்களையோ கவனிக்கக் கூடாது. ஏனெனில் பெரியோர் அவ்விதம் செய்ய மாட்டார்கள். சந்திரனே தேய்ந்து போகும் இயற்கை வாய்ந்தவன்; அவன் உடல் கிற்றுபோல வளைந்து குறைகிறது; தன் உடலில் களங்கம் உடையவன்; சூரியன் கஷ்டத்தில் ஆழ்ந்திருக்கும்போது (மறைந்து இருள் அடையம்

போது) வெளிப்பட்டுச் சந்தோஷப்படுகிறான். இருந்தும் சிவன் அவனைத் தன் தலையில் அணிந்து கொண்டிருக்கிறான். ஒருவன் தங்கள் கருணையை எதிர்பார்த்து நிற்கும் சமயத்தில் அவனுடைய நற்குணங்களையோ, இழி குணங்களையோ பெரியோர்கள் கருதமாட்டார்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். இன்னும் நன்றி செய்தவர்களுக்கே நன்றி செய்வதில் என்ன இருக்கிறது? அபசாரம் செய்தவர்களுக்கு உதவுகிறவன்தான் உயர்ந்தவன் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்'' இவ்விதம் விக்கிரமாதித்தன் அவர்களைப் பார்த்துச் சொல்லிவிட்டுத் தேவதத்தனிடம் திரும்பினான்:

“தேவதத்தா! உன் உள்ளத்தில் எது இருந்தாலும் சரி. நீ பயப்படாதே! என் மகன் உன்னால் கொலையுண்டு இறக்கவில்லை. அவன் கர்மவினை உன் மூலம் நிறைவேற்றப்பட்டது: இதில் நீ என்ன தவறு செய்துவிட்டாய்? ஒருவராலும் கர்மவினைகளை எதிர்க்க முடியாதே! காதல் தெய்வமான மன்மதனின் தாய் லக்ஷ்மி; தகப்பன் மகாவிஷ்ணு. அவனே அனேக பயங்கர ஆயுதங்களுடன் தன்னைக் காத்துக் கொண்டிருந்தான். அப்படியிருந்தும் அவனைப் பரமசிவன் எரித்துவிடவில்லையா? இயற்கையை யாரால் எதிர்க்கமுடியும்? மேலும், காட்டிலே திண்டாடும் என்னை, அரண்மனைவரை கொண்டு வந்து விட்டாய். எனக்குப் பெருத்த உதவி செய்திருக்கிறாய். ஆயிரம் பிரதியுபகாரம் நான் உனக்குச் செய்தாலும் அதற்கு ஈடு ஆகாது. ஆகவே, உன் உயிருக்கு ஒரு கெடுதலும் நான் செய்ய மாட்டேன்” என்று அபயம் கொடுத்தான். தவிர, அனேக திரவியங்களும் கொடுத்து அவனைப் போகச் செய்தான்.

வீடு திரும்பிய தேவதத்தன் இளவரசனை அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்தான். விக்கிரமாதித்தன் முன்னிலையில் நிறுத்தி, “அரசே! இதோ உமது குமாரன்! பெற்றுக்கொள்ளும்!” என்றான்.

ஆச்சரியத்தால் கற்சிலை போன்று சமைந்து போன அரசன், “தேவதத்தா, இதென்ன?.... எனக்கு ஒன்றும் புரியவில்லையே!” என்று கேட்டான்.

“அரசே! தாங்கள் ராஜ சபையில் அனேக தடவைகள் ”தேவதத்தன் எனக்குச் செய்த உபகாரத்துக்குப் பிரதி என்ன செய்யப் போகிறேன்?” என்று சொன்னதாகக் கேள்விப்பட்டேன். உங்கள் உள்ளத்தை அறியவே, நான் அரசகுமாரனை ஒருவருக்கும் தெரியாமல் அழைத்துச் சென்று இந்நாடகம் ஆடினேன்” என்றான்.

இதைக்கேட்ட அரசன் பெரிதும் உவகை கொண்டான். "தேவதத்தா, எவனொருவன் தனக்கு ஒருவன் செய்த உபகாரத்தை மறந்து விடுகிறானோ அவன் கிழானவனே!"

"அரசே, ஒரு காரணமுமின்றி தாங்கள் இவ்வுலகத்திலுள்ள அனைவரிடமும் அன்பு பூண்டிருக்கிறீர்கள். ஆகவே, நேர்மையான மனிதன் இப்பூவுலகில் உங்களைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது. ஒரு காரணமுமின்றி பிறருக்கு உதவி செய்ய வாழ்பவர்களே எப்போதும் நல்லவர்கள் (சுஜனர்); தன்யர்கள் (சந்தோஷம் அடைபவர்கள்); புத்திமான்கள்; தருமவான்கள் (சுகிருதர்கள்) என்று சொல்லப்படுவதுண்டு."

இவ்விதம் தேவதத்தன் விக்கிரமாதித்தனைப் பலவாறாகப் புகழ்ந்தான்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்து விட்டது!

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் நான்காவது படிக்குக் காவலான இந்திரசேனை என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

---

## 29-வது சம்பிரதாயவல்லிப் பதுமை சொல்லிய சித்திரரேகையின் கதையும் நான்கு ரத்தினங்களின் கதையும்

---

மறுநாட்காலையில் போஜராஜன் மறுபடி சிம்மாசனத்தில் ஏறி அமர முயன்றபோது இருபத்தொன்பதாம் படிக்குக் காவலாக இருந்த சம்பிரதாயவல்லிப் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.

• • •

இப்பூவுலகில் தனக்கு நிகர் ஒருவருமில்லை என்று புகழும் படியாக விக்கிரமாதித்தன் அரசு புரிந்து வந்தான். அக்காலத்தில், ஒருவனைக் கண்டதும், "இவன் நம்மைச் சேர்ந்தவனா, அல்லது பிறரைச் சேர்ந்தவனா?" என்னும் கேள்வியே அரசன் உள்ளத்தில் தோன்றியது இல்லை. உலகம் முழுமையும் தன்னைச் சேர்ந்ததாகப் பாவித்து நடக்கும்போது, அவன் எதிரியேயாயினும் நம்மில் ஒருவனே என்ற எண்ணம் தான் தோன்றும்.



"இவன் நம்மைச் சேர்ந்தவனு, அயலானு?" என்ற கேள்வி தோன்றுவது ஒருவனுடைய குறுகிய மனேபாவத்தையே எடுத்துக் காட்டுகிறது. உதவிக் குணமுள்ளவர்கள் வையகம் முழுமையும் தங்கள் குடும்பமாகவே பாவிப்பார்கள். மேலும், தைரியம், சாகசச் செயல்கள், ஆண்மை இம் மூன்றிலும் அவனுக்குச் சமம் எவருமில்லை. ஆகவே, இந்திரனும் மற்ற தேவர்களும் விக்கிரமாதித்தனுக்குத் தங்களாலான உதவிகளைச் செய்து வந்தனர். சாகசச் செயல்கள், தைரியம், ஆண்மை, புத்தி, சக்தி, பராக்கிரமம், இந்த ஆறு குணங்களையும் உடையவனைக் கண்டு தேவர்களே பயப்படுவார்கள் அன்றே? யாசிப்பவர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் அரசனுக்குத் தெய்வம் அவன் விரும்பும் பலன்களைக் கொடுக்கும்!

மனிதன் ஓர் உறுதியான தீர்மானத்தைக் கொண்டானுகில் தெய்வம் அவனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறது. நெய்பவனுக்கு மகாவிஷ்ணு, கருடன் சக்கரம் இரண்டுடனும் வந்து உதவவில்லையா?

## நெசவாளிக்கு விஷ்ணு உதவிய கதை

கௌட தேசத்திலே புண்டரவர்த்தனம் என்று ஒரு நகரம் இருந்தது. அந்நகரிலே தச்சன் ஒருவனும், நெசவாளி ஒருவனும் மிகவும் நெருங்கிய நண்பர்களாய் வசித்து வந்தார்கள். அவர்கள் இருவரும் அவரவர் தொழிலிலே திறமை வாய்ந்தவர்கள். அதனுல் நல்ல வருமானமும் கிடைத்து வந்தது. அவர்கள் வரவு செலவைக் கணக்குப் பார்க்காமல் நன்ருக உண்டு அலங்கரித்து உடுத்து வாழ்ந்து வந்தார்கள். ஊரிலே எந்த இடத்திலே உல்லாசம், கேளிக்கை முதலியவை உண்டோ அந்த இடத்திலே அவர்களைக் காணலாம்.

ஒருநாள் ஏதோ ஓர் உற்சவத்தின்போது நகர மக்கள் அனைவரும் திரண்டிருந்தனர். நண்பர்கள் இருவரும் தங்களை நன்றாக அலங்கரித்துக்கொண்டு அங்கு போயிருந்தார்கள். அந்தக் கூட்டத்திற்குச் சித்திரரேகை போன்ற எழிலுருவமாய் அரசகுமாரியும் வந்திருந்தாள். அவளைப் பார்த்த எல்லோரும் அவளுடைய அழகைக் கண்டு மயங்கினார்கள். நெசவாளியால் அவள்மீது வைத்த பார்வையைத் திருப்ப முடியவில்லை. அவள் அழகு அவனை அப்படி ஆட்கொண்டுவிட்டது. வெகுதூரம் சிரமப்பட்டே அவன் அந்த இடத்தை விட்டு நகர்ந்தான்.

வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த பிறகும் அவனுக்கு அழகு மயக்கம் தீரவில்லை. இராஜகுமாரியின் தோற்றமே அவன் கண் எதிரில் வந்து நின்றது. தூக்கம் பிடிக்கவில்லை. மனது எதிலும் நிலை கொள்ளாமல் தவித்தது. படுக்கையில் நிலை குலைந்து அவன் கிடந்து புரண்டான். இரவு ஒரு வழியாகக் கழிந்தது. மறுநாள் வழக்கம் போல் தச்சன் தன் நண்பனைப் பார்க்க வந்தான். கண்களில் நீர்வழியக் கிடந்த தன் நண்பனைக் கண்டு, "நண்பா, ஏனிப்படி வருந்துகிறாய்? உன் உள்ளத்தில் சோகத்தையுண்டாக்கிய விஷயம் என்ன?" என்று கேட்டான். அவன் கேட்டதற்கு நெசவாளி ஒன்றும் பதில் கொடுக்கவில்லை. பல தடவை அவன் கேட்டும் நெசவாளி வாயைத் திறக்கவில்லை. கடைசியாக, "நண்பா, உன் மன வருத்தத்தின் காரணம் எனக்குத் தெரிந்துவிட்டது. இது காதல் நோய்தான்" என்றான் தச்சன்.

தச்சன் இவ்விதம் விஷயத்தை அறிந்து சொன்னவுடன், நெசவாளி எழுந்து உட்கார்ந்தான். "நண்பா! நேற்று விழாவுக்கு வந்திருந்த அரசகுமாரியைப் பார்த்ததிலிருந்து அவள் நினைவே என்னை வாட்டுகிறது. மனம் எதிலும் செல்ல மாட்டேனென்கிறது. ஆனால் அவளோ ஆண்டாளைப் போல மகாவிஷ்ணுவையே மணவாளனாக அடைவதென விரதம் பூண்டிருக்கிறாள். மகாவிஷ்ணுவைத் தவிர இந்தப் பூலோகத்து ஆடவர் எவரையும் ஏறிட்டுப் பார்க்கமாட்டாள்! அவளை அடையாவிட்டால் நான் உயிர் தரிப்பது சந்தேகமே!" என்று கண்ணீர் உகுத்துச் சொன்னான். நண்பனுடைய ஏக்கத்தைக் கண்ட தச்சன், "பயப்படாதே, நண்பா, உன் ஆசையை நிறைவேற்றி வைக்க நான் ஏதாவது உபாயம் செய்கிறேன்" என்று தைரியம் கூறினான். அதைக் கேட்டு நெசவாளியும் தைரியம் கொண்டவனாய் எழுந்து சென்றான்.

மறுநாள் தச்சன் கருடன் போலச் செய்த பொறி ஒன்றைக் கொணர்ந்து தன் நண்பனிடம் கொடுத்தான். அது பார்வைக்கு

உண்மையான கருடன் போலவே வர்ணம் தீட்டப் பெற்றிருந்தது. அதில் விஷ்ணு ஏறி உட்காருவதுபோல் அமர்ந்து கொண்டு ஒரு விசையை முடுக்கினால் அது ஆகாயத்தில் பறந்து செல்லும். இஷ்டமானபடி அதன்மீது ஏறிப் பிரயாணம் செய்யலாம். நினைக்கும் இடத்தில் கீழே இறங்கவும் அதில் விசைகள் வைக்கப்பட்டிருந்தன.

"நண்பா, எல்லோரும் தூங்கிய பிறகு, இன்றிரவே நீ விஷ்ணுவைப்போல வேஷம் தரித்துக் கொண்டு இந்தக் கருடன் மீது ஏறிப் பறந்து செல், நான் எல்லா விவரங்களையும் விசாரித்து வந்துள்ளேன். அரண்மனை மேல் மாடத்தில் அரச குமாரி மட்டும் படுத்திருப்பாள்."



இவ்விதம் தச்சன் அவனுக்கு வழி சொல்லிக் கொடுத்து விட்டுச் சென்றான். பகல் பொழுது கழிந்து இரவு எப்போது வரும் என்று தவித்தான் நெசவாளி. சூரியன் அஸ்தமித்ததும் குளித்துத் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டான். நண்பன் தெரிவித்த பிரகாரமே கருடன் மீது ஏறி ஆகாயத்திலே கிளம்பினான்.

அரண்மனை மேன்மாடத்தில் அரசகுமாரி மட்டும் தனியாகப் படுத்துக் கொண்டிருந்தாள். சந்திரன் பால்போலக் காய்ந்தது. அந்த நிலவிலே அவள் தூக்கம் பிடிக்காமல் வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது கருடவாகனத்தின்மீது

அமர்ந்தவராய் மகாவிஷ்ணு அரண்மனை மேல் மாடத்தில் இறங்குவதுபோல அவளுக்குத் தோன்றியது. அவ்விதம் வந்து இறங்கியவன் வேஷம்போட்ட நெசவாளிதான். அவனை மகாவிஷ்ணுவென்றே நம்பிவிட்ட அரசகுமாரி, ஓடிச்சென்று வணங்கினாள். "எம்பெருமானே, தங்கள் தரிசனத்தால் பாக்கியம் பெற்றேன்" என்று பிரார்த்தித்தாள்.

நெசவாளியும் மதுரமான இனிய குரலில், "பெண்ணே! உன் பொருட்டுதான் நாம் பூலோகத்துக்கு வந்தோம்" என்று கம்பீரமாகப் பதில் அளித்தான்.

இதைக்கேட்டு அரசகுமாரி மிகவும் மயங்கிப் போய்விட்டாள். நெசவாளி மறுபடியும் அவளைப் பார்த்து, "முற்பிறப்பில் நீ நம் தேவி! ஒரு சாபத்தால் பூமியில் பெண்ணாய்ப் பிறந்தாய். இதுகாறும் நாமே உன்னைக் காப்பாற்றினோம். இப்போது உன்னைக் காந்தர்வ முறையில் விவாகம் செய்து கொள்ள வந்தோம்" என்றான்.

அரசகுமாரி அவன் வார்த்தைகளை உண்மையென்றே நம்பிவிட்டாள். நெசவாளியும் நல்ல அழகன். ஆகவே சந்தேகம் தோன்ற இடமில்லாமல் போய்விட்டது. அவ்விதமே இருவரும் காந்தர்வ முறையில் மணந்து கொண்டனர்.

தினந்தோறும் அவன் இரவு நேரத்தில் கருடன் மீது ஏறி இராஜகுமாரியின் அரண்மனை மேன்மாடத்தில் வந்து இறங்கி, இரவு முழுவதும் அவளுடன் தங்கி இருந்துவிட்டு, விடியற்காலையில் புறப்பட்டு போய்விடுவான்.

இவ்விதம் சிறிது காலம் சென்றது. அரசகுமாரியின் உடல்நிலை மாறி வந்தது. அதைக் கண்ணுற்ற அரண்மனை வேலைக்காரர்களுக்கு அரசகுமாரி கன்னிப் பெண்ணாக இல்லையென்றும், யாரோ ஒரு ஆடவனுடன் இரகசியமாக இன்பம் நுகர்ந்து வந்தாள் என்றும் சந்தேகம் தோன்றியது. அதைக் கண்டு பேசாமலிருந்துவிட அவர்களால் முடியவில்லை. நாளை விஷயம் வெளிப்பட்டால் அவர்கள் உயிருக்கு ஆபத்து ஏற்படும்.

ஆகவே, அவர்கள் உயிருக்குப் பயந்து ஓடிப்போய் அரசனிடம் செய்தியை அறிவித்தார்கள். தாங்கள் எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும் தங்களுக்கு விஷயம் விளங்கவில்லையென்றும் முறையிட்டார்கள். இது எவ்விதம் நிகழ்ந்திருக்குமென்று அரசனும் பலவாறு யோசித்துப் பார்த்தான். அவனுக்கும் ஒன்றும் அறிய முடியவில்லை. கடைசியாகப் பட்டமகிஷியிடம் சென்று விஷயத்தைச் சொன்னான்.

செய்தியை அறிந்த அரசி பதறிப் போய்விட்டாள். உடனே மகளின் அரண்மனைக்கு ஓடோடியும் சென்றாள். அரண்மனையை அடைந்து பெண்ணைப் பார்த்தபோது, அவ்விஷயம் உண்மையென்றே அரசிக்குப்பட்டது. அவளுக்கு அடக்கமுடியாத கடுங்கோபம் ஏற்பட்டது. மகளைப் பலவாறாகப் பேசி கடிந்து கொண்டாள்.

"இவ்வளவு வயதாகியும் உனக்கு எப்படித்தான் புத்தி போயிற்றோ? உன்னால் நம் குலத்துக்கே அவமானம் வந்துவிட்டது!" என்றெல்லாம் வசைபாடினாள். அவ்வளவையும் அரசகுமாரி தலைகுனிந்தபடியே கேட்டுக் கொண்டிருந்தாள். கடைசியாக, "அம்மா! நீ நினைப்பது போல் தவறு ஏதும் நிகழ்ந்து விடவில்லை. மகாவிஷ்ணுவே தினமும் இங்கு வந்து போகிறார். மும்மூர்த்திகளில் ஒருவரை உன் மருமகனாக அடைவதில் நீ திருப்தியே கொள்ளவேண்டும். இது நம் குலத்துக்கே மாபெரும் அதிர்ஷ்டம்" என்று நடந்த விவரமனைத்தையும் தெரிவித்தாள்.

இதைக் கேட்ட அரசிக்கு முகம் மலர்ந்தது. மகளை உச்சிமுகர்ந்து தன்னுடன் அணைத்துக் கொண்டாள். சந்தோஷமாக அரசனை அடைந்து விவரத்தைத் தெரிவித்தாள்.

"தேவி! குழந்தையின் வார்த்தையில் எனக்கு நம்பிக்கை இல்லை. மகாவிஷ்ணு நமக்கு மாப்பிள்ளையாக வருவதென்பது நடக்கக்கூடிய காரியமா?" என்றான் அரசன்.

"ஏன் அவநம்பிக்கை கொள்கிறீர்கள்? இன்றிரவு நாம் இருவரும் மறைந்திருந்து மகாவிஷ்ணுவைத் தரிசித்துவிடலாம்" என்றாள் ராணி. அதற்கு அரசன் சம்மதித்தான்.

இரவுப் பொழுது வந்ததும் முன்னேற்பாட்டின்படி இருவரும் அரண்மனை மேன்மாடத்தில் மறைவிடத்தில் ஒளிந்திருந்தனர். வழக்கம்போல குறிப்பிட்ட நேரத்தில் நெசவாளி மகாவிஷ்ணுவைப் போல் மாறுவேடம் தரித்து கருடன் மீது வந்து இறங்கினான். சங்கு சக்ரதாரியாக விஷ்ணு கருட வாகனத்தின் மீது வந்து இறங்குவதைக் கண்ட அவர்களுக்கு அமிருதவருஷம் போல ஆயிற்று. உலக ரக்ஷகனை மகாவிஷ்ணுவையே மாப்பிள்ளையாகப் பெற்ற பிறகு, தனக்கு நிகராக இவ்வுலகில் வேறு யாரும் இல்லையென்ற பெருமிதம் கொண்டான் அரசன்.

ஸுப்ரதிவர்மன் என்ற அந்த அரசன் தென்தேசத்து மன்னனை விக்கிரமசேனன் என்பவனுக்குக் கீழ்ப்படிந்தவன். வருஷந்தோறும் கப்பம் கட்டிவந்தான். அந்த வருஷம்

கப்பப்பணம் வசூல் செய்ய வந்த விக்கிரமசேனனின் தூதனிடம் அரசன் பணம் கொடுக்க மறுத்துவிட்டான். தனக்குக் கிடைத்திருக்கும் புதிய சம்பந்தத்தால் ஸுப்ரதிவர்மன் கர்வங்கொண்டு தூதனைத் திருப்பி அனுப்பிவிட்டான். ஊர் திரும்பிய தூதனோ அரசனிடம் ஒன்றுக்குப் பத்தாகச் சொல்லி வத்தி வைத்து விட்டான். அதன்மீது வெகுண்டு எழுந்து, படைகளைத் திரட்டிக்கொண்டு விக்கிரமசேனன் போருக்குக் கிளம்பி வந்தான்.

அரசன் ஸுப்ரதிவர்மன் போருக்காக எந்த ஏற்பாடும் செய்யவில்லை. படைகள் சரியானபடி பராமரிக்கப்படவில்லை. ஆகவே, விக்கிரமசேனன் எந்தவிதமான தடையும் இல்லாமல் நாட்டில் நுழைந்து புண்டரவர்த்தனத்தை அடைந்தான். நகரைச் சுற்றி தன் படைகளை வளைத்து முற்றுகையிட்டான்.

இதையறிந்த நகரப் பிரமுகர்கள் அரசனிடம் ஓடி முறையிட்டார்கள்: "அரசே! படை வலிமை மிகுந்த விக்கிரமசேனன் வந்து நகரத்தை முற்றுகையிட்டிருக்கத் தாங்கள் ஒன்றுமே செய்யாமல் சும்மா இருக்கிறீர்களே!" என்று வேண்டினார்கள். அரசனோ அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. "நீங்கள் விசனப்படாதீர்கள், நான் தக்க ஏற்பாடு செய்கிறேன். நாளைக் காலையில் அதை நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்" என்று சொல்லி அவர்களை அனுப்பினான்.

பிறகு அரசன் தன் குமாரி சுதர்சனையைக் கூப்பிட்டான்.

"குழந்தாய்! உன் கணவரின் சக்தியை நம்பியே நான் இந்த வம்பில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். இன்றிரவு மகாவிஷ்ணு வந்ததும் அவரிடம் நம் நிலைமையை விளக்கி எதிரிகளை அழித்துவிட ஏற்பாடு செய்" என்று தெரிவித்தான்.

என்றும் போல அன்றிரவும் நெசவாளி அரண்மனைக்கு வந்தான். "பிரபோ! வருஷா வருஷம் கப்பத்தை கட்டிக் கொண்டிருந்த கப்பத்தை இனி கட்டமுடியாது என்று என் தகப்பனார் நிறுத்திவிட்டார். அதனால் விக்கிரமசேனன் தன் படைகளுடன் வந்து நகரைச் சூழ்ந்து கொண்டு விட்டான். எல்லோரும் உங்கள் உதவியையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்" என்று அவனிடம் பிரார்த்தித்தாள் சுதர்சனை.

அவள் வார்த்தைகளை முடித்ததும் நெசவாளி கலகலவென்று சிரித்தான். "இது என்ன, அற்பவிஷயம்? மகா மாயாவிகளான அசுரர்களை ஆயிரக்கணக்கில் அழித்த எனக்கு இது பிரமாத

விஷயம் இல்லை. கவலைப்படாதே. நாளைக்காலையில் நம் எதிரிகளை அழித்து விடுகிறேன். உன் தந்தையிடம் தெரிவித்து விடு" என்று அவளைத் தேற்றினான்.

சுதர்சனை தந்தையிடம் ஓடிச் சென்று நெசவாளி சொன்னவற்றைத் தெரிவித்தாள். கவலை நீங்கிய அரசன், உடனே நகரம் முழுவதும் பின்வருமாறு பறையறைய ஏற்பாடு செய்தான்.

"நாளைச் சண்டையிலே விக்கிரமசேனன் படையில் உயிர் துறந்தவர்களிடமிருந்து யார் யார் பொன்னும் மணியும், யானையும், குதிரையும், ஆயுதங்களும் கைப்பற்றுகிறார்களோ, அவ்விதம் அவர்கள் கைப்பற்றியவைகளைத் தாங்களே எடுத்துக் கொள்ளலாம். அவை அவர்களுக்கே சொந்தம்."

இவ்விதம் அரசனின் செய்தியைக் கேட்ட நகர மக்களிடையே வியப்பு ஏற்பட்டது. அரசனுடைய அஞ்சா நெஞ்சையும், வெற்றி கிட்டும் என்ற அவன் மன உறுதியையும் கண்டு அதிசயித்தார்கள். தோற்று ஓடப்போகும் எதிரிகளின் படையினருகே புகுந்து அகப்பட்டதைச் சுருட்ட ஏராள மானவர்கள் திரண்டு எழுந்தனர்.

இந்நிலையிலே நெசவாளியின் மனத்திலே பெரும் புயல்வீசிக் கொண்டிருந்தது. காதலியைத் தேற்ற வேறு வகையில்லாது அவ்வார்த்தைகளைச் சொல்லிவிட்டான். இப்போது அவன் என்ன செய்வது? திறம் மிகுந்த போர்வீரர்களை எதிர்த்துப் போரிட அவனால் எப்படி முடியும்? கருடன் மீது ஏறி ஓடிப்போய்விட்டால்...? அவ்விதம் செய்வதன் மூலம் அவன் தப்பிவிடலாம். ஆனால் மறுபடியும் அவன் தன் காதலியைப் பார்க்க முடியாது! போரில் வெற்றிபெறும் விக்கிரமசேனன் அவனை என்ன செய்வானோ? காதலியைப் பிரிந்து உயிர் வாழ்வதென்பதும் அவனால் முடியாத காரியம். அவ்விதமின்றி போர்க்களத்தில் இறங்கினாலும் சாவு நிச்சயமே! எப்படிப் பார்க்கப் போனாலும் சாவு அவனுக்குக் காத்திருக்கிறது. ஒரு வேளை கருடன் மீது ஏறி வானத்திலே பறந்து எதிரிகள்மீது பாய்ந்தால், எதிரிகள் பயந்து மகாவிஷ்ணுவே உதவி செய்ய வந்துவிட்டார் என நினைத்து ஓடிவிடக்கூடும்.

கடைசியில் அவன் போர்க்களத்துக்குச் சென்று உயிர் விடுவதே சரியான வழியென்று முடிவு செய்தான். நெசவாளி இவ்விதம் முடிவு செய்ததை உண்மையான கருடபகவான் அறிந்தார். உடனே அவர் வைகுண்டத்தை அடைந்து மகாவிஷ்ணுவிடம் விஷயத்தை எடுத்துச் சொன்னார்: "பிரபோ!

அந்த நெசவாளி போரில் இறந்துவிட்டால், தென்தேசத்து மன்னன் ஒருவன் மகாவிஷ்ணுவையே கொன்றுவிட்டான் என்ற செய்தி பூலோகம் முழுதும் பரவிவிடும்; பிறகு உலகத்தில் இருப்பவர்களுக்குத் தெய்வ நம்பிக்கை போய்விடும். அதனால் தர்மம் நசித்து விடும். இதற்கு நீங்கள் ஏதாகிலும் ஒருவழி செய்தாக வேண்டும்" என்று முறையிட்டார்.

மகாவிஷ்ணுவும் இதை நன்கு யோசித்துப் பார்த்தார். கருடனின் வார்த்தையில் உண்மையிருப்பதை உணர்ந்தார். "ஆம். நீ சொல்வது உண்மைதான். நெசவாளிக்கு நாம் உதவி புரிய வேண்டியது அவசியம். அவன் உடலில் புகுந்து சக்ராயுதத்தை இயக்குகிறேன். நீயும் அதே போலக் கருடன் உடலில் புகுந்து இயங்க வேண்டும்!" என்றார். கருடபகவானும் இதற்கு ஒப்புக் கொண்டார்.

மறுநாள் காலையில் நெசவாளி வழக்கம் போல் பொழுது விடிவதற்கும் முன் எழுந்து போய்விடவில்லை. அதற்குப் பதிலாக அவ்விடமே தங்கிவிட்டான். காலையில் எழுந்து ஸ்நானம் செய்து தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டான். போர்க்கோலம் பூண்டு கருட வாகனத்தின் மீது ஏறி சூரிய உதய சமயம் ஜகத்ஜோதியாக மின்ன அரண்மனை மேல் மாடத்திலிருந்து உயரக் கிளம்பினான். அவன் உடலில் மகாவிஷ்ணுவும், பொம்மைக் கருடனில் உண்மையான கருடபகவானும் புகுந்து கொண்டனர்.

இந்த அதிசயத்தை, மகாவிஷ்ணு அரசனின் உதவிக்கு சங்குசக்ரதாரியாய் கருடவாகனத்தில் வந்ததைக் கண்டு ஜனங்கள் பிரமித்து விட்டனர். அப்போது வானிலிருந்து பொன்னும் மணியும் வர்ஷித்தன. விஷ்ணுவும் தம் சங்கை எடுத்து ஊதிப் பேரொலி முழங்கினார்.

அவருடைய சங்க நாதத்தைக் கேட்ட எதிரிப்படை நிலை குலைந்தது. யானை குதிரைகள் மூலைக்கு ஒன்றாக ஓட்டம் பிடித்தன. போர்வீரர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்தவாறு மலைத்து நின்று விட்டனர். இந்த அதிசயத்தைக் காண தேவர்களும் வானிலே தோன்றினார்கள். அதே சமயம் நெசவாளி சக்ராயுதத்தை விக்கிரமசேனனைக் குறித்து வீசினான். அது அவன் சிரத்தைக் கொய்துவிட்டுத் திரும்பியும் அவன் கையை வந்தடைந்தது. இதைக் கண்ட அரசர்களும், சேனாதிபதிகளும் கீழே விழுந்து தங்களை ரக்ஷிக்குமாறு மகாவிஷ்ணுவை வேண்டினார்கள்.

நெசவாளி அவர்களுக்கு அபயம் அளித்து "பயப்பட வேண்டாம். இனி நீங்கள் இந்நாட்டு மன்னனை ஸுப்ரதிவர்மனையே சக்கரவர்த்தியாக ஏற்றுக்கொண்டு அவனுக்கு அடங்கி நடக்கவேண்டும்" என்று தெரிவித்தான். அவர்களும் இதற்கு ஒப்புக்கொண்டார்கள். இவ்விதம் ஸுப்ரதிவர்மன் பேரரசனாக ஆனான்.

இவ்விதம் நெசவாளி கதையை முடித்துவிட்டு மேலும், பதுமை சொல்லத் தொடங்கியது.

"உற்சாகம், காரியத்தில் வேகம், தொழிலை நன்கு அறிந்து கொள்ளுதல், துன்மார்க்கமான விஷயங்களுக்கு அடிமை யாகாதிருத்தல், தைரியசாலி, செய்நன்றி மறவாதிருத்தல், காரியத்தில் உறுதியான நிச்சயம் ஆகிய குணங்களை உடைய மனிதனை லக்ஷ்மி தானாகத் தேடி அடைகிறாள்.

இப்படியாக விக்கிரமாதித்தன் சகல நற்குணங்களுக்கும் இருப்பிடமாக இருந்து வரும் நாளையிலே, ஒருநாள் அரசன் பின்வருமாறு யோசித்தான்:

"ஒருவன் தான் அடைந்துள்ள செல்வத்தை காப்பாற்றும் வழி, அதை அள்ளி அள்ளிக் கொடுப்பதுதான். இது தடாகத்திலே தேக்கி வைக்கப்பட்ட தண்ணீரை வெளியே விடும் மதகு போன்றது என்பார்கள்."

இவ்வாறு நினைத்த விக்கிரமாதித்தன், யாகம் ஒன்று செய்து செல்வம் முழுவதையும் தானம் செய்ய முடிவு கட்டினான். உடனே மாபெரும் யாகசாலை கட்டப்பட்டது. யாகத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேகரித்தான். தேவர்கள், ரிஷிகள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், சித்தர்கள் ஆகியோரைப் பிரார்த்தித்துக் கொண்டு யாகத்தைத் தொடங்கினான். அறிஞர்கள் வரவழைக்கப் பட்டனர்; நாட்டிலுள்ள பேரரசர்களும், சிற்றரசர்களும், உற்றார் உறவினர்களும் யாகத்துக்கு அழைக்கப்பட்டனர்.

அந்தச் சமயம் சமுத்திரராஜனைப் பிரார்த்திக்க அந்தணன் ஒருவன் கடற்கரைக்கு அனுப்பப்பட்டான். அவனும் சமுத்திரக் கரையை அடைந்து சந்தனம், புஷ்பம் முதலியவற்றால் பதினாறு வகை சோடசோபசார பூஜை செய்து ஆராதித்தான். "ஏ சமுத்திர ராஜன், விக்கிரமாதித்தன் மாபெரும் யாகம் ஒன்று செய்கிறான். அதற்கு உன்னை வரும்படி அழைக்க அரசனால் அனுப்பப்பட்டு வந்துள்ளேன்" என்று சொல்லி பூக்களைத் தண்ணீரில் போட்டான். பிறகு ஒருகணம் அங்கு நின்றான். யாரும் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. ஆகவே அவன் ஊருக்குத் திரும்பி வந்தான்.

வரும் வழியிலே சமுத்திரராஜன் அந்தணன் உருக்கொண்டு அவ்வேதியனிடம் வந்தான். "யாகத்திற்கு அழைக்கும்படி விக்கிரமன் உன்னை அனுப்பினான். அவன் அழைப்பு எனக்கு வந்து சேர்ந்தது. உரிய காலத்தில் தானம் அளித்துக் கௌரவிப்பதே நட்பின் அடையாளம். கொடுப்பதும் வாங்குவதும், இரகசியத்தைச் சொல்லுவதும், கேட்பதும், உண்பதும், உணவு அளிப்பதும், ஆகிய இந்த ஆறுகுணங்களே நட்பின் அறிகுறி! இன்னும், வெகு தூரத்தில் பிரிந்து இருக்கும் தோழர்களிடையே நட்பு குறைந்துவிடுகிறது என்பதும், அருகில் நெருங்கி இருப்பதால் அதிகமாகிறது என்பதும் உண்மையல்ல. நட்பு ஒன்றே பிரமாணம். உள்ளத்தில் குடிகொண்டிருப்பதன் மூலம் ஒருவன் வெகு தூரத்தில் இருந்தாலும் அருகிலே இருப்பவனாகிறான். உள்ளத்தில் அவன் வெகு தூரத்தில் இருப்பதாகப் பட்டுவிட்டால் (வெறுப்பு கொண்டால்) அவன் கையருகில் இருந்தாலும் எங்கோ இருப்பவனாகவே ஆகிறான்! மயில் மலைமீது இருக்கிறது. மேகம் வானத்திலிருக்கிறது. இரண்டுக்குமிடையே தூரம் எவ்வளவோ இருந்தாலும் மேகத்தைக் கண்டதும் குதூகலத்தோடு கூவுகிறது. சூரியன் நூறு ஆயிரம் யோசனை தூரத்தில் இருக்கிறான். குளத்தின் நடுவே இருக்கும் தாமரை அவனைக் கண்டதும் மலர்கிறது. சந்திரனோ இருநூறு ஆயிரம் யோசனை தூரத்திலிருக்கிறான். பூமியிலிருக்கும் அல்லி அவனைக் கண்டு மலர்கிறது. நட்பு இருக்குமானால் தொலைவு என்பது கிடையாது. இவ்விதம் அறிஞர்கள் சொல்லுவார்கள். ஆகவே, நான் புறப்பட்டு வந்தேன். உன் அரசனுக்கு ஒரு பரிசு உன்மூலம் அனுப்பப் போகிறேன்" என்று சொல்லி நான்கு ரத்தினங்களை அந்தணனிடம் கொடுத்தான்.

அவன் பெற்றுக் கொண்டதும், "இவற்றைக் கொண்டுபோய் அரசனிடம் நான் கொடுத்ததாகத் தெரிவி. இவற்றின் மகிமையைக் கேள். ஒரு இரத்தினத்தின் மூலம் நினைத்த பொருளை அடையலாம்: இரண்டாவது இரத்தினம் அமிருதம் போன்ற அறுவகை உணவைக் கொடுக்கும்: மூன்றாவதோ, தேர், யானை, குதிரை, காலாள் என்னும் நால்வகைச் சேனைகளை நினைத்தமாத்திரத்தில் கொடுக்கும். நான்காவது இரத்தினத்தின் மூலம் அழகிய விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களைப் பெறலாம். இவைகளை அரசனிடம் கொடுத்து சமுத்திரராஜனின் அதிகப் பிரியமான அன்பளிப்பு என்று சொல்லு" என்றான்.

வேதியன் அவ்விதமே தெரிவிப்பதாகச் சொல்லிவிட்டு உஜ்ஜயினி நோக்கிப் புறப்பட்டான். இதற்கிடையில் பல நாட்கள்

சென்று விட்டபடியால் விக்கிரமனின் யாகம் பூர்த்தியாகி விட்டது. அரசன் அவபிருத ஸ்நானம் செய்து யாகத்திற்கு வந்திருந்தோர்களுக்கு அளவற்ற திரவியங்களை வாரி வாரிக்கொடுத்து தானத்தை முடித்து விட்டான்.

வேதியன் உஜ்ஜயினியை அடைந்து அரசன் சமூகத்திற்குச் செல்லும்போது எல்லாம் முடிந்து யாகத்திற்கு வந்திருந்தவர்கள் போய்விட்டனர். அரசனை வணங்கி இரத்தினங்களை அவனிடம் அளித்தான்.

"அரசே! தங்களிடமிருந்து புறப்பட்ட நான் சமுத்திர தீரத்தை அடைந்து முறைப்படி சமுத்திரராஜனை ஆராதித்து யாகத்திற்கு வருமாறு அழைத்துவிட்டுத் திரும்பினேன். வரும்வழியில் சமுத்திரராஜனும் அந்தணன் உருக்கொண்டு வந்து தங்களை வாழ்த்தி, இந்நான்கு இரத்தினங்களையும் பரிசாக அளித்தான். அளவற்ற திரவியங்களும், அமுதமான உணவு வகைகளும், நால்வகைப் படைகளையும், விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களையும் இந்நான்கு இரத்தினங்களின் மூலம் அடையலாம்" என்றான்.

"அறிஞனே, நீ திரும்பி வருவதற்குள் யாவும் பூர்த்தியாகி விட்டது. தான தருமங்கள் முடிந்துவிட்டன. யாகசாலைக்கு வந்திருந்த ஒவ்வொருவரும் தூக்கமுடியாதபடி பொன்னும் மணியும் கொண்டு சென்றனர். என் பொருட்டு சமுத்திர தீரம்வரை சென்று வந்த உனக்குக் கொடுப்பதற்கு ஒன்றும் என்னிடம் இல்லை. ஆகவே, எனக்காகப் பெற்றுவந்த இந்நான்கு இரத்தினங்களுள் ஒன்றை எடுத்துக் கொள்" என்றான் அரசன்.

அதற்கு அவன், "அரசே! நான் ஒருவனே இந்நான்கு இரத்தினங்களில் ஒன்றை எடுத்துக் கொள்ளுவது நல்லதல்ல. வீட்டில் மனைவி, மகன் மருமகள் மூவரையும் கலந்து ஆலோசித்து எல்லோரும் விரும்பும் ஒன்றை எடுத்துக் கொள்கிறேன்" என்றான்.

''அப்படியே வீட்டிற்குச் சென்று முடிவு செய்து கொண்டுவா'' என்றான் விக்கிரமாதித்தன். அவ்வாறே வேதியனும் வீட்டிற்கு வந்தான். மனைவி மக்களை அழைத்து நடந்ததைத் தெரிவித்தான். "நாம் விரும்பும் இரத்தினத்தை அரசன் நமக்குக் கொடுப்பான். உங்களுக்கு இந்நான்கு ரத்தினங்களில் எதைப் பெறலாமென்று தோன்றுகிறது?" என்று கேட்டான். அவனுடைய புத்திரன் சொன்னான். "அப்பா! நால்வகை சேனைகளைக் கொடுக்கும் இரத்தினத்தைப் பெற்றுவா. அதன் மூலம் நாம் பெரிய ராஜ்ஜியத்தையே பெற்றுவிடலாம்."

"குழந்தாய், நல்ல அறிவாளி ஒருபோதும் ராஜ்ஜியத்தை அடைய ஆசைப்படமாட்டான். ஏனெனில் ராமன் காட்டுக்குப் போனது, மகாபலி பாதாள லோகத்தில் அழுந்தியது; பஞ்சபாண்டவர் வனவாசம் சென்றது; யாதவ குலம் அழிவுற்றது; நளமகாராஜன் கஷ்டத்திற்கு ஆளாகியது, அம்புப் படுக்கையில் படுத்த பீஷ்மரின் காலதாமதப்பட்ட மரணம் ஏற்பட்டது; விஷ்ணுவிற்கு வாமன அவதாரம் ஏற்பட்டது. அர்ஜுனன் வதம் நிகழ்ந்தது ஆகியவற்றை ஒருவன் நினைத்துப் பார்க்கட்டும். இராவணேசுவரன் அரசப் பதவியினால் எவ்விதம் கஷ்டத்திற்குள்ளானான்: என்பதையும் ஆலோசிக்கட்டும். அதில் ஆசை வைக்கக்கூடாது! ஆகவே, நாம் அதைவிட்டு திரவியத்தைக் கொடுக்கும் இரத்தினத்தைப் பெற்றுக் கொள்ளுவோம். செல்வத்தின் மூலம் எல்லாவற்றையும் அடையலாமல்லவா? இவ்வுலகத்தில் செல்வத்தினால் அடைய முடியாதது எதுவும் இல்லை. இதை உணர்ந்த அறிவாளி செல்வம் சேர்க்கவே விரும்புவான் என்று சொல்லி யிருக்கிறார்கள்" என்றான் வேதியன்.

அப்போது அவன் மனைவி சொல்லத் தொடங்கினாள்: "இரண்டுமே நமக்குத் தேவையில்லை. அறுசுவை உணவைக் கொடுக்கும் இரத்தினத்தை எடுத்துக் கொள்ளுவதுதான் உசிதமானது. உயிர்ப் பிராணிகளுக்கு உணவு ஒன்றே உயிர் தரிக்கத் தேவையானது. உயிர் வாழ உணவு முக்கியமென்று ஆண்டவனால் விதிக்கப்பட்டிருக்கிறது. அறிஞன் எவனும் அதை ஒதுக்கி மற்றதை விரும்பமாட்டான். இது உங்களுக்குத் தெரியாதா? நமக்குத் தேவையான உணவையே நாம் கொள்ளவேண்டும்!" என்றாள்.

மருமகளோ நான்காவது இரத்தினத்தை விரும்பினாள். "விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களைக் கொடுக்கவல்ல இரத்தினத்தையே நான் விரும்புகிறேன்! தம்முடைய அழகையும், சௌபாக்கியத்தையும் குறைவின்றி இருக்க அவரவர் சக்திக்கேற்ப ஆபரணங்களைப் பூணவேண்டும். அப்போதுதான் அவர்களுடைய ஆயுளும் செல்வமும் அதிகரிக்கும்! சினேகிதர்களிடையே இருக்கையில் இரத்தினங்கள் பூண்டிருப்பது அவர்களுடைய சுபத்தை. செல்வாக்கை அதிகரிக்கும். உற்சவ காலங்களில் அவை ஆபரணங்களாக ஆகின்றன. தெய்வங்கள் கூட இரத்தினங்களில் ஆசைகொண்டு ஆபரணமாக மகிழ்ச்சியுடன் அணிந்து கொள்ளுகின்றன" இவ்விதம் மருமகள் தெரிவித்தாள்.

ஒருவர் சொல்வதை மற்றவர் ஏற்றுக் கொள்ளவில்லை. விவாதம் அதிகரித்தது. தங்களிடையே தோன்றியுள்ள விவகாரம்

தீர்க்க முடியாதது என்று தோன்றியது வேதியனுக்கு. பேசாமல் அரண்மனைக்குத் திரும்பினான். "அரசே! ஒவ்வொருவரும் ஒவ்வொரு மகிமை வாய்ந்த இரத்தினத்தையே விரும்புகின்றனர். இந்நிலையில் அவர்கள் வார்த்தையை ஒதுக்கி எனக்குப் பிடித்தமான இரத்தினத்தை எடுத்துக் கொள்ளுவது அதிக தகராறை உண்டாக்கிவிடும். ஆகவே நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

ஆனால் விக்கிரமாதித்தனோ இரத்தினங்களைத் தான் எடுத்துக் கொள்ளவில்லை. நான்கு இரத்தினங்களையும் வேதியனுக்கே கொடுத்துவிட்டான். "இவற்றை எடுத்துக் கொண்டு போய் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துங்கள்" என்று அனுப்பி வைத்தான்.

பதுமை கதை சொல்லி முடித்தது. பொழுதும் அஸ்தமித்தது.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் மூன்றாவது படிக்குக் காவலான சுபிரபை என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

---

## 30-வது ருக்குமணிவல்லிப் பதுமை சொல்லிய வராகத்தின் கதை

---

முப்பதாம்நாட் காலையில் போஜராஜன் மறுபடி சிம்மாசனத்தின் மீது ஏறி அமர முயன்றபோது முப்பதாம் படிக்குக் காவலாக இருந்த ருக்குமணிவல்லிப் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.



ஒருநாள் விக்கிரமாதித்தன் அரச சபைக்குப் பல நாடுகளிலிருந்து இராஜகுமாரர்கள் வந்திருந்தனர்.

அந்தச் சமயத்தில் வேடன் ஒருவன் அங்கு ஓடிவந்தான். "பிரபோ! அஞ்சன மலைபோன்ற பெருத்த சரீரமுடைய ஒரு ராக்ஷஸப் பன்றி காட்டிலே வந்துள்ளது. தாங்கள் உடனே வந்து பார்க்க வேண்டும்" என்று வேண்டினான்.

விக்கிரமாதித்தனும் சபையிலிருந்த அரசகுமாரர்களைத்

தன்னுடன் அழைத்துக் கொண்டு காட்டிற்குப் புறப்பட்டான். அவர்கள் பன்றியின் இருப்பிடத்தை அடையும்போது ஆற்றங் கரையிலிருந்த அடர்ந்த புதர் ஒன்றில் அது பதுங்குவதைக் கண்டனர். மனிதர்களின் அரவத்தைக் கேட்டதும், பன்றி ஆக்ரோஷமாக வெளியே வந்து ஓடத் தொடங்கியது. உடனே அரசனும் அவனுடன் வந்த அரசகுமாரர்களும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு அதைச் சூழ்ந்துகொண்டனர். அவர்களையோ அவர்கள் எய்த கூரிய ஆயுதங்களையோ பன்றி லட்சியம் செய்யவில்லை. இங்குமங்குமாகப் பாய்ச்சல் காட்டிச் சிதறி அடித்துவிட்டு, ஒற்றையடிப் பாதை ஒன்றின் வழியே ஓடிவிட்டது. அதைத் துரத்திக்கொண்டு விக்கிரமன் ஓடினான்.

வெகு நேரம் அரசனை அலைக்கழித்துவிட்டுக் காட்டுப் பன்றி அருகிலிருந்த மலையில் ஏறி மறைந்துவிட்டது. பன்றியைத் துரத்தி வந்த அரசன், அது சென்ற திசையை அறியாது திகைத்து நிற்கும் போது, மலையில் குகை ஒன்றைக் கண்டான். ஒருவேளை அதனுள் நுழைந்து சென்றிருக்குமோவென்ற ஐயத்தால், அரசனும் குகையினுள் நுழைந்தான்.

குகை முழுவதும் ஒரே இருட்டு. கண்ணுக்கு எதிரே விரல்களைக் காண்பித்தால்கூடத் தெரியாது. அந்தகாரமான அவ்விருட்டிலே, அரசன் சிறிது தூரம் சென்றான். அங்கே வெளிச்சம் தெரிந்தது. அருகில் சென்று பார்க்கையில், அப்பிரகாசம் சற்று தூரத்திலே இருக்கும் அழகிய நகரத்தினுடையது என்பதைக் கண்டான்.

நகரத்தின் கோட்டைச் சுவர்கள் தங்கத்தாலானவை; அவை நன்கு பிரகாசித்தன. வான் முகட்டை எட்டக்கூடிய அளவு உயரமான மாளிகைகளும், கோபுரங்களும் நகரத்தை அலங்கரித்தன. புனிதம் நிறைந்த நந்தவனங்களும், தெய்வம் குடிகொண்டிருந்த கோயில்களும் நகரத்தின் கம்பீரத்தை இன்னும் அதிகப்படுத்தின. சந்தைகளில் எல்லாவிதமான பொருள்களும் வந்து குவிந்திருந்தன; நகரத்திலிருப்பவர் அனைவருமே செல்வந்தர்களோவென்று ஐயுறும்படி இருந்தனர். பலவகையான விலைமாதரும் அவ்விடம் இருந்து அந்நகரத்தை மனோஹரமாகச் செய்தனர்.

நகரத்திற்குள் நுழைந்த அரசன் ஒவ்வொரு இடமாகப் பார்த்து வந்தான். சந்தைப் பிரதேசத்திற்கு வந்து சேர்ந்தபோது, அங்கே சூரியபிம்பத்தின் பிரகாசத்திற்கொப்பான பிரகாசமுடைய அரண்மனை ஒன்றைக் கண்டான். அம் மாளிகையில்தான் அசுர மன்னனான விரோசன ராஜனின் குமாரன் பலிச்சக்கரவர்த்தி அரசாண்டு வந்தான்.

அரண்மனையில் நுழைந்ததும் பணியாட்கள் விக்கிரமாதித்தனை வரவேற்று தங்கள் மன்னனின் சமூகத்திற்கு அழைத்துச் சென்றனர். பலிச்சக்கரவர்த்தியும் தன் ஆசனத்தை விட்டிறங்கி முன்வந்து அரசனை வரவேற்றுக் கட்டித் தழுவி, அழைத்துச் சென்றான். தன்னுடைய ஆசனத்தில் அவனுக்கு உட்கார இடம் கொடுத்துத் தானும் அருகில் அமர்ந்து கொண்டான்.

"பிரபோ! தாங்கள் இம்மாளிகைக்கு விஜயம் செய்தது யாது காரணம் பற்றி?" என்று வினவினான் பலிச்சக்கரவர்த்தி.

"சக்கரவர்த்தி! தங்களைப் பார்க்க விரும்பினேன். உடனே புறப்பட்டு இங்குவந்து சேர்ந்தேன். வேறு ஒன்றுமில்லை" என்றான் விக்கிரமன்.

"இன்று நான் தன்யன் ஆனேன்; என் வமிசமும் இன்று புனிதமடைந்தது: என் சம்பத்து நல்ல பலனை அளித்தது; தாங்கள் விஜயம் செய்யும் அளவுக்கு நான் புண்ணியசாலி ஆனேன். என்னுடைய வமிசத்துக்கே இன்று நன்மை ஏற்பட்டது. தங்கள் திருவடித்தாமரையின் ஸ்பரிசத்தினால் உண்டான அனுக்கிரகத்தாலே நீண்ட காலத்துக்குப் பிறகு இன்றைக்கு என் வீடு சிறப்புற்றது."

இந்தவிதமாக விக்கிரமனைப் புகழ்ந்தான்.

பலிச்சக்கரவர்த்தியின் புகழ்ச்சியான வார்த்தைகளைக் கேட்ட விக்கிரமாதித்தன், "அரசே! தங்கள் உள்ளம் புனிதம் வாய்ந்தது; தங்கள் வமிசம் கிருதார்த்தமடைந்தது. ஆம்: உண்மைதான். ஏன் தெரியுமா? வைகுந்தபதியான நாராயணன் நேரிலே யாசகம் வேண்டி தங்கள் வீட்டிற்கு வந்தார் அல்லவா! நான் எம்மாத்திரம்?" என்று பதிலளித்தான்.

"அது கிடக்கட்டும். தாங்கள் வந்த காரணம் பற்றி ஏதும் தெரிவிக்கவில்லையே?" என்று மீண்டும் கேட்டான் பலி.

"தானவ ராஜகுமாரா! நான் உங்களைப் பார்க்கவே வந்தேனே ஒழிய வேறு எக்காரணம் பற்றியும் நான் இங்கு வரவில்லை."

"என்னைப் பார்க்க விரும்பி, நட்பின் காரணத்தால் மட்டும் வந்ததாகத் தெரிவிக்கிறீர்கள். நானும் தங்களைக் காணவே காட்டுப் பன்றியை அனுப்பி உம்மை இங்கு வரவழைத்தேன்! என்னால் செய்யக்கூடிய உதவி ஒன்றைக் கேட்டு, என்னைக் கௌரவியுங்கள்."

விக்கிரமன் எத்தனையோ முறை மறுத்துப் பார்த்தான். "எனக்கு எதுவும் தேவையில்லை. உங்களைப்போன்றாரின் அன்பினாலும் ஆதரவினாலும் எனக்கு எல்லா செல்வங்களும் குறைவற இருக்கின்றன" என்று பலமுறை சொல்லியும் பலிச் சக்கரவர்த்தி விடவில்லை.

"அரசே! அவ்விதம் சொல்லாதீர்கள். தங்களுக்கு எதுவும் தேவையிருக்கிறதென்று நான் சொல்லவில்லையே. நட்பின் அறிகுறியாக என்னிடமிருந்து தாங்கள் ஏதாகிலும் பெற்றுக் கொள்ளவேண்டுமென்று தான் கோருகிறேன். நட்பைப் பற்றிப் பெரியோர்கள் சொல்லியிருப்பதை நீங்கள் அறிவீர்களே. கொடுத்தல், பெற்றுக்கொள்ளுதல்; இரகசியத்தைச் சொல்லுவதும், கேட்டுக் கொள்ளுவதும்: உபசரிப்பது, உபசாரங்களை ஏற்றுக்கொள்ளுவதும் ஆகிய இந்த ஆறு காரியங்களும் நட்பின் இலக்கணமாகும்! உபகாரம் ஏதோ ஒன்றைச் செய்யாமல் யாராலும் நட்பை அடைய முடியாது. தேவர்களும் பக்தர்களின் பிரார்த்தனை செலுத்துவதற்குப் பிரதியாகத்தானே அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுகிறார்கள்? கொடுப்பது இருக்கும் வரையில் தான் அன்பானது இவ்வுலகில் நிலைத்து நிற்கும். தாயிடம் பால் மறத்துவிட்டது என்று தெரிந்ததும், கன்றுக்குட்டி தானாகவே தன் தாயைவிட்டுப் பிரிந்து போய்விடுகிறது அன்றோ? இன்னும், பகுத்தறிவற்ற மிருகங்களுக்குக் கூட கொடையானது அவற்றின் சொந்தக் குழந்தைகளைவிட மிகவும் பிரியமானது என்று நம்புகிறேன். உதாரணமாக ஒரு எருமையை எடுத்துக்கொள்ளுங்கள். அதற்கு நீங்கள் புண்ணாக்கைக் கொடுத்து வந்தால் போதும், தனக்கு ஒரு கன்று இருந்தாலும், அது தன் பால் முழுவதையும் உங்களுக்கே கொடுக்கும்! இவ்வளவு அறிவாளியாகத் திகழும் நீங்கள் மறுப்பது நியாயமில்லை. நான் தருவதைப் பெற்றுக் கொள்ளத்தான் வேண்டும்." இவ்வாறு எடுத்துரைத்த பலி, ஒரு ரசத்தையும், ரசாயனத்தையும் அரசனிடம் கொடுத்தான்.

"அரசே! இதைப் பெற்றுக் கொள்ளுங்கள். நமது நட்பிற்கு அறிகுறியாயிருக்கட்டும். ரசாயனத்தை உபயோகித்தால் ஏழுவகை உலோகங்களும் தங்கமாக மாறிவிடும். ரசத்தை அருந்தினால் நீங்கள் கிழத்தன்மையிலிருந்தும், வியாதியிலிருந்தும் நிரந்தர விடுதலை பெறலாம்" என்றான்.

விக்கிரமாதித்தன் அவைகளைப் பெற்றுக்கொண்டு பலிச் சக்கரவர்த்தியிடம் விடைபெற்றான். குகைக்கு வெளியே வந்ததும் குதிரைமீது ஏறிக்கொண்டு நகரத்திற்கு வந்தான்.

வழியிலே அரசனை வறுமையால் பீடிக்கப்பட்டு மிகவும் துன்பமடைந்த ஏழைப் பண்டிதன் ஒருவன் சந்தித்தான். அவனுடன் மகனும் வந்திருந்தான். அவர்கள் அரசனை வணங்கிப் போற்றினார்கள்.

"அரசே! நாங்கள் சகல சாஸ்திரங்களையும் அறிந்து பயன் என்ன? வறுமை எங்களை அணு அணுவாகச் சிதைத்துக் கொண்டிருக்கிறது. எங்கள் குடும்பம் மிகப் பெரியது. பசி தாளமாட்டாது நாங்கள் நாளுக்கு நாள் இறந்து வருகிறோம். எங்களைக் காப்பாற்றுங்கள். இன்றையச் சாப்பாட்டுக்கு ஏதாவது உதவுங்கள்" என்று வேண்டினர்.

"ஐயா! தற்சமயம் என் வசம் பணமில்லை. நான் வெளியிலிருந்து இப்போது தான் திரும்பி வந்து கொண்டிருக்கிறேன். ஆனால் விலைமதிப்பற்ற அற்புதப் பொருள்கள் இரண்டு இருக்கின்றன. இந்த ரசத்தை அருந்தினீர்களானால் உங்களைக் கிழத் தன்மையிலிருந்தும், வியாதியிலிருந்தும் விடுவிக்கும். ரசாயனமோ ஏழு வகை உலோகங்களையும் தங்கமாக மாற்றும் சக்திவாய்ந்தது. உங்களுக்கு எது விருப்பமோ கேளுங்கள். அதைத் தருகிறேன். தற்போது என்னால் செய்யக்கூடிய உதவி இது ஒன்றே!" என்றான்.

"அரசே! வியாதியிலிருந்தும் கிழத் தன்மையிலிருந்தும் விடுவிக்கும் ரசத்தை எங்களுக்குத் தாருங்கள்" என்றார் தந்தை.

பையனுக்கு தகப்பனாரின் கோரிக்கை பிடிக்கவில்லை.

"அப்பா! ரசத்தினால் என்ன பயன்? நாம் கிழத் தன்மையிலிருந்தும் விடுபட்டுத்தான் பிரயோசனம் வந்துவிடப் போகிறதா? அப்போது ஏழ்மை நம்மைவிட்டு விலகிவிடுமா? உலோகங்களைத் தங்கமாக மாற்றக்கூடிய ரசாயனத்தைக் கேட்டு வாங்குங்கள். அதன் மூலம் நம் வறுமையை விரட்டி சுகமாக வாழ்வோம்" என்றான்.

இருவருக்கும் வாக்குவாதம் உண்டாயிற்று. அதைக் கண்ட விக்கிரமாதித்தன் இரண்டையுமே அவர்களிடம் கொடுத்து விட்டான்.

"இரண்டையுமே நீங்கள் எடுத்துச் சென்று சுகமாக வாழ்க்கையை நடத்துங்கள்" என்றான்.

அரசனை வாயாற வாழ்த்திவிட்டுச் சென்றனர் பண்டிதரும் அவர் மகனும்.

இவ்வாறு பதுமை கதை சொல்லி முடித்ததும் அன்றையப் பொழுதும் அஸ்தமித்துவிட்டது.

*(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் பத்தொன்பதாம் படிக்குக் காவலான மதனுவதி என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)*

## 31-வது நீதிவாக்கியவல்லிப் பதுமை சொல்லிய எட்டு தேவ கன்னிகையரின் கதை

மறுநாள் போஜராஜன் மறுபடியும் சிம்மாசனத்தில் ஏறி அமர முயன்றபோது முப்பத்தி ஒராம் படிக்கட்டுக்குக் காவலான நீதி வாக்கியவல்லி என்னும் பதுமை புதிய கதையொன்று சொல்லத் தொடங்கியது.



• • •

நீதிநெறி வழுவாது விக்கிரமாதித்தன் ஆட்சி புரிந்து வரும் நாளில் புத்திசிந்து என்னும் பெயருடைய மந்திரி ஒருவர் இருந்தார். அவருக்கு அனர்கலன், என்னும் மகன் இருந்தான். மற்ற இளைஞர்களைப்போல் அவனும் படிப்பிலே கவனத்தைச் செலுத்தாமல் சதா திரிவதும், அதிகமாக நெய் ஊற்றிக் கொண்டு விருந்து சாப்பிடுவதுமாகக் காலம் கழித்து வந்தான்.

ஒருநாள் புத்திசிந்து தன் குமாரனை அழைத்து, "அனர்கலா! நீ என் வயிற்றில் பிறந்து என்ன

பிரயோசனம்! முரட்டுத்தனமுடையவனுகவே இருக்கிருய். படிப்பிலே கவனம் செலுத்தவில்லை. பக்தியற்றவனுக. முட்டாளாக இருக்கிருய். குழந்தையற்ற மனிதனுடைய வீடு சூனியமானது; உற்ருர் உறவினர் இல்லாத இடம் அத்துவானப் பிரதேசமே: முட்டாள்களின் இதயம் சூனியமாகவே இருக்கும்; எல்லாவகைகளிலும் சூனியம் என்பது ஏழைமையே! இவ்விதம் சொல்லியிருக்கிருர்கள். உன்ஞல் எனக்குப் பிரயோஜனமே இல்லை. நற்குணமுள்ளவனுமின்றி அறிவுள்ளவனுமின்றி இருக்கும் பிள்ளையின் பிறப்பினுல் என்ன பிரயோஜனமிருக்கிறது? கன்று ஈனுததும், பால் கறக்காததுமான பசுவினுல் என்ன பிரயோஜனம்? பிள்ளைகள் அதிகமாகப் பிறந்து எண்ணிக்கையை அதிகரிப்பதனுல் மட்டும் என்ன உபயோகம்? குடும்பத்தை சம்ரக்ஷிக்கக் கூடியவனும், குடும்பமே அவன் ஆதரவை எதிர்பார்த்து நிற்கக் கூடிய நிலையிலே உள்ளவனுமான ஒரு மகன் இருந்தாலே போதுமானது. அப்புறம் என்ன? மகன் அறிவாளியாக இல்லாமல் அழகு, செல்வம், சக்தி உடையவனுக இருந்தாலும், அவன் பிறக்காமல் இருந்தாலே நல்லது; உரிய காலத்தில் தந்தை தாயுடன் கூடாமலே இருந்திருக்கலாம். அந்தப் பிள்ளை இறந்து பிறப்பது நல்லது; பிள்ளை அல்லாமல் பெண்ணுகப் பிறந்தால் மிகவும் நல்லது. அவனைவிட மலடான மனைவி எவ்வளவோ மேல்; கல்யாணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சாரியாக இருந்து விடுவது இன்னும் மேலானது."

தகப்பஞரின் வார்த்தைகளைக் கேட்ட அனர்கலனுக்கு வைராக்கியம் ஏற்பட்டது. தன் வாழ்க்கையை வீணடித்து விட்டதாக வருந்தினுன். மஞேவியாகூலம் அவனுக்கு வெறுப்பைக் கொடுத்தது. ஆகவே, அவன் தன் தேசத்தை விட்டு வெளிநாட்டுக்குச் சென்று விட்டான்.

வெளி நாட்டிலே ஆசாரியார் ஒருவரைத் தேடிக் கண்டு பிடித்து, அவரிடம் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தான். எல்லா சாஸ்திரங்களையும் கற்றுக் கொண்டதும், அனர்கலன் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு, ஊர் திரும்பினுன்.

வரும் வழியிலே காட்டின் நடுவே ஆலயம் ஒன்றைக் கண்டான். ஆலயத்தினெதிரில் அழகிய ஏரி ஒன்றிருந்தது. சக்ரவாகப் பறவைகள் தெளிந்த ஏரி நீரிலே ஜோடி ஜோடியாக நீந்திக் கொண்டிருந்தன. தாமரைப் பூக்கள் காற்றிலே அசைந்து ஆடுவது, அங்கு வருவோரை வரவேற்பது போலிருந்தது. அந்த ஏரியிலே அனர்கலன் மற்ருெரு அதிசயத்தையும் கண்டான். ஏரியின் ஒரு பகுதி சுடசுட தண்ணீர் உடையதாக இருந்தது.

அஸ்தமித்துவிடவே அவன் இரவை அந்த ஏரிக்கரையிலேயே கழிக்கத் தீர்மானித்தான்.

உலகமெல்லாம் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அவ்வேளையில் சூடான தண்ணீர் உள்ள பகுதியிலிருந்து எட்டு தேவமாதர்கள் வெளியே வந்தனர். அவர்கள் கோயிலுக்குச் சென்று, அங்கு குடி கொண்டிருக்கும் பகவானை சோடசோபசார பூஜை செய்து ஆராதித்தார்கள். பிறகு, தெய்வ சந்நதியில் ஆடிப்பாடி தெய்வத்தை வழிபட்டனர். பகவானும் அவர்களுடைய ஆராதனையால் திருப்தியுற்றவராய் அவர்களுக்குப் பிரசாதம் அருளினார்.

அனர்கலன் இருந்த இடத்தை விட்டு அசையாமல் இக்காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். விடியும் நேரத்தில் அவர்கள் திரும்பிச் செல்லும்போது அங்கு உட்கார்ந்திருந்த அனர்கலனைக் கண்டார்கள்.

"ஐயா, நீங்களும் வருகிறீர்களா? எங்கள் நகரத்திற்குப் போகலாம்" என்று அவர்களில் ஒருத்தி மோகப் பரவசத்துடன் அவனை அழைத்தாள்.

"ரொம்பவும் சந்தோஷம். நானும் உங்களுடன் வருகிறேன்" என்று புறப்பட்டான் அனர்கலன்.

அவர்கள் நீரினுள் மூழ்கி மறைந்தனர். அவர்களுடன் வந்த மந்திரிகுமாரனோ தண்ணீரில் இறங்கவில்லை. பயந்து நின்று விட்டான்.

அதற்குப் பிறகு அவன் அங்கு நிற்கவில்லை. தன்னுடைய ஊருக்குத் திரும்பி பெற்றோர்களைக் கண்டு சேவித்தான். உறவினர்களையும், நண்பர்களையும் சந்தித்து தான் சௌக்கியமாக ஊர் திரும்பியதை அறிவித்தான். மறுநாள் விக்கிரமாதித்த மன்னனைப் பார்ப்பதற்காக அரண்மனைக்குச் சென்றான்.

"அனர்கலா! வா. இத்தனை காலமாக உன்னைக் காணவில்லையே. எங்கு சென்றிருந்தாய்?" என்று அன்புடன் கேட்டான் விக்கிரமன்.

"அரசே! நான் சகல சாஸ்திரங்களையும் கற்றுவர வெளி நாட்டிற்குச் சென்றிருந்தேன்" என்று பதிலளித்தான் அனர்கலன்.

"மிகவும் சந்தோஷம்! வெளி நாட்டிலே நீ கண்ட ஆச்சரிய கரமான செய்திகளைச் சொல்லு. உன்னுடன் நானும் கேட்டு ஆனந்திக்கிறேன்" என்றான் வேந்தன்.

அனர்கலன் காட்டின் மத்தியிலே, ஏரிக்கரையில் தான் கண்ட அதிசயத்தைத் தெரிவித்தான்.

"அரசே! என்னையும் தங்களுடன் வருமாறு அழைத்தார்கள். நானும் கிளம்பிச் சென்றேன். அவர்கள் நீரில் மூழ்கி கீழே சென்றதும், எனக்கு தைரியம் வரவில்லை. பின் தங்கி விட்டேன். நீரினடியில் என்னென்ன அதிசயங்கள் இருக்கின்றனவோ?" என்றான்.

அரசன் அளவில்லா ஆச்சரியம் அடைந்தான். அப்போதே அங்கு சென்று ஏரியினடியில் இருக்கும் தேவமாதர்களின் நகரத்தைக் காண விரும்பினான். "அனர்கலா! இப்போதே கிளம்பு. உன்னுடன் நானும் வருகிறேன். அந்த இடத்திற்குப் போவோம்" என்றான்.

அவ்விதமே இருவரும் புறப்பட்டுச் சென்றனர். ஏரிக்கரையிலே இரவைக் கழிக்கத் தங்கினார்கள். நடு இரவிலே அன்றைய தினமும் தேவமாதர்கள் எட்டு பேர்களும் ஏரியிலிருந்து வெளி வந்தனர். நேராக ஆலயத்தை அடைந்து ஆண்டவனுக்கு ஆராதனைகளைச் செய்தனர். விடியற் காலையில் அவர்கள் திரும்பிச் செல்லுகையில் அரசனைக் கண்டு தங்களுடன் வருமாறு அழைத்தனர். அரசன் குதூகலமாகக் கிளம்பிச் சென்றான். அவர்களைத் தொடர்ந்து நீரிலே மூழ்கி பாதாள லோகத்தில் இருக்கும் தேவ மாதர்களின் நகரத்தை அடைந்தான். அவனுடைய தீரச் செயலைக் கண்டு அந்தப் பெண்கள் எல்லோரும் மகிழ்ந்தனர்.

அரசனை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றனர். வைடூரியங்கள் பதிக்கப் பெற்ற சிம்மாசனத்தில் அரசனை அமரச் செய்து, அவன் பாதங்களைக் கழுவி கௌரவித்தனர். பணிப் பெண்கள் அரசனுக்குப் பலவிதங்களில் உபசாரம் செய்தனர்.

"அரசே! இந்திரன் முதலான தேவர்கள் எங்களை அடைய காத்திருக்கும்போது உங்கள் தைரியத்தைக் கண்டு எங்கள் தலைவராக்க விரும்புகிறோம். அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய எட்டு வகை சித்திகளின் சொரூபங்களே நாங்கள். எங்களை அடைவதன் மூலம் நீங்கள் சித்திகள் அனைத்தையும் பெற்றவர்களாவீர்கள்" என்றனர் அவர்கள்.

அரசனின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது.

"தேவமாதர்களே! உங்கள் வார்த்தைகள் என்னைப் பெரிதும் மகிழ்ச்சியுறச் செய்கின்றன. காரியச்சித்தி ஏற்பட்டாலே உலகத்தில் மனிதர்களுக்கு உள்ளம் நிறைந்து சந்தோஷம் ஏற்படுகிறது. இங்கு நான் வந்தது உங்கள் ராஜ்யத்தை அடைவதற்கு விரும்பியோ, ஆனந்தப்படுவதற்கோ, அல்லது உங்களை அடைந்து உங்கள் அபூர்வ சக்தி பெறுவதற்கோ அல்ல! இங்குள்ள அற்புதக் காட்சிகளைக் கண்டு களிக்கவே வந்தேன். என்மீது யாரும் வருத்தம் கொள்ள வேண்டாம். உங்கள் கோரிக்கையை ஏற்றுக்கொள்ளும் நிலையில் நான் இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவிக்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள்" என்றான்.

விக்கிரமாதித்தனின் மன உறுதியை மாற்ற முடியாது என்பதை உணர்ந்தனர். தங்கள் சக்திகளை எட்டு வைரங்களாக மாற்றி அரசனிடம் அளித்தனர்.

"அரசே! இவைகளைத் தாங்கள் பெற்றுக் கொள்ள வேண்டும். மறுக்கக்கூடாது" என்று வேண்டினர்.

அரசன் பணிவோடு அவைகளை ஏற்றுக் கொண்டான். பிறகு அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு உஜ்ஜயினியை நோக்கிப் புறப்பட்டான்.

காட்டிலே தளர்ந்த நடையுள்ள வயோதிகன் ஒருவன் அரசன் முன் எதிர்ப்பட்டான். அவன் தடி ஒன்றை ஊன்றிக் கொண்டு அதனுதவியால் தட்டுத் தடுமாறி வந்து கொண்டிருந்தான். அரசன் குதிரையை விட்டிறங்கி அவனருகில் சென்றான்.

"ஐயா! இந்தத் தள்ளாத வயதில் எங்கு செல்லுகிறீர்கள்? உங்களால் நடக்கக்கூட முடியவில்லை. துஷ்டமிருகங்கள் நிறைந்துள்ள இந்தக் காட்டுப் பிரதேசத்தில் உங்களுக்கு என்ன வேலை? உற்றார் உறவினர் ஒருவரும் உங்களுக்கில்லையா?" என்று கேட்டான்.

"அரசே! வேதங்களை முதலில் அளித்தவரும், விஷ்ணுவின் கமலத்திலிருந்து உற்பத்தியானவருமான நான்முகனாகிய பிரும்ம தேவன் உன்னைக் காப்பாற்றட்டும்" என்று ஆசீர்வதித்துவிட்டுப் பின்வருமாறு தெரிவித்தான்.

"அரசே! நான் சம்பாபுரத்தில் வசித்து வருகிறேன். என் பெயர் விஷ்ணுசர்மன் என்பது. என் குடும்பமோ பெரியது. ஆனால் நானோ பரம ஏழை. என் மனைவியின் ஏசல்களைச்

சகிக்கமாட்டாமல் வீட்டை விட்டு வெளியே புறப்பட்டு வந்து விட்டேன். அரசே! மனிதன் ஏழையாகி விடும்போது அவனை உற்றார் உறவினரும் ஏன் அவன் மனைவியுங்கூட, திரஸ்கரித்து விடுகிறார்கள் என்ற வார்த்தை எவ்வளவு உண்மையானது! மனிதர்கள் தங்கள் செல்வத்தை இழந்த போது, அவர்கள் எவ்வளவுதான் சக்திவாய்ந்தவர்களாக இருந்தாலும் எத்தனையோ முறை உழைத்திருந்தாலும், அவர்களின் எஜமானர்கள் அவர்களை வெறுக்கத் தொடங்கிவிடுவார்கள்; மேன்மையான நண்பர்களும் அவர்களை திரஸ்கரித்து விடுகிறார்கள்; அவர்களுடைய நற்குணங்கள் பிரகாசிக்காமல் போய்விடுகின்றன; அவர்களுடைய பிள்ளைகள் அவர்களைக் கைவிட்டு விடுகின்றனர்; கஷ்டங்கள் அதிகமாகின்றன; அவர்களுடைய மனைவிமார்கள் நற்குணங்களை உடையவர்களாகவும், கீர்த்திவாய்ந்த வம்சத்தில் பிறந்தவர்களாயுமிருந்தாலும் அன்புடன் நேசிப்பதில்லை; அவர்கள் நண்பர்கள் தானாக மறைந்து விடுகின்றனர். ஆகவே, மனிதர்கள் நிறைந்த இவ்வுலகில் மனிதர்கள் பணம் படைத்தவர்களாக இல்லாவிட்டால், எல்லா கலைகளையும் பூரணமாகத் தெரிந்து கொள்ள முடியாது. ஆயுதம் (அஸ்திரம்) சாஸ்திரம் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி உடையவனாக இருப்பதைத் தவிர, அவன் தைரியசாலியாகவும், அழகாகவும், அதிர்ஷ்டக் காரனாகவும், வாய்சாலகமுடையவனாகவும் இருந்தும், பிரயோசனமில்லை! மேலும், ஒரு மனிதன் செல்வத்தை இழந்ததும், அவன் பழைய குணங்கள், பெயர், மாறாத புத்தி, வாக்கு உடையவனாக இருந்தாலும் வேற்று மனிதனாக மாறிவிடுகிறான். எத்தனை ஆச்சரியமானது இது? அரசே! என் மனைவி விஷம் நிறைந்த கொடுமையான நாக்கை உடையவள். அவள் அடிக்கடி என் ஏழ்மையைக் குறித்து ஏசி வந்தாள். "பூர்வ ஜென்மத்தில் செய்த வினைப்பயனே உங்களிடம் கொண்டுவந்து தள்ளியுள்ளது. உங்களுக்குத் தொழிலில் புத்திசாலித்தனமே கிடையாது. எப்போதும் கஷ்டம்தான். உங்களை மணந்ததிலிருந்து இன்று வரை எனக்கு நல்ல துணிமணிகள் உண்டா? சல்லடைக் கண்களாகிவிட்ட கந்தைகளையே உடுத்திவருகிறேன். என் வாழ்க்கை இப்படியே கஷ்டத்தில் முடியப்போகிறது. தரையில் படுத்துப் படுத்து என் அவயவங்கள் காய்த்துப் போய் விட்டன; வயிற்றுக்குப் போதுமான உணவு கிடையாது; சந்தோஷம் என்பதே மருந்துக்குக்கூட கிடையாது. ஆசைப்பட்ட ஒரு பொருளை அடைந்தோம் என்பது உண்டா? மனிதனுக்குப் பணமில்லையென்றால் அவன் பிணத்துக்குச் சமானமானவனே! அவனுடன் வசிக்க விரும்பாமல் அவன் குடும்பத்தார்கள்கூட வெளியேறி விடுவார்கள். அறிவு, புத்தி, பணம் ஆகிய மூன்றையுமுடைய

கணவனை மணந்த பெண்ணை அவள் உறவினர்கள் கொண்டாடுவார்கள். பணமில்லாத ஏழையைக் கட்டிக்கொண்டு வாழ்நாள் முழுவதும் அல்லல் படுவதைவிட அவள் இளம் வயதிலேயே விதவையாகிவிடுவது எவ்வளவோ மேல்" இவ்வாறு அவள் சொல்லம்புகள் மூலம் என் உள்ளத்தை வெகுவாகப் புண்படுத்திவிட்டாள். அதைப் பொறுக்கமாட்டாமல் நான் கிளம்பிவிட்டேன். இனி செல்வத்துடன் வீட்டிற்குத் திரும்புவது; இல்லையேல் அழிவை அடைவது என்ற வைராக்கியத்துடன் அலைந்து கொண்டிருக்கிறேன், மன்னவா!" என்றான் அவன்.

அவனுடைய பரிதாப நிலையைக் கண்டு விக்கிரமாதித்தன் மிகவும் மனம் வருந்தினான். சிறிதும் யோசனை செய்யாமல் தேவமாதர்கள் தனக்களித்த எட்டு வைரங்களையும் அக்கிழவனிடத்தில் சந்தோஷமாகக் கொடுத்துவிட்டான். அவைகளின் சக்தியை விளக்கி, "ஐயா! இவைகளை எடுத்துச் சென்று உன் சீர் கெட்ட வாழ்வை நலம்படுத்திக் கொள்" என்று அனுப்பி வைத்தான்.

• • •

கதையை முடித்த பதுமை, போஜராஜனிடம், "மன்னவரே எங்கள் அரசனுக்கு ஈடு இணையுள்ள அரசனன்றோ இச் சிம்மாசனம் ஏறலாம்?" என்றது.

அச்சமயம் அந்திப்பொழுதாகி விட்டதால் போஜராஜன் மௌனமாகத் திரும்பிச் சென்றான்.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் 31-வது படிக்குக் காவலான சுரதகாவரா என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

## 32-வது ஞானப்பிரகாசவல்லிப் பதுமை சொல்லிய சாலிவாகனன் கதை

முப்பத்து இரண்டாம் நாள் காலையில் எழுந்திருக்கும்போது போஜராஜன் உள்ளம் என்றுமில்லா குதூகலம் நிறைந்திருந்தது. முப்பத்தொரு பதுமைகளும் கதைகள் சொல்லி முடித்துவிட்டன. இனி முப்பத்திரண்டாவது பதுமை மட்டுந்தான் எஞ்சியுள்ளது. அதற்கு மேல் போஜராஜனை தடுத்து நிறுத்திக் கதை சொல்லப் பதுமை கிடையாது.



நித்தியப்படி செய்ய வேண்டிய பூஜைகளை முடித்துக் கொண்டு போஜ ராஜன் தன் குலதெய்வத்தை மனதில் நினைத்துக்கொண்டு நவரத்தின சிம்மாசனத்தில் ஏறத் தொடங்கினன். அந்த அதிசயச் சிம்மாசனத்தின் முப்பத்திரண்டாவது படியில் காவலிருந்த ஞானப் பிரகாசவல்லி என்னும் பதுமை கலீரெனச் சிரித்து, "நில்லும், போஜராஜரே! எங்கள் விக்கிரமாதித்த பூபதியைப் போன்ற வேந்தரன்றோ இச்சிம்மாசனம் ஏறி அமரலாம்!" என்றது.

"பதுமையே! இதுகாறும் விக்கிரமாதித்தன் பிறந்தது முதல் அவன் சகல சௌபாக்கியங்களுடன் ஆட்சி புரிந்தவரையில் முப்பத்தொரு பதுமைகளும் தெரிவித்தன. விக்கிரமன் எவ்விதம் இப்பூவுலக வாழ்வை நீத்தான் என்பதைத் தெரிந்து கொள்ள ஆவலுள்ளவனயிருக்கிறேன். அதைத் தெரிவிப்பாயா?" என்று போஜராஜன் பதுமையைப் பார்த்துக் கேட்க, பதுமையும் அதற்கிணங்கி சொல்லத் தொடங்கியது.

• • •

காவேரி நதி தீரத்திலே பல்லாண்டுபுரி என்னும் நகரம் ஒன்று உண்டு. அந்நகரத்திலே இராமகிருஷ்ண அவதானி என்பவன் இருந்து வந்தான். அவன் சகல கலைகளையும் படித்து தேர்ச்சி பெற்றிருந்தான். யுக்த வயதில் அவனுக்குத் திருமணம் நடந்தது. அப்போது அவனது ஜாதகத்தைப் பரிசிலனை செய்தபோது, பன்னிரண்டு வருடம் கழித்து சித்திரைமாதம் பதினைந்தாம் தேதி சுக்கிரவாரம் ரோகிணி நக்ஷத்திரத்தில் இரவு பன்னிரண்டு நாழிகையில் அவன் எந்தப் பெண்ணுடன் கூடினலும் அதனல் பிறக்கும் பிள்ளை அரசனுவான் என்று தெரிந்தது. அதன்மீது அவனும் தேச யாத்திரை கிளம்பி புண்ணிய க்ஷேத்திரங்களைச் சுற்றிக் கொண்டு, பன்னிரண்டு வருடம் கழித்துத் திரும்பிவந்தான். அப்போது காவிரியில் இருகரையும் புரண்டு வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது.

அன்றைய இரவு தவறிவிட்டால் அவன் ஜாதகத்தில் குறிக்கப்பட்ட சுப முகூர்த்தம் தவறிவிடும். அக்கரைக்குப்போக வழியில்லாது தவித்துக் கொண்டு நின்றான்.

அந்தக் கரையில் வேதகிரி என்றொரு சிற்றூர் இருந்தது. அவ்வூரில் உள்ள கிராமவேளான் என்னும் குயவன் ஆற்றங்கரையில் தவித்து நிற்கும் ராமகிருஷ்ண அவதானி அருகில் சென்று விசாரித்தான்.

"ஐயா! இன்றைய இரவு நான் எந்தப் பெண்ணுடன் கூடினாலும் அதன் மூலம் பிறக்கும் குழந்தை பூமண்டலத்தின் தன்னிகரில்லா அரசனாகும். என்னை எதிர்ப்பார்த்து என் மனைவியும் சுற்றத்தாரும் காத்திருப்பார்கள்! நதியிலோ வெள்ளம் புரண்டு வந்து என்னை அக்கரை செல்ல முடியாதபடி தடுக்கிறது!" என்று இராமகிருஷ்ண அவதானி வருத்தத்தோடு தெரிவித்தான்.

அதைக்கேட்ட குயவன், "ஸ்வாமி! வருந்தாதீர்கள். எனக்கொரு புத்திரியுண்டு! அவள் யுக்த வயதை அடைந்து விட்டாள். இன்று மஞ்சள் நீராடி மணநாளிரவிற்கு ஏற்றவளா யிருக்கிறாள். தாங்கள் விரும்பினால் அவளுடன் இன்றைய இரவு தங்கிவிட்டுப் புத்திர பாக்கியமளித்து நாளைக் காலையில் வெள்ளம் வடிந்ததும் செல்லுங்கள்" என்று வேண்டினான். அவதானியும் அதற்கிணங்கி, அன்றைய இரவு அவனுடைய புத்திரியுடன் இன்புற்றிருந்துவிட்டு அதிகாலையில் புறப்பட்டுச் சென்றான்.

குயவன் புத்திரியான அன்னபூரணியும் கர்ப்பமுற்று அழகிய ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தாள். சாலிவாகனன் என்று பெயரிடப்பட்ட அக்குழந்தை வளர்ந்து பெரியவனானான். தன் தாத்தாவுடன் அவன் களிமண்ணால் பொம்மைகள் செய்யக் கற்றுக்கொண்டான். குதிரை, யானை, இரதம், போர்வீரர்கள் போன்ற பொம்மைகளை லக்ஷக்கணக்கில் செய்து வீட்டைச் சுற்றிலும் நிறுத்தி வைப்பான்.

நாளடைவில் சாலிவாகனன் சகல கலைகளையும் கற்றுத் தேர்ந்தான். அவனுடைய அறிவையும் சாமர்த்தியத்தையும் கண்ட பலர் அவனைக் கௌரவித்தனர். சிறிது காலத்துக்கெல்லாம் சாலிவாகனன் மைசபுரியை ஆண்டுவந்த விசுவநாத ராஜனுக்கு இரண்டாம் மந்திரியாக நியமிக்கப்பட்டான்.

மைசபுரிராஜன் விக்கிரமாதித்தனுக்குக் கப்பம் கட்டி வந்தான். சாலிவாகனன் கப்பத்தை நிறுத்திவிட்டான். இதைக் கேள்வியுற்ற விக்கிரமாதித்தன், கப்பம் கேட்டு தூதுவரை அனுப்பி வைத்தான். "என்னை வெற்றிகொண்டு கப்பம் பெற்றுக்கொள்ளட்டும்" என்று சாலிவாகனன் தூதுவரிடம் வீராவேசத்துடன் சொல்லி அனுப்பினான்.

அதனால் கோபம் கொண்ட விக்கிரமாதித்தன் தன் படைகளைத் திரட்டிக் கொண்டு மைசபுரியை நோக்கிச் சென்றான். சாலிவாகனன் வேதகிரியில் தான் செய்து வைத்திருந்த பொம்மைகளை எடுத்துவந்து நகரைச் சுற்றிலும் வைத்தான். விக்கிரமனின் படைகள் அருகில் நெருங்கியதும்; சாலிவாகனன் அப்பொம்மைகளின் மீது தண்ணீர் தெளித்து மந்திரோச்சாடனம் செய்தான். உடனே அத்தனை பொம்மைகளும் உயிர் பெற்றெழுந்து விக்கிரமனின் படைகளின் மீது பாய்ந்து துவம்சம் செய்து நிர்மூலமாக்கின.

அதைக் கண்ட விக்கிரமாதித்தன் தன்னுடைய இரண்டாயிர வருட ஆயுட்காலம் முடிந்து சாகுங்காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தான். உடனே பட்டியுடன் வேதாளத்தின் மீது ஏறிக்கொண்டு உஜ்ஜயினி நகரம் வந்தான். பத்திரகாளியம்மனைக் கண்டு தரிசித்து வேதாளத்தின் சாபத்தை நீக்கி அவனை மனித உருவம் எடுக்கச் செய்து பழைய ஸ்தானிகப் பதவிக்குச் செல்லுமாறு அனுப்பி வைத்தான். பிறர் தன் உயிரைக் கவருவதை விரும்பாத பட்டி ஐம்புலன்களை அடக்கி உயிரை விட்டான்.

விக்கிரமனும் பட்டியும் ஆகாய மார்க்கமாகத் தப்பிச் செல்வதைக் கண்ட சாலிவாகனன் மண்ணால் ஓர் அஸ்திரம் செய்து மந்திரம் உச்சரித்து விக்கிரமனின் தலையை அறுத்து வருமாறு அனுப்பினான்.

காளிகோயிலில் நின்றிருந்த விக்கிரமாதித்தனின் தலையை அறுத்துத் தள்ளிவிட்டு அஸ்திரம் திரும்பிச் சென்றது. விக்கிரமாதித்தனின் துண்டிக்கப்பட்ட தலை அரண்மனைக்குப் பறந்து சென்று அவனுடைய அந்தப்புர ராணிகளின் மத்தியில் போய் விழுந்தது. அதைக் கண்ட அவர்கள், வருந்தி அவன் உடலைத் தேடிக் கண்டுபிடித்து சிதை மூட்டி அதில் விழுந்து உயிரை விட்டார்கள். அப்பால் சாலிவாகனன் உஜ்ஜயினியைக் கைக்கொண்டு பலகாலம் நீதி நெறியுடன் ஆண்டு வந்தான்.

•　•　•

கதையை முடித்த பதுமை போஜராஜனை நோக்கி மேலும், சொல்லியது, "மகாராஜனே! தாங்களும் சாதாரணமான மனிதர் அல்ல; நீங்களும் விக்கிரமாதித்தனும் நாராயணரின் அவதாரங்களே, இந்தச் சமயத்தில் உங்களுக்கு இணையாக வேறு அரசன் இப்பூவுலகில் கிடையாது. நீங்கள் மாசற்ற நடத்தை யுடையவர்கள்; சகல கலைகளிலும் தேர்ச்சி பெற்றவர்; உதாரகுண முள்ளவர்; உங்களுடைய கருணையினால் நாங்கள் முப்பத்து இரண்டு பேர்களும் சாப விமோசனம் அடைகிறோம். எங்கள் சாபம் தீர்ந்தது."

"என்ன சொல்லுகிறாய்? நீங்கள் அனைவரும் சாபத்தினால் இவ்வுருவை அடைந்தீர்களா? நீங்கள் யார்? உங்களை யார் சபித்தது. எல்லாவற்றையும் விவரமாகச் சொல்" என்று போஜராஜன் கேட்டான்.

"போஜராஜனே! நாங்கள் முப்பத்து இரண்டு பேர்களும் பார்வதி தேவியின் தோழிமார்கள். ஒரு சமயம் நாங்கள் தேவியுடன் இருக்கும் சமயத்தில் ஈசுவரன் அங்கு வந்து சேர்ந்தார். அவர் ஆசை நிறைந்த கண்களுடன் எங்களை நோக்கியதைக் கண்ட தேவி, கோபம் கொண்டவளாய் எங்களைப் பின்வருமாறு சபித்தாள்:

"என் கணவர் வருவதை அறியாமல் அவரெதிரில் அசைவற்றிருந்ததற்காக நீங்கள் உயிரற்ற பதுமைகளாக உருமாறி இந்திரனுடைய சிம்மாசனத்தை அடைவீர்களாக!"

"அதன் மீது நாங்கள் அனைவரும் தேவியின் பாதார விந்தத்தில் விழுந்து வணங்கி எங்களைக் காப்பாற்றுமாறு கெஞ்சினோம். தேவியும் எங்கள் மீது கருணை கொண்டவளாய் சாபத்திலிருந்து விமோசனம் அடையும் வழியையும் தெரிவித்தாள். விக்கிரமாதித்த ராஜன் இந்திரனிடமிருந்து இந்த அதிசய சிம்மாசனத்தைப் பரிசாகப் பெற்று பூவுலகத்துக்குக் கொண்டு செல்வானென்றும், அவன் அனேக வருடங்கள் நீதிதவறாமல் பரிபாலனம் செய்து சிவபதத்தை அடைந்த பிறகு, மண்ணிலே புதைந்து கிடக்க வேண்டுமென்றும், பிற்பாடு போஜராஜனால் சிம்மாசனம் கண்டு எடுக்கப்பட்டதும், அவனுக்கு விக்கிரமனின் குணவிசேஷங்களைக் கதையாகத் தெரிவித்து வரும்போது சாப விமோசனம் ஏற்படுமென்றும் தெரிவித்தாள்! அதுபோல் நாங்கள் முப்பத்திரெண்டு பதுமைகளாகி இச்சிம்மாசனத்தின் படிகளில் காவற் பதுமைகளாக நின்றோம்!

விக்கிரமாதித்தன் இரண்டாயிரம் வருடம் இப்பூமியில் பிரசித்தி பெற்று விளங்கி சிவபதவியடைந்த பிறகு உஜ்ஜயினி மாகாளிபுரத்தில் சில காலத்திற்கு முன்பு மண்மாரி பெய்து நாடு காடு மேடாகியது. இந்த சிம்மாசனம் மண்ணிற்குள் புதைந்து விட்டது. பிறகு நீர் வந்து இச் சிம்மாசனத்தைக் கண்டு பிடித்தீர் போஜராஜரே! எங்களுக்குச் சாபவிமோசனம் ஆகி விட்டது. ஆகவே எங்களுக்கு விடை கொடுங்கள். உங்களுக்குத் தேவையானவற்றைத் தெரிவியுங்கள்" என்று பதில் அளித்தது.

"பதுமையே! எனக்கு என்ன குறை இருக்கிறது? அளவற்ற ஐசுவரியங்கள் மலைபோலக் குவிந்திருக்கையில் குறை என்ன? ஆனால், மற்றவர்களுக்காக ஒரு வரம் கேட்கிறேன். எவனொருவன் விக்கிரமாதித்தனின் பராக்கிரமச் செயல்களையும் உதார குணங்களையும் கேட்கிறானோ, அன்றி சொல்கிறானோ, அவனுக்குப் பலம், கீர்த்தி, துணிவு, மேன்மை மற்றும் அனேக நற்குணங்கள் விருத்தி அடைய அருள வேண்டும். அரசனின் வீர தீர பராக்கிரமங்கள் என்றும் அழியாமல் இப்பூவுலகில் நிரந்தரமாய் உலவி வர வேண்டும். அவற்றைக் கேட்பவர்கள், பூதம், பிரேதம், பிசாசு, வேதாளம், மோகினி ஆகிய கணங்களால் எவ்வித ஆபத்துமின்றி வாழ்ந்து வரவேண்டும்" என்று போஜ ராஜன் பிரார்த்தித்தான்.

"அவ்வாறே நடக்கட்டும்" என்று பதுமைகள் அருளின.

போஜராஜன் சிம்மாசனத்தை விட்டுக் கீழிறங்கினான். நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மகேசுவரனின் தங்கச்சிலையை வரவழைத்து சிம்மாசனத்தில் அமர்த்தினான். பிறகு மகிழ்ச்சியால் உள்ளம் நிறைந்தவனாய் மகேசுவரனுக்குப் பூஜையைத் தொடங்கினான்.

பூஜை முடிந்து கற்பூர ஆராதனையும் முடிந்தது. அப்போது அனைவரும் வியந்து காணும் அதிசயம் ஒன்று நிகழ்ந்தது. தரையிலே வைக்கப்பட்ட அதிசயச் சிம்மாசனம் தன் இருக்கையை விட்டு மெல்ல உயரக் கிளம்பியது. பதுமைகள் முப்பத்திரெண்டு பேரும் அரசனை வாழ்த்தி ஆசீர்வதித்தன. போஜராஜன் கைகளைக் குவித்து வானிலே உயர்ந்து செல்லும் சிம்மாசனத்தை வணங்கினான். சிறிது நேரத்துக்கெல்லாம்

சிம்மாசனம் தேவலோகம் நோக்கிச் சென்று வானவீதியில் மறைந்து விட்டது.

(மேற்கூறிய கதை வடமொழி மூலத்தில் ஜகன்மோகினி என்னும் பதுமை கூறியதாக உள்ளது.)

• • •

அதற்குப் பிறகு பல வருஷ காலம் போஜராஜன் நீதிநெறி தவறுமல் குடிமக்களை அன்புடனும் ஆதரவுடனும் பாதுகாத்து இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான்.

முற்றும்








## கதைக்கடல்

பாரதநாட்டின் பழம்பெரும் கதையான பிருகத் கதையை பன்னிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கவி சோமதேவ பட்டர் எளிய வடமொழியில் எழுதினார். அதுவே இக்கதைக் கடல். படிக்கச் சுவையானது. சிந்தனைக்கு ஒரு விருந்து. பகுத்தறிவுக்கு ஒரு பாசறை. தத்துவங்கள் நிறைந்தது.

**மொத்த பக்கங்கள் 420 விலை ரூ. 50-00**

## திராவிட நாட்டுக் கதைகள்




பழங்காலத் திராவிட நாட்டின் கதை சொல்லும் கலையில் பல மேதைகள் இருந்திருக்கின்றனர். அதற்கு இந்நூலே ஓர் ஆதாரமாகும். இந்த புராதன நாடோடிக் கதைகளே இன்றைய சிருஷ்டி கர்த்தாக்களுக்கும் அரியதொரு கற்பனைக் களஞ்சியமாக இருந்து வருகிறது. காலத்தால் அழியாத கருத்து நிறைந்த இக்கதைகளை இன்றைய திராவிடம் படித்து ரசிக்கட்டும்.

**மொத்த பக்கங்கள் 464 விலை ரூ. 58-00**

## ஹாத்திம் தாய்




வீரதீரப் பராக்கிரமச் செயல்களைக் கொண்டது இப்பழம் பெரும் பாரசீகக் கதை. உலகின் பல பாகங்களில் பலதரப்பட்ட மக்களும் படித்து சுவைக்க பல மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. ஏழு விதச் சவால்களுக்கும் பதில் கண்டுபிடித்து வரக் கிளம்பிய ஹாத்திம் தாயின் வரலாறே இந்தப் பாரசீகப் பெருங்கதை.

**மொத்த பக்கங்கள் 440 விலை ரூ. 65-00**

## குரங்கு மாமுனிவர் கதைகள்

*குரங்கு அரசனின் வீரசாகசங்கள் நிறைந்த சீன தேசத்து பழம்பெருங் கதை எளிய தமிழ் நடையில் அழகிய சீன ஓவியங்களுடன் அமையப் பெற்றுள்ளது.*

**மொத்த பக்கங்கள்** **விலை ரூ. 35-00**

## போதிசத்துவர் கதைகள்

*பாரத நாட்டின் பழம்பெரும் இலக்கியங்களில் புத்தர் ஜாதகக் கதைகள் ஒன்றாகும். பல மூல நூல்களையும் பரிசோதித்து புத்தர் காலத்திய பாலி மொழியிலுள்ள முழு முதல் நூலின் வழியிலிருந்து முதன் முதலாகத் தமிழ் மொழியில் கொண்டு வரப்பட்டு, படிப்பதற்குச் சுவையூட்டும் வண்ணம் புதிய முறையில் தொகுக்கப்பட்டும் பல சித்திரங்களுடன் இணைக்கப்பட்டும் வெளியிடப் பட்டுள்ளது.*

**மொத்த பக்கங்கள் 564** **விலை ரூ. 49-00**

## பஞ்சதந்திரக் கதைகள்

*அறிவையும் அடிப்படை உணர்வையும் கவர்ச்சிகரமான குட்டிக் கதைகளின் மூலம் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் அழகுற எடுத்துக் காட்டுவதே பஞ்ச தந்திரத்தின் நோக்கமாகும்.*

**மொத்த பக்கங்கள்** **விலை ரூ.**




## ஈசாப் கதைகள்

*தித்திப்பான தேனில் உடலுக்கு உரமூட்டும் காரமான மருந்துகளை குழைத்துத் தரும் மருத்துவனைப் போல விறுவிறுப்பான கதைகளிடையே அறிவுரைகளை போதிக்கும் பொக்கிஷம்.*

**மொத்த பக்கங்கள் 104** **விலை ரூ. 22.00**

| | | |
|---|---|---|
| *சிந்தனையாளர் அரிஸ்டாட்டில்* | *24* | *00* |
| *சிந்தனையாளர் எமர்சன்* | *20* | *00* |
| *சிந்தனையாளர் தொல்காப்பியர்* | *18* | *00* |
| *சிந்தனையாளர் விவேகானந்தர்* | *26* | *00* |
| *சிந்தனையாளர் சாக்ரடீஸ்* | *14* | *00* |
| *சிந்தனையாளர் டால்ஸ்டாய்* | *20* | *00* |

**பொன்மொழிகள் வரிசை**

| | | |
|---|---|---|
| *விவேக சிந்தாமணி பொன்மொழிகள்* | *9* | *00* |
| *ஔவையார் பொன்மொழிகள்* | *10* | *00* |
| *பஞ்சதந்திரம் பொன்மொழிகள்* | *9* | *00* |
| *புத்தர் பொன்மொழிகள்* | *10* | *00* |
| *சங்கரர் பொன்மொழிகள்* | *9* | *00* |
| *மகாகவி பாரதியார் பொன்மொழிகள்* | *17* | *00* |
| *மகாத்மா காந்தி பொன்மொழிகள்* | *18* | *00* |
| *இக்பால் பொன்மொழிகள்* | *8* | *00* |
| *குர் ஆன் பொன்மொழிகள்* | *9* | *00* |
| *அதி வீரராம பாண்டியன் பொன்மொழிகள்* | *13* | *00* |
| *பைபிள் பொன்மொழிகள்* | *10* | *00* |
| *பாரதிதாசன் பொன்மொழிகள்* | *12* | *50* |

**ஆராய்ச்சி நூல் வரிசை**

| | | |
|---|---|---|
| *வாழ்வில் வெற்றி பெறுவது எப்படி?* | *20* | *00* |
| *நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?* | *10* | *00* |
| *இலாகிரிப் பொருள்களா? எமதூதர்களா?* | *9* | *00* |

மற்றும் சிரித்திர நாவல்கள், சமூக நாவல்கள் ஆகிய விபரங்கள் கொண்ட இலவச விலைப்பட்டியலுக்குத் தொடர்பு கொள்க.